கவிச்சக்கரவர்த்தி

**கம்பநாட்டாழ்வார்**

அருளிச்செய்த

## ஸ்ரீமத் கம்பராமாயணம்

# பாலகாண்டம்

## அயோத்தியாகாண்டம்
## ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம்
## சுந்தரகாண்டம்.

முதற்புத்தகம்.

இஃது

**க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு**

நன்கு பரிசோதித்துத் திருத்தி



**பி. நா. சிதம்பரமுதலியார்**

பிரதர்ஸ் அவர்களது

சென்னை :

**வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டது.

1926.

இதன் விலை] [ரூபா—12.

ஸ்ரீ

# பாலகாண்டம்.

பாலகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீ

# அயோத்தியா காண்டம்.

அயோத்தியா காண்டம் முற்றிற்று.

ஸ்ரீ

# ஆரண்ய காண்டம்.

ஆரணிய காண்டம் முற்றும்.

ஸ்ரீ

# கிட்கிந்தா காண்டம்.

கிட்கிந்தா காண்டம் முற்றும்.

---

ஸ்ரீ

# சுந்தர காண்டம்.

சுந்தர காண்டம் முற்றிற்று.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

முதலாவது

# பாலகாண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

# பாலகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

# பாலகாண்டம்.

அபியுக்தர் செய்தருளிய

## தனியன்கள்.

---

நிரையசை வெண்பா.

தராதலத்தினுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே — இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வானடிபணியுமாதித்தன்
கம்பநாட்டாழ்வான்கவி. (க)

நேரசைக் கட்டளைக்கலித்துறை.

வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்சடையப்பன்வாழ்த்துப்பெறத்
தாழ்வாருயரப்புலவோரகவிருடானகலப்
போழ்வார்கதிரினுதித்ததெய்வப்புலமைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச்சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே. (உ)

விருத்தங்கள்.

அம்பராவணிசடையரனயன்முதல்
உம்பரான்முனிவரால்யோகராலுயர்
இம்பராற்பிணிக்கருமிராமவேழஞ்சேர்
கம்பராம்புலவரைக்கருத்திருத்துவாம். (௩)

வேறு.

சம்பநாடன்னுமைசெவிசாற்றுபூங்
கொம்பனுடன்கொழுநனிராமப்பேர்
பம்பநாடழைக்குங்கதைபாச்செய்த
கம்பநாடன்கழறலையிற்கொள்வாம். (௪)

---

1. குற்றம் - ஈண்டு சொற்சோர்வு பொருட்சோர்வு.

வேறு.

நாரணன்விளையாட்டெல்லாநாரதமுனிவன்கூற
ஆரணக்கவிதைசெய்தானறிந்தவான்மீகியென்பான்
சீரணிசோழநாட்டுத்திருவழுந்தூருள்வாழ்வோன்
காரணக்கொடையான்கம்பன்தமிழினாற்கவிசெய்தானே. (௫)

அம்பிலேசிலையைநாட்டியமரர்க்கன்றமுதமீந்த
தம்பிரானென்னத்தானுந்தமிழிலேதாலைநாட்டிக்
கம்பநாடுடையவள்ளல்கவிச்சக்ரவர்த்திபார்மேல்
நம்புபாமாலையாலேநரருக்கின்றமுதமீந்தான். (௬)

எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேற்சடையன்வாழ்வு
நண்ணியவெண்ணெய்நல்லூர்தன்னிலேகம்பநாடன்
பண்ணியவிராமகாதைபங்குனியத்தநாளிற்
கண்ணியவரங்கர்முன்னேகவியரங்கேற்றினானே. (௭)

வேறு.

இம்பர்நாட்டிற்செல்வமெல்லாமெய்தியரசாண்டிருந்தாலும்
உம்பர்நாட்டிற்கற்பகக்காவோங்குநீழலிருந்தாலும்
செம்பொன்மேருவனையபுயத்திறல்சேரிராமன்றிருக்கதையிற்
கம்பநாடன்கவிதையிற்போற்கற்றோர்க்கிதயங்களியாதே. (௮)

வேறு.

கழுந்தராயுனகழல்பணியாதவர்கதிர்மணிமுடிமீதே
அழுந்தவாளிகள்தொடுசிலைராகவவபிநவகவிநாதன்
விழுந்தநாயிறதெழுவதன்முன்மறைவேதியருடனாராய்ந்
தெழுந்தநாயிறுவிழுவதன்முன்கவிபாடினதெழுநூறே. (௯)

## பயன்.

நாடியபொருள்கைகூடும்ஞானமும்புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும்வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன்றோள்வலிகூறுவோர்க்கே. (௧)

வேறு.

நன்மையுஞ்செல்வமுநாளுநல்குமே
தின்மையும்பாவமுஞ்சிதைந்துதேயுமே
சென்மமுமரணமுமின்றித்தீருமே
இம்மையேராமவென்றிரண்டெழுத்தினால். (௨)

---

5. வல்மீகம் - புற்று. புற்றிலிருந்து கேட்டிருந்தனன் ஆதலாலும் புற்றிலிருந்து வெளிப்பட்டானாகலாலும் வால்மீகியெனக் காரணக்குறியாயிற்று.

6. அம்பு - நீர். சிலை - கல்மலை, மந்தரமலை. 9. கழுந்து - படைக்கலங்களிற்கைப்பிடியாற்றேய்ந்த இடம். இவ்வுவமையால் அறிவுதேய்ந்தவர் என்றவாறாயிற்று. 1. நாடியபொருள் - கல்வி, செல்வங்கள்.

2. ராம என்னுமிரண்டெழுத்தின் உச்சாரணத்தால் சகல துன்பமும் போய் நன்மையுண்டாகும் என்பதைகூறியவாறாயிற்று.

வடகலைதென்கலைவடுகுகன்னடம்
இடமுளபாடையாதொன்றினுயினும்
திடமுளரகுகுலத்திராமன்றன்கதை
அடைவுடன்கேட்பவரமரராவரே. (௩)

வென்றிசேரிலங்கையானைவென்றமால்வீரமோத
நின்றராமாயணத்தினிகழ்ந்திடுகதைகடம்மில்
ஒன்றினைப்படித்தோர்தாமுமுரைத்திடக்கேட்டோர்தாமும்
நன்றிதுவென்றோர்தாமுநரகமதெய்திடாரே. (௪)

இராகவன்கதையிலொருகவிதன்னிலேகபாதத்தினையுரைப்போர்
பராவருமலரோனுலகினிலவனும்பன்முறைறவழுத்தவீற்றிருந்து [று
புராதனமறையுமண்டர்பொற்பதமும்பொன்னுநாளதனினும்பொன்
அராவணையமலனுலகெனும்பரமபதத்தினையணுகுவரன்றே. (௫)

வேறு.

இறுவரம்பினிராமவென்றோரும்பர்
நிறுவரென்பதுநிச்சயமாதலான்
மறுவின்மாக்கதைகேட்பவர்வைகுந்தம்
பெறுவரென்பதுபேசவும்வேண்டுமோ. (௬)

அன்னதானமகிலநற்றானங்கள்
கன்னிதானங்கபிலையின்றானமே
சொன்னதானப்பலனெனச்சொல்லுவர்
மன்னிராமகதைமறவார்க்கரோ. (௭)

ஆதியரியோ நமநாராயணா திருக்கதையறிந்தனு தினம்பரவு
வோர்,நீதியனுபோகநெறிநின்றுநெடுநாளதினிறந்துசெகதண்டமு
முதுக், காதிபர்களாயபசுசெய்துளநினைத்ததுகிடைத்தருள்பொறு
த்துமுடிவில், சோதிவடிவாயழிவில்முத்திபெறுவாரெனவுரைத்த
சுருதித்தொகைகளே. (௮)

வேறு.

இனையநற்காதைமுற்றுமெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதுதன்னைச்சொல்வோர்க்கரும்பொருள்கொடுத்துக்கேட்போ
கனைகடற்புடவிமீதேகாவலர்க்கரசாய்வாழ்ந்து [ர்
வினையமதறுத்துமேலாம்விண்ணவன்பதத்திற்சேர்வார். (௯)

கரைசெறிகாண்டமேழுகதைகளாயிரத்தெண்ணூறு
பரவுறுசமரம்பத்துப்படலநூற்றிருபத்தெட்டே
உரைசெயும்விருத்தம்பன்னீராயிரத்தொருபத்தாறு
வரமிகுகம்பன்சொன்னவண்ணமுந்தொண்ணூற்றாறே. (௧௦)

---

3. அமரர் - (1) இறவாதவர் என்னும்பொருள்படுவதோர் சொல்லாத லால் அதற்கு நித்திய சூரிகளென்றுபொருள்கூறலாம். (2) தேவர்கள்.

6. இறுவரம்பின்-மரணகாலத்தில்.



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

## சிறப்புப்பாயிரம்.

---

கடவுள் வாழ்த்து. காப்பு.

தருகைநீண்டதயரதன்றான்றரும்
இருகைவேழத்திராகவன்றன்கதை
திருகைவேலைத்தரைமிசைச்செப்பிடக்
குருகைநாதன்குரைகழல்காப்பதே. (௧)

வேறு.

அஞ்சிலேயொன்றுபெற்றானஞ்சிலேயொன்றைத்தாவி
அஞ்சிலேயொன்றாறாகவாரியற்காகவேகி
அஞ்சிலேயொன்றுபெற்றவணங்கைக்கண்டயலாரூரில்
அஞ்சிலேயொன்றைவைத்தானவனம்மையளித்துக்காப்பான். (௨)

புத்தகம்படிகமாலைகுண்டிகைபொருள்சேர்ஞான
வித்தகந்தரித்தசெங்கைவிமலையையமலைதன்னை
மொய்த்தகொந்தளகபாரமுகிண்முலைத்தவளமேனி
மைத்தகுகருங்கட்செவ்வாயணங்கினைவணங்கல்செய்வாம். (௩)

---

1. தசரதன் - பத்துத்திக்கினும் தன்னிரதத்தைச்செலுத்தும் ஆற்றலுள்ளோன்.

2. அஞ்சிலேயொன்று - பஞ்சபூதங்களிலொன்று வாயு. சமுத்திரம் ஆகாசம், பூமி நெருப்பு. 3. புத்தகம், படிகமாலை, குண்டிகை, ஞானவித்தகம் என்பவற்றிற்கு முறையே, இடப்பாற் கீழ்க்கரம், வலப்பாற் கீழ்க்கரம், இடப்பால்மேற்கரம், வலப்பான் மேற்கரம் என்பன இடங்களாம்.

ஹரி ஓம்.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

முதலாவது,

# பாலகாண்டம்.

உலகம்யாவையுந்தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணாங்களே. (க)

சிற்குணத்தர்தெரிவருநன்னிலை
எற்குணர்த்தரிதெண்ணியமூன்றனுள்
முற்குணத்தவரேமுதலோரவர்
நற்குணக்கடலாடுதனன்றரோ. (உ)

ஆதியந்தமரியெனயாவையும்
ஓதினாரலகில்லனவுள்ளன
வேதமென்பனமெய்ந்நெறிநன்மையன்
பாதமல்லதுபற்றிலர்பற்றிலார். (ங)

அவையடக்கம்.

ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு
பூசைமுற்றவுநக்குபுபுக்கென

---

1. அலகிலா - அளவில்லாத. 3. அரியன எனப்பாடங் கூறுவாருமுளர்.

ஆசைபற்றியறையலுற்றேன்மற்றிக்
காசில்கொற்றத்திராமன்கதையரோ. (௪)

நொய்தினொய்யசொன்னூற்கலுற்றேனெனை
வைதவைவின்மராமரமேழ்தொளை
எய்தவெய்தவற்கெய்தியமாக்கதை
செய்தசெய்தவன்சொன்னின்றதேயத்தே. (௫)

வையமென்னையிகழவுமாசெனக்
கெய்தவுமிதியம்புவதியாதெனிற்
பொய்யில்கேள்விப்புலமையினோர்புகல்
தெய்வமாக்கவிமாட்சிதெரிக்கவே. (௬)

தேவபாடையினிக்கதைசெய்தவர்
மூவரானவர்தம்முளுமுந்திய
நாவினாருரையின்படிநான்றமிழ்ப்
பாவினாலிதுணர்த்தியபண்பரோ. (௭)

துறையடுத்தவிருத்தத்தொகைக்கவிக்
குறையடுத்தசெவிகளுக்கோதில்யாழ்
நறையடுத்தவசுணநன்மாச்செவிப்
பறையடுத்ததுபோலுமென்பாவரோ. (௮)

முத்தமிழ்த்துறையின்முறைபோகிய
உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவென்
பித்தர்சொன்னவும்பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ. (௯)

அறையுமாடரங்கும்மடப்பிள்ளைகள்
தரையிற்கீறிடிற்றச்சருங்காய்வரோ
இறையுஞானமிலாதவென்புன்கவி
முறையினூலுணர்ந்தாருமுனிவரோ. (௧௦)

---

4. "இக்காசில் கொற்றத்திராமன் - இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்றானைமுழுதும்படத் தமியனாய்ப்பட்டானது நிலைமைநோக்கி அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய்நாளை நின்றானையொடு வாவென விட்டாற்போல்வது" இதனை "பேராண்மை" யென்றதற்குப் பரிமேலழகருரையானு முணர்க. 9. உத்தமக்கவிகள் - சிறப்பினையுடைய கவிகளுக்கென்பதன்றி அறியாமையாகிய இருளையொழிந்த கவிகளுக்கென்றுரைப் பினுமமையும். 10. இறையு ஞானமிலாத - சிறிதேனு மெய்யுணர்ச்சியில்லாத எனக் கொள்க. உம்மை, இழிவு சிறப்பு.

நடையினின்றுயர்நாயகன்றோற்றத்தின்
இடைநிகழ்ந்தவிராமாவதாரப்பேர்த்
தொடைநிரம்பியதோமறுமாக்கதை
சடையன்வெண்ணெய்நல்லூர்வயிற்றந்ததே. (கக)

ஆ_ திருவிருத்தம்-கக.

## முதலாவது
## ஆற்றுப்படலம்.

ஆசலம்புரிஐம்பொறிவாளியும்
காசலம்புமுலையவர்கண்ணெனும்
பூசலம்புநெறியின்புறஞ்செலாக்
கோசலம்புனையாற்றணிகூறுவாம். (க)

நீறணிந்தகடவுணிறத்தவான்
ஆறணிந்துசென்றார்கலிமேய்ந்தகிற்
சேறணிந்தமுலைத்திருமங்கைதன்
வீறணிந்தவன்மேனியின்மீண்டவே. (உ)

பம்பிமேகம்பரந்ததுபானுவால்
நம்பன்மாதுலன்வெம்மையைநண்ணினன்
அம்பினாட்டுதுமென்றகன்குன்றின்மேல்
இம்பர்வாரியெழுந்ததுபோன்றதே. (௩)

புள்ளிமால்வரைபொன்னெனநோக்கிவான்
வெள்ளிவீழிடைவீழ்த்தெனத்தாரைகள்
உள்ளியுள்ளவெல்லாமுவந்தீயுமவ்
வள்ளியோரின்வழங்கினமேகமே. (ச)

11. நடையினின்றுயர் இராமாவதாரமெனவும், நாயகன் தோற்றத்தினிடை நிகழ்ந்த இராமாவதாரமெனவுமொட்டுக. 2. நீறணிந்த கடவுணிறத்த - என்பது நீற்றினைப்புனைந்த கடவுள் நிறத்தையுடையனவாகிய மேகங்களை, நிறத்தவினையாலணையும் பெயர், நிறத்தவானெனக் கொண்டு வேறு விரிப்பாருமுளர். மேகங்கள் சிவனைப்போலப்போய் திருமாலைப்போலத்திரும்பின வென்பது கருத்து. 3. நம்பன்மாதுலன் - சிவபெருமான் மாமனாகிய பருவதராசன். நம்பல்மாதுலன் - நம்புதற்குரியமாமன்.

4. உள்ளியென்றது-இளமை, யாக்கை, செல்வ மென்னுமிவை நிலையாமையுடையவென நினைத்தென்பதை.

மானநேர்ந்தறனோக்குமனுநெறி
போனதண்குடைவேந்தன்புகழென
ஞானமுன்னியநான்மறையாளர்கைத்
தானமென்னத்தழைத்ததுநீத்தமே. (௫)

தலையுமாகமுந்தாளுந்தழீஇயதன்
நிலையிலாதிறைநின்றதுபோலவே
மலையினுள்ளவெலாங்கொண்டுமண்டலால்
விலையின்மாதரையொத்ததவ்வெள்ளமே. (௬)

மணியும்பொன்னுமயிற்றழைப்பீலியும்
அணியுமானைவெண்கோடுமகிலுந்தன்
இணையிலாரமுமின்னகொண்டேகலான்
வணிகமாக்களையொத்ததவ்வாரியே. (௭)

பூநிரைத்துமென்றாதுபொருந்தியும்
தேன்வளாவியுஞ்செம்பொன்விராவியும்
ஆனைமாமதவாற்றொடளாவியும்
வானவில்லைநிகர்த்ததுவாரியே. (௮)

மலையெடுத்துமரங்கள்பறித்துமா
டிலைமுதற்பொருள்யாவையுமேந்தலான்
அலைகடற்றலையன்றணைவேண்டிய
நிலையுடைக்கவிநீத்தமந்நீத்தமே. (௯)

ஈக்கள்வண்டொடுமொய்ப்பவரம்பிகந்
தூக்கமேமிகுந்துட்டெளிவின்றியே
தேக்கெறிந்துவருதலிற்றீம்புனல்
வாக்குதேனுகர் மாக்களைமானுமே. (௧௦)

பணைமுகக்களியானைபன்மாக்களோ
டணிவகுத்தெனவீர்த்திரைத்தார்த்தலின்
மணியுடைக்கொடிதோன்றவந்தூன்றலாற்
புணரிமேற்பொரப்போவதுபோன்றதே. (௧௧)

இரவிதன்குலத்தெண்ணில்பல்வேந்தர்தம்
பரவுநல்லொழுக்கின்படிபூண்டது

---

௧௦ தேக்கெறிந்து என்பதனைத் தேக்கமரமெறிந்து எனவும், தேக்கெறிந்தெனவும் பொருள்கூறுக.

சரயுவென்பது தாய்முலையன்னதிவ்
வுரவுநீர்நிலத் தோங்குமுயிர்க்கெலாம். (கஉ)

வேறு.

கொடிச்சியரிடித்தசுண்ணங்குங்குமங்கோட்டமேலம்
நடுக்குறுசந்தஞ்சிந்தூரத்தொடுநரந்தநாகம்
கடுக்கையார்வேங்கைகோங்குபச்சிலைகண்டில்வெண்ணெய்
அடுக்கலினடுத்ததீந்தேனகிலொடுநாறுமன்றே. (கங)

எயினர்வாழ்சீறூரப்புமாரியினிரியல்போக்கி
வயின்வயினெயிற்றிமாதர்வயிறலைத்தோடவோடி
அயின்முகக்கணையும்வில்லும்வாரிக்கொண்டலைக்குநீராற்
செயிர்தருங்கொற்றமன்னர்சேனையைமானுமன்றே. (கச)

செறிநறுந்தயிரும்பாலும்வெண்ணெயுஞ்சேர்ந்தநெய்யும்
உறியொடுவாரியுண்டுகுருந்தொடுமருதமுந்தி
மறியுடையாயர்மாதர்வனைதுகில்வாருநீராற்
பொறிவரியரவிஞ்டும்புனிதனும்போலுமன்றே. (கரு)

கதவினைமுட்டிமள்ளர்கையெடுத்தார்ப்பவெய்தி
நுதலணியோடைபொங்கநுகர்வரிவண்டுகிண்டத்
ததைமணிசிந்தவுந்தித்தறியிறத்தடக்கைசாய்த்து
மதமழையானையென்னமருதஞ்சென்றடைந்ததன்றே. (கசு)

முல்லையைக்குறிஞ்சியாக்கிமருதத்தைமுல்லையாக்கிப்
புல்லியநெய்தறன்னைப்பொருவருமருதமாக்கி
எல்லையிற்பொருள்களெல்லாமிடைதடுமாறுநீராற்
செல்லுறுகதியிற்செல்லும்வினையெனச்சென்றதன்றே. (கஎ)

காத்தகான்மள்ளர்வெள்ளக்கலிப்பறைகறங்கக்கைபோய்ச்
சேர்த்தநீர்த்திவலைபொன்னுமுத்தொடுதிரையின்வீசி
நீத்தமாந்தலையவாகிநிமிர்ந்துபார்கிழியநீண்டு
கோத்தகாலொன்றிஞென்றுகுலமெனப்பிரிந்தவன்றே. (கஅ)

கல்லிடைப்பிறந்துபோந்துகடலிடைக்கலந்தநீத்தம்
எல்லையின்மறைகளாலுமியம்பருமபொருளீதென்னத்

17. கதியென்றது பிறப்பினை; அது தேவகதி, மனிதகதி, விலங்கின்கதி, நாககதி யென்பனவற்றை. உயிரெடுத்த கதியின்வழி வினைசேறலின் அதனையே யுவமைகூறினர்.

தொல்லையிறெனன்றேயாகித்துறைதொறும்பரந்தசூழ்ச்சி
பல்பெருஞ்சமயஞ்சொல்லும்பொருளும்போற்பரந்ததன்றே. (௧௯)

தாதுகுசோலைதோறுஞ்சண்பகக்காடுதோறும்
போதவிழ்பொய்கைதோறும்புதுமணற்றடங்கடோறும்
மாதவிவேலிப்பூகவனந்தொறும்வயல்கடோறும்
ஓதியவுடம்புதோறுமுயிரெனவுலாயதன்றே. (௨0)

ஆ திருவிருத்தம் - ௩௧.

## ௨-வது, நாட்டுப்படலம்.

வாங்கரும்பாதநான்கும்வகுத்தவான்மீகியென்பான்
தீங்கவிசெவிகளாரத்தேவரும்பருகச்செய்தான்
ஆங்கவன்புகழ்ந்தநாட்டையன்பெனுநறவமாந்தி
மூங்கையான்பேசலுற்றானென்னயான்மொழியலுற்றேன். (௧)

வரம்பெலாமுத்தந்தத்துமடையெலாம்பணிலமாநீர்க்
குரம்பெலாஞ்செம்பொன்மேதிக்குழியெலாங்கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம்பவளஞ்சாலிப்பரப்பெலாமன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ்செந்தேன்சந்தக்காவெலாங்களிவண்டீட்டம். (௨)

ஆறுபாயரவமள்ளராலைபாயமலையாலைச்
சாறுபாயோதைவேலைச்சங்குவாய்பொங்குமோதை
ஏறுபாய்தமரநீரிலெருமைபாய்துழனியின்ன
மாறுமாறாகித்தம்மின்மயங்குமாமருதவேலி. (௩)

தண்டலைமயில்களாடத்தாமரைவிளக்கந்தாங்கக்
கொண்டல்கண்முழவினேங்கக்குவளைகண்விழித்துநோக்கத்
தெண்டிரையெழினிகாட்டத்தேம்பிழிமகரயாழின்
வண்டுகளினிதுபாடமருதம்வீற்றிருக்குமாதோ. (௪)

தாமரைப்படுவவண்டுந்தகைவருந்திருவுந்தாண்டார்க்
காமுகர்ப்படுவமாதர்கண்களுங்காமனம்பும்

19. பல்பெருஞ்சமயம் சொல்லும்பொருளும்போல் - என்பதனைப் பல்பெருஞ்சமயஞ் சொல்லும்பொருள் போலுமென்றியைக்க. எவ்வகைச்சமயங்களும் துவிதம் அத்துவிதம் விசிட்டாத்துவித மென்று மூன்றனுளடங்கலின் பல்பெருஞ் சமயமென்றார்.

1. எட்டெழுத்தானுயவடிகள் நான்கமைந்துள்ளனவாக வகுத்தபெருமை தோன்ற 'வாங்கரும்பாத நான்கும்வகுத்த' வென்றார்.

மர்முகிற்படுவவாரிப்பவளமும்வயங்குமுத்தும்
நாமுதற்படுவமெய்யுநாமநூற்பொருளுமன்றே. (ரு)

நீரிடையுறங்குஞ்சங்கநிழலிடையுறங்குமேதி
தாரிடையுறங்கும்வண்டுதாமரையுறங்குஞ்செய்யாள்
தூரிடையுறங்குமாமைதுறையிடையுறங்குமிப்பி
போரிடையுறங்குமன்னம்பொழிலிடையுறங்குந்தோகை. (சு)

படையுழவெழுந்தபொன்னும்பணிலங்களுயிர்த்தமுத்தும்
இடறியபரம்பிற்காந்துமினமணித்தொகையுநெல்லும்
மிடைபசுங்கதிருமீனுமென்றழைக்கரும்பும்வண்டுங்
கடைசியர்முகமும்போதுங்கண்மலர்ந்தொளிருமாதோ. (எ)

தெள்விளிசிறியாழ்ப்பாணர்தேம்பிழிநறவமாந்தி
வள்விசிகருவிபம்பவயின்வயின்வழங்குபாடல்
வெள்ளிவெண்மாடத்தும்பர்வெயில்விரிபசும்பொற்பள்ளி
எள்ளருங்கருங்கட்டோகையின்றுயிலெழுப்புமன்றே. (அ)

ஆலைவாய்க்கரும்பின்றேனுமரிதலைப்பாளைத்தேனும்
சோலைவாய்க்கனியின்றேனுந்தொடையிழியிறாலின்றேனும்
மாலைவாயுகுத்ததேனும்வரம்பிகந்தோடிவங்க
வேலைவாய்மடுப்பவுண்டுமீனெலாங்களிக்குமாதோ. (கூ)

பண்கள்வாய்மிழற்றுமின்சொற்கடைசியர்பரந்துநீண்ட
கண்கைகான்முகம்வாயொக்குங்களையலாற்களையிலாமை
உண்கள்வார்கடைவாய்மள்ளர்களைகலாதுலாவிநிற்பார்
பெண்கள்பால்வைத்தநேயம்பிழைப்பரோசிறியோர்பெற்றால். (க0)

புதுப்புனல்குடையுமாதர்பூவொடுநாவிபூத்த
கதுப்புறுவெறியேநாறுங்கருங்கடற்றரங்கமென்றால்
மதுப்பொதிமழலைச்செய்வாய்வாட்கடைக்கண்ணின்மைந்தர்
விதுப்புறநோக்குமன்னார்மிகுதியைவிளம்பலாமே. (கக)

வெண்டளக்கலவைச்சேறுங்குங்குமவிரைமென்சாந்தும்
குண்டலக்கோலமைந்தர்குடைந்தநீர்க்கொள்ளைசாற்றில்
தண்டலைப்பரப்புஞ்சாலிவேலியுந்தழீஇயவைப்பும்
வண்டலிட்டோடுமண்ணுமதுகரமொய்க்குமாதோ. (கஉ)

---

5. மா - கருமை. இதனை 'மைத்தழையாநின்ற மாமிடற்றம்பலவன்' என்றதற்குப் பேராசிரியர் கூறலானு மறிக.

5. முதல் - ஏழனுருபு, நாமம் - அச்சம், இவ்வரிச்சொல் ஈறுதிரிந்து நின்றது- 'நாமநீர்வையக்கணி' எனபுழிப்பரிமேலழகர்கூறலானுமறிக. 6. தார்-பூசு.

சேலுண்டவொண்கணாரிற்றிரிகின்றசெங்காலன்னம்
மாலுண்டநளினப்பள்ளிவளர்த்தியமழலைப்பிள்ளை
காலுண்டசேற்றுமேதிகன்றுள்ளிக்கனைப்பச்சோர்ந்த
பாலுண்டுதுயிலப்பச்சைத்தேரைதாராட்டும்பண்ணை. (௧௩)

குயிலினம்வதுவைசெய்யக்கொம்பிடைக்குனிக்குமஞ்ஞை
அயில்விழிமகளிராடுமரங்கினுக்கழகுசெய்யப்
பயில்சிறையரசவன்னம்பன்மலர்ப்பள்ளிநின்றும்
துயிலெழத்தும்பிகாலைச்செவ்வழிமுரல்வசோலை. (௧௪)

பொருந்தியமகளிரோடுவதுவையிற்பொருந்துவாரும்
பருந்தொடுநிழல்சென்றன்னவியலிசைப்பயன்றுய்ப்பாரும்
மருந்தினுமினியகேள்விசெவியுறமாந்துவாரும்
விருந்தினர்முகங்கண்டன்னவிழாவணிவிரும்புவாரும். (௧௫)

கறுப்புறுமனமுங்கண்ணிற்சிவப்புறுசூட்டுங்காட்டி
உறுப்புறுபடையிற்றாக்கியுறுபகையின்றிச்சீறி
வெறுப்பிலகளிப்பின்வெம்போர்மதுகையவீரவாழ்க்கை
மறுப்படவாவிபேணுவாரணம்பொருத்துவாரும். (௧௬)

எருமைநாகின்றசெங்கணேற்றையோடேற்றைசீற்றத்
துருமிவையென்னத்தாக்கியூழறநெருக்கியொன்றாய்
விரியிருளிரண்டுகூறாய்வெகுண்டனவனையநோக்கி
அரியினங்குஞ்சியார்ப்பமஞ்சுறவார்க்கின்றாரும். (௧௭)

முள்ளரைமுளரிவெள்ளிமூளையிற்முத்தும்பொன்னும்
தள்ளுறமணிகள்சிந்தச்சலஞ்சலம்புலம்பச்சாலில்
துள்ளிமீன்றுடிப்பவாமைதலைபுடைசுரிப்பத்தூம்பின்
உள்வராலொளிப்பமள்ளருழுபகடுரப்புவாரும். (௧௮)

முந்துமுக்கனியினுமுதிரையின்முழுத்தநெய்யில்
செந்தயிர்க்கண்டங்கண்டமிடையிடைசெறிந்தசோற்றில்
தந்தமிலிருந்துதாமும்விருந்தொடுந்தமரினோடும்
அந்தணரமுதருண்டியயில்வுறுமமலைத்தெங்கும். (௧௯)

---

15. தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாரை நினைந்து செய்வளவாகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கீத தன்மையானும், இடைநின்ற 'விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாதலின், விருந்தினர் முகங்கண்டன்ன' என்றார்- இவ்வாறே பரிமேலழகர் கூறுவதுங்காண்க.

முறையறிந்தவாவைநீக்கிமுனிவுழிமுனிந்துவெஃகும்
இறையறிந்துயிர்க்குநல்குமிசைகெழுவேந்தன்காக்கப்
பொறைதவிர்ந்துயிர்க்குந்தெய்வப்பூதலந்தன்னிற்பொன்னின்
நிறைபரஞ்சொரிந்துவங்கநெடுமுதுகாற்றுநெய்தல். (உ0)

எரிதருமரியின்சும்மையெடுத்துவானிட்டபோர்கள்
குறிகளும்போற்றிக்கொள்வார்கொன்றநெற்குவைகள்செய்வார்
வறியவர்க்குதவிமிக்கவிருந்துணமனையினுய்ப்பான்
நெறிகளும்புதையப்பண்டிநிரைத்துமண்ணெளியவூர்வார். (உக)

கதிர்படுவயலினுள்ளகடிகமழ்பொழிலினுள்ள
முதிர்பலமரத்தினுள்ளமுதிரைகள்புரவினுள்ள
பதிபடுகொடியினுள்ளபடிவளர்குழியினுள்ள
மதுவனமலரிற்கொள்ளும்வண்டெனமள்ளர்கொள்வார். (உஉ)

வேறு.

பருவமங்கையர்பங்கயவாண்முகத்
துருவவுண்கணையொண்பெடையாமெனக்
கருதியன்பொடுகாமுற்றுவைகலும்
மருதவேலியின்வைகினவண்டரோ. (உரு)

வேளைவென்றமுகத்தியர்வெம்முலை
ஆளைநின்றுமுனிந்திடுமங்கொர்பால்
பாளைதந்தமதுப்பருகிப்பரு
வாளைநின்றுமதர்க்குமருங்கெலாம். (உச)

ஈரநீர்படிந்திந்நிலத்தேசில
கார்களென்னவருங்கருமேதிகள்
ஊரினின்றகன்றுள்ளிடவுண்முலைத்
தாரைகொள்ளத்தழைப்பனசாலியே. (உரு)

முட்டிலட்டின்முழுங்குறவாக்கிய
நெட்டிலைக்கமுநீர்நெடுநீத்தந்தான்
பட்டமென்கமுகோங்குபடப்பைபோய்
நட்டசெந்நெலினூறுவளர்க்குமே. (உசு)

சூட்டுடைத்துணைத்தூநிறவாரணம்
தாட்டுணைக்குடையுந்தகைசான்மணி

23. மங்கைப்பருவத்தவரை நோக்கிப் பருவமங்கையர் என்றதென்க.
26. பட்டம் - குளங்கள். படப்பை - மருதநிலச்சோலைகள்.

மேட்டிமைப்பனமின்மினியாமெனக்
கூட்டினுய்க்குங்குரீஇக்குழாமரோ. (௨௭)

தோயும்வெண்டயிர்மத்தொலிதுள்ளவும்
ஆயவெள்வளைவாய்விட்டரற்றவும்
தேயுநுண்ணிடைசென்றுவணங்கவும்
ஆயமங்கையரங்கைவருந்துவார். (௨௮)

குற்றபாகுகொழிப்பவர்கோணெறி
கற்றிலாதகருங்கணுளைச்சியர்
முற்றிலாரமுகந்துதம்முன்றிலிற்
சிற்றில்கோலச்சிதறியமுத்தமே. (௨௯)

துருவைமென்பிணையீன்றதுளக்கிலா
வரிமருப்பினவன்றலையேற்றைவான்
உருமிடித்தெனத்தாக்குறுமொல்லொலி
வெருவிமால்வரைச்சூன்மழைமின்னுமே. (௩௦)

தினைச்சிலம்புவதீஞ்சொலிளங்கிளி
நனைச்சிலம்புவநாகிளவண்டுபூம்
புனைச்சிலம்புவபுள்ளினம்வள்ளியோர்
மனைச்சிலம்புவமங்கலவள்ளையே. (௩௧)

கன்றுடைப்பிடிநீக்கிக்களிற்றினம்
வன்றொடர்ப்படுக்கும்வனவாரிசூழ்
குன்றுடைக்குலமள்ளர்குழூக்குரல்
இன்றுணைக்களியன்னமிரிக்குமே. (௩௨)

வள்ளிகொள்பவர்கொள்வனமாமணி
துள்ளிகொள்வனதூங்கியமாங்கனி

---

27. குரீ - தூக்கணங்குருவிகள். 28. அங்கைவருந்தலால் வளைவாய் விட்டுக்கதறவுமெனவும், இடைசென்று வணங்கலை இடைசென்று தாழவுமெனவும் உரைத்துக்கொள்க. 29. கொழிப்பவர் - என்புக்கொழிப்பன என்பது சொல்லெச்சம். 30. ஆட்டின மொன்றோடொன்று, தாக்குமொல்லொலி கேட்டுப்பயந்து சூன்மழை வாயங்காப்ப மின்னுக்கான்றலின் சூன்மழைமின்னுமே என்றார். இதனைக் 'கருங்கொண் மூவாய் திறந்தமின்னுப்போற்றோன்றி, எனப்பிறருங்கூறுவானுமுணர்க மால்வரை என்றார் மால்தரை என்றார் மால்போனுங்குவடுகளையுடைய மலை எனப்படுதலின் இதனை மால்வரையென்பதற்கு நச்சினார்க்கினியர் கூறியதனாலு முணர்க. இனிப்பெரிய மலையென்பது மொன்றுவரை - ஆகுபெயர்.

31. புனலென்பது புனையெனப்போலியாய் வந்தது. 33. துள்ளி என்பது விரிக்கும் விழிவிரித்தல்.

புள்ளிகொள்வனபொன்விரிபுன்னைகள்
பள்ளிகொள்வனபங்கயத்தன்னமே. (௩௩)

கொன்றைவேய்ங்குழற்கோவலர்முன்றிலிற்
கன்றுறக்குங்குரவைகடைசியர்
புன்றலைப்புனங்காப்புடைபோதரச்
சென்றிசைக்குநுளைச்சியர்செவ்வழி. (௩௪)

சேம்புகால்பொரச்செங்கழுநீர்க்குளத்
தூம்புகாலச்சுரிவளைமேய்வன
காம்புகால்பொரக்கண்ணகன்மால்வரைப்
பாம்புநான்றெனப்பாய்பசுந்தேறலே. (௩௫)

பெருந்தடங்கட்பிறைநுதலார்க்கெலாம்
பொருந்துசெல்வமுங்கல்வியும்பூத்தலால்
வருந்திவந்தவர்க்கீதலும்வைகலும்
விருந்துமன்றிவிளைவனயாவையே. (௩௬)

பிறைமுகத்தலைப்பெட்பினிரும்புபோழ்
குறைகறித்திரள்குப்பைபொருப்பொடு
நிறைவெண்முத்தினிறத்தரிசிக்குவை
உறைவகொட்பினவூட்டிடந்தோறெலாம். (௩௭)

கலஞ்சுரக்குநிதியங்கணக்கிலா
நிலஞ்சுரக்குநிறைவளநன்மணி
பிலஞ்சுரக்கும்பெறுதற்கரியதங்
குலஞ்சுரக்குமொழுக்கங்குடிக்கெலாம். (௩௮)

கூற்றமில்லையோர்குற்றமிலாமையாற்
சீற்றமில்லைதஞ்சிந்தையிற்செய்கையால்
ஆற்றனல்லறமல்லதிலாமையால்
ஏற்றமல்லதிழிதகவில்லையே. (௩௯)

நெறிகடந்துபரந்தனநீத்தமே
குறியழிந்தனகுங்குமத்தோள்களே

---

34. கொன்றைக்காயானும் வேயானுஞ்செய்தகுழல் இதனைக் கொன்றையந் தீங்குழல் கேளாமோதோழி எனப்பிறருங் கூறலானுமறிக. 35. அரிவளை மேய்வன பசுந்தேறலை என்றொட்டுக. 37. பிறைமுகத்தலைப் பெட்பினிரும்பு - கோடரி.

39. ஆற்றனல்லற மல்லதிலாமையாலெனற்கு நல்லறமே ஆற்றல் அல்லதாகிய பாவமில்லாமையா லெனக்கொள்க.

சிறியமங்கையர்தேயுமருங்குலே
வெறியவும்மவர்மென்மலர்க்கூந்தலே. (சo)

அகிலிடும்புகையட்டிலிடும்புகை
நகிலினூலநறும்புகைநான்மறை
புகலும்வேள்வியிற்பூம்புகையோடளாய்
முகிலின்விம்மிமுழங்கினவெங்கணும். (சக)

வேறு.

இயல்புடைபெயர்வனமயின்மணியிழையின்
வெயில்புடைபெயர்வனமுலையவர்குழல்போற்
புயல்புடைபெயர்வனபொழிலவர்விழிபோற்
கயல்புடைபெயர்வனகடிகமழ்கழனி. (சஉ)

இடையிறமகளிர்களெறிபுனன்மறுகக்
குடையவர்துவரிதழலர்வனகுமுதம்
மடைபெயரனமெனமடநடையளகக்
கடைசியர்முகமெனமலர்வனகமலம். (சஙு)

விதியினைநகுவனவயில்விழிபிடியின்
கதியினைநகுவனவவர்நடைகமலப்
பொதியினைநகுவனபுணர்முலைகலைவாழ்
மதியினைநகுவனவணிதையர்வதனம். (சச)

பகலினொடிகலுவபடர்மணிமடவார்
நகிலினொடிகலுவநளிவளரிளநீர்
துகிலினொடிகலுவசுதைபுரைநுரைகார்
முகிலினொடிகலுவகடிமணமுரசம். (சரு)

காரொடுநிகர்வனகடிபொழில்கழனிப்
போரொடுநிகர்வனபுணர்மலையணைசூழ்
நீரொடுநிகர்வனநிறைகடனிதிசால்
ஊரொடுநிகர்வனவிமையவருலகம். (சசு)

---

43. மடநடையளகக் கடைசியர்என்பதற்கு இளநடை யிளகுகின்ற அக்க டைசியரெனவிரிக்க.

44. விதியினைநகுவனவென்பதற்கு விதித்தற்றொழிலைச் சிரிப்பன என் பதன்றிப் பிரமசரிய வொழுக்கத்தை நோக்கிச் சிரிப்பனவென்று விரிக்கினு மமையும்.

45. நகிலம் நகில் என அம்முச்சாரியை குறைந்தது.

றென்மலையல்லனநிரைவருதரளச்
சொன்மலையல்லனதொடுகடலமிர்த
நன்மலையல்லனநதிதருநிதியப்
பொன்மலையல்லனமணிபடுபுளினம். (சஎ)

பந்தினையினையவர்பயிலிடமயிலூர்
கந்தனையனையவர்கலைதெரிகழகம்
சந்தனவனமலசண்பகவனமாம்
நந்தனவனமலநறைவிரிபுறவம். (சஅ)

கோகிலநவில்வனவிளையவர்குதலைப்
பாகியல்கிளவிகளவர்பயினடமே
கேகயநவில்வனகிளரிளவளையின்
நாகுகளுமிழ்வனநகைபுரைதரளம். (சகூ)

பழையர்தமனையனபழநறைநுகரும்
உழவர்தமனையனவுழுதொழில்புரியும்
மழவர்தமனையனமணவொலியிசையின்
கிழவர்தமனையனகிளைபயில்வளைவாழ். (ருய)

கோதைகள்சொரிவனகுளிரிளநறவம்
பாதைகள்சொரிவனபருமணிகனகம்
ஊதைகள்சொரிவனவுறைபுறுமமுதம்
காதைகள்சொரிவனசெவிநுகர்கவிகள். (ருக)

வேறு.

இடங்கொள்சாயல்கண்டிளைஞர்சிந்தைபோல்
தடங்கொள்சோலைவாய்மலர்பெய்தாழ்குழல்
வடங்கொள்பூண்முலைமடந்தைமாரொடும்
தொடர்ந்துபோவனதோகைமஞ்ஞைகள். (ருஉ)

வண்மையில்லையோர்வறுமையின்மையால்
திண்மையில்லைநேர்செறுநரின்மையால்
உண்மையில்லைபொய்யுரையிலாமையால்
வெண்மையில்லைபல்கேள்விமேவலால். (ருங)

எள்ளுமேனலுமிறுக்குஞ்சாமையும்
கொள்ளுங்கொள்ளையிற்கொணருபண்டியும்
அள்ளலோங்களத்தமுதின்பண்டியும்
தள்ளுநீர்மையிற்றலைமயங்குமே. (ருச)

53. வெண்மை - வெளிற்றுத்தன்மை, அறியாமை.

உயருஞ்சார்விலாவுயிர்கள்செய்வினைப்
பெயரும்பல்கதிபிறக்குமாறுபோல்
அயிருந்தேனுமின்பாகுமாயரூர்த்
தயிரும்வேரியுந்தலைமயங்குமே. (௫௫)

கூறுபாடலுங்குழலின்பாடலும்
வேறுவேறுநின்றிசைக்கும்வீதிவாய்
ஆறுமாறுவந்தெதிர்ந்தவாமெனச்
சாறும்வேள்வியுந்தலைமயங்குமே. (௫௬)

மூக்கிற்றூக்குறுமூரிநந்துநேர்
தாக்கிற்றூக்குறும்பறையுந்தண்ணுமை
வீக்கிற்றூக்குறும்விளியுமள்ளர்தம்
வாக்கிற்றூக்குறுமொலியின்மாயுமே. (௫௭)

தாலியைம்படைதழுவுமார்பிடை
மாலைவாயமுதொழுகுமக்களைப்
பாலினூட்டுவார்செங்கைப்பங்கயம்
வால்நிலாவுறக்குவிவதானுமே. (௫௮)

பொற்பினின்றனபொலிவுபொய்யிலா
நிற்பினின்றனநீதிமாதரார்
அற்பினின்றனவறங்களன்னவர்
கற்பினின்றனகாலமாரியே. (௫௯)

சோலைமாநிலந்துருவியாவரே
வேலைகண்டுதாமீளவல்லவர்
சாலும்வார்புனற்சரயுவும்பல
காலினோடியுங்கண்டதில்லையே. (௬௦)

---

55. இருவகைப்பற்றையுந் துறந்தலை உயருஞ்சார்விலாவுயிர்கள், என்றார்.

56. சாறு - திருவிழா. 57. வலியநந்துமூக்கினொலிக்குமொலியுமென்பதற்கு "மூக்கிற்றூக்கு மூரிநந்தும்" என்றார். மூக்குறலென்பாருமுளர், அது பொருந்தாமையறிக.

58. தாலியம்படை தழுவமார்பினில் என்பதற்கு - தாலியும் ஐம்படையும் தழுவப்பட்ட மார்பினிடத்து என்க. தாலியாகிய ஐம்படை என்பாருமுளர் திருமகளோ அவதாரமாகலின் அவட்கு மெய்க்காப்பாளர்போற் பஞ்சாயுதங்களைக் கூறவேண்டுமாகலானங்ஙனங்கூறல் பொருந்தாமையறிக.

59. மாதரார் கற்புடைமையான் மாரிநிற்பதுஎன்பது.

60. பலகாலினோடியும் - பலகால்களா னோடியுமெனவும், பலமுறையினோடியு மெனவுஞ் சிலேடைப்பொருள் பயப்பதுங்காண்க.

வீடுசேரநீர்வேலைகான்மடுத்
தூடுபோினுமுலைவிலாநலம்
கூடுகோசலமென்னுங்கோதிலா
நாடுகூறினநகரங்கூறுவாம். (கூக)

ஆ திருவிருத்தம் - கூஉ.

## ந.-வது, நகரப்படலம்.

செவ்வியமதுரஞ்சேர்ந்தநற்பொருளிற்சீரியகூரியதீஞ்சொல்
வவ்வியகவிஞரானவரும்வடநூன்முனிவரும்புகழ்ந்ததுவரம்பில்
எவ்வுலகத்தோர்யாவருந்தவஞ்செய்தேறுவானுதாிக்கின்ற
அவ்வுலகத்தோரிழிவதற்கருத்திபுரிகின்றதயோத்திமாநகரம். (க)

நிலமகண்முகமோதிலகமோகண்ணோநிறைநெடுமங்கலநாணோ, இலகுபூண்முலைமே லாரமோவுயிாி னிருக்கையோதிருமகட்கினிய, மலர்கொலோமாயோன் மார்பினன்மணிகள் வைத்தபொற்பெட்டியோவானோர், உலகின்மேலுலகோவூழியினிறுதியுறையுளோயாதெனவுரைப்பாம். (உ)

உமைக்கொருபாகத்தொருவனுமிருவர்க்கொருதனிக்கொழுநனுமலர்மேல், கமைப்பெருஞ்செல்வக்கடவுளுமுதலோர்கண்டிலாநகரதுகாண்பான், அமைப்பருங்காதன்முன்பிடித்துந்தவந்தரஞ்சந்திராதித்தர், இமைப்பிலர்திரிவரிதுவலாலதனுக்கியம்பலாமுவமைமற்றியாதோ. (ந)

அயின்முகக்குலிசத்தமரர்கோனகருமளகையுமென்றிவையயனூர்
பயிலுறவுற்றபடிபெரும்பாலுமிப்பெருந்திருநகர்படைப்பான்
மயன்முதற்றெய்வத்தச்சருந்தத்தமனத்தொழிலுளினர்மறந்தார்
புயலுறுகுடுமிநெடுநிலைமாடத்திந்நகர்புகலுமாறெவனோ. (ச)

புண்ணியம்புரிந்தோர் புகுவதுதுறக்க மென்னுமீதருமறைப்பொருளே, மண்ணிடையாவ ரிராகவனன்றி மாதவமறத்தொடும்வ

1. சொல்வவ்விய - கவிஞரானவரும் - ஆழ்வார்தொடக்கமானவரை வடநூன்முனிவரும் - வான்மீகபகவான் தொடக்கமானவரை.

3. இருவர்க்கொருதனிக்கொழுநன் - உபேந்திரனை, இவ்வாறுகூறுதுவே றுகூறுவாருமுளர்.

ளர்ந்தார், எண்ணருங்குணத்தினவனினிதிருந்திவ்வேழுலகாள்வி டமென்றால், ஒண்ணுமோவதனின்வேறொருபோகமுறைவிடமுண் டெனவுரைத்தால். (௫)

தங்குமாபொருளுந் தருமமுந்துணையாத்தம்பகைப்புலன்களை த்தவிர்க்கும்,பொங்குமாதவமும் ஞானமும்புணர்ந்தோர்யாவர்க்கும் புகலிடமான,செங்கண்மால்பிறந்தாண்டளப்பருங்காலந்திருவின்வீ ற்றிருந்தமைதெரிந்தால், அங்கண்மாஞாலத்தந்நகரொக்கும்பொன் னகரமரர்நாட்டியாதோ. (௬)

அரசெலாமவணவணியெலாமவண வரும்பெறன்மணியெலாமவண
புரசைமால்களிறும்புரவியுந்தேரும்பூதலத்தியாவையுமவண
விரசுவார்முனிவர்விண்ணவரியக்கர்விஞ்சையர்முதலினோரெவரும்
உரைசெய்வாராஞானபோததனுக்குவமைதானரிதரோவுளதோ.

நால்வகைச்சதுரம் விதிமுறைநாட்டி நனிதவவுயர்ந்தன பனி தோய்,மால்வரைக்குலத்தின்யாவையுமில்லையாதலாலுவமைமற்றில் லை, நூல்வரைத்தொடர்ந்துபயத்தொடும்பழகிநுணங்கிய நுவலருமு ணர்வே, போல்வகைத்தல்லாலுபமிஹேடியர்ந்ததென்னலாம்பொ ன்மதினிலையே. (அ)

மேவருமுணர்வுமுடிவிலாமையினால் வேதமுமொக்கும்விண்புகலால்
தேவருமொக்குமுனிவருமொக்குந்திண்பொறியடக்கியசெயலால்
காவலிற்கலையூர்கன்னியையொக்குஞ் சூலத்தாற்காளியையொக்கும்
யாவையுமொக்கும்பெருமையாலெய்தற்கருமையாலீசனையொக்கும்.

பஞ்சிவான்மதியையூட்டிய வனையபடருகிர்ப்பங்கயச்செங்கால் வஞ்சிபோன்மருங்குல்குரும்பைபோற் கொங்கைவாங்குவேய்வைத் தமென்பணைத்தோள், அஞ்சொலார்பயிலுமயோத்திமாநகரினழகு டைத்தன்றெனவறிவான், இஞ்சிவானோங்கியிமையவருலகங்காணி யவெழுந்ததொத்துளதே. (௰)

கோலிடையுலகமளத்தலிற்பகைஞர் முடித்தலைகோடலின்மனு வின், நூல்நெறிநடக்குஞ்செவ்வையின்யார்க்குநோக்கருங்காவலின்

---

5. எண்ணருங்குணம் - எட்டாகிய அருங்குண மென்க. அவை தன்வ யத்த னாதல், தூயவுடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், இயர்க் கையுணர் வினனாதல், முற்றுமுணர்தல், பேருளுடைமை, முடிவிலாற்றலுடை மை, வரம்பிலின்பமுடைமை எனஎண்ணதற் கரியகுணமெனினு மாமென்க. ஒண்ணுமோ - மரீஇயது.

9. கலையூர்கன்னி - துர்க்கை.

வலியின், வேலொடுவாள்விற்பயிற்றலின் வெய்யசூழ்ச்சியின் வெலற்க
ருவலத்தின், சால்புடையுயர்விற்சக்கரநடத்துந் தன்மையிற்றலைவ
ரொத்துளதே. (கக)

சினத்தயில்கொலைவாள்சிலைமழுத் தண்டுசக்கரந்தோமரமுலக்
கை, கனத்திடையுருமின்வெருவருங்கவண்கல்லென்றிவைகளிப்பி
லகொதுகின், இனத்தையுமுவணத்திறையையுமியங்குங்காலையுமித
மலநினைவார், மனத்தையுமெறியும்பொறியுளவென்றான்மற்றினியு
ணர்த்துவதெவனே. (கஉ)

பூவினும்புகழேயமையுமென்றினையபொற்பினின்றுயிர்நனிபுரக்கும்
யாணரெண்டிசைக்குமிருளறவிமைக்குமிரவிதன்குலமுதனிருபர்
சேனையுங்கடந்துதிசையையுங்கடந்துதிகிரியுஞ்செந்தனிக்கோலும்
ஆணையுநடக்குமாயினுநகருக்கணியெனவியற்றியதன்றே. (கங)

அன்னமாமதிலுக்காழிமால்வரையையலைகடல்சூழ்ந்தனவகழி [றிக்
பொன்விலைமகளிர்மனமெனக் கீழ்போய்ப்புன்கவியெனத்தெளிவின்
கன்னியரல்குற்றடமெனயார்க்கும்படிவருங்காப்பினதாகி [ம்.
நன்னெறிவிலக்கும்பொறியெனவெறியுங்கராத்ததுநவிலலுற்றதுநா

வேறு.

ஏகுகின்றதங்கணங்களோடுமெல்லைகாண்கிலா
நாகமொன்றகன்கிடங்கைநாமவேலையாமெனா
மேகமொண்டுகொண்டெழுந்துவிண்டொடர்ந்தகுன்றமென்
றுகநோக்குநின்றுதாரையம்மதிற்கண்வீசுமே. (கரு)

அந்தமாமதிற்புறத்தகத்தெழுந்தலர்ந்தநீள்
கந்தநாறுபங்கயத்தகானமானமாதரார்
முந்துவாண்முகங்களுக்குடைந்துபோனமொய்ம்பெலாம்
வந்துபோர்மலைக்கமாமதில்வளைத்தன்மானுமே. (கசு)

சூழ்ந்தநாஞ்சில்சூழ்ந்தவாரைசுற்றுமுற்றுபாரெலாம்
போழ்ந்தமாகிடங்கிடைக்கிடந்துபொங்கிடங்கர்மா
தாழ்ந்தவங்கவாரியிற்றடுப்பொணாமதத்தினால்
ஆழ்ந்தயானைமீதெழுந்தழுந்துகின்றபோலுமே. (கஎ)

ஈரும்வாளின்வால்விதிர்த்தெயிற்றிளம்பிறைக்குலம்
பேரமின்னிவாய்விரித்தெதிர்ந்தகட்பிறங்குதீ

13. ஆணை - பாகதச்சிதைவு. வட்டம், கண்ணன் என்றாற்போல.
17. நாஞ்சில் - மதிலுறுப்பு.

சோரவொன்றையொன்றுமுன்றொடர்ந்துசீறிடுங்கள்மா
போரில்வந்துசீறுகின்றபோரக்கர்போலுமே. (கஅ)

ஆளுமன்னர்வெண்குடைக்குலங்களாவருங்கரா
கோளெலாமுலாவுகின்றகுன்றமன்னயானையா
தாளுலாவுபங்கயத்தரங்கமுந்துரங்கமா
வாளும்வேலுமீனமாகமன்னர்சேனைமாறுமே. (க௯)

விளிம்புதெற்றிமுற்றுவித்துவெள்ளிகட்டியுள்ளுறப்
பளிங்குபொற்றலத்தகட்டடுத்துறப்படுத்தலின்
தளிந்தகற்றலத்தொடச்சலத்தினைத்தனித்துறத்
தெளிந்துணர்த்துகிற்றுமென்றதேறவாலுமாவதே. (உ0)

அன்னநீரகன்கிடங்குசூழ்கிடந்தவாழியைத்
துன்னிவேறுசூழ்கிடந்ததூங்கும்வீங்கிருட்பிழம்
பென்னலாமிரும்புசூழ்கிடந்தசோலைபெண்ணிலப்
பொன்னின்மாமதிட்டுடுத்தநீலவாடைபோலுமே. (உக)

எல்லைநின்றவென்றியானையென்னநின்றமுன்னமால்
ஒல்லையும்பர்நாடளந்ததாளினீடுயர்ந்தவால்
மல்லன்ஞாலம்யாவுநீதிமாறுறாவழக்கினால்
நல்லவாறுசொல்லும்வேதநான்குமன்னவாயிலே. (உஉ)

தாவில்பொற்றலத்தினற்றவத்தினோர்கடங்குநாட்
பூவுயிர்த்தகற்பகப்பொதும்பர்புக்கொதுங்குமால்
ஆவியொத்தவன்புசேவல்கூவவந்தணைந்திடா
ஓவியப்புறாவின்மாடிருக்கலூடுபேடையே. (உந)

கல்லடித்தடுக்கிவாய்ப்பளிங்கரிந்துகட்டிநீ
எல்லிடப்பசும்பொன்வைத்திலங்குபன்மணிக்குலம்
வில்லிடக்குயிற்றிவாள்விரிக்கும்வெள்ளிமாமரம்
புல்லிடக்கிடத்திவச்சிரத்தகால்பொருத்தியே. (உச)

மரகதத்திலங்குபோதிகைக்கலத்துவச்சிரம்
புரைதபுத்தடுக்கிமீதுபொன்குயிற்றிமின்குலா
நிரைமணிக்குலத்தினொளிநீள்வகுத்தவோளிமேல்
விரவுகைதலத்திலுய்த்தமேதகத்தின்மீதரோ. (உரு)

ஏழ்பொழிற்குமேழ்நிலத்தலஞ்சமைத்ததென்னநூல்
ஊழுறக்குணித்தமைத்தவும்பர்செம்பொன்வேய்ந்துநீச்

---

26. பொழில் - உலகம்.

சூழ்சுடர்ச்சிரத்துநன்மணித்தசும்புதோன்றுமால்
வாழ்நிலக்குலக்கொழுந்தைதமௌலிசூட்டியென்னவே. (௨௬)

வேறு.

திங்களுங்கரிதெனவெண்மைதீற்றிய
சங்கவெண்சுதையுடைத்தவளமாளிகை
வெங்கடுங்கால்பொரமேக்குநோக்கிய
பொங்கிரும்பாற்கடற்றரங்கம்போலுமே. (௨௭)

புள்ளியம்புறவிறைபொருந்துமாளிகை
தள்ளருந்தமணியத்தகடுவேய்ந்தன
எள்ளருங்கதிரவனிளவெயிற்குழாம்
வெள்ளியங்கிரிமிசைவிரிந்தபோலுமே. (௨௮)

வயிரநற்கான்மிசைமரகதத்துலாம்
செயிரறப்போதிகைகிடத்திச்சித்திரம்
உயிர்பெறக்குயிற்றியவும்பர்நாட்டவர்
அயிருறவிமைப்பனவளவில்கோடியே. (௨௯)

சந்திரகாந்தத்தின்றலத்தசந்தனப்
பந்திசெய்தூணின்மேற்பவளப்போதிகைச்
செந்தளிமணித்துலாஞ்செறிந்ததிண்சுவர்
இந்திரநீலத்தவெண்ணில்கோடியே. (௩௦)

பாடகக்காலடிபதுமந்தொப்பன
சேடரைத்தழீஇயனசெய்யவாயன
நாடகத்தொழிலனநடுவுதுய்ப்பன
ஆடகத்தோற்றத்தவளவிலாதன. (௩௧)

புக்கவர்கண்ணிமைபொருந்துறுதொளி
தொக்குடறயங்கிவிண்ணவரிற்றோன்றலால்
திக்குறநினைப்பினிற்செல்லுந்தெய்வவீ
டொக்கநின்றிமைப்பனவும்பர்நாட்டினும். (௩௨)

அணியிழைமகளிருமலங்கல்வீரரும்
தணிவனவறநெறிதணிவிலாதன
மணியினும்பொன்னினும்வனைந்தவல்லது
பணிபிறிதியன்றனபாங்குமில்லையே. (௩௩)

---

32. உம்பர்நாட்டினுமென்புழி உம்பர்கள் நிச்சயிக்கினுமென்றும், உம்பருலகைப்பார்க்கினுமென்று முரைப்பினுமமையும்.

வானுறநிமிர்ந்தனவரம்பில்செல்வத்த
தானுயர்புகழெனத்தயங்குசோதிய
ஊனமிலறநெறியுற்றவெண்ணிலாக்
கோனிகர்குடிகடங்கொள்ளைசான்றன. (௩௪)

அருவியிற்றாழ்ந்துமுத்தலங்குதாமத்த
விரிமுகிற்குலமெனக்கொடிவிராயின
பருமணிக்குவையனபசும்பொற்கோடிய
பொருமயிற்கணத்தனமலையும்போன்றன. (௩௫)

அகிலிடுகொழும்புகையளாய்மயங்கின
முகிலொடுவேற்றுமைதெரிகலாமுழுத்
துகிலொடுநெடுங்கொடிச்சூலமின்னுவ
பகலிடுமின்னலின்பரப்புப்போன்றவே. (௩௬)

துடியிடைப்பணைமுலைத்தோகையன்னவர்
அடியிடைச்சிலம்புபூண்டரற்றுமாளிகைக்
கொடியிடைத்தரளவெண்கோவைசூழ்வன
கடியுடைக்கற்பகங்கான்றமாலையே. (௩௭)

காண்வருநெடுவரைக்கதலிக்கானம்போல்
கோளரிநிர்பதாகையின்குழாந்தழைத்தன
வாணனிமழுங்கிடமடங்கிவைகலும்
சேண்மதிதேய்வதக்கொடிகடேய்க்கவே. (௩௮)

பொன்றிணிமண்டபமல்லபூத்தொடர்
மன்றுகளல்லனமாடமாளிகை
குன்றுகளல்லனமணிசெய்குட்டிம
முன்றில்களல்லனமுத்தின்பந்தரே. (௩௯)

மின்னெனவிளக்கெனவெயிற்பிழம்பெனத்
துன்னியதமனியத்தொழிற்றழைத்தவக்
கன்னிநன்னகர்நிழல்கதுவலாலரோ
பொன்னுலகாயதப்புலவர்வானமே. (௪௦)

எழுமிடத்தகன்றிடையொன்றியெற்படு
பொழுதிடைப்போதலிற்புரிசைப்பொன்மதில்
அழன்மணிதிருத்தியவயோத்தியாளுடை
நிழலெனப்பொலியுமாநேமிவான்சுடர். (௪௧)

---

35. பசும்பொன் - மாற்றுயர்ந்த பொன்.

ஆய்ந்தமேகலையவரம்பொன்மாளிகை
வேய்ந்தகாரகிற்புகையுண்டமேகம்போய்த்
தோய்ந்தமாகடனறுந்தூபநாறுமேல்
பாய்ந்ததாரையினிலைபகரல்வேண்டுமோ. (சஉ)

குழலிசைமடந்தையர்குதலைக்கோதையர்
மழலையங்குழலிசைமகரயாழிசை
எழிலிசைமடந்தையரின்சொலின்னிசை
பழையர்தஞ்சேரியிற்பொருநர்பாட்டிசை. (சங)

கண்ணிடைக்கனல்சொரிகளிறுகால்கொடு
மண்ணிடைவெட்டுவவாட்கைமைந்தர்கள்
பண்ணைகள்பயிலிடங்குழிபடைப்பன
சுண்ணமக்குழிகளைத்தொடர்ந்துதூர்ப்பன. (சச)

பந்துகண்மடந்தையர்பயிற்றுவாரிடை
சிந்துவமுத்தினமவைதிரட்டுவார்
அந்தமில்சிலதியராற்றகுப்பைகள்
சந்திரனொளிகெடத்தழைப்பதண்ணிலா. (சரு)

அரங்கிடைமடந்தையராடுவாரவர்
கருங்கடைக்கண்ணயில்காமர்நெஞ்சினை
ஒருங்குவமற்றவருயிர்களன்னவர்
மருங்குல்போற்றேய்வனவளர்வதாசையே. (சசு)

பொழிவனசோலைகள்புதியதேன்சில
விழைவனதென்றலுமின்றுமெல்லென
நுழைவனவன்னவைநுழையநோவொடு
குழைவனபிரிந்தவர்கொதிக்குங்கொங்கையே. (சஎ)

இறங்குவமகரயாழெடுத்தவின்னிசை
நிறங்கிளர்பாடலாணிமிர்வவவ்வழி
கறங்குவவள்விசிகருவிகண்முகிழ்த்
துறங்குவமகளிரோடோதுங்கிள்ளையே. (சஅ)

---

43. குழலிசைமடந்தையர் மழலையங்குழலிசை எழிசை மடந்தையரின் சொலின்னிசையெனவும், குதலையங்கோதையர் மகரயாழிசை பழையர்தஞ் சேரியிற்பொருநர்நாட்டிசையெனவும் நிரனிறையாகவைத்துப்பொருள் கொள்க.

45. ஆற்ற என்பதில் இன் இடைநிலை தொகுத்தல்பெற்றது.

குதைவரிச்சிலேநுதற்கொவ்வைவாய்ச்சியர்
பதயுகத்தொழில்கொடுபழிப்பிலாதன
ததைமலர்த்தாமரையன்னதாளினல்
உதைபடச்சிவப்பனவுரவுத்தோள்களே. (௪௯)

பொழுதுணர்வரியவப்பொருவின்மாநகர்த்
தொழுதகைமடந்தையர்சுடர்விளக்கெனப்
பழுதருமேனியைப்பார்க்குமாசைகொல்
எழுதுசித்திரங்களுமிமைப்பிலாதவே. (௫௦)

தணிமலர்த்திருமகடயங்குமாளிகை
இணரொளிபரப்பிநின்றிருடுரப்பன
திணிசுடர்நெய்யுடைத்தீவிளக்கமோ
மணிவிளக்கல்லனமகளிர்மேனியே. (௫௧)

பதங்களிற்றண்ணுமைபாணிபண்ணுற
விதங்களின்விதிமுறைசதிமிதிப்பவர்
மதங்கியரச்சதிவகுத்துக்காட்டுவ
சதங்கைகளல்லனபுரவித்தார்களே. (௫௨)

முளைப்பனமுறுவலம்முறுவல்வெந்துயர்
விளைப்பனவன்றியுமெலிந்துநாடொறும்
இளைப்பனநுண்ணிடையிளைப்பமென்முலை
திளைப்பனமுத்தொடுசெம்பொனாரமே. (௫௩)

இடையிடைமெங்கணுங்களியறுதன
நடையிளவன்னங்கணளினநீர்க்கயல்
பெடையிளவண்டுகள்பிரசமாந்திடுங்
கடகரியல்லனமகளிர்கண்களே. (௫௪)

தழல்விழியாளியுந்துணையுந்தாழ்வரை
முழைவிழைகிரிநிகர்களிற்றின்மும்மத
மழைவிழும்விழுந்தொறுமண்ணுங்கீழுறக்
குழைவிழுமவில்விழுங்கொடித்திண்டேர்களே. (௫௫)

ஆடுவார்புரவியின்குரத்தையார்ப்பன
சூடுவாரிகழ்ந்தவத்தொங்கன்மாலைகள்

---

55. அவற்றில் என்பது அவில் எனச்சாரியையுள்வழி அற்றுச்சாரியை தவிர்ந்து நின்றது. இவ்வாறு பலவின்படர்க்கை, பலவினீட்டமெனவருதலிற் காண்க. இதற்கு வேறு கூறுவாருமுளர்.

ஓடுவாரிழுக்குவவூட லூடுறக்
கூடுவார்வனமுலைகொழித்தசாந்தமே. (௫௬)

இளைப்பருங்குரங்களாலிவுளிபாரினைக்
கிளைப்பனவவ்வழிகிளர்ந்ததூளியின்
ஒளிப்பனமணியவைபொளிரமீதுதேன்
துளிப்பனகுமரர்தந்தோளின்மாலையே. (௫௭)

விலக்கருங்கரிமதம்வேங்கைநாறுவ
குலக்கொடிமாதர்வாய்குமுதநாறுவ
கலக்கடைகணிப்பருங்கதிர்கணாறுவ
மலர்க்கடிநாறுவமகளிர்கூந்தலே. (௫௮)

கோவையிந்நகரொடெண்குறிக்கலாதவத்
தேவர்தந்நகரியைச்செப்புகின்றதென்
யாவையும்வழங்கிடத்திகலியிந்நகர்
ஆவணங்கண்டபினளகைதோற்றதே. (௫௯)

அதிர்கழலொலிப்பனவயிலிமைப்பன
கதிர்மணியணிவெயில்கால்வமான்மதம்
முதிர்வுறக்கமழ்வனமுத்தமின்னுவ
மதுகரமிசைப்பனமைந்தரீட்டமே. (௬0)

வளையொலிவயிரொலிமகரவீணையின்
கிளையொலிமுழவொலிகின்னரத்தொலி
தொளையொலிபல்லியந்துவைக்குஞ்சும்மையின்
விளையொலிகடலொலிமெலியவிம்முமே. (௬௧)

மன்னவர்தருதிறையளக்குமண்டபம்
அன்னமென்னடையவராடுமண்டபம்
உன்னருமருமறையோதுமண்டபம்
பன்னருங்கலைதெரிபட்டிமண்டபம். (௬௨)

---

58. கலங்கடை - கலக்கடை என வலிக்கும் வழிவலித்தல்.

59. கோவையிந்நகரொடெண் குறிக்கலாத என்பது எழுநகரமென்னும் கோவையினின்ற இந்நகரத்தொடு எண்ணிக்கூறாத எனக்கொள்க. இவ்வாறு கூறாதுகோ இந்நகரெனவும் ஐசாரியையெனவுங்கொண்டு கூறுவாருமுளர். அவர் எழுநகரத்தொடிதனையு மொன்றெனக்கொள்ளும் பெற்றிமையறியார் போலுமெனக்கடாவியொழிக.

62. கலைகளாவன - வியாகரணம், போர்நூல், கணிதநூல், மனுநூல் இதிகாசம் முதலியவை. பட்டிமண்டபம் - கல்விதெரியுமண்டபம், இதனைப் 'பட்டிமண்டபமேற்றினை' எனப்பிறருங் கூறுதல் காண்க.

இரவியிற்சுடர்மணியிமைக்குந்தோரணத்
தெருவினிற்சிறியனதிசைகள்சேண்விளங்
கருவியிற்பெரியனவானைத்தானங்கள்
பரவையிற்பெரியனபுரவிப்பந்தியே. (௬௩)

சூளிகைமழைமுகில்தொடக்குந்தோரண
மாளிகைமலர்வனமகளிர்வாண்முகம்
வாளிகளன்னவைமலர்வமற்றவை
ஆளிகளன்னவர்நிறத்திறுழ்பவே. (௬௪)

மன்னவர்கழலொடுமாறுகொள்வன
பொன்னணித்தேரொலிபுரவித்தாரொலி
இன்னகையவர்சிலம்பேங்கவேங்குவ
கன்னியர்குடைதுறைக்கமலவன்னமே. (௬௫)

ஊடவுங்கூடவுமுயிரினின்னிசை
பாடவும்விறலியர்பாடல்கேட்கவும்
ஆடவுமகன்புனலாடியம்மலர்
சூடவும்பொழுதுபோஞ்சிலர்க்கத்தொன்னகர். (௬௬)

முழங்குதிண்கடகரிமுன்பிணுரவும்
எழுங்குரத்திவுளியோடிரதமேறவும்
பழங்கணோடிரந்தவர்பரிவுதீர்தர
வழங்கவும்பொழுதுபோஞ்சிலர்க்கம்மாநகர். (௬௭)

கரியொடுகரியெதிர்பொருத்திக்கைப்படை
வரிசிலைமுதலியவழங்கிவாளுளைப்
புரவியிற்பொருவில்செண்டாடிப்போர்க்கலை
தெரிதலிற்பொழுதுபோஞ்சிலர்க்கச்சேணகர். (௬௮)

நந்தவனத்தலர்கொய்துநவ்விபோல்
வந்திளையவரொடுவாவியாடிவாய்ச்
செந்துவரழிதரத்தேறன்மாந்திச்சூ
துந்துவிற்பொழுபோஞ்சிலர்க்கவ்வொண்ணகர். (௬௯)

---

64. சூளிகை - சிகரம். பெண்கள் முகங்களை மாளிகைமலர்வன எனவும், அன்னவைவாளிகளை மலர்வன சிங்கவேறு போல்வார்மார் பிற்றைப்பனவென வும் பொருளமைத்துக்கொள்க. வாளிகள் கண்களுக்குருவகம்.

68. செண்டாடி என்றது. வையாளி வீதியில் விளையாடியென்க.

வேறு.

நானாவிதமானளிமாதிரவீதியோடி
மீனாறுவேலைப்புனல்வெண்முகிலுண்ணுமாப்போல்
ஆனாதமாடத்திடையாடுகொடிக்கண்மீப்போய்
வானாறுநண்ணிப்புனல்வற்றிடநக்குமன்னோ. (௭0)

வன்றோரணங்கள்புணர்வாயிலும்வானினும்பர்
சென்றோங்கிமேலோரிடமில்லெனச்செம்பொனிஞ்சி
குன்றோங்குதோளார்குணங்கூட்டிசைக்குப்பையென்ன
ஒன்றோடிரண்டுமுயர்ந்தோங்கினவும்பர்நாண. (௭௧)

காடும்புனமுங்கடலன்னகிடங்குமாதர்
ஆடுங்குளனும்மருவிச்சுனைக்குன்றுமும்பர்
வீடும்விரவும்மணிப்பந்தரும்வீணைவண்டு
பாடும்பொழிலும்மலர்ப்பல்லவப்பள்ளிமன்னோ. (௭௨)

தெள்வார்மழையுந்திரையாழியுமுட்கநாளும்
வள்வார்முரசம்மதிர்மாநகர்வாழுமாக்கள்
கள்வாரிலாமைப்பொருள்காவலுமில்லையாதுங்
கொள்வாரிலாமைக்கொடுப்பார்களுமில்லைமாதோ. (௭௩)

கல்லாதுநிற்பார்பிறரின்மையிற்கல்விமுற்ற
வல்லாருமில்லையவைவல்லரல்லாருமில்லை
எல்லாருமெல்லாப்பெருஞ்செல்வமுமெய்தலாலே
இல்லாருமில்லையுடையார்களுமில்லைமாதோ. (௭௪)

ஏகம்முதற்கல்விமுளைத்தெழுந்தெண்ணில்கேள்வி
ஆகம்முதற்றிண்பணைபோக்கியருந்தவத்தின்
சாகந்தழைத்தன்பரும்பித்தருமம்மலர்ந்து
போகங்கனியொன்றுபழுத்ததுபோலுமன்றே. (௭௫)

ஆக திருவிருத்தம்-௧௯௭.

---

70. வானாறு - ஆகாயகங்கை.

71. தோரணவாயிலு மதிலும் தோளார்இசைக்குப்பையென்னு மவ்வொன்றோடு கோபுரமுமதிலுந் தேவர் நாணமிகவோங்கினவென் றுரைத்துக் கொள்க.

72. வீணைவண்டு - வீணைபோல வண்டொலியைக்க.

75. கல்வியாகிய ஒரு முதல் முளைத்து வேற்போந்து எண்ணிறந்த கேள்வியாகிய அம்முதன்மையும் வன்மையுமுடைய கவடுகளைப்போக்கி அருந்தவமாகிய இலைகள் தழைத்து அன் பரும்பித் தருமமாகிய மலர்மலர்ந்து போகமாகிய கனியொன்று பழுத்ததுபோலு மெனக்கொள்க. அன்பினை மலராகக் கூறாமை ஏகதேசவுருவகம்.

# ௪-வது, அரசியற்படலம்.

அம்மாணகருக்கரசன்னரசர்க்கரசன்
செம்மாண்டணிக்கோலுலகேழினுஞ்செல்லநின்றான்
இம்மாண்கதைக்கோரிறையாயவிராமனென்னும்
மொய்ம்மாண்கழலோற்றருநல்லறமூர்த்தியன்னான். (௧)

ஆதிம்மதியும்மருளும்மறனும்மமைவும்
ஏதின்மிடல்வீரமுமீகையுமெண்ணில்யாவும்
நீதிந்நிலையும்மிவைநேமியினோர்க்குநின்ற
பாதிம்முழுதும்மிவற்கேபணிகேட்பமன்னோ. (௨)

மொய்யார்கலிசூழ்முதுபாரின்முகந்துதானக்
கையார்புனலானனையாதனகையுமில்லை
மெய்யாயவேதத்துறைவேந்தருக்கேய்ந்தயாரும்
செய்யாதயாகமிவன்செய்துமறந்தமாதோ. (௩)

தாயொக்குமன்பிற்றவமொக்குநலம்பயப்பில்
சேயொக்குமுன்னின்றொருசெல்கதியுய்க்குநீரான்
நோயொக்குமென்னின்மருந்தொக்குநுணங்குகேள்வி
ஆயப்புகுங்காலறிவொக்குமெவர்க்குமன்னான். (௪)

ஈய்ந்தேகடந்தானிரப்போர்கடலெண்ணினுண்ணூல்
ஆய்ந்தேகடந்தானறிவென்னுமளக்கர்வாளால்
காய்ந்தேகடந்தான்பகைவேலைகருத்துமுற்றத்
தோய்ந்தேகடந்தான்றிருவிற்றொடர்போகவெள்ளம். (௫)

வே று.

வெள்ளமும்பறவையும்விலங்கும்வேசியர்
உள்ளமுமொருவழியோடநின்றவன்
தள்ளரும்பெரும்புகழ்த்தயரதப்பெயர்
வள்ளல்வள்ளுறையயின்மன்னர்மன்னனே. (௬)

---

2. ஏதமெனறது - கடைகுறைந்து நின்றது.

3. மொய் - வலிமை.

6. மிக்க - மழையும் பெயலின்மையு மின்மையான்வெள்ளமுமொருவழியோடவெனவும், பறவையும் விலங்கும் தத்தமக்குவேண்டு முணவுந் தாஞ்சென்றுழிப் பெறுதலின் அவையொருவழியோட வெனவும், தாமடைந்த தலைவனையன்றிப் பிறரெவ்வளவு நிதியமீட்டினும் விழையாமையின் வேசியருள்ளமுமொருவழியோட வெனவுங்கொள்க. மிக்கமழையை அதிவிருட்டியெனவும், பெயலின்மையை அனாவிருட்டி யெனவுங்கூறுவர் வடநூலார்.

நேமிமால்வரைமதிலாகநீள்புறப்
பாமமாகடல்கிடங்காகப்பன்மணி
வாமமாளிகைமலையாகமன்னற்குப்
பூமியுமயோத்திமாநகரம்போலுமே. (௭)

ஆவருந்வன்மைநேரறிந்துநீட்டலால்
மேவருங்கையடைவேலுந்தேயுமால்
கோவுடைநெடுமணிமகுடகோடியால்
சேவடியடைந்தபொற்கழலுந்தேயுமால். (௮)

மண்ணிடையுயிர்தொறும்வளர்ந்துதேய்வின்றி
தண்ணிழல்பரப்பவுமிருளைத்தள்ளவும்
அண்ணறன்குடைமதியமைபுமாதலான்
விண்ணிடைமதியினைமிகையிதென்பவே. (௯)

வயிரவான்பூணணிமடங்கன்மொய்ம்பினன்
உயிரெலாந்தன்னுயிரொப்பவோம்பலாற்
செயிரிலாவுலகினிற்சென்றுநின்றுவாழ்
உயிரெலாமுறைவதோருடம்புமாயினன். (௧௦)

குன்றெனவுயரியகுவவுத்தோளினன்
வென்றியந்திகிரிவெம்பரிதியாமென
ஒன்றெனவுலகிடையுலாவிமீமிசை
நின்றுநின்றுயிர்தொறுநெடிதுகாக்குமே. (௧௧)

எய்யெனவெழுபகையெங்குமின்மையான்
மொய்பெருத்தினவுறுமுழவுத்தோளினன்
வையகமுழுவதும்வறிஞரோம்புமோர்
செய்யெனக்காத்தினிதரசுசெய்கின்றான். (௧௨)

ஆ திருவிருத்தம் - ௧௭௬.

---

7. நேமிமால்வரையே மதிலாகவும், கடலே யகழியாகவும், மலையே மாளிகையாகவும் அரசனுக்கிவ்வுலகம் அயோத்திபோலுமென்றியைக்க.

8. ஆவர் வன்மையுநேரறிந்து நீட்டலால் என உம்மையை வன்மையினிடத்திற்கூட்டுக. யாவருமென்றது மரீஇயது.

10. சென்று நின்று வாழுயிரெலாம் - இயங்குதிணைநிலைத்திணைகள்.

## ரு-வது, திருவவதாரப்படலம்.

ஆயவனொருபகலயனையேநிகர்
தூயமாமுனிவரற்றொழுதுதொல்குலத்
தாயருந்தந்தையுந்தவமுமன்பினால்
மேயவான்கடவுளும்பிறவும்வேறுநீ. (க)

எங்குலத்தலைவர்களிரவிதன்னினும்
தங்குலம்விளங்குறத்தரணிதாங்கினார்
மங்குநரில்லெனவரம்பில்வையகம்
இங்குனதருளினாலினிதினோம்பினேன். (உ)

அறுபதினாயிரமாண்டுமாண்டுற
உறுபகையொடுக்கியிவ்வுலகையோம்பினேன்
பிறிதொருகுறையிலையெற்பின்வையகம்
மறுகுமென்பதோர்மறுக்கமுண்டரோ. (ங)

அருந்தவமுனிவருமந்தணாளரும்
வருந்துதலின்றியேவாழ்வின்வைகினார்
இருந்துயருழக்குநரெற்பினென்பதோர்
அருந்துயர்வருத்துமென்னகத்தையென்றனன். (ச)

முரசறைசெழுங்கடைமுத்தமாமுடி
அரசர்தங்கோமகனனையகூறலும்
விரைசெறிகமலமென்பொகுட்டுமேவிய
வரசரோருகன்மகன்மனத்தினெண்ணினான். (ரு)

அலைகடனடுவணோரநந்தன்மீமிசை
மலையெனவிழிதுயில்வளருமாமுகில்
கொலைதொழிலரக்கர்தங்கொடுமைதீர்ப்பெனென்
றலைவுறுமமரருக்குரைத்தவாய்மையை. (சு)

சுடுதொழிலரக்கராற்றொலைந்துவானுளோர்
கடுவமர்களனடிகலந்துகூறலும்
படுபொருளுணர்ந்தவப்பரமன்யாமினி
அடுவதில்லெனமறுத்தவரோடேகினான். (எ)

கறைமிடற்றிறைவனுங்கடவுளோர்களும்
மறைமுதற்கிழவனைவந்துநண்ணலும்
முறைமையிற்கடன்முறைமுற்றிமுண்டகத்
திறைவனுமவரொடுமினிதினேகினான். (அ)

வடவரைக்குடுமியினடுவண்மாசறு
சுடர்மணிமண்டபந்துன்னிநான்முகக்
கடவுளையடிதொழுதமரர்கண்டகர்
இடிநிகர்வினையமதியம்பினரோ. (௯)

பாகசாதனன்றனைப்பாசத்தார்த்தடல்
மேகநாதன்புகுந்திலங்கைமேயநாள்
போகமாமலருறைபுனிதன்மீட்டமை
கோதைபாகற்குறச்சொல்லினரோ. (௰)

இருபதுகரந்தலைபீரைந்தென்னுமத்
திருவிலிவலிக்கொருசெயலின்றெங்களால்
கருமுகிலெனவளர்கருணையங்கடல்
பொருதிடர்தணிக்கினுண்டெனும்புணர்ப்பினர். (௧௧)

நிரைகெழுபயோததிதுயிலுந்தெய்வவான்
மரகதமலையினைவழுத்திநெஞ்சினாற்
கரகமலங்குவித்திருந்தகாலையிற்
பரகதியுணர்ந்தவர்க்குதவுபண்ணவன். (௧௨)

கருமுகிறமரைக்காடுபூத்துநீ
டிருசுடரிருபுறத்தேந்திமேடலர்ந்
திருவொடும்பொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவதுபோற்கலுழன்மேல்வந்துதோன்றினான். (௧௩)

எழுந்தனர்கறைமிடற்றிறையுந்தாமரைச்
செழுந்தவிசுகந்தவத்தேவுஞ்சென்றெதிர்
விழுந்தனரடிமிசைவிண்ணுளோரொடுந்
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்குவார். (௧௪)

ஆடினர்பாடினரங்குமிங்குமா
ஓடினருவகைமாநறவுண்டோர்கிலார்

---

10. பாகசாதனன் - இந்திரன். மேகநாதன் பிறப்புக்காலத்தில் மேககர்ச்சனைபோல் ஒலித்தமையால் இந்திரஜித்துக்கு மேகநாதனென்னும் பெயர்உண்டாயிற்று.

12. பரகதிஎன்றது நலமந்தமில்லதோர் நாடாகியபரமபதத்தை.

13. இறைவனைமுகிலாகவும், அவரவயவங்களைத் தாமரைமலராகவும், ஆழியையுஞ் சங்கையும் இருசுடராகவும், கருடனைப் பொற்குன்றாகவும் கூறினார். முகிலிடத்துத் தாமரை கூறினமையான் இல்பொருளுவமை.

வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
சூடினர்முறைமுறைதுளவத்தாண்டலர். (௧௫)

பொன்வரையிழிவதோர்புயலின்பொற்புற
என்னையாளுடையவன்றோணின்றெம்பிரான்
சென்னிவான்றடவுமண்டபத்துச்சேர்ந்தரி
துன்னுபொற்பீடமேற்பொலிந்துதோன்றினான். (௧௬)

விதியொடுமுனிவரும்விண்ணுளோர்களும்
மதிவளர்சடைமுடிமழுவலாளனும்
அதிசயமுடனுவந்தயலிருந்துழி
கொதிகொள்வேலரக்கர்தங்கொடுமைகூறினார். (௧௭)

ஐயிருதலையினோனனுசராதியாம்
மெய்வலியரக்கரால்விண்ணுமண்ணுமே
செய்தவமிழந்தனதிருவினாயக
உய்திறமில்லையென்றுயிர்ப்புவீங்கினார். (௧௮)

எங்கணீள்வரங்களாலரக்கரென்றுளார்
பொங்குமூவுலகையும்புடைத்தழித்தனர்
செங்கணாயகவினித்தீர்ந்ததில்லையேல்
நுங்குவருலகையோர்நொடியினென்றனர். (௧௯)

என்றனரிடருழந்திறைஞ்சியேத்தலும்
மன்றலர்துளவினான்வருந்தல்வஞ்சகர்
தந்தலையறுத்திடர்தணிப்பென்றாரணிக்
கொன்றுநீர்கேண்மெனவுரைத்தன்மேயினான். (௨௦)

வானுளோரனைவரும்வானரங்களாக்
காணினும்வரையினுங்கடிதடத்தினும்
சேனையோடவதரித்திடுமின்சென்றென
ஆனனமலர்ந்தனனருளினாழியான். (௨௧)

மசரதமனையவர்வரமும்வாழ்வுமோர்
நிசரதகணைகளானீறுசெய்யயாம்
கசரததுரகமாக்கடல்கொள்காவலன்
தசரதன்மதலையாவருதுந்தாரணி. (௨௨)

---

20. கேளும் என்பது கேண்மென நின்றது. இது மகரக்குறுக்கம்.

22. மசரதனைமனையவர் - பேய்த்தேரன்னவர்.

வளையொடு திகிரியும்வடவைதீதர
விளைதருகடுவுடைவிரிகொள்பாயனும்
இளைஞர்களெனவடிபரவவேகிநாம்
வளைமதிலயோத்தியில்வருதுமென்றனன். (உ௩)

என்றவனுரைத்தபோதெழுந்துதுள்ளினார்
நன்றிகொண்மங்கலநாதம்பாடினார்
மன்றலர்செழுந்துளவணியுமாயனார்
இன்றெமையளித்தனரென்னுமேம்பலால். (உ௪)

வேறு.

போயபெதம்பொருமமலென்றுவிந்திரனுவகைபூத்தார்
தூயமாமலருளோனுஞ்சுடர்மதிசூடிதானும்
சேயுயர்விசும்புளோருந்தீர்ந்ததெஞ்சிறுமையென்றார்
மாயிருஞாலமுண்டோன்கலுழன்மேற்சரணம்வைத்தான். (உ௫)

என்னையாளுடையவையன்கலுழன்மீதெழுந்துபோய
பின்னர்வானவரைநோக்கிப்பிதாமகன்பேசுகின்றான்
முன்னரேயெண்கின்வேந்தன்யானெனமொழிகின்றான்மற்
றன்னவாறெவருநீர்போயதரித்திடுமினென்றான். (உ௬)

தருவுடைக்கடவுள்வேந்தன்சாற்றுவானெனதுகூறு
மருவலர்க்கசனியன்னவாலியுமகனுமென்ன
இரவிமற்றெனதுகூறங்கவற்கிளையவனென்றோத
அரியுமற்றெனதுகூறுநீலனென்றறைந்திட்டானால். (உ௭)

வாயுமற்றெனதுகூறுமாருதியெனுமற்றோர்
காயுமற்கடங்களாகிக்காசினியதனின்மீது
போயிடத்துணிந்தோமென்றார்புராரிமற்றியானேவாத
சேயெனப்புகன்றான்மற்றைத்திசையுளோர்க்கவதியுண்டோ (உ௮)

அருடருகமலக்கண்ணனருண்முறையலருளோனும்
இருடருமிடற்றினானுமமரருமினையராகி
மருடருவனத்தின்மண்ணின்வானரராகிவந்தார்
பொருடருமிருவர்தத்தமுறைவிடஞ்சென்றுபுக்கார், (உ௯)

ஈதுமுன்னிகழ்ந்தவண்ணமெனமுனியிதயத்தெண்ணி
மாதிரம்பொருததிண்டோண்மன்னநீவருந்தலேழ்
பூதலமுழுதுங்காக்கும்புதல்வரையளிக்கும்வேள்வி
தீதறமுயலினையசிந்தைநோய்தீருமென்றான். (௩0)

26. எண்கு - கரடி. 30. மாதிரம் - மலை, திக்குமென்பாருமுளர்,

என்னமாமுனிவன்கூறவெழுந்தபேருவகைபொங்க
மன்னவர்மன்னனந்தமாமுனிசரணஞ்சூடி
உன்னையேபுகல்புக்கேனுக்குறுகண்வந்தடைவதுண்டோ
அன்னதற்கடியேன்செய்யும்பணியினிதளித்தியென்றான். (௩௧)

மாசறுசுரர்களோடுமற்றுளோர்தமையுமீன்ற
காசிபனருளுமைந்தன்விபாண்டகன்கங்கைசூடும்
ஈசனும்புகழ்தற்கொத்தோனிருங்கலைபிறவுமெண்ணில்
தேசுடைத்தந்தையொப்பான்றிருவருள்புனைந்தமைந்தன். (௩௨)

வருகலைபிறவுநீதிமனுநெறிவரம்பில்வாய்மை
தருகலைமறையுமெண்ணிற்சதுமுகற்குவமைசான்றோன்
திருகலையுடையவிந்தச்செகத்துளோர்தன்மைதேரா
ஒருகலைமுகச்சிருங்கமுயர்தவன்வருதல்வேண்டும். (௩௩)

பாந்தளின்மகுடகோடிபரித்தபாரதனில்வைகும்
மாந்தர்கள்விலங்கென்றுன்னுமனத்தன்மாதவத்தனெண்ணில்
பூந்தவிசுகந்துளோனும்புராரியும்புகழ்தற்கொத்த
சாந்தனால்வேள்விமுற்றிற்றனையர்களுளராமென்றான். (௩௪)

ஆங்குரையினையகூறுமருந்தவர்க்கரசன்செய்ய
பூங்கழற்றொழுதுவாழ்த்திப்பூதலமன்னர்மன்னன்
தீங்கறுகுணத்தான்மிக்கசெழுந்தவன்யாண்டையுள்ளான்
ஈங்கியான்புரியுந்தன்மையருளுதியிறைவவென்றான். (௩௫)

வேறு.

புத்தானகொடுவினையோ டருந்துயரம்போயொளிப்பப் புவனந்தாங்கும், சத்தானகுணமுடையோன் றயையினொடுந்தண்ணளியின் சாலைபோல்வான், எத்தானும்வெலற்கரியான் மனுகுலத்தேவந்துதித்தோ னிலங்குமௌலி, உத்தானபாதனரு ளுரோமபதனென்றுளனிவ் வுலகையாள்வான். (௩௬)

அன்னவன்றன்புரந்தளிக்குந் திருநாட்டினெடுங்கால மளவதாக, மின்னியெழுமுகிலின்றி வெந்துயரம்பெருகுதலும் வேதநன்னூல், மன்னுமுனிவரையழைத்துமா தானங்கொடுக்கினும்வான் வழங்காதாகப், பின்னுமுனிவரர்க்கேட்பக்கலைக் கோட்டுமுனிவரின்வான் பிலிற்றுமென்றார். (௩௭)

---

33. சிருங்கம் - கொம்பு. 36. புத் - ஓர் நாகவிசேடம். 37. பிலிற்றல்-துளித்தல்.

ஓதநெடுங்கடலாடை யுலகினில்வாழ்மனிதர் விலங்கெனவே யுன்னும், கோதில்குணத்தருந்தவனைக் கொணரும்வகையாவதெனக் குணிக்கும்வேலை, சோதிநுதற்கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த் தரளநகைத் துணைமென்கொங்கை, மாதவெழுந்தியாமேகியருந் தவனைக்கொணர்துமென வணக்கஞ்செய்தார். (௩அ)

ஆங்கவரம்மொழியுரைப்ப வரசன்மகிழ்ந்தவர்க்கணிநூ சாதியாய, பாங்குளமற்றவையருளிப்ப னிப்பிறையைப்பழித்தநுதற் பணைத்ததேவத்தோள், வங்குமிடைதடித்த முலைபிருண்டகுழன் மருண்ட விழியிலவச்செவ்வாய்ப், பூங்கொடியீரேகுமெனத் தொழுதிறைஞ்சியிரதமிசைப் போயினரே. (௩௯)

வேறு.

ஓசனைபலகடந்தினிபொரோசனை
வசறுதவனுறையிடமிதென்றுழி
பாசிழைமடந்தையர்பன்னசாலைசெய்
தாசறுமருந்தவத்தவரின்வைகினர். (௪0)

அருந்தவன்றந்தையயற்றநோக்கியே
கருந்தடங்கண்ணியர்கலைவலாளனிற்
பொருந்தினர்பொருந்துபுவிலங்கெனுப்புரிந்
திருந்தவரிவரெனவினையசெய்தனன். (௪௧)

அருக்கியமுதலினேடாசனங்கொடுத்
திருக்கெனவிருந்தபின்னினியகூறலும்
முருக்கிதழ்மடந்தையர்முனிவனைத்தொழாப்
பொருக்கெனவெழுந்துபோய்ப்புரையுட்புக்கனர். (௪௨)

திருந்திழையவர்சிலதினங்கழிந்துழி
மருந்தினுமினியனவருக்கைவாழைமாத்
தருந்தருங்கனியொடுதாழையின்பலம்
அருந்தவவருந்தெனவருளினாரரோ. (௪௩)

இன்னனபல்பகலிறந்தபின்றிரு
நன்றுதன்மடந்தையர்நவையின்மாதவன்

---

42. அருக்கியமுதலினேடென்றமையால் அருக்கியம், பாத்யம் ஆசமனம் என்னும் மூன்றுங்கொள்ளப்படும். அருக்கியம் தலையில் தெளித்துக்கொள்ளுதற்குரிய நீர். பாத்யம் - கால்கழுவுதற்குரிய நீர், ஆசமனம் - உட்கொள்ளுதற்குரிய நீர், இவற்றை கைந்நீர், அடிநீர் முக்குடிநீரெனலும் பொருந்தும்.

43. தருத்தருங்கனி - மெலிந்துநின்றது.

தன்னையெம்பிடத்தினுஞ்சார்தல்வேண்டுமென்
றன்னவர்தொழுதனுமவரொடேகினான். (௪௪)

விம்முறுமுவகையர்வியந்தநெஞ்சினர்
அம்மவித்திருவெனவகனுநீணெறி
செம்மையின்முனிவரன்றொடரச்சென்றனர்
தம்மனமெனமருட்டடையலார்களே. (௪௫)

வளநகர்முனிவரன்வருமுன்வானவன்
களனமர்கடுவெனக்கருகிவான்மிசைச்
சளசளவெனமழைத்தாரைகான்றன
குளனொடுநதிகடங்குறைகடீரவே. (௪௬)

பெரும்புனனதிகளுங்குளனும்பெட்பறக்
கரும்பொடுசெந்நெலுங்கவின்கொண்டோங்கிட
இரும்புயல்ககனமீதிடைவிடாதெழுந்
தரும்புனல்சொரிந்தபோதரசுணர்ந்தனன். (௪௭)

காமமும்வெகுளியுங்களிப்புங்கைத்தெழு
கோமுனியிவணடைந்தனன்கொல்கொவ்வைவாய்த்
தாமரைமலர்முகத்தரளவாணகைத்
தூமமென்குழலியர்புணர்த்தசூழ்ச்சியால். (௪௮)

என்றெழுந்தருமறைமுனிவர்யாரொடும்
சென்றிரண்டியோசனைசேனைசூழ்தர
மன்றலங்குழலியர்நடுவண்மாதவக்
குன்றினையெதிர்ந்தனன்குவவுத்தோளினான். (௪௯)

வீழ்ந்தனனடிமிசைவிழிகணீர்தர
வாழ்ந்தனனினியெனமகிழுஞ்சிந்தையான்
தாழ்ந்தெழுமாதரார்தம்மைநோக்கிநீர்
போழ்ந்தனிரெனதிடர்புணர்ப்பினாலென்றான். (௫௦)

அரசருமுனிவருமடைந்தவாயிடை
வரமுனிவஞ்சமென்றுணர்ந்தமாலைவாய்

---

46. வளநகரென்றார். இதுகாறுமிந்நகர் வளமில்லாதாக முனிவன் போந்தமையான் வளனெய்தலின். வானவன் - ஈண்டு முக்கட்கடவுளை யுணர்த்திற்று.

47. அரும்புனலென்றார், இதுகாறும் வான்பிலிற்றாது பெய்தலின்.

48. களிப்பு - மயக்கம்.

50. போழ்தல் - பிளத்தல்.

வெருவினர்விண்ணவர்வேந்தன்வேண்டலால்
கரையெறியாதலைகடலும்போன்றனன். (௫௧)

வள்ளுறுவயிரவாண்மன்னன்பன்முறை
எள்ளருமுனிவனையிறைஞ்சியாரினும்
தள்ளருந்துயரமுஞ்சமைவுஞ்சாற்றலும்
உள்ளுறுவெகுளிபோயொளித்ததாமரோ. (௫௨)

அருள்சுரந்தரசனுக்காசியுங்கொடுத்
துருடருதேரின்மீதொல்லையேறினன்
பொருடருமுனிவருந்தொடரப்போயினன்
மருளொழியுணர்வுடைவரதமாதவன். (௫௩)

அடைந்தனன்வளநகரலங்கரித்தெதிர்
மிடைந்திடமுனியொடுவேந்தன்கோயில்புக்
கொடுங்கலில்பொற்குழாத்துறையுளெய்தியோர்
மடங்கலாதனத்திடைமுனியைவைத்தனன். (௫௪)

அருக்கியமுதலியகடன்களாற்றிவே
றுரைக்குவதிலதெனவுவந்துதானருள்
முருக்கிதழிளமுலைமுகநலாட்கொள
இருக்கொடுவிதிமுறையினிதினீந்தனன். (௫௫)

வறுமைநோய்தணிதரவான்வழங்கவே
உறுதுயர்தணிந்ததவ்வுலகம்வேந்தருள்
செறிகுழல்போற்றிடத்திருந்துமாதவத்
தறிஞனுண்டிருக்குநனரசவென்றனன். (௫௬)

வேறு.

என்றலுமேமுனிவரன்றன்னடியிறைஞ்சியீண்டேகிக்கொணர்
வேனென்னு, துன்றுகழன்முடிவேந்தரடிபோற்றச்சுமந்திரனேமு
தல்வராய, வன்றிறல்சேரமைச்சரொடுமாமணித்தேரேறுதலும்வா
னோர்வாழ்த்தி, இன்றெமதுவினைமுடிந்ததெனச்சொரிந்தார்மலர்
மாரியிடைவிடாமல். (௫௭)

---

51. கரையெறியாத - ஈறுதொகுத்தல் பெற்றது.

53. பொருடருமுனிவர் - மெய்ம்மைப்பொருளை யுபதேசிக்கு முற்றத்துறந்தமுனிவர். முகநலாள் - அழகான முகத்தையுடைய பெண், பெண்ணின் பெயரெனக்கூறு வாருமுளர்.

55. இருக்கொடுவிதிமுறை - என்புழி ஒடுஉருபு ஆனுருபின்பொருளது.

56. இருக்குநானென்றதில் நகரம் நிகழ்காலம் காட்டிற்று.

காகளமும்பல்லியமுங்களைகடலின்மேன்முழங்கக்கானம்பாட, மாகதர்களருமறைநூல் வேதியர்கள்வாழ்த்தெடுப்ப மதுரச்செவ் வாய்த், தோகையர்பல்லாண்டிசைப்பக் கடற்றானைபுடைசூழச் சுட ரோனென்ன, ஏகியருநெறிநீங்கியுரோமபதன்றிருநாட்டையெதிர்ந் தானன்றே. (௫அ)

கொழுந்தோடிப்படர்கீர்த்திக் கோவேந்தனடைந்தமை சென் றொற்றர்கூற, கழுந்தோடும்வரிசிலைக்கைக்கடற்றானைபுடைசூழக்கழ ற்கால்வேந்தன், செழுந்தோடும்பலகலைநூல்வல்வீசமாகதர்கள்திர ண்டுபாட, எழுந்தோடுமுவகையுடன்யோசனைசென்றானரசையெ திர்கோணெண்ணி. (௫௯)

எதிர்கொள்வான்வருகின்றவயவேந்தன்றனைக்கண்ணுற்றெழி லிநாளை, அதிர்கின்றபொலந்தேர்நின்றரசர்பிரானிழிந்துழிச்சென் றடியின்வீழ, முதிர்கின்றபெருங்காதன்மைத்தோங்கவெடுத்திறுக முயங்கலோடும், கதிர்கொண்டசுடர்வேலான்றனைநோக்கியினைவயு ரைத்தான்களிப்பின்மிக்கான். (௬0)

யான்செய்தமாதவமோ விவ்வுலகஞ்செய்தவமோ யாதோவிங் கண், வான்செய்தசுடர்வேலோயடைந்தனெனமகிழ்மனத்தே ரேற்றித், தேன்செய்தார்மௌலிக் நேர்வேந்தைச்செழுநகரிற் கொணர்ந்தான்றெவ்வர், ஊன்செய்தசுடர்வடிவேலுரோமபதனெ ன்றுரைக்குமுரவுத்தோளான். (௬௧)

ஆடகப்பொற்சுடரிமைக்குமணிமாடத்திடையொருமண்டபத் தையண்மி, பாடகச்செம்பதுமமலர்ப்பாவையர்பல்லாண்டிசைப்பப் பைம்பொற்பீடத், தேடுநூற்றவடிவேலான்றனையிருத்திக்கடன்மு றைகள்யாவுமீந்து, தோடுதுற்றமலர்த்தாரான்விருந்தளிப்பவினிது கந்தான்சுரர்நாடீந்தான். (௬௨)

சவ்விநறுஞ்சாந்தளித்துத் தேர்வேந்தன்றனைநோக்கி யிவணீ சார்ந்த, கவ்வையுரைத்தருள்கவெனநிகழ்ந்தபரிசரசர்பிரான்கழற

59. மாகதர் - நின்றுபுகழ்வோர்.

61. இந்திரனுக்குச் சம்பரனைவென்றிகொண்டு இந்திரபதமளித்த பெரு மிதந்தோன்றி வானைசெய்த சுடர்வேலோய் எனஞர். வான்செய்த சுடர்வேல்- ஆகாயத்தில் விளங்குகின்ற சூரியனையொத்த வேல் அல்லது மேலானகாந்தி யையுடைய வேல் என்றும் பொருளுரைத்தலுமாம்.

62. ஏடுநூற்றவடிவேல் - நூலைவடிவாகச் செய்யப்பட்டவேல். சுரர்நா டீந்தானென்பதற்கு 'வான்செய்த சுடர்வேலோய்' என்றதற்குரைத்தாங்கு ரைக்க.

லோடும், அவ்வியநீத்துயர்ந்தமனத்தருந்தவனைக்கொணர்ந்தாங்கண்
விடுப்பனுன்ற, செவ்விமுடியோயெனலுந்தேரேறிச்சேனையொட
யோத்திசேர்ந்தான். (சுங)

மன்னர்பிராகனன்றதற்பின் வயவேந்தனருமறைநூல் வடிவங்
கொண்ட, தன்னமுனிவரனுறையுடனையணுகியிணையடித்தாமரை
களம்பொன், மன்னுமணிமுடியணிந்துவரன்முறைசெய்திடவிவணீ
வருதற்கொத்த, தென்னையெனவடியேற்கோர்வரமருளுமடிகளென
யாவதென்றான். (சுச)

புறவொன்றின்பொருட்டாகத் துலைபுக்கபெருந்தகைதன் புக
ழிற்பூத்த, அறனென்றுதிருமனத்தானமரர்களுக்கிடரிழைக்குமவு
ணவராயோர், திறலுண்டவடிவேலான்றசரதனென்றுயர்கீர்த்திச்
செங்கோல்வேந்தன், விறல்கொண்டமணிமாடவயோத்திநகரடை
ந்திவணீடலென்றான். (சுரு)

அவ்வரந்தந்தனமினித்தேர் கொணர்கவெனவருந்தவத்தோ
னறைதலோடும், வெவ்வரந்தின்றயில்படைக்குஞ்சுடர்வேலோனடி
யிறைஞ்சிவேந்தர்வேந்தன், கவ்வையொழிந்துயர்ந்தனனென்றதிர்
குரற்றேர்கொணர்ந்ததனிற்கலைவலாளன், செவ்விநுதற்றிருவினொ
டும்போந்தேதறுகெனவேறிச்சிறந்தான்மன்னோ. (சுசு)

வேறு.

குனிசிலையவனுங்கரங்கள்கூப்பிடத்
துனியறுமுனிவரர்தொடர்ந்துசூழ்வர
வனிதையுமருமறைவடிவுபோன்றொளிர்
முனிவனும்பொறிமிசைநெறியைமுன்னினர். (சுஎ)

அந்ததுரந்துமிமுழக்கியாய்மலர்
சிந்தினர்களித்தனரமுந்தேவரும்
வெந்தெழுகொடுவினைவீழ்க்குமெய்ம்முதல்
வந்தெழவருடருவானென்றெண்ணியே. (சுஅ)

---

63. அவ்விய நீத்துயர்ந்தமனத் தருந்தவன் - கலைக்கோட்டுமுனிவன்.

65. புறவொன்றின் பொருட்டாகத்துலைபுக்க பெருந்தகையென்றது சிபி
யாசனை இதனை, 'அன்பிலரெல்லா' மென்புழிப் பரிமேலழகர் கூறலானு
முணர்க.

67. அருமறைவடிவுபோன் றொளிர்முனிவரன் - கலைக்கோட்டு முனி
வன்.

தூதுவரவ்வழியயோத்திதுன்னினார்
மாதிரம்பொருதகோதாண்மன்னர்மன்னன்முன்
ஓதினார்முனிவரவோதவேந்தனும்
காதலென்றளவறுகடலுளாழ்ந்தனன். (௬௯)

எழுந்தனன்பொருக்கெனவிரதமேறினன்
பொழிந்தனமலர்மழையாசிபூத்தன
மொழிந்தனபல்லியமுரசமார்த்தன
விழுந்தனதீவினைவேரினோடுமே. (௭௦)

பிதிர்ந்தகேதம்மனத்துயர்ப்பிறங்கலென்றுகொண்
டதிர்ந்தெழுமுரசுடையரசர்கோமகன்
முதிர்ந்தமாதவமுடைமுனியைக்கண்களால்
எதிர்ந்தனன்யோசனையிரண்டொடொன்றினே. (௭௧)

நற்றவமனைத்துமோர்நவையிலாவுருப்
பெற்றிவணடைந்தெனப்பிறங்குவான்றனைச்
சுற்றியசீரையுமுழையின்றோற்றமும்
முற்றுறப்பொலிதருமூர்த்தியான்றனை. (௭௨)

அண்டர்கடியமுமரக்கராற்றலும்
விண்டிடப்பொலிதரும்வினைவலாளனைக்
குண்டிகைகுடையொடுகுலவுநான்முறைத்
தண்டொடுபொலிதருதடக்கையான்றனை. (௭௩)

இழிந்துபோயிரதமாண்டிணைகொடாண்மலர்
விழுந்தனன்வேந்தர்தம்வேந்தன்மெய்ம்மையான்
மொழிந்தனனாசிகண்முதியநான்மறைக்
கொழுந்துமேற்படர்தரக்கொள்கொம்பாயினான். (௭௪)

அயல்வருமுனிவருமாசிகூறிடப்
புயல்பொழிதடக்கையாற்றொழுதுபொங்குநீர்க்
கயல்பொருவிழியொடுகலைவலாளனை
இயல்பொடுகொணர்ந்தனனிரதமேற்றியே (௭௫)

அடிகுரன்முரசதிரயோத்திமாநகர்
முடியுடைவேந்தனம்முனிவனோடுமோர்

71. முதிர்ந்த மாதவமுடை முனியை, பிறங்குவான்றனை, மூர்த்தியான்றனை, வினைவலாளனை, தடக்கையான்றனைக் கண்களால் யோசனையிரண்டோடொன்றின் எதிர்ந்தனனெனக் கூட்டி முடிக்க.

கடிகையினடைந்தனன்கமலவாண்முக
வடிவுடைமடந்தையர்வாழ்த்தெடுப்பவே. (௭௬)

கசட்டுறுவினைத்தொழிற்கள்வராயுழல்
அசட்டர்களைவரையறுவராக்கிய
வசிட்டனுமருமறைவடிவுபோன்றொளிர்
விசிட்டனும்வேந்தவைபொலியமேவினார். (௭௭)

மாமணிமண்டபமன்னிமாசறு
தூமணித்தவிசிடைச்சுருதியேநிகர்
கோமுனிக்கரசனையிருத்திக்கொள்கடன்
ஏமுறத்திருத்திவேறினையசெப்பினான். (௭௮)

சான்றவர்சான்றவதருமமாதவம்
போன்றொளிர்புனிதநின்னருளிற்பூத்தவென்
ஆன்றதொல்குலமினியரசின்வைகுமால்
யான்றவமுடைமையுமிழப்பின்றாமரோ. (௭௯)

என்னலுமுனிவரனினிதுநோக்குறா
மன்னவர்மன்னகேள்வசிட்டனென்னுமோர்
நன்னெடுந்தவன்றுணைநவையில்செய்கைநீ
நின்னையிவ்வுலகினினிருபர்நேர்வரோ. (௮0)

என்றனபற்பலவினிமைகூறிநற்
குன்றுறழ்வரிசிலைக்குவவுத்தோளினாய்
நன்றிகொளரிமகநடத்தவெண்ணியோ
இன்றெனையழைத்ததிங்கியம்புவாயென்றான். (௮௧)

உலப்பில்பல்லாண்டெலாமுறுகணின்றியே
தலப்பொறையாற்றினன்றனையர்வந்திலர்
அலப்புநீருடுத்தபாரளிக்குமைந்தரை
நலப்புகழ்பெறவினிநல்கல்வேண்டுமால். (௮௨)

---

77. வினைத்தொழில் ஒரு பொருட்பன் மொழி, ஈண்டுத் தீவினையை யுணர்த்திற்று.

79. இட்சுவாகுதொட்டுவந்த அரசர் பரம்பரையாதலின் ஆன்ற தொல் குலமென்றார்.

80. மன்னவர் மன்ன - சக்கரவர்த்தியே.

81. அரிமகம் - பரிமேதம்.

82. அலப்புநீர் - கடல்.

என்றலுமரசநீ யிரங்கலிவ்வுல
கொன்றுமோவுலகமீரேழுமோம்பிடும்
வன்றிறன்மைந்தரையளிக்குமாமகம்
இன்றுநீயியற்றுதற்கெழுகவீண்டென்றான். (௮௩)

ஆயதற்குரியனகலப்பையாவையும்
ஏயெனக்கொணர்ந்தனர் நிருபர்க்கேந்தலும்
தூயநற்புனல்படீஇச்சுருதிநான்முறை
சாய்வறத்திருத்தியசாலைபுக்கனன். (௮௪)

முழங்கழன்மும்மையுமுடுகியாகுதி
வழங்கியேயீராறுதிங்கள்வாய்த்தபின்
தழங்கினதுந்துபிதாவில்வானகம்
விழுங்கினர்விண்ணவர்வெளியின்றென்னவே. (௮௫)

முகமலரொளிர்தரமொய்த்துவானுளோர்
அகவிரைநறுமலர்தூவியார்த்தெழத்
தகவுடைமுனிவரத்தழலினுப்பவம்
மகவருளாகுதிவழங்கினானரோ. (௮௬)

ஆயிடைக்கனலினின்றம்பொற்றட்டரித்
தூயநற்சுதைநிகர்பிண்டமொன்றுசூழ்
தீயெரிப்பங்கியுஞ்சிவந்தகண்ணுமா
ஏயெனப்பூதமொன்றெழுந்ததேந்தியே. (௮௭)

வைத்ததுதரைமிசைமறித்துமவ்வழி
ஐதத்ததுபூதமத்தவனும்வேந்தனை
உய்த்தநல்லமிர்தினையுரியமாதர்கட்
கத்தகுமரபினாலளித்தியாலென்றான். (௮௮)

மாமுனியருள்வழிமன்னர்மன்னவன்
தூமமென்சுரிகுழற்றொண்டைத்தூயவாய்க்
காமரொண்கௌசலைகரத்தினோர்பகிர்
தாமுறவளித்தனன்சங்கமார்த்தெழ. (௮௯)

---

83. மைந்தரையளிக்குமாமகம - புத்திரகாமேஷ்டியாகம்.

85. அழன் - மும்மையுமென்றது ஆகவானீயம், தக்ஷணாக்கினி காருக பத்தியம் என்பவற்றை. இதனை, முத்தீச்செல்வத் திருபிறப்பாளர். என்புழி நச்சினார்க்கினியர் கூறலானு மறிக. உரியமாதர் - ஈண்டுபட்டமகிஷிகள் மூவர்.

88. உரியமாதர் என்றது - ஈண்டுபட்ட மகிஷிகள்மூவர்.

கைகயன் றனையை தன்கரத் துமம்முறைச்
செய்கையினளித் தனன்றே வரார்த்தெழப்
பொய்கையுநதிகளும்பொழிலுமோதிமம்
வைகுறுகோசலைமன்னர்மன்னனே. (கூ0)

நமித்திரர்நடுக்குறுநலங்கொண்மொய்ம்புடை
நிமித்திருமரபுளான்முன்னர்நீர்மையில்
சுமித்திரைக்களித்தனன் சுரர்க்குவேந்தினிச்
சமித்ததெதன்பகையெனத் தமரொடார்ப்பவே. (கூக)

பின்னுமப்பெருந்தகைபிதிர்ந்துவீழ்ந்தது
தன்னையுஞ்சுமித்திரைதனக்குநல்கினான்
ஒன்னலர்க்கிடமும்வேறுலகினோங்கிய
மன்னுயிர்தமக்குநீள்வலமுந்துள்ளவே. (கூ௨)

வாம்பரிவேள்வியுமகவைநல்குவ
தாம்புரையாவுதிபிறவுமந்தணன்
ஓம்பிடமுடிந்தபினுலகுகாவலன்
ஏம்பலொடெழுந்தனன்யாருமேத்தவே. (கூரு)

முருடருபல்லியமுழங்கியார்த்தன
இருடருமுலகமுமிடரினீங்கின
தெருடருவேள்வியின்கடன்கடர்ந்துழி
அருடருமவையின்வந்தரசனெய்தினான். (கூச)

செய்ம்முறைகடன்முறைதிறம்பலின்றியே
மெய்ம்முறைகடவுளர்க்கீந்துவிண்ணுளோர்க்
கம்முறையளித்துநீடந்தணாளர்க்கும்
கைம்முறைவழங்கினன்கனகமாரியே. (கூரு)

வேந்தர்கட்கரசொடுவெறுக்கைதேர்பரி
வாய்ந்தநற்றுகிலொடுவரிசைக்கேற்பன
ஈய்ந்தனன்பல்லியந்துவைப்பவேகிநீர்
தோய்ந்தனன்சரயுநற்றுறைக்கணெய்தியே. (கூசா)

முரைசினங்கறங்கிடமுத்தவெண்குடை
விரசிடுநிழறரவேந்தர்சூழ்தர

---

91. நமித்திரர் - பகைவர். சமித்தது - அடங்கிற்று.

92. பின்னும் - வினைமாற்றுப்பொருளில்வருவதோரிடைச்சொல்.

அரைசவையடைந்துழியயனுநாணுற
உரைசெறிமுனிவன்றாள்வணங்கியோங்கினான். (௯௭)

அரியநற்றவமுடைவசிட்டனாணையால்
இரலைநற்சிருங்கமாவிறைவன்றாடொழா
உரியபற்பலவுரைபயிற்றியுய்ந்தனன்
பெரியநற்றவவினிப்பெறுவதியாதென்றான். (௯௮)

எந்தைநின்னருளினாலிடரினீங்கியே
உய்ந்தனனடியனேனென்னவொண்டவன்
சிந்தையுண்மகிழ்ச்சியால்வாழ்த்தித்தேர்மிசை
வந்தமாதவரொடும்வழிக்கொண்டேகினான். (௯௯)

வாங்கியதுயருடைமன்னன்பின்னரும்
பாங்குடைமுனிவர்தாள்பழிச்சியேத்தல்கொண்
டோங்கியவுவகையராசியோடெழா
நீங்கினனிருந்தனனின்றவேந்தனே. (௧௦௦)

தெரிவையர்மூவருஞ்சிறிதுநாட்செலீஇ
மருவியவயாவொடுவருத்தந்துய்த்தலால்
பொருவருதிருமுகமன்றிப்பொற்புநீ
டுருவமுமதியமோடொப்பத்தோன்றினார். (௧௦௧)

ஆயிடைப்பருவம்வந்தடைந்தவெல்லையின்
மாயிரும்புவிமகண்மகிழ்வினோங்கிட
வேய்புனர்பூசமும்விண்ணுளோர்களும்
தூயகற்கடகமுமெழுந்துதுள்ளவே. (௧௦௨)

சித்தருமியக்கருந்தெரிவைமார்களும்
வித்தகமுனிவரும்விண்ணுளோர்களும்
நித்தருமுறைமுறைநெருங்கியார்ப்புறத்
தத்துறலொழிந்துநீடருமமோங்கவே. (௧௦௩)

ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந்
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ்சோதியைத்
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை. (௧௦௪)

---

98. இரலை நற்சிருங்கமாவிறைவன் - கலைக்கோட்டுமுனி.

100. வாங்கியதுயர் - துன்பநீங்கின.

ஆசையும்விசும்புநின்றமரரார்த்தெழ
வாசவன்முதலினர்வணங்கிவாழ்த்துறப்
பூசமுமீனமும்பொலியநல்கினுள்
மாசறுகேகயன்மாதுமைந்தனை. (க0ரு)

தளையவிழ்தருவுடைச்சயிலகோபனும்
கிளையுமந்தரமிசைகெழுமியார்ப்புற
அளைபுகுமரவினேடலவன்வாழ்வுற
இளையவற்பயந்தனளிளையமென்கொடி. (க0சு)

படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார்
நடங்கிளர்தரமறைநவிலநாடகம்
மடங்கலுமகமுமேவாழ்வினேங்கிட
விடங்கிளர்விழியிணுண்மீட்டுமீன்றனள். (கஎ)

ஆடினரரம்பையரமுதவேழிசை
பாடினர்கின்னரர்துவைத்தபல்லியம்
வீடினராக்கரென்றுவக்கும்விம்மலால்
ஓடினருலவினரும்பர்முற்றுமே. (கஅ)

ஓடினரரசன்மாட்டுவகைகூரநின்
றுடிலார்சிலதியரந்தணாளர்கள்
கூடினர்நாளொடுகோளுநின்றமை
நாடினருலகினிநவையின்றென்றனர். (கசு)

மேடமாமதிதிநவமிமீன்கழை
நீடுறுமாலைகற்கடகநீதிசேர்
ஓடைமாகளிறனுனுதயராசிகோள்
நாடினேகாதசர்நால்வருச்சரே. (கக0)

நீதிஒழுக்கமானது, சேர் - சேர்ந்த, ஓடை - நுதலணியை யுடைய, மா-பெருமைபொருந்திய, களிறு-யானையை, அனுன்-ஒத்தவனுகிய (இராமமூர்த்தியினது அவதாரகாலையில்) மா-பெருமை பொருந்திய, மதி-மாஸமானது, மேடம்-மேஷமாயும், திதி-திதியானது, நவமி-நவமியாயும், மீன்-நட்சத்திரமானது, கழை-புநர் பூசமாயும், கற்கடகம்-கடகமானது, உதயராசி-உதயமும், இராசி லக்கினமாகிய சந்திரலக்கினமுமாயும், மால்-புதன், ஐ-ராஜஸ்தான

106. சயிலகோபன் - பூருவத்தில் மலைகளைக்கோவித்துச்சிறகுகளைவெட்டினன் ஆதலால் இந்திரனுக்குச்சயிலகோபனென்றுபெயர் வழங்கிவருகின்றது.

மாகிய பத்தாமிடத்தலும், கோள்-கேதுவிற்கு, நாடு-மிதுனமானது, இல்-வீடாயும், ஏகாதசர்-பதினொன்றுக்குடையவர், நால்வர்-நான்குபேர், உச்சர்-உச்சஸ்தானத்திலும், நீடுறும்-பலமாய்நிற்கும், ஏகாரம்-தேற்றம்.

## இராம ஜாதகம்.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | இராசி | | சந்திரன் லக்கினம் குரு |
| செவ்வாய் | | | |
| இராகு | | சனி | |

என்றனர்சாதகமீசற்கேனையர்
தன்றனக்குந்தகுமுறையிற்றான்றெரிந்
தொன்றியதமனியத்தெழுதியோதினார்
வன்றிறற்சுரர்குருவாழ்த்தெடுப்பவே. (ககக)

மாமுனிதன்னொடுமன்னர்மன்னவன்
ஏமுறப்புனல்படிஇவித்தொடின்பொருள்
தாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக்
கோமகார்திருமுகங்குறுகிநோக்கினான். (ககஉ)

இறைதவிர்ந்திடுகபார்யாண்டோரேழ்நிதி
நிறைதருசாலைதாணீக்கியாவையும்
முறைகெடவறியவர்முகந்துகொள்கென
அறைபறையென்றனனரசர்கோமகன். (ககங)

படையொழிந்திடுகதம்பதிகளெயினி
விடைபெருகுகமுடிவேந்தர்வேதியர்
நடையுறுநியமமுநவையின்றாகுக
கடவுளர்விழவொடுகளிப்பவெங்கணும். (ககச)

111. ஈசன் - ஈண்டு ஸ்ரீராமன்.

ஆலையம்புதுக்குகவந்தணாளர்தம்
சாலையுஞ்சதுக்கமுஞ்சமைக்கசந்தியும்
காலையுமாலையுங்கடவுளர்க்கணி
மாலையும்தீபமும்வழங்குகென்றனன். (ககரு)

என்புழிவள்ளுவர்யானைமீமிசை
நன்பறையறைந்தனர்நகரமாந்தரும்
மின்பிறழ்நுசுப்பினர்தாமும்விம்மலால்
இன்பமென்றளக்கருமளக்கரெய்தினார். (ககசு)

ஆர்த்தனர்முறைமுறைபன்பினுலுடல்
போர்த்தனபுளகம்வேர்பொடித்தநீணிதி
தூர்த்தனரெதிரெதிர்சொல்லினார்க்கெலாம்
தீர்த்தனென்றறிந்ததோவவர்தஞ்சிந்தையே. (ககஎ)

பண்ணையுமாயமுந்திரளும்பாங்கரும்
கண்ணகன்றிருநகர்களிப்புக்கைமிகுந்
தெண்ணெயுங்களபமுமிழுதுநானமும்
சுண்ணமுந்தூவினர்வீதிதோறுமே. (ககஅ)

வேறு.

இத்தகைமாநகரீராறுநாளும்
சித்தமுறுங்களியோடுசிறந்தேந
தத்தமையொன்றுமுணர்ந்திலதாவா
மெய்த்தவனுமம்விதிப்பமதித்தான். (ககக)

காமலையத்தளர்கைக்கரியெய்த்தே
அராவணையிற்றுயில்வோயெனவந்நாள்
விராவியளித்தருண்மெய்ப்பொருளுக்கே
இராமனெனப்பெயரீந்தனனன்றே. (கஉ0)

கரதலமுற்றெளிர்நெல்லிகடுப்ப
விரதமறைப்பொருண்மெய்ந்நெறிகண்ட
வரதனுதித்திடமற்றையவொளியைப்
பரதனெனப்பெயர்பன்னினனன்றே. (கஉக)

உலக்குநர்வஞ்சகரும்பருமுய்ந்தார்
நிலக்கொடியுந்துயர்நீத்தனளித்த

119. ஈராறுநாள் - என்றதனைப்பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் எனப் பெரியாரும் பணித்தமையான் அறிக.

விலக்கருமொய்ம்பின்விளங்கொளிநாமம்
இலக்குவனென்னவிசைத்தனனன்றே. (கஉஉ)

முத்துருக்கொண்டுசெம்முளரியலர்ந்தால்
ஒத்திருக்கும்மெழிலுடையவிவ்வொளியால்
எத்திருக்குங்கெடுமென்பதையெண்ணுச்
சத்துருக்கன்னெனச்சாத்தினனும்ம். (கஉங)

பொய்வ்வழியின்முனிபுகறருமறையால்
இவ்வழிபெயர்களிசைத்துழியிறைவன்
கைவ்வழிநிதியெனுநகிகலைமறையோர்
மெய்வ்வழியுவரிநிறைத்தனமென்மேல். (கஉச)

காவியுமொளிர்தருகமலமுமெனவே
ஓவியவெழிலுடையொருவனையலதோர்
ஆவியுமுடலமுமிலதெனவருளின்
மேவினனுலகுடைவேந்தர்தம்வேந்தன். (கஉரு)

அமிர்துகுகுதலையொடணிநடைபயிலா
திமிரமதறவருதினகரனெனவும்
தமரமதுடன்வளர்சதுமறையெனவும்
குமரர்களிலமகள்குறைவறவளர்நாள். (கஉசு)

சவுளமொடுபநயம்விதிமுறைதருகுற்
றிவளதெனவொருகரைபிறிதிலவா
உவள்தருமறையினொடொழிவறுகலையும்
தவள்மதிபுனையரனிகர்முனிதரவே. (கஉஎ)

யானையுமிரதமுமிவுளியுமுதலா
ஏனையபிறவுமவ்வியல்பினினடையுற்
றானுறுபடைபலசிலையொடுபயிலா
வானவர்தனிமுதல்கிளையொடுவளர. (கஉஅ)

அருமறைமுனிவருமமரருமவனித்
திருவுமநகருறைறசெனமுநமிடரோ

---

125. கரியகோலத்திருமேனியனாகியசிராமனை, 'ஓவியவெழிலுடையொருவன்' என்றார்.

126. தமரமதுடன் என்றார் - ஏழிசையோடுகூடிய மறை யொலியை.

127. உபநயனம் என்றதும், தவளம் என்றதும், குறைந்துநின்றனன்.

128. அயர்வரும் அமரர்களதிபதி என்பதுதோன்ற, 'வானவர் தனி முதல்' என்றார்.

டிருவினைதுணிதருமிவரிணிணிவணின்
றொருபொழுதகல்கிலமுறையெனவுறுவார். (௧௨௯)

ஐயனுமிளவலுமணிநிலமகடன்
செய்தவமுடைமைகடெரிதரநதியும்
மைதவழ்பொழில்களும்வாவியுமருவி
நெய்குழலுறுமிழையெனநிலைதிரிவார். (௧௩௦)

பரதனுமிளவலுமொருநொடிபகிரா
திரதமுமிவுளியுமிவரினுமறைநூல்
உரைதருபொழுதினுமொழிகிலரெனையாள்
வரதனுமிளவலுமெனமருவினரே. (௧௩௧)

வீரருமிளைஞரும்வெறிபொழில்களின்வாய்
ஈரமொடுரைதருமுனிவரரிடைபோய்ச்
சேர்பொழுதணிநகர்துறுகுவரெதிர்வார்
கார்வரவலர்பயிர்பொருவுவர்களியால். (௧௩௨)

ஏழையரனைவருமிவர்தடமுலைதோய்
கேழ்கிளர்மதுகையர்கிளைகளுமினையார்
வாழியவெனவவர்மனனுறுகடவுட்
டாழ்குவர்கவுசலைதயரதனெனவே. (௧௩௩)

கடல்வருமுகிலொளிர்கமலமதலரா
வடவரையுடன்வருசெயலெனமறையும்
தடவுதலறிவருதனிமுதலவனும்
புடைவருமிளவலுமெனநிகர்புகல்வார். (௧௩௪)

எதிர்வருமவர்களையெமையுடையிறைவன்
முதிர்தருகருணையின்முகமலரொளிரா
எதுவினையிடரிலையினிதினுமனையும்
மதிதருகுமரரும்வலியர்கொலெனவே. (௧௩௫)

அஃதயநினையெமதரசெனவுடையேம்
இஃதொருபொருளலவெமதுயிருடனேழ்
மகிதலமுழுதையுமுறுகவிமலரோன்
உருபகலளவெனவுரைநனிபுரிவார். (௧௩௬)

---

132. சோர்பொழுது—மாலைகாலம்.

136. அகதியைய என்றது, அஃதைய எனநின்றது, இதனை 'அஃதைதந்தை' எனப்பிறருங்கூறுதல் காண்க.

வேறு.

இப்பரிசணிநகருறைபும்யாவரும்
மெய்ப்புகழ்புனைதரவிளையவீரர்கள்
தப்பறவடிநிழறழுவிபேத்துற
முப்பரம்பொருளுக்குமுதல்வன்வைகுறும். (கநஎ)

அரசர்தம்பெருமகனகிலம்யாவையும்
விரசுறுதனிக்குடைவிளங்கவென்றிசேர்
முரசொலிகறங்கிடமுனிவரேத்துறக்
கரைசெயலரியதோர்களிப்பின்வைகுநாள். (கநஅ)

ஆகதிருவிருத்தம் - ௩கஎ.

---

## ௬-வது, கையடைப்படலம்.

நனைவருகற்பகநாட்டுநன்னகர்
அனைவருமணைதரவயிர்க்குஞ்சிந்தையான்
நினையவுமரியதுவிசும்பினீண்டதோர்
புனைமணிமண்டபம்பொலியவெய்தினன். (க)

தூயமெல்லரியணைப்பொலிந்துதோன்றினன்
சேயிருவிசும்பிடைத்திரியுஞ்சாரணர்
நாயகனிவன்கொலென்றயிர்த்துநாட்டமோர்
ஆயிரமில்லையென்றையநீங்கினர். (உ)

மடங்கல்போன்மொய்ம்பினன்முன்னர்மன்னுயிர்
அடங்கலுமுலகும்வேறமைத்துத்தேவரோ
டிடங்கொளுன்முகனையும்படைப்பெனீண்டெனாத்
தொடங்கியதுனியறுமுனிவன்றோன்றினன். (௩)

வேறு.

வந்துமுனியெய்துதலுமார்பினணியாரம்
அந்தரதலத்திரவியஞ்சவொளிவிஞ்சக்

---

137. முப்பரம்பொருளுக்கு முதல்வன்-சங்கருடணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்னும்வயூகர்மூவருக்கு முதற்பொருளை, இதனை 'முப்பரம்பொருளிற்குண்முதலே' என்று இவ்வாசிரியர் பிற்கூறுதலும் இப்பெற்றிநோக்கி.

2. சாரணர் - தேவ ஒற்றர்.

3. துனியுறுமுனிவன் - கோசிகன்.

கந்தமலரிற்கடவுடன் வரவுகாணும்
இந்திரனெனக்கடிதெழுந்தடிபணிந்தான். (௪)

பணிந்துமணிசெற்றுபுருயிற்றியவிர்பைம்பொன்
அணிந்ததவிசிட்டதினருத்தியொடிருத்தி
இணைந்தகமலச்சரணருச்சனைசெய்தின்றே
துணிந்ததென்வினைத்தொடர்பெனத்தொழுதுசொன்னான். ()

நிலஞ்செய்தவமென்றுணரினன்றநெடியோயென்
நலஞ்செய்வினையுண்டெனினுமன்றநகர்நீயான்
வலஞ்செய்துவணங்கவெளிவந்தவிதுமுந்தென்
குலஞ்செய்தவமென்றினிதுகூறமுனிகூறும். (௬)

வேறு.

என்னனையமுனிவரருமிமையவருமிடையூறென்றுடையராகல்
பன்னகமுநகுவெள்ளிப்பனிவரையும்பாற்கடலும்பதுமபீடத்
தன்னகருங்கற்பகநாட்டணிநகருமணிமாடயோத்தியென்னும்
பொன்னகருமல்லாதுபுகலுண்டோவிகல்கடந்தபுலவுவேலோய்.(௭)

இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கை யிழந்துபோந்து, நின்றளிர்க்குந்தனிக்குடைக்கீழ திதுங்கிக்குறையிரந்துநிற்பநோக்கிக், குன்றளிக்குங்குலமணித்தோட்சம்பரனைக்குலத்தோடுந்தொலைந்துநீகொண், டன்றளித்தவரசன்றே புரந்தரநின்றாள்கின்றதரசவென்றான். (௮)

உரைசெய்புமளவிலவன்முகநோக்கியுள்ளத்திஞருவராலும், கரைசெய்யவரியதொரு பேருவகைக்கடல்பெருகக் கரங்கள்கூப்பி, அரசெய்தியிருந்தபயனெய்தினன்மற்றினிச்செய்வதருளுகென்று, முரசெய்துகடைத்தலையான் முன்மொழியப்பின்மொழியுமுனிவனுங்கே. (௯)

தருவனத்துள்யானியற்றுந்தவவேள்விக்கிடையூறுத்தவஞ்செய்வோர்கள், வெருவரச்சென்றடைகாமவெகுளியெனநிருதரிடைவிலக்காவண்ணம், செருமுகத்துக்காத்தியெனநின்சிறுவர்நால்வரினுங்கரியசெம்மல், ஒருவனைத்தந்திடுதியெனவுயிரிரக்குங்கொடுங்கூற்றினுளையச்சொன்னான். (௧௦)

---

8. இற்றைப்போதவனரசாள்வது நின்னாற்கொடுக்கப் பட்டதென்பார் இன்றரசாள்வதென்றார்.

10. காமவெகுளியெனக் கூறினமையான் மயக்கமென்பதையு முபலக்கணத்தாற் கூறிக்கொள்க.

எண்ணிலாவருந்தவத்தோ னியம்பியசொன்மருமத்தி னெறி வேல்பாய்ந்த, புண்ணிலாம்பெரும்புழையிற்கனலநுழைந்தாலெனச் செவியிற்புகுதலோடும், உண்ணிலாவியதுயரம்பிடித்துந்தவாருயிர் நின்றூசலாடக், கண்ணிலான்பெற்றிழந்தானெனவுழந்தான்கடுந்து யரங்காலவேலான். (கக)

தொடையூற்றுந்தேன்றுளிக்கு நறுந்தாராரொருவனைந்துய ரநீங்கிப், படையூற்றமிலன்சிறியனிவன்பெரியோய்பணியிதுவேற் பனிநீர்க்கங்கை, புடையூற்றுஞ்சடையானுநான்முகனும்புரந்தரனு ம்புகுந்துசெய்யும், இடையூற்றுக்கிடையூரு யான்காப்பென்பெரு வேள்விக்கெழுகவென்றான். (கஉ)

என்றனனென்றலுமுனிவோடெழுந்தனன் மண்படைத்தமு னியிறுதிக்காலம், அன்றெனவாமெனவிமையோரயிர்த்தனர்மேல் வெயில்கரந்ததங்குமிங்கும், நின்றனவுந்திரிந்தனமீநிவந்தகொழுங் கடைப்புருவ நெற்றிமுற்றச், சென்றனவந்தனநகையுஞ்சிவந்தன கண்ணிருண்டனபோய்த்திசைகளெல்லாம். (கங)

கறுத்தமாமுனிகருத்தையுன்னிநீ
பொறுத்தியென்றவற்புகன்றுநின்மகற்
குறுத்தலாகலாவுறுதியெய்துநாள்
மறுத்தியோவெனுவசிட்டன்கூறினன். (கச)

பெய்யுமாரியாற்பெருகுவெள்ளம்போய்
மொய்கொள்வேலைவாய்முடுகுமாறுபோல்
ஐயநின்மகற்களவில்விஞ்சைவந்
தெய்துகாலமின்றெதிர்ந்ததென்னவே. (கரு)

குருவின்வாசகங்கொண்டுகொற்றவன்
திருவின்கேள்வனைக்கொணர்மின்சென்றென
வருகவென்றனனென்றலோடும்வந்
தருகுசார்ந்தனனறிவினும்பரான். (கசு)

---

12. ஒருவனை - ஒப்பற்றவனை. படையூற்றமிலனென் றிவ்வாசிரியர் கூறியதை முதனூலாசிரியரும் இன்னும் பதினாறாண்டு நிரம்பிற்றில்லையென் றும், நிசாசரர் பூசலுக்கிவனுதவானென்றும், தாமரைக்கண்ணனையழைத்தல் பொருந்தாதுகாணென்றும் கூறுவர், இதனை வடநூலார்வாய்க்கேட்டுணர்க.

14. துனியுறுமுனிவன் என்றதும் பின் கறுத்தமாமுனி என்றதும் கோ சிகனைய நு முனிவர்யாவரு மிறைவன்வால் விஞ்சையாவுமடைந்து மீட்டு பவ னிடந் தருவதிபாதலாற் பெய்யுமாரியாற் பெருகுவெள்ளம்போய் - மொய் கொள் வேலைவாய் முடுகுமாறுபோ லென்றுவமையாற் கூறினர்.

வந்தநம்பியைத்தம்பிதன்னொடு
முந்தைநான்மறைமுனிக்குக்காட்டிநல்
தந்தைநீ தனித்தாயுநீயிவர்க்
கெந்தைதந்தனனியைந்தசெய்கென்றான். (கஎ)

கொடுத்தமைந்தரைக்கொண்டுசிந்தைமுந்
தெடுத்தசிற்றம்விட்டினிதுவாழ்த்திமேல்
அடுத்தவேள்விபோய்முடிக்குநாமெனா
நடத்தன்மேயினனைவக்கணீங்கினான். (கஅ)

வென்றிவார்புடைவிசித்துமெய்ம்மைபோல்
என்றுந்தேய்வுறாத்தூணியார்த்திரு
குன்றம்போன்றுயர்தோளிற்கொற்றவில்
ஒன்றுதாங்கினானுலகந்தாங்கினான். (கக)

அன்னதம்பியுந்தானுமையனும்
மன்னனின்னுயிர்வழிக்கொண்டாலெனாச்
சொன்னமாதவற்றொடர்ந்துசாயைபோல்
பொன்னின்மாநகர்ப்புரிசைநீங்கினான். (உ0)

வரங்கண்மாசறத்தவஞ்செய்தோர்கள்வாழ்
புரங்கணேரிலாநகரநீங்கிப்போய்
அரங்கினாடுவார்சிலம்பினன்னநின்
றிரங்குவார்புனற்சரயுவெய்தினார். (உக)

கரும்புகால்பொரக்கமுகின்வார்ந்ததேன்
வரம்புமீதிடுமருதவேலிவாய்
அரும்புகொங்கையாரம்மெலோதிபோல்
சுரும்புவாழ்வதோர்சோலைகண்ணினார். (உஉ)

தாழுமாமழைதழுவுநெற்றியால்
சூழியானைபோற்றோன்றுமால்வரைப்
பாழிமாமுகட்டுச்சிபச்சைமா
ஏழுமேறப்போயாறுமேறினார். (உங)

தேவுமாதவற்றொழுதுதேவர்தம்
நாவுளாகுதிநயக்கும்வேள்விவாய்

---

19. உலகமெலாந்தன்னகட்டில் தாங்கிக்கிதுவொரு பொருளன்றென்பார். கொற்றவில் ஒன்றுதாங்கினா லுலகந்தாங்கினானென்றார்.

தாவுமாபுகைதழுவுசோலைகண்
டியாவதீதென்றனெவர்க்குமேனின்றான். (உ௪)

ஆ திருவிருத்தம் - ௩௪௧.

---

## எ-வது, தாடகைவதைப்படலம்.

---

திங்கண்மேவுஞ்சடைத்தேவன்மேன்மாரவேள்
இங்குநின்றெய்யவும்மெரிதரும்நுதல்விழிப்
பொங்குகோபஞ்சுடப்பூளைவீயன்னதன்
அங்கமெவந்தன்றுதொட்டனங்கனேயாயினன். (௧)

வாரணத்துரிவையான்மதனனைச்சினவுநாள்
ஈரமற்றங்கமிங்குகுதலாலிவணெலாம்
ஆரணத்துறையுளாயங்கநாடதுவுமக்
காரணக்குறியுடைக்காமனாச்சிரமமே. (௨)

பற்றவாவேரொடும்பசையறப்பிறவிபோய்
முற்றவாலுணர்வுமேன்முடுகினாரறிவுசென்
றற்றவானவனிருந்தியோகுசெய்தனனெனிற்
சொற்றவாமளவதோமற்றிதன்றூய்மையே. (௩)

என்றவந்தணனியம்பலும்வியந்தவ்வயிற்
சென்றுவந்தெதிர்தொழுஞ்செந்நெறிச்செல்வரோ
டன்றுறைந்தலர்கதிர்ப்பரிதிமண்டிலமகன்
குன்றினின்றிவரவோர்சுடுசுரங்குறுகினார். (௪)

பருதிவானவனிலம்பசையறப்பருகுவான்
விருதுமேற்கொண்டுலாம்வேனிலேயல்லதோர்
இருதுவேறின்மையாலெரிசுடர்க்கடவுளும்
கருதின்வேமுள்ளமுங்காணில்வேம்நயனமும். (௫)

படியின்மேல்வெம்மையைப்பகரினும்பகருநா
முடியவேமுடியமுடிருளும்வான்முகடும்வேம்
விடியுமேல்வெயிலும்வேமழையும்வேமின்னிறோ
டிடியும்வேமென்னில்வேறியாவைவேவாதவே. (௬)

---

1. திங்கண்மேவுஞ்சடைத்தேவன் - சிவபெருமான்.
2. தேவர்தம்நா - கனற்கடவுள்.

விஞ்சுவான்மழையின்மேலம்பும்வேலும்படச்
செஞ்செவேசெருமுகத்தன்றியேதிறனிலா
வஞ்சர்தீவினைகளான்மானமாமணியிழந்
தஞ்சினார்நெஞ்சுபோலென்றுமாறுதரோ. (எ)

பேய்பிளந்தொக்கநின்றுலர்பெருங்கள்ளியின்
தாய்பிளந்துக்ககாரகில்களுந்தழையிலா
வேய்பிளந்துக்கவெண்டரளமும்விடவரா
வாய்பிளந்துக்கசெம்மணியுமேவனமெலாம். (அ)

பாருமோடாதுசீடாதெனும்பாலதே
சூருமோடாதுகூடாதரோசூரியன்
தேருமோடாதுமாமாகமீதேரினோர்
காருமோடாதுநீள்காலுமோடாதரோ. (௯)

கண்கிழித்துமிழ்விடக்கனலராவரசுகார்
விண்கிழித்தொளிருமின்னனையபன்மணிவெயில்
மண்கிழித்திடவெழுஞ்சுடர்கண்மண்மகளுடற்
புண்கிழித்திடவெழுங்குருதியேபோலுமே. (௧௰)

வேறு.

புழுங்குவெம்பசியொடுபுரளும்போரரா
விழுங்கவந்தெதிரெதிர்விரித்தவாயின்வாய்
முழங்குதிண்கரிபுகுமுடுகிமீமிசை
வழங்குவெங்கதிர்சுடமறைவுதேடியே. (௧௧)

ஏகவெங்கனலரசிருந்தகாட்டினில்
காகமுங்கரிகளுங்கரிந்துசாம்பின
மாகவெங்கனலெனும்வடவைத்தீச்சுட
மேகமுங்கரிந்திடைவீழ்ந்தபோலுமே. (௧௨)

கானகத்தியங்கியகழுதின்றேர்க்குலம்
தானகத்தெழுதலாற்றலைக்கொண்டோடிப்போய்
மேனிமிர்ந்தெழுந்திடில்விசும்பும்வேமெனா
வானவர்க்கிரங்கிநீர்வளைந்ததொத்ததே. (௧௩)

வெய்ந்தவக்கனலிடையெழுந்தகானற்றேர்
காய்ந்தவக்கடுவனங்காக்கும்வேனிலின்

8. கள்ளிவயிற்றினகில்பிறக்குமென்றதனாற் பெருங்கள்ளியின்றாய் பிளந்துக்ககாரகில்களுமென்றார்.

வேந்தனுக்கரசுவீற்றிருக்கச்செய்ததோர்
பாய்ந்தபொற்காலுடைப்பளிக்குப்பீடமே. (கச)

தாவருமிருவினைசெற்றுத்தள்ளரு
மூவகைப்பகையரண்கடந்துமுத்தியில்
போவதுபுரிபவர்மனமும்பொன்விலைப்
பாவையர்மனமும்போற்பசையுமற்றதே. (கரு)

பொரிபரற்படர்நிலம்பொடிந்துகீழுற
விரிதலிற்பெருவழிவிளங்கித்தோன்றலால்
அரிமணிப்பணத்தராவரசர்நாட்டினும்
எரிகதிர்க்கினிதுபுக்கியங்கலாயதே. (கசு)

எரிந்தெழுகொடுஞ்சுரமினையதெய்தலும்
அருந்தவனிவர்பெரிதலவிலாற்றலைப்
பொருந்தினராயினும்பூவின்மெல்லியர்
வருந்துவர்சிறிதெனமனத்திலுன்னினன். (கஎ)

நோக்கினனவர்முகநோக்கநோக்குடைக்
கோக்குமாருமடிகுறுகநான்முகன்
ஆக்கியவிஞ்சைகளிரண்டுமெவ்வழி
ஊக்கினனவையவருள்ளத்துள்ளினர். (கஅ)

உள்ளியகாலையினூழித்தீயினை
எள்ளுறுகொழுங்கனலெஞ்சும்வெஞ்சுரம்
தெள்ளுதண்புனலிடைச்சேறலொத்தது
வள்ளலுமுனிவனைவணங்கிக்கூறுவான். (ககூ)

சுழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான்
விழிபடவெந்ததோவேறுதானுண்டோ
பழிபடாமன்னவன்படைத்தநாட்டினூஉங்
கழிவதென்காரணமறிஞகூறென்றான். (உ0)

என்றலுமிராமனைநோக்கியின்னுயிர்
கொன்றுழல்வாழ்க்கையள்கூற்றின்றோற்றத்தள்
அன்றியுமையிருநூறுமையன்மா
ஒன்றியவலியினளுறுதிகேளென. (உக)

15. இருவினை - புண்ணியபாவங்கள். மூவகைப்பகை - காமவெகுளிமயக்கங்களை.

18. விஞ்சைகளிரண்டு - பலம், அதிபலம் என்பன.

20. சுழிபடுகங்கையந்தொங்கன் மௌலியான் - சிவன்.

மண்ணுருத்தெடுப்பினுங்கடலைவாரினும்
விண்ணுருத்திடிப்பினும்வேண்டிற்செய்கிற்பாள்
எண்ணுருத்தெரிவரும்பாவமீண்டியோர்
பெண்ணுருக்கொண்டெனத்தெரியும்பெற்றியாள். (௨௨)

பெருவரையிரண்டொடும்பிறந்தநஞ்சொடும்
உருமுறழ்முழக்கொடூழித்தீயொடும்
இருபிறைசெறிந்தெழுகடலுண்டாமெனின்
வெருவருதோற்றத்தண்மேனிமானுமே. (௨௩)

சூடகவரவுறழ்சூலக்கையினள்
காடுறைவாழ்க்கையள்கண்ணிற்காண்பரேல்
ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாய்
தாடகையென்பதச்சழக்கிநாமமே. (௨௪)

கன்னவிற்றோளினாய்கமலத்தோனருள்
மன்னுயிரனைத்தையும்வாரிவாய்ப்படுத்
தின்னுயிர்வளர்க்குமோரெரிகொள்கூற்றநேர்
அன்னவள்யாவளென்றறையக்கேட்டியால். (௨௫)

இயக்கர்தங்குலத்துளானுலகமெங்கணும்
வியக்குறுமொய்ம்பினானெறியின்வெம்மையான்
மயக்கில்சற்சரனெனும்வலத்தினானருள்
துயக்கிலன்சுகேதுவென்றுளனோர்தூய்மையான். (௨௬)

அன்னவன்மகவிலாதயருஞ்சிந்தையான்
மன்னெடுந்தாமரைமலரின்வைகுறும்
நன்னெடும்பகவனைவழுத்திநற்றவம்
பன்னெடும்பகலெலாம்பயின்றபான்மையால். (௨௭)

முந்தினனருமறைக்கிழவன்முற்றுநின்
சிந்தனையென்னெனச்சிறுவரின்மையான்
நொந்தனனருள்கென நுணங்குகேள்வியாய்
மைந்தர்களிலையொருமகளுண்டாமென்றான். (௨௮)

---

23. வரையிரண்டு - தனங்கள், பிறந்தநஞ்சு கண்டுகண், ஊழித்தீ என்றது கூந்தலை, இருபிறை என்றது வளைந்தவெயிற்றை, கடலென்ற துருவத்தை, இருபிறைசெறிந்தெழுகடலென்றது இல் பொருளுவமை.

24. ஆடவர்பெண்மையை யவாவுந்தோளினாயென்றார். முற்றத்துறந்த முனிவரும் இவள் அழகிற்சாலநைந்து துவக்குண்டமையை.

பூமடமயிலினைப்பொருவும்பொற்பொடும்
ஏமுறுமதமலையீரைஞ்ஞூறுடைத்
தாமிகுவலியொடுந்தனையமோன்றுநீ
போமெனமலரயன்புகன்றுபோயினான். (உ௯)

ஆயவனருள்வழியலர்ந்ததாமரைச்
சேயவனெனவளர்செவ்விகண்டிவட்
காயவன்யார்கொலென்றாய்ந்துதன்கிளை
நாயகன்சுந்தனென்றவற்குநல்கினான். (௩0)

காமனுமிரதியுங்கலந்தகாட்சியி
தாமெனவியக்கனுமணங்களும்வே
றியாமமும்பகலுமோர்றின்றென்னலாய்த்
தாமுறுபெருங்களிச்சலதிமூழ்கினார். (௩௧)

பற்பலநாட்செலீஇப்பதுமைபோலிய
பொற்பினாள்வயிற்றிடைப்புவனமேங்கிட
வெற்பணிபுயத்துமாரீசனும்விறல்
மற்பொருசுவாகுவும்வந்துதோன்றினார். (௩௨)

மாயமும்வஞ்சமும்வரம்பிலாற்றலும்
தாயினும்பழகினார்தமக்குந்தேர்வொணா
தாயவர்வளர்வழியவரையீன்றவக்
காய்சினத்தியக்கனுங்களிப்பின்மேன்மையாள். (௩௩)

தீதுறுமவுணர்கடமைதீர்தர
மோதுறுகடலெலாமொருகைமொண்டிடு
மாதவனுறைவிடமதனின்வந்துநீள்
பாதவமனைத்தையும்பறித்துவீசினான். (௩௪)

விழைவுறுமாதவம்வெஃகினோர்விரும்
புழைகலையிரலையையுயிருண்டோங்கிய
வழையொடுமரனெலாமடிப்பமாதவன்
தழலெழவிழித்தனன்சாப்பராயினான். (௩௫)

மற்றவன்விளிந்தமைமைந்தர்தம்மொடும்
பொற்றொடிகேட்டுவெங்கனலிற்பொங்குறு

32. பதுமா என்றது பதுமைஎனநின்றது, ஈண்டு திருமகள்.

34. மாதவனென்றதும் தமிழெனுமளப்பருஞ்சலதிதந்தவன் என்றதும் அகத்தியனை.

முற்றுறமுடிக்குவென் முனிடையென்றெழா
நற்றவனுறைவிடமதனைநண்ணினன். (௩௬)

இடியொடுமடங்கலும்வளியுமேங்கிடக்
கடிகெடவமரர்கள்கதிருமுட்குறத்
தடியுடைமுகிற்குலஞ்சலிப்பவண்டமும்
வெடிபடவதிர்த்தெதிர்விளித்துமண்டவே. (௩௭)

தமிழெனுமளப்பருஞ்சலதிதந்தவன்
உமிழ்கனல்விழிவழியொழுகவுங்கரித்
தழிவனசெய்தலாலரக்கராகியே
இழிகெனவுரைத்தனனசனியெஞ்சவே. (௩௮)

வெருக்கொளவுலகையும்விண்ணுளோரையும்
முருக்கியெவ்வுயிருமுண்டுழலுமூர்க்கராம்
அரக்கர்களாயினரக்கணத்தினில்
உருக்கியசெம்பெனவுமிழ்கட்டையினர். (௩௯)

ஆங்கவன்வெகுளியுமறைந்தசாபமும்
தாங்கினரெதிர்செயுந்தருக்கிலாமையின்
நீங்கினர்சுமாலியைநேர்ந்துநிற்கியாம்
ஓங்கியபுதல்வரென்றுறவுகூர்ந்தனர். (௪௦)

அவரொடும்பாதலத்தனைகநாட்செலீஇத்
தவனுறுதசமுகன்றனக்குமாதுலர்
இவரெனப்புடைத்தழித்துலகமெங்கணும்
பவனனிற்றிரிகுநர்பதகிமைந்தர்கள். (௪௧)

மிகுந்திறன்மைந்தரைவேறுநீங்குறுத்
தகுந்தொழின்முனிவரன்சலத்தைபுன்னியே
வகுந்துவின்வசுவரிவதிந்ததிவ்வனம்
புகுந்தனளழலெனப்புழுங்குநெஞ்சினள். (௪௨)

உளப்பரும்பிணிப்புறுவுலோபமொன்றுமே
அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோல்
கிளப்பருங்கொடுமையவரக்கிகேடிலா
வளப்பருமருதவைப்பழித்துமாற்றினள். (௪௩)

---

41. தசமுகன் - இராவணன். 42. வகுந்து - வழி.

43. உள்ளத்திற் பருமையாகிய பிணிப்படையாத பற்றுள்ளமொன்றே அளவில்லாத நற்குணங்களை யழிக்கும் வண்ணம் போல எனக்கொள்க.

வேறு.

இலங்கையரசன்பணியமைந்தொரிடையூறு
விலங்கல்வலிகொண்டெனதுவேள்விநலிகின்றாள்
அலங்கன்முகிலேயவளிவ்வங்கநிலமெங்கும்
குலங்களொடடங்கநனிகொன்றுதிரிகின்றாள். (௪௪)

முன்னுலகளித்துமுறைநின்றவுயிரெல்லாம்
தன்னுயிரெனக்கருதுதன்மையவன்மைந்த
என்னினியுணர்த்துவதினிச்சிறிதுநாளின்
மன்னுயிரனைத்தையும்வயிற்றினிடுமென்றான். (௪௫)

அங்கிறைவனப்பரிசுரைப்பவதுகேளா
கொங்குறைநறைக்குலமலர்ச்செனிகுலுக்கா
எங்குறைவதித்தொழிலியற்றுபவளென்றான்
சங்குறைகரத்தொருதனிச்சிலைதரித்தான். (௪௬)

கைவரையெனத்தகையகாளையுரைகேளா
ஐவரையகத்திடையடைத்தமுனியைய
இவ்வரையிருப்பதவளென்பதனின்முன்போர்
மைவரைநெருப்பெரியவந்ததெனவந்தாள். (௪௭)

சிலம்புகள்சிலம்பிடைசெறித்தகழலோடு
நிலம்புகமிதித்தனளெளித்தகுழிவேலைச்
சலம்புகவனற்றறுகணந்தகனுமஞ்சிப்
பிலம்புகநிலக்கிரிகள்பின்றொடரவந்தாள். (௪௮)

இறைக்கடைதுடித்தபுருவத்தளெயிறென்னும்
பிறைக்கடைபிறங்கிடமடித்தபிலவாயள்
மறைக்கடையரக்கிவடவைக்கனலிரண்டாய்
நிறைக்கடன்முளைத்தெனநெருப்பெழவிழித்தாள். (௪௯)

---

45. மகனறிவுதந்தையறிவாகலின் நீயுமவ்வாறு செய்வையென்பார் தன்மையவன்மைந்த எனவுங்கூறினார்.

46. சங்கேந்தியகை வறிதேகிடப்ப அறத்தை நிறுத்தற்பொருட்டசுரரைக் கொல்லவில்லேந்திநிற்றலின், சங்குறைகரத்தொரு தனிச்சிலைதரித்தானென்றார்.

49. கரியகடல்போல் மேனியும், அக்கடலில் வடவைத் தீயிரண்டாய் முளைத்தாற்போல் வளைந்த வெயிறுந்தோன்றலின் வடவைக்கனலிரண்டாய் நிறைக்கடன் முளைத்தன என்றார்.

கடங்கலுழ்தடங்களிறுகையொடுகைதெற்றா
வடங்கொளநுடங்குமிடையாண்மறுகிவானோர்
இடங்களுநெடுந்திசையுமேழுலகுமெங்கும்
அடங்கலுநடுங்கவுருமஞ்சநனியார்த்தாள். (௫௰)

ஆர்த்தவரைநோக்கிநகைசெய்தவருமஞ்சக்
கூர்த்தநுதிமுத்தலையயிற்கொடியகூற்றைப்
பார்த்தெயிறுதின்றுபகுவாய்முழைதிறந்தோர்
வார்த்தையுரைசெய்தனளிடிக்குமழையன்னாள். (௫௧)

கடக்கரும்வலத்தெனதுகாவலினில்யாவும்
கெடக்கருவறுத்தனெனினிச்சுவைகிடக்கும்
விடக்கரிதெனக்கருதியோவிதிகொடுந்தப்
படக்கருதியோபகர்மின்வந்தபரிசென்றே. (௫௨)

மேகமவையிற்றுகவிழித்தனள்புழுங்கா
மாகவரையற்றுகவுதைத்தனண்மதித்திண்
பாகமெனுமுற்றெயிறதுக்கியயில்பற்றா
ஆகமுறவுய்த்தெறிவெனென்றெதிரழன்றாள். (௫௩)

அண்ணன்முனிவற்கதுகருத்தெனினுமாவி
உண்ணெனவடிக்கணைதொடுக்கிலனுயிர்க்கே
துண்ணெனும்வினைத்தொழிறொடங்கியுளளேனும்
பெண்ணெனமனத்திடைபெருந்தகைநினைந்தான். (௫௪)

வேறு.

வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றாளயில்
எறிந்துகொல்வெனென்றேற்கவும்பார்க்கிலாச்
செறிந்ததாரவன்சிந்தைக்கருத்தெலாம்
அறிந்துநான்மறையந்தணன்கூறுவான். (௫௫)

தீதென்றுள்ளவையாவையுஞ்செய்தமைக்
கோதென்றுண்டிலளித்தனையேகுறை
யாதென்றெண்ணுவதிக்கொடியாளையும்
மாதென்றெண்ணுவதோமணிப்பூணினாய். (௫௬)

---

52. விடக்கு - ஊண்.

53. மதித்திண்பாகம் - பிறைக்கோடு.

54. வினைத்தொழில் என்றது ஒரு பொருட்பன்மொழி துண்ணெனுமென்ற அடையான் தீத்தொழில் என்பது படநின்றது. பெருந்தகை-பெருந்தன்மையுடைய இராமனை அன்மொழித்தொகை.

நாண்மையேயுடையார்பிழைத்தார்நகு
வாண்மையேபெற்றவன்றிறலாடவர்
தோண்மையேயிவள்பேர்சொலத்தோற்பரேல்
ஆண்மையென்னுமதாரிடைவைகுமே. (ருள)

இந்திரன்னிடைந்தானுடைந்தோடினூர்
தந்திரம்படத்தானவர்வானவர்
மந்தரம்மிவடோளெனின்மைந்தரோ
டந்தரம்மினியாதுகொலாண்மையே. (ருஅ)

மன்னர்மன்னவன்காதலமற்றுமோன்
றின்னம்யானுரைக்கின்றதியாதெனின்
முன்னோர்காலநிகழ்ந்தமுறைமையீ
தென்னவோதனுற்றான்றவத்தீறிலான். (ருகூ)

பிருகுவென்னும்பெருந்தவன்றன்மனை
வருகயற்கட்கியாதிவல்லாசுரர்க்
குருகுகாதலுறவுறவாதலே
கருதியாவிகவர்ந்தனனேமியான். (சுo)

வானகத்தினின்மண்ணினின்மன்னுயிர்
போனகந்தனக்கென்றெனும்புந்திய
தானவள்குமதிப்பெயராடனை
ஊனொழித்தனன்வச்சிரத்தும்பர்கோன். (சுக)

ஆதலாலரிக்காகண்டலன்றனக்
கோதுகீர்த்தியுடையவல்லாதிடை
ஏதமென்பனவெய்தியவோசொலாய்
தாதடர்ந்துதயங்கியதாரினாய். (சுஉ)

கறங்கிடத்திகிரிப்படிகாத்தவர்
பிறங்கடைப்பெரியோய்பெரியோரொடும்
மறங்கொடித்தரைமன்னுயிர்மாய்த்துநின்
றறங்கெடுத்தவட்காண்மையும்வேண்டுமோ. (சுங)

---

57. தோண்மை-தோளாற்றலை. வாண்மை-வாட்டொழிற்சிறப்பை.

59. சக்கரவர்த்தித் திருமகனென்றழைப்பது நோக்கி 'மன்னர்மன்னவன்காதல்' என்றார். 60. பிருகுமனைவி கியாதியென்பாள் அசுரர்க்குப்புகலிடந்தந்து மாயோன் சக்கரத்தான்மாண்டாளென்பது. ஆசுரமென்றது நீட்டும் வழி நீட்டல்பெற்றது.

61, போனகம் - உண்டி. குமதி - விரோசனனென்னுமசுரன் மகள்,

சாற்றுநாளற்றதெண்ணித் தருமம்பார்த்
தேற்றும்விண்ணென்பதன்றியிவளைப்போல்
நாற்றங்கேட்டலுந்தின்னநயப்பதோர்
கூற்றுண்டோசொலைகூற்றுறழ்வேலினாய். (௬௪)

மன்னும்பல்லுயிர்வாரித்தன்வாய்ப்பெய்து
தின்னும்புன்மையிற்றீமையதேதைய
பின்னுந்தாழ்குழற்பேதைமைப்பெண்ணிவள்
என்னுந்தன்மையெளிமையின்பாலதே. (௬௫)

ஈறினல்லறம்பார்த்திசைத்தேனிவட்
சீறிநின்றிதுசெப்புகின்றேனலேன்
ஆறிநின்றதறனன்றரக்கியைக்
கோறியென்றெதிரந்தணன்கூறினான். (௬௬)

ஐயனங்கதுகேட்டறனல்லவும்
எய்தினாலதுசெய்கவென்றேவினால்
மெய்யநின்னுரைவேதமெனக்கொடு
செய்கையன்றோவறஞ்செய்யுமாறென்றான். (௬௭)

கங்கைத்தீம்புனனாடன்கருத்தையம்
மங்கைத்தீயனையாளும்மனக்கொளாச்
செங்கைச்சூலவெந்தீயினைத்தீயதன்
வெங்கட்டீயொடுமேற்செலவீசினாள். (௬௮)

புதியகூற்றனையாள்புகைந்தேவிய
கதிர்கொண்மூவிலைக்காலவெந்தீமுனி
விதியைமேற்கொண்டுநின்றவன்மேலுவா
மதியின்மேல்வருங்கோளெனவந்ததே. (௬௯)

மாலுமக்கணம்வாளியைத்தொட்டதும்
கோலவிற்கால்குனித்ததுங்கண்டிலர்
காலனைப்பறித்தக்கடியாள்விட்ட
சூலமற்றனதுண்டங்கள்கண்டனர். (௭௦)

---

64. நாற்றங்கேட்டலுமென்றதிலக்கணை, சொலைஎன்றது ஐயீற்று முன்னிலைஒருமைவினைமுற்று. நாளற்றதெண்ணித் தருமம்பார்த்து விண்ணிலேற்றுங்கூற்றைப்போலாது நாற்றங்கேட்டலுந் தின்னநயப்பதுநோக்கி, ஓர் கூற்றுண்டோ என்றார்.

68. கங்கைத் தீம்புனனாடனென்றதிராமனை தீயானதுபுனலையவித்தன் முறையாதலின் தீம்புனனாடனென்றும், தீயனையாளுமென்றுங்கூறினார்.

69. நாற்றங்கேட்டலுந் தின்னநயப்பதோர் கூற்றுண்டோ என்றதைவற்புறுத்தற்குப் புதிய கூற்றனையாளென்றார்.

அல்லின்மாரியனையநிறத்தவள்
சொல்லின்மாத்திரையிற்கடறார்ப்பன
கல்லின்மாரியைக்கைவகுத்தாளது
வில்லின்மாரியின்வீரன்விலக்கினான். (எக)

ஏக்கமோடவிமயவரெங்கணும்
வாக்கின்முந்துறமாயைவளர்ப்பவள்
மூக்கும்வார்செவியும்முறைபோயிடத்
தாக்கும்வள்ளலினவலுந்தாக்கினான். (எஉ)

வேறு.

சொல்லொக்குங்கடியவேகச்சுடுசரங்கரியசெம்மல்
அல்லொக்குநிறத்தினாண்மேல்விடுதலும்வயிரக்குன்றக்
கல்லொக்குநெஞ்சிற்றங்காதப்புறங்கழன்றுகல்லாப்
புல்லர்க்குநல்லோர்சொன்னபொருளெனப்போயிற்றன்றே. (எங)

பொன்னெடுங்குன்றமன்னான்புகர்முகப்பகழியென்னும்
அன்னெடுங்காலவன்காற்றடித்தலுமிடித்துவானில்
கன்னெடுமாரிபெய்யக்கடையுகத்தெழுந்தமேகம்
மின்னொடுமசனியோடும்வீழ்வதேபோலவீழ்ந்தாள். (எச)

பொடியுடைக்கானமெங்குங்குருதிநீர்பொங்கவீழ்ந்த
தடியுடையெயிற்றுப்பேழ்வாய்த்தாடகைதலைகடோறும்
முடியுடையரக்கற்கந்நாண்முந்தியுற்பாதமாகப்
படியிடையற்றுவீழ்ந்தவெற்றியம்பதாகையொத்தாள். (எரு)

கான்றிரிந்தாழியாகத்தாடகைக்கடினமார்பத்
தூன்றியபகழிவாயூடொழுகியகுருதிவெள்ளம்
ஆன்றவக்கானமெல்லாமாயினதந்திமாலைத்
தோன்றியசெக்கர்வானந்தொடக்கற்றுவீழ்ந்ததொத்தே. (எசு)

வாசநாண்மலரோனன்னமாமுனிபணிமறுத்த
காசுலாங்கனகப்பைம்பூட்காகுத்தன்கன்னிப்போரில்
கூசுவாளரக்கர்தங்கள்குலத்துயிர்குடிக்கவஞ்சி
ஆசையாலுழலுங்கூற்றுஞ்சுவைசிறிதறிந்ததன்றே. (எஎ)

73. நிறைமொழி என்பதுபற்றிச் சொல்லொக்குமெனச் சுடுசரத்துக்குவமைகூறினார். கல்வியறிவில்லாத புல்லறிவுடையார்க்கு நல்லோர் கூறிய உறுதிமொழி சிறிதும் பயன்படாமையின் 'நெஞ்சிற்றங்காதப் புறங்கழன்று புல்லர்க்கு நல்லோர் சொன்னபொரு'ளென்றுவமை முகத்தாற் கூறினார்.

யாமுமெம்மிருக்கைபெற்றே முனக்கிடையூறுமில்லை
கோமகற்கினியதெய்வப்படைக்கலங்கொடுத்தியென்னு
மாமுனிக்குரைத்துப்பின்னர்விற்கொண்டமழையனுன்மேல்
பூமழைபொழிந்துவாழ்த்திவிண்ணவர்போயினுரே. (எஅ)

ஆ_திருவிருத்தம் - ௬௧௧.

---

## அ-வது, வேள்விப்படலம்.

---

விண்ணவர்போயபின்றைவிரிந்தபூமழையினுலே
தண்ணெனுங்கானநீங்கித்தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தனசடையன்வெண்ணெய்
அண்ணறன்சொல்லேயன்னபடைக்கலமருளினுனே. (க)

ஆறியவறிஞன்கூறியளித்தலுமண்ணறன்பால்
ஊறியவுவகையோடுமும்பர்தம்படைகளெல்லாம்
தேறியமனத்தான்செய்தநல்வினைப்பயன்களெல்லாம்
மாறியபிறப்பிற்றேடிவருவபோல்வந்தவன்றே. (உ)

மேவினப்பிரிதலாற்றேம்வீரநீவிதியினெம்மை
ஏவினசெய்துநிற்றுமிளையவன்போலவென்று
தேவர்தம்படைகள்செப்பச்செவ்விதென்றவனுநேரப்
பூவைபோனிறத்தினுற்குப்புறத்தொழில்புரிந்தவன்றே. (௩)

இனையனநிகழ்ந்தபின்னர்க்காவதமிரண்டுசென்றூர்
அனையவர்காணவாண்டோராவம்வந்தணுகித்தோன்ற
முனைவவீதியாவதென்றுமுன்னவன்வினவப்பின்னர்
வினையறநோற்றுநின்றமேலவன்விளம்பலுற்றுன். (௪)

மானசமடுவிற்றேன்றிவருதலாற்சரயுவென்றே
மேன்முறையமரர்போற்றும்விழுநதியதனிஞேடும்
ஆனகோசிகிவந்தெய்துமரவமதென்னவப்பாற்
போனபின்பவங்கடர்க்கும்புனிதமாநதியையுற்றூர். (௫)

---

78. இந்திரவில்லொடுதோன்று மேகம்போலெய்தியமை நோக்கி 'விற்கொண்ட மழையனு' னென்றூர்.

3. காயாம்பூவையொத்த நிறத்தனுகலின் 'பூவைபோனிறத்தினு' னென்றூர்.

சுரர்தொழுதிறைஞ்சற்கொத்ததூநதியாவதென்று
வரமுனிதன்னையண்ணல்வினவுறமலருள்வைகும்
பிரமனன்றளித்தவென்றிப்பெருந்தகைக்குசனென்றோதும்
அரசர்கோன்மனைவிதன்பாலளித்தவர்நால்வராகும். (சு)

குசன்குசநாபன்கோதில்குணத்தினதூர்த்தன்கொற்றத்
திசைகெழுவசுவென்றோதுமிவர்பெயரிவர்கடம்மில்
குசன்கவுசாம்பிநாபன்குளிர்மகோதயமதூர்த்தன்
வசையிறன்மவனமற்றைவசுகிரிவிரசம்வாழ்ந்தார். (எ)

அவர்களிற்குசநாபற்கேயையிருபதின்மரஞ்சொல்
துவரிதழ்த்தெரிவைநல்லார்தோன்றினர்வளருநாளில்
இவர்பொழிற்றலைக்கணுயத்தெய்துழிவாயுவெய்திக்
கவர்மனத்தினனுயந்தக்கன்னியர்தம்மைநோக்கி. (அ)

கொடித்தனிமகரங்கொண்டான்குனிசிலைச்சரத்தானுந்தேன்
வடித்தடங்கண்ணீரென்னைமணத்திரென்றுரைப்பவெந்தை
அடித்தலத்துரைத்துநீரோடளித்திடினணைதுமென்ன
ஒடித்தனன்வெரிநைவீழ்ந்தாரொளிவளைமகளிரெல்லாம். (கூ)

சமிரணனகன்றபின்னர்த்தையலார்தவழ்ந்துசென்றே
அமிர்துகுகுதலைமாழ்கியரசன்மாட்டுரைப்பவன்னோன்
நிமிர்குழன்மடவார்த்தேற்றிநிறைதவன்சூளிநல்கும்
திமிரறுபிரமதத்தற்களித்தனன்றிருவனையார். (கய)

அவன்மலர்க்கைகடீண்டக்கூனிமிர்ந்தழகுவாய்த்தார்
புவனமுற்றுடையகோவும்புதல்வரில்லாமைவேள்வி
தவர்களிற்புரிதலோடுந்தகையுறத்தழலினுப்பண்
கவனவேகத்துரங்கக்காதிவந்துதயஞ்செய்தான். (கக)

அன்னவன்றனக்குவேந்தனரசொடுமுடியுமீந்து
பொன்னகரடைந்தபின்னர்ப்புகழ்மகோதயத்தில்வாழும்
மன்னவன்காதிக்கியானுங்கவுசிகையென்னுமாது
முன்னர்வந்துதிப்பவந்தமுடியுடைவேந்தர்வேந்தன். (கஉ)

பிருகுவின்மதலையாயபெருந்தகைப்பிதாவுமோவ்வா
இருசிகனென்பவற்குமெல்லியலாளையீந்தான்
அருமறையவனுஞ்சின்னாளறம்பொருளின்பமுற்றி
விரிமலர்த்தவிசோன்றன்பால்விழுத்தவம்புரிந்துமீண்டான். (கஙு)

---

6. வரமுனி-கோசிகன். 9. கொடித்தனிமகரங்கொண்டவன் - மன்மதன்.

காதலன்சேணினீங்கக்கவுசிகைதரிக்கலாற்ருள்
மீதுறப்படராலுற்ருள்விழுநதிவடிவமாகி
மாதவர்க்கரசுநோக்கிமாநிலத்துறுகணீக்கப்
போதுகநதியாயென்ருப்பூமகனுலகுபுக்கான். (கச)

எம்முனுணங்கையிந்தவிருநதியாயினுளென்
றம்முனிபுகலக்கேளாவதிசயமிகவுந்தோன்றச்
செம்மலுமிளையகோவுஞ்சிறிதிடந்தீர்ந்தபின்னர்
மைம்மலிபொழில்யாதென்னமாதவன்கூறலுற்ருன். (கரு)

தங்கணுயகரிற்றெய்வந்தவம்பிறிதிலவென்றெண்ணும்
மங்கைமார்சிந்தைபோலத்தூயதுமற்றுங்கேளாய்
எங்கணுன்மறைக்குந்தேவரறிவிற்கும்பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்துமேனுட்செய்தவஞ்செய்ததன்றே. (கசு)

பாரின்பால்விசும்பின்பாலும்பற்றறப்படிப்பதன்னுன்
பேரென்பானவன்செய்மாபப்பெரும்பிணக்கொருங்குதேர்வார்
ஆரென்பானமலமூர்த்திகருதியதறிதறேற்ரும்
ஈரைம்பானூழிகாலமிருந்தவமியற்றியிட்டான். (கஎ)

வேறு.

ஆனவனிங்குறைகின்றவந்நாள்வாய்
ஊனமின்ஞாலமொடுங்குமெயிற்ருன்
ஏனமெனுந்திறன்மாவலியென்பான்
வானமும்வையமும்வெளவுதல்செய்தான். (கஅ)

செய்தவர்வானவருஞ்செயலாற்ரு
நெய்தவழ்வேள்வியைமுற்றிடநின்ருன்
ஐயமில்சிந்தையனந்தணர்தம்பால்
வையமும்யாவும்வழங்கவலித்தான். (கசு)

ஆயதறிந்தனர்வானவரந்நாள்
மாயனைவந்தவணங்கியிரந்தார்
தீயவன்வெந்தொழிறீரெனநின்ருர்
நாயகனும்மதுசெய்யநயந்தான். (உ0)

காலநுனித்துணர்காசிபனென்னும்
வாலறிவற்கதிதிக்கொருமகவாய்
நீலநிறத்துநெடுந்தகைவந்தோர்
ஆலமர்வித்தினருங்குறளானுன். (உக)

21. ஆலமர்வித்தினருங்குறளானுன் - ஆலின் சிறுவித்துப்போலச் சிறு குறள்வடிவமானுன் என்றதென்க. அதன் வித்துமிகச்சிறியதேனும் யானே,

முப்புரி நூலின் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவன னற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றான். (உ.உ)

அன்றவன் வந்தது றிந்து லகெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெ திர்கொண்டான்
நின்றனி னந்தண ரில்லை நிறைந்தோய்
என்றனி னுய்ந்தவர் யாரினி யென்றான். (உ.ங)

ஆண்டகை யவ்வழி கூறவ றிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான். (உ.ச)

சிந்தையு வந்தெதிரென் செயவென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திற லாயிது வேண்டுமெ னாமுன்
தந்தன னென்றனன் வெள்ளி தடுத்தான். (உ.ரு)

கண்ட திறத்திது கைதவ மைய
கொண்டணி றக்குற மென்பது கொள்வேல்
அண்ட முமுற்று மகண்ட முமேனாள்
உண்டவ னாமிது ணர்ந்துகொ ளென்றான். (உ.கா)

நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கியலா வகை தாழ்வது தாழ்வில்

---

தேர், குதிரை, காலாள் என்னு நால்வகைப்படைக்குந் தங்கநிழல் பயப்பது போல முன்னர்ச் சிறுகுறளாகசசென்று பின்நீண்டமையினவ்வாறுவமைகூறினார். அமர் - சிறுமை, இதனை 'அமர்மெய்யுடையவன்றான்' என்றிவ்வாசிரியர் கூறுதலுங்காண்க.

22. மெய்யுணர்ச்சியுடையாரற் காணப்படுபவ னாகலின் 'அற்புதரே யறியு' மென்றும், அவர்க்குத்தான் இறப்ப நண்ணிய ஞானத்திருமேனி காட்டலின் 'சிற்பதமொப்பதோர் மெய்க்கொடுசென்றான்' என்றுங்கூறினார்.

24. ஈகைக்குணமுடைமையிற் சிறந்தோனாகலின் நீண்டகையாயென்றும், நின்னுழையிரந்தார் மாட்சிமையுடையராகலின் 'மாண்டவ' ரென்றும், அல்லாதாரன்ன ரல்லராகலின், 'அல்லவர்மாண்பில' ரென்றுங்கூறினார்.

26. உலகமுண்ட பெருவாயனாகலின 'அண்டமுமுற்று மகண்டமுமே னாளுண்டவ' னென்றதென்க.

கனக்கரியானது கைத்தலமென்னின்
எனக்கிதன்மேனலம்யாதுகொலென்றான். (உஎ)

துன்னினர்துன்னலரென்பதுசொல்லார்
முன்னியநன்னெறிநூலவர்முன்வந்
துன்னியதானமுயர்ந்தவர்கொள்க
என்னினிவன்றுணையாவருயர்ந்தார். (உஅ)

வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்
வள்ளியராகவழங்குவதல்லால்
எள்ளுவவென்சிலவின்னுயிரேனும்
கொள்ளுதல்தீதுகொடுப்பதுநன்றால். (உகூ)

மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா
தேந்தியகைகொடிரந்தவரெந்தாய்
வீய்ந்தவரென்பவர்வீய்ந்தவரேனும்
ஈந்தவரல்லதிருந்தவர்யாரே. (௩௦)

அடுப்பவரும்பழிசெய்ஞ்ஞருமல்லர்
கொடுப்பவர்முன்புகொடேலெனநின்று
தடுப்பவரேகபகைதம்மையுமன்னர்
கெடுப்பவரன்னதொர்கேடிலையென்றான். (௩௧)

கட்டுரையிற்றமகைத்துளபோழ்தே
இட்டிசைகொண்டறனெய்தமுயன்றோர்
உட்டெறுவெம்பகையாவதுலோபம்
விட்டிடவென்றுவிலக்கினர்தாமே. (௩௨)

---

27. கனக்கரியான் - மேகம்போலுங் கரியமேனியன்.

28. தக்குழியீதலே நன்றெனபதுபற்றி 'உன்னியதான முயர்ந்தவர் கொள்க' என்றார்.

29. வெள்ளியை வெள்ளியென்னும் பெயரையுடைய, எனவும் வெள் ளறிவையுடைய எனவு மிருபொருள்படநின்றது நேரே ஆசிரியனாகலின்சிலே டையாகக் கூறினன். கொள்ளுதல்தீது கொடுப்பது நன்று என்பதனை 'நல் லாறெனினுங் கொளறீது மேலுலகமில்லெனினு மீதலே நன்று' என்ற குறட் பொருளை யுட்கொண்டது.

30. செத்தாரின்வேறல்லாராதலின் 'எந்தியகைகொடிரந்தவர் வீய்ந்தவ' ரென்றும்புகழுடம்போ டழியாதிருப்பது கருதி வீய்ந்தவரேனும் ஈந்தவரல்ல திருந்தவர்யாரே' யென்றுங்கூறினர்.

32. உலோபம் - ஒருவர்க்கிருக்கினிருமையும் கெடுக்குமாயுதமென்க.

வேறு.

எடுக்கொருவருக்கொருவரீவதனின்முன்னே
தடுப்பதுநினக்கிதழகோதகைவில்வெள்ளி
கொடுப்பதுவிலக்குகொடியோயுனதுசுற்றம்
உடுப்பதுவுமுண்பதுவுமின்றிவிடுகின்றாய். (௩௩)

வேறு.

முடியவிம்மொழியெலாமொழிந்துமந்திரி
கொடியனென்றுரைத்தசொலொன்றுங்கொண்டிலன்
அடிபொருமூன்றுநீயளந்துகொள்கென
நெடியவன்குறியகைநீரினீட்டினான். (௩௪)

கயந்தருநறும்புனல்கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ்குறளன்பார்த்தெதிர்
வியந்தவர்வெருக்கொளவிசும்பினோங்கினான்
உயர்ந்தவர்க்குதவியவுதவியொப்பவே. (௩௫)

நின்றகான்மண்ணெலா நிரப்பியப்புறம்
சென்றுபாவிற்றிலேசிறிதுபாரெனு
ஒன்றவானகமெலாமொடுக்கியும்பரை
வென்றகால்மீண்டதுவெளிபெறாமையே. (௩௬)

உலகெலாமுள்ளடியடக்கியோரடிக்
கலகிலாதவ்வடிக்கன்பன்மெய்யதாம்
இலகுலாந்துழாய்முடியேகநாயகன்
சிலகுலாந்தோளினைச்சிறியன்சாலவே. (௩௭)

உரியதிந்திரற்கிதென்றுலகநீந்துபோய்
விரிதிரைப்பாற்கடற்பள்ளிமேவினான்
கரியவனுலகெலாங்கடந்ததாளிணை
திருமகள்கரந்தொடச்சிவந்துகாட்டவே. (௩௮)

ஆதலாலறுவினையறுக்குமாரிய
காதலாற்கண்டவர்பிறவிகாண்குறார்
வேதநான்முறைமையால்வேள்விமுற்றுவேற்
கீதலாதில்லேவேறிருக்கற்பாலதே. (௩௯)

ஈண்டிருந்தியற்றுவென்யாகம்யானெனு
நீண்டபூம்பழுவத்துநெறியினெய்திப்பின்

33. கொடுப்பதுவிலக்கு கொடியோயெனபதனை 'கெடுப்ப தழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ முண்பதூஉ மின்றிக்கெடும்' என்பதனொடு நோக்க.

35. புதுப்புனலென்றது கருதி 'கயந்தருநறும்புன லென்றார்.

வேண்டுவகொண்டுதன்வேள்விமேவினான்
காண்டகுகுமரரைக்காவலேவியே. (௪0)

எண்ணுதற்காக்கரிதிரண்டுமூன்றுநாள்
விண்ணவர்க்காக்கியமுனிவன்வேள்வியை
மண்ணினைக்காக்கின்றமன்னன்மைந்தர்கள்
கண்ணினைக்காக்கின்றவிமையிற்காத்தனர். (௪௧)

காத்தனர்திரிகின்றகாளைவீரரில்
மூத்தவன்முழுதுணர்முனியைமுன்னிநீ
தீத்தொழிலியற்றுவரென்றதீயவர்
எத்தருங்குணத்தினாய்வருவதென்றென்றான். (௪௨)

வார்த்தைமாறுரைத்திலன்முனிவன்மௌனியாய்ப்
போர்த்தொழிற்குமரனுர்தொழுதுபோந்தபின்
பார்த்தனன்விசும்பினைப்பருவமேகம்போல்
ஆர்த்தனரிடித்தனராசனியஞ்சவே. (௪௩)

எய்தனரெறிந்தனரெறியுநீருமாப்
பெய்தனர்பெருவரைபிடுங்கிவீசினர்
வைதனர்தெழித்தனர்மழுக்கொண்டோச்சினர்
செய்தனரொன்றலதீயமாயமே. (௪௪)

ஊனகுபடைக்கலமுருத்துவீசின
கானகமறைத்தனகால்மாரிபோல்
மீனகுதிரைக்கடல்விசும்புபோர்த்தென
வானகமறைத்தனவளைந்தசேனையே. (௪௫)

வில்லொடுபகழிவாண்மிடைந்துலாவிடப்
பல்லியங்கடிப்பினினிடிக்கும்பல்படை
ஒல்லெனவுரறியவூழிப்பேர்ச்சியுள்
வல்லைவந்தெழுந்ததோர்மழையும்போன்றவே. (௪௬)

கவருடையெயிற்றினர்கடித்தவாயினர்
துவர்நிறப்பங்கியர்சுழல்கட்டீயினர்
பவர்சடையந்தணன்பணித்ததீயவர்
இவரெனவிலக்குவற்கிராமன்காட்டினான். (௪௭)

---

42. எத்தவருங்குணத்தினாயென்றது - ஈறுதொகுக்கப்பட்டது.
43. பருவமேகம் - கார்காலமேகம்.

கண்டவக்குமரனுங்கடைக்கண்டீயுக
விண்டனைநோக்கித்தன்வில்லைநோக்கினான்
அண்டர்நாயகவினிகாண்டியீண்டவர்
துண்டம்வீழ்வனவெனத்தொழுதுசொல்லினான். (௪௮)

தூமவேலரக்கர்தந்நிணமுஞ்சோரியும்
ஓமவெங்கனலிடைப்புகுமென்றுன்னியத்
தாமரைக்கண்ணனுஞ்சரங்களைகொடு
கோமுனியிருக்கைபோர்க்கூடமாக்கினான். (௪௯)

நஞ்சடவெழுதலுநடுங்கிநாண்மதிச்
செஞ்சடைக்கடவுளையடைபுக்கதேவர்போல்
வஞ்சனையரக்கரைவெருவிமாதவர்
அஞ்சனவண்ணநின்னபயம்யாமென்றார். (௫௦)

கவித்தனன்கரதலங்கலங்கனீரெனச்
செவித்தலநிறுத்தினன்சிலையின்றெப்பநாண்
புவித்தலங்குருதியின்புணரியாக்கினான்
குவித்தனனரக்கர்தஞ்சிரத்தின்குன்றமே. (௫௧)

திருமகனையகன்றெய்வவாளிதான்
வெருவருதாடகைபயந்தவீரர்கள்
இருவரினொருவனைக்கடலினிட்டதங்
கொருவனையந்தகபுரத்திறுய்த்ததே. (௫௨)

துணர்த்தபூந்தொடையலான்பகழிதூவினான்
கணத்திடைவிசும்பினைக்கவித்துத்தூர்த்தலால்
பிணத்திடைநடந்திவர்பிடிப்பரீண்டென
உணர்த்தினரொருவர்முன்னொருவரோடினார். (௫௩)

ஓடினவரக்கரையுருமின்வெங்கணை
கூடினகுறைத்தலைமிறைத்துக்கூத்துநின்
றாடினவலகையுமையன்கீர்த்தியைப்
பாடினபறந்தனபறவைப்பந்தரே. (௫௪)

பந்தரைக்கிழித்தனபரந்தபூமழை
அந்தரதுந்துபிமுழங்கியார்த்தன

52. காந்தருவக்கணை - அக்கினிக்கணை, வாயுக்கணை, இவற்றை முறையே சுபாகு, மாரீசன், இவரையொழித்தற்கு அரக்கர்மேல் விடுத்தலைக்காண்க.
54. குறைத்தலை - கவந்தம்.

இந்திரன்முதலியவமரரீண்டினார்
சுந்தரவில்லியைத்தொழுதுவாழ்த்தினார். (ருரு)

வேறு.

புனிதமாதவராசியின்பூமழைபொழிந்தார்
அனையகானத்துமரங்களுமலர்மழைசொரிந்த
முனியுமவ்வழிவேள்வியைமுறைமையின்முற்றி
இனியசிந்தையனிராமனுக்கினையனவிசைத்தான். (ருசு)

பாக்கியம்மெனக்குளதெனநினைவுறும்பான்மை
போக்கிநிற்கிதுபொருளெனவுணர்கிலென்புவனம்
ஆக்கிமற்றவையகிலமுமணிவயிற்றடக்கிக்
காக்குநீயொருவேள்விகாத்தனையெனுங்கருத்தே. (ருஎ)

என்றுகூறியபின்னரவ்வெழின்மலர்க்கானத்
தன்றுதானுறைந்தருந்தவமுனிவரோடிருந்த
குன்றுபோற்குணத்தானெதிர்கோசலைக்குரிசில்
இன்றியான்செயும்பணியென்கொல்பணியெனவிசைத்தான். (ருஅ)

அரியயான்சொலினையநிற்கரியதொன்றில்லை
பெரியகாரியமுளவவைமுடிப்பதுபின்னர்
விரியும்வார்புனன்மருதஞ்சூழ்மிதிலையர்கோமான்
புரியும்வேள்வியுங்காண்டுநாமெழுகென்றுபோனார். (ருகூ)

ஆக திருவிருத்தம் - சஎஅ.

## கூ-வது-அகலிகைப்படலம்.

அலம்புமாமணியாரத்தோடகிலணிபுளின
நலம்பெய்பூண்முலைநாகிளவஞ்சியாமருங்குற்
புலம்புமேகலைப்புதுமலர்ப்பூம்பசுந்துகிற்
சிலம்புசூழுங்காற்சோணமாந்தெரிவையைச்சேர்ந்தார். (க)

நதிக்குவந்தவரெய்த்துமருணன்றனயனைக்
கதிக்குமுந்துறுகலினமான்றேரொடுங்கதிரோன்

57. 'அருளுமுறையோனுநான்முகனுமிமையோருங் - கூறுனுந்தனியுடம்பா' னாகலின்' புவனமாக்கி மற்றவையனைத்துந் தன்வயிற்றடக்கிக்காக்குநீ' என்றார்.

59. ஈசன்வில்லொடித்தன்முதலிய'மற்றிப்பெரிய காரியமுள' என்றார்.

உதிக்குங்காலையிற்றண்மைசெய்வான்றனதுரிவில்
கொதிக்கும்வெம்மையையாற்றுவான்போற்கடற்குளித்தான். (உ)

கறங்குதண்புனற்கடிநெடுந்தாளுடைக்கமலத்
தறங்கொளுன்மலர்க்கோயில்களிதழ்க்கதவடைப்பப்
பிறங்குதாமரைவனம்விட்டுப்பெடைபொடுகளிவண்
டுறங்குகின்றதோர்நறுமலர்ச்சோலைபுக்குறைந்தார். (ங)

இளையசோலைமற்றியாதெனவிராகவன்வினவ
வினையெலாமறநோற்றவன்விளம்புவான்மேனாள்
தனையரானவர்க்கிரங்கிப்பகாசிபன்றனது
மனையுளாடவம்புரிந்தனளிவடனைவலித்தான். (ச)

அண்டகோளகைக்கப்புறத்தெனையாளுடைய
கொண்டனள்பதத்தெய்தியோர்விஞ்சையர்கோதை
புண்டரிகமென்பதத்தியைப்புகழ்ந்தனள்புகழு
வண்டறுமதுமாலைகைக்கொடுத்தனண்மகிழ்ந்து. (ரு)

அன்னமாலையையாழிடைப்பிணித்தயனுலகம்
கன்னிமீடலுங்கசட்டுறுமுனியெதிர்காணு
என்னையாளுடைநாயகிக்கிசையெடுப்பவளொன்
றன்னடாளிணைவணங்கிநின்றேற்கதலுமனையாள். (சு)

உலகம்யாவையும்படைத்தளித்துண்டுமிழொருவன்
இலகமார்பகத்திருந்துயிர்யாவையுமீன்ற
திலகவாணுதல்சென்னியிற்சூடியதெரியல்
அலகின்மாமுனிபெறுகெனவளித்தனளாளியால். (எ)

தெய்வநாயகிசென்னியிற்சூடியதெரியல்
ஐயயான்பெறப்புரிந்ததெத்தவமெனவாடி
வெய்யமாமுனிசென்னியிற்சூடியேவினைபோய்
உய்யுமாறிதென்றுவந்துவந்தும்பர்நாடடைந்தான். (அ)

பெய்யுமாமுகில்வெள்ளியம்பிறங்கன்மீப்பிறழும்
செய்யதாமரையாயிரமலர்ந்துசெங்கதிரின்
மொய்யசோதியைமிலைச்சியமுறைமைபோன்றொளிரும்
மெய்யிமைடயிராவதக்களிற்றின்மேல்விளங்க. (கூ)

---

3. அவ்வப்பருவங்களினிமலருமியல்புநோக்கி 'அறங்கொளுன்மல'ரென்றார்.

5. நீள்பதம் - அந்தமிலின்பவீடு. 6. கசட்டுறுமுனி, வெய்யமாமுனி, வெஞ்சொன்மாமுனி, மறநிலாமுனி, தனையொவாதயன, கொடியோன் எனக்கூறியன - துருவாசனை எனக.

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியனங்கன்
சரம்பெய்தூணியிற்றளிரடிநூபுரந்தழைப்பக்
கரும்பையுஞ்சுவைகைப்பித்தகுதலையர்விளரி
நிரம்புபாடலோடாடினர்வீதிகணெருங்க. (கo)

நீலமால்வரைதவழ்தருகதிர்நிலாக்கற்றை
போலவேயிருபுடையினுஞ்சாமரைபுரள
கோலமாமதிகுறைவறநிறைந்தெனகுலாவ
மேல்நிவந்தெனவெள்ளியந்தனிக்குடைவிளங்க. (கக)

தழங்குபேரியுங்குறட்டொடுபாண்டிலுஞ்சங்கும்
வழங்குகம்பலைமங்கலகீதத்தைமறைப்ப
முழங்குநான்மறைமுரிநீர்முழக்கெனவுலகை
விழுங்குமாவரும்விழாவணிக்கண்டுளம்வியந்தான். (கஉ)

தனையொவாதவன்மகிழ்ச்சியால்வாசவன்றன்கை
வனையுமாலையைநீட்டலுந்தோட்டியால்வாங்கித்
துனைவலத்தயிராவதத்தெருத்திடைத்தொடுத்தான்
பனைசெய்கையினிற்பறித்தடிப்படுத்ததப்பகடு. (கங)

கண்டமாமுனிவிழிவழியொழுகுவெங்கனலால்
அண்டகூடமுஞ்சராம்பராவொழியுமென்றழியா
விண்டுநீங்கினர்விண்ணவரிருசுடர்மீண்ட
எண்டிசாமுகமிருண்டதுசுழன்றதெவ்வுலகும். (கச)

புகையெழுந்தனவுயிர்தொறுமெயில்பொடித்தவனில்
நகையெழுந்தனநிவந்தனபுருவநன்னுதலில்
சிகையெழுஞ்சுடர்விழியினனசனியுந்திகைப்ப
மிகையெழுந்திடுசதமகனேகெனவெகுண்டான். (கரு)

பூதநாயகன்புவிமகளுபகன்பொருவில்
வேதநாயகன்மார்பகத்தினிதுவீற்றிருக்கும்
ஆதிநாயகிவிருப்புறுதெரியல்கொண்டனைந்த
மாதராள்வயிற்பெற்றனென்முயன்றமாதவத்தால். (கசு)

இன்றுநின்பெருஞ்செல்விகண்டுவகையினீந்த
மன்றலந்தொடையிகழ்ந்தனைநினதுமாநிதியும்
ஒன்றலாதபல்வளங்களுமுவரிபுக்கொளிப்பக்
குன்றிநீதுயருறுகெனவுரைத்தனன்கொடியோன். (கஎ)

---

12. விழுங்குமாறு என்பது கடைக்குறைந்துநின்றது.
13. பனைசெய்கை என்புழிசெய உவமவுருபு.

அரமடந்தையர்கற்பகநவநிதியமிர்தம்
சுரபிவாம்பரிமதமலைமுதலியதொடக்கத்
தொருபெரும்பொருளின்றியேயுவரிபுக்கொளிப்ப
வெருவியோடினவெண்ணெய்வாழ்கண்ணன்மேவாரின். (கஅ)

வெய்யமாமுனிவெகுளியால்விண்ணகமுதலா
வையம்யாவையும்வறுமைநோய்நலிதரவானோர்
தையல்பாகனுஞ்சதுமுகக்கடவுளுங்கூடிச்
செய்யதாமரைத்திருமறுமார்பனைச்சேர்ந்தார். (கக)

வெஞ்சொன்மாமுனிவெகுளியால்விளைந்தமைவிளம்பிக்
கஞ்சநாண்மலர்க்கிழவனுங்கடவுளர்பிறரும்
தஞ்சமில்லைநின்சரணமேசரணெனச்சலியா
தஞ்சலஞ்சலென்றுரைத்தனனுலகெலாமளந்தோன். (உ0)

மத்துமந்தரம்வாசுகிகடைகயிறடைதூண்
மெத்துச்சந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ள
கொத்திரண்டுபால்வலிப்பவரோடதிகொடுத்து
கத்துவாரிதிமறுகுறவமிழ்தெழக்கடைமின். (உக)

யாமுமவ்வயின்வருதுநீர்கதுமெனவெழுந்து
போமினென்றருள்புரிதலுமிறைஞ்சினர்புகழ்ந்தார்
நாமமின்றெனக்குனித்தனர்நல்குரவொழிந்த
தாமெனும்பெருங்களிதுளக்குறுதலாலமரர். (உஉ)

மலைபிடுங்கினர்வாசுகிபிணித்தனர்மதியம்
நிலைபெறும்படிநட்டனரோதிடநிறைத்தார்
அலைபெறும்படிபயோததிகடைந்தனரவனி
நிலைதளர்ந்திடவனந்தனுங்கீழுறநெளித்தான். (உங)

திறல்கொளாமையாய்முதுகினின்மந்தரந்திரிய
விரல்கொளாயிரந்தடக்கைகள்பரப்பிமீவலிப்ப
மறனிலாமுனிவெகுளியின்மடிந்தனவரனை
அறனிலாமனத்தடையலாகெடுந்தகைபமைத்தான். (உச)

18. சுரபி-காமதேனு. வாம்பரி என்றது - உச்சைசிரவத்தை, மதமலை ஐராவதம்.

22. நாம - அச்சம் அது அம்மு முச்சாரியை பெற்றது.

24. அறன் இலாமனத்து அடையலா நெடுந்தகை என்றது திருமாலை அறன் நில்லாமனத்தெனக் கோடலுமமையும்.

இறந்துநீங்கினயாவையுமெம்பிரானருளாற்
பிறந்தவவ்வயிற்சுராசுரர்தங்களிற்பிணங்கச்
சிறந்தமோகினிமடந்தையாலவுணர்தஞ்செய்கை
துறந்துமாண்டனராரமிர்தமரர்கள்துய்த்தார். (உரு)

வெருவுமாலமும்பிறையும்வெவ்விடையவற்கீந்து
தருவும்வேறுளதகைமையுஞ்சதமகற்கருளி
மருவுதொல்பெருவளங்களும்வேறுறவழங்கித்
திருவுமாரமுமணிந்தனன்சீதரமூர்த்தி. (உசு)

அந்தவேலையிற்றிதிபெருந்துயருழந்தழிவாள்
வந்துகாசிபன்மலரடிவணங்கியென்மைந்தர்
இந்திராதியர்புணர்ப்பினாலிறந்தனரெனக்கோர்
மைந்தனீயருளவர்தமைமுடித்தலுக்கென்றாள். (உஎ)

என்றுகூறலுமகவுனக்களித்தனமினிநீ
சென்றுபாரிடைப்பருவமோராயிரந்தீர
நின்றுமாதவம்புரிதியேனினைவுமுற்றுதியென்
றன்றுகூறிடப்புரிந்தனளருந்தவமனையாள். (உஅ)

கேட்டவாசவனன்னவட்கடிமையிற்கிடைத்து
வாட்டமாதவத்துணர்ந்தவள்வயிற்றுறுமகவை
வீட்டுவேயெழுகூறுசெய்திடுதலும்விம்மி
நாட்டநீர்தரமருத்தெனுநாமமுனவின்றான். (உகூ)

ஆயதிவ்விடமவ்விடமவிர்மதியணிந்த
தூயவன்றனக்கரிவயிற்றோன்றியதொல்லை
வாயுவும்புனற்கங்கையும்பொறுக்கலாவலத்த
சேய்வளர்ந்தருள்சரவணமென்பதுந்தெரித்தான். (௩௦)

காலன்மேனியிற்கருகிருள்கடிந்துலகளிப்பான்
நீலவார்கலித்தேரொடுதிறைகதிர்க்கடவுள்
மாலின்மாமணியுந்தியினயனொடுவந்த
மூலதாமரைமுழுமலர்முளைத்தெனமுளைத்தான். (௩க)

26. வேறுளதகைமையுமென்றது சிந்தாமணி காமதேனு அமுதம் ஐராவத முதலியனவென்க.

28. பருவம் - ஆண்டு. 30. அரிவை ஈண்டு மலையரையன்மகள். சேய்-முருகன்.

அங்குநின்றெழுந்தயன்முதன்மூவருமனையார்
செங்கணேற்றவன்செறிசடைப்பழுவத்தினிறைதேன்
பொங்குகொன்றையீர்த்தொழுகலாற்பொன்னியைப்பொருவும்
கங்கையென்னுமக்கரைபொருதிருநதிகண்டார். (௩௨)

இந்தமாநதிக்குற்றுளதகைமையயாவும்
எந்தைகூறுகென்றிராகவன்வினவுறவெனையாள்
மைந்தநின்றிருமரபுளானயோத்திமாநகர்வாழ்
விந்தைசேர்புயன்சகரனெம்மேதினிபுரந்தோன். (௩௩)

விறல்கொள்வேந்தனுக்குரியவாிருவரில்விதர்ப்பை
பொறையினகில்கிவசமஞ்சனென்றொருபுதல்வன்
பறவைவேந்தனுக்கிளையமென்சுமதிமுற்பயந்த
அறனின்மைந்தராறயுதர்மற்றஞ்சுமானவன்சேய். (௩௪)

திண்டிறற்புனைசகரனுந்தனையர்சேவகந்தான்
கண்டுமுற்றியவயமகம்புரிதலுங்கனன்று
வண்டுதுற்றதார்வாசவற்குணர்த்தினர்வானோர்
ஒண்டிறற்பரிகபிலனதிடையினிலொளித்தான். (௩௫)

வாவுவாசியின்சென்றனனஞ்சுமான்மறுகிப்
பூவினேரிடமின்றிபோநாடினன்புகுந்து
தேவர்கோமகன்காந்தமையறிந்திலன்திகைத்து
மேவுதாதைதன்றாதைபாலுரைத்தனன்மீண்டு. (௩௬)

கேட்டவேந்தனுமதலையர்க்கம்மொழிகிளத்த
வாட்டமீக்கொளச்சகரர்கள்வடவையின்மறுகி
நாட்டம்வெங்கனல்பொழிதரநானிலந்தடவித்
தோட்டுநுங்கினர்புவியினைப்பாதலந்தோன்ற. (௩௭)

நூறியோசனையகலமுமாழமுநுடங்கக்
கூறுசெய்தனரென்பரால்வடகுணதிசையின்
ஏறுமாதவக்கபிலனின்வெளிகண்டெரியிற்
சீறிவைதனர்செருக்கினர்நெருக்கினர்செறுத்தார். (௩௮)

32. பழுவம் - காடு. பொன்னியைப்பொருவுங் கங்கை என்றார். கங்கையிற்புனிதமாயகாவிரி எனப்பெரியாரும். பனித்தலினென்க.

34. ஆறயுதர் அறுபதினாயிரம்பேர். ஆயுதம் - பதினாயிரம். 35. அயமகம் - பரிமேதம், கபிலனதிடையினில் எனவருபின் மேனுருபுவந்தமையை 'நிலவார் நிலமிசைமேல்' எனவருதலானுமமைத்துக்கொள்க, அயம் - குதிரை. மேதம் - கொலை.

36. தாதைதன்றாதையென்றதுசகரனை. 37. நுங்குதல் - விழுங்குதல்,

மூளும்வெஞ்சினத்தருந்தவன்முனிந்தெரிவிழிப்பப்
பூளைசூடிதன்னகையினிலெயில்பொடித்தனபோல்
ஆளுமைந்தராறயுதருஞ்சாம்பராயவிந்தார்
வேள்விகண்டநல்வேந்தனுக்குரைத்தனர்வேயர். (௩௯)

உழைத்துவெந்துயர்க்கிறுகாண்கிலனுணர்வொழியா
தழைத்துமைந்தனன்மைந்தனையவர்கழிந்தனரேல்
இழைத்தவேள்வியின்றிழப்பதோவெனவவனெழுந்து
தழைத்தமாதவக்கபிலன்வாழ்பாதலஞ்சார்ந்தான். (௪௦)

விண்டுநீங்கினருடலுகுபிறங்கல்வெண்ணீறு
கண்டுதுண்ணெனுமனத்தினன்கபிலமாமுனிதன்
புண்டரீகமென்றுடொழுதெழுந்தனன்புகலக்
கொண்டுபோகநின்னிவுளியென்றுற்றதுங்குறித்தான். (௪௧)

பழுதிலாதவனுரைத்தசொற்கேட்டலும்பரிவால்
தொழுதுவாம்பரிகொணர்ந்தவிசுரர்களுக்கியா
முழுதும்வேள்வியைமுற்றுவித்தரசனுமுடிந்தான்
எழுதுகீர்த்தியாய்மைந்தனுக்கரசியலீந்து. (௪௨)

சகரர்தொட்டலாற்சாகரமெனப்பெயர்தழைப்ப
மகரவாரிதிசிறந்ததுமகிதலமுழுதும்
நிகரின்மைந்தனேபுரந்தனனிவனெடுமரபில்
பகிரதன்னெனும்பார்த்திபன்வந்தனன்பரிவால். (௪௩)

உலகம்யாவையும்பொதுவறத்திகிரியையுருட்டி
இலகுமன்னவனிருந்துழியிறந்தமைவினவ
அலகின்முன்முனியுரைத்திடக்கேட்டனனரசன்
திலகமண்ணுறவணங்கிநின்றொருமொழிசெப்பும். (௪௪)

கொடியமாமுனிவெகுளியின்மடிந்தவெங்குரவர்
முடியநீணிரயத்தினிலழுந்திடுமுறைமை
கடியுமாறெனக்கருந்தவமதற்குறுகருமம்
அடிகள்சொற்றுகவென்றலுமந்தணனறைவான். (௪௫)

---

39. பூளைசூடி தன்னகையினி லெயில்பொடித்தனபோல் - சிவபிரானது நகையாற் புரம்பொடிபடுத்தமைபோல்.

42. முற்றத்துறந்தமுனிவரும் விரும்புபுகழினையுடையனாகலின். இராமனை எழுதுகீர்த்தியாயென்றார்.

45. கொடியமாமுனி ஈண்டு கபிலர்.

வையமாளுடைமன்னவர்மன்னவமடிந்தோர்
உய்யநீடவமொழிவறுபகலெலாமொருங்கே
செய்யதாண்மலர்க்கிழவனைநோக்கிநீசெய்தி
கையலென்றினிதுரைத்தனனவைபறுமுனிவன். (சகூ)

ஞாலம்யாவையுஞ்சுமந்திரன்றன்வயினல்கிக்
கோலுமாதவத்திமகிரிமருங்கினிற்குறுகிக்
காலமோர்பதினாயிரமருந்தவங்கழிப்ப
மூலமாமறைமுழுமுதற்கிழவன்முந்தினனே. (சஎ)

நின்பெருந்தவம்வியந்தனம்நினதுநீள்குரவர்
முன்பிறந்தனராருந்தவன்முனிவினாதலினால்
மன்பெரும்புவியதனில்வானதிகடிதளுகி
என்புநீதாபுமேலிருங்கதிபெறுவரென்றிசைத்தான். (சஅ)

மாகநன்னதிபுவியிடைவருகின்மற்றவடன்
வேகமாற்றுதல்கண்ணுதற்கன்றிவேறரிதால்
தோகைபாகனைநோக்கியருந்தவத்தொடங்கென்
றேகினானுலகனைத்துமெவ்வுயிர்களுமீந்தான். (சகூ)

மங்கைபாகனைநோக்கிமுன்மொழிந்தனவருடம்
தங்குமாதவம்புரிதலுந்தழுவிறக்கடவுள்
அங்குவந்துநின்கருத்தினைமுடித்துமென்றகன்றான்
கங்கையைத்தொழக்காலமையாயிரங்கழித்தான். (ருO)

ஒருமடக்கொடியாகிவந்துனதுமாதவமென்
பொருபுனற்கொடிவரினவள்வேகமார்பொறுப்பார்
அருளுரைத்தசொல்லினைதமற்றின்னுமீயறிந்து
பெருகுநற்றவம்புரியெனவாநதிபெயர்ந்தாள். (ருக)

காந்தைமத்தமோடெருக்கலர்கூவிளைகடுக்கை
நிரந்தபொற்சடைநின்மலக்கொழுந்தினைநினையா
அரந்தையுற்றவனிரண்டரையாயிரமாண்டு
புரிந்துநற்றவம்பொலிதரவரைமகள்புனிதன். (ரு௨)

எதிர்ந்துநின்னினைவென்னெனவிறைஞ்சியெம்பெரும
அதிர்ந்துகங்கையீதறைந்தனளென்றலுமஞ்சேல்
பிதிர்ந்திடாவகைகாத்துமென்றேகியபின்னை
முதிர்ந்தமாதவமிரண்டரையாயிரமுடித்தான். (ருங)

50. காலம் - ஈண்டு வருடத்தை.
52. அநாதிமலமுத்தனென்பதுபற்றி நின்மலக்கொழுந்தென்றார்.

பெருகுநீரொடுபூதியும்வாயுவும்பிறங்கு
உருகும்வெங்கதிரொளியையுந்துய்த்துமற்றதையும்
பருகலின்றியுமுப்பதினாயிரம்பருவம்
முருகுகாதலின்மன்னவனருந்தவமுயன்றான். (௫௪)

உந்தியம்புயத்துதித்தவனுறைதருமுலகும்
இந்திராதியருலகமுநடுக்குறவிரைந்து
வந்துதோன்றினள்வரநதிமலைமகள்கொழுநன்
சிந்திடாதொருசடையினிற்கரந்தனன்சேர. (௫௫)

புன்னுனித்தருபனியெனவரநதிபுனிதன்
சென்னியிற்கரந்தொளிதரவணங்கினன்திகைத்து
மன்னனிற்றலும்வருந்தனஞ்சடையன்வானதியின்
றென்னவிட்டனனொருசிறிதவனிபோந்திழிந்தாள். (௫௬)

இழிந்தகங்கைமுன்மன்னவன்விரைவொடுமேகக்
கழிந்தமன்னவர்கதிபெறமுடுகியகதியால்
அழுந்துமாதவச்சன்னுவின்வேள்வியையழிப்பக்
கொழுந்துவிட்டெரிவெகுளியன்குடங்கையிற்கொள்ளா. (௫௭)

உண்டுவந்தனன்மறைமுனிக்கணங்கள்கண்டுவப்ப
கண்டுவேந்தனும்வணங்கிமுன்னிகழ்ந்தனகழறக்
கொண்டுபோகெனச்செவிவழிகொடுத்தனன்குதித்து
விண்டுநீங்கினருடனுகுபொடியின்மேவினளே. (௫௮)

நிரயமுற்றியசகரர்கணெடுங்கதிசெல்ல
விரைமலர்ப்பொழிந்தார்த்தனவிண்ணவர்குழாங்கள்
முரசமுற்றியபல்லியமுறைமுறைமுழங்க
அரசனப்பொழுதணிமதிலயோத்திமீண்டடைந்தான். (௫௯)

அண்டகோளகைப்புறத்ததாயகிலமன்றளந்த
புண்டரீகமென்பதத்திடைப்பிறந்துபூமகனார்
கொண்டதீர்த்தமாயரன்கொளப்பகிரதன்கொணர
மண்டலத்துவந்தடைந்ததிம்மாநதிமைந்த. (௬0)

சகரர்தம்பொருட்டருந்தவம்பெரும்பகல்தள்ளிப்
பகிரதன்கொணர்ந்திடுதலாற்பகிரதியாகி

56. கரந்தொளிதர - ஒருபொருட்பன்மொழி.

59. நெடுங்கதி - பரங்கதி.

மகிதலத்திடைச்சன்னுவின்செவிவழிவாலால்
நிகரில்சானவியெனப்பெயர்படைத்ததிந்நீத்தம். (௬௧)

என்றுகூறலும்வியப்பினொடுவந்தனரிறைஞ்சிச்
சென்றுதீர்ந்தனர்கங்கையைவிசாலைவாழ்சிகரக்
குன்றுபோற்புயத்தரசன்வந்தடியிணைகுறுக
நின்றுநல்லுரைவிளம்பமற்றவ்வயினீங்கா. (௬௨)

பள்ளிநீங்கியபங்கயப்பழனநன்னுரை
வெள்ளவான்களைகளைவுறுகடைசியர்மிளிர்ந்த
கள்ளவாணெடுங்கண்ணிழல்கயலெனக்கருதா
அள்ளிநாணுறுமகன்பணைமிதிலைநாடடைந்தார். (௬௩)

வரம்பில்வான்சிறைமதகுகண்முழவொலிவழங்க
அரும்புநாண்மலரசோகங்களலர்விளக்கெடுப்ப
நரம்பினன்றதேன்றுரைகொணாறுமலர்யாழின்
சுரும்புபாண்செயத்தோகைநின்றாடுவசோலை. (௬௪)

பட்டவாணுதன்மடந்தையர்பார்ப்பெனுந்தூதால்
எட்டவாதரித்துழல்பவரிதயங்கள்வெறுப்ப
வட்டநாண்மரைமலரின்மேல்வயலிடைமள்ளர்
கட்டகாவியங்கட்கடைகழிப்பனகழனி. (௬௫)

தூவியன்னந்தமினமென்றுநடைகண்டுதொடரக்
கூவுமென்குயிற்குதலையர்குடைந்ததண்புனல்வாய்
ஓவில்குங்குமச்சுவடுறவொன்றொடொன்றாடி
பூவுறங்கினும்புள்ளுறங்காதனபொய்கை. (௬௬)

முறையினின்முதுமேதியின்முலைவழிபாலுந்
துறையினின்றுயர்மாங்கனிதூங்கியசாறும்
அறையுமென்கரும்பாடியவமுதமுமழிதே
நறையுமல்லதுநளிர்புனல்பெருகலாநதிகள். (௬௭)

இழைக்குநுண்ணிடையிடைதரமுகடுயர்கொங்கை
மழைக்கண்மங்கையரரங்கினில்வயிரியர்முழவம்
முழக்குமின்னிசைவெருவியமோட்டிளமூரி
உழக்கவாளைகள்பாளையிற்குதிப்பனவோடை (௬௮)

65. பார்ப்பு - பார்வை. மரை முதற்குறைந்து நின்றது.
66. பூவுறங்கினும் - மலர் குவியினும். பூ என்றது தாமரை மலரை. அது பூவினிற் சிறந்தமைப்பற்றி என்க. பூவென்பது பொறிவாழ்பூவே.
68. மூரி - எருமை.

படைநெடுங்கண்வாளுறைபுகப்படர்புனன்மூழ்கிக்
கடையமுன்கடற்செழுந்திருவெழும்படிகாட்டி
மிடையும்வெள்வளைபுள்ளொடுமொலிப்பமெல்லியலார்
குடையவண்டினங்கடிமலர்குடைவனகுளங்கள். (சுகூ)

இனையநாட்டினையினிதுசென்றிஞ்சிசூழ்மிதிலை
புனையுநீள்கொடிப்புரிசையின்புறத்துவந்திறுத்தார்
மனையின்மாட்சியையழித்திழிமாதவப்பன்னி
கனையுமேட்டுயர்கருங்கலோர்வெள்ளிடைக்கண்டார். (எ௦)

கண்டகன்மிசைக்காகுத்தன்கழற்றுகள்கதுவ
உண்டபேதமைமயக்கறவேறுபட்டுருவங்
கொண்டுமெய்புணர்பவன்கழல்கூடியதொப்பப்
பண்டைவண்ணமாய்நின்றனண்மாமுனிபணிப்பான். (எக)

வேறு.

மாயிருவிசும்பிற்கங்கைமண்மிசையிழித்தோன்மைந்த
மேயினவுவகையோடுமின்னெனவொதுங்கிநின்றாள்
தீவினைநயந்துசெய்ததேவர்கோன்றனக்குச்செங்கண்
ஆயிரமளித்தோன்பன்னியகலிகையாகுமென்றான். (எ௨)

பொன்னையேய்சடையான்கூறக்கேட்டலும்பூமிகேள்வன்
என்னையேயென்னையேயிவ்வுலகியலிருந்தவண்ணம்
முன்னையூழ்வினையினாலோநடுவொன்றுமுடிந்ததுண்டோ
அன்னையேயனையாட்கிவ்வாறடுத்தவாறருளுகென்றான். (எ௩)

அவ்வுரையிராமன்கூறவறிஞனுமவனைநோக்கிக்
கெவ்வியோய்கேட்டிமேனாள்செறிசுடர்க்குலிசத்தண்ணல்
அவ்வியமவித்தசிந்தைமுனிவனையற்றநோக்கி
நவ்விபோல்விழியினாடன்வனமுலைகணுகலுற்றான். (எச)

தையலாணயனவேலுமன்மதன்சரமும்பாய
உய்யலாமுறுதிநாடியுழல்பவனொருநாளுற்ற

69. குளங்களின் கண் மாதர்குடையுந்தோறும் விழிப்பதின்மையான் படைநெடுங்கண் வாளுறை புகப்படர்புனன் மூழ்கியென்றும், அதன்கண் மூழ்கி யெழுதலைக்கடையமுன் கடற்செழுந்திரு வெழும்படி காட்டி என்றுங் கூறினார்.

71. பேதைமை மயக்கென்றது அறியாமையாகிய மயக்கத்தை. வேறுபட்டுருவங்கொண்டு - திவ்வியதேஹிகளாகி. திவ்யதேகிகள் - நித்தியசூரிகள்.

72. மண்மிசை யிழித்தோன் - பகீரதனை.

74. அவ்வியமவித்தசிந்தை முனிவனென்றது கோதமனை.

மையலாலறிவுநீங்கிமாமுனிக்கற்றஞ்செய்து
பொய்யிலாவுள்ளத்தான்றனுவருமேகொண்டுபுக்கான். (எரு)

புக்கவளோடுங்காமப்புதுமணமதுவின்றேறல்
ஒக்கவுண்டிருத்தலோடுமுணர்ந்தனருணர்ந்தபின்னுந்
தக்கதன்றென்னவோராடாழ்ந்தனளிருப்பத்தாழா
முக்கணானனையவாற்றன் முனிவனுமுடுகிவந்தான். (எசா)

சரந்தருசாபமல்லாற்றடுப்பருஞ்சாபம்வல்ல
வரந்தருமுனிவனெய்தவருதலுந்தம்வெருவிமாயா
நிரந்தரமுலகினிற்குநெடும்பழிபூண்டாளின்றாள்
புரந்தரனடுங்கியாங்கோர்பூசையாய்ப்போகலுற்றான். (எஎ)

தீவிழிசிந்தநோக்கிச்செய்ததையுணர்ந்துசெய்ய
தூயவனவனைநின்கைச்சுடுசரமனையசொல்லால்
ஆயிரமாதர்க்குள்ளவறிகுறியுனக்குண்டாகென்
றேயினனவையெலாம்வந்தியைந்தனவிமைப்பின்முன்னம். (எஅ)

எல்லையிறுணமெய்தியாவர்க்குநகைவந்தெய்தப்
புல்லியபழியினோடும்புரந்தரன்போயபின்றை
மெல்லியலாளைநோக்கிவிலைமகளனையநீயுங்
கல்லியலாதியென்றான்கருங்கலாய்மருங்குவீழ்வாள். (எசு)

பிழைத்ததுபொறுத்தலென்றும்பெரியவர்கடனேயென்பர்
அழற்றருங்கடவுளன்னாய்முடிவிதற்கருளுகென்னத்
தழைத்துவண்டிமிருந்தண்டார்த்தசரதராமனென்பான்
கழற்றுகள்கதுவவிந்தக்கல்லுருத்தவிர்தியென்றான். (அ௦)

அந்தவிந்திரனைக்கண்டவமரர்கள்பிரமன்முன்னா
வந்துகோதமனைவேண்டமற்றவைதவிர்த்துமாறாச்
சிந்தையின்முனிவுதீர்ந்துசிறந்தவாயிரங்கண்ணாக்கத்
தந்தமதுலகுபுக்கார்தையலுங்கிடந்தாள்கல்லாய். (அக)

---

76. ஒக்கவுண்டு - இருவர்மனமொன்றுபட்டிருந்தின்பந்துய்த்தல்.

76. முடுகிவருவதற்குக்காரணம் ஞானவுணர்ச்சி.

77. சாபமிரண்டின் முன்னையதுவில்; பின்னையது வெகுண்டு சொல்லல்

78. நின்கைச்சுடுசரமனைய சொல்லால் என்றார் நின்கணையிலக்கொழியாதது போன் றம்முனிவன் மொழியுமன்னதாகலின்.

79. கல்லியலாதியெனச் சபித்தலைக்கூறுவதே முறை. இவ்வாறுகூறாது வேறுபடக் கூறுவாருமுளர்.

80. "பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும்புகழ்" என்பவாகலின் பிழைத்தது பொறுத்தலென்றும் பெரியவர் கடவுளே என்றதென்க.

இவ்வண்ணநிகழ்ந்தவண்ணமினியிந்தவுலகுக்கெல்லாம்
உய்வண்ணமன்றிமற்றோர்துயர்வண்ணமுறுவதுண்டோ
மைவண்ணத்தரக்கிபோரின்மழைவண்ணத்தண்ணலேயுன்
கைவண்ணமங்குகண்டேன்கால்வண்ணமிங்குகண்டேன். (அஉ)

தீதிலாவுதவிசெய்தசேவடிக்கரியசெம்மல்
கோதிலாக்குணத்தான்சொன்னபொருளெலாமனத்திற்கொண்டு
மாதவனருளுண்டாகில்வழிபடர்படருறாதே
போதிநீயென்னையென்றுபொன்னடிவணங்கப்போனாள். (அங)

அருந்தவனுறையுடனையனையவரனுகலோடும்
விருந்தினர்தம்மைக்காணுமெய்ம்முனிவியந்தநெஞ்சன்
பரிந்தெதிர்கொண்டுபுக்குக்கடன்முறைபழுதுறாமற்
புரிந்தபின்காதிசெம்மல்புனிதமாதவனைநோக்கி. (அச)

அஞ்சனவண்ணத்தான்றன்னடித்துகள்கதுவாமுன்னம்
வஞ்சிபோலிடையாண்முன்னைவண்ணத்தளாகிநின்றாள்
நெஞ்சினாற்பிழைப்பிலாளைநீயழைத்திடுகவென்னக்
கஞ்சமாமுனிவனன்னமுனிவனுங்கருத்துட்கொண்டான். (அரு)

குணங்களாலுயர்ந்தவண்ணல்கோதமன்கமலத்தாள்கள்
வணங்கினன்வலங்கொண்டேத்திமாசறுகற்பின்மிக்க
அணங்கினையவன்கையீந்தாண்டருந்தவனோடும்வாச
மணங்கிளர்சோலைநீங்கிமணிமதிற்கிடக்கைகண்டார். (அசு)

ஆக திருவிருத்தம்-ருகூ.

---

82. கைவண்ணம் தாடகை பாலுங் கால்வண்ண மகலிகைபாலுங் கண்டே னென்றமையால், வில்வண்ணமுதலிய பிறவற்றை மேலுங்காண விரும்புகின்றே னெனக் குறிப்பித்தாராயிற்று.

83. தீதிலாவுதவி - முன்னும் பின்னுமாகிய வுதவியை நோக்காது செய்யு முதவி.

84. காதியரசன் மைந்தனாகலின் கோசிகனைக் காதிசெம்மலென்றும் ராஜ ரிஷியென்றுங் கூறுவர்.

# ௧0-வது, மிதிலைக்காட்சிப்படலம்.

மையறுமலரினீங்கியான்செய்மாதவத்தின்வந்து
செய்யவளிருந்தாளென்றுசெழுமணிக்கொடிகளென்னும்
கைகளைநீட்டியந்தக்கடிநகர்கமலச்செங்கண்
ஐயனையொல்லைவாவென்றழைப்பதுபோன்றதம்மா. (௧)

நிரம்பியமாடத்தும்பர் நிரைமணிக்கொடிகளெல்லாம்
தரம்பிறரின்மையுன்னித்தருமமேதூதுசெல்ல
வரம்பில்பேரழகினானை மணஞ்செய்வான்வருகின்றானென்
றரம்பையர்விசும்பினூடேமாடவினுடக்கண்டார். (௨)

தயிருறுமத்திற்காமசரம்படத்தலைப்பட்டீடும்
உயிருறுகாதலாரினொன்றையொன்றொருவகில்லாச்
செயிருறுமனத்தவாகித்தீத்திரள்செங்கண்சிந்த
வயிரவான்மருப்பியானைமலையெனமலையக்கண்டார். (௩)

பகற்கதிர்மறையவானம்பாற்கடல்கடுப்பநீண்ட
துகிற்கொடிமிதிலைமாடத்தும்பரிற்றுவன்றிநின்ற
முகிற்குலந்தடவுந்தோறுநனைவணமுகிலிற்சூழ்ந்த
அகிற்புகைகதுவுந்தோறும்புலர்வனவாடக்கண்டார். (௪)

ஆதரித்தமுதிற்கோற்றெய்த்தவயவமமைக்குந்தன்மை
யாதெனத்திகைக்குமல்லான்மதனற்குமெழுதவொண்ணாச்
சீதையைத்தருதலாலேதிருமகளிருந்தசெய்ய
போதெனப்பொலிந்துதோன்றும்பொன்மதின்மிதிலைபுக்கார். (௫)

சொற்கலைமுனிவனுண்டசுடர்மணிக்கடலுந்துன்னி
அற்கலந்திலங்குபன்மீனரும்பிபவானும்போல
விற்கலைநுதலினாருமைந்தரும்வெறுத்துநீத்த
பொற்கலன்கிடந்தமாடநெடுந்தெருவதனிற்போனார். (௬)

---

2. அழகினுக்கழகு செய்பவளாகலின் வரம்பில்பேரழகினானை என்றதென்க.

3. தயிர்பரைமத்தியாண்டுங் கலக்குதலான் அதனையே காமசரம் பாய்ந்து வருத்தற்குவமைகூறினார்.

5. மதனற்கும் என்புழி நான்காவது மூன்றாவதன் பொருளது, உம்மை உயர்வுசிறப்பு.

6. வில்கலை எனவும், விற்கு அலை எனவும்பிரித்துப்பொருளுரைக்க,

தாறுமாய்தறுகட்குன்றந்தடமதவருவிதாழ்ப்ப
ஆறுமாய்க்கலினமாவிலாழியாலழிந்தோராறுய்ச்
சேறுமாய்த்தேர்களோடத்துகளுமாயொன்றோடொன்று
மாறுமாறாகிவாளாக்கிடக்கிலாமறுகிற்சென்றார். (௭)

தண்டுதலின்றியொன்றித்தலைத்தலைசிறந்தகாதல்
உண்டபின்கலவிப்போரினொசிந்தமென்மகளிரேபோல்
பண்டருகிளவியார்தம்புலவியிற்பரிந்தகோதை
வண்டொடுகிடந்துதேன்சோர்மணிநெடுந்தெருவிற்சென்றார். (௮)

நெய்திரணரம்பிற்றந்தமழலையினியன்றபாடல்
தைவருமகரவீணைதண்ணுமைதழுவித்தூங்கக்
கைவழிநயனஞ்செல்லக்கண்வழிமனமுஞ்செல்ல
ஐயநுண்ணிடையாராடுமாடகவரங்குகண்டார். (௯)

பூசலினெழுந்தவண்டுமருங்கினுக்கிரங்கிப்பொங்க
மாசுறுபிறவிபோலவருவதுபோவதாகிக்
காசறுபவளச்செங்காய்மரகதக்கமுகுபூண்ட
ஊசலின்மகளிர்மைந்தர்சிந்தையோடுலவக்கண்டார். (௧௦)

வரப்பறுமணியும்பொன்னுமாரமுங்கவரிவாலும்
சுரத்திடையகிலும்மஞ்ஞைத்தோகையுந்தும்பிக்கொம்பும்
குரப்பணைநிரப்புமள்ளர்குவிப்புறக்கரைகடோறும்
பரப்பியபொன்னியன்னவாவணம்பலவுங்கண்டார். (௧௧)

வள்ளுகிர்த்தளிர்க்கைநோவமாடகம்பற்றிவார்ந்த
கள்ளெனநரம்புவீக்கிக்கண்ணொடுமனமுங்கூட்டி
வெள்ளியமுறுவறோன்றவிருந்தெனமகளிரீந்த
தெள்விளிப்பாணித்தீந்தேன்செவிமடுத்தினிதுசென்றார். (௧௨)

---

7. தாறுமாய்ப்பது யானைகளாதலின்தாறுமாய்தறுகட் குன்றமென்றார். தறுகட்குன்றமென்றது யானையை, தாறு - இருப்புமுள்.

8. புலவி - ஊடல். 9. கூத்தியர்தாம் கருத்திற் பயின்றபாடலை யாங்கினிடைக்கண்ணானும். அதன்பயனைக் கையானுங் காட்டன் முறைமையான் கைவழிநயனஞ்செல்லக் கண்வழிமனமுஞ்செல்ல என்றார்.

11. மள்ளர் பொன்னிக்கரைகடோறும் பல வேறுதானியங்களைப் பரப்பியவாறுபோல அவ்வாவணங்கிடத்தலினதனையே யுவமைகூறினார்.

12. மனஞ்சென்றவழிக்கண் செல்வதியல்பாதலின் கண்ணொடுமனமுங்கூட்டி என்றதென்க.

கொட்புறுகலினப்பாய்மாகுலான்மகன்முடுக்கிவிட்ட
மட்கலத்திகிரிபோலவாளியின்வருவமேலோர்
நட்பினினிடையறுவாய்ஞானிகளுணர்விஹென்றாய்க்
கட்புலத்திணையவென்றுதெரிவிலதெரியக்கண்டார். (கங)

வாளரம்பொருதவேலுமன்மதன்சிலையும்வண்டின்
கேளொடுகிடந்தநீலச்சுருளுஞ்செங்கிடையுங்கொண்டு
நீளிருங்களங்கநீக்கிநிரைமணிமாடநெற்றிச்
சாளரந்தோறுந்தோன்றுஞ்சந்திரவுதயங்கண்டார். (கச)

பளிக்குவள்ளத்துவார்த்தபசுநறுந்தேறன்மாந்தி
வெளிப்படுநகையவாகிவெறியனமிழற்றுகின்ற
ஒளிப்பினுமொளிக்கவொட்டாவூடலைபுணர்த்துமாபோல்
களிப்பினைபுணர்த்துஞ்செய்விக்கமலங்கள்பலவுங்கண்டார். (கரு)

மெய்வருபோகமொக்கவுடனுண்டுவிலையுங்கொள்ளும்
பையரவல்குலார்தமுள்ளமும்பளிங்கும்போல
மையரிநெடுங்கணோக்கம்படுதலுங்கருகிவந்து
கைபுகச்சிவந்துகாட்டுங்கந்துகம்பலவுங்கண்டார். (கசு)

கடகமுங்குழையும்பூணுமாரமுங்கலிங்கநுண்ணூல்
வடகமுமகரயாழும்வட்டினிகொடுத்துவாசத்
தொடையலங்கோதைசோரப்பளிக்குநாய்சிவப்பத்தொட்டுப்
படைநெங்கண்ணார்வட்டாட்டாடிடம்பலவுங்கண்டார். (கஎ)

பங்கயங்குவளையாம்பல்படர்கொடிவள்ளைநீலம்
செங்கிடைதரங்கங்கெண்டைசினைவராலினையதேம்பத்
தங்கள்வேறுவமையில்லாவவயவந்தழுவிச்சாலும்
மங்கையர்விரும்பியாடும்வாவிகள்பலவுங்கண்டார். (கஅ)

---

13. சுலான் இடைக்குறைந்து நின்றது. குலாலன்மகன் முடுக்கிவிட்ட மட்கலத்திகிரிபோல மேலோர் நட்பினின் இடையறுவாயும், வாளியின்வருவ போல ஞானிகளுணர்விஹென்றாயும், இன்னவெனக்காண்பதரிதாகலின்கட் புலத்திணையவென்று தெரிவில் என்றுங் கூறினர்.

14. செங்கிடை - செவந்தசடை. மாதர் இறைவனைச் சாளரந்தொறுங் காண்டலின் அவர் முகத்தை நோக்கிச் சந்திரவுதயங் கண்டாரென்றார்.

18. பங்கயம், குவளை, ஆம்பல்முதலியன முறையே, முகம், கண், வாய், இடை, காது, கண், இதழ், வயிறு, கணைக்கால், என வுருவகத்தாற் கூறினர். இனைய என்பதனாற் பிறவுறுப்புங்கொள்க.

இயங்குறுபுலன்களங்குமிங்குங்கொண்டேகவேகி
மயங்குபு திரிந்துநின்றுமறுகுறுமுணர்விதென்னப்
புயங்களிற்கலவைச்சாந்தும்புணர்முலைச்சுவடுநீங்காப்
பயங்கெழுகுமரர்வாளாட்டாடிடம்பலவுங்கண்டார். (கக)

வெஞ்சினவுருவிற்றென்னுமேனியர்வேண்டிற்றீயும்
நெஞ்சினரீசன்கண்ணினெருப்புறுவனங்கனன்னர்
செஞ்சிலைக்கரத்தர்மாதர்புலவிகள்திருத்திசேந்த
குஞ்சியர்சூழநின்றமைந்தர்தங்குழாங்கள்கண்டார். (உ0)

வேறு.

பாகொக்குஞ்சொற்பைங்கிளியோடும்பலபேசி
மாகத்தும்பர்மங்கையர்நாணமலர்கொய்யும்
தோகைக்கொம்பினன்னவர்க்கன்னநடைதோற்றுப்
போகக்கண்டுவண்டினமார்க்கும்பொழில்கண்டார். (உக)

உம்பர்க்கேயுமாளிகையோளிநிழல்பாய
இம்பர்த்தோன்றுந்நாகர்தநாட்டினெழில்காட்டிப்
பம்பிப்பொங்குங்கங்கையினாழ்ந்தபடைமன்னன்
அம்பொற்கோயிற்பொன்மதில்சுற்றும்மகழ்கண்டார். (உஉ)

பொன்னின்சோதிபோதினினாற்றம்பொலிவேபோல்
தென்னுண்டேனிற்றீஞ்சுவைசெஞ்சொற்கவியின்பம்
கன்னிம்மாடத்தும்பரின்மாடேகழிபேடோ
டன்னம்மாடுமுன்றுறைகண்டங்கயனின்றார். (உங)

செப்புங்காலைச்செங்கமலத்தோன்முதல்யாரும்
எப்பெண்பாலுங்கொண்டுவமிப்போருவமிக்கும்
அப்பெண்டானேயாயினபோதிங்கயல்வேறோர்
ஒப்பெங்கேகொண்டெவ்வகைநாடியுரைசெய்வோம். (உச)

உமையாளொக்கும்மங்கையருச்சிக்கரம்வைக்கும்
கமையாண்மேனிகண்டவர்காட்சிக்கரைகாணா

---

19. புலன்வழிமனஞ்சென்று திரிதலின் நின்றுமறுகுறுமுணர்விதென்ன என்றதென்க.

20. ஈசன்கண்ணினெருப்புறுவனங்கனென்றார் "உருவளர் காமன்" எனப்பிறருங்கூறுதல் பற்றியென்க.

23. பொன்னிற்சோதியும் போதினினாற்றமும் தேனிற்றீஞ்சுவையும் கவியினின்பமும்போலும் விளங்குபவளாகலி னங்ஙனமுவமங் கூறினர்.

24. உவமிப்போருவமிக்கும் அப்பெண் - திருமாமகளை.

இமையாநாட்டம்பெற்றிலமென்றாரிருகண்ணால்
அமையாதென்றாரந்தரவானத்தவரெல்லாம், (உ௫)

வென்றம்மானைத்தாரயில்வேலுங்கொலைவாளும்
பின்றம்மானப்போர்கயலஞ்சப்பிறழ்கண்ணாள்
குன்றம்மாடக்கோவினளிக்குங்கடலன்றி
அன்றம்மாடத்தும்பரளிக்கும்மமுதன்னாள். (உ௬)

பெருந்தேரல்குற்பெண்ணிவளொப்பாளொருபெண்ணைத்
தருந்தானென்றானன்முகனின்னுந்தரலாமே
அருந்தாவந்தத்தேவரிரந்தாலமிர்தென்னும்
மருந்தேயல்லாதென்னினிநல்கும்மணியாழி. (உ௭)

அனையாண்மேனிகண்டபினண்டத்தரசாளும்
வினையோர்மேவும்மேனகையாதிமிளிர்வேற்கண்
இனையோருள்ளத்தின்னலினோர்தம்முகமென்னும்
பனிதோய்வானின்வெண்மதிக்கென்றும்பகலன்றே. (உ௮)

மலர்மேனின்றிம்மங்கையிவ்வையத்திடைவைகப்
பலகாலுந்தம்மெய்நனிவாடும்படிநோற்றார்
அலகோவில்லாவந்தணரோநல்லறமேயோ
உலகோவானோவும்பர்கொலோவீதுணரேமால். (உ௯)

தன்னேரில்லாமங்கையர்செங்கைத்தளிர்மானே
அன்னேதேனேயாரமிர்தேயென்றடிபோற்ற
முன்னேமுன்னேமொய்ம்மலர்தூவிமுறைசாரப்
பொன்னேசூழும்பூவினறுந்துங்கிப்பொலிகின்றாள். (௩0)

பொன்சேர்மென்காற்கிண்கிணியாரம்புனையாரம்
கொன்சேரல்குன்மேகலைதாங்குங்கொடியன்னார்
தன்சேர்கோலத்தின்னெழில்காணச்சதகோடி
மின்சேவிக்கமின்னரசென்னும்படிநின்றாள். (௩க)

கொல்லும்வேலுங்கூற்றமுமென்னும்மிவையெல்லாம்
வெல்லும்வெல்லும்மென்னமதர்க்கும்விழிகொண்டாள்
சொல்லுந்தன்மைத்தன்றதுகுன்றுஞ்சுவருந்திண்
கல்லும்புல்லுங்கண்டுருகப்பெண்கனிநின்றாள். (௩உ)

---

26. எதுகைநோக்கிவிரிந்துநின்றது.

27. திருமகள் கற்பகமுதலியபொருளை முன்நல்கினமையின் என்னினி நல்குமணியாழி என்றார்.

வேறு.

வெங்களிவிழிக்கொருவிழவுமாயவர்
கண்களிற்காணவேகளிப்புநல்கலான்
மங்கையர்க்கினியதோர்மருந்துமாயவள்
எங்கணுமகற்கினியாவதாங்கொலோ. (௩௩)

இழைகளுங்குழைகளுமின்னமுன்னமே
மழைபொருகண்ணிணைமடந்தைமாரொடும்
பழகியதெனினுமிப்பாவைதோன்றலால்
அழகெனுமணியுமோரழகுபெற்றதே. (௩௪)

எண்ணருநலத்தினாளிணையணின்றுழி
கண்ணொடுகண்ணிணைகௌவியொன்றையொன்
றுண்ணவுநிலைபெறாதுணர்வுமொன்றிட
அண்ணலுநோக்கினானவளுநோக்கினாள். (௩௫)

நோக்கியநோக்கெனுநுதிகொள்வேலிணை
ஆக்கியமதுகையான்றோளினாழ்ந்தன
வீக்கியகனைகழல்வீரன்செங்கணும்
தாக்கணங்கனையவடனத்திற்றைத்தவே. (௩௬)

பருகியநோக்கெனும்பாசத்தாற்பிணித்
தொருவரையொருவர்தம்முள்ளமீர்த்தலால்
வரிசிலையண்ணலும்வாட்கணங்கையும்
இருவருமாறிப்புக்கிதயமெய்தினார். (௩௭)

மருங்கிலாநங்கையும்வசையிலையனும்
ஒருங்கியவிரண்டுடற்குயிரொன்றாயினார்
கருங்கடற்பள்ளியிற்கலவிநீங்கிப்போய்ப்
பிரிந்தவர்கூடினாற்பேசல்வேண்டுமோ. (௩௮)

அந்தமிலழகனையணங்கிலாமையாற்
பைந்தொடியோவியப்பாவைபோன்றனள்

34. இப்பெண்ணரசியழகான அனைத்துமழகெய்தலின் அழகெனுமதுவுமோரழகுபெற்றதே என்றதென்க.

35. இது கண்ணொடு கண்ணிணைநோக்கொக்கின் வாய்சொற்களென்ன பயனுமில' என்னுந்திருக்குறட்பொருளை யுட்கொண்டதென்க.

38. சனகியை இராமனும், இராமனைச் சனகியுங்காண்டன் மாத்திரையிற் பிரிவுநீங்கிக் கூடிய கூட்டத்தை யொத்தலின் கடற்பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்பிரிந்தவர் கூடினாற் பேசவேண்டுமோ என்றார்.

சிந்தையுநிறையுமெய்ந்நலனும்பின்செல
மைந்தனுமுனியொடுமறையப்போயினான். (௩௯)

பிறையெனுநுதலவள்பெண்மையென்படும்
நறைகமழலங்கலானயனகோசரம்
மறைதலுமனமெனுமத்தயானையின்
நிறையெனுமங்குசநிமிர்ந்துபோயதே. (௪௦)

மாலுறவருதலுமனமுமெய்யுந்தன்
னூலுறுமருங்குல்போனுடங்குவாணெடுங்
காலுறுகண்வழிபுகுந்தகாதனோய்
பாலுறுபிரையெனப்பரந்தெங்குமே. (௪௧)

நோமுறுநோய்நிலைநுவலகிற்றிலள்
ஊமரின்மனத்திடையுன்னிவிம்முவாள்
காமனுமொருசரங்கருத்தினெய்தனன்
வேமெரியதனிடைவிறகிட்டென்னவே. (௪௨)

நிழலிடுகுண்டலமதனினெய்யிடா
அழலிடாமிளிர்ந்திடுமயில்கொள்கண்ணினாள்
சுழலிடுகூந்தலுந்துகிலுஞ்சோர்தரத்
தழலிடுவல்லியேபோலச்சாம்பினாள். (௪௩)

தழங்கியகலைகளுநிறையுஞ்சங்கமும்
மழுங்கியவுள்ளமுமறிவுமாமையும்
இழந்தவளிமையவர்கடையயாவையும்
வழங்கியகடலெனவறியளாயினாள். (௪௪)

---

39. நிறையாவது தனக்குள்ளே அடக்கத்தக்கவைகளை யடக்கியிருத்தல். ஆடேக்குணநான்கிலொன்று. நான்காவன—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

40. நிறை என்றது கற்பை, 'கற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறின்' எனப்பிறருங் கூறுதலிப்பெற்றி நோக்கியென்க. பெண்மைக்குணங்கள் நான்காவன—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன.

41. காதனோய் கண்வழிச்சேறல் மயிர்க்கால் வழியாதலின் காலுறு கண்வழி என்றும், பால்பிரையுற்றவழி முழுதும் வியாபித்துத் தயிராகவேறு படல்போற் காதலுற்றுத்தான் வேறுபடலின் பாலுறுபிரையெனப்பரந்தெங் குமே யென்றுங் கூறினார். பிரை குடத்திலுள்ள பாலையுறைவிக்கும் சிறுமோர்த்துளி.

44. கற்பகமுதலிய எல்லாப்பொருள்களும் பாற்கடல் வழங்கிய பிற்றை ஞான்றுவறிய தாயதைக் கலையுநிறையுஞ் சங்கமுமுதலிய விழந்தமைக்குவமங் கூறினார்.

கலங்குழைந்துகநெடுநாணுங்கண்ணற
நலங்குழைதரநகின்முகத்தினைவுண்டு
மலங்குழையெனவுயிர்வருந்திச்சோர்தரப்
பொலங்குழைமயிலைக்கொண்டரிதிற்போயினார். (சரு)

காதொடுங்குழைபொருகயற்கணங்கைதன்
பாதமுங்கரங்களுமணையபல்லவத்
தாதொடுங்குழையொடுமடுத்ததண்பனிச்
சீதநுண்டுளிமலரமளிசேர்த்தினார். (சசு)

நாளறுநறுமலரமளிநண்ணினாள்
பூளைவீபுரைபனிப்புயற்குத்தேம்பிய
தாளதாமரைமலர்தகைந்தபொய்கையும்
வாளராநுங்கியமதியும்போலவே. (சஎ)

மலைமிசைத்தடத்துகுமழைக்கணலிபோல்
முலைமுகட்டுதிர்ந்தனநெடுங்கண்முத்தினம்
சிலைநுதற்கடையுழைசெரிந்தவேர்வுதன்
உலைமுகப்புகைநிமிருயிர்ப்பின்மாய்ந்ததே. (சஅ)

கம்பமில்கொடுமனக்காமவேடன்கை
அம்பொடுசோர்வதோர்மயிலுமன்னவள்
வெம்புறுமனத்தனல்வெதுப்பமென்மலர்க்
கொம்பெனவமளியிற்குழைந்துசாய்ந்தனள். (சகூ)

சொரிந்தனநறுமலர்சுறுக்கொண்டேறின
பொரிந்தனகலவைகள்பொறியிற்சிந்தின
எரிந்தவெங்கனல்சுடவிழையிற்கோத்தநூல்
பரிந்தனகரிந்தனபல்லவங்களே. (ருo)

தாதியர்செவிலியர்தாயர்தௌவையர்
மாதுயருழந்தனர்வீழ்ந்துமாழ்கினர்
யாதுகொலிதுவெனவெண்ணாதேற்றலர்
போதுடனாயினிநீர்சுழற்றிப்போக்கினர். (ருக)

அருகினின்றசைக்கின்றவாலவட்டக்கால்
எரியினைமிகுத்திடவிழையுமாலையும்

---

47. பனிப்புயற்குத்தேம்பிய தாளதாமரை மலர்தகைந்த பொய்கையும் வாளராநுங்கிய மதியும் செவ்வியும் ஒளியுமிழ்த்தல் பற்றி அவற்றையேயுவமங்கூறினார். 49. கானவேடன் எனப் பாடங்கொள்வாருமுண்டு.

கரிகுவதீகுவகனல்வகாட்டலால்
உருகுபொற்பாவையுமொத்துத்தோன்றினுள். (ருஉ)

அல்லினைவகுத்ததோரலங்கற்காடெனும்
வல்லெழுவல்லவோர்மரகதப்பெருங்
கல்லெனுமிருபுயங்கமலங்கண்ணெனும்
வில்லொடுமிழிந்ததோர்மேகமென்னுமால். (ருங)

நெருக்கியுட்புகுந்தருநிறையும்பெண்மையும்
உருக்கியென்னுயிரொடுமுண்டுபோனவன்
பொருப்புறழ்தோள்புணர்புண்ணியத்தது
கருப்புவில்லன்றவன்காமனல்லனே. (ருச)

பெண்வழிநலனொடும்பிறந்தநாணொடும்
எண்வழியுணர்வுநானெங்குங்காண்கிலென்
மண்வழிநடந்தடிவருந்தப்போனவன்
கண்வழிநுழையுமோர்கள்வனேகொலாம். (ருரு)

இந்திரநீலமொத்திருண்டகுஞ்சியும்
சந்திரவதனமுந்தாழ்ந்தகைகளும்
சுந்தரமணிவரைத்தோளுமேயல
முந்தியென்னுயிரையம்முறுவலுண்டதே. (ருசா)

படர்ந்தொளிபரந்துயிர்பருகுமாகமும்
தடந்தருதாமரைத்தாளுமேயல
கடந்தருமதங்கலுழ்களிநல்யானைபோல்
நடந்ததுகிடந்ததென்னுள்ளநண்ணியே. (ருஎ)

உரைசெயிற்றேவர்தம்முலகுளானலன்
விரைசெறிதாமரையிமைக்குமெய்ம்மையால்
வரிசிலைத்தடக்கையன்மார்பினூலினன்
அரசிளங்குமரனேயாகல்வேண்டுமால். (ருஅ)

பிறந்துடைநலநிறைபிணித்தவெந்திரம்
கறங்குபுதிரியுமென்கன்னிமாமதில்

---

53. இரகுநாயகன வில்லொடுஞ்சேறலின் வில்லொடு மிழந்ததோர் மேக மென்னுமென்றார்.

54. பெண்மை கட்புலனாகியவமைதித் தன்மை என்பர்நச்சினார்க்கினியர்.

55. மனத்திற் புகக்கண்வழிச்சேறலின் கண்வழிநுழையுமோர்கள்வனென்றார்.

56. தாழ்ந்தகைகளும் - முழந்தாளளவும் நீண்டு தொங்கும் கைகளும்.

எறிந்தவக்குமரனையின்னுங்கண்ணிற்கண்
டறிந்துயிரிழக்கவுமாகுமேகொலாம். (ருகூ)

என்றிவையினையனவிளம்பும்வந்தெதிர்
நின்றனனவனெனுநீங்கினனெனும்
கன்றியமனத்துறுகாமவேட்கையால்
ஒன்றலபலநினைந்துருகுங்காலையே. (கூ௦)

அன்னமென்னடையவட்கமைந்தகாமத்தீ
தன்னையுஞ்சுடவதுதரிக்கிலாதென
நன்னெடுங்கரங்களைநடுக்கியோடிப்போய்
முன்னைவெங்கதிரவன்கடலின்மூழ்கினன். (கூக)

விரிமலர்த்தென்றலாம்வீசுபாசமும்
எரிநிறச்செக்கருமிருளுங்காட்டலால்
அரியவட்கனறருமந்திமாலைபோங்
கருநிறச்செம்மயிர்க்காலன்றோன்றினன். (கூஉ)

மீதறைபறவையாம்பறையுங்கீழ்விளி
ஓதமென்சிலம்பொடுதிமுதிரச்செக்கரும்
பாதகவிருள்செய்கஞ்சுகமும்பற்றலாற்
சாதகமென்னவுந்தழைத்தமாலையே. (கூ௩)

வேறு.

கயங்கடொன்றுங்கனல்தோய்ந்துகடிநாண்மலரின்விடம்பூசி
இயங்குதென்றன்மன்மதவேளெய்தபுண்ணினிடைநுழைய
உயங்குமுணர்வுநன்னலமுமுருகிச்சோர்வாளுயிருண்ண
வயங்குமாலைவானேக்கியிதுவோகூற்றின்வடிவென்றாள். (கூ௪)

கடலோமழையோமுழுநீலக்கல்லோகாயாநறும்போதோ
படர்பூங்குவளைநாண்மலரோநீலோற்பலமோபானலோ
இடர்சேர்மடவாருயிருண்பதியாதோவென்றுதளர்வாண்முன்
மடல்சேர்தாரானிறம்போலுமந்திமாலைவந்ததுவே. (கூரு)

மைவானிறத்துமீனெயிற்றுவாடையுயிர்ப்பின்வளர்செக்கர்ப்
பைவாயந்திப்படவரவேயென்னுவளைத்துப்பகைத்தியால்
எய்வானொருவன்கையோயானுயிருமொன்றேயினியில்லை
உய்வானுறவிப்பழிபூணவுன்றோடெனக்குப்பகையுண்டோ. (கூகூ)

64. மன்மதவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

ஆலமுலகிற்பரந்ததுவோவாழிகிளர்ந்ததோவவர்தம்
நீலநிறத்தையெல்லோருநினைக்கவதுவாய்நிரம்பியதோ
காலனிறத்தையஞ்சனத்திற்கலந்துகுழைத்துக்காயத்தின்
மேலுநிலத்துமெழுகியதோவிளக்குமிருளாய்விளைந்ததுவே. (கூஎ)

வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கவொருவர்தமைக்காணே
எளியள்பெண்ணென்றிரங்காதேயெல்லியாமத்திருளூடே [ன்
ஒளியம்பெய்யுமன்மதனுருனக்கிம்மாயமுரைத்தாரோ
அளியென்செய்தநீவிளையேயன்றிலாகிவந்தாயோ. (கூஅ)

ஆண்டங்களையாளிளையநினைந்தழுங்கும்வேலையகல்வானம்
தீண்டநிமிர்ந்தபெருங்கோயிற்சீதமணியின்வேதிகைவாய்
நீண்டசோதிநெய்விளக்கம்வெய்யவென்றங்கவைநீக்கித்
தூண்டல்செய்யாமணிவிளக்கின்சுடராலிருளைப்பகல்செய்தார். ()

பெருந்திண்ணெமொல்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பி
விரிந்ததிவலையுதிர்ந்தமணிவிசும்பின்மீனின்மேல்விளங்க [ன்
அருந்தவமரர்கலக்கியநாளமுதநிறைந்தபொற்கலசம்
இருந்ததிடைவந்தெழுந்ததெனவெழுந்ததாழிவெண்டிங்கள். (எ௦)

வண்டாயயனுன்மறைபாடமலர்ந்ததொருதாமரைப்போது
பண்டாலிலையின்மிசைக்கிடந்துபாரும்நீரும்பசித்தான்போல்
உண்டானுந்திக்கடல்பூத்தவோதக்கடலுந்தான்வேறோர்
வெண்டாமரையின்மலர்பூத்ததொத்ததாழிவெண்டிங்கள். (எக)

புள்ளிக்குறியிட்டெனவொண்மீன்பூத்தவானம்பொலிகங்குல்
நள்ளிற்சிறந்தவிருட்பிழம்பைநக்கிநிமிருநிலாக்கற்றை
கிள்ளைக்கிளவிக்கென்ஞுங்கொல்கீழ்பாற்றிசையின்மிசைவைத்த
வெள்ளிக்கும்பத்திளங்கமுகின்பாளைபோன்றுவிரிந்துளதால். ()

விரைசெய்கமலப்பெரும்போதுவிரும்பிப்புகுந்ததிருவினொடும்
குரைசெய்வண்டின்குழாமிரியக்கூம்பிச்சாம்பிக்குவிந்துளதால்
உரைசெய்திகிரிதனையுருட்டியொருகோலோச்சிபுலகாண்ட
அரைசனதுங்கத்தலையெடுத்தகுறும்புபோன்றதரக்காம்பல். ()

---

68. ஒளி என்றது ஒளித்து எனப் பொருள்படுதலைவரிப் புனைபந்தென் புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

71. பாரு நீரும் பசித்தானென்பதற்கு நிலனுங்கடலு முண்டானெனப் பொருள் படல் காண்க.

வண்ணமாலைகைபரப்பியுலகைவளைந்தவிருளெல்லாம், உண்ண வெண்ணித்தண்மதியத்துதயத்தெழுந்தநிலாக்கற்றை, விண்ணுமண்ணுந்திசையனைத்தும்விழுங்கிக்கொண்டவிரிநன்னீர்ப், பண்ணைவெண்ணெய்ச்சடையன்றன்புகழ்போலெங்கும்பரந்துளவால். (எச)

நீத்தமதனின்முளைத்தெழுந்தநெடுவெண்டிங்களெனுந்தச்சன்
மீத்தன்கரங்களவைபரப்பிமிகுவெண்ணிலவாம்வெண்சுதையாற்
காத்தகண்ணன்மணியுந்திக்கமலநாளத்திடைப்பண்டு
பூத்தவண்டம்பழையதென்றுபுதுக்குவானும்போன்றுளதால். ()

நீங்காமாயையவர்தமக்குநிறமேதோற்றப்புறமேபோய்
ஏங்காக்கிடக்குமெறிகடற்குமெனக்குங்கொடியையானுயே
ஓங்காநின்றவிருளாய்வந்துலகைவிழுங்கிமேன்மேலும்
வீங்காநின்றகருநெருப்பினிடையேயெழுந்தவெண்ணெருப்பே. ()

வேறு.

கொடியையல்லைநீயாரையுங்கொல்கிலாய்
மடிவிலின்னமுதத்தொடும்வந்தனை
பிடியின்மென்னடைப்பெண்ணொடென்றுலெனைச்
சுடுதியோகடற்றோன்றியதிங்களே. (எஎ)

மீதுமொய்த்தெழுவெண்ணிலவின்கதிர்
மோதுமத்திகைமென்முலைமேற்பட
ஓதிமப்பெடைவெங்கனலுற்றெனப்
போதுமொய்த்தமளிப்புரண்டாளரோ. (எஅ)

நீக்கமின்றிநிமிர்ந்தநிலாக்கதிர்
தாக்கவெந்துதளர்ந்துசரிந்தனள்
சேக்கையாகிமலர்ந்தசெந்தாமரைப்
பூக்கள்பட்டதப்பூவையும்பட்டனள். (எசு)

வாசமென்கலவைக்களிவாரிமேல்
பூசப்பூசப்புலர்ந்துபுழுங்கினள்
வீசவீசவெதும்பினண்மென்முலை
ஆசைநோய்க்குமருந்துமுண்டாங்கொலோ. (அ௦)

76. கருநெருப்பென்றது இருளை, வெண்ணெருப்பென்றது மதியைகடலின்கண் அமுதத்தோடும் பெண்ணொடுந்தோன்றிய நீ என்னைச்சுடுதல் தக்கதன்றென்பார்.

77. எனைச், சுடுதியோ என்றுனென்க.79. பூக்கள் பட்டது பால்வழுவமைதி.

80. 'தன்னோய்க்குத்தானே மருந்து' என்பவாகலின் ஆசைநோய்க்குமருந்துமுண்டாங்கொலோ என்றார்.

தாயரிற்பரிசேடியர்தாதுகு
வீயரித்தளிர்மெல்லணைமேனியிற்
காயெரிக்கரியக்கரியக்கொணர்ந்
தாயிரத்தினிரட்டியடுக்கினார். (௮௧)

கன்னிநன்னகரிற்கமழ்சேக்கையுள்
அன்னமின்னணமாயினளாயவள்
மின்னின்மின்னியமேனிகண்டானெனச்
சொன்னவண்ணலுக்குற்றதுசொல்லுவாம். (௮௨)

ஏகிமன்னனைக்கண்டெதிர்கொண்டவன்
ஓகையோடுமினிதுகொண்டுய்த்திடப்
போகபூமியிற்பொன்னகரன்னதோர்
மாகமாடத்தனையவர்வைகினார். (௮௩)

வைகுமவ்வழிமாதவம்யாவுமோர்
செய்கைகொண்டுநடந்தெனத்தீதறு
மொய்கொள்வீரன்முளரியந்தாளினால்
மெய்கொண்மங்கையருண்முனிமேவினான். (௮௪)

வந்தெதிர்த்தமுனிவனைவள்ளலுஞ்
சிந்தையாரவணங்கலுஞ்சென்றெதிர்
அந்தமில்குணத்தானெடிதாசிகள்
தந்துகோசிகன்றன்மருங்கெய்தலும். (௮௫)

கோதமன்றருகோமுனிகோசிக
மாதவன்றனைமாமுகநோக்கியிப்
போதுநீயிவட்போதவிப்பூதலம்
ஏதுசெய்ததவமென்றியம்பினான். (௮௬)

பூந்தண்சேக்கைப்புனிதனையேபொரு
வேய்ந்தகேண்மைச்சதானந்தனென்றெனும்
வாய்ந்தமாதவன்மாமுகநோக்கிநூல்
தோய்ந்தசிந்தைக்கௌசிகன்சொல்லுவான். (௮௭)

வடித்தமாதவகேட்டியிவ்வள்ளறன்
இடித்தவெங்குரற்றாடகையாக்கையும்

82. கமழ்சேக்கை - புஷ்பசயனம்.

83. போகபூமி - ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், எமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்.

87. சதானந்தன் - அகலிகைபுத்திரன்.

அடுத்தெதன் வேள்வியும் பின்னன்னை சாபமும்
முடித்தெதன் னெஞ்சத் திடர்முடித் தானென்றான். (அஅ)

என்றுகோசிகன் கூறிட வீறிலா
வன்றபோதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலரி தியாதிந்த
வென்றிவீரர்க் கெனவும் விளம்பிமேல். (அகூ)

வள்ளில் பூவையுமிந் திரநீலமும்
அள்ளல் வேலையு மம்புதசாலமும்
விள்ளும் வீயுடைப் பானுமே வுமெய்
வள்ளல் தன்னை மதிமுக நோக்கியே. (கூo)

நறுமலர்த் தொடை நாயக நானுனக்
கறிவுறுத்துவென் கேளிவ் வருந்தவன்
இறையெனப் புவிக் கிறில் பல்லாண்டெலாம்
முறையினிற் புரந்தே தயருண் முற்றினான். (கூக)

அரசின் வைகிய றனினமைந் துழி
விரசுகானிடைச் சென்றனன் வேட்டைமேல்
உரைசெய் மாதவத்தே தாங்குவசிட்டனும்
பரசுவானவன் பாலணைந் தானரோ. (கூஉ)

வேறு.

அருந்ததி கணவன் வேந்தற் கருங்கடன் முறையினாற்றி
இருந்தருட் டருதியென்ன விருந்துழியினி துநிற்கு
விருந்தினியமைப் பெனென்றுச் சுரபியை விளித்து நீயே
சுரந்தருளமிர்த மென்ன வருண் முறைசுரந்த தன்றே. (கூங)

அறுசுவைத் தாயவுண்டியரசனின் னனிகத்தோடும்
பெறுகெனவளித்து வேந்தோடியாவருந் துய்த்த பின்னர்
நறுமலர்த் தாரும் வாசக் கலவையு நல்கலோடும்
உறுதுயர் தணிந்து மன்னனுய்த் துணர்ந்துரைக்க லுற்றான். (கூச)

மாதவ வெழுந்திலாய் நீ வயப்படைப் படைகட் கெல்லாம்
கோதறுமமிர்த மிக்கோவு தவிய கொள்கை தன்னால்

90. இவையனைத்தும் இவள் வண்ணம் பெறவேண்டலின் மேவுமெய் வள்ளலென்றார்.

94. அறுசுவை - இனிப்பு, கார்ப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. உறுதுயர் - பசியாலும் நடையாலுமடைந்த துயர்.

தீதறுகுணத்தான்மிக்கசெழுமறைதெரிந்தநூலோர்
மேதகுபொருள்களியாவும்வேந்தருக்கெனக்கைதன்னால். (௯௫)

நிற்கிதுதகுவதன்றுண்டருஞ்சுரபிதன்னை
ஏற்கருளென்றலோடுமியம்பலன்யாதும்பின்னர்
வற்கலையுடையென்யானேவழங்கலென்வருவதாகிற்
கொற்கொள்வேலுழவநீயேகொண்டகல்கென்றுகூற. (௯௬)

பணித்ததுபுரிவனென்னுப்பார்த்திபனெழுந்துபொங்கிப்
பிணித்தனன்சுரபிதன்னைப்பெயர்வுழிப்பிணியைவிட்டி
மணித்தடந்தோளினூற்றுக்கொடுத்தியோமறைகள்யாவும்
கணித்தவெம்பெருமவென்னக்கலைமறைமுனிவன்சொல்வான். ()

கொடுத்திலென்யானேமற்றைக்குடைகெழுவேந்தன்றானே
பிடித்தகல்வுற்றதென்னப்பெருஞ்சினங்கதுவநெஞ்சே
டிடித்தெழுமுரசவேந்தன்சேனையையானேயின்று
முடிக்குவென்காண்டியென்றுமெய்ம்மயிர்சிலிர்த்ததன்றே. (௯௮)

பப்பரர்யவனர்சீனர்சோனகர்முதலபல்லோர்
கைப்படையதனினோடுங்கபிலைமாட்டுதித்துவேந்தன்
துப்படைச்சேனையாவுந்தொலைவுறத்துணித்தலோடும்
வெப்புடைக்கொடியமன்னன்றனையர்கள்வெகுண்டுமிக்கார். (௯௯)

சுரபிதன்வலியிதன்றால்சுருதிநூலுணரவல்ல
வரமுனிவஞ்சமென்றுமற்றவன்சிரத்தையின்னே
அரிகுதுமென்னப்பொங்கியடர்த்தனரடரவன்றான்
எரியெழவிழித்தலோடுமிறந்தனர்குமரரெல்லாம். (௧௦௦)

ஐயிருபதின்மர்மைந்தரவிந்தமையரசன்காணூ
நெய்பொழிகனலிற்பொங்கிநெடுங்கொடித்தேர்கடாவிக்
கைதொடர்கணையினோடுங்கார்முகம்வளையவாங்கி
எய்தனன்முனியுந்தன்கைத்தண்டினையெதிர்கவென்றான். (௧௦௧)

கடவுளர்படைகளுருக்கற்றனபடைகள்யாவும்
விடவிடமுனிவன்றண்டம்விழுங்கிமேல்விளங்கல்காணூ
வடவரைவில்லிதன்னைவணங்கினன்வழுத்தலோடும்
அடலுறுபடையொன்றியாவன்னவனகன்றானன்றே. (௧௦௨)

விட்டனன்படையைவேந்தன்விண்ணுளோருலகையெல்லாம்
சுட்டனனென்னவஞ்சித்துளங்கினர்முனியுந்தோன்றிக்

102. வடவரைவில்லி - வடதிசையிலுள்ளனவெல்லாம் வடவரையேயாயினும் வில்லியென்னும் குறிப்பால் மேருவெனப்பட்டது.

கிட்டியபடையையுண்டுகிளர்ந்தனன்கிளருமேனி
முட்டவெம்பொறிகள்சிந்தப்பொருபடைமுரணதிற்றே. (௧௦௩)

கண்டனனரசன்காணாக்கலைமறைமுனிவர்க்கல்லால்
திண்டிறல்வலியுந்தேசுமுளவெனல்சீரிதாமோ
மண்டலமுழுதுங்காக்குமொய்ம்பொருவலியன்றென்று
நீண்டவம்புரியவெண்ணியும்பர்கோன்றிசையையுற்றான். (௧௦௪)

மாண்டமாதவத்தோன்செய்தவலையேமனத்திலெண்ணி
பூண்டமாதவத்தனாகியரசர்கோன்பொலியுநீர்மை
காண்டலுமமரர்வேந்தன்றானுக்குறுகருத்தினோடும்
தூண்டினனரம்பைமாருட்டிலோத்தமைமெனுஞ்சொன்மானை. ()

அன்னவண்மேனிகாணாவனங்கவேள்சரங்கள்பாயத்
தன்னுணர்வழிந்துகாதற்சலதியினழுந்திவேந்தன்
பன்னரும்பகல்தீர்வுற்றுப்பருணிதர்தெரிந்தநூலின்
நன்னயமுணர்ந்தோனாகிநஞ்செனக்கனன்றுநக்கான். (௧௦௬)

விண்முழுதாளிசெய்தவினையெனவெகுண்டுநீபோய்
மண்மகளாதியென்றுமடவரறன்னையேவிக்
கண்மலர்சிவப்பவுள்ளங்கறுப்புறக்கடிதினேகி
எண்மரின்வலியனாயன்றிசைதன்னையுற்றான். (௧௦௭)

தென்றிசையதனைநண்ணிச்செய்தவஞ்செய்யுஞ்செவ்வி
வன்றிறலயோத்திவாழுமன்னவன்றிரிசங்கென்பான்
தன்றனைக்குருவைநண்ணித்தனுவொடுந்துறக்கமெய்த
இன்றெனக்கருளுகென்னவாண்டிறந்தெய்துகென்றான். (௧௦௮)

நினக்கொலாதாகினையநீணிலத்தியாவரேனும்
மனக்கினியானைநாடிவகுப்பல்யான்வேள்வியென்னச்
சினக்கொடுந்திறலோர்முன்னர்த்தேசிகற்பிழைத்துவேறோர்
நினக்கிதனுடிநின்றாய்நீசனாய்விடுதியென்றார். (௧௦௯)

மலருளோன்மைந்தன்மைந்தர்வழங்கியசாபந்தன்னால்
அலரியோன்றானும்நாணும்வடிவிழந்தரசர்கோமான்
புலரியங்கமலம்போலும்பொலிவொரீஇவதனம்பூவிற்
பலருமாங்கிகழ்தற்கொத்தபடிவம்வந்துற்றதன்றே. (௧௧௦)

காதொடுமுடியும்பூணுங்கரியதாங்கனகம்போன்று
தூசொடுமணியுமுந்நூல்தோற்றருந்தோற்றம்போன்று

106. நூலின் நன்னயமுணர்தல் - மாதர்பால் மனங்கலங்காதிருத்தல்.

மாசொடுகருகிமேனிவனப்பழிந்திடவூர்வந்தான்
சீசியென்றியாருமெள்ளத்திகைப்பொடுபழுவஞ்சேர்ந்தான். (ககக)

கானிடைச்சிறிதுவைகல்கழித்தொர்நாட்கௌசிகப்பேர்க்
கோனினிதுறைபுஞ்சோலைகுறுகினன்குறுகவன்னான்
ஈலனீயாவனென்னைநேர்ந்ததிவ்விடையிதென்ன
மேனிகழ்பொருள்களெல்லாம்விளம்பினன்வணங்கிவேந்தன். ()

இற்றதோவெனநக்கனான்யானிருவேள்விமுற்றி
மற்றுலகளிப்பெனென்னாமாதவர்தம்மைக்கூவச்
சுற்றுறுமுனிவர்யாருந்தொக்கனர்வசிட்டன்மைந்தர்
கற்றிலமரசன்வேள்விகனற்றுறைபுலைபற்றவோன். (ககங)

என்றுரைத்தியாங்களொல்லேமென்றனரென்னப்பொங்கிப்
புன்றொழிற்கிராதராகிப்போகெனப்புகறலோடும்
அன்றவரெயினராகியடவிகடோறுஞ்சென்றார்
கின்றுவேள்வியைமுற்றிராசனர்வருகவென்றான். (ககச)

அரசனிப்புலையற்கென்னேபனற்றுறைமுற்றியெம்மை
விரசுகவல்லையென்பான்விழுமிதென்றிகழ்ந்துநக்கார்
புரசைமாகளிற்றுவேந்தைப்போகநீதுறக்கம்யானே
உரைசெய்தேன்றவத்தினென்னவோங்கினன்விமானத்தும்பர். ()

ஆங்கவன்றுறக்கமெய்தவமரர்கள்வெகுண்டீசன்
ஈங்குவந்திடுவதென்னோவிழிநிலத்திழிகவென்னத்
தாங்கலில்கவிழ்வான்மற்றுத்தாபதசரணமென்ன
ஓங்கினனின்னில்லென்னவுரைத்துறுமொக்கநக்கான். (ககரு)

பேணலாதிகழ்ந்தவிண்ணோர்பெரும்பதமுதலாமற்றைச்
சேண்முழுதமைப்பலென்றுசெழுங்கதிர்கோணாடிங்கள்
மாணொளிகெடாதுதெற்குவடக்கவாய்வருகவென்று
தாணுவோர்வவெல்லாஞ்சமைக்குவெனென்னும்வேலை. (ககஎ)

நறைத்தருவுடையகோனுநான்முகக்கடவுடானும்
கறைத்தருகளனுமற்றைக்கடவுளர்பிறருந்தொக்குப்
பொறுத்தருண்முனிவநின்னைப்புகல்புகுந்தவனைப்போற்றும்
அறத்திறனன்றுதாரகணத்தொடுமடைகவென்னான். (ககஅ)

---

112. மேனிகழ் பொருள்களென்றது - தன்னை வசிட்டன் சபித்தன முதலியன.

115. புரசை - யானைக்கழுத்திடுகயிறு.

116. நின்னில் லென்றவடுக்கு விரைவுப்பொருளது.

அரசமா தவனீயா தியைந்துநாட்டுடன்பால்வந்துன்
புரைவிளக்கிடுகவென்னுக்கடவுளர்போயபின்னர்
நிரைதவன்விரைவினேகிநெடுங்கடற்கிறைவன்வைகும்
உரவிடமதனைநண்ணியுறுதவமுனுற்றுங்காலை. (ககக)

குதைதவரிசிலைவாட்டாளைக்கோமகனம்பரீடன்
சுதைதருமொழியன்வையத்துயிர்க்குயிராயதோன்றல்
வதைபுரிபுருடமேதம்வகுப்பவோர்மைந்தற்கொள்வான்
சிதைவினன்கனகந்தேர்கொண்டடவிகடுருவிச்சென்றான். (கஉo)

நற்றவரிசிகன்வைகுநளைவரும்பழுவநண்ணிக்
கொற்றவன்வினவலோடுமிசைந்தனர்குமரர்தம்முள்
பெற்றவளிளவலெற்கேயென்றனள்பிதாமுன்னென்றான்
மற்றையமைந்தனக்குமன்னவன்றனைநோக்கி. (கஉக)

கொடுத்தருள்வெறுக்கைவேண்டிற்றெற்கமாம்விழுமங்குன்ற
எடுத்தெனைவளர்த்ததாதைக்கென்றவற்றெழுதுவேந்தன்
தடுப்பருந்தேரினேறித்தடையிலாப்படர்தலோடும்
சுடர்க்கதிர்க்கடவுள்வானத்துச்சியந்தழல்புக்கான். (கஉஉ)

அவ்வயினிழிந்துவேந்தனருங்கடன்முறையினாற்றச்
செவ்வியகுரிசிறானுஞ்சென்றனனியமஞ்செய்வான்
அவ்வியமவித்தசிந்தமுனிவனையாண்டுக்காணாக்
கவ்வையினோடும்பாதகமலமதுச்சிசேர்த்தான். (கஉங)

விறப்பொடுவணக்கஞ்செய்தவிடலையையினிதுநோக்கிச்
சிறப்புடைமுனிவனென்னேதெருமரல்செப்புகென்ன
அறப்பொருளுணர்ந்தோயென்றனன்னைநும்முன்னையென்னை
உறப்பொருள்கொண்டுவேந்தற்குதவினனென்றானுற்றோன். (கஉச)

மைத்துனனோடுமுன்னாள்வழங்கியமுறைமைகேளாத்
தத்துறலொழிநீயானேதடுப்பெனின்னுயிரையென்னாப்
புத்திரர்தம்மைநோக்கிப்போகவேந்தோடுமென்ன
அத்தகுமுனிவன்கூறவவர்மறுத்தகறல்காணு. (கஉரு)

119. ஐந்துநாண்மீன்களாவன; அவிஷம் கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன. இவை படைப்புக்காலந் தொட்டு வடக்கி லிருந்தன தேவர்களால் இவ்விஸ்வாமித்திரர் விஷயமாய்த் தெற்கில் பிரகாசிக்கும்படி நியமிக்கப்பட்டன. ஆதலால் அசுவினிமுதல் விசாகம் வரையிலுள்ள இருபத்திரண்டு நாண்மீன்களே வடக்கிலிப்பொழுது காணப்படுவன.

122. தடையிலா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்.

எழுங்கதிரவனுநாணச்சிவந்தனனிருகணெஞ்சம்
புழுங்கினன்வடவைத்தீயமயிர்ப்புறம்பொறியிற்றுள்ள
அழுங்கலில்சிந்தையீர்நீரடவிகடோறுஞ்சென்றே
ஒழுங்கறுபுளிஞராகியுறுதுயருறுகவென்றான். (௧௨௬)

மாமுனிவெகுளிதன்னான்மடிகலாமைந்தர்நால்வர்
தாமுறுசவரராகச்சபித்தெதிர்சலித்தசிந்தை
ஏமுறலொழிகவின்னேபெறுகெனவிரண்டுவிஞ்சை
கோமருகனுக்குநல்கிப்பின்னருங்குணிக்கலுற்றான். (௧௨௭)

அரசனோடேகியூபத்தணைக்குபிம்மறையையாய்தி
விரசுவர்விண்ணுளோரும்விரிஞ்சனும்விடைவலோனும்
உரைசெறிவேள்விமுற்றுமுனதுயிர்க்கீறுண்டாகா
பிரசமென்றாரோயென்னப்பழிச்சொடும்பெயர்ந்துபோனான். ()

மறைமுனியுரைத்தவண்ணமகத்துறைமைந்தனாய
சிறையுறுகலுழனன்னஞ்சேமுதற்பிறவுமூரும்
இறைவர்தொக்கமரர்சூழவிளவறன்னுயிரும்வேந்தன்
முறைதருமகமுங்காத்தார்வடதிசைமுனியுஞ்சென்றான். (௧௨௯)

வடாதிசைமுனியுநண்ணிமலர்க்கரநாசிவைத்தாங்
கிடாவுபிங்கலைதானையலிதயத்தூடெழுத்தொன்றெண்ணி
விடாதுபற்பருவநிற்பமூலமாமுகடுவிண்டு
தடாதிருட்படலமூடச்சலித்ததெத்தலமுந்தாவி. (௧௩௦)

வேறு.

எயிலெரித்தவன்யானையுரித்தநாள்
பயிலுறுத்துரிபோர்த்தநன்பண்பெனப்
புயல்விரித்தெழுந்தாலெனப்பூதலம்
குயிலுறுத்திக்கொழும்புகைவிம்மவே. (௧௩௧)

தமந்திரண்டுலகியாவையுந்தாவுற
நிமிர்ந்தவெங்கதிர்க்கற்றையுநீங்குறக்
கமந்தமாதிரக்காவலர்கண்ணொடும்
சுமந்தநாகமுங்கண்சும்புளித்தவே. (௧௩௨)

---

128. யூபம் - வேள்வித்தூண்.

129. சிறையுறுகலுழனன்னஞ்சேவூருமிறைவர் - மும்மைப்பெருந்தேவர், பிறவுமூருமென்றதனான் யானையை யூர்தியாகக்கொண்ட இந்திரன்முதலிய இறைவரைக் குறித்தமைகாண்க.

132. கண்சும்புளித்தல் - கண்களைச்சுருக்கிப்பார்த்தல், சும்புளித்தல் - கூசுதல்.

திரிவநிற்பசெகதலத்தியாவையும்
வெருவலுற்றனவெங்கதிர்மீண்டன
கருவியுற்றககனமெலாம்புகை
உருவியுற்றிடவும்பர்துளங்கினார். (கநங)

புண்டரீகனும்புட்டிருப்பாகனும்
குண்டையூர்திகுலிசியுமற்றுள
அண்டர்தாமும்வந்தவ்வயினெய்திவே
றெண்டபோதனன்றன்னையெதிர்ந்தனர். (கநச)

பாதிமாமதிசூடியும்பைந்துழாய்ச்
சோதியோனுமத்தூய்மலராளியும்
வேதபாரகர்வேறிலர்நீயலால்
மாதபோதனவென்னவழங்கினர். (கநரு)

அன்னவாசகங்கேட்டுணரந்தணன்
சென்னிதாழ்த்திருசெங்கமலங்குவித்
துன்னுநல்வினையுற்றதென்றேங்கினான்
துன்னுதேவர்தஞ்சூழலுட்போயினார். (கநசு)

ஈதுமுன்னர்நிகழ்ந்ததிவன்றுணை
மாதவத்துயர்மாண்புடையாரிலை
நீதிவித்தகன்றன்னருணோர்ந்தனிர்
யாதுமக்கரிதென்றனனீறிலான். (கநஎ)

என்றுகோதமன்காதலன்கூறிட
வென்றிவீரர்வியப்பொடுவந்தெழா
ஒன்றுமாதவன்றொடொழுதோங்கிய
பின்றையேத்திப்பெயர்ந்தனன்றன்னிடம். (கநஅ)

முனியுந்தம்பியுமொய்ம்முறையாற்றமக்
கினியபள்ளிகளெய்தியபின்னிருட்
கனியும்போல்பவன்கங்குலுந்திங்களும்
தனியுந்தானுமத்தையலுமாயினான். (கநகூ)

விண்ணினீங்கியமின்னுருவிம்முறை
பெண்ணினன்னலம்பெற்றதுண்டேகொலோ

---

133. திரிவநிற்ப - இயங்குதிணைநிலைத்திணையுயிரை, சென்றுநின்று வாழுயிரெலாமென்றதுமிது.

137. இவன்று - இவனிராக. 138. கோதமன்காதலன் - சதாநந்தன்.

எண்ணின் நலமென்றறியேனிரு
கண்ணினுள்ளுங்கருத்துள்ளுங்காண்பெனால். (க௪௦)

வள்ளச்சேக்கைக்கரியவன்வைகுறும்
வெள்ளப்பாற்கடல்போன்மிளிர்கண்ணினுள்
அள்ளற்பூமகளாருங்கொலோவென
துள்ளத்தாமரையுள்ளுறைகின்றதே. (க௪க)

அருளிலாளெனினும்மனத்தாசையால்
வெருளுநோய்விடக்கண்ணின்விழுங்கலால்
தெருளிலாவுலகிற்சென்றுநின்றுவாழ்
பொருளெலாமவள்பொன்னுருவாயவே. (க௪௨)

பூணுலாவியபொற்கலசங்களென்
ஏணிலாகத்தெழுதலவெனினும்
வாணிலாமுறுவற்கனிவாய்மதி
காணலாவதோர்காலமுண்டாங்கொலோ. (க௪௩)

வண்ணமேகலைத்தேரொன்றுவாணெடுங்
கண்ணிரண்டுகதிமுலைதாமிரண்
டெண்ணிவந்தநகையுமுண்டாமெனில்
எண்ணுங்கூற்றினுக்கித்தனைவேண்டுமோ. (க௪௪)

தன்னலின்கருப்புச்சிலையான்விரை
பொன்னைமுன்னியபூங்கணைமாரியால்
என்னையெய்துதொலைக்குமென்றுலினி
வன்மையென்னுமிதாரிடைவைகுமே. (க௪௫)

கொள்ளைகொள்ளக்கொதித்தெழும்பாற்கடற்
பள்ளவெள்ளமெனப்படருந்நிலா
உள்ளவுள்ளவுயிரைத்துருவிட
வெள்ளைவண்ணவிடமுமுண்டாங்கொலோ. (க௪௬)

ஏகுநல்வழியல்வழியென்மனம்
ஆகமோவதற்காகியகாரணம்
பாகுபோன்மொழிப்பைந்தொடிகன்னியே
ஆகும்வேறிதற்கையுறவில்லையே. (க௪௭)

கழிந்தகங்குலரசன்கதிர்க்குடை
விழுந்ததென்னவுமேற்றிசையாள்சுடர்க்

கொழுந்துசேர் நுதற்கோதறுசுட்டிபோய்
அழிந்ததென்னவுமாழ்ந்தது திங்களே. (கதஅ)

வீசுகின்றநிலாச்சுடர்வீய்ந்ததால்
ஈசனுமதியேகலுஞ்சோகத்தால்
பூசுவெண்கலவைப்புனைசாந்தினை
ஆசைமாதரழித்தனரென்னவே. (கதகூ)

வேறு.

ததையுமலர்த்தாரண்ணலிவ்வண்ணமயலுழந்துதளருமெல்லை
சிதையுமனத்திடருடையசெங்கமலமுகமலரச்செய்யவெய்யோன்
புதையிருளினெழுகின்றபுகர்முகயானையினுரிவைபோர்வைபோர்த்த
உதையகிரியெனுங்கடவுணுதல்கிழித்தவிழியேபோலுதயஞ்செய் [தான்.

விசையாடற்பசும்புரவிக்குரமிதிப்பவுதயகிரிவிரிந்ததூளி
பசையாகமறையவர்கைந்நறைமலருநிறைபுனலும்பரந்துபாய
அசையாதநெடுவரையின்முகடுதொறுமிளங்கதிர்சென்றணைந்துவெ
திசையாளுமதகரியைச்சிந்தூரமப்பியபோற்சிவந்தமாதோ [ய்யோன்

பண்டுவருங்குறிபகர்ந்துபாசறையிற்பொருள்வயினிற்பரிந்துபோன
வண்டுதொடர்நறுந்தெரியலுயிரனையகொழுநர்வரமணித்தேரோடும்
கண்டுமனங்களிசிறப்பவொளிசிறந்துமெலிவகலுங்கற்பினார்போல்
புண்டரிகமுகமலரவகமலர்ந்துபொலிந்தனபூம்பொய்கையெல்லாம்.

எண்ணரியமறையினொடுகின்னரர்களிசைபாடவுலகமேத்த
விண்ணவருமுனிவர்களும்வேதியருங்கரங்குவிப்பவேலையென்னும்
மண்ணுமணிமுழவதிரவானரங்கினடம்புரிவாளிரவியான
கண்ணுதல்வானவன்கனகச்சடைவிரிந்தாலெனவிரிந்தகதிர்களெல் [லாம்.

கொல்லாழிநீத்தங்கோர்குனிவயிரச்சிலைதடக்கைகொண்டகொண்
எல்லாழித்தேரிரவியிளங்கரத்தாலடிவருடியனந்தநீர்ப்ப
அல்லாழிக்கரைகண்டாளுயிரவாய்மணிவிளக்கமழலுஞ்சேக்கைத்
தொல்லாழிதுயிலாதேதுயராழிநெடுங்கடலுட்டுயில்கின்றானே. [டல் ()

ஊழிபெயர்ந்தெனக்கங்குலொருவண்ணம்புடைபெயரவுறக்கநீத்த
சூழியானையினெழுந்துதொன்னியமத்துறைமுடித்துச்சுருதியன்ன
வாழிமாதவற்பணிந்துமனக்கினியநம்பியொடும்வம்பின்மாலை
தாழுமாமணிமௌலித்தார்ச்சனகன்பெருவேள்விச்சாலைசார்ந்தான்.

முடிச்சனகர்பெருமானுமுறையாலேமறைவேள்விமுற்றிச்சுற்
றும், இடிக்குரலின்முரசியம்பவிந்திரன்போற்சந்திரன்றோய்கோயி

லெய்தி, எடுத்தமணிமண்டபத்துளொண்டவத்துமுனிவரொடுமிருந் தானைந்தார், வடித்தகுனிவரிசிலைக்கைமைந்தனுந்தம்பியுமருங்கி னிருப்பாமாதோ. (கறுசு)

இருந்தகுலக்குமரர்தமையிருகண்ணின்முகத்தழுகுபருகநோக் கி, அருந்தவனையடி வணங்கியாவரையிவருரைத்திடுமினடிகளென்ன விருந்தினர்களினுடையவேள் விகாணியவந்தார்வில்லுங்காண்பா ர், பெருந்தகைமைத்தயரதன்றன்புதல்வரெனவவர்தகைமைபேச லுற்றான். (கறுஎ)

ஆக திருவிருத்தம் - எ௨க.

## கக-வது, குலமுறைக்கிளத்துபடலம்.

ஆதித்தன்குலமுதல்வன்மனுவினையாரறியாதார்
பேதித்தவுயிரனைத்தும்பெரும்பசியால்வருந்தாமற்
சோதித்தன்வரிசிலையாணிலமடந்தைமுலைசுரப்பச்
சாதித்தபெருந்தகையுமிவர்குலத்தாரபதிகாண். (க)

பிணியரங்கவினையகலப்பெருங்காலந்தவம்பேணி
மணியரங்கநெடுமுடியாய்மலரயனைவழிபட்டுப்
பணியரங்கப்பெரும்பாயற்பரஞ்சுடரையாங்காண
அணியரங்கந்தந்தானையறியாதாரறியாதார். (௨)

தான்றனக்குவெலற்கரியதானவரைத்தலைதுமித்தென்
வான்றரக்கிற்றிகொலென்றுகுறையிரப்பவரங்கொடுத்தாங்
கேன்றெடுத்தசிலையினனுயிகல்புரிந்தவிவர்குலத்தோர்
தோன்றலைப்பண்டிந்திரன்காண்விடையேறாய்ச்சுமந்தானும். (௩)

அரசனவன்பின்னோரையென்னொலுமளப்பரிதால்
உரைகுறுகநிமிர்கீர்த்தியிவர்குலத்தோனொருவன்காண்
நரைதிரைமூப்பிவைமாற்றியிந்திரனுநந்தாமல்
குரைகடலைநெடுவரையாற்கடைந்தமுதுகொடுத்தானும். (௪)

கருதலரும்பெருங்குணத்தோரிவர்முதலோர்கணக்கிறந்தோர்
திரிபுவனமுழுதாண்டுசுடர்நேமிசெலநின்றோர்
பொருதுறைசேர்வேலினும்புலிப்போத்தும்புல்வாயும்
ஒருதுறையினீருண்ணவுலகாண்டோனுளனொருவன். (௫)

5. பெருங்குணம் - சீலகாருண்ணியம் முதலியன.

மறைமன்னுமணிமுடியுமாரமும்வாளொடுமின்னப்
பொறைமன்னுவானவருந்தானவரும்பொருமொருநாள்
விறன்மன்னர்தொழுகழலாயிவர்குலத்தோன்விற்பிடித்த
அறமென்னவொருதனியேதிரிந்தமராபதிகாத்தோன். (சு)

இன்னுயிர்க்குமின்னுயிராயிருநிலங்காத்தாரென்று
பொன்னுயிர்க்குங்கழலவரையாம்போலும்புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்குநெடுவேலாயிவர்குலத்தோன்மேற்பறவை
மன்னுயிர்க்குத்தன்னுயிரைமாறாகவழங்கினனால். (எ)

இடரோட்டவினநெடியவரையுருட்டியிவ்வுலகம்
திடரோட்டமெனக்கிடக்கும்வகையிரங்கித்தெவ்வேந்தர்
உடரோட்டநெடுவேலாயிவர்குலத்தோருவரிநீர்க்
கடரோட்டாரெனின்வேறோர்கட்டுரையும்வேண்டுமோ. (அ)

தூநின்றசுடர்வேலோயனந்தனைசொல்லாணைல்
யானின்றுபுகழ்ந்தேத்தற்கெளிதேயேடவிழ்கொன்றைப்
பூநின்றமவுலியையும்புக்களைந்தபுனற்கங்கை
வானின்றுகொணர்ந்தானுமிவர்குலத்தோர்மன்னவன்காண். (கூ)

கயற்கடல்சூழுலகெல்லாங்கைநெல்லிக்கனியாக்கி
இயற்கைநெறிமுறையாலேயிந்திரற்குமிடரியற்றி
முயற்கறையின்மதிக்குடையாயிவர்குலத்தோன்முன்னொருவன்
செயற்கரியபெருவேள்வியொருநூறுஞ்செய்தமைத்தான். (க0)

சந்திரனைவென்றானுமுருத்திரனைச்சாய்த்தானும்
துந்துவெனுந்தானவனைச்சுடுசரத்தாற்றுணித்தானும்
வந்தகுலத்திடைவந்தரகுவென்பான்வரிசிலையால்
இந்திரனைவென்றுதிசையிருநான்குஞ்செருவென்றான். (கக)

வில்லென்னுநெடுவரையால்வேந்தென்னுங்கடல்கலக்கி
எல்லென்னுமணிமுறுவலின்னமுதியெனுந்திருவை
அல்லென்னுந்திருநிறத்தவரியென்னவயனென்பான்
மல்லென்னுந்திரள்புயத்துக்கணியென்னவைத்தானே. (கஉ)

அயன்புதல்வன்றயரதனையறியாதாரில்லையவன்
பயந்தகுலக்குமரரிவர்தமையுள்ளபரிசெல்லாம்
நயந்துரைத்துக்கரைபேறநான்முகற்குமரிதாம்பல்
இயந்துவைத்தகடைத்தலையாயானறிந்தபடிகேளாய். (கங)

---

6. அமராபதி - இந்திரனகரம்.

துனியின்றியுயிர்செல்லச்சுடராழிப்படைவெய்யோன்
பனிவென்றபடியென்னப்பகைவென்றுபடிகாப்போன்
தனுவன்றித்துணையில்லான்றருமத்தின்கவசத்தான்
மனுவென்றநீதியான்மகவின்றிவருந்துவான். (௧௪)

சிலைக்கோட்டுநுதற்குதலைச்செங்கனிவாய்க்கருநெடுங்கண்
விலைக்கோட்டும்பேரல்குன்மின்னுடங்குமிடையாரை
முலைக்கோட்டுவிலங்கென்றங்குடனாகிமுன்னின்ற
கலைக்கோட்டுப்பெயர்முனியாற்றுயர்நீங்கக்கருதினான். (௧௫)

தார்காத்தநறுங்குஞ்சித்தனயர்களின்றவமின்மை
வார்காத்தவனமுலையார்மணிவயிறுவாய்த்திலரால்
நீர்காத்தகடல்காத்தநிலங்காத்தேதனென்னிற்பின்
பார்காத்தற்குரியாரைப்பணிநீயென்றடிபணிந்தான். (௧௬)

அவ்வுரைகேட்டம்முனியுமருள்சுரந்தவுவகையனாய்
இவ்வுலகமன்றியேயெவ்வுலகுந்தமினிதளிக்குந்
செவ்வியிளஞ்சிறுவர்களைத்தருகின்றேனினித்தேவர்
வவ்வியநகர்பெருவேள்வித்துறையெலாம்வருகென்றான். (௧௭)

காதலரைத்தருவேள்வித்துறையெலாங்கடிதமைப்ப
மாதவரிற்பெரியோனுமற்றதனைமுற்றுவித்தான்
சோதிமணிப்பொற்கலத்துச்சுதையனையவெண்சோறோர்
பூதகணத்தரசேந்தியனலின்றுப்புறப்பட்ட. (௧௮)

பொன்னின்மணிப்பரிகலத்திற்புறப்பட்டவின்னமுதைப்
பன்னுமறைப்பொருளுணர்ந்தபெரியோன்றன்பணியினால்
தன்னனையநிறைகுணத்துத்தசரதனும்வரன்முறையால்
நன்னுதலார்மூவருக்குநாலுகூறிட்டளித்தான். (௧௯)

விரிந்திடுதீவினைசெய்தவெவ்வியதீவினையாலும்
அருங்கடையின்மறையறைந்தவறஞ்செய்தவறத்தாலும்
இருங்கடகக்கரதலத்திவ்வெழுதரியதிருமேனிக்
கருங்கடலைச்செங்கனிவாய்க்கவுசலையென்பாள்பயந்தாள். (௨௦)

தள்ளரியபெருநீதித்தனியாறுபுகமண்டும்
பள்ளமெனுந்தகையானைப்பரதனெனும்பெயரானை
எள்ளரியகுணத்தாலுமெழிலாலுமிழிவிருந்த
வள்ளலையேயனையானைக்கேகயர்கோன்மகள்பயந்தாள். (௨௧)

18. புறப்பட்டது - என்புழி துவ்வீறுதொகுத்தல்பெற்றது.

அருவலிய திறலினராய் அறங்கெடுக்கும் விறலரக்கர்
வெருவருதிண்டிறலார்கள்வில்லேந்துமெனிற்செம்பொற்
பருவரையுநெடுவெள்ளிப்பருப்பதமும்போல்வார்கள்
இருவரையுமிவ்விருவர்க்கிளையாளுமீன்றெடுத்தாள். (உ௨)

தலையாயபொருளுணர்விற்கலைகட்குத்தலைவராய்ச்
சிலையாயுந்தனுவேதந்தெவ்வரைப்போற்பணிசெய்யக்
கலையாழிக்கதிர்த்திங்களுதயத்திற்கலித்தோங்கும்
அலையாழியெனவளர்ந்தார்மறைநான்குமனையார்கள். (௨௩)

திறையோடுமரசிறைஞ்சுஞ்செறிகழற்காற்றசரதனும்
பொறையோடுந்தொடர்மனத்தான்புதல்வரெனும்பெயரேகாண்
உறையோடுநெடுவேலாயுபநயனவிதிமுடித்து
மறையோடுவித்திவரைவளர்த்தானும்வசிட்டன்காண். (௨௪)

ஈங்கிவராலென்வேள்விக்கிடையூறுகடிதியற்றும்
தீங்குடையகொடியோரைக்கொல்விக்குஞ்சிந்தையனாய்ப்
பூங்கழலார்க்கொண்டுபோய்வனம்புக்கேன்புகாமுன்னந்
தாங்கரியபேராற்றற்றாடகையேதலைப்பட்டாள். (௨௫)

அலையுருவக்கடலுருவத்தாண்டகைதன்னீண்டுயர்ந்த
நிலையுருவப்புயவலியைநீயுருவநோக்கையா
உலையுருவக்கனலுமிழ்கட்டாடகைதன்னுரமுருவி
மலையுருவிமரமுருவிமண்ணுருவிற்றொருவாளி. (௨௬)

செக்கர்நிறத்தெரிகுஞ்சிச்சிரக்குவைகள்பொருப்பென்ன
உக்கனவோர்முடிவில்லையோரம்பினொடுமரக்கி
மக்களிலங்கொருவன்போய்வான்புக்கான்மற்றையவன்
புக்கவிடமறிந்திலென்போந்தவனென்வினைமுடித்தே. (௨௭)

ஆய்ந்தேறவுணரையயற்கேயுமறிவரிய
காய்ந்தேவிலுலகனைத்துங்கடலோடுமலையோடும்
தீந்தேறச்சுடுகிற்கும்படைக்கலங்கள்செய்தவத்தால்
ஈந்தேனுமனமுட்கவிவற்கேவல்செய்குனவால். (௨௮)

22. செம்பொற்பருவரை - மேரு. நெடுவெள்ளிப்பருப்பதம்-கைலாயம்.

24. பகைவரின்மையா லுறைபுகுதலின் உறையோடு நெடுவேலாயென்றார்.

27. மக்களிலங்கொருவன் என்றது - சுவாகு. மற்றையவனென்றது- மாரீசனை.

கோதமன்றன்பன்னிக்குமுன்னையுருக்கொடுத்ததிவண்
போதுநின்றதெனப்பொலிந்தபொலங்கழற்காற்பொடிகண்டாய்
காதலென்றனுயிர்மேலுமிக்கரியோன்பாலுண்டால்
ஈதிவன்றன்வரலாறும்புயவலியுமெனவுரைத்தான். (உகூ)

ஆக திருவிருத்தம் - எ௫௦.

---

## கஉ-வது, கார்முகப்படலம்.

---

மாற்றம்யாதுரைப்பதுமாயவிற்குநான்
தோற்றவாறெணமனந்துளங்குகின்றதால்
நோற்றனணங்கையுநொய்தினையன்வில்
ஏற்றுமேலிடர்க்கடலேற்றுமென்றனன். (க)

என்றனனென்றுதன்னெதிர்நின்றுரையக்
குன்றுறழ்வரிசிலைகொணர்மினீண்டென
நன்றெனவணங்கினர்நால்வரோடினர்
பொன்றிணிகார்முகச்சாலைபுக்கனர். (உ)

உறுவலியானையையொத்தமேனியர்
செறிமயிர்க்கல்லெனத்திரண்டதோளினர்
அறுபதினாயிரரளவிலாற்றலர்
தறிமடுத்திடையிடைதண்டிற்றாங்கினர். (ங)

நெடுநிலமகண்முதுகாற்றநின்றுயர்
தடநிமிர்வடவரைதானுநாணுற
இடமிலையுலகெனவந்ததெங்கணும்
கடல்புரைதிருநகரிரைத்துக்காணவே. (ச)

சங்கொடுசக்கரந்தரித்ததாள்கைய
சிங்கவேறல்லனேலிதனைத்தீண்டுவான்
எங்குளனொருவனின்றேற்றினிச்சிலை
மங்கைதன்றிருமணம்வாழுமாலென்பார். (ரு)

---

3. அறுபதினாயிரரென்றதன்றி அற்றபதினாயிரவரெனக்கொண்டு ஐயாயிரவரெனக் கோடலுமமையும்.

5. சங்கொடு சக்கரந்தரித்த தாளையசிங்கவேறென்பதற்குச் சங்குசக்கர மேந்திய படையாகவுடைய சிங்கம்போல்வாராகிய திருமால் எனப்பொருள் கொள்க.

கைதவந்தனுவெனல்கனகக்குன்றென்பார்
மைத்தவன்யாவனோவெற்றிப்பண்டென்பார்
செய்தவத்திசைமுகன்நீண்டியன்றுதன்
மொய்தவப்பெருமையின்முயற்சியாலென்பார். (சு)

திண்ணெடுமேருவைத்திரட்டிற்றோவென்பார்
வண்ணவான்கடல்பண்டுகடைந்தமத்தென்பார்
அண்ணல்வாளரவினுக்கரசனோவென்பார்
விண்ணிடுநெடியவில்வீழ்ந்ததோவென்பார். (எ)

என்னிதுகொணர்கெனவியம்பினனென்பார்
மன்னவருளர்கொலோமதிகெட்டாரென்பார்
முன்னையூழ்வினையினன்முடிக்கலாமென்பார்
கன்னியுமிச்சிலைகாணுமோவென்பார். (அ)

இச்சிலையுதைத்தகோற்கிலக்கம்யாதென்பார்
நச்சிலைநங்கைமேனாட்டும்வேந்தென்பார்
நிச்சயமெடுக்குங்கொனேமியானென்பார்
சிற்சிலர்விதிசெய்ததீமைதானென்பார். (கூ)

மொய்த்தனரின்னணமொழியமன்னன்முன்
உய்த்தனர்நிலமுதுகுளுக்கிக்கீழுற
வைத்தனர்வாங்குநர்யாவரோவெனக்
கைத்தலம்விதிர்த்தனர்கண்டவேந்தரே. (கய)

போதகமனையவன்பொலிவுநோக்கியவ்
வேதனைதருகின்றவில்லைநோக்கிநந்தன்
மாதினைநோக்குவான்மனத்தைநோக்கிய
கோதமன்காதலன்கூறன்மேயினான். (கக)

இமையவில்வாங்கியவீசன்பங்குறை
உமையினையிகழ்ந்தனனென்னவோங்கிய
கமையறுசினத்தனிக்கார்முகங்கொளாச்
சமையுறுதக்கனார்வேள்விசாரவே. (க௨)

உக்கனபல்லொடுகரங்களோடினர்
புக்கனர்வானவர்புகாதசூழல்கள்

9. நங்கைமேல் என்புழி ஏழாவது நான்காவதன் பொருளது.
12. இமையவில் - மேருமலையாகிய வில்.

தக்கனல்வேள்வியிற்றழலுமாறின
முக்கணெண்டோளவன்முனியுமாறினன். (௧௩)

தாளுடைவரிசிலைசம்புவும்பர்தம்
நாளுடைமையினவர்நடுக்கநோக்கியிக்
கோளுடைவிடையனுன்குலத்துட்டோன்றிய
வாளுடையுழவனோர்மன்னன்பால்வைத்தான். (௧௪)

கார்முகவலிமையையான்கழறல்வேண்டுமோ
வார்சடையரனிகர்வரதனீயலால்
யாருளரறிபவரிதற்குத்தோன்றிய
தேர்முகவல்குலாள்செல்விகேளெனா. (௧௫)

## வேறு.

இரும்பனையகருநெடுங்கோட்டிணையேற்றின்பணையேற்ற
பெரும்பியலிற்பளிக்குநுகம்பிணைத்ததனோடிணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப்பொற்கலப்பைவயிரத்தின்கொழுமடுத்திட்
டிரம்பொருவினிலம்வேள்விக்கலகில்பலசாலுழுதேம். (௧௬)

உழுகின்றகொழுமுகத்தினுதிக்கின்றகதிரொளிபோல்
பொழிகின்றபுவிமடந்தைதிருவெளிப்பட்டெனப்புணரி
எழுகின்றதெள்ளமுதோடெழுந்தவளுமிழிந்தொதுங்கத்
தொழுகின்றநன்னலத்துப்பெண்ணரசிதோன்றினள். (௧௭)

குணங்களையென்கூறுவதுகொம்பினைச்சேர்ந்தவையுய்யப்
பிணங்குவனவழகிவளைத்தவஞ்செய்துபெற்றதுகாண்
கணங்குழையாளெழுந்ததற்பின்கதிர்வானிற்கங்கையெனும்
அணங்கிழியப்பொலிவிழந்தவாறுரைத்தார்வேறுற்றார். (௧௮)

சித்திரமிங்கிதுவொப்பதெங்குண்டுசெய்வினையால்
வித்தகமும்விதிவசமும்வெவ்வேறேபுறங்கிடப்ப
அத்திருவையமரர்குலமாதரித்தாரெனவறிஞ
இத்திருவைநிலவேந்தரெல்லாருங்காதலித்தார். (௧௯)

---

14. வாளுடையுழவன் - தேவராதனை.

15. வரதன் - வரங்கொடுப்போன்.

18. அழகுக்கழகு செய்பவளாதலின் - அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதென்றார்.

19. தக்கன் - பிரமனது மானதபுத்திரருள் ஒருவன்.

கலித்தானைக்கடலோடுங்கைத்தானக்களிற்றரசர்
ஒலித்தானையெனவந்துமணமொழிந்தார்க்கெதிருடுத்த
புலித்தானைக்களிற்றுரிவைப்போர்வையான்போர்வில்லை
வலித்தானைமங்கைதிருமணத்தானென்றியாம்வலித்தேதம். (உ0)

வல்வில்லுக்காற்றார்கண்மாரவேள்வளைகரும்பின்
மெல்வில்லுக்காற்றாராய்த்தாமெம்மைவிளிகுற்றார்
கல்வில்லோடுலகீந்தகணங்குழையைக்காதலித்துச்
சொல்வில்லாலுலகளிப்பாய்போர்செய்யத்தொடங்கினார். (உக)

இம்மன்னர்பெருஞ்சேனையீவுதனைமேற்கொண்ட
செம்மன்னர்பொருளைபோற்புகழ்வாய்ப்பச்சிறந்ததால்
பொம்மென்னவண்டலம்புபுரிகுழலைக்காதலித்த
அம்மன்னர்சேனைதமதாசைபோலாயிற்றால். (உஉ)

மற்காக்குமணிப்புயத்துமன்னனிவன்மழவிடையோன்
விற்காக்கும்வாளமருண்மெலிகின்றானெனவிரங்கி
எற்காக்குமுடிவிண்ணோர்படையீந்தாரெனவேந்தர்
அற்காக்கைகூகையைக்கண்டஞ்சினவாமெனவகன்றார். (உ௩)

அன்றுமுதலின்றளவுமாருமிந்தச்சிலையருகு
சென்றுமிலர்போயொளித்தார்தேர்வேந்தர்திரிந்துமிலர்
என்றுமினிமணமுமிலையென்றிருந்தேமிவனேற்றின்
நன்றுமலர்க்குழற்சீதைநலம்பழுதாகாதென்றான். (உச)

நினைந்தமுனிபகர்ந்தவெலாநெறியுன்னியறிவனுந்தன்
புனைந்தசடைமுடிதுளக்கிப்போரேற்றின்முகம்பார்த்தான்
வனைந்தனையதிருமேனிவள்ளலுமம்மாதவத்தோன்
நினைந்தவெலாநினைந்தந்தநெடுஞ்சிலையைநோக்கினான். (உரு)

வேறு.

பொழிந்தநெய்யாகுதிவாய்வழிபொங்கி
எழுந்தகொழுங்கனலென்னவெழுந்தான்

---

21. நிறைமொழி மாந்தரென்பதுபற்றி சொல்வில்லாலுல களிப்பாயென்றார்.

22. ஈவார்மேனிற்புகழ் என்பனவாதலின்-ஈவுதனை மேற்கொண்ட செம்மன்பொருளை போற்புகழ்வாய்ப்ப என்றார்.

அழிந்தது வில்லெனவிண்ணவரார்த்தார்
மொழிந்தனராசிகண் முப்பகைவென்ருர். (உஎ)

தூயதவங்கடொடங்கியதொல்லோன்
ஏயவன்வல்விலிருப்பதன்முன்னம்
சேயிழைமங்கையர்சிந்தைதொறெய்யா
ஆயிரம்வில்லையனங்கனிருத்தான். (உஏ)

காணுநெடுஞ்சிலைகால்வலிதென்பார்
நாணுடைநங்கைநலங்கிளர்செங்கேழ்
பாணியிவன்படர்செங்கைபடாதேல்
வாணுதல்சீதையும்வாழ்விலளென்பார். (உஅ)

கரங்கள்குவித்திருகண்கள்பனிப்ப
இருங்களிறிச்சிலையேற்றிலனாயின்
நரந்தநறைக்குழனங்கையுநாமும்
முருங்கெரியிற்புகமூழ்குதுமென்பார். (உகூ)

வள்ளன்மனத்தைதமகிழ்ந்தனனென்ருல்
கொள்ளெனமுன்புகொடுப்பதையல்லால்
வெள்ளமணைத்தவன்வில்லையெடுத்திப்
பிள்ளைமுனிட்டதுபேதைமையென்பார். (ஙo)

ஞானமுனிக்கொருநாணிலையென்பார்
கோனிவனிற்கொடியாரிலையென்பார்
மானவனிச்சிலைகால்வளையானேற்
பீனதனத்தவள்பேரிலளென்பார். (ஙக)

தோகையரின்னனசொல்லிடநல்லோர்
ஓகைவிளம்பிடவும்பருவப்ப
மாகமடங்கலுமால்விடையும்பொன்
நாகமுநாகமுநாணநடந்தான். (ஙஉ)

---

26. அம்பகம் - கண், த்ரியம்பகன் - மூன்றுகண்களையுடைய சிவன், அவன் வில்லாதலால் த்ரியம்பகமென இந்த வில்லுக்குக் காரணக்குறியாயிற்று.

30. உலகையழிக்கவந்த கங்கையைத் தன்சடைநுனியிற் கரக்குமாற்ற ஸேற்ற 'வெள்ளமணைத்தவ' னென்றும், அவனேந்தும் வில்லை இராமனிடத் தளிப்பது தகாதென்பார் பிள்ளை முன்னிட்டது பேதைமையென்றுங் கூறி ஞர்.

32. ஆற்றலிற் சிறந்ததாகலின்மாக மடங்கலும், நடையிற் சிறந்ததாகலின் மால்விடையும், சலியாமையின் பொன்நாகமும், கம்பீரமுடைமையின் நாகமு மென்றின்ன நாணச்சென்ருனென்றது.

ஆடகமால்வரையன்னது தன்னைத்
தேடருமாமணிசீதையெனும்பொற்
சூடகவால்வளைசூட்டிடநீட்டும்
ஏடவிழ்மாலையிதென்னவெடுத்தான். (௩௩)

தடுத்திமையாமலிருந்தவர் தாளின்
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார்
கடுப்பினில்யாருமறிந்திலர்கையால்
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார். (௩௪)

வேறு.

ஆரிடைப்புதுகுநாமென்றமரர்கள்கமலத்தோன்றன்
பேருடையண்டகோளம்பிளந்ததென்றேங்கினைந்தார்
பாரிடையுற்றதன்மைபகர்வதென்பாரைத்தாங்கி
வேரிடைக்கிடந்தநாகமிடியெனவெருவிற்றன்றே. (௩௫)

பூமழைசொரிந்தார்விண்ணோர்பொன்மழைபொழிந்தமேகம்
பாமமாகடல்களெல்லாம்பன்மணிதூவியார்த்த
கோமுனிக்கணங்களெல்லாங்கூறினவாசிகொற்ற
நாமவேற்சனகற்கின்றுநல்வினைபயந்ததென்று. (௩௬)

மாலையுமிழையுஞ்சாந்துஞ்சுண்ணமும்வாசநெய்யும்
வேலைவெண்முத்தும்பொன்னுங்காசுநுண்டுகிலும்வீசிப்
பால்வளையயிர்தளாயபல்லியந்துவைப்பமுந்நீர்
ஓல்கியர்ந்துவாவுற்றென்னவொலிநகர்கிளர்ந்ததன்றே. (௩௭)

நல்லியன்மகரவீணைத்தேனுகநகையுந்தோடும்
வில்லிடவாளும்வீசவேல்கிடந்தனையநாட்டத்
தெல்லியன்மதியமன்னமுகத்தியரெழிலிதோன்றச்
சொல்லியபருவநோக்குந்தோகையினுடினாரே. (௩௮)

உண்ணறவருந்தினாரிற்சிவந்ததாளிர்கருங்கண்மாதர்
புண்ணுறுபுலவிநீங்கக்கொழுநரைப்புல்லிக்கொண்டார்
வெண்ணிறமேகமென்மேல்விரிகடல்பருகுமாபோல்
மண்ணுறுவேந்தன்செல்வம்வறியவர்முகந்துகொண்டார். (௩௯)

வயிரியர்மதுரகீதமங்கையரமுதகீதம்
செயிரியர்மகரயாழின்றேம்பிழிதெப்வகீதம்

35. கமலத்தோன் கோளம் - பிரமாண்டகோளம்.

37. நிறைமதியங் காண்புழி கடல், ஒல்லெனக் கிளர்ந்து பொங்கலான் ஓல்கிளர்ந்து வாவுற்றென்ன என்றார்.

பயிரியல்வேயின்கீதமென்றிவைபருகிவிண்ணோர்
உயிருடையுடம்புமெல்லாமோவியமொப்பநின்றார். (௪0)

ஐயன்வில்லிறுத்தவாற்றல்காணியவமரர்நாட்டுத்
தையலாரிழிந்துபாரின்மகளிரைத்தழுவிக்கொண்டார்
செய்கையின்வடிவினுடல்பாடலிற்றெளிதறேற்றார்
மையரிநெடுங்கணோக்கமிமைத்தலுமயங்கிநின்றார். (௪க)

தயரதன்புதல்வனென்பார்தாமரைக்கண்ணனென்பார்
புயலிவன்மேனியென்பார்பூவையும்பொருவுமென்பார்
மயலுடைத்துலகமென்பார்மானுடனல்லனென்பார்
கயல்பொருகடலுள்வைகுங்கடவுளேகாணுமென்பார். (௪உ)

நம்பியைக்காணநங்கைக்காயிரம்நயனம்வேண்டும்
கொம்பினைக்காணுந்தோறுங்குரிசிற்குமன்னதேயாம்
தம்பியைக்காண்மினென்பார்தவமுடைத்துலகமென்பார்
இம்பரிந்நகரிற்றந்தமுனிவனையிறைஞ்சுமென்பார். (௪௩)

இற்றிவணின்னதாகமதியொடுமெல்லிநீங்கப்
பெற்றுயிர்பின்னுங்காணுமாசையாற்சிறிதுபெற்ற
சிற்றிடைப்பெரியகொங்கைச்சேயரிக்கரியவாட்கட்
பொற்றொடிமடந்தைக்கப்பாலுற்றதுபுகலலுற்றாம். (௪௪)

ஊசலாடுயிரினோடுமுருகுபூம்பள்ளிநீங்கிப்
பாசிழைமகளிர்சூழப்போயொருபளிக்குமாடக்
காசறுமரையின்பொய்கைச்சந்திரகாந்தமீன்ற
சீதநீர்தெளித்தமென்பூஞ்சேக்கையையரிதிற்சேர்ந்தாள். (௪௫)

பெண்ணிவணுற்றதென்னும்பெருமையாலருமையான
வண்ணமுமிலைகளாலேகாட்டவால்வாட்டந்தீர்ந்தேதன்
தண்ணறுங்கமலங்காளென்றளிர்நிறமுண்டகண்ணின்
உண்ணிறங்காட்டினீரென்னுயிர்கரவுலோவினீரே. (௪௬)

வேறு.

நாணுலாவுமேருவோடுநாளலாவுபாணியும்
தூணுலாவுதோளும்வாளிபூடுலாவுதூணியும்
வாணிலாவினூலுலாவுமாலைமார்புமீளவும்
காணலாகுமாகினுவிகாணலாகுமேகொலாம். (௪௭)

47. அவனைக்காணாத வழியுயிரிழப்பலென்பதுபற்றிக் காணலாகுமாகினுவி காணலாகுமே கோலென்றார்.

விண்டலங்கலந்திலங்குதிங்களோடுமீதுசூழ்
வண்டலம்பலங்கறங்குபங்கியோடும்வார்சிலைக்
கொண்டலொன்றிரண்டுகண்ணின்மொண்டுகொண்டென்னாவியை
உண்டதுண்டெனெஞ்சினின்றுமுண்டதென்றுமுண்டரோ. (சஅ)

பஞ்சரங்குதீயிலாவிபற்றநீடுகொற்றவில்
வெஞ்சரங்களைஞ்சரங்கள்வெய்யகாமனெய்யவே
சஞ்சலங்கலந்தபோதுதையலாரையுய்யவந்
தஞ்சலஞ்சலென்கிலாதவாண்மையென்னவாண்மையே. (சகூ)

இளைக்கலாதகொங்கைகாளெழுந்துவிம்மியென்செய்தீர்
முளைக்கலாமதிக்கொழுந்துபோலும்வாண்முகத்தினான்
வளைக்கலாதவிற்கையாளிவள்ளன்மார்பினுள்ளுறத்
திளைக்கலாகுமாகிலானசெய்தவங்கள்செய்ம்மினே. (ருo)

எங்குநின்றெழுந்ததிந்தவிந்துவந்தெனெஞ்சுலாம்
அங்கியன்றனங்கனெய்தவம்பின்வந்தசிந்தைநோய்
பொங்குகின்றகொங்கைமேல்விடம்பொழிந்ததென்னினும்
தங்குல்வந்ததிங்களன்றகங்களங்கமில்லையே. (ருக)

அடர்ந்துவந்தனங்கனெஞ்சழன்றுசிந்துமம்பெனும்
விடங்குடைந்தமெய்யினின்றுவெந்திடாதெழுந்துவெங்
கடந்துதைந்தகாரியானையன்னகாளைகாலடைந்
துடன்றொடர்ந்துபோனவாவிவந்தவாவெனுள்ளமே. (ருஉ)

விண்ணுளேயெழுந்தமேகமார்பினூலின்மின்னொடும்
மண்ணுளேயிழிந்ததென்னவந்துபோனமைந்தனார்
எண்ணுளேயிருந்தபோதும்யாவரென்றுதேர்கிலென்
கண்ணுளேயிருந்தபோதுமென்கொல்காண்கிலாதவே. (ருங)

பெய்கடற்பிறந்தயல்பிறக்கொணுமருந்துபெற்
றையபொற்கடத்தொடங்கைவிட்டிருந்தவாதர்போல்
மொய்கிடக்குமண்ணரேண்முயங்கிடாதுமுன்னமே
கைகடக்கவிட்டிருந்துகட்டுரைப்பதென்கொலோ. (ருச)

---

48. இராமன் மரகதமேனியனாதலின் இலைகளாலே வண்ணங்காட்டலாலென்றார் இராமனைக்கண்டவழித்தன் வடிவழகிவந்து மாமை நிறங்கோடலான் என்றளிர் நிறமுண்ட கண்ணென்றார்.

50. என்செய்தீர் ஒன்றுஞ்செய்திலீர்என்பது படநின்றது. கலைகள் பிறத்தற்கிடமாகிய மதிக்கொழுந்தென்பார் முலைக்கலாமதிக்கொழுந்தென்றார்.

52. காரியானைகரியயானை என்றபடி.

54. மணிமுதலியனயாவுந்தருதலின் பெய்கடலென்றார். நீலமாலை - ஒரு சேடியின்பெயர். நால்வகைப்படையுட் சிறந்தமையின் கயத்தை முற்கூறினார்.

என்றுகொண்டுணைந்துநைந்திரங்கிவிம்மிவிம்மியே
பொன்றிணிந்தகொங்கைமங்கையிடரின்மூழ்குபோழ்தின்வாய்க்
குன்றமன்னசிலைமுரிந்தகொள்கைகொண்டுகுளிர்மனத்
தொன்றுமுண்கண்மதிமுகத்தொருத்திசெய்ததுரைசெய்வாம். ()

வேறு.

வடங்களுங்குழைகளும்வானவில்லிடத்
தொடங்குபுகலைகளுஞ்சுழலுஞ்சோர்தர
நுடங்கியமின்னெனநொய்தினெய்தினாள்
நெடுந்தடங்கிடந்தகண்ணீலமாலையே. (ருயு)

வந்தடிவணங்கிலள்வழங்குமோதையள்
அந்தமிலுவகையாளாடிப்பாடினள்
சிந்தையுண்மகிழ்ச்சியும்புகுந்தசெய்கையும்
சுந்தரிசொல்லெனத்தொழுதுசொல்லுவாள். (ருஎ)

கயரதுரகமாக்கடலன்கல்வியன்
தயரதனெனும்பெயர்த்தனிச்செங்கோலினான்
புயல்பொழிதடக்கையான்புதல்வன்பூங்கணை
மயல்விளைமதனற்கும்வடிவுமேன்மையான். (ருஅ)

மராமரமிவையெனவலியதோளினான்
அராவணையமலனென்றயிர்க்குமாற்றலான்
இராமனென்பதுபெயரிளையகோவொடும்
பராவருமுனியொடும்பதிவந்தெய்தினான். (ருகூ)

பூணியன்மொய்ம்பினன்புனிதனெய்தவில்
காணியவந்தனனென்னக்காவலன்
ஆணையினடைந்தவில்லதனையாண்டகை
நாணினிதேற்றினனடுங்கிற்றும்பரே. (கூ0)

மாத்திரையளவிற்றாண்மடுத்துமுன்பயில்
சூத்திரமிதுவெனத்தோளின்வாங்கினான்
ஏத்தினரிமையவரிழிந்தபூமழை
வேத்தவைநடுக்குறமுறிந்துவீழ்ந்ததே. (கூக)

கோமுனியுடன்வருகொண்டலென்றபின்
தாமரைக்கண்ணினனென்றதன்மையால்
ஆமவனேகொலென்றையநீங்கினாள்
வாமமேகலையினுள்வளர்ந்தஅல்குலே. (கூஉ)

---

62. இலக்கணக்குறைபாடின்றியே வளராநின்ற தென்பார், வாமமேகலையினுள் வளர்ந்த அல்குலென்றார்.

இல்லையே நுசுப்பென்பருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும்விம்மவிம்முவாள்
சொல்லியகுறியினித் தோன்றலேயவன்
அல்லனேலிறப்பனென்றகத் துன்னினாள். (௬௩)

ஆசையுற் றயர்பவளன்னளாயினள்
பாசடைக்கமலத் தோன்படைத் தவில்லிறும்
ஓசையிற்பெரியதோருவகையெய் தியக்
கோசிகற்கொருமொழி சனகன்கூறுவான். (௬௪)

உரைசெயெம்பெருமவுன்புதல்வன் வேள்வி தான்
விரைவினின்றொருபகன் முடித் தல்வேட்கையோ
முரசெறிந் ததிர்கழன் முழங்குதானையவ்
வரசையுமிவ்வழியழைத் தல்வேட்கையோ. (௬௫)

மல்லலானவ்வுரைபகரமாதவன்
ஒல்லையிலவனும்வந் துறுதனன்றென
எல்லையிலுவகையானியைந் தவாறெலாஞ்
சொல்லுகென்றோலையுந் தூதும்போக்கினான். (௬௬)

ஆ திருவிருத்தம் - அகஅ.

## கங-வது, எழூச்சிப்படலம்.

கடுகியதூ தருங்காலிற்காலிற்சென்
றிடிகுரன்முரசதிரயோத் தியெய்தினார்
அடியிணைதொழுமிடமின்றிமன்னர் தம்
முடியொடுமுடிபொருவாயின்முன்னினார். (க)

முகந் தனர் திருவருண்முறையினெய்தினார்
திகழ்ந்தொளிர்கழலிணைதொழுதுசெல்வனைப்
புகழ்ந் தனரரசநின்புதல்வர்போயபின்
நிகழ்ந் ததையிதுவெனக்கெடுதுகூறினார். (உ)

கூறியதூ தருங்கொணர்ந் தவோலையை
ஈறில்வண்புகழினாயிதுவதென்றனர்

65. வேள்வி - மணத்தை.

1. ஒருவரோடொருவர் நெருங்கி முற்படுவதனான் 'முடியோடு முடிபொருவாயிலென்றார்'

வேறொருபுலமகன்விரும்பிவாங்கினான்
மாறதிர்கழளினான்வாசியென்றனன். (௩)

இலைமுகப்படத்தவரெழுதிக்காட்டிய
தலைமகன்சிலைத்தொழில்செவியிற்சார்தலும்
நிலைமுகவலயங்கணிமிர்ந்துநீங்கிட
மலையெனவளர்ந்தனவயிரத்தோள்களே. (௪)

வெற்றிவேன்மன்னவன்றக்கன்வேள்வியில்
கற்றைவார்சடைமுடிக்கணிச்சிவானவன்
முற்றவேழுலகையும்வென்றமூரிவில்
இற்றபேரொலிகொலன்றிடித்ததிங்கென்றான். (௫)

என்றுரைத்தெதிரெதிரிடைவிடாதுநேர்
துன்றியகனைகழற்றார்கொள்கெனப்
பொன்றிணிகலன்களுந்தூசும்போக்கினான்
குன்றெனவுயரியகுவவுத்தோளினான். (௬)

வானவன்குலத்தெமர்வரத்தினால்வரும்
வேனில்வேளிருந்தவம்மிதிலைநோக்கிநம்
சேனையுமரசருஞ்செல்கமுந்தென
ஆணைமேன்மணமுரசறைகென்றேவினான். (௭)

வாம்பரிவிரிதிரைக்கடலைவள்ளுவன்
தேம்பொழிதுழாய்முடிச்செங்கண்மாலவன்
ஆம்பரிசுலகெலாமளந்துகொண்டநாள்
சாம்புவன்றிரிந்தெனத்திரிந்துசாற்றினான். (௮)

சாற்றியமுரசொலிசெவியிற்சாருமுன்
கோற்றொடிமகளிருங்கோலமைந்தரும்
வேற்றருகுமாரரும்வென்றிவேந்தரும்
காற்றெறிகடலெனக்களிப்பினோங்கினார். (௯)

விடைபொருநடையினான்சேனைவெள்ளமோர்
இடையிலையுலகினிலென்னவீண்டிய

---

5. கனிச்சி வானவன் - மழுப்படை இறைவன். கணிச்சி யென்னும் விசேடணத்தாற் சிவனை யுணர்த்திற்று.

7. வானவன் - வானத்திலியங்குங் காரணத்தால் சூரியனுக்குத் தலைமைப்பற்றிவந்த பெயர். வேள் - விருப்பத்தையுண்டாக்குவோன்.

கடையுகமுடிவினிலெவையுங்காற்படப்
புடைபெயர்கடலெனவெழுந்துபோயதே. (கo)

சில்லிடமுலகெனச்செறிந்ததேர்கடாம்
புல்லிடுசுடரெனப்பொலிந்தவேந்தரால்
எல்லிடுகதிர்மணியெறிக்குமோடையால்
வில்லிடுமுகிலெனப்பொலிந்தவேழமே. (கக)

கால்விரிந்தெழுகுடைகணக்கிலோதிமம்
பால்விரிந்ததுவெனப்பறப்பபோன்றன
மேல்விரிந்தெழுகொடிப்படலைவிண்ணெலாம்
தோலுரிந்துகுவனபோன்றுதோன்றுமால். (கஉ)

நுடங்கியதுகிற்கொடிநூழைக்கைம்மலைக்
கடங்கலுஞ்சேனையைக்கடலிதாமென
இடம்படவெங்கணுமெழுந்தவெண்முகில்
தடம்புனல்பருகிடத்தாழ்வபோன்றவே. (கங)

இடையிடையிளவெயிலெறிக்குமவ்வெயில்
தழையிடைநிழல்கெடத்தவழுமத்தழை
மழையிடையெழில்கெடமலருமம்மழை
குழைவுறமுழங்கிடுங்குழாங்கொள்பேரியே. (கச)

மன்னணிப்புரவிகண்மகளிரூர்வன
அன்னமுந்தியதிரையாறுபோன்றன
பொன்னணிபுணர்முலைப்புரிமென்கூந்தலார்
மின்னெனமடப்பிடிமேகம்போன்றவே. (கரு)

இணையெடுத்திடையிடைநெருக்கவேழையர்
துணைமுலைக்குங்குமச்சுவடுமாடவர்
மணிவரைப்புயத்துமென்சாந்துமாழ்கிமேல்
அணையெனப்பொலிந்ததக்கடல்செலாறரோ. (கசு)

முத்திறன்முழுநிலவெறிக்குமொய்ம்மணிப்
பத்தியாலிளவெயில்பரப்பும்பாகினும்
தித்தியாநின்றசொற்சிவந்தவாய்ச்சியர்
உத்தராசங்கமிட்டொளிக்குங்கூற்றமே. (கஎ)

---

15. மாதரை மின்னாகவும், மடப்பிடியை மேகமாகவு முருவகஞ்செய்தார். 17. உத்தராசங்கம் - மேற்போர்வை.

வில்லினர்வாளினர்வெறித்தகுஞ்சியர்
கல்லினையழித்துயர்கனகத்தோளினர்
வல்லியின்மருங்கினர்மருங்குமாப்பிடி
புல்லியகளிறெனமைந்தர்போயினார். (௧௮)

மன்றலம்புதுமலர்மழையிற்சூழ்ந்தெனத்
துன்றிருகூந்தலார்முகங்கடோன்றலால்
ஒன்றலாமுழுமதியூருமானம்போல்
சென்றனவாலவர்சிவிகையீட்டமே. (௧௯)

மொய்திரைக்கடலெனமுழங்குமூக்குடைக்
கைகளிற்றிசைநிலைக்களிற்றையாய்வன
மையனுற்றிழிமதமழையருமையால்
தொய்யலைக்கடந்திலசூழியானையே. (௨0)

சூருடைநிலையெனத்தோய்ந்துந்தோய்கிலா
வாருடைவனமுலைமகளிர்சிந்தைபோல்
தாரொடுஞ்சதியொடுந்தாவுமாயினும்
பாரிடைமிதிக்கிலபரியின்பந்தியே. (௨௧)

ஊடியமனத்தினருருத்தநோக்கினர்
நீடியவுயிர்ப்பினர்நெரிந்தநெற்றியர்
தோடவிழ்கோதைபுந்துறந்தகூந்தலர்
ஆடவருயிரெனவருகுபோயினான். (௨௨)

மாறெனத்தடங்களைப்பொருதுமாமரம்
ஊறுபட்டிடவிடையொடித்துச்சாய்த்துராய்
ஆறெனச்சென்றனவருவிபாய்கவுள்
தாறெனக்கனலுமிழ்தறுகண்யானையே. (௨௩)

உழுந்திடவிடமிலையுலகமெங்கணும்
அழுந்தியவுயிர்க்கெலாமருட்கொம்பாயினான்
எழுந்திலனெழுந்திடைப்படருஞ்சேனையின்
கொழுந்துபோய்க்கொடிமதின்மிதிலைகூடிற்றே. (௨௪)

கண்டவர்மனங்கள்கைகோப்பகாதலின்
வண்டமர்கோதையர்வதனராசியால்

---

20. மூக்குடைக்கை - புழைக்கை.

21. சூருடைநிலை - பூமியிற் கால்தோயாது செல்லல்.

பண்டிகள்பண்டிகள்பரிசிற்செல்வன
புண்டரீகத்தடம்போவபோன்றவே. (உரு)

பாண்டிலின்வைத்தவோர்பாவைதன்னொடும்
ஈண்டியவன்பினனேகுவானிடை
காண்டலுநோக்கியகடைக்கணஞ்சனம்
ஆண்டகைக்கினியதோரமுதமாயதே. (உசு)

பிள்ளைமானொக்கியைப்பிரிந்துபோகின்றான்
அள்ளனீர்மருதவைப்பதனினன்னமாம்
புள்ளுமென்றாமரைப்பூவுநோக்கினான்
உள்ளமுந்தானுநின்றூசலாடுவான். (உஎ)

வேறு.

அங்கண்ஞாலத்தரசுமிடைந்தவா
பொங்குவெண்குடைசாமரைபோர்த்தலால்
கங்கையாறுகடுத்ததுகாரெனச்
சங்குபேரிமுழங்கியதானையே. (உஅ)

அமரரஞ்சொல்லணங்கனையாருயிர்
கவருங்கூர்நுதிக்கண்ணெனும்காலவேல்
குமரர்நெஞ்சுகுளிப்பவழங்கலால்
சமரபூமியுமொத்ததுதானையே. (உகூ)

தோண்மிடைந்தனதூணமிடைந்தன
வாண்மிடைந்தனவான்மின்மிடைந்தெனத்
தாண்மிடைந்தனதம்பிமிடைந்தன
ஆண்மிடைந்தனவாளிமிடைந்தன. (௩0)

வார்குலாமுலைவைத்தகண்வாங்கிடப்
பேர்கிலாதுபிறங்குமுகத்தினான்
தேர்கிலானெறியந்தரிற்சென்றொரு
மூரிமாமதயானையைமுட்டினான். (௩க)

சுழிகொழ்வாம்பரிதுள்ளவோர்தோகையாள்
வழுவிவீழலுற்றாளையோர்வள்ளறான்
எழுவினீள்புயத்தாலெடுத்தேந்தினான்
தழுவிநின்றொழியான்றரைதான்வையான். (௩உ)

துணைத்ததாமரைநோவத்தொடர்ந்தடர்
கணைக்கருங்கணினாளையோர்காளைதான்

31. வார்குலாமுலை - கச்சுவிரும்புமுலை.

பணைத்தவெம்முலைப்பாய்மதயானையை
அணைக்கநங்கைக்ககலிடமில்லென்றான். (௩௩)

சுழியுங்குஞ்சிமிசைச்சுரும்பார்த்திடப்
பொழியுமாமதயானையிற்போகின்றான்
கழியகூரியவென்றொருகாரிகை
விழியைநோக்கித்தன்வேலையுநோக்கினான். (௩௪)

தரங்கவார்குழற்றாமரைச்சீறடிக்
கருங்கண்வாளுடையாளையோர்காளைதான்
நெருங்குபூண்முலைநீள்வளைத்தோளினிர்
மருங்குலெங்குமறந்ததுநீரென்றான். (௩௫)

கூற்றம்போலுங்கொலைக்கண்ணினாலன்றி
மாற்றம்பேசுகிலாளையோர்வள்ளறான்
ஆற்றுநீரிடையங்கைகளாலெடுத்
தேற்றுவாருமையாவார்கொலோவென்றான். (௩௬)

தள்ளரும்பரந்தாங்கியவொட்டகம்
தெள்ளுதேன்கரும்பியாவையுந்தின்கில
உள்ளமென்னத்தம்வாயுமுலர்ந்தன
கள்ளுண்மாந்தரிற்கைப்பனதேடியே. (௩௭)

அரத்தநோக்கினரற்றிரண்மேனியர்
பரித்தகாவினர்பப்பரரேகினார்
திருத்துகூடத்திற்றிண்கணையத்தொடும்
எருத்தினேந்தியமால்களிறென்னவே. (௩௮)

பித்தயானைபிணங்கிப்பிடியிற்கை
வைத்தமேலிருந்தஞ்சியமங்கைமார்
எய்த்திடக்கணுற்றார்புதைத்தார்க்கிரு
கைத்தலங்களிற்கண்ணடங்காமையே. (௩௯)

வாமமேகலையாரிடைவாலதி
பூமிதோய்பிடிச்சிந்தரும்போயினார்
காமர்தாமரைநாண்மலர்க்கானத்துள்
ஆமைமேல்வருந்தேரையினைபரோ. (௪௦)

---

36. கண்ணினாலன்றி மாற்றம்பேசவென்றது - கண்ணளவானன்றிவாயிற்றோன்றுஞ் சொற்களை.

38. கணையம் - மதயானையைத்தடுக்குமரம்.

40. சிந்தர் - குறளர், இவர் மெய்காப்பாளர்.

இம்பர்நாட்டின் றரமல்லனீங்கிவள்
உம்பர்கோமகற்கென்கின் றதொக்குமால்
கம்பமாவரக்கால்கள்வளைத்தொரு
கொம்பனாளைக்கொண்டோடுங்குதிரையே. (சக)

சந்தவார்குழல்சோர்பவைதாங்கலார்
சிந்துமேகலைசிந்தையுஞ்செய்கலார்
எந்தைவில்லிறுத்தானெனுமின்சொலை
மைந்தர்பேசமனங்களித்தோடுவார். (சஉ)

குடையர்குண்டிகைத்தூக்கினர்குந்திய
நடையர்நாசிபுதைத்தகைநாற்றலர்
கடைகளிற்றையுங்காரிகையாரையும்
அடையவஞ்சியவந்தணர்முந்தினார். (சங)

நாறுபூங்குழனங்கையோர்கண்கனீர்
ஊறுநேர்வந்துருவுவெளிப்பட
மாறுகொண்டனைவந்தனையாகில்வந்
தேறுதேறெனக்கைகளிழிச்சுவார். (சச)

குரைத்ததேருங்களிறுங்குதிரையும்
நிரைத்தவார்முரசுநெளிந்தெங்கணும்
இரைத்தபேரொலியாலிடையாவரும்
உரைத்துணர்திதிலருமரினேகினார். (சரு)

நுட்சிலம்பிலவந்தனநுண்டுகில்
கட்சிலம்புகருங்குழலார்குழு
உட்சிலம்புசிலம்பவொதுங்கலால்
புட்சிலம்பிடுபொய்கையும்போன்றதே. (சசு)

தெண்டிரைப்பரவைத்திருவன்னவர்
துண்டிரைப்புரைநோக்கியநோக்கினைக்
கண்டிரைப்பனவாடவர்கண்களி
வண்டிரைப்பனவானைமதங்களே. (சஎ)

உழைகலித்தனவென்னவுயிர்த்துணை
நுழைகலிக்கருங்கண்ணியர்நூபுர

44. உருவுவெளிப்பட என்றார். போர்வயிற்பிரிந்த தலைவன் உருவெளித்தோற்றத்தை. 46. கள் - மலர்த்தேன்.
48. உழை - எழிசைக்குள். சிரத்திற்பிறக்குமிசை.

இழைகலித் தனவின்னியமாவெழு
மழைகலித்தெனவாசிகலித்தவே. (சஅ)

மண்களிப்பநடப்பவர்வாணுதல்
உண்களிக்கமலங்களினுள்ளுறை
திண்களிச்சிறு தும்பியெனச்சிலர்
கண்களித்தனகாமன்களிக்கவே. (சகூ)

எண்ணமாத்திரமும்மரிதாமிடை
வண்ணமாத்துவர்வாய்க்கனிவாய்ச்சியர்
திண்ணமாத்தொளிர்செவ்விளநீரிழி
சுண்ணமாத்தனதூளியுமாத்தவே. (ருO)

சித்திரத்தடந்தேர்மைந்தர்மங்கையர்
உய்த்துரைப்பனிணைப்பவுலப்பிலர்
இத்திறத்தினரெத்தனைபோபலர்
மொய்த்திரைத்துவழிக்கொண்டுமுன்னினார். (ருக)

வேறு.

குசையுறுபரியுந்தேரும்வீரருங்குழுமியெங்கும்
விசையொடுகடுகப்பொங்கிவீங்கியதூளிவிம்மிப்
பசையுறுதுளியின்றுரைப்பசுந்தொளையடைத்தமேகம்
திசைதொறுநின்றயானைமதத்தொளைசெம்மிற்றன்றே. (ருஉ)

கேடகத்தடக்கையாலேகிளரொளிவாளும்பற்றிச்
சூடகத்தளிர்க்கைமற்றைச்சுடர்மணித்தடக்கைபற்றி
ஆடகத்தோடையானையழிமதத்திழுக்கலாற்றிற்
பாடகக்காலினாரைப்பயப்பயக்கொண்டுபோனார். (ருந)

செய்களின்மடுவினன்னீர்ச்சிறைகளினிறையப்பூத்த
நெய்தலுங்குமுதப்பூவுநெகிழ்ந்தசெங்கமலப்போதும்
கைகளுமுகமும்வாயுங்கண்களுங்காட்டக்கண்டு
கொய்தலைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரும். (ருச)

பந்தியம்புரவிநின்றும்பாரிடையிழிந்தோர்வாசக்
கொந்தளபாரஞ்சோரக்குலமணிக்கலன்கள்சிந்தக்

49. தும்பி - வண்டு. 50. யாத்தனமென்றது மரீஇயது 'ஆதுபில் காலத்தெந்தை' என் புழிப்போல.

52. செம்மிற்று - அடைத்தது. 53. ஆடகம் - நால்வகைப்பொன்னி லொன்று.

சந்தநுண்டுகிலும்வீழத்தளிர்க்கையாலணைத்துச்சார
வந்ததுவேழமென்னமயிலெனவிரியல்போவார். (௫௫)

குடையொடுபிச்சந்தொங்கற்குழாங்களுங்கொடியின்காடும்
இடையிடைமயங்கியெங்கும்வெளிகரந்திருளைச்செய்யப்
படைகளுமுடியும்பூணும்படர்வெயில்பரப்பிச்செல்ல
இடையொருகணத்தினுள்ளேயிரவுண்டுபகலுமுண்டே. (௫௬)

முருக்கிதழ்முத்தமூரன்முறுவலார்முகங்களென்னும்
திருக்கிளர்கமலப்போதிற்றிரட்டினகிடந்தகூர்வாள்
நெருக்கிடையறுக்குநீர்கணீங்குமினீங்குமென்றன்
றருக்கணிலொளிருமேனியாடவரகலப்போவார். (௫௭)

நீந்தருநெறியினுற்றநெருக்கினூற்சுருக்குண்டற்றுக்
காந்தினமணியுமுத்துஞ்சிந்தினகலாபஞ்சூழ்ந்த
பாந்தளினல்குலார்தம்பரிபுரம்புலம்பப்பைம்பொற்
பூந்தளிருறைப்பமாழ்கிப்போக்கரிதென்னநிற்பார். (௫௮)

கொற்றபல்லியங்களெங்குங்கொண்டலிற்றுவைப்பப்பண்டிப்
பெற்றவேறன்னப்புள்ளிற்பேதையர்வெருவிநீங்க
முற்றுறுபாரங்களெல்லாமுறைமுறைபாசத்தோடும்
பற்றறவீசியேகியோகியிற்பரிவுதீர்ந்த. (௫௯)

காற்செறிவேகப்பாகர்கார்முகவுண்டைபாரா
வார்சிறைக்கொங்கையன்னகும்பமுமருப்புங்காணப்
பாற்செறிகடலிற்றோன்றும்பணைக்கைமால்யானையென்ன
நீர்ச்சிறைபற்றியேறுநின்றகுன்றனையவேழம். (௬௦)

அறலியற்கூந்தற்கண்வாளமுதுகுகுமுதச்செவ்வாய்
விறலியரோடுநல்யாழ்ச்செயிரியர்புரவிமேலோர்
நறைசெவிப்பெய்வதென்னநைவளமேகப்பாடல்
முறைமுறைநணுகப்போனார்கின்னரமிதுனமொப்பார். (௬௧)

---

56. குடைகளிறு முதலாயின இருளைச்செய்தமையாலும், படைகளு முடியு முதலாயினபகலைச்செய்தமையாலும், ‘இடையொரு கணத்தினுள்ளே யிரவுண்டு பகலுமுண்டே’ என்றார்.

57. நீர்கள் - முன்னிலைப் பன்மைப்பெயர்; இதனை ‘மேவித்தொழு துய் மினீர்கள்’ என்றதனானறிக.

58. கலாபம் - பதினாறு கோவைமணி, இது மாதரிடையணியுளொன்று.

60. காற்செறிவேகம் - வாயுவேகம்.

அருவிபெய்வரையிற்பொங்கியங்குசநிமிரவெங்கும்
இரியலிற்சனங்கள்சிந்தவிளங்களிச்செங்கண்யானை
விரிசிறைத்தும்பிவேறோர் வீழ்மதந்தோய்ந்துமாதர்
சுரிகுழல்படியவேற்றின்பிடியொடுந்தொடர்ந்துசெல்வ. (௬௨)

நிறைமதித்தோற்றங்கண்டநீணெடுங்கடலிற்றாகி
அறைபறைதுவைப்பத்தேருமானையுமாடன்மாவும்
கறைகெழுவேற்கணாருமைந்தருங்கவினியொல்லை
நெறியிடைப்படரவேந்தனையமங்கையர் தாஞ்செல்வார். (௬௩)

பொய்கையங்கமலக்கானிற்பொலிவதோரன்னமென்னக்
கைகயர்வேந்தன்பாவைகணிகையரீட்டம்பொங்கி
ஐயிருநூறுசூழ்ந்தவாய்மணிச்சிவிகைதன்மேல்
தெய்வமங்கையருநாணத்தேனிசைமுரலப்போனாள். (௬௪)

காரணமின்றியேயுங்கனலெழவிழிக்குங்கண்ணார்
வீரவேத்திரத்தார் தாழ்ந்துவிரிந்தகஞ்சுகத்துமெய்யார்
தாரணிபுரவிமேலார் தலத்துளார் தடித்தசொல்லார்
ஆரணங்கனையமாதரடிமுறைகாத்துப்போனார். (௬௫)

விரிமணித்தார்கள்பூண்டவேசரிவெரிநிற்றோன்றும்
அரிமலர்த்தடங்கணல்லாராயிரத்திரட்டிசூழக்
குருமணிச்சிவிகைதன்மேற்கொண்டலின்மின்னிதென்ன
இருவரைப்பயந்தநங்கையாழிசைமுரலப்போனாள். (௬௬)

செங்கையின்மஞ்ஞையன்னஞ்சிறுகிளிபூவைபாவை
சங்குறைகழித்தவன்னசாமரைமுதலதாங்கி
இங்கலதெண்ணுங்காலிவ்வெழுதிரைவளாகந்தன்னில்
மங்கையரில்லையென்னமடந்தையர்மருங்குபோனார். (௬௭)

வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்முகத்தைவெண்மதியமென்று
கொள்ளையிற்சுற்றுமீன்கள்குழுமியவனையவூர்தி
தெள்ளரிப்பாண்டிப்பாணிச்செயிரியரிசைத்தேன்சிந்த
வள்ளலைப்பயந்தநங்கைவானவர்வணங்கப்போனாள். (௬௮)

கூனொடுகுறளுஞ்சிந்துஞ்சிலதியர்குழாமுங்கொண்ட
பானிறப்புரவியன்னப்புள்ளெனப்பாரிற்செல்லத்

---

63. நேயமங்கையரென்றது - அறுபதினாயிரமாதரை.
66. வெரிந் - முதுகு. இருவரைப்பயந்தநங்கை - சுமத்திரியை.

தேனொடுஞிமிறும்வண்டுந்தும்பியுந்தொடர்ந்துசெல்லப்
பூநிறைகூந்தன்மாதர்புடைபிடி நடையிற்போனார். (௬௯)

துப்பினின்மணியிற்பொன்னிற்சுடர்மரகதந்தின்முத்தின்
ஒப்புறவமைத்தபைம்பூணொளிபம்புகழவேறி
முப்பதிற்றிரட்டிகொண்டவாயிரமுகிழ்மென்கொங்கைச்
செப்பருந்திருவினல்லார்தேர்மிசைசூழப்போனார். (௭௦)

செவியயினமிர்தகேள்வித்தெவிட்டினார்தேவர்நாவின்
அவிகையினளிக்குநீரரையிருகோடிசூழக்
கவிகையினீழற்கற்பினருந்ததிகணவன்வெள்ளைச்
சிவிகையினன்னமூருந்திசைமுகனென்னச்சென்றான். (௭௧)

பொருகளிறிவுளிபொற்றேர்பொலங்கழற்குமரர்முந்நீர்
அருவரைசூழ்ந்ததென்னவருகுபின்முன்னுஞ்செல்லத்
திருவளர்மார்பர்தெய்வச்சிலையினர்தேரர்வீரர்
இருவருமுனிபின்போனவிருவருமென்னப்போனார். (௭௨)

நித்தியநியமமுற்றிநேமியான்பாதஞ்சென்னி
வைத்தபின்மறைவலோர்க்குவரப்பறுமணியும்பொன்னும்
பத்தியானிரையும்பாரும்பரிவுடனல்கிப்போனான்
முத்தணிவைரப்பூணான்மங்கலமுகூர்த்தநன்னாள். (௭௩)

இருபிறப்பாளரெண்ணாயிரர்மணிக்கலசமேந்தி
அருமறைவருக்கமோதியறுகுநீரளித்துச்சூழ
வான்முறைவந்தார்கோடிமங்கலமழலைச்செவ்வாய்ப்
பருமணிக்கலாபத்தார்பல்லாண்டிசைபரவப்போனான். (௭௪)

கண்டிலனென்னையென்பார்கண்டனனென்னையென்பார்
குண்டலம்வீழ்ந்ததென்பார்குறுகரிதினிச்சென்றென்பார்
உண்டுகொலெழுச்சியென்பாரொலித்தனசங்கமென்பார்
மண்டலவேந்தர்வந்துநெருங்கினர்மயங்கவென்பார். (௭௫)

பொற்றொடிமகளிருரும்பொலங்கொடார்ப்புரவிவெள்ளம்
சுற்றுறுகமலம்பூத்ததொடுகடற்றிரையிற்செல்லக்
கொற்றவேன்மன்னர்செங்கைப்பங்கயக்குழாங்கள்கூப்ப
மற்றொருகதிரோனென்னமணிநெடுந்தேரிற்போனான். (௭௬)

69. தேன்முதலாயின வென்றது - நால்வகை வண்டினை. ஞிமிறு - பொன்வண்டு.

72. இருவரென்றது - பரதசத்துருக்கரை

73. நேமியான் - ஆயிர மோலியரும்பாஞ்சுடரை.

ஆர்த்ததுவிசும்பைமுட்டிநீண்டகன்றிசைகளெங்கும்
போர்த்ததங்கொருவர்தம்மையொருவர்கட்புலங்கொளாமை
சீர்த்ததுசெறிந்ததோடித்திரைநெடுங்கடலையெல்லாம்
தூர்த்ததுசகரரோடுபகைத்தெனத்தூளிவெள்ளம். (எஎ)

சங்கமும்பணையுங்கொம்புந்தாளமுங்காளத்தோடு
மங்கலபேரிசெய்தபேரொலிமழையையோட்டத்
தொங்கலுங்குடையுந்தோகைப்பிச்சமுஞ்சுடரையோட்டத்
திங்கள்வெண்குடைகண்டோடத்தேவருமருளச்சென்றான். (எஅ)

மந்திரகீதவோதைவலம்புரிமுழங்குமோதை
அந்தணராசியோதைபார்த்தெழுமுரசினோதை
கந்துகொல்களிற்றினோதைகடிகையர்கவிதையோதை
இந்திரதிருவன்செல்லவெழுந்தனதிசைகளெல்லாம். (எகூ)

நோக்கியதிசைகளெல்லாந்தன்னையேநோக்கிச்செல்ல
வீக்கியகழற்கால்வேந்தர்விரிந்தகைம்மலர்கள்கூப்பத்
தாக்கியகளிறுந்தேரும்புரவியும்படைஞர்தாளும்
ஆக்கியதூளிவிண்ணுமண்ணுலகாக்கப்போனான். (அ௦)

வீரருங்களிறுந்தேரும்புரவியுமிடைந்தசேனை
பேர்விடமில்லைமற்றோருலகில்லைபெயர்க்கலாகா
நீருடையாடையாளுநெளித்தனண்முதுகையென்றால்
பார்பொறைநீக்கினானென்றுரைத்ததெப்பரிசுமன்றோ. (அக)

இன்னணமேகிமன்னன்யோசனையிரண்டுசென்றான்
பொன்வரைபோலுமிந்துசயிலத்தின்சாரல்புக்காள்
மன்மதக்களிறுமாதர்கொங்கையுமாரனம்புந்
தென்வரைச்சாந்துநாறுஞ்சேனையுமிறுத்ததன்றே. (அஉ)

ஆக திருவிருத்தம் - அகூஅ.

## கச - வது, வரைக்காட்சிப்படலம்.

கோவையார்வடக்கொழுங்குவடொடிதரநிவந்த
ஆவிவேட்டனவரிசிலையனங்கன்மேற்கொண்ட
பூவைவாய்ச்சியர்முலைசிலபுயத்தொடும்பூட்டத்
தேவதாரத்துஞ்சந்தினும்பூட்டினசிலமா. (க)

நேரொடுங்கலில்பகையினைநீதியால்வெல்லும்
சோர்விடம்பெறாவுணர்வினன்சூழ்ச்சியேபோல

வாரொடுந்தொடர்கவட்டொடுமராமரக்குவட்டை
வேரொடுங்கொடுகிரியெனநடந்ததோர்வேழம். (உ)

திரண்டதாணெடுஞ்செறிபணைமருதிடையொடியப்
புரண்டுபின்வரவுரலொடுபோனவன்போல
உருண்டுகொறூடர்பிறகிடுதறியொடுமொருங்கே
இரண்டுமாமரமிடையிறநடந்ததோர்யானை. (ங)

கதங்கொள்சீற்றத்தையாற்றுவானினியனகழறிப்
பதங்கொள்பாகனுமந்திரியொத்தனன்பனூல்
விதங்களாலவன்மெல்லெனமெல்லெனவிளம்பும்
இதங்கள்கொள்கிலாவிறைவனையொத்ததோர்யானை. (ச)

மாறுகாணுமதாய்நின்றுமழையெனமுழங்கும்
தாறுபாய்கரிவனகரிதண்டத்தைத்தடவிப்
பாறுபின்செலக்காலெனச்செல்வதுபண்டோர்
ஆறுபோகியவாறுபோமாறுபோன்றதுவே. (ரு)

பாத்தயானையிற்பதங்களிற்படுமதநாறக்
காத்தவங்குசநிமிர்ந்திடக்கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலைம்பாலையைப்பொடிப்பொடியாகக்
காத்திரங்களாற்றலத்தொடுந்தேய்த்ததோர்களிறு. (சு)

அலகிலானைகளனேகமுமவற்றொடுமிடைந்த
திலகவாணுதற்பிடிகளுங்குருளையுஞ்செறிந்த
உலவைநீள்வனத்தூதமேயொத்ததவ்வூகத்
தலைவனேயொத்துப்பொலிந்ததுசந்திரசயிலம். (எ)

தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவர்தம்
மருண்டதன்மையைமாற்றுவரெனுமிதுவழக்கே
உருண்டவாய்தொறும்பொன்னுருளுரைத்துரைத்தோடி
இருண்டகல்லையுந்தன்னிறமாக்கியவிரதம். (அ)

கொவ்வைநோக்கியவாய்களையிந்திரகோபம்
கவ்விநோக்கினவென்றுகொல்காட்டினமயில்கள்

---

3. உரலொடுபோனவனென்றது - கண்ணபிரானை.

4. சீற்றம்-சிறிதுபொழுது நிகழுங்கோபம். இது சீறு என்னும்பகுதியடியாகப் பிறந்ததென்றறியாதார் சிறுமையென்னும் பண்டியாகப் பிறந்ததென்பர். 5. வனகரிதண்டத்தை தடவுதல் - மோப்பம் பிடித்தல்.

9. கவ்விநோக்கனவென்று கால் எனற்குக் கவ்விய அழகுடையனவென்றே எனக்கொள்க.

நவ்விநோக்கியர்நலங்கொண்மேகலைபோலஞ்சாயற்
செவ்விநோக்கின திரிவனபோல்வன திரிந்த. (கூ)

உய்க்கும்வாசிகளிழிந்தனரன்னத்திரெனுதுங்கி
மெய்க்கலாபமுங்குழைகளுமிழைகளும்விளங்கத்
தொக்கமென்மரநிழல்படத்துவன்றியசூழல்
புக்கமங்கையர்பூத்தகொம்பாமெனப்பொலிந்தார். (கo)

தளங்கொடாமரையெனத்தளிரடியினுமுகத்தும்
வளங்கொண்மாலைவண்டலமரவழிவருந்தினராய்
விளங்குதம்முருப்பளிங்கிடைவெளிப்படவேறோர்
துளங்குபாறையிற்றோழியரயிர்த்திடத்துயின்றார். (கக)

பிடிபுக்காயிடைமின்றொடும்பிறங்கியமேகம்
படிபுக்காலெனப்படிதரப்பரிபுரம்புலம்பத்
துடிபுக்காவிடைத்திருமகடாமரைதுறந்து
குடிபுக்காலெனக்குடிபுக்கார்கொடியன்னமடவார். (க௨)

வேறு.

உண்ணமுதமூட்டியிளையோர்நகர்கொணர்ந்த
துண்ணெனுமுழக்கினதுருக்கர்தரவந்த
மண்மகடன்மார்பினணிவன்னசரமென்னப்
பண்ணியல்வயப்பரிகள்பந்தியினிரைத்தார். (கங)

நீர்திரைநிரைத்தவெனநீடிரைநிரைத்தார்
ஆர்கலிநிரைத்தவெனவாவணநிரைத்தார்
கார்நிரையெனக்களிறுகாவிடைநிரைத்தார்
மாருதநிரைத்தவெனவாசிகணிரைத்தார். (க௪)

நடிக்குமயிலென்னவருநவ்விவிழியாரும்
வடிக்குமயில்வீரருமயங்கினர்திரிந்தார்
இடிக்குமுரசக்குரலினெங்குமுரல்சங்கின்
கொடிக்களினுணர்ந்தரசர்கோநகரடைந்தார். (கரு)

மிதிக்கதிமிர்தூளியின்விளக்கமருமெய்யைச்
சுதைக்கனுரையைப்பொருவுநூசுகொடுதூய்தா
உதிர்த்தனரிளங்குமரரோவியரிலோவம்
புதுக்கினரெனத்தருணமங்கையர்பொலிந்தார். (கசு)

தாளுயர்தடக்கிரியிழிந்துதரைசேரும்
கோளரியெனக்கரிகொள்கொற்றவரிழிந்தார்

12. ஆயிடை என்புழி அகரச்சுட்டு நீண்டது.

பாளைவிரியொத்துலவுசாமரைபடப்போய்
வாளெழுநிரைத்தபடமாடமவைபுக்கார். (௧௭)

தூசினொடுவெண்படமுடைக்குடில்கடோறும்
வாசநகைமங்கையர்முகங்கண்மழைவானிற்
காசின்மதியின்கதிர்வழங்குநிழலெங்கும்
வீசுதிரைவெண்புனல்விழுங்கியனபோலும் (௧௮)

மண்ணுறவிழுந்துநெடுவானுறவெழுந்து
கண்ணுதல்பொருந்தவருகண்ணனில்வருங்கார்
உண்ணிறநறும்பொடியைவீசியொருபாகம்
வெண்ணிறநறும்பொடிபுனைந்தமதவேழம். (௧௯)

தீயவரொடொன்றியதிறத்தருநலத்தோர்
ஆயவரையந்நிலையறிந்தனர்துறந்தாங்
கேயவருநுண்பொடிபடிந்துடனெழுந்தொண்
பாய்பரிவிரைந்துதறிநின்றனபரந்தே. (௨௦)

மும்மைபுரிவன்கயிறுகொய்துசெயன்மொய்ம்பால்
தம்மையுமுணர்ந்துதரைசண்டுவிரைகின்ற
அம்மையினொடிம்மையையறிந்துநெறிசெல்லும்
செம்மையவரென்னநனிசென்றனதுரங்கம். (௨௧)

விழுந்தபனியன்னதிரைவீசுபுரைதோறும்
கழங்குபயின்மங்கையர்கருங்கண்மிளிர்கின்ற
தழங்குகழிசிந்தியதரம்பயிறரங்கத்
தெழுந்திடைபிறழ்ந்தொளிர்கொழுங்கயல்களென்ன. (௨௨)

வெள்ளநெடுவாரியறவீசியுளவேனும்
கிள்ளவெழுகின்றபுனல்கேளிரின்விரும்பித்
தெள்ளுபுனலாறுசிறிதேயுதவுகின்ற
உள்ளதுமருந்தவும்வள்ளலையுமொத்த. (௨௩)

துன்றிநெறிபங்கிகடுளங்கவழலோடும்
மின்றிரிவவென்னமணியாரமிளிர்மார்பர்

---

17. படமாடம் - ஆடையானியன்றமனை' கூடாரம் என இக்காலவழக்கு.

21. அம்மை இம்மைப்பயனை யறிந்து முத்திநெறிப்படர்பவராதலிற் செம்மையவரென்றார்.

22. கழங்கு என்றது - கழங்காடலை.

23. நீசைக்கலக்கும் மதயானைகளை மதுகயிடவரோடுவமை கூறினார்.

மன்றன்மணநாறுபடமாடநுழைகின்றூர்
குன்றின்முழைதோறுநுழைகோளரிகளொத்தார். (உச)

நெருங்கயிலெயிற்றணையசெம்மயிரினொற்றிப்
பொருங்குலிகமப்பியனபோர்மணிகளார்ப்பப்
பெருங்களிறலைப்புனல்கலக்குவனபெட்டுக்
கருங்கடல்கலக்குமதுகயிடவரையொத்த. (உரு)

ஒக்கநெறியுய்ப்பவருரைத்தகுறிகொள்ளா
பக்கமினமொய்க்கயலலைக்கநனிபாரா
கைக்கரிமதத்தவிலைமாதர்கலையல்குல்
புக்கவரையொத்தனபுனற்சிறைகளோறு. (உசா)

துகிலிடைமடந்தையரொடாடவந்துவன்றிப்
பகலிடையவட்டிலின்மடுத்தெரிபரப்பும்
அகிலிடுகொழும்புகையழுங்கலின்முழங்கா
முகில்படுநெடுங்கடலையொத்துளதம்மூதூர். (உஎ)

வேறு.

கமருறுபொருப்பின்வாழும்விஞ்சையர்காணவந்தார்
தமரையுமறியார்நின்றுதிகைப்புறுதகைமைசான்ற
குமரருமங்கைமாருங்குழுவலால்வழுவிவிண்ணின்
றமரர்நாடிழிந்ததென்னப்பொலிந்ததவ்வனிகளெல்லாம். (உஅ)

வெயினிறங்குறையச்சோதிமின்னிழல்பரப்பமுன்னாள்
துயிலுணர்செவ்வியோருந்துனியுறுமுனிவினோரும்
குயிலொடுமினிதுபேசிச்சிலம்பொடுமினிதுகூவி
மயிலினந்திரிவவென்னத்திரிந்தனர்மகளிரெல்லாம். (உகூ)

தாளிணைகழல்களார்ப்பத்தாரிடையளிகளார்ப்ப
வாள்புடையிலங்கச்செங்கேழ்மணியணிவலயமின்னத்
தோளெனவுயர்ந்தகுன்றின்சூழல்களினிதுநோக்கி
வாளரிதிரிவவென்னத்திரிந்தனர்மைந்தரெல்லாம். (௩0)

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப்
பற்றியவளைந்தவென்னப்பரந்துவந்திறுத்தசேனைக்
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொம்பனார்வந்
துற்றவர்காணலுற்றமலைநிலையுரைத்துமன்றே. (௩௧)

---

29. துனி - கலவிக்காலத்து ஆடவர்பாற்குற்றங்காரணமாக மாதரிடத் துண்டாவதோர் சிறுபிணக்கு.

பம்புதேன்மிஞிறுதும்பிபாந்திசைபாடியாட
உம்பர்வானகத்துநின்றவொளிவளர் தருவின்றேங்கும்
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிகளுயிரேயன்ன துணைமடப்பிடிக்குநல்கும். (௩௨)

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர் குவளையன்ன
கண்மலர்க்கொடிச்சிமார்க்குக்கணித்தொழில்புரியும்வேங்கை
உண்மலர்வெறுத்ததும்பிபுதியதேனுதவுநாகத்
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே. (௩௩)

மீனெனும்பிடிகளோடும்விளங்கும்வெண்மதிநல்வேழம்
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குமுறிப்பாயும்
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்முந்தி
வானநீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ. (௩௪)

குப்புறற்கருமையாலக்குலவரைச்சாரல்வைகி
ஒப்பறத்துளங்குகின்றவுடுபதியாடியின்கண்
இப்புறத்தேயுங்காண்பார்குறத்தியரியைந்தகோலம்
அப்புறத்தேயுங்காண்பாரம்பையரழகுமாதோ. (௩௫)

உதியுறுதுருத்திபூதுமுலையுறுதீயும்வாயின்
அதிவிடநீறுநெய்யுமுண்கிலாதாவியுண்ணும்
கொதிநுனைவேற்கண்மாதர்குறத்தியர்நுதலினோடு
மதியினைவாங்கியொப்புக்காண்குவர்குறவர்மன்னோ. (௩௬)

பேணுதற்கரியசீயக்குருளையம்பிடிகளீன்ற
காணுதற்கினியவேழக்கன்றொடுகளிக்குமுன்றில்
கோணுதற்குரியதிங்கட்குழவியுங்குறவர்தங்கள்
வாணுதற்கொடிச்சிமாதர்மகவொடுதவழுமாதோ. (௩௭)

அஞ்சனக்கிரியினன்னவழிகவுள்யானைகொன்ற
வெஞ்சினத்தரியின்றிண்காற்கவட்டொடுவிஞ்சைவேந்தர்
குஞ்சியந்தலத்துநீலக்குலமணித்தலத்துமாதர்
பஞ்சியங்கமலம்பூத்தபசுஞ்சுவடுடைத்துமன்னோ. (௩௮)

செங்கயலனையநாட்டஞ்செவியுறுமுறுவரோன்று
பொங்கிருங்கூந்தல்சோராபுருவங்கணெரியாபூவின்

33. தினைக்குரல்கொய்தற்கு வேங்கைமலர்தல் காலமாதலின் கணித்தொழில் புரியும் வேங்கை என்றார்.

அங்கையுமிடறுங்கூட்டிநரம்பளைந்தமிர்தமூறும்
மங்கையர்பாடல்கேட்டுக்கின்னரமயங்குமாதோ. (௩௯)

கள்ளவிழ்கோதைமாதர்காதொடுமுறவுசெய்யும்
கொள்ளைவாட்கண்ணினார்தங்குங்குமக்குழம்புதங்கும்
தெள்ளியபளிக்குப்பாறைத்தெளிசுனைமணியிற்றேய்த்த
வள்ளமுநறவுமென்னவரம்பிலபொலியுமன்றே. (௪௰)

ஆடவராவிசோரவஞ்சனவாரிசோர
ஊடலிற்சிவந்தநாட்டத்தும்பர்தம்மரம்பைமாதர்
தோடலர்கோதைநின்றுந்துறந்தமந்தாரமாலை
வாடலநறவறாதவயின்வயின்வயங்குமாதோ. (௪௧)

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக்
கூந்தலின்கமுகின்பாளைகுழலினோடொப்புக்காண்பார்
ஏந்திழையரம்பைமாதரெரிமணிக்கடகம்வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். (௪௨)

சரம்பயில்சாபமென்னப்புருவங்கடம்மினுடை
நரம்பினோடினிதுபாடிநாடகமயிலோடாடி
அரம்பையர்வெறுத்துநீத்தவவிர்மணிக்கோவையாரம்
மரம்பயில்கடுவன்பூட்டமந்திகொண்டுவக்குமாதோ. (௪௩)

சாய்ந்துசாய்தடங்கடோறுந்தாதுராகத்திற்சார்ந்த
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலும்
காந்தினமணியின்சோதிக்கதிரொடுங்கலந்துமூசச்
சேந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமாதோ. (௪௪)

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முத்தஞ்சிந்தி
மலைமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான
அலகில்பொன்னலம்பியாரஞ்சார்ந்துவீழருவிமாலை
உலகளந்தவன்றன்மார்பினுத்தரியத்தையொத்த. (௪௫)

கோடிலாநாகப்போதோடிலவங்கமலருங்கூட்டிச்
சூடுவார்களிவண்டோச்சித்தூநறுந்தேறலுண்பார்
கேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும்
பாடலாலூடனீங்கும்பரிமுகமாக்கள்கண்டார். (௪௬)

---

41. மந்தாரம் - பஞ்சதருக்களிலொன்று.

44. தாதுராகம் - காவிக்கல்.

பெருங்களிறேயுமைந்தர்பேரெழிலாகத்தோடு
பொருந்துணைக்கொங்கையன்னபொருவில்கோங்கரும்பின்மாடே
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டுந்தங்கள்
கருங்குழற்களிக்கும்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார். (சஎ)

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்சுனைமூழ்கிப்புக்க
சுடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினார்தம்
வடகத்தோடுடுத்ததூசைமாசினீர்நனைப்பநோக்கிக்
கடகக்கையெறிந்துதம்மிற்கருங்கழல்வீரர்நக்கார். (சஅ)

பூவணைபலவுங்கண்டார்பொன்னரிமாலைகண்டார்
மேவருங்கோபமன்னவெள்ளிலைத்தம்பல்கண்டார்
ஆவியினினியகொண்கர்ப்பிரிந்தறிவழிந்தவிஞ்சைப்
பாவையர்வைகத்தீய்ந்தபல்லவசயனங்கண்டார். (சகூ)

பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப்
பீனவெம்முலையினிட்டபெருவிலையாரமாடத்
தேன்முரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார். (ரு௦)

சுந்தரவானமாதர்துவரிதழ்ப்பவளவாயும்
அந்தமில்சுரும்புந்தேனுமிருந்துமுண்டல்குல்விற்கும்
பைந்தொடிமகளிர்கைத்தோர்பசையிலையென்னவிட்ட
மைந்தரினீத்தநீந்தேன்வள்ளங்கள்பலவுங்கண்டார். (ருக)

அற்பகலாக்குஞ்சோதிப்பளிக்கறையமளிப்பாங்கர்
மற்பகமலர்ந்ததிண்டோள்வானவர்மணந்தகோல
விற்பகைநுதலினார்தங்கலவியின்வெறுத்துநீத்த
கற்பகமீன்றமாலைகலனொடுங்கிடப்பக்கண்டார். (ருஉ)

கையெனமலரவேண்டியரும்பியகாந்தளோக்கிப்
பையரவிவையென்றஞ்சிப்படைக்கண்கள்புதைக்கின்றாரும்
நெய்தவழ்வயிரப்பாறைநிழலிடைந்தோன்றும்போதைக்
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரும். (ருங)

பின்னங்களுகிரிற்செய்துபிண்டியந்தளிர்க்கைக்கொண்ட
சின்னங்கண்முலையினப்பித்தேமலர்கொய்கின்றாரும்

---

48. வடகம் - மேற்போர்வை.
50. பானல் - நீலோற்பலம்.

வன்னங்கள்பலவுந்தோன்றமணியொளிர்மலையினில்லா
அன்னங்கள்புகுந்தவென்னவகன்சுனைகுடைகின்றாரும். (ருச)

வேறு.

ஈனுமாமழையிளந்தளிரேயொளி
ஈனுமாமழையிளந்தளிரேயிடை
மானும்வேழமுநாகமுமாதர்தோள்
மானும்வேழமுநாகமுமாடெலாம். (ருரு)

திமிரமாவுடற்குங்குமச்சேதகம்
திமிரமாவொடுஞ்சந்தொடுந்தேய்க்குமால்
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார்
அமரமாதரையொத்ததவ்வானமே. (ருசு)

பேரவாவொடுமாசுணம்பேரவே
பேரவாவொடுமாசுணம்பேரவே
ஆரவாரத்திரைேடுமருவியே
ஆரவாரத்திரைேடுமருவியே. (ருஎ)

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம்
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை
அகிலுமாரமுமாரவங்கோங்குமே
அகிலுமாரமுமாரவங்கோங்குமே. (ருஅ)

துன்னரம்பைநிரம்பியதொல்வரை
துன்னரம்பையருருவிற்றோன்றுமால்
கின்னரம்பயில்கீதங்களென்னவாம்
கின்னரம்பயில்கின்றனரேழைமார். (ருகு)

ஊறுமாகடமாவுறவூங்கெலாம்
ஊறுமாகடமாமதமோடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே. (கூ0)

கல்லியங்குகருங்குறமங்கையர்
கல்லியங்ககழ்காமர்கிழங்கெடா
வல்லியங்கணெருங்குமருங்கெலாம்
வல்லியங்கணெருங்கிமயங்குமே. (கூக)

54. மணி - நவமணிகளையுங்கொள்க.

கோளிபங்கயமூழ்கக்குளிர்கயம்
கோளிபங்கயமூழ்கக்குலைந்தவால்
ஆளிபொங்குமருவரையூடிழிந்
தாளிபொங்குமரம்பையரோதியே. (கூஉ)

ஆகமாலயமாகவுளாள்பொலி
வாகமாலெனலாகிய தம்மலை
மேகமாலைமிடைந்தனமேலெலாம்
மேகமாலைமிடைந்தனகீழெலாம். (கூங)

பொங்குதேனுகர்பூஞ்சிமிழுமென
எங்குமாதருமைந்தருமீண்டியத்
துங்கமால்வரைச்சூழல்கள்யாவையும்
தங்கிநீங்கலர்தாமினிதாடுவார். (கூச)

இறக்கமென்பதையெண்ணிலரெண்ணுங்கால்
பிறக்குமென்பதோர்பீழையதாதலால்
துறக்கமெய்தியதூயவரேயென
மறக்கிற்றிலரன்னதன்மாண்பெலாம். (கூரு)

வேறு.

மஞ்சார்மலைவாரணமொத்ததுவானிழேடும்
வெஞ்சாயையுடைக்கதிரங்கதன்மீதுபாயும்
பஞ்சானனமொத்ததுமற்றதுபால்வேறும்
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெக்கர்வானம். (கூசு)

திணியார்சிலைமாமரம்யாவையுஞ்செக்கர்பாயத்
தணியாதநறுந்தளிர்தந்தனபோன்றுதாழ
அணியாரொளிவந்துநிரம்பலினங்கமெங்கும்
மணியாலியன்றம்மலையொத்ததம்மையில்குன்றம். (கூஎ)

கண்ணுக்கினிதாகிவிளங்கியகாட்சியாலும்
எண்ணற்கரிதாகியிலங்குசிரங்களாலும்
வண்ணக்கொழுஞ்சந்தனச்சேதகமார்பணிந்த
அண்ணற்கரியோன்றனையொத்தவ்வாசில்குன்றம். (கூஅ)

62. ஆளி - வண்டுகள்.

66. ஆளி - சிங்கம். செக்கர்வானமுதலியன கூறிப்போந்தமையானும், வருவது மாலைப்போதாகலானும் மஞ்சார்மலைஎன்பதற்கு அத்தகிரியெனப் பொருளுரைத்துக்கொள்க. பஞ்சானனம் - விரிந்தமுகமுள்ளது.

68. சந்தனச்சேதகம் - சந்தனக்குழம்பு.

ஊனும்முயிரும்மனையாரொருவர்க்கொருவர்
தேனும்மிஞிறுஞ்சிறுதும்பியும்பம்பியார்ப்ப
ஆனையினமும்பிடியும்மிகலாளியேறும்
மானுங்கலையும்மெனமால்வரைவந்திழிந்தார். (௬௯)

கால்வானகத்தேருடைவெய்யவன்காய்கடுங்கட்
கோல்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்கோளரிம்மா
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேறிருந்த
மால்யானையிட்டமெனவந்துபரந்ததன்றே. (௭௦)

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும்
அந்தாரரசர்க்கரசன்றனனீகவெள்ளம்
நந்தாதொலிக்குந்நரலைப்பெருவேலையெல்லாம்
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்ததன்றே. (௭௧)

தண்ணக்கடலிற்றளிசிந்துதரங்கநீங்கி
விண்ணிற்சுடர்வெண்மதிவந்ததுமீன்கள்சூழ
வண்ணக்கதிர்வெள்ளிலவின்றிரள்வாலுகத்தோ
டொண்ணித்திலநின்றொளிர்வால்வளையூர்வதொத்தே. (௭௨)

மீனூறுவேலையொருவெண்மதியினும்வேலை
நோனாததனைநுவலற்கருங்கோடிவெள்ளம்
வானாடியரிற்பொலிமாதர்முகங்களென்னும்
ஆனாமதியங்கண்மலர்ந்ததனீகவெள்ளம். (௭௩)

மண்ணும்முழவின்னொலிமங்கையர்பாடலோதை
பண்ணுந்நரம்பிற்பகைபாணியிற்பாணியோதை
கண்ணும்முடைவேயினிசைகண்ணுளராடறோறும்
விண்ணும்மருளும்படிவிம்மியெழுந்தவன்றே. (௭௪)

மணியின்னணிநீக்கிவயங்கொளிமுத்தம்வாங்கி
அணியும்முலையாரகிலாவிபுலர்த்துநல்லார்
தணியும்மதுமல்லிகைத்தாமம்வெறுத்துவாசம்
திணியும்மிதழ்ப்பித்திகைக்கத்திகைசேர்த்துவாரும் (௭௫)

---

69. ஆனையினமென்றது - பிடியெனப் பிற்கூறலாற்றினமெனக் கூறுக.
70. கால் - ஈண்டு ஒற்றையுருளை.
73. நோனா - பொறாது.
74. பாணியோதை - தாளவோசை. கண்ணுளர் - நாடகர்.
75. பித்திகைக்கத்திகை - கருமுகைமாலை.

புதுக்கொண்டவேழம்பிணிப்போர்புனைபாடலோதை
மதுக்கொண்டமாந்தர்மடவாரின்மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற்புனைமேகலைப்பூசலோதை
கதக்கொண்டயானைகளியாற்களியாற்களிக்கின்றவோதை. (எசு)

உண்ணுவமுதன்னகலைப்பொருளுள்ளதுண்டும்
பெண்ணாரமுதம்மனையார்மனத்தூடல்பேர்த்தும்
பண்ணனபாடல்செவிமாந்திப்பயன்கொளாடல்
கண்ணுவினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே. (எஎ)

ஆக திருவிருத்தம் - கூ0ரு.

## கரு-வது, பூக்கொய்படலம்.

மீனுடையெயிற்றுக்கங்குற்கனகனைவெகுண்டுவெய்ய
கானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித்
தானுடையுதயமென்னுந்தமனியத்தறியுணின்று
மானுடமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். (க)

முறையெலாமுடித்தபின்னர்மன்னனுமூரித்தேர்மேல்
இறையெலாம்வணங்கப்போனனெழுந்துடன்சேனைவெள்ளம்
குறையெலாஞ்சோலையாகிக்குழியெலாங்கழுநீராகித்
துறையெலாங்கமலமானசோணையாறடைந்ததன்றே. (உ)

அடைந்தவணிறுத்தபின்னரருக்கனுமும்பர்சேர்ந்தான்
மடந்தையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமும்
குடைந்துவண்டுறையுமென்பூக்கொய்துநீராடமைதீர்
தடங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார். (ங)

திண்சிலைபுருவமாகச்சேயரிக்கருங்கணம்பால்
புண்சிலசெய்வரென்றுபோவனபோன்றமஞ்ஞை
பண்சிலம்பணிவாயார்ப்பநாணிஞாற்பறந்தகிள்ளை
ஒண்சிலம்பார்ப்பமாதரொதுங்குதோறொதுங்குமன்னம். (௪)

76. புனைபாடல் - யானைகளைத்தளைக்குங்காற்பாடும்பாட்டு.

77. கலைப்பொருளுள்ளதுண்டு மென்றது - கலையின் றுணிந்தபொருளைச் செவியாகியவாயால் நுகர்ந்துமெனக்கொள்க. கலைப்பொருள் - சாதியொருமை.

1. கனகனென்றது - இரணியனை. மானுடைமடங்கல் - நரமடங்கல்.

செம்பொன்செய்சுருளுந்தெய்வக்குழைகளுஞ்சேர்ந்துமின்னப்
பம்புதேனலம்பவொல்கிப்பண்ணையினுடனேக்கிக்
கொம்பொடுங்கொடியனுரைக்குறிப்பறிந்துணர்தறேற்றார்
வம்பவிழலங்கன்மாலைமைந்தருமயங்கிநின்றார். (ரு)

பாசிழைப்பரவையல்குற்பண்டருகிளவித்தண்டேன்
மூசியகூந்தன்மாதர்மொய்த்தபேரமலைகேட்டுக்
கூசினவல்லபேசநாணினகுயில்களெல்லாம்
வாசகம்வல்லார்முன்னின்றியாவர்வாய்திறக்கவல்லார். (சு)

நஞ்சினுங்கொடியநாட்டமமுதினுநயந்துநோக்கிச்
செஞ்செவேகமலக்கையாற்றீண்டலுநீண்டகொம்பர்
தஞ்சிலம்படியின்மென்பூச்சொரிந்துடன்றாழ்ந்தவென்றால்
வஞ்சிபோன்மருங்குலார்மாட்டியாவரேவணங்கிலாதார். (எ)

அம்புயத்தணங்கினன்னாரம்மலர்க்கைகண்ட
வம்பியலலங்கற்பங்கிவாளரிமருளுங்கோளார்
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்
கொம்புகடாழுமென்றல்கூறலாந்தகைமைத்தொன்றே. (அ)

நதியினுங்குளத்தும்பூவாநளினங்கள்குவளையோடு
மதிநுதல்வல்லிபூப்பநோக்கியமாலைத்தும்பி
அதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா
புதியனகண்டபோழ்துவிடுவரோபுதுமைபார்ப்பார். (கூ)

உலந்தருவயிரத்திண்டோளொழுகிவொளிகொண்மேனி
மலர்ந்தபூந்தொடையன்மாலைமைந்தர்பான்மயிலினன்னார்
கலந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாராப்
புலந்தவர்போலநின்றவுளசிலபூத்தகொம்பர். (கo)

பூவெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவளநோக்கி
யாவையாங்கணவர்கண்ணுக்கழகிலவிவையென்றெண்ணிக்
கோவையும்வடமுநாணுங்குழைகளுங்குழையப்பூட்டிப்
பாவையர்பணிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார். (கக)

---

6. வாசகம்வல்லார் - வாய்வன்மையுடையார். ஓரறிவுயிரேதாழின ஆற றிவுயிர்தாழ்வது கூறாதேயமைந்ததென்க.

8. வாளரிமருளுங்கோள் - கம்பீரநடை, உடல், வலி, சமர்க்கஞ்சாத்தறு கண்மையின்றேரன்னவற்றை.

9. நதியினுங்குலத்தும் பூவாநளினங்கள் - முகத்தாமரைகள்.

10. உலம் - திரண்டகல்.

## வேறு.

துறும்போதினிற்றேன்றுவைத்துண்டுழறும்பியீட்டம்
நறுங்கோதையோடுநனைசின்னமுநீத்தநல்லார்
வெறுங்கூந்தன்மொய்க்கின்றனவேண்டலவேண்டுபோதும்
உறும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே. (கஉ)

மெய்ப்போதினங்கைக்கணிபன்னவண்மென்பளிங்கிற்
பொய்ப்போதுதாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி
இப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்
கைப்போதினோடுநெடுங்கண்பனிகாரநின்றாள். (கங)

கோளுண்டதிங்கண்முகத்தாளொருகொம்பொர்மன்னன்
தோளுண்டமாலையொருதோகையைச்சூட்டநோக்கித்
தாளுண்டகச்சாற்றகையுண்டமுலைக்கணாலி
வாளுண்டகண்ணின்மழையுண்டெனவாரநின்றாள். (கச)

மயில்போல்வருவாண்மனங்காணியகாதன்மன்னன்
செயிர்தீர்மலர்க்காவினோர்மாதவிச்சூழல்சேரப்
பயில்வாளிறைபண்டுபிறிந்தறியாள்பதைத்தாள்
உயிர்நாடியொல்குமுடல்போலலமந்துழன்றாள். (கரு)

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற
நெய்தாவும்வேலானொடுநெஞ்சுபுலந்துநின்றாள்
மெய்தாதுநின்றமலர்நோக்கியெனக்கிதீண்டக்
கொய்தீதியென்றோர்குயிலைக்கரங்கூப்புகின்றாள். (கசு)

செம்மாந்ததெங்கின்னிளநீரையொர்செம்மனோக்கி
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றொபேழை
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள். (கஎ)

போரென்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்
மாரன்னனையான்மலர்கொய்திருந்தானைவந்தோர்
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப
ஆரென்னவோடும்மனலென்னவயிர்த்துயிர்த்தாள். (கஅ)

---

14. கோளுண்டதிங்கள் - இராகுவினாற் பீடிக்கப்பட்ட சந்திரன்.

15. மாதவிசூழல் - வசந்தமல்லிகைக்கொடி வீடு. இதனை வடநூலார்ல தாக்ருஹம் என்பர்.

18. ஆரென்றவன் வினவலான் நம்மைப்பொலிவன் மாட்டு விளையாட்டு. மகளிர் பலருளரென்பது - கருதினாளென்பது.

ஊற்றூர்நறைநாண்மலர்மாதரொருங்குவாசச்
சேற்றால்விளையாதசெந்தாமரைக்கைகணீட்டி
ஏற்றூர்க்குதவானிடையேந்தினனின்றெழிந்தான்
மாற்றானுதவான்கடுவச்சையன்போலொர்மன்னன். (௧௯)

தைக்கின்றவேனோக்கினடன்னுயிரன்னமன்னன்
மைக்கொண்டகண்ணுறெதிர்மாற்றவள்பேர்விளம்ப
மெய்க்கொண்டநாணந்தலைக்கொண்டிடவிம்மிமென்பூக்
கைக்கொண்டுமோந்தாளுயிர்ப்புண்டுகரிந்தவன்றே. (௨௦)

திண்டேரரசன்றெருமன்குலத்தேவிமார்தம்
ஒண்டாமரைவாண்முகத்துண்மிளிருண்கணெல்லாம்
கண்டாதரிக்கத்திரிவான்மதங்கௌவியுண்ண
வண்டாதரிக்கத்திரிமாமதவானையொத்தான். (௨௧)

சந்திக்கலாவெண்மதிவானுதலாடனக்கும்
வந்திக்கலாகுமடவாட்கும்வகுத்துநல்கி
நிந்திக்கலாகாவுருவத்தினனின்றபோழ்துஞ்
சிந்திக்கலாபமயிற்கண்கள்சிவந்துபோனார். (௨௨)

வேறு.

வந்தெங்குந்தம்மன்னுயிரேயோபிறிதொன்றோ
கந்தந்துன்றுஞ்சேர்குழல்காணார்கலைபேணார்
அந்தந்தோறுமற்றுகுமுத்தமவைபாரார்
சிந்துஞ்சந்தத்தேமலர்நாடித்திரிவாரும். (௨௩)

யாழொக்குஞ்சொற்பொன்னனையாளோரிகன்மன்னன்
தாழத்தாழாடாழ்ந்தமனத்தாடளர்கின்றாள்
ஆழத்துள்ளுங்கள்ளநினைப்பாளவனின்ற
சூழற்கேதன்கிள்ளையையேவித்தொடர்வாளும். (௨௪)

---

19. பன்மாதரொன்றுது-மாதரென்றது இருவரை. வச்சையன் - லோபி.

21. உண்கள் - மையுண்டகண். இதனை 'இருநோக்கிவளுண்கண்' என்பதனுனறிக.

22. சந்திக்கலாவெண்மதி - மாலைப்பொழுதிற் றோன்றுங் கலைகளோடு தோன்றுமதி.

23. அந்தமென்றது - கடைப்பூட்டுகளை.

24. பொன்னனையாள் - திருமகளொப்பாள்.

அந்தாரகத்தைதங்கணைநாறுயிரமாகச்
சிந்தாநின்றசிந்தையினன்செய்குவதோரான்
மந்தாரங்கொண்டேகுதியோமதவியென்றோர்
சந்தார்கொங்கைத்தார்குழலாள்பாற்றளர்வாளும். (உரு)

நாடிக்கொண்டாள்குற்றநயந்தாண்முனிவாற்றாள்
ஊடிக்காணக்காட்டுநலத்தாளுடனில்லாள்
தேடித்தேடிச்செய்தசெழும்பூநறுமாலை
சூடிச்சூடிக்கண்ணடிநோக்கித்துவள்வாளும். (உசு)

மறலிக்கூறும்வன்கதிர்வேலானிடையேவந்
துறவிக்கோலம்பெற்றிலெனென்றாலுடன்வாழ்விப்
பிறவிக்கொல்லேனென்செய்வதிப்பேரணியென்றோர்
விறலிக்கீவாளொத்திழையெல்லாம்விடுவாளும். (உஎ)

வம்பிற்பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக்
கம்பிக்குந்தந்நுண்ணிடைநோவக்கசிவாரும்
பைம்பொற்கிண்ணம்மெல்விரலூங்கிப்பயில்கின்ற
கொம்பிற்பிள்ளைக்கிள்ளைபொளிக்கக்குழைவாரும். (உஅ)

தன்னைக்கண்டாண்மென்னடைகண்டாடமர்போலத்
துன்னக்கண்டாடோழமைகண்டாடுணையென்றாள்
உன்னைக்கண்டாரெள்ளுவர்பொல்லாதுநீயென்
றன்னக்கன்னிக்காடையளிப்பானமைவாரும். (உகூ)

பாகொக்குஞ்சொன்னுண்கலையாடன்படரல்குல்
ஆகக்கண்டோராடரவாமென்றயனண்ணும்
தோகைக்கஞ்சிக்கொம்பிறைதுங்கித்துணரீன்ற
சாகைத்தங்கைக்கண்கள்புதைத்தேதளர்வாரும். (௩0)

பொன்னேதேனேபூமகளேகாணைணையென்னாத்
தன்னேரில்லாளங்கொருதையறமைழமுழ்க

25. ஐங்கணை - மா, தாமரை, நெய்தல், அசோகு, முல்லை.

27. எவ்வகைவினையையேனும் தன் கைப்படையேயல்லது வேறுதுணை வேண்டாது முட்டின்றி முடிக்கு மாற்றலுடையானென்பார் 'மறலிக்கூறும் வன்கதிர்வேலா' னென்றதென்க.

28. கச்சினின்று மடங்காதுபுறத்தே தோன்றுவதாகலின்வம்பிற் பொங்கும் கொங்கையென்றார்.

30. புதைத்துத் தளர்வாரென்றதை முன்பின்னாக நிறுத்தி விகுதிபிரித்துக் கூட்டியுரைக்க.

இன்னேயென்னைக்கா ணு தி நீ யென்றிகலித் தன்
நன்னீலக்கண்கையின்மறைத் துநகுவாளும். (௩௧)

வில்லிற்கோதைநாணுறமிக் கேசரிலவங்கம்
புல்லிக்கொண்டதாமரைமென் பூமலர் தாங்கி
அல்லிற்கோதமாதர்முகப்போரவிந்தச்
செல்வக்காளிற்செங்கதிரென்னத்திரிவாரும். (௩௨)

செய்யிற்கொய்யுஞ்செங்குமுதஞ்செஞ்சிலையொன்றும்
கையிற்பெய்யுங்காமனுநாணுங்கவினூர் தம்
மையற்பேதைமாதர்மிழற்றும்மழலைச்சொல்
தெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும். (௩௩)

சோலைத்தும்பிமென்குழலாகத்தொடைமேவும்
கோலைக்கொண்டமன்மதவாயன்குறியுப்ப
நீலத்துண்கண்மங்கையர்சூழநிரையாவின்
மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும். (௩௪)

வேறு.

ஊக்கமுள்ளத்துடையமுனிவரால்
காக்கலாவதுகாமன்கைவில்லெனும்
வாக்குமாத்திரமல்லதுவல்லியிற்
பூக்கொய்வாள்புருவக்கடைபோதுமே. (௩௫)

நாறுபூங்குழனன்னுதல்புன்னைமேல்
ஏறினான்மனத்தும்பர்சென்றேறினாள்
ஊறுஞானத்துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ. (௩௬)

சினையின்மேலிருந்தானுருத்தேவரால்
வினையவும்மரியாள்வனப்பின்றலை
நினைவுநோக்கமுநீக்கலன்கைகளால்
நனையுநாண்முறியுங்கொய்துநல்கினான். (௩௭)

---

31. நீலமென்றது - ஆகுபெயர்.

35. ஊக்கமென்றது - தாம் விடுத்த காமநுகர்ச்சியிற் றளராதிருக்கு நிலைமையை.

36. நன்னுதன்மனத்தும்பர் சென்றேறுதலென்றது - தலைவிபால்வைத்த வேட்கைப்பெருக் கடங்காது அவளையே நாடிநிற்றலை.

வண்டுவாழ்குழலாண்முகநோக்கியோர்
தண்டுபோற்புயத்தான்றடுமாறினன்
உண்டுகோபமுள்ளத்துணர்ந்தவள்
தொண்டைவாயிற்றுடிப்பொன்றுசொல்லவே. (௩அ)

ஏயுந்தன்மையரிவ்வகையாரெலாம்
தூயதண்ணிழற்சோலைத்துறுமலர்
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை
பாயுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினர். (௩௯)

ஆ_ திருவிருத்தம் - ௧௦௧௪.

## ௧௯-வது, நீர்விளையாட்டுப்படலம்.

புனைமலர்த்தடங்கணோக்கிப்பூசல்வண்டார்த்துப்பொங்க
வினையறுதுறக்கநாட்டுவிண்ணவர்கணமுநாண
அனகருமணங்களுருமம்மலர்ச்சோலைநின்று
வனகரிபிடிகளோடும்வருவனபோலவந்தார். (௧)

அங்கவர்பண்ணைநன்னீராடுமாறமைந்ததோற்றம்
கங்கைவார்சடையோனன்னமாமுனிகனலமேனாள்
மங்கையர் கூட்டத்தோடும்வானவர்க்கிறைவன்செல்வம்
பொங்குபாற்கடலிற்செல்லுந்தோற்றமேபோன்றதன்றே. (௨)

மையவாங்குவளையெல்லாமாதர்கண்மலர்கள்பூத்த
கையவாமுருவத்தார்தங்கண்மலர்குவளைபூத்த
செய்யதாமரைகளெல்லாந்தெரிவையர்முகங்கள்பூத்த
தையலார்முகங்கள்செய்யதாமரைபூத்தவன்றே. (௩)

தாளையேய்கமலத்தாளின்மார்புறத்தழுவுவாரும்
தோளையேபற்றிவெற்றித்திருவெனத்தோன்றுவாரும்

38. தண்டுபோற்புயத்தா னென்பதனை வழியதோளானெனப்போதரலான் தனதேண் மாலையை யொருத்திக்குச் சூட்டிவந்தானென் றாடினாளென்க.

1. தீவினையிழந்தாரெய்துதற்கிடனாகலின், வினையறுதுறக்க நாடென்றார்

2. கங்கைவார்சடையோனன்ன மாமுனியென்றது - துர்வாசனை.

3. சாமுத்திரிகைநூலி னொழுங்கென்பது படக்கையென்றார்.

4. வெற்றித் திருவெனாதமையான் தோளென்றது - ஆடவர்தோளை விளக்கிநின்றது. அம்மாதராருடைய உறுப்பிடை ஒவ்வொன்றுமே காண்பா

பாளையேவிரிந்ததென்னப்பரந்துநீருந்துவாரும்
வாளைமீனுகளவஞ்சிமைந்தரைத்தழுவுவாரும். (௪)

வண்டுணக்கமழுஞ்சுண்ணம்வாசநெய்நானத்தோடும்
கொண்டெதிர்வீசுவாருங்கோதைகொண்டோச்சுவாரும்
தொண்டைவாய்ப்பெய்துதூநீர்கொழுநர்மேற்றூகின்றாரும்
புண்டரீகக்கைகூப்பிப்புனன்முகந்திறைக்கின்றாரும். (௫)

மின்னொத்தவிடையினாரும்வேயொத்ததோளினாரும்
சின்னத்தினளகபந்திதிருமுகமறைப்பநீக்கி
அன்னத்தைவருதியென்னோடாடவென்றழைக்கின்றாரும்
பொன்னொத்தமுலையின்வந்துபூவொத்தவுளைகின்றாரும். (௬)

பண்ணுளபவளத்தொண்டைபங்கயம்பூத்ததன்ன
வண்ணவாய்க்குவளைவாட்கண்மருங்கிலாக்கரும்பினன்னார்
உண்ணிறைகயலைநோக்கியோடுநீர்த்தடங்கட்கெல்லாம்
கண்ணுளவாங்கொலென்றுகணவரைவினவுவாரும். (௭)

தேனகுநறவுமாலைச்செறிகுழற்றெய்வமன்னார்
தானுடைக்கோலமேனிதடத்திடைத்தோன்றநோக்கி
நானகநகுகின்றாளிந்நன்னுதறோழியாமென்
றானமில்விலையினாரமுளங்குளிர்ந்துதவுவாரும். (௮)

குண்டலந்திருவில்வீசக்குலமணியாரமின்ன
விண்டொடர்வரையின்வைகுமென்மயிற்கணங்கள்போல
வண்டுளர்கோதைமாதர்மைந்தர்தம்வயிரத்திண்டோட்
டண்டுகள்தழுவுமாசைபுனற்கரைசார்கின்றாரும். (௯)

அங்கிடையுற்றகுற்றம்யாவதென்றறிதறேற்றும்
செங்கயலனையநாட்டஞ்சிவப்புறச்சீறிப்போன
மங்கையோர்கமலச்சூழன்மறைந்தனண்மறையமைந்தன்
பங்கயமுகமென்றோராதையுற்றுப்பார்க்கின்றானும். (௧௦)

பொற்றொடிதளிர்க்கைச்சங்கம்வண்டொடுபுலம்பியார்ப்ப
ஏற்றிநீர்குடையுந்தோறுமேந்துபேரல்குனின்றும்

ருடைய மனங்கண்களை யொருசேரக்கவரும் வனப்பிற்றாகலின் அவ்வாறு தம்மை அவர்பாற் செல்லக்கணவர் அவ்வவ்வமையத்து அவ்வவ்வுறுப்பேகாரணமாக அவர்க்கிட்டு மின்னொத்தவிடையினாள்; வேயொத்ததோளினாள் என கூறுங்கூற்றினைத்தாம்கொண்டு கூறினாரல்லது இடையொன்றுமே சிறந்தார் தோளொன்றுமே சிறந்தாரென இருவகையாகக் கூறினாரல்லர்.

கற்றைமேகலைகணீங்கிச்சீறடிகௌவக்காலில்
சுற்றியநாகமென்றுதுணுக்கத்தாற்றுடிக்கின்றாரும். (கக)

குடைந்துநீராடுமாதர்குழாம்புடைசூழவாழித்
தடம்புயம்பொலியவாண்டோர்தார்கெழுவேந்தனின்றான்
கடைந்தநாளமிழ்திறேடுங்கடலிடைவந்துதோன்றும்
மடந்தையர்சூழநின்றமந்தரம்போலமாதோ. (கஉ)

தொடியுலாங்கமலச்செங்கைதூநகைத்துவர்த்தசெவ்வாய்க்
கொடியுலாமருங்குனல்லார்குழாத்தொருகுரிசினின்றான்
கடியுலாங்கமலவேலிக்கண்ணகன்கானியாற்றுப்
பிடியெலாஞ்சூழநின்றபெய்மதயானையொத்தான். (கங)

கானமாமயில்களெல்லாங்களிகெடக்களிக்குஞ்சாயல்
சோனைவார்குழலினார்தங்குழாத்தொருதோன்றனின்றான்
வானயாறதனைநண்ணிவயின்வயின்வயங்கித்தோன்றும்
மீனெலாஞ்சூழநின்றவிரிகதிர்த்திங்களொத்தான். (கச)

மேவலார்நகைமைத்தல்லால்வேழவிற்றடக்கைவீரற்
கேவெலாங்காட்டுகின்றவிணைநெடுங்கண்ணோரேழை
பாவைமார்பாந்தகோலப்பண்ணையிற்பொலிவாள்வண்ணப்
பூவெலாமலர்ந்தபொய்கைத்தாமரைபொலிவதொத்தாள். (கரு)

மிடலுடைக்கொடியவேலேயென்னவாண்மிளிர்வவென்னச்
சுடர்முகத்துலவுங்கண்ணோடோகையர்சூழநின்றாள்
மடலுடைப்போதுகாட்டும்வளர்கொடிபலவுஞ்சூழக்
கடலிடைத்தோன்றுமென்பூங்கற்பகவல்லியொத்தாள். (கசு)

தேரிடைக்கொண்டவல்குற்றெறங்கிடைக்கொண்டகொங்கை
ஆரிடைச்சென்றுங்கொள்ளவொண்கிலாவழகுகொண்டாள்
வாரிடைத்தனமீதாடமூழ்கினாள்வதனமைதீர்
நீரிடைத்தோன்றுந்திங்கணிழலெனப்பொலிந்ததன்றே. (கஎ)

வேறு.

மலைகடந்தபுயங்கண்மடந்தைமார்
கலைகடைந்தகலல்குல்கடாம்பட

14. சோனைமழைபோலிடையறாது வார்ந்து தொங்குதலான், சோனை வார் குழலினரென்றார்.

15. வேழவிற்றடக்கைவீரன் - கரும்புவில்லையுடையமன்மதன்.

16. கற்பகவல்லி - கற்பகத்தின் மேற்படரும் காமவல்லி.

முலைகடந்தமின்முந்திநெருங்கலால்
நிலைகடந்துபரந்தநுநீத்தமே. (௧௮)

செய்யவாய்வெளுப்பக்கண்சிவப்புற
நெய்யராகமழியத்துகிலெனகத்
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலாற்
பொய்கைகாதற்கொழுநரும்போன்றதே. (௧௯)

ஆனதூயவரோடுடனாடினர்
ஞானநீரவராகுதனன்றரோ
தேனுநாவியுந்தேக்ககிலாவியும்
மீனுநாறினவேறினிவேண்டுமோ. (௨௰)

மிக்கவேந்தர்தம்மெய்யழிசாந்தொடும்
புக்கமங்கையர்குங்குமம்போர்த்தலால்
ஒக்கநீலமுகிற்றலையோடிய
செக்கர்வானகமொத்ததத்தீம்புனல். (௨௧)

காகதுண்டநறுங்கலவைக்களி
ஆகமுண்டதடங்கணுநீங்கலால்
பாகடர்ந்தபனிக்கனிவாய்ச்சியர்
வேகடஞ்செய்மணியெனமின்னினார். (௨௨)

பாயரித்திறலான்பசுஞ்சாந்தினால்
தூயபொற்புயத்துப்பொதிதூக்குறி
மீயரித்துவெளுக்கவொர்மெல்லியல்
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே. (௨௩)

கதம்பநாள்விரைகள்ளவிழ்தாதொடும்
ததும்புபூந்திரைத்தண்புனல்சுட்டதால்
நிதம்பபாரத்தொர்நேரிழைகாமத்தால்
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே. (௨௪)

தையலாளையொர்தாரணிதோளினன்
நெய்கொளோதியினீர்முகந்தெற்றினன்

---

19. வாய்வெளுத்தலுங் கண்சிவத்தலு மாதரைத்தோய்வதனாலுண்டாவது. 22. வேகடஞ்செயல் - சாணைபிடித்தல். அன்றி - அழுக்கற்றுதல்எனினுமமையும்.

23. பசுமை வெண்மை யென்னும் பண்புகள் வண்ணப்புனையுணர்த்தாது முறையே ஈரமுமின்மையு முணர்த்திநின்றன.

24. கதம்பம் - பரிமளப்பொடி.

செய்ய தாமரைச்செல்வியைத் தீம்புனல்
கையினூட்டுங்களிற்றரசனென்னவே. (உ௫)

சுளியுமென்னடைதோற்கநடந்தவர்
அளிகொள்சீறடியொத்தனவாமென
விளிவுதோன்றமிதிப்பனபோன்றன
நளினமேறியநாகிளவன்னமே. (உ௬)

மரிந்தசிந்தையரெத்தனையென்கெனோ
அறிந்தகூருகிராலழிசாந்துபோய்த்
தெரிந்தகொங்கைகள்செவ்வியநூல்புடை
வரிந்தவங்கலசங்களைமானவே. (உ௭)

தாழுநின்றதைமலர்க்கையினால்
ஆழிமன்னொருவன்னுரைத்தானது
வீழியின்கனிவாயொருமெல்லியல்
தோழிகண்ணிற்கடைக்கணிற்சொல்லினாள். (உ௮)

தள்ளியோடியலைதடுமாறலால்
தெள்ளுநீரின்முழுகுசெந்தாமரை
புள்ளிமானனையார்முகம்போல்கிலா
துள்ளிநாணியொளிப்பனபோன்றவே. (உ௯)

இனையவெய்தியிரும்புனலாடிய
வனைகருங்குழன்மைந்தருமாதரும்
அனையநீர்வறிதாகவந்தேறினார்
புனைநறுந்துகில்பூணொடுந்தாங்கினார். (௩௦)

மேவினார்பிரிந்தார்க்கந்தவீங்குநீர்
தாவுதண்மதிதன்னொடுந்தாரகை
ஓவுவானமுழுண்ணிறைதாமரைப்
பூவெலாங்குடிபோனதும்போன்றதே. (௩௧)

மானினேக்கியர்மைந்தரோடாடிய
ஆனநீர்விளையாடலைநோக்கினான்

25. தாமரைச்செல்வியைக் கையினூட்டுங்களிற்றரசென்ன என்றமை யான் சகலக்குமியை யுணர்த்தியது.

28. கண்ணிற்கடைக்கணிற்சொல்லல் என்றது - நயனபாடையை.

30. தாங்கினரென்றமையான் ஆடையணிபிவற்றானல்லது இயற்கையழ கிளையுடையரென்பதும், பூவின்மெல்லியரென்பதும் பெறப்பட்டன.

தானுமன்னதுகாதலித்தானென
மீனவேலையைவெய்யவனெய்தினான். (௩௨)

ஆற்றலின்மையினாலழிந்தேயுந்தம்
வேற்றுமன்னர்தம்மெல்லைநம்வேந்தர்போல்
ஏற்றுமாதர்முகங்களொடுங்கணும்
தோற்றசந்திரன்மீளவுந்தோற்றினான். (௩௩)

ஆ- திருவிருத்தம் ௧௦௪௭,

---

## ௧௭-வது, உண்டாட்டுப்படலம்.

வெண்ணிறநறைநிறைவள்ளமென்னவும்
பண்ணிறஞ்செறிந்திடைப்பரந்ததென்னவும்
உண்ணிறைகாமமிக்கொழுகிற்றென்னவுந்
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே. (௧)

கலந்தவர்க்கினியதோர்களனுமாய்ப்பிரிந்
துலர்ந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன்
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய்
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே (௨)

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாம்
கூறுபாற்கடலையேயொத்தகுன்றெலாம்
ஈறிலான்கயிலையையைந்தவெண்ணினி
வேறியாம்புகல்வதுநிலவின்வீக்கமே. (௩)

எள்ளருந்திசைகளோடியாரும்யாவையும்
கொள்ளைவெண்ணிலவினாற்கோலங்கோடலால்
வள்ளுறைவயிரவாண்மகரகேதனன்
வெள்ளணியொத்ததுவேலைஞாலமே. (௪)

தயங்குதாரகைபுரைதரளநீழலும்
இயங்குதார்மிடைந்தகாரெழினிச்சூழலும்

---

32. மீனவேலையை வெய்யவனெய்தினானென்றது பொழுதுபட்டதென்பதுணர்த்திற்று.

3. ஈறிலான் - சங்காரகாரணனாகிய சிவன், இதற்குவேறு கூறுவாருமுளர்.

4. யாரும்யாவையும் என்றது - இயங்குதிணை. நிலத்திணைகளை. மகரகேதனன் - கயற்கொடியையுடையமன்மதன்.

கயங்கள்போன்றொளிர்பளிங்கடுத்தகானமும்
வயங்குபூம்பந்தருமகளிரெய்தினர். (ரு)

பூக்கமழோதியர்போதுபோக்கிய
சேக்கையின்பச்செருச்செருஞ்சிந்தையார்
ஆக்கியவமிழ்தெனவம்பொன்வள்ளத்து
வாக்கியபாசுநறுமாந்தன்மேயினர். (௬)

மீனுடைவானுடைவிஞ்சைநாட்டவர்
ஊனுடையுடம்பினுருவமொப்பிலார்
மானுடைநோக்கினர்வாயின்மாந்தினர்
தேனுடைமலரிடைத்தேன்பெய்தென்னவே. (எ)

உக்கபால்புரைநிலாவுண்டவள்ளமும்
கைக்கொள்வாளொளிபடச்சிவந்துகாட்டத்தன்
மைக்கணுஞ்சிவந்ததோர்மடந்தைவாய்வழி
புக்கதேனமிர்தமாய்ப்பொலிந்தபோன்றவே. (அ)

தாமமுநானமுந்நறைதந்ததண்ணகிற்
றாமமுண்குழலியருண்டதூநறை
ஓமவெங்குழியுகுநெய்யினுள்ளுறை
காமவெங்கனலினைக்கனற்றிக்காட்டிற்றே. (௯)

வேறு.

விடனொக்குநெடியநோக்கினமிர்தொக்குமின்சொலார்தம்
மடனொக்குமடனுமுண்டேவானுதலொருத்திகாணத்
தடனொக்குநிழலைப்பொன்செய்தண்ணறுந்தேறல்வள்ளத்
துடனொக்கவுவந்துநீயேயுண்ணுதிதோழியென்றாள். (க0)

அச்சநுண்மருங்குலாளோரணங்கனாளகபந்தி
நச்சுவேற்கருங்கட்செவ்வாய்நளிர்முகமதுவுட்டோன்றப்
பிச்சிநீயென்செய்தாயிப்பெருநறவிருக்கவாளா
எச்சிலைநுகர்தியோவென்றெயிற்றரும்பிலங்கநக்காள். (கக)

புறமெலாநகைசெய்தேசப்பொருவருமேனிவேறோர்
மறமுலாங்கொலைவேற்கண்ணாண்மணியின்வள்ளத்துவெள்ளை
நிறநிலாக்கற்றைபாயநிறைந்ததுபோன்றுதோன்ற
நறவெலாவதனைவாயின்வைத்தனளுளுட்கொண்டாள். (கஉ)

---

5. பளிங்கடுத்த கானமென்றது-பளிங்குப்பாறையை.

6. இன்பச்செரு - கல்விப்போர்.

10. நோய்நோக்கென்பதுபட விடனொக்குநெடிய நோக்கென்றார்.

யாழ்க்குமின்குழற்குமின்பமளித்தனவிவையாமென்னக்
கேட்குமென்மழலைச்சொல்லோர்கிஞ்சுகங்கிடந்தவாயாள்
தாட்கருங்குவளைதோய்ந்ததண்ணறைச்சாடியுட்டன்
வாட்கணினிழலைக்கண்டாள்வண்டெனவோச்சுகின்றாள் (௧௩)

களித்தகண்மதர்ப்பவாங்கோர்கனங்குழைகள்ளினுள்ளால்
வெளிப்படுகின்றகாட்சிவெண்மதிநிழலைநோக்கி
அளித்தனெனபயம்வானத்தரவினையஞ்சிநீவந்
தொளித்தனையஞ்சலென்றாங்கினியனவுணர்த்துகின்றாள். (௧௪)

அழிகின்றவறிவினாலோபேதைமையாலோவாற்றிற்
சுழியொன்றிநின்றதன்னவுந்தியாடீயசெந்தேன்
பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புரைத்துக்கீழ்வந்
திழிகின்றகொழுநிலாவைநறவெனவள்ளத்தேற்றாள். (௧௫)

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை
இன்னமிழ்தனையதீஞ்சொலிடைதடுமாறியென்ன
வன்னமேகலையைநீக்கிமலர்த்தொடையல்குல்சூழ்ந்தாள்
பொன்னரிமாலைகொண்டுபுரிகுழல்புனையலுற்றாள். (௧௬)

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி
விண்மதிமதுவினுள்ளேவீழ்ந்ததெனருத்தியுண்ணி
உண்மகிழ்துணைவனோடுமூடுநாள்வெம்மைநீக்கித்
தண்மதியாகில்யானுந்தருவெனிந்நறவையென்றாள். (௧௭)

எள்ளொத்தகோலமூக்கினேந்திழையொருத்திமுன்கை
தள்ளத்தண்ணறவையெல்லாந்தவிசிடையுகுத்துந்தேறாள்
உள்ளத்தின்மயக்கந்தன்னாலுட்புறத்துண்டென்றெண்ணி
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள். (௧௮)

வான்றனைப்பிரிதலாற்றாவண்டினம்வச்சைமாக்கள்
ஏன்றவர்நிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்பத்
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனனுகரநாணி
ஊன்றியகழுநீர்நாளத்தாளினாலொருத்தியுண்டாள். (௧௯)

13. தாட்கருங்குவளைதோய்ந்த தண்ணறைச்சாடியென்றது - மொய்க்கும் வண்டுகட்கஞ்சி அத்தண்டின் சிறுதொளையினறவை யுறிஞ்சுதற்கென்க.

14. உரையாநின்றாளென்றது உணர்த்துகின்றா ளென்றதனன், இனியன என்றதுறுதிமொழியென்பதுணர்த்திற்று.

16. அல்குல் சூழ்ந்தாள் எனப்பின்வருதலான் மேகலை என்ற தாடையினை.

19. வச்சைமாக்கள் - உலோபிகள்.

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவியோட
வள்ளுறைகழித்தவாள்போல்வரியுறவயங்குகண்ணாள்
கள்ளுறைமலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள்
உள்ளுறையன்பனுண்ணுனெனாநறவுண்ணலெண்ணாள். (உ0)

வேறு.

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல்
ஏற்றிவாளெயிறுகளதுக்கியின்றளிர்
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு
சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாரினே. (உக)

துடித்தவான்றுவரிதழ்த்தொண்டைத்தூநிலா
கடித்தவாலெயிறுகளதுக்கிக்கண்களால்
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்மெய்
பொடித்தவேர்புறத்துகுநறவம்போன்றவே. (உஉ)

கனித்திரளிதழ்பொழிசெம்மைகண்புக
நினைப்பதொன்றுரைப்பதொன்றாமோர்நேரிழை
தனிச்சுடர்தாமரைமுகத்துச்சாபமும்
குனித்ததுபனித்ததுகுழவித்திங்களே. (உங)

இலவிதழ்த்துவர்விடவெயிறுதேனுக
முலைமிசைக்கச்சொடுகலையுமுட்டற
அலைகுழல்சோர்தரவசதியாடலாற்
கலவிசெய்கொழுநருங்கள்ளுமொத்தவே. (உச)

கனைகடற்கள்வனற்கலக்குற்றதை
அனகனுக்கறிவியென்றறியப்போக்குமோர்
இனமணிக்கலையினுடோழிநீயுமென்
மனமெனத்தாழ்தியோவருதியோவென்றாள். (உரு)

மானமர்நோக்கியோர்மதுகைவேந்தன்பால்
ஆனதன்பாங்கியராயினுளெலாம்

20. தன்னுள்ளத்து நீங்காதுறைதலின உள்ளுறையன்பனென்றார்.

21. சீற்றமாமபிநயமெனக் காரியத்தைக்காரணமாக உபசரித்தார்.

23. கனிபொழி என்புழி வினைப்பகுதியே வினையெச்சப் பொருடந்தது வரிப்புனைபந்தெனபுழிப்போல.

25. கனைகடல் - ஒலிகடல். யான் நீயேனென்பாள் எதிர்மறைமுகத்தான். அவனை அனகனென்றாள்.

போனவர்போனவர்தொடரப்போக்கினாள்
காணுமங்கவர்பினைதமியளேகினாள். (உசு)

விரைசெய்பூஞ்சேக்கையினடுத்தமீமிசைக்
கரைசெய்யாவாசையங்கடலுளாளொரு
பிரசமென்குதலையாள்கொழுநன்பேரெலாம்
உரைசெயுங்கிள்ளையையுவந்துபுல்லினாள். (உஎ)

மன்றலொன்றுசிறையிருந்தொர்வாணுதல்
தன்றுணைக்கிள்ளையைத்தழீஇயென்னுயிரை
இன்றுபோய்க்கொணர்கிலையென்செய்வாயெனக்
கன்றினோடொத்தியென்றழுதுசீறினாள். (உஅ)

வளைபயின்முன்கையோர்மயிலனுடனக்
கிளையவள்பெயரினைக்கொழுநனீதலும்
முளையெயிறிலங்கிடமுறுவல்வந்தது
களகளவுதிர்ந்ததுகயற்கணாலியே. (உகூ)

செற்றமுன்புரிந்ததோர்செம்மல்வெம்மையாற்
பற்றலுமல்குலிற்பரந்தமேகலை
அற்றுகுமுத்தின்முன்னவனிசேர்ந்தன
பொற்றொடியொருத்திகண்பொருதமுத்தமே. (ஙO)

தோடவிழ்கூந்தலாளொருத்திதோன்றலோ
டூடுகின்றனளுயிருருகுநோய்கெடக்
கூடுகின்றவன்குணங்கள்வீணையிற்
பாடுகின்றனளெனப்பலவும்பண்ணினாள். (ஙக)

மாடகம்பற்றினண்மகரவீணைதன்
தோடவிழ்மலர்க்கரஞ்சிவப்பத்தொட்டனள்
பாடினளொருத்திதன்பாங்குளார்களோ
டூடினதுரைசெயாளுள்ளத்துள்ளதே. (ஙஉ)

குழைத்தபூங்கொம்பனாளொருத்திகூடலை
இழைத்தனளவ்வளவிட்டபோதெலாம்
பிழைத்தலுமனங்கவேள்பிழைப்பிலம்பொடும்
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டெனனவே. (ஙங)

---

26. போனவர் போனவர் - முற்போனவரையும் பிற்போனவரையு முணர்த்திற்று.

27. மீமிசை ஒருபொருட்பன்மொழி.

பந்தணிவிரலினாளொருத்திபையுளாள்
சுந்தரனொருவன்பாற்றூதுபோக்கினாள்
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினாள்
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தநாட்டமே. (௩௪)

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்
சித்தமுண்டொருத்திக்கதன்பன்றேர்கிலான்
பொய்த்ததோர்மூரிதானிமிர்ந்துபோக்குவாள்
எத்தனையிறந்தனகடிகையீண்டென்றாள். (௩௫)

விதைத்தமென்காதலின்வித்துமெய்ந்நிறை
இதைப்புனனனைத்திடமுளைத்தவேயெனப்
பகைத்தனளொருத்தன்மேலொருத்திபஞ்சடி
உதைத்தலும்பொடித்தனவுரோமராசியே. (௩௬)

பொலிந்தவாண்முகத்தினான்பொங்கித்தன்னையு
மலிந்தபேருவகையான்மாற்றுவேந்தரை
நலிந்தவாளுழவனோர்நங்கைகொங்கைபோய்
மெலிந்தவாநோக்கித்தன்புயங்கள்வீங்கினான். (௩௭)

எய்ந்தபேரெழிலினானொருவனெய்தினான்
வேய்ந்தபோலெங்கணுமனங்கன்வெங்கணை
பாய்ந்தபூம்பள்ளியிற்படுத்தபல்லவந்
தீய்ந்தனநோக்கினனன்றிகைக்குஞ்சிந்தையான். (௩௮)

ஊட்டியசாந்துவெந்துலரும்வெம்மையான்
நாட்டினையளித்திநீயென்றுநல்லவர்
ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்
வாட்டொழின்மைந்தற்கோர்மங்கைகொங்கையே. (௩௯)

பயிருறுகிண்கிணிபரந்தமேகலை
வயிரவான்பூணணிவாங்கிநீக்கினாள்
உயிருறுதலைவன்பாற்போகவுன்னினாள்
செயிருறுதிங்களைத்தீயநோக்கினாள். (௪௦)

---

35. மூரி - உறக்கம்.

36. பஞ்சடி - செம்பஞ்சூட்டியதாள்.

40. நீ தோன்றித்தலைவன்பாற் காமவேட்கை யுண்டாக்கப் பிறறியாவண்ணம் செல்வேனை நிலாவெரித்துத் தடுத்தி. இது நிற்குத்தக்கதென்பாள் செயிருறுதிங்களைத் தீயநோக்கினாளென்றார்.

ஏலுமிவ்வன்மையையென்னென்றன்னுதும்
ஆலைமென்கரும்பனுனொருவற்காங்கொரு
சோலைமென்குயிலனாள்சுற்றிவீக்கிய
மாலையைநிமிர்ந்திலவயிரத்தோள்களே. (சக)

சோர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவாள்
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினாள்
காரிகையிவளவள்கருத்தைநோக்கியோர்
வேரியந்தெரியலான்வீடுநோக்கினாள். (சஉ)

சினங்கெழுவாட்கையோர்செம்மல்பாலொரு
கனங்குழைமயிலனாள்கடிதுபோயினாள்
மனங்குழைதறவமோமாலைதான்கொலோ
அனங்கனேயார்கொலோவழைத்ததூதரே. (சங)

தொகுதருகாதற்குத்தோற்றசீற்றத்தோர்
வகிர்மதிநெற்றியாண்மழைக்கணாலிவந்
துகுதலுமுற்றதென்னென்றுகொற்றவன்
நகுதலுநக்கனனுணுநீங்கினாள். (சச)

பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய
கைத்தலநீக்கள்கருத்தினீக்கிலள்
சித்திரம்போன்றவச்செயலோர்தோன்றற்குச்
சத்திரமார்பிடைத்தைத்ததொத்ததே. (சரு)

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப்
புல்லியகையினள்போதிதாதெனச்
சொல்லுவாளுறமுறுநாணிற்சொல்லலள்
எல்லையில்பொழுதெலாமிருந்துவிம்மினாள். (சசு)

ஊறுபேரன்பினளொருத்திதன்னுயிர்
மாறிலாக்காதலன்செலவைமற்றொரு
நாறுபூங்கோதைபானவிலநாணுவாள்
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினாள். (சஎ)

---

41. பிரிந்து நின்று காமவெப்பத்தாஞெந்தமையின் ஆலைமென் கரும்பனுனென்றும், அவன்பட்ட காமவிடாயை யொருவண்ணந் தணியப்பெற்றது இவள்சொல்லேயென்றதுகருதிச் சோலைமென் குயிலனாளென்றுங் கூறினார்.

44. ஆற்றகுப்பைகளென்றாற் போலத் தோற்ற சீற்றமென்புழிக் காலங் காட்டு மின்னிடை நிலை புணர்ந்து கெட்டது.

46. பன்முறையாற்றிய செய்கையி னெல்லையில்லாமையை அச்செய்கை நிகழ்ந்த பொழுதின்மேலேற்றி எல்லையில் பொழுதெலா மென்றார்.

உருத்தெரி தன்மையவுயிருமொன்றுதாம்
அருத்தியுமத்துணையாயதீரிஞர்
ஒருத்தியுமொருத்தனுமுடம்புமொன்றெனப்
பொருத்துவராமெனப்புல்லிஞரரோ. (சஅ)

வெதிர்பொருதோளிஞெருத்திவேந்தன்வந்
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல
மதிமுகங்கதுமெனவணங்கிஞளது
புதுமையாதலினவற்கச்சம்பூத்ததே. (சகூ)

துனிவருநலத்தொடுசேர்கின்றுளொரு
குனிவருநுதலிக்குக்கொழுநனின்றியே
தனிவருந்தோழியுந்தாயையொத்தனள்
இனிவருதென்றலுமிரவுமென்னவே. (ருo)

ஆக்கியகாதலளொருத்தியந்தியில்
தாக்கியதெய்வமுண்டென்னுந்தன்மையள்
நொக்கினணின்றனனுவல்லதோர்கிலள்
போக்கினதுதிஞேடுணர்வும்போக்கினள். (ருக)

மறப்பிலள்கொழுநனேவரவுநோக்குவாள்
பிறப்பிஞெடிறப்பெனப்பெயருஞ்சிந்தையால்
துறப்பருமுகிலிடைத்தோன்றுமின்னெனப்
புறப்படும்புகுமொருபூத்தகொம்பஞள். (ருஉ)

எழுதருங்கொங்கைமேலனங்கனெய்தவம்
புழுதவெம்புண்களில்வளைக்கையொற்றிஞள்
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லிஞள்
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டுவாள். (ருங)

ஆர்த்தியுமுற்றதுமறிஞர்க்கற்றந்தான்
வார்த்தையினுணர்த்துதலரிதன்றேமனம்
வேர்த்தனள்வெதும்பினண்மெலிந்துசாய்ந்தனள்
பார்த்தனளொருத்திதன்பாங்கனேயே. (ருச)

தனங்களினிளையவர்தம்மின்மும்மடி
கனங்கனமிடையிடைகளிக்குங்கள்வனுப்
மனங்களினுழைந்தவர்மாந்துதேறலை
அனங்கனுமருந்திஞுதல்வேண்டுமால். (ருரு)

52. படமாடத்தைத் துறப்பருமுகிலென்றூர்.
53. கொங்கையினருமைநோக்கி எழுதருங்கொங்கையென்றூர்.

வேறு.

நறைகமழலங்கன்மாலைநளிர்நறுங்குஞ்சிமைந்தர்
துறையறிகலவிச்செவ்வித்தோகையர்தூசுவீசி
நிறையகலல்குல்புல்குங்கலன்கழித்தகலநீத்தார்
அறைபறையனையநீரார்அருமறைக்காவரோதான். (ருகூ)

பொன்னருங்கலனுந்தூசும்புறத்துளதுறத்தல்வம்பே
நன்னுதலொருத்திதன்பாலகத்துளநாணுநீத்தாள்
உன்னருந்துறவுபூண்டவுணர்வுடையொருவனேபோல்
தன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றன்றே. (ருஎ)

பொருவருமதனன்போல்வாளொருவனும்பூவின்மேலத்
திருவினுக்குவமைசால்வாளொருத்தியுஞ்சேக்கைப்போரில்
ஒருவருக்கொருவர்தோலாரொத்தனருயிருமொன்றே
இருவரதுணர்வுமொன்றேயென்றபோதியாவர்வெல்வார். (ருஅ)

கொள்ளைப்போர்வாட்கணாளங்கொருத்தியோர்குமரனன்னான்
வள்ளத்தாரகலந்தன்னைமலர்க்கையாற்புதைப்பநோக்கி
உள்ளத்தாருயிரன்னாண்மேலுதைபடுமென்றுநீநின்
கள்ளத்தாற்புதைத்தியென்னாமுன்னையிற்கனன்றுமிக்காள். (ருகூ)

பாலுளபவளச்செவ்வாய்ப்பணைமுலைநிகர்த்தமென்றோள்
வேலுளநோக்கினாளோர்மெல்லியல்வேலையன்ன
மாலுளசிந்தையாங்கோர்மழையுளதடக்கையாற்கு
மேலுளவரம்பைமாதரென்பதோர்விருப்பையீந்தாள். (சூ௦)

வேறு.

புனத்துளமயிலனாள்கொழுநன்பொய்யுரை
நினைத்தனள்சீறுவாளொருத்திநீடிய
சினத்தொடுகாதலன்சேக்கைப்போரிடை
மனத்துறைகாதலேவாகைகொண்டதே. (சூக)

கொலையுருவமைந்தெனக்கொடியநாட்டத்தோர்
கலையுருவல்குலாள்கணவற்புல்குவாள்

---

58. ஒத்தகிழவனும் கிழத்தியுமொத்த வின்பந்துய்த்தலின் ஒருவருக்கொருவர் தோலாரொத்தன ரென்றார்.

59. வளமென்றது - வள்ளமெனவிரிக்கும்; வழிவிரித்தல் பெற்றது.

60. மழையுளதடக்கை என்றது கொடையின்சிறப்புத்தோன்றநின்றது.

61. வெற்றியை வாகை யென்றார்.

சிலையுருவழிதரச்செறிந்தமார்பிற்றன்
முலையுருவினவெனமுதுகைநோக்கினாள். (சுஉ)

குங்குமமுதிர்ந்தனகோதைதேசார்ந்தன
சங்கினமுரன்றனகலையுஞ்சாறின
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன
மங்கையரிளநலமைந்தருண்ணவே. (சுங)

துனியுறுபுலவியைக்காதற்சூழ்சுடர்
பனியெனத்துடைத்தலும்பதைக்குஞ்சிந்தையாள்
புனையிழையொருமயில்பொய்யுறங்குவாள்
கனவெனுநலத்தினாற்கணவற்புல்லினாள். (சுச)

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனும்
கிட்டியபோதுடல்கிடைக்கப்புல்லினார்
விட்டிலர்கங்குலின்விடிவுகண்டிலர்
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால். (சுரு)

அருங்களிமால்களிறனையவீரர்க்கும்
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்
நெருங்கியவனமுலைசுமக்கநேர்கலா
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே. (சுசு)

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க்
கிடையுறுதிருவெனவிந்துநந்தினான்
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்
சுடர்மணிக்கரசெனவிரவிதோன்றினான். (சுஎ)

ஆக திருவிருத்தம் - கககச.

---

62. உருவுதலாகிய இயைபில்லாதிருப்ப அவ்வியல்புபடமுலையுருவின வெனக்கூறினார்.

64. கனவிடைப்பயந்ததுபோற் கணவனைப் புல்லுதற்கேதுவாதல்பற்றி கனவெனுநலமென்றார்.

65. பிரிவானுளதாம் வருத்தத்தினருமைதோன்றக்கிட்டியபோதென்றார்

67. சுடர்மணிக்கரசென்றது பீதகவாடைப்பிரானார் மார்பிடை மணியாகிய கவுத்துவத்தை.

## ௧௮ - வது, எதிர்கோட்படலம்.

### வேறு.

அடாநெறியறைதல்செல்லாவருமறையறைந்தநீதி
விடாநெறிப்புலமைச்செங்கோல்வெண்குடைவேந்தர்வேந்தன்
படாமுகமுகிலிற்றோன்றும்பருவமொத்தருவிபல்கும்
சடாநிறையாறுபாயுங்கடலொடுங்கங்கைசேர்ந்தான். (௧)

கப்புடைநாவினுகருலகமுங்கண்ணிற்றோன்றத்
துப்புடைமணலிற்றாகிக்கங்கைநீர்சுருங்கிக்காட்ட
அப்புடையனீகவேலையகன்புனன்முகந்துமாந்த
உப்புடைக்கடலுந்தெண்ணீருண்ணசையுற்றதன்றே. (௨)

ஆண்டுநின்றெழுந்துபோகியகன்பணைமிதிலையென்னும்
ஈண்டுநீர்நகரின்பாங்கரிருநிலக்கிழவனெய்தத்
தாண்டுமொப்புரவித்தானைத்தண்ணளிச்சனகனென்னும்
தூண்டருவயிரத்தோளான்செய்ததுசொல்லலுற்றாம். (௩)

வந்தனனரசனென்னமனத்தெழுமுவகைபொங்கக்
கந்தடுகளிறுந்தேருங்கலினமாக்கடலுஞ்சூழச்
சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைதோன்ற
இந்திரதிருவன்றன்னையெதிர்கொள்வானெழுந்துவந்தான். (௪)

கங்கைநீர்நாடன்சேனைமற்றுளகடல்களெல்லாம்
சங்கினமார்ப்பவந்துசார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்தபாற்கடலெதிர்வதேபோன்
மங்கையைப்பயந்தமன்னன்வளநகர்வந்ததன்றே. (௫)

### வேறு.

இலைகுலாவயிலினானிகமேழெனவுலா
நிலைகுலாமகரநீர்நெடியமாகடலெலாம்
அலகின்மாகளிறுதேர்புரவியாளெனவிராய்
உலகெலாநிமிர்வதேபொருவுமோருவமையே. (௬)

தொங்கல்வெண்குடைத்தொகைப்பிச்சமுட்படவிராய்
எங்கும்விண்புதைதரப்பகன்மறைந்திருளெழப்

---

1. படாமுகமென்றது - யானையை.
2. படைகளின் மிகுதிநோக்கி அப்புடையனீகமென்றார்.
3. இருநிலக்கிழவனென்றது-தயரதனை.
4. இந்திரதிருவனென்றது-மது.

பங்கயஞ்செய்யவும்வெளியவும்பலபடத்
தங்குதாமரையுடைத்தானமேபோலுமே. (எ)

கொடியுளாளோதனிக்குடையுளாளோகுலப்
படியுளாளோகடற்படையுளாளோபகர்
மடியிலாவரசிளுன்மார்புளாளோவளர்
முடியுளாளோதெரிந்துணர்கிலாமுளரியாள். (அ)

வார்முகங்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண்
டேர்முழங்கரவமேழிசைமுழங்கரவமே
தேர்முழங்கரவம்வெண்டிரைமுழங்கரவமே
கார்முழங்கரவம்வெங்கரிமுழங்கரவமே. (கூ)

சூழுமாகடல்களுந்திடர்படத்துகடவழ்ந்
தேழுபாரகமுற்றுளதெனற்கெளிதரோ
ஆழியானுலகளந்தன்றுதாள்சென்றவப்
பூழையூடேபொடித்தப்புறம்போயதே. (க0)

மன்னெடுங்குடைமிடைந்தடையவான்மறைதரத்
துன்னிடுநிழல்வழங்கிருடிரப்பெளிதரோ
பொன்னிடும்புவிபிடும்பூணமணிக்கலனெலாம்
மின்னிடும்வில்லிடும்வெயிலிடும்நிலவிடும். (கக)

தாவின்மன்னவர்பிரான்வரமுரட்சனகனும்
ஏவருஞ்சிலையிளுனெதிர்வரும்நெறியெலாம்
தூவுதண்சுண்ணமுங்கனகநுண்டுளியும்
பூவின்மென்றுதுகும்பொடியுமேபொடியெலாம். (கஉ)

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச்
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும்
வெறியுடைக்கலவையும்விரவுசெஞ்சாந்தமும்
செறிமதக்களுழிபாய்சேறுமேசேறெலாம். (கஙு)

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினும்
சென்றுவந்துலவுமச்சிவிகைநிழலினோர்
வென்றதிண்கொடியொடும்நெடுவிதானமும்விராய்
நின்றவெண்குடைகளின்நிழல்களேநிழலெலாம். (கச)

மாறிலாமதுகையான்மகிழ்பெருந்தானைமேல்
ஊறுபேருவகையானனிகம்வந்துற்றபோ

---

8. முளரியாள் - சயமகள்.

தீறிலோதையினொடுமெறிதிரைப்பரவைமேல்
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே. (கரு)

கந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர்
தந்தையேயனையவத்தகவினான்முன்புதன்
சிந்தையேபொருநெடுந்தேரின்வந்தெய்தினான். (கசு)

எய்தவத்திருநெடுந்தேரிழிந்திளையதன்
மொய்கொடிஞ்சேனைபின்னிற்கமுன்சேறலும்
கையின்வந்தேதெறெனக்கடிதின்வந்தேறினான்
ஐயனும்முகமலர்ந்தகமுறத்தழுவினான். (கஎ)

தழுவினின்றவனிருங்கிளையையுந்தமரையும்
வழுவில்சிந்தனையினான்வரிசையின்னளவளாய்
எழுகமுந்துறவெனாவினிதுவந்தெய்தினான்
உழுவைமுந்தரியனானெவரினும்முயரினான். (கஅ)

இன்னவாறிருவரும்மினியவாறேகவத்
துன்னுமாநகரினின்றெதிர்வரத்துன்னினான்
தன்னையேயனையவன்றழலையேயனையவன்
பொன்னின்வார்சிலையிறப்புயநிமிர்த்தருளினான். (ககூ)

தம்பியுந்தானுமத்தானைமன்னவனகர்ப்
பம்புதிண்புரவியும்படைஞரும்புடைவரச்
செம்பொனின்பசுமணித்தேரின்வந்தெய்தினான்
உம்பரும்மிம்பருமுரகருந்தொழவுளான். (உ0)

யானையோவிரதமோவிவுளியோபிடிகளோ
ஆனபேருறையிலாநிறைவையாரறிகுவார்
தானையோர்சனகனேவலினெடுந்தாதைமுன்
போனபேரிருவர்தம்புடைவரும்படையினே. (உக)

காவியுங்குவளையுங்கடிகொள்காயாவுமொத்
தோவியஞ்சுவைகெடப்பொலிவதோருருவொடே

---

16. அனையோர்க்குந் தெய்வமிலைமுகப்பைம்பூணிறையென்பது பற்றித் தந்தையேயனையவத்தகவினானென்றார். 19. பொன்னின்வார்சிலை-ஈசன்வில்.

20. உம்பர்முதலினர் தொழவுளானென்றது - இராமனை.

21. உறையென்றது - மிகப்பெரியதோரெண்.

22. கரியகோலப்பெருந்தகையாதலின் காவியுங்குவளையுங் கடியகாயாவுமென்றார்.

தேவருந்தொழுகழற்சிறுவன்முன்பிரிவதோர்
ஆவிவந்தென்னவந்தரசன்மாடணுகினான். (உஉ)

அணிகம்வந்தடிதொழக்கடிதுசென்றரசர்கோன்
இனியபைங்கழல்பணிந்தெழுதலுந்தழுவினான்
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தனமலைத்
தனிநெடுஞ்சிலையிறத்தவழ்தடங்கிரிகளே. (உ௩)

இளையபைங்குரிசில்வந்தடிபணிந்தெழுதலும்
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினான்
களைவருந்துயரறக்ககனமெண்டிசையெலாம்
விளைதரும்புகழினானெவரினும்மிகுதியான். (உச)

கற்றைவார்சடையினான்கைக்கொளுந்தனுவிறக்
கொற்றநீள்புயநிமிர்த்தருளுமக்குரிசில்பின்
பெற்றதாயரையுமப்பெற்றியிற்றொழுதெழுந்
துற்றபோதவர்மனத்துவகையாருரைசெய்வார். (உரு)

உன்னுபேரன்புமிக்கொழுகியொத்தொண்கணீர்
பன்னுதாரைகடரத்தொழுதெழும்பரதனைப்
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினான்
தன்னையத்தாதைமுன்றழுவினானென்னவே. (உசு)

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற்
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப்
பொருவருங்குமரர்தம்புனைநறுங்குஞ்சியால்
இருவர்பைங்கழலும்வந்திருவரும்வருடினார். (உஎ)

கோல்வருஞ்செம்மையுங்குடைவருந்தண்மையும்
சால்வருஞ்செல்வமென்றுணர்பெருந்தாதைதன்
மேல்வருந்தன்மையான்மிகவிளங்கினர்கடாம்
நால்வரும்பொருவினான்மறையெனுநடையினார். (உஅ)

---

23. மலையென்றது - மேருவை, அது மலைமகளுட் சிறந்தமைபற்றி.

24. துயரறக் ககனமெண்டிசையெலாம் விளைதரும்புகழினானென்றார், சம்பரன் முதலானோரைக் குலத்தோடுங்களைந்த சிறப்புநோக்கி.

25. யாரென்னும் வினாவினைக்குறிப்பு ஈண்டின்மைகுறித்துநின்றது 'யா அருலகத்தோர் சொல்லில்லா' ரென்புழிப்போல.

28. நால்வருநடையான் நான்மறைபொருவலினவற்றையே உவமைகூறினார்.

சான்றெனத்தகையடெசங்கோலினனுயிர்கடாம்
ஈன்றநற்றாயெனக்கருதுபேரருளினான்
ஆன்றவிச்செல்வமித்தனையுமொய்த்தருகுறத்
தோன்றலைக்கொண்டுமுற்செல்கெனச்சொல்லினான். (உகூ)

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினார்
தீதிலாவுவகைபுஞ்சிறிதரோபெரிதரோ
கோதைசூழ்குஞ்சியக்குமரர்வந்தெய்தலும்
தாதையாதொத்ததத்தானையின்றன்றன்மையே. (ஙo)

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந்
தழிவில்சிந்தையினுகந்தாடன்மாமிசைவரத்
தழுவுசங்குடனெடும்பணைதழங்கிடவெழுந்
தெழுதருந்தகையதோர்தேரின்மேலேகினான். (ஙக)

பஞ்சிசூழ்மெல்லடிப்பாவைமார்பண்ணைசூழ்
மஞ்சுசூழ்நெடியமாளிகையின்வந்திடைவிராய்
நஞ்சுசூழ்விழிகள்பூமழையின்மேல்விழுநடந்
திஞ்சிசூழ்மிதிலைமாவீதிசென்றெய்தினான். (ஙஉ)

சூடகந்துயல்வரக்கோதைசோர்தரமலர்ப்
பாடகம்பரதநூல்பகரவெங்கடகரிக்
கோடரங்கிடவெழுங்குவிதடங்கொங்கையார்
ஆடரங்கல்லவேயணியரங்கமெலாம். (ஙங)

பேதைமார்முதல்கடைப்பேரிளம்பெண்கடாம்
ஏதியார்மாரவேளேவவந்தெய்தினார்
ஆதிவானவர்பிரானணுகலாலணிகொள்கார்
ஓதியார்வீதிவாயுற்றவாறுரைசெய்வாம். (ஙச)

ஆ திருவிருத்தம் - கககச அ.

---

30. எனையுவகைபோலாது உயிர்க்குறுதிபயத்தலான் தீதிலாவுவகை யென்றார். ஆதலொத்தது என்றது - ஆதொத்ததெனநின்றது.

32. சூழ் என்னு முதனிலைத்தனி வினைப்பெயர் சூழ்ந்தென்னும் வினையெச்சப் பொருளது.

34. பேதைமார்முதல் கடைப்பேரிளம் பெண்களென்றது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை; அரிவை, தெரிவை, பேரிளம் பெண்ணென்னு மெழுவரை.

## கக-வது, உலாவியற்படலம்.

மானினம்வருவபோன்றுமயிலினந்திரிவபோன்றும்
மீனினமிளிர்வபோன்றுமின்னினமிடைவபோன்றும்
தேனினஞ்சிலம்பியார்ப்பச்சிலம்பினம்புலம்பவெங்கும்
பூநனைகூந்தன்மாதர்பொம்மெனப்புகுந்துமொய்த்தார். (க)

விரிந்துவீழ்கூந்தல்பாரார்மேகலையற்றநோக்கார்
சரிந்தபூந்துகில்கடாங்காரிடைதடுமாறத்தாழார்
நெருங்கினர்நெருங்கிப்புக்குநீங்குமினீங்குமினென்
றருங்கலமனையமாதர்தேனுகரளியின்மொய்த்தார். (உ)

கண்ணினாற்காதலென்னும்பொருளையேகாண்கின்றேமிப்
வெண்ணினீர்மையினாலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்
மண்ணினீருலர்ந்துவானமழையறவறந்தகாலத்
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார். (ங)

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானல்பூத்த
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூத்
தள்ளத்தம்மிடைகணோவத்தமைவலித்தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாருமொத்தார். (ச)

அரந்தமுண்டனையமேனியகலிகைக்களித்ததாளும்
விரைக்கருங்குழலிக்காகவில்லிறநிமிர்ந்துவீங்கும்
வரைத்தடந்தோளுங்காணமறுகினின்வீழுமாதர்
இரைத்துவந்தமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார். (ரு)

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான்
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்குங்கண்ணனென்றே
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான். (சு)

எண்கடந்தலகிலாதின்றேகுறுமிவன்றேரென்று
பெண்கடந்தம்மினொந்துபேதுறுகின்றகாலை

---

1. கண்ணான் மானினத்தையும், சாயலான் மயிலினத்தையும், அணிகலனான் மீனினத்தையும், இடையான் மின்னினத்தையுங் கூறினார்.

3. காதலைப்பொருளென்றார் வைசேடிகர்பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றதனானென்க.

6. யாவர் கண்ணிடைச் செல்வனென்றதுபற்றிக் கண்ணனென்றதென்க.

மண்கடந்தமரர்வைகும்வான்கடந்தானைத்தான்றன்
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளேகாண். (௭)

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பருநலனும்பண்பும்
செயிரின்றியலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும்
வயிரஞ்செய்பூணுநாணுமடனுந்தன்னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள். (௮)

குழையுறுமிளிருங்கெண்டைகொண்டலினாலிசிந்தத்
தழையுறுக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய
இழையுறுப்புண்ணாறாதவிளமுலையொருத்திசோர்ந்து
மழையுறுமின்னினன்னமருங்குல்போனுடங்கிநின்றாள். (௯)

பஞ்சணிவிரலினார்தம்படைநெடுங்கண்களெல்லாம்
செஞ்செவேயையன்மெய்யிற்கருமையைச்சேர்ந்தவோதாம்
மஞ்சனமேனியான்றன்மணிநிறமாதரார்தம்
அஞ்சனநோக்கம்பார்க்கவிருண்டதோவறிகிலேமால். (௧௰)

மாந்தளிர்மேனியாளோர்வாணுதன்மதனனெங்கும்
பூந்துணர்வாளிமாரிபொழிகின்றபூசனோக்கி
வேந்தர்கோனாணைநோக்கான்வீரன்வில்லாண்மைபாரான்
ஏந்திழையாரையெய்வான்யாவனோவொருவனென்றாள். (௧௧)

சொன்னலங்கடந்தகாமச்சுவையையோருருவமாக்கி
இன்னலந்தெரியவல்லாரெழுதியதென்னநின்றாள்
பொன்னையும்பொருவுநீராள்புனைந்தனவெல்லாம்போகத்
தன்னையுந்தாங்கலாதாடுகிலொன்றுந்தாங்கிநின்றாள். (௧௨)

விற்றங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்மா
சுற்றெங்குமெறிப்பவுள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள்

---

7. கடவுள் என்னும் பெயர்பற்றி மண்கடந்தமரர் வைகும் வான்கடந்தாரென்றார்.

8. உகுத்தெனக் கலைமுதலியன தன்னினீங்கினமை யுணராமை இலக்கணையாற் கூறினார்.

9. இவனை யடையத் தவமுடையே னல்லேனெனத் தன்னை நோக்கிக் கவன்றமையான் கெண்டையாலி சிந்தவென்றார்.

11. வேந்தர்கோனாணைக் கச்சமும்வீரன் வில்லாண்மைக்கு நாணமுமில்லாது ஏந்திழையாரையெய்வதனான் யாவனோ என்றதென்க.

12. உளத்து நிகழுங் காமச்சுவைபிறர்க்குப்புலப்பட இற்றென்றுவாயாற் கூறுவதறிதும், ஏனையுலகங்களினும் சிறந்ததுமாகலின் சொன்னலங்கடந்த காமங்சுவை என்றார்.

கொற்றஞ்செய்கொலைவேலென்னக்கூற்றெனக்கொடியகண்ணாள்.
மற்றொன்றுங்காண்கிலாதாடபியனேவள்ளலென்றாள். (கந)

மைக்கருங்கூந்தற்செவ்வாய்வாணுதலொருத்தியுள்ளம்
நெக்கனளுருகுகின்றாணெஞ்சிடைவஞ்சன்வந்து
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலங்கொள்வாயில்
சிக்கெனவடைத்தேதன்றோழிசேருதுமமளியென்றாள். (கச)

தாக்கணங்கனையமேனிதைத்தவேள்சரங்கள்பாராள்
வீக்கியகலனுந்தூசும்வேறுவேறானதோராள்
ஆக்கியபாவையன்னளொருத்தியாண்டமலன்மேனி
நோக்குறுவாரையெல்லாமெரியெழநோக்கிநின்றாள். (கரு)

களிப்பனமதர்ப்பநீண்டுகதுப்பிணையளப்பகள்ளம்
ஒளிப்பனவெளிப்பட்டோடப்பார்ப்பனசிவப்புள்ளூற
வெளுப்பனகறுப்பவானவேற்கணாளொருத்தியுள்ளம்
குளிர்ப்பொடுகாணவந்தாள்வெதுப்பொடுகோயில்புக்காள். (கசு)

கருங்குழற்பாரம்வார்கொள்கன்முலைகலைசூழல்குல்
நெருங்கினமறைப்பவாண்டோர்நீக்கிடம்பெறாதுவிம்மு
பெருந்தடங்கண்ணிகாணும்பேரெழிலாசைதூண்ட
மருங்குலின்வெளிகளூடேவள்ளலைநோக்குகின்றாள். (கஎ)

வரிந்தவாளனங்கன்வாளிமனங்கழன்றனவுமாதர்
மரிந்தபூணினமுங்கொங்கைவெயர்த்தபோதிழிந்தசாந்தும்
சரிந்தமேகலையுமுத்துஞ்சங்கமுந்தாழ்ந்தகூந்தல்
விரிந்தபூந்தொடையுமன்றிவெள்ளிடையரிதவ்வீதி. (கஅ)

---

13. வள்ளலென்றார். யாவருங்காண வீதியாய்வந்துதவுதலேநோக்கி.

14. தானடைந்து நமக்கு வேட்கையைப்பெருக்கி அது பயன்படத்தழுவுதலும் உள்ளத்தேவருதல் பெயர்த்தும் சேர்தலென்னுமொரு நிலைநிற்றலுமில்லாமையின்வஞ்சனென்றும், தன்போற்றோழியும் வேட்கையுடையாளாகலானும். தான்கண்ணெனும் புலன்கொள்வாயைச் சிக்கென வடைத்தலின் அவனையுமுடன்கொண்டுபோகவேண்டுமாகலானுமவளையு முளப்படுத்திச் சேருதுமமளியென்றுங்கூறினார்.

15. யாவரு மொருங்கு நோக்கலின் திருமேனிக்குக்கண்ணெச்சில் படுமென்றதனானும், தன்னை இறைவற்குரியளாகக்கருதி எனையோர் நோக்கப்பெறாது அது நமக்கின்றெனனுங் கருத்தானு மென்க.

தோள்கண்டார்தோளேகண்டார்தொடுகழற்கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்டகண்ணார்யாரேவடிவினைமுடியக்கண்டார்
ஊழ்கொண்டசமயத்தன்னானுருவுகண்டாரையொத்தார். (௧௯)

வேறு.

தையல்சிற்றிடையாளொருதாழ்குழல்
உய்யமற்றவனுள்ளத்தொடுங்கினான்
வையமுற்றும்வயிற்றினடக்கிய
ஐயனிற்பெரியாரினியாவரே. (௨௦)

அலம்புபாரக்குழலியொராயிழை
சிலம்புமேகலையும்மொலிசெய்திட
நலம்பெய்கொம்பினடந்துவந்தெய்தினாள்
புலம்புசேடியர்கைம்மிசைப்போயினாள். (௨௧)

அருப்புமென்முலையாளங்கொராயிழை
இருப்புநெஞ்சினையேனுமொரேழைக்காப்
பொருப்புவில்லைப்பொடிசெய்தபுண்ணியா
கருப்புவில்லிறுத்தாட்கொண்டுகாவென்றாள். (௨௨)

மைதவழ்ந்தகருங்கணொர்வாணுதல்
செய்தவன்றனித்தேர்மிசைச்சேறல்விட்
டெய்தவந்தெதிர்நின்றமைதானிது
கைதவங்கொல்கனவுகொலோவென்றாள். (௨௩)

மாதொருத்திமனத்தினையல்லதோர்
தூதுபெற்றிலளின்னுயிர்சோர்கின்றாள்
போதரிக்கட்பொலங்குழைப்பூண்முலைச்
சீதைதெத்தவஞ்செய்தனளோவென்றாள். (௨௪)

---

19. தாடகையை வென்ற தோளாண்மை நோக்கித் தோள்கண்டார் தோளே கண்டாரென்றும், அகலிகை சாபமொழித்த தாளின்பெருமை நோக்கிக் கமலமன்னதாள் கண்டார் தாளேகண்டார் தாளேகண்டாரென்றும், ஈசன் வில்லிறுத்த ஆற்றலேன்றத் தடக்கைகண்டாருமஃதே என்றுங் கூறினார்.

21. புலம்புசேடியரென்றார் இவளைப்பிரியுமாறுவந்ததென்று கவன்றமையாலெனன்க.

23. செய்துமுடித்த தவத்தானாகலின் செய்தவனென்றார்.

24. கிள்ளை நாரைமுதலிய தூதினின்று நீங்குதற்கு மனத்தினையல்லதோர் தூதென்றார்.

பழுதிலாவொருபாவையன் னாள்பதைத்
தழுதுவெய்துயிர்த்தன்புடைத்தோழியைத்
தொழுதுசோர்ந்தயர்வாளிந்தத்தோன்றலை
எழுதலாங்கொலெம்மன்மதனுலென்ருள். (உரு)

வண்ணவாயொருவானுதன்மானுடற்
கெண்ணுங்காலிவ்விலக்கணமெய்திட
ஒண்ணுமோவொன்றுணர்த்துகின்றேனிவன்
கண்ணனேயிதுகண்டிடும்பின்னென்ருள். (உசு)

கனகநூபுரங்கைவளேயோடுக
மனநெகும்படிவாடியொர்வாணுதல்
அனகனிந்நகரெய்தியதாதியிற்
சனகர்செய்ததவப்பயனுலென்ருள். (உஎ)

நனிவருந்திநலங்குடிபோயிடப்
பனிவருங்கணர்பாசிழையல்குலாள்
முனிவருங்குலமன்னருமொய்ப்பறத்
தனிவருங்கொல்கனவின்றலையென்ருள். (உஅ)

புனங்கொள்கார்மயில்போலியோர்பொற்கொடி
மனங்கொள்காதன்மறைத்தலையெண்ணினுள்
அனங்கவேளதறிந்தனனற்றந்தான்
மனங்கள்போலமுகமுமறைக்குமே. (உகூ)

இணைநெடுங்கணேரேந்திழையேந்து
அணையணைந்திடியுண்டவராவெனப்
புணர்நலங்கிளர்கொங்கைபுழுங்கிட
உணர்வழுங்கவுயிர்த்தனளாலியே. (௩௦)

ஆம்பலொத்தமுதூறுசெவ்வாய்ச்சியர்
தாம்பதைத்துயிருட்டடுமாறுவார்
தேம்புசிற்றிடைச்சீதையைப்போற்சிறி
தேம்பல்பெற்றிலரெங்கணமுய்வரே. (௩௧)

வேர்த்துமேனிதளர்ந்துயிர்விம்மநேலா
டார்த்தியுற்றமடந்தையராரையும்

---

26. ஒன்றுமோ என்றது - ஒண்ணுமோஎனமரீஇயது.

28. பசும்பொனணியன்ற அணியைப் பாசிழை என்றது - மரபு வழுவமைதி. 29. உருவிலியாதலான் - அநங்கவேளென்றூர்.

தீர்த்தனித்தனைசிந்தையிற்செங்கணிற்
பார்த்திலனுட்பரிவிலரேனென்றாள். (௩௨)

வையம்பற்றியமங்கையரெண்ணிலார்
ஐயன்பொற்புக்களவிலையாதலால்
எய்யும்பொற்சிலைமாரனுமென்செய்வான்
கையம்பற்றுடைவாளினுங்கைவைத்தான். (௩௩)

நானவார்குழனாரியரோடலால்
வேனில்வேளொடுமேலுறைவார்களோ
டானபூசலறிந்திலமம்புபோய்
வானநாடியர்மார்பினுந்தைத்தவே. (௩௪)

மருண்மயங்குமடந்தையர்மாட்டொரு
பொருணயந்திலன்போகின்றதேயிவன்
கருணையென்பதுகண்டறியான்பெரும்
பருணதன்கொல்படுகொலையானென்றாள். (௩௫)

தொய்யில்வெய்யமுலைத்துடிபோலிடை
நையும்நொய்யமருங்குலொர்நங்கைதான்
கையுமெய்யுமறிந்திலள்கண்டவர்
உய்யுமுய்யுமெனத்தளர்ந்தோய்வுற்றாள். (௩௬)

பூகவூசல்புரிபவர்போலொரு
பாகின்மென்மொழிதன்மலர்ப்பாதங்கள்
சேகுசேர்தரச்சேவகன்றேரின்பின்
ஏகுமீளுமிதென்செய்தவாறரோ. (௩௭)

பெருத்தகாதலிற்பேதுறுமாதரின்
ஒருத்திமற்றங்கொருத்தியைநோக்கியென்
கருத்துமவ்வழிகண்டதுண்டோவென்றாள்
அருந்தியுற்றபின்னுணமுண்டாகுமோ. (௩௮)

நங்கையங்கொருபொன்னயந்தாருய்யத்
தங்களின்னுயிருங்கொடுத்தார்தமர்

32. தீர்த்தனென்றதிராமனை.

33. கையம்பற்றுடைவாளினுங் கைவைத்தானென்றார். கை அம்புகளொழிந் துடைவாளினுங் கைவைத்தானென்க. இனி உடைவாளினுங் கைவைத்தான் என்றது - கையம்புமலரப்பாதலின் தேன்சொரிவதனுன் நழுவுநின்றமைபற்றி, அங்ஙனமாகா வண்ணம் கேதகையின் பராகத்தானழுவாவண்ணஞ் செய்தானென்றது. 35. படுகொலையான் - கழிபெருங்கொலையாளி,

எங்களின்னுயிரெங்களுக்கிலா
வெங்கணெணங்கண்விளைந்ததிவற்கென்றாள். (௩௯)

நாமத்தாலழிவாளொருநன்னுதல்
சேமத்தார்வில்லிறுத்ததுதேருங்கால்
தூமத்தார்குழற்றாமொழித்தோகைபால்
காமத்தாலன்றுகல்வியினாலென்றாள். (௪0)

ஆரமுந்துகிலுங்கலனியாவையும்
சோரவின்னுயிர்சோருமொர்சோர்குழல்
கோரவில்லிமுன்னேயெனைக்கொல்கின்ற
மாரவேளின்வலியவர்யாரென்றாள். (௪௧)

மாதரின்னணமெய்திடவள்ளல்போய்க்
கோதில்சிந்தைவசிட்டனுங்கோசிக
வேதபாரனுமேவியமண்டபம்
எதின்மன்னர்குழாத்தொடுமெய்தினான். (௪௨)

திருவினாயகன்மின்றிரிந்தாலெனத்
துருவின்மாமணியாரந்துயல்வரப்
பருவமேகம்படிந்ததுபோற்படிந்
திருவர்தாளுமுறைமையினிறைஞ்சினான். (௪௩)

இறைஞ்சவன்னவரேத்தினரேவவோர்
நிறைஞ்சபூந்தவிசேறிநிழற்கள்போல்
புறஞ்செய்தம்பியருட்பொலிந்தானரோ
அறஞ்செய்காவற்கயோத்தியிற்றோன்றினான். (௪௪)

ஆனமாமணிமண்டபமன்னது
தானைமன்னன்றமரொடுஞ்சார்ந்தனன்
மீனெலாந்தனபின்வரவெண்மதி
வானிலாவுறவந்ததுமானவே. (௪௫)

வந்துமாதவர்பாதம்வணங்கிமேற்
சிந்துதேமலர்மாரிசிறந்திட

---

40. சேமித்துவைத்த வில்லாதலின் சேமத்தார் வில்லென்றார்.

41. பிறர்க்கச்சம்விளைத்தவில்லை விளைத்தவனாகலின் கோரவில்லிஎன்றார்.

42. வேதபாரகன் - வேதபாரனென இடைக்குறைந்தது.

43. தோளாமணி என்றதுபற்றித் துருவின் மாமணி என்றார்.

44. பாம்பணைதுறந்தமை அறத்தை நிறுத்தற்பொருட்டாகலின் அறஞ்செய்காவற்கயோத்தியிற்றோன்றினானென்றார்.

அந்தணாளர்களாசியொடாசனம்
இந்திரன்முகநாணுறவேறினான். (சசு)

கங்கர்கொங்கர்கலிங்கர்குலிந்தர்கள்
சிங்காளதிபர்சேரலர்தென்னவர்
அங்கராசர்குலிங்கரவந்திகர்
வங்கர்மாளவர்சோளர்மராடரே. (சஎ)

மானமாகதர்மச்சர்மிலேச்சர்கள்
ஏனைவீரவிலாடர்விராடர்கள்
சீனர்தெங்கணர்செஞ்சகர்சோமகர்
சோனசேகர்துருக்கர்குருக்களே. (சஅ)

ஏதியாதவரேழ்திறற்கொங்கணர்
சேதிராசர்தெலுங்கர்கருநடர்
ஆதிவானங்கவித்தவவனியாள்
சோதிநீண்முடிமன்னருந்துன்னினார். (சகூ)

தீங்கரும்பினுந்தித்திக்குமின்சொலார்
தாங்குசாமரைமாடுதயங்குவ
ஓங்கியோங்கிவளர்ந்துயர்கீர்த்தியின்
பூங்கொழுந்துபொலிவனபோன்றவே. (ருo)

சுழலும்வண்டுமிஞிறுஞ்சுரும்புஞ்சூழ்ந்
துழலும்வாசமதுமலரோதியர்
குழலினோடுறக்கூறுபல்லாண்டொலி
மழலையாழிசையோடுமெலிந்தவே. (ருக)

வெங்கணானையினான்றனிவெண்குடை
திங்கடங்கள்குலக்கொடிசீதையாம்
மங்கைமாமணங்காணியவந்தருள்
பொங்கியோங்கித்தழைப்பதுபோன்றதே. (ருஉ)

ஊடுபேர்விடமின்றியொன்றும்வகை
நீடுமாகடற்றானைநெருங்கலால்
ஆடன்மாமதயானைச்சனகர்கோன்
நாடெலாமொருநன்னகராயதே. (ருங)

---

50. கீர்த்தியை வெண்மையாகக்கூறலின், சாமரை மாடுதயங்குவது கீர்த்தியின் பூங்கொழுந்தென் றுவமித்தார்,

ஒழிந்தவென்னினியொண்ணுதற்றுணைதன்
பொழிந்தகாதறொடரப்பொருளெலாம்
அழிந்துவந்துகொண்டாடலினன்புதான்
இழிந்துளார்க்குமிராமற்குமொத்ததே. (௫௪)

ஆக திருவிருத்தம் - ௧௨௦௨.

---

## ௨௧-வது, கோலங்காண்படலம்.

---

தேவியர்மருங்குசூழவிந்திரனிருக்கைசேர்ந்த
ஓவியமுயிர்பெற்றென்னவுவந்தரசிருந்தகாலை
தாவில்வெண்கவிகைச்செங்கோற்சனகனையினிதுநோக்கி
மாவியனோக்கினாளைக்கொணர்கெனவசிட்டன்சொன்னான். (௧)

உரைசெயத்தொழுதகையனுவந்தவுள்ளத்தன்பெண்ணுக்
கரைசியைத்தருதிரீண்டென்றாயிழையவரையேவக்
கரைசெயற்கரியகாதல்கடாவிடக்கடிதுசென்றார்
பிரசமொத்தினியசொல்லார்பேதைதாதியரிற்சொன்னார். (௨)

அமிழிமைத்துணைகள்கண்ணுக்கணியெனவமைக்குமாபோல்
உமிழ்சுடர்க்கலன்கணங்கையுருவினைமறைப்பதோரார்
அமிழ்தினைச்சுவைசெய்தென்னவழகினுக்கழகுசெய்தார்
இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ. (௩)

கண்ணன்றன்னிறந்தன்னுள்ளக்கருத்தினைநிறைத்துமீதிட்
டுண்ணின்றுங்கொடிகளோடியுலகெங்கும்பரந்ததன்ன
வண்ணஞ்செய்கூந்தற்பாரவலயத்துமழையிற்றோன்றும்
விண்ணின்றமதியின்மென்பூஞ்சிகழிகைக்கோதைவேய்ந்தார். (௪)

விதியதுவகையால்வானமீனினம்பிறையைவந்து
கதுவுறுகின்றதென்னக்கொழுந்தொளிகஞலத்தூக்கி
மதியினைத்தந்தமேகமருங்குநாவளைப்பதென்னப்
பொதியிருளளகபந்திபூட்டியபூட்டுமிட்டார். (௫)

---

1. இந்திரனிருக்கை - அரசனதிருக்கை இவ்வாறே வடநூலாரும் இந்திரஸ்தானமென்பர். மாவியனோக்கினாளென்றது - சனகியை.

4. சிகழிக்கோதை வேய்தலென்றது - மயிர்முடியிற் பூமாலை முடித்தலை.

வெள்ளத்தின் சடிலத்தான்றன் வெஞ்சிலையிறுத்தவீரன்
தள்ளத்தன்றாவிசோரத் தனிப்பெரும்பெண்மைதன்னை
அள்ளிக்கொண்டகன்றகாளையல்லன்கொலாங்கொலென்பாள்
உள்ளத்தினூசலாடுங்குழைநிழலுமிழவிட்டார். (௬)

கோனணிசங்கம்வந்துகுடியிருந்தனையகண்டத்
தீனமில்கலன்கடம்மினிமையவனவணிதல்செய்தார்
மானணிநோக்கினார்தம்மங்கலக்கழுத்துக்கெல்லாம்
தானணியானபோதுதனக்கணியாதுமாதோ. (௭)

கோணிலாவானமீன்களியையவனகோத்ததென்கோ
வாணிலாவயங்குசெவ்விவளர்பிறைவகிர்ந்ததென்கோ
நாணிலாநகையினின்றநளிர்நிலாத்தவழ்ந்ததென்கோ
பூணிலாமுலைமேலாரமுத்தையான்புகல்வதென்னோ. (௮)

மொய்கொள்சீறடியைச்சேர்ந்தமுளரிக்குஞ்செம்மைமீந்த
தையலாளமிழ்தமேனிதயங்கொளிதழுவிக்கொள்ள
வெய்யபூண்முலையிற்சேர்ந்தவெண்முத்தஞ்சிவந்தவென்றால்
செய்யரைச்சேர்ந்துளாருஞ்செய்யராய்த்திகழ்வரன்றே. (௯)

கொமையுறவீங்குகின்றகுலிகச்செப்பனையகொங்கைச்
சுமையுறநுடங்குகின்றநுசுப்பினாள்பூண்செய்தோளுக்
கிமையுறவிமைக்குஞ்செங்கேழினமணிமுத்தினோடும்
அமையுறவமைவதுண்டாமாகினோப்பாகுமன்றே. (௧௦)

தளையவிழ்கோதையோதிச்சானகிதளிர்க்கையென்னும்
முளரிகளிராமன்செங்கைமுறைமையிற்றீண்டநோற்ற
அளியனகங்குற்போதுங்குவியலவாகுமென்றாங்
கிளவெயில்சுற்றியன்னவெரிமணிக்கடகமிட்டார். (௧௧)

சில்லியலோதிகொங்கைத்திரள்மணிக்கனகச்செப்பில்
வல்லியுமனங்கன்வில்லுமான்மதச்சாந்திற்றீட்டிப்

---

6. பெண்மைஎன்றது - கட்கினிமையாமமைதித்தன்மை.

7. கோனென்றது - அயர்வருமமரர்கட்கிறையை, இதனைத் 'தேவிற்றிரு மா' லென்பதனானறிக. சங்கமென்றது - பாஞ்சசன்னியத்தை.

7. தானென்றது திருமாமகளை.

10. கொம்மை என்றது - கொமை எனக்குறைந்து நின்றது.

பல்லியனெறியிற்பார்க்கும்பரம்பொருளென்னயார்க்கும்
இல்லையுண்டென்னநின்றவிடையினுக்கிடுக்கண்செய்தார். (கஉ)

நிறஞ்செய்கோசிகநுண்டூசுநீவிநீவாதவல்குற்
புறஞ்செய்மேகலையுந்தாழந்தாரகைச்சும்மைபூட்டித்
திறஞ்செய்காசின்றசோதிபேதைசேயொளியிற்சேர்ந்த
கறங்குபுதிரியயாருங்கண்விளக்குற்றுநின்றார். (கங)

ஐயவாமணிச்சப்போதினதிகமுநொய்யவாடற்
பையரவல்குலாடன்பஞ்சின்றிப்பழுத்தபாதச்
செய்யபூங்கமலமன்னச்சேர்த்தியசிலம்புசால
நொய்யவேநொய்யவென்றேபலபடாநுவல்வதம்மா. (கச)

நஞ்சிடையமிழ்தங்கூட்டிநாட்டங்களானவென்னச்
செஞ்செவேநீண்டுமீண்டுசேயரிசிதறித்தீய்
வஞ்சமுங்களவுமின்றிமழையெனமதர்த்தகண்கள்
அஞ்சனநிறமோவண்ணல்வண்ணமோவறிதறேற்றாம். (கரு)

மொய்வளர்குவளைபூத்தமுளரியின்முளைத்தமுந்நாள்
மெய்வளர்மதியினுப்பண்மீனுண்டேலனையதேய்ப்ப
வையகமடந்தைமார்க்குநாகர்கோதையர்க்கும்வானத்
தெய்வமங்கையர்க்குமெல்லாந்திலகத்தைத்திலகஞ்செய்தார். (கசு)

சின்னப்பூச்செருகுமென்பூச்சேகரப்போதுகோதில்
கன்னப்பூக்குழலமீதுகற்பகக்கொழுந்துமான
மின்னப்பூஞ்சுரும்பும்வண்டுமிஞிறுந்தும்பிகளும்பம்பும்
புன்னைப்பூந்தாதுமானும்பொற்பொடியப்பிவிட்டார். (கஎ)

நெய்வளர்விளக்கமாட்டிநீரொடுபூவுந்தூவித்
தெய்வமும்பராவிவேதபாரகர்க்கிந்துசெம்பொன்
ஐயவிநுதலிற்சேர்த்தியாய்நிறவயினிசுற்றிக்
கைவளர்மயிலனுளைவலஞ்செய்துகாப்புமிட்டார். (கஅ)

கஞ்சத்துக்களிக்குமின்றேன்கவர்ந்துணும்வண்டுபோல
அஞ்சொற்கள்கிள்ளைக்கெல்லாமருளினுளழகைமாந்தித்

---

12. பரம்பொருளினை இல்லையுண்டென நின்றது போன்றிடையுமன்ன தாகலினதனையே யுவமித்தார்.

16. முந்நாள் - ஈண்டு மூன்றாம்பிறையை.

17. சுரும்பு முதலியன - நால்வகைவண்டென்க.

18. காப்பு - சூர்முதலியதாக்காமைபொருட்டு இடுவதோர்பொருள்.

தஞ்சொற்கள்குழறித்தத்தந் தகைதடுமாறிநின்றார்
மஞ்சர்க்குமாதரார்க்குமனமென்படிதான்றேயன்றோ. (௧௯)

இழைகுலாமுலையினாளையிடையுவாமதியினோக்கி
மழைகுலாவோதிநல்லார்களிமயக்குற்றுநின்றார்
உழைகுலாநயனத்தார்மாட்டொன்றோன்றேவிரும்பற்கொத்த
தழகெலாமொருங்கேகண்டால்யாவரேயாற்றவல்லார். (௨௦)

சங்கங்கையுடைமையாலுந்தாமரைக்கோயிலாலும்
எங்கெங்கும்பரந்துவெவ்வேறுள்ளத்தினெழுதிற்றென்ன
அங்கங்கேதோன்றலாலுமருந்ததியனையகற்பின்
நங்கையுநம்பியொத்தாளுமினிப்புகல்வதென்னோ. (௨௧)

பரந்தமேகலையுங்கோத்தபாதசாலகமுநாகச்
சிரஞ்செய்நூபுரமும்வண்டுஞ்சிலம்பொடுசிலம்பியார்ப்பப்
புரந்தரன்கோற்கீழானோரரம்பையர்புடைசூழ்ந்தென்ன
வரம்பறுசும்மைத்தீஞ்சொன்மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார். ()

சிந்தொடுகுறளுங்கூனுஞ்சிலதியர்குழாமுந்தெற்றி
வந்தடிவணங்கிச்சுற்றமணியணிவிதானநீழல்
இந்துவின்கொழுந்துவிண்மீனினத்தொடும்வருவதென்ன
நந்தலில்விளக்கமன்னநங்கையுநடக்கலுற்றாள். (௨௩)

வேறு.

வல்லியையுயிர்த்தநிலமங்கையிவள்பாதம்
மெல்லியவுறைக்குமெனவஞ்சிவெளியெங்கும்
பல்லவமலர்த்தொகைபரப்பினனெனத்தன்
நல்லணிமணிச்சுடர்தவழ்ந்திடநடந்தாள். (௨௪)

தொழுந்தகையமென்னடைதொலைந்துகளியன்னம்
எழுந்திடைவிழுந்தயர்வதென்னவயலெங்கும்
கொழுந்துடையசாமரைகுலாவவொர்கலாபம்
வழங்குநிழன்மின்னவருமஞ்ஞையெனவந்தாள். (௨௫)

மண்முதலனைத்துலகின்மங்கையருமெல்லாம்
கண்மணியெனத்தகையகன்னியெழில்காண
அண்ணன்மரபிற்சுடரருந்ததியொடுதானவ்
விண்ணிழிவதொப்பதொர்விதானநிழல்வந்தாள். (௨௬)

---

19. மஞ்சரெனறது' ஆடவரை.

21. சங்கு அங்கையுடைமை - சங்கமேந்தியிருத்தல். வளையலணிந்திருத்தல்.

கற்றைவிரிபொற்கடைமயிர்த்துறுகலாபம்
சுற்றுமணிபுக்கவிழைமிக்கிடைதுவன்றி
விற்றவழவாணிமிரமெய்யணிகண்மின்னச்
சிற்றிடைநுடங்கவொளிர்சீறடிபெயர்த்தாள். (உஎ)

பொன்னினொளிபூவின்வெறிசாந்துபொதிசீதம்
மின்னினிழலன்னவடன்மேனியொளிமான
அன்னமுமரம்பையருமாரமிழ்துநாண
மன்னவையிருந்தமணிமண்டபமடைந்தாள். (உஅ)

சமைத்தவரையின்மைமறைதானுமெனலாமச்
சுமைத்திரண்முலைத்தெரிவைதூய்வடிவுகண்டார்
அமைத்திரள்கொடோளியருமாடவருமெல்லாம்
இமைத்திலருயிர்த்திலர்கள்சித்திரமெனத்தாம். (உகூ)

அன்னவளையல்லளெனவாமெனவயிர்ப்பான்
கன்னியமிழ்தத்தையெதிர்கண்டகடல்வண்ணன்
உன்னுயிர்நிலைப்படுதொரருத்தியொடுழைத்தாண்
டின்னமிழ்தெழக்களிகொளிந்திரனையொத்தான். (ங0)

நறத்துறைமுதிர்ச்சியுறுநல்லமிழ்துபில்குற்
றறத்தின்விளைவொத்துமுகடுந்தியருகுய்க்கும்
நிறத்துவரிதழ்க்குயினிளைப்பினிடையல்லாற்
புறத்துமுளதோவெனமனத்தொடுபுகன்றான். (ஙக)

எங்கள்செய்தவத்தினிலிராமனெனவந்தோன்
சங்கினொடுசக்கரமுடைத்தனிமுதற்பேர்
அங்கணரசாதலினவ்வல்லிமலர்புல்லும்
மங்கையிவளாமெனவசிட்டன்மகிழ்வுற்றான். (ஙஉ)

துன்றுபுரிகோதையெழில்கண்டுலகுசூழ்வந்
தொன்றுபுரிகோலொடுதனித்திகிரியுய்ப்பான்
என்றுமுலகேழுமரசெய்தியுளனேனும்
இன்றுதிருவெய்தியதிதென்னவயமென்றான். (ஙங)

நைவளநவிற்றுமொழிநண்ணவரலோடும்
வையநுகர்கொற்றவனுமாதவருமல்லார்

---

28. நடையினன்னமும், அழகினரம்பையரும், சொல்லினமிழ்துமொப் பாகாமையினுணவென்றார்.

34. வையநுகர்கொற்றனென்றது - இராமனை.

கைகடலைபுக்கனகருத்துளதுமெல்லாம்
தெய்வமெனவுற்றவுடல்சிந்தைவயமன்றே. (௩௪)

மாதவரைமுற்கொளவணங்கிநெடுமன்னன்
பாதமலரைத்தொழுதுகண்கள்பனிசோரும்
தாதையருகிட்டதவிசிற்றனியிருந்தாள்
போதினைவெறுத்தரசர்பொன்மனைபுகுந்தாள். (௩௫)

அச்செனநினைத்தமுதலந்தணனிருந்தான்
பச்சைமலையொத்தபடிவத்தடவிராமன்
நச்சுடைவடிக்கண்மலர்நங்கையிவளன்றால்
இச்சிலைகிடக்கமலையேழையுமிறுமே. (௩௬)

எய்யவில்வளைத்ததுமிறுத்ததுமுரைத்து
மெய்விளைவிடத்துமுதலையம்விடலுற்றாள்
ஐயனையகத்துவடிவேயலபுறத்தும்
கைவளைதிருத்துபுகடைக்கணினுணர்ந்தாள். (௩௭)

கருங்கடைநெடுங்கணொளியாறுநிறைகண்ணப்
பெருங்கடலின்மண்டவுயிர்பெற்றினிதுயிர்க்கும்
அருங்கலனணங்கரசியாரமிழ்தனைத்தும்
ஒருங்குடனருந்தினரையொத்துடறடித்தாள். (௩௮)

கணங்குழைகருத்தினுறைகள்வனெனலானான்
வணங்குவிலிறுத்தவனெனத்துயர்மறந்தாள்
அணங்குறுமவிஞ்சைகெடவிஞ்சையினகம்பா
டுணர்ந்தறிவுமுற்றபயனுற்றவரையொத்தாள். (௩௯)

கொல்லுயர்களிற்றரசர்கோமகனிருந்தான்
கல்விகரையுற்றமுனிகவுசிகனைமேலோய்
வல்விபொருசிற்றிடைமடந்தைமணநாளாம்
எல்லையினலத்தபகலென்றுரைசெய்கென்றான் (௪0)

வாலைபுகளக்கயல்கள்வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழியமூரியவரான்மீன்
பாளைவிரியக்குதிகொள்பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபகனற்றவனுரைத்தான். (௪௧)

சொற்றபொழுதத்தரசர்கைதொழுதெழத்தன்
ஒற்றைவயிரச்சுரிகொள்சங்கொலிபொங்கப்

---

36. அவிஞ்சையென்ற தவித்தையை, அது பிறவித்துயர்க்கேதுவாக லின் அணங்குறுமென விசேடித்தார்.

பொற்றடமுடிப்புதுவெயிற்பொழிதரப்போய்
நற்றபனனுச்சிதொடுநன்மனைபுகுந்தான். (சஉ)

அன்னமரிதிற்பிரியவண்ணலுமகன்றப்
பொன்னினெடுமாடவரைபுக்கனன்மணிப்பூண்
மன்னவர்பிரிந்தனர்கண்மாதவர்கள்போனார்
மின்னுசுடர்நாயகனுமேருவின்மறைந்தான். (சங)

ஆக திருவிருத்தம் - கஉசரு.

## உஉ-வது, கடிமணப்படலம்.

இடம்படுபுகழ்ச்சனகர்கோனினிதுபேணக்
கடம்படுகளிற்றரசராதியிடைகண்டோர்
தடம்படுபுயத்தசிறுதம்பியர்கள்காறும்
உடம்பொடுதுறக்கநகருற்றவரையொத்தார். (க)

தேடருநலத்தபுனலாசைதெறலுற்றார்
மாடோர்தடமுற்றதனையெய்தும்வகைகாணார்
ஈடழிவுறத்தளர்வொடேமுறுவரன்றே
ஆடகவளைக்குயிலுமங்கிலையளானாள். (உ)

வேறு.

உரவேதுமிலாருயிரீதுமெனாக்
கரவேபுரிவாருளரோகதிரோன்
வரவேயெனையாளுடையான்வருமே
இரவேகொடியாய்விடியாயெனுமால். (ங)

கருநாயிறுபோல்பவர்காலொடுபோய்
வருநாளயலேவருவாய்மனனே
பெருநாளுடனேபிரியாதுழல்வாய்
ஒருநாடரியாதொழிவாருளரோ. (ச)

கனையேழ்கடல்போல்கருநாழிகைதான்
வினையேன்வினையால்விடியாவிடினீ
தனியேபறவாய்தகவேதுமிலாய்
பனைமேலுறைவாய்பழிபூணுதியோ. (ரு)

43. மின்னுசுடர் நாயகன் - ஞாயிறு.
5. கருநாழிகை - இரவு.

அயில்வேலனல்கால்வனவாநிழலாய்
வெயிலேயெனநீவிரிவாய்நிழலே
செயிரேதுமிலாருடறேய்வுறுவார்
உயிர்கோளுறுவாருளரோவுரையாய். (௬)

மன்றற்குளிர்வாசம்வயங்கனல்வாய்
மின்றொத்துநிலாநகைவீழ்மலயக்
குன்றிற்குலமாமுழையிற்குடிவாழ்
தென்றற்புலியேயிரைதேடுதியோ. (௭)

தெருவேதிரிவாரொருசேவகனார்
இருபோதும்விடாரிதுவென்னைகொலாம்
கருமாமுகில்போல்பவர்கன்னியர்பால்
வருவாருளரோகுலமன்னவரே. (௮)

தெருளாவினைதீயவர்சேரலர்தோள்
அருளாநெறியோடுமவாவதுவோ
கருளார்கடலோகரைகாணரிதால்
இருளானதுதானெனையூழிகொலாம். (௯)

பண்ணோவொழியாபகலோபுகுதா
தெண்ணோதவிராவிரவோவிடியா
துண்ணோவொழியாவுயிரோவகலா
கண்ணோதுயிலாவிதுவோகடனே. (க0)

இடையேவளைசோரவெழுந்துவிழுந்
தடலேய்மதனன்சரமஞ்சினையோ
உடலோய்வுறநாளுமுறங்கலையால்
கடலேயுரைநீயுமொர்கன்னிகொலாம். (கக)

எனவின்னனபன்னியிருந்துளைவாள்
துனியுன்னிநலங்கொடுசேர்வுறுகால்
மனைதன்னின்மயங்குறும்வைகிருள்வாய்
அனகன்னினைகின்றனயாமறைவாம். (கஉ)

முன்கண்டுமுடிப்பருவேட்கையினால்
என்கண்டுணைகொண்டிதயத்தெழுதிப்

13. முன்கண்டென்றது - கன்னிகாமாடத்துக் காண்டமலை, என்கண்டுணை கொண்டென்றது என்கண்ணாகிய ஓவியக்கோல் கொண்டென்றதை.

பின்கண்டெமோர்பெண்களைக்கண்டிலெனல்
மின்கண்டவரெங்கறிவார்வினையே. (கங)

திருவேயனையாண்முகமேதெரியின்
கருவேகனியேவிளைகாமவிதைக்
கெருவேமதியேயிதுவென்செய்தவா
ஒருவேனொடுநீயுறவாகலையோ. (கச)

கழியாவுயிருந்தியகாரிகைதன்
விழிபோலவளர்ந்ததுவீகிலதால்
அழிபோரிறைவன்படவஞ்சியவன்
பழிபோலவளர்ந்ததுபாயிருளே. (கரு)

நினையாவொருகாலெனடிதோநெறிதான்
வினவாதவர்பால்விடைகொண்டிலையோ
புனமானனையாளொடுபோயினவென்
மனனேயெனைநீயுமறந்தனையோ. (கசு)

தன்னேக்கெரிகாறகைவாளரவின்
பன்னேக்கினதென்பதுபண்டுகொலாம்
என்னேக்கினுநெஞ்சினுமென்றுமுளார்
மென்னேக்கினதேகடுவல்விடமே. (கஎ)

கல்லார்மலர்சூழ்கழிவார்பொழிலோ
டெல்லாமுளவாயினுமென்மனமோ
சொல்லாரமுதின்சுவையோடினிதாம்
எல்லோதியர்தாம்விளையாடிடமே. (கஅ)

வேறு.

வானவர்பெருமானும்மனநினைவினனாகத்
தேனகுகுழலாடன்றிருமணவினைநாளை
பூநகுமணிவாசம்புனைநகரணிவீரென்
றானையின்மிசையாணரணிமுரசறைகென்றான். (கக)

---

இதயத்தெழுதி என்றது உள்ளமாகிய ஏட்டிலெழுதி என்றதை, வினை என்றது - காண்டற்றொழிலை. பின்கண்டென்ற - தரசவையிற்கண்டதை. மின் கண்டவரெங்கறிவார் வினையென்றார்- மின்னலைக்கண்டார் வேறு பொருளைக் காணுதவாறுபோற் சனகியைக்கண்டதான் வேறொருபொருளைக் கண்டில ரென்பதனுனென்க.

19. வானவர் பெருமானென்ற தபர்வருமமரர்கட்கிறையை.

முரசறைதலுமானமுதியருமிளையோரும்
விரைசெறிகுழலாரும்விரவினர்விரைகின்றார்
உரைசெறிகிளையோடுமுவகையினுயர்கின்றார்
கரைசெறிவரிதாருமிரவொருகரைகண்டார். (௨௦)

அஞ்சனவொளியானுமலர்மிசையுறைவாளும்
எஞ்சலின்மணநாளைப்புணர்குவரெனலோடும்
செஞ்சுடரிருள்கீறித்தினகரனொருதேர்மேல்
மஞ்சனையணிகோலங்காணியவெனவந்தான். (௨௧)

தோரணநடுவாருந்தூணுறுபொதிவாரும்
பூரணகுடமெங்கும்புனைதுகில்புனைவாரும்
காரணிநெடுமாடங்கதிர்மணியணிவாரும்
ஆரணமறைவாணர்க்கமுதினிதடுவாரும். (௨௨)

அன்னமென்னடையாரும்மழவிடையனையாரும்
கன்னிநன்னகர்வாழைகமுகொடுநடுவாரும்
பன்னருநிரைமுத்தம்பரியனதெரிவாரும்
பொன்னணியணிவாரும்மணியணிபுனைவாரும். (௨௩)

சந்தனமகிலாறுஞ்சாந்தொடுதெருவெங்குஞ்
சிந்தினர்திரிவாருஞ்செழுமலர்சொரிவாரும்
இந்திரதனுநாணுமெரிமணிநிரைமாடத்
தந்தமில்விலையாரக்கோவைகளணிவாரும். (௨௪)

தளங்கிளர்மணிகாலத்தவழ்சுடருமிழ்தீபம்
இளங்குளிர்முளையார்நற்பாலிகையினமெங்கும்
விளிம்புபொன்விரைநாறவெயிலொடுநிலவீனும்
பளிங்குடையுயர்திண்ணைப்பத்தியின்வைப்பாரும். (௨௫)

மந்தரமணிமாடமுன்றிலின்வயினெங்கும்
அந்தமிலொளிர்முத்தினகணிரையொளிவீச
இந்திரனெடுவானம்மீனவர்குலதென்னப்
பந்தரினிழல்வீசப்படர்வெயில்கடிவாரும். (௨௬)

வயிரமிஞெரியீனும்மரகதமணிவேதிச்
செயிரறுமொளிர்தீபஞ்சிலதியர்கொணர்வாரும்
வெயில்விரவியபொன்னின்மிடைகொடிமதிதோயும்
எயிலினினடுவாருமகிலெரியிடுவாரும். (௨௭)

பண்டியினிறைவாசப்பணிமலர்கொணர்வாரும்
தண்டலையிலையோடுகனிபலதருவாரும்
குண்டலம்வெயில்வீசக்குரகதம்புனைவாரும்
உண்டைகொண்மதவேழத்தோடைகளணிவாரும். (உஅ)

கலவைகள்புனைவாருங்கலைநலதெரிவாரும்
மலர்குழன்மலைவாரும்மதிமுகமணியாடித்
திலகமுணிடுவாருஞ்சிகழிகையணிவாரும்
இலவிதழ்பொலிகோலமெழில்பெறவிடுவாரும். (உகூ)

தப்பினமணிகாசுஞ்சரங்களுமயிலன்னார்
ஒப்பனைபுரிபோதுமூடலினுகுபோதும்
துப்புறழிளவாசச்சுண்ணமுமுதிர்தாதும்
குப்பைகளெனவாரிக்கொண்டனர்களைவாரும். (௩௦)

மன்னவர்வருவாரும்மறையவர்நிறைவாரும்
இன்னிசைமணியாழினிசைமதுநுகர்வாரும்
சென்னியர்திரிவாருஞ்சிலதியர்செறிவாரும்
கன்னலின்மணவேலைக்கடிகைகடெரிவாரும். (௩க)

கணிகையர்தொகுவாருங்கலைபலபயில்வாரும்
பணியணியினமுத்தம்பலவிதநிலமன்னர்
அணிநெடுமுடியொன்றொன்றறைதலினுகுமம்பொன்
மணிமலைதொகுமன்னன்வாயிலின்மிடைவாரும். (௩உ)

கேடகம்வெயில்வீசக்கிளரயினிலவீனக்
கோடுயர்நெடுவிஞ்சைக்குஞ்சரமதுபோல
ஆடவர்திரிவாருமரிவையர்களிகூரும்
நாடகநவில்வாருநகைபுயிர்கவர்வாரும். (௩௩)

கதிர்மணியொளிகாலக்கவர்பொருடெரியாவா
றெதிர்சுடர்தரமின்னுற்றெழுதலின்மையோரும்
மதுவிரிகுழலாரும்மதிலுடைநெடுவானம்
அதுவிதுவெனவோராதலமரலுறுவாரும். (௩௪)

தேர்மிசைவருவாருஞ்சிவிகையில்வருவாரும்
ஊர்தியில்வருவாருமொளிமணிநிரையோடைக்
கார்மிசைவருவாருங்கரிணியில்வருவாரும்
பார்மிசைவருவாரும்பண்டியில்வருவாரும். (௩௫)

முத்தணியணிவாரும்மணியணிமுணிவாரும்
பத்தியினிமிர்செம்பொற்பலகலன்மகிழ்வாருந்
தொத்துறுதொழின்மாலைசுரிகுழலணிவாருஞ்
சித்திரநிறந்தோயுஞ்செந்துகில்புனைவாரும். (நசு)

விடநிகர்விழியாருமமுதெனுமொழியாருங்
கிடைபுரையிதழாருங்கிளர்நகைவெளியாருந்
தடமுலைபெரியாருந்தனியிடைசிறியாரும்
பெடையனநடையாரும்பிடியெனவருவாரும். (நஎ)

உண்ணிறைநிமிர்செல்வமொருதுறைசெலவென்றுங்
கண்ணுறலரிதென்றுங்கருதுதவரிதம்மா
எண்ணுறுசுடர்வானத்திந்திரன்முடிசூடும்
மண்ணுறுதிருநாளேயொத்ததமணநாளே. (நஅ)

## வேறு.

கரைதெரிவரியதுகனகம்வேய்ந்தது
வரையெனவுயர்ந்ததுமணியிற்செய்தது
நிரைவளைமணவினைநிரப்புமண்டபம்
அரைசர்தமரசனுமணுகன்மேயினான். (நசு)

வெண்குடையிளநிலாவிரிக்கமின்னெனக்
கண்குடையினமணிவெயிலுங்கான்றிடப்
பண்குடைவண்டினம்பாடவாடன்மா
மண்குடைதூளிவிண்மறைப்பவேகினான். (சo)

மங்கலமுரசினமழையினார்த்தன
சங்குகண்முரன்றனதாரைபோரெனப்
பொங்கினமறையவர்புகலுநான்மறை
கங்குலிஞெலிக்குமாகடலும்போன்றவே. (சக)

பரந்ததேர்களிறுபாய்புரவிபண்ணையில்
தரந்தரநடந்தனதானைவேந்தனை
நிரந்தரந்தொழுதெழுநேமிமன்னவர்
புரந்தரன்புடைவருமமரர்போன்றனர். (சஉ)

அனையவன்மண்டபமணுகியம்பொனின்
புனைமணியாதனம்பொலியத்தோன்றினான்
முனைவருமன்னருமுறையினேறினார்
சனகனுந்தன்கிளைதழுவவேறினான். (சந)

மன்னருமுனிவரும்மற்றுளோர்களும்
அன்னமென்னடையணங்கனையமாதரும்
துன்னினர்துவன்றினர்சுடர்கள்சூழ்வரும்
பொன்மலையொத்ததப்பொருவில்கூடமே. (சச)

புயலுளமின்னுளபொருவின்மீனுள
இயன்மணியினமுளசுடரிரண்டுள
மயன்முதற்றிருத்தியமணிசெய்மண்டபம்
அயன்முதற்றிருத்தியவண்டமொத்ததே. (சரு)

எண்டவமுனிவருமிறைவர்யாவரும்
அண்டரும்பிறரும்புக்கடங்கிற்றுதலால்
மண்டபம்வையமும்வானும்வாய்மடுத்
துண்டவன்மணியணியுதரமொத்ததே. (சசா)

தாரதலமுதலுலகனைத்துந்தள்ளுற
விராவினகுவிந்தனவிளம்பவேண்டுமோ
அராவணைதுறந்துபோந்தயோத்தியெய்திய
இராகவன்செய்கையையியம்புவாமரோ. (சஎ)

சங்கினந்தவழ்கடலேழிற்றந்தன
சிங்கலிலருமறைதெரிந்ததீர்த்தங்கள்
கங்கையேமுதலியகலந்தநீரினால்
மங்கலமஞ்சனமரபினாடியே. (சஅ)

என்றுநான்முகன்முதல்யாரும்யாவையும்
நின்றபேரிருளினைநீக்கிநீணெறி
சென்றுமீளாக்குறிசேரச்சேர்த்திடு
தன்றிருநாமத்தைத்தானுஞ்சாத்தியே. (சகூ)

கோதறுதவத்துத்தங்குலத்துளோர்தொழும்
ஆதியஞ்சோதியையடிவணங்கினான்
காதியல்கயல்விழிக்கன்னிமார்களை
வேதியர்க்கருமறைவிதியினல்கியே. (ருo)

அழிவருதவத்தினோடறத்தையாக்குவான்
ஒழிவருங்கருணையோருருவுகொண்டென

49. தன்றிருநாமத்தைத் தானுஞ்சாத்தியென்றது - தன்றிருநாமத்தைத் தானுங்கூறிப்புண்டரமிட்டென்பதை.

50. தங்குலத்துளோர்தொழும் ஆதியஞ்சோதி என்றது - ஆயிரமோலிய ரும்பரஞ்சுடரை.

எழுதருவடிவுகொண்டிருண்டமேகத்தைத்
தழுவியதிலவெனக்கலவைசாத்தியே. (ருக)

மங்கலமுழுநிலாமலர்ந்ததிங்களைப்
பொங்கிருங்கருங்கடல்பூத்ததாமெனச்
செங்கிடைச்சிகழிகைச்செம்பொன்மாலையும்
தொங்கலுந்துயல்வரச்சுழியஞ்சூடியே. (ருஉ)

ஏதமிலிருகுழையிரவுநன்பகல்
காதல்கண்டுணர்ந்தனகதிருந்திங்களும்
சீதைதன்கருத்தினைச்செவியினுள்ளுறத்
தூதுசென்றுரைப்பனபோன்றுதோன்றவே. (ருங)

கார்விடக்கறையுடைக்கணிச்சிவானவன்
வார்சடைப்புடையினோர்மதிமிலைச்சத்தான்
சூர்சுடர்க்குலமெலாஞ்சூடினுமென
வீரபட்டத்தொடுதிலகமின்னவே. (ருச)

சக்கரத்தயல்வருஞ்சங்கமாமென
மிக்கணிகழுத்தணிதரளவெண்கொடி
மொய்க்குமென்குறளினுண்முறுவலுள்ளுறப்
புக்கனநிறைத்துமெய்பொடித்தபோன்றவே. (ருரு)

பந்திசெய்வயிரங்கள்பொறியிற்பாடுற
அந்தமில்சுடர்மணியழலிற்றோன்றலால்
சுந்தரத்தோளணிவயலந்தொல்லைநாள்
மந்தரஞ்சுற்றியவரவைமாறுமே. (ருசா)

கோவையின்பெருவடமுத்தங்கோத்தன
காவல்செய்தடக்கையினடிவட்காந்துவ
மூவகையுலகிற்குமுதல்வனுமென
ஏவருங்குறியிட்டபோன்றவே. (ருஎ)

மாண்டபொன்மணியணிவலயம்வந்தெதிர்
வேண்டினர்க்குதவுவான்விரும்பிக்கற்பகம்
ஈண்டுதன்கொம்பிடையீன்றதாமெனக்
காண்டகுதடக்கையிற்கடகமின்னவே. (ருஅ)

தேனுடைமலர்மகடிகழ்க்குமார்பினில்
தானிடைவிளங்கியதகையினாந்தான்

நீடுசுடர்விடவிளங்குமேகத்து
வானிடுவில்லெனவயங்கிக்காட்டவே. (௫௯)

நணுகவுநிமிரவுநடக்குஞானத்தர்
உணர்வினிடுளிதிகழுத்தரீயந்தான்
தணிவருங்கருணை தன்கழுத்திற்சாத்திய
மணியுமிழ்கதிரெனமார்பிற்றேன்றவே. (௬0)

மேவருஞ்சுடரெனவிளங்குமார்பினால்
ஏவருந்தெரிந்தினிதுணர்மினீண்டெனத்
தேவருமுனிவருந்தெரிக்கலாமுதன்
மூவருந்தானெனமுடிந்ததொத்ததே. (௬க)

சுற்றுநீடணிமணிச்சோதிபொங்கமேல்
ஒற்றைமாமணியுமிழுதரபந்தனம்
மற்றுமோரண்டமுமயனும்வந்தெழப்
பொற்றடந்தாமரைபூத்தபோன்றதே. (௬௨)

மண்ணுறுசுடர்மணிவயங்கித்தோன்றிய
கண்ணுறுகருங்கடலதனைக்கைவளர்
தண்ணிறப்பாற்கடறழீஇயதாமென
வெண்ணிறப்பட்டொளிவிளங்கச்சாத்தியே. (௬௩)

சலம்வருதாளமுந்தயங்குநீலமும்
அலம்வருநிழலுமிழம்பொற்கச்சினால்
குலம்வருகனகவான்குன்றைநின்றுடன்
வலம்வருகதிரெனவாளும்வீக்கியே. (௬௪)

முகைவிரிசுடரொளிமுத்தின்பத்திவான்
தொகைவரிபட்டிகைச்சுடருஞ்சுற்றிடத்
தகையுடைவாளொனுந்தயங்குவெய்யவன்
நகையிளவெயிலெனத்தொங்கநாற்றியே. (௬௫)

காதொடுகண்ணிழல்கஞலக்கைவினை
ஏசறுகிம்புரியெயிறுவெண்ணிலா
வீசலின்மகரவாய்விளங்குமின்னென
ஆசையையொளிகளாலளந்துகாட்டவே. (௬௬)

இனிப்பரந்துலகினையளப்பதெங்கெனத்
தனித்தனித்தடுப்பனபோலுஞ்சால்பின

61. முதன்மூவ ரென்றது - மும்மைப்பெருந்தேவரை.

நுனிப்பருநுண்வினைச்சிலம்புநோன்கழல்
பணிப்பருந்தாமரைப்பாதம்பற்றவே. (௬௭)

இன்னணமொளிர்தரவிமையவர்க்கெலாம்
தன்னையேயனையதோர்கோலந்தாங்கினான்
பன்னகமணிவிளக்கழலும்பாயலுள்
அன்னவர்தவத்தினாலனந்தனீங்கினான். (௬௮)

முப்பரம்பொருளிற்குண்முதலைமூலத்தை
இப்பரந்துடைத்தவரெய்துமின்பத்தை
அப்பனையப்பினுளமிர்தந்தன்னையே
ஒப்பனையொப்பனையுரைக்கவொண்ணுமோ. (௬௯)

பல்பதினாயிரம்பசுவும்பைம்பொனும்
எல்லையினிலவொடுமணிகள்யாவையும்
நல்லவர்க்குதவினனவிலுநான்மறைச்
செல்வர்கள்வழுத்துறத்தேர்வந்தேறினான். (௭௦)

பொற்றிரளச்சதுவெள்ளிச்சில்லியுக்
குற்றதுவயிரத்தினுற்றதட்டது
சுற்றுறுநவமணிசுடருந்தோற்றத்த
தொற்றைபாழிக்கதிர்த்தேரொடொத்ததே. (௭௧)

நால்வருந்தன்மையநுனிக்குநோன்மைய
சால்பெருஞ்செவ்வியதருமமாதிய
நாலையுமனையனபுரவிநான்கொரு
பாலமையுணர்ந்தவன்பக்கம்பூண்டவே. (௭௨)

அனையதோர்தேரினிலருணனின்றெனப்
பணிவருமலர்க்கணப்பரதன்கோல்கொளக்
குனிசிலைத்தம்பிபின்கூடவேனையன்
இனியபொற்கவரிகாலியக்கவேகினான். (௭௩)

---

69. முப்பரம் பொருளென்றது சங்கருஷணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்பாரை. முதலையென்றது-பாற்கடற்பரமனை. மூலத்தையென்றது வாசுதேவனை. இப்பரந்துடைத்தவரெய்து மின்பத்தையென்றது பரமபதநாதனை. அப்பனையென்றது திருவேங்கடமுடையானை. அப்பினுளமிர்தமென்றது ஆவிக்காவியாய்நின்றபராஞ்சுடரை. அதிமானுடசேட்டிதத்தை யுணர்த்தத் தன்னையே யொப்பனையென்று மிவ்வாரிச்சமயத்தவர் கூறும் பரத்துவம்; வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சாவதார மறிவித்தமை காண்க.

72. தருமமாதிய நாலையும் - அறம், பொருள், இன்பம், வீடு.

அமைவருமேனியானழகினையதோ
கமையுறுமனத்தினாற்கருதவந்ததோ
சமைவுறவறிந்திலந்தக்கதாகுக
இமையவராயினாரிங்குளாருமே. (௭௪)

வரம்பறுமுலகினைவலிந்துமாய்வின்றித்
திரம்பயிலரக்கர்தம்வருக்கந்தேய்வின்று
நிரம்பியதெனக்கொடுநிறைந்ததேவரும்
அரம்பையர்குழாத்தொடுமாடன்மேயினார். (௭௫)

சொரிந்தனர்பூமழைசுண்ணந்தூவினர்
விரிந்தொளிர்காசுபொன்றூசுவீசினர்
பரிந்தனரகிழனைப்பருகினார்கொலாம்
தெரிந்திலந்திருநகர்மகளிர்செய்கையே. (௭௬)

வள்ளலைநோக்கியமகளிர்மேனியின்
எள்ளரும்பூணெலாமிரியநிற்கின்றார்
உள்ளனயாவையுமுதவிப்பூண்டவும்
கொள்ளையிற்கொள்கெனக்கொடுக்கின்றாரினே. (௭௭)

வேறு.

எஞ்சலிலுலகத்துள்ளவெறிபடையரசவெள்ளம்
குஞ்சரக்குழாத்திற்சுற்றக்கொற்றவனிருந்தகூடம்
வெஞ்சினத்தனுவலானுமேருமால்வரையிற்சேரும்
செஞ்சுடர்க்கடவுளென்னத்தேரிடைச்சென்றுசேர்ந்தான். (௭௮)

இரதமாண்டிழித்தபின்னரிருமருங்கிரண்டுகையும்
பரதனுமிளையகோவும்பரிந்தனரேந்தப்பைந்தார்
வரதனுமெய்திமைநீர்மாதவர்த்தொழுதுநீதி
விரதமெய்த்தாதைபாதம்வணங்கிமாடிருந்தவேலை. (௭௯)

சிலையுடைக்கயல்வாட்டிங்களேந்தியோர்செம்பொற்கொம்பர்
முலையிடைமுகிழ்ப்பத்தேர்மேன்முன்றிசைமுளைத்ததன்னாள்
அலைகடற்பிறந்துபின்னைபவனியிற்றோன்றிமீள
மலையிடையுதிக்கின்றாள்போன்மண்டபமதனில்வந்தாள். (௮௰)

74. கண்ணிமைத்தலின்றி நோக்கலின் இமையவராயினா ரிங்குளாரு மென்றார்.

77. தன்திருநாமத்தை ஒருகாற்கூறியமாத்திரையின், அன்னோர்க்குவீடு பேறு முதலியவற்றை எண்ணியாங்குவரையாது பயத்தலின் வள்ளல் என்றார்.

வேறு.

நன்றிவானவரெலாமிருந்தநம்பியைத்
துன்றிருங்கருங்கடலுவைப்பத்தோன்றிய
மன்றலங்கோதையாண்மாலைசூட்டிய
அன்றினுமின்றுடைத்தழகென்றாரரோ. (அ௧)

ஒலிகடலுலகினிலும்பர்நாகரில்
பொலிவதுமற்றிவள்பொற்பென்றாலிவள்
மலிதருமணம்படுதிருவைவாயினால்
மெலிதருமுணர்வினேன்விளம்புகேனரோ. (அ௨)

இந்திரன்சசியொடுமெய்தினானிளஞ்
சந்திரமௌலியுந்தையலாளொடும்
வந்தனன்மலரயன்வாக்கினாளுடன்
அந்தரம்புகுந்தனனழகுகாணவே. (அ௩)

நீந்தருங்கடலெனநிறைந்தவேதியர்
தோய்ந்தநூன்மார்பினர்சுற்றத்தொன்னெறி
வாய்ந்தநல்வேள்விக்குவசிட்டன்மையற
ஏய்ந்தநற்றருப்பையோடினிதினெய்தினான். (அ௪)

தண்டிலம்விரித்துநற்றருப்பைசாத்தியே
மண்டலம்விதிமுறைவகுத்துமென்மலர்
கொண்டவிசொரிந்தெரிகுழுமமூட்டினன்
பண்டுளமறைநெறிபரவிச்செய்தனன். (அ௫)

வேறு.

மன்றலின்வந்துமணத்தவிசேறி
வென்றிநெடுந்தகைவீரனுமார்வத்
தின்றுணையன்னமுமெய்தியிருந்தார்
ஒன்றியபோகமும்யோகமுமொத்தார். (அ௬)

கோமகன்முன்சனகன்குளிர்நன்னீர்
பூமகளும்பொருளும்மெனநீயென்
மாமகடன்னொடுமன்னுதியென்னாத்
தாமரையன்னதடக்கையினீந்தான். (அ௭)

அந்தணராசியருங்கலமன்னர்
தந்தபல்லாண்டிசைதார்முடிமன்னர்

84. நற்றருப்பை - நுனித்தருப்பை.

வந்தனைவானவர்வாழ்த்தொலியோடு
முந்திசயங்கமுழங்கினமாதோ. (அஅ)

வானவர்பூமழைமன்னவர்பொற்பூ
ஏனையர்தூவுமிலங்கொளிமுத்தம்
தானகுநாண்மலரென்றிவைதம்மால்
மீனகுவானின்விளங்கியதிப்பார். (அகூ)

வெய்யகனற்றலைவீரனுமந்நாள்
மையறுமந்திரமுற்றும்வழங்கா
நெய்யமையாகுதியாவையுநேர்ந்தான்
தையறளிர்க்கைதடக்கைபிடித்தான். (கூ0)

இடம்படுதோளவனோடியைவேள்வி
தொடங்கியவெங்கனல்சூழ்வருபோதின்
மடம்படுசிந்தையண்மாறுபிறப்பின்
உடம்புயிரைத்தொடர்கின்றதையொத்தாள். (கூக)

வலங்கொடுதீயைவணங்கினர்வந்து
பொலம்பொரிசெய்வனசெய்பொருண்முற்றி
இலங்கொளியம்மிமிதித்தெதிர்நின்ற
கலங்கலிற்கற்பினருந்ததிகண்டார். (கூ௨)

மற்றுளசெய்வனசெய்துமகிழ்ந்தே
முற்றியமாதவர்தாண்முறைசூடிக்
கொற்றவனைக்கழல்கும்பிடலோடும்
பொற்றொடிகைக்கொடுநன்மனைபுக்கான். (கூ௩)

ஆர்த்தனபேரிகளார்த்தனசங்கம்
ஆர்த்தனநான்மறையார்த்தனர்வானோர்
ஆர்த்தனபல்கலையார்த்தனபல்லாண்
டார்த்தனவண்டினமார்த்தனவேலை. (கூ௪)

கேகயன்மாமகள்கேழ்கிளர்பாதம்
தாயினுமன்பொடுதாழ்ந்துவணங்கா
ஆயதனன்னையடித்துணைசூடித்
தூயசுமித்திரைதாடொழலோடும். (கூ௫)

அன்னமுமன்னவரம்பொன்மலர்த்தாள்
சென்னிபுனைந்தனள்சிந்தையுவந்தார்

---

90. தடக்கைபிடித்தான் - பாணிக்கிரகணம்செய்தான்.
92. அம்மிமிதித்தலைச் சத்தபதி என்பவர் வடநூலார்.

கன்னியருந்ததிகாரிகைகாண
நன்மகனுக்கிவணல்லணியென்றாள். (சஎ)

சங்கவளைக்குயிலைத்தழிநின்றார்
அங்கணனுக்குரியாருளராவார்
பெண்களினிப்பிறரெங்குளரென்றார்
கண்கள்களிப்பமனங்கள்களிப்பார். (சஅ)

மண்ணிலகோடிபொன்னெல்லையில்கோடி
வண்ணவருங்கலமங்கையர்வெள்ளம்
கண்ணகனாடொடுகாசயர்தூசும்
பெண்ணினணங்கனையாள்பெறுகென்றார். (சஅ)

ஆற்கடலன்னவர்சொற்கடனோக்கி
மாற்கடலன்னமனத்தவனோடும்
காற்கடல்போற்கருணைக்கடல்பண்டைப்
பாற்கடலன்னதொர்பாயலணைந்தான். (சசு)

பங்குனியுத்தரமானபகற்போ
தங்கணிருக்கினிலாயிரநாமச்
சிங்கமணத்தொழில்செய்ததிறத்தால்
மங்கலவங்கிவதிட்டன்வகுத்தான். (க00)

வள்ளறனக்கிளையோர்கடமக்கும்
எள்ளலில்கொற்றவன்யான்பினளித்த
அள்ளன்மலர்த்திருவன்னவர்தம்மைக்
கொள்ளுமெனத்தமரோடுகுறித்தான். (க0க)

கொய்நிறைதாரன்குசத்துவசப்பேர்
நெய்நிறைவேலவன்மங்கையர்நேர்ந்தார்
மைநிறைகண்ணியர்வானுறைநீரார்
மெய்நிறைமூவரைமூவரும்வேட்டார். (க0உ)

வேட்டவர்வேட்டபின்வேந்தனுமேனாள்
கூட்டியசீர்த்திகொடுத்திலனல்லால்

97. தழீஇஎன்றது தழியெனக்குறுக்கும் வழிகுறுக்கல்பெற்றது.

99. காற்கடல் - காலைவீசுங்கடல்.

101. வள்ளறனக்கிளையோரென்பது பரதன்முதன் மூவரை என்க.

102. குசத்துவசன் என்றது சனகற்கிளையானை, அவன் மக்களாகியமாளவி, ஊர்மிளை, சுதகீர்த்தி என்பாரைப் பரதன்முதலிய மூவரும் வேட்டனரென்க. ஊர்மிளையைச் சனகன்மகளென்பர் வான்மீகரும்.

ஈட்டியமெய்ப்பொருள்யாவுளவெல்லாம்
வேட்டவர்வேட்டவைவேண்டளவீந்தான். (கOரு)

ஈந்தளவில்லதொரின்பநுகர்ந்தே
ஆய்ந்துணர்கேள்வியருந்தவரோடும்
வேந்தனுமந்நகர்வைகினன்மெள்ளத்
தேய்ந்தனநாள்சிலசெய்ததுரைப்பாம். (கOசு)

ஆ_ திருவிருத்தம் - கருசக.

## உஉ-வது, பரசுராமப்படலம்.

தானுவதொர்வகையேநனிசனகன்றருதயனும்
நானுவிதமுறுபோகமுநுகர்கின்றவந்நாள்வாய்
ஆறுமறைநெறிமாதவமுனிகோசிகனருளிப்
போனன்வடதிசைவாயுயர்பொன்மால்வரைபுக்கான். (க)

அப்போதினின்முடிமன்னவனணிமாநகர்செலவே
இப்போதுநமணிகந்துணையெழுகென்றினிதிசையாக்
கைப்போதகநிகர்காவலர்குழுவந்தடிகதுவ
ஒப்போதருதேர்மீதினிலினிதேறினனுரவோன். (உ)

தன்மக்களுமருமக்களுநனிதன்கழறழுவ
மன்மக்களுமயன்மக்களும்வயின்மொய்த்திடமிதிலைத்
தொன்மக்களுமனமுக்குயிர்பிரிவென்பதொர்துயரின்
வன்மைக்கடல்புகவுய்ப்பதொர்வழிபுக்கனனுரவோன். (ந)

முன்னேநெடுமுடிமன்னவன்முறையிற்செலமிதிலை
நன்மாநகருறைவார்மனநனிபின்செலநடுவே
தன்னேர்புரைதருதம்பியர்தழுவிச்செலமழைவாழ்
மின்னேபுரையிடையாளொடுமினிதேகினன்வீரன். (ச)

ஏகும்மளவையின்வந்தனவலமும்மயிலிடமும்
காகம்முதலியமுந்தியதடைசெய்வனகண்டான்
நாகம்மனனிடையிங்குளதிடையூறெனநடவான்
மாகம்மணிபணிதேரொடுநின்றானெறிவந்தான். (ரு)

நின்றானெறிபுணர்வாரொருநிலைவாளனையமழையா
நன்றேபழுதுளதோநடுவுரைநீநயமென்னக்

1. ஆறுமறைநெறி என்பது துவாதசாக்கரமனுவை

குன்றேபுரைதோளானெதிர்ப்புள்ளின்குறிகொள்வான்
இன்றேவருமிடையூறதுநன்றாய்விடுமென்றான். (௬)

என்னும்மளவினில்வானகமிருள்கீறிடவொளியாய்
மின்னும்படிபுடைவீசியசடையான்மழுவுடையான்
பொன்னின்மலைவருகின்றதுபோல்வானனல்கால்வான்
உன்னுந்தழல்விழியானுருமதிர்கின்றதொருரையான். (௭)

கம்பித்தலையெறிநீருறுகலமொத்துலகுலையத்
தம்பித்துயர்திசையானைகடளரக்கடல்சலியா
வெம்பித்திரிதரவானவர்வெருவுற்றிரிதரவோர்
செம்பொற்சிலைதரியாவயின்முகவாளிகடெரிவான். (௮)

விண்கீழுறவென்றோபடிமேல்கீழுறவென்றோ
எண்கீறியவுயிர்யாவையுமியமன்வாயிடவென்றோ
புண்கீறியகுருதிப்புனல்பொழிகின்றனபுரையக்
கண்கீறியகனலான்முனிவியாதென்றயல்கருத. (௯)

போரின்மிசையெழுகின்றதொர்மழுவின்சிகைபுகையத்
தேரின்மிசைமலைசூழ்வருகதிருந்திசைதிரிய
நீரின்மிசைவடவைக்கனலெனவாறுறமுடுகிப்
பாரின்மிசைவருகின்றதொர்படிவெஞ்சுடர்படர. (௧0)

பாழிப்புயமுயர்திக்கிடையடையப்புடைபடரும்
சூழிச்சடைமுடிவிண்டொடவயல்வெண்மதிதோற்ற
ஆழிப்புனலெரிகானிலமாகாயமுமழியும்
ஊழிக்கடைமுடிவிற்றனியுமைகேள்வனையொப்ப. (௧௧)

அயிர்சுற்றியகடன்மாநிலமடையத்தனிபடரும்
செயிர்சுற்றியபடையானடன்மறமன்னவர்திலகன்
உயிருற்றதொர்மரமாமெனவோராயிரமுயர்தோள்
வயிரப்பணைதுணியத்தொடுவடிவாய்மழுவுடையான். (௧௨)

நிருபர்க்கொருபழிபற்றிடநிலமன்னவர்குலமும்
கருவற்றிடமழுவாள்கொடுகளைகட்டுயிர்கவரா
இருபத்தொருபடிகாலெழுகடலொத்தலையெறியும்
குருதிக்குரைபுனலிற்புகமுழுகித்தனிகுடைவான். (௧௩)

கமையொப்பதொர்தவமுந்நடுகனலொப்பதொர்சினமும்
சமையப்பெரிதுடையானெதிர்தளர்வுற்றிடைதவிரும்

6. புள்ளின்குறி - சகுனம். 12. அயிர் - நுண்மணல், நீர் என்பாருமுளர்.

அமையத்துயர்பறவைக்கினி தாமும்வகைசிறச்
சிமையக்கிரியுருவத்தனிவடிவாளிகடெரிவான். (௧௪)

சையம்புகநிமிரக்கடறழுவும்படிசமைவான்
மையின்னுயர்மலைநூறியமழுவாளவன்வந்தான்
ஐயன்றனையரிதிற்றருமரசன்னதுகண்டான்
வெய்யன்வரநிபமென்னைகொலெனவெய்துறுமெல்லை. (௧௫)

பொங்கும்படையிரியக்கிளர்புருவங்கடைநெரிய
வெங்கண்பொறிசிதறக்கடிதுருமேமெனவிடையாச்
சிங்கம்மெனவுயர்தேர்வருகுமரன்னெதிர்சென்றான்
அங்கண்ணரசவனும்மிவனாரோவெனுமளவில். (௧௬)

அரைசன்னவனிடைவந்தினிதாராதனைபுரிவான்
விரைசெய்முடிபடிமேலுறவடிமேலுறவிழலும்
கரைசென்றிலனையானெடுமுடிவின்கனல்கால்வான்
முரைசின்குரல்படவீரனெதிர்நின்றிவைமொழிவான். (௧எ)

இற்றோடியசிலையின்றிறமறிவென்னினியானுன்
பொற்றோள்வலிநிலைசோதனைபுரிவானசையுடையேன்
செற்றோடியதிரடோளுறுதினவுஞ்சிறிதுடையேன்
மற்றோர்பொருளிலையிங்கிதென்வரவென்றனனுரவோன். (௧அ)

அவனன்னதுபகரும்மளவையின்மன்னவனயர்வான்
புவனம்முழுவதும்வென்றொருமுனிவற்கருள்புரிவாய்
சிவனும்மயனரியும்மலர்சிறுமானிடர்பொருளோ
இவனும்மெனதுயிரும்முனதபயம்மினியென்றான். (௧௯)

விளிவார்விளிவதுதீவினைவிழைவாருழையன்றே
களியாலிவனயர்கின்றனவுளவோகனலுமிழும்
ஒளிவாய்மழுவுடையாய்பொரவுரியாரிடையல்லால்
எளியாரிடைவலியார்வலியென்னாகுவதென்றான். (உ0)

நனிமாதவமுடையாயிதுபிடிநீயெனநல்கும்
தனிநாயகமுலகேழையுமுடையாயிதுதவிராய்

15. மழுவாளவனென்றது பாசுராமனை. நிபமென்ற தேதுவை.

19. அரி - இந்திரன், திருமாலென்பாருமுளர், ஸ்ரீராமபிரானேயவனாதலால் அது பொருந்தாதென்றொழிக்க.

பனிவார்கடல்புடைசூழ்படிநரபாலரையருளா
முனிவாறிணைமுனிகின்றதுமுறையோவெனமொழிவான். (உக)

புறனின்றவரிகழும்படிநடுவின்றலைபுணராத்
திறனின்றுயர்வலியென்பதொரறனின்றவர்செயலோ
அறனின்றதனிலைநின்றுயர்புகழொன்றுவதன்றே
மறனென்பதுமறவோயிதுவலியென்பதுவலியோ. (உஉ)

சலத்தோடியைவிலனென்மகனையாதுயிர்தபுமேல்
உலத்தோடெதிர்தோளாயெனதுறவோடியிருகுவேன்
நிலத்தோடுயர்கதிர்வானுறநெடியாயுனதடியேன்
குலத்தோடறமுடியேலிதுகுறைகொண்டனெனென்றான். (உ௩)

என்றுவடிவிழுவானையுமிகழாவெரிவிழியா
பொன்றார்கலையணிவானெதிர்புகுவானிலைபுணராத்
தன்றாலொருசெயலின்மையைநினையாவுயிர்தளரா
மின்றாலயர்வுறும்வாளரவெனவெய்துறலுற்றான். (உ௪)

மானம்முடைமுடிமன்னவன்மதிசோர்வுறன்மதியான்
தானந்நிலையுறுவானுறுவினையுண்டதுதவிரான்
ஆனம்முடையுமையண்ணலையந்நாளுறுசிலைதான்
ஊனம்முளததன்மேனிலைகேணீயெனவுரைப்பான். (உ௫)

ஒருகால்வருகதிராமெனவொளிகால்வனவுலையா
வருகார்தவழ்வடமேருவின்வலிசால்வனவையம்
அருகாவினைபுரிவானுளனவனுல்லைவனதாம்
இருகார்முகமுளயாவையுமேலாதனமேனாள். (உ௬)

வேறு.

ஒன்றினையுமையாள்கேள்வனுவந்தனன்மற்றையொன்றை
நின்றுலகளந்தநேமிநெடியமானெறியிற்கொண்டான்
என்றிதுவுணர்ந்தவிண்ணோரிரண்டினும்வன்மையெய்தும்
வென்றியதியாவதென்றுவிரிஞ்சனைவினவவந்நாள். (உஎ)

சீரிதுதேவர்தங்கள்சிந்தனையென்பதுன்னி
வேரியங்கமலத்தோனுமியைவதோர்வினயந்தன்னால்

---

25. ஆனம் என்றது ஒரு வாச்சியவிசேடம்.

யாரினுமுயர்ந்தமூலத்தொருவராமிருவர்தம்மை
மூரிவெஞ்சிலைமேலிட்டுமொய்யமர்மூட்டிவிட்டான். (உ௮)

இருவருமிரண்டுவில்லுமேற்றினருலகமேழும்
வெருவரத்திசைகள்பேரவெங்கனல்பொங்கமென்மேல்
செருமலைகின்றபோழ்திற்றிரிபுரமெரித்ததேவன்
வரிசிலையிற்றதாகமற்றவன்முனிந்துமன்றே. (உ௯)

மீட்டும்போர்தொடங்கும்வேலைவிண்ணவர்விலக்கவல்வில்
நீட்டினன்றேவர்கோன்கைநெற்றியிற்கண்ணன்வெற்றி
காட்டியகரியமாலுங்கார்முகந்தன்னைப்பாரில்
ஈட்டியதவத்தின்மிக்கவிரிசிகற்கீந்துபோனான். (௩0)

இரிசிகனெந்தைக்கீயவெந்தையுமெனக்குத்தந்த
வரிசிலையிதுநீநொய்தின்வாங்குதியாயின்மன்ன
குரிசில்கணின்னொடொப்பாரில்லையான்குறித்தபோரும்
புரிகிலேனின்னொடின்னம்புகல்வதுகேட்டியென்றான். (௩௧)

ஊனவில்லிறுத்தமொய்ம்பைநோக்குவதூக்கமன்றால்
மானவமற்றுங்கேளாய்வழிப்பகையுடையேனும்பால்
ஈனமிலெந்தைசீற்றநீக்கினனென்னமுன்னோர்
தானவனனையமன்னன்கொல்லயான்சலித்துமன்றே. (௩உ)

மூவெழுமுறைமைபாரின்முடியுடைவேந்தையெல்லாம்
மேவெழுமழுவின்வாயால்வேரறக்களைகட்டன்னார்
தூவெழுகுருதிவெள்ளத்துறையிடைமுறையினெந்தைக்
காவனகடன்கணேர்ந்தேனருஞ்சினமடக்கிப்போந்தேன். (௩௩)

உலகெலாமுனிவற்கீந்தேனுறுபகையொடுக்கிப்போந்தேன்
அலகின்மாதவங்கள்செய்தென்னருவரையிருந்தேனுண்டைச்
சிலையைநீயிறுத்தவோசைசெவியுறச்சீறிவந்தேன்
மலைகுவென்வல்லையாகில்வாங்கிடித்தனுவையென்றான். (௩௪)

---

28. மூலத்தொருவராமிருவரென்றது மும்மைப்பெருந்தேவரிருவரை.

31. எந்தை என்றது சமதக்கினியை.

32. மானவனென்பது மனுவின்வழி வந்தானென்பதனை. தானவனனைய மன்னன் - கார்த்தவீரியன்.

33. தூ - ஊனை.

34. முனிவற்கென்றது - காசிபனை.

என்றனனென்னநின்றவிராமனுமுறுவலெய்தி
நன்றொளிர்முகத்தனாகிநாரணன்வலியினுண்ட
வென்றிவிற்றருகவென்னக்கொடுத்தனன்வீரன்கொண்டத்
துன்றிருஞ்சடையோனஞ்சத்தோளுறவாங்கிச்சொல்லும். (௩௫)

பூதலத்தரசையெல்லாம்பொன்றுவித்தனையென்றாலும்
வேதவித்தாயமேலோன்மைந்தனீவிரதம்பூண்டாய்
ஆதலிற்கொல்லலாகாதம்பிதுபிழைப்பதன்றால்
யாதிதற்கிலக்கமாவதியம்புதிவிரைவினென்றான். (௩௬)

வேறு.

நீதியாய்முனிந்திடேனீயிங்கியாவர்க்கும்
ஆதியானறிந்தனெனலங்கனேமியாய்
வேதியாவிறுவதேயன்றிவெண்மதிப்
பாதியான்பிடித்தவில்பற்றப்போதுமோ. (௩௭)

பொன்னுடைவனைகழற்பொலன்கொடாளினாய்
மின்னுடைநேமியானாதன்மெய்ம்மையால்
என்னுளதுலகினுக்கிடுக்கண்யான்றந்த
உன்னுடைவில்லுமுன்னுரத்துக்கீடன்றால். (௩௮)

எய்தவம்பிடைபழுதெய்திடாமலென்
செய்தவம்யாவையுஞ்சிதைக்கவேயெனாக்
கையவணெகிழ்தலுங்கணையுஞ்சென்றவன்
மையறுதவமெலாம்வாரிமீண்டதே. (௩௯)

எண்ணியபொருளெலாமினிதுமுற்றுக
மண்ணியமணிநிறவண்ணவண்டுழாய்க்
கண்ணியயாவர்க்குங்களைகணாகிய
புண்ணியவிடையெனத்தொழுதுபோயினான். (௪௦)

அழிந்தவன்போனபினமலனையுணர்
வொழிந்தனனுயிருலைந்துருகுதாதையைப்
பொழிந்தபேரன்பினாற்றொழுதுமுன்புபுக்
கிழிந்தவான்றுயர்க்கடற்கரைநின்றேற்றினான். (௪௧)

---

37. வெண்மதிப்பாதியானென்றது - ஒற்றைக்கலைபுனைந்தசிவனை.

41. ஐயுணர்வென்றது - மெய், வாய், கண், மூக்கு, செவி, என்பன வற்றை.

வெளிப்படுமுணர்வினன்விழுமநீங்கியே
தளிர்ப்புறுமதகரித்தானையானிடை
குளிப்பருந்துயர்க்கடற்கோடுகண்டவன்
களிப்பெனுங்கரையிலாக்கடலுளாழ்ந்தனன். (சஉ)

பரிவுறுசிந்தையப்பரசுராமன்கை
வரிசிலைவாங்கியோர்வசையைநல்கிய
ஒருவனைத்தழுவிநின்றுச்சிமோந்துதன்
அருவியங்கண்ணெனுங்கலசமாட்டினான். (சஙூ)

பொய்மையிற்சிறுமையிற்புரிந்தவாண்டொழில்
மும்மையினுலகினுன்முடிக்கலாவதோ
மெய்ம்மையிச்சிறுவனேவினைசெய்தோர்களுக்
கிம்மையுமறுமையுமீயுமென்றனன். (சச)

பூமழைபொழிந்தனர்புகுந்ததேவருள்
வாமவேல்வருணனைமானவெஞ்சிலை
சேமியென்றுதவித்தன்சேனையார்த்தெழ
நாமநீரயோத்திமாநகரநண்ணினான். (சரு)

நண்ணினரின்பத்துவைகுநாளிடை
மண்ணுறுமுரசினம்வயங்குதானையவ்
வண்ணலப்பரதனைநோக்கியாண்டகை
எண்ணருந்தகையதோர்பொருளியம்புவான். (சசு)

ஆணைநின்றன்முதுதாதையையநிற்
காணியவிழைவதோர்கருத்தனுதலாற்
கேணியில்வளைமுரல்கேகயம்புகப்
பூணொளிர்மார்பநீபோதியென்றனன். (சஎ)

ஏவலுமிறைஞ்சிப்போயிராமன்சேவடிப்
பூவினைச்சென்னியிற்புனைந்துபோயினான்
ஆவியங்கவனலதில்லையாதலான்
ஓவிலுயிர்பிரிந்துடல்சென்றென்னவே. (சஅ)

---

42. கோடென்றது கரையை.

44. வினை ஈண்டு சற்கருமத்தை.

46. ஆண்டகை என்றது பரதனை.

48. இராமன் வனத்திற் புகற்கிடமாதல் வரனவர்செய்த மாதவமாகலா லிங்ஙனங் கூறினார்.

உளைவிரிபுரவித்தேருதாசித்தென்றெனும்
வளைமுரசுறுஞையான் மருங்குபோதப்போய்
இளையவன்றன்னொடுமேழுநாளிடை
நளிர்புனற்கேகயநாடுநண்ணினான். (சகூ)

ஆனவன்போனபின்னரசர்கோமகன்
ஊனமில்பேரரசுய்க்குநாளிடை
வானவர்செய்தமாதவமுண்டாகலான்
மேனனிநிகழ்ந்தனவிளம்புவாமரோ. (ருo)

ஆக திருவிருத்தம் - கஉகூகூ.

பாலகாண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

இரண்டாவது

# அயோத்தியா காண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

# அயோத்தியாகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமானுஜாயநம:







ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## இரண்டாவது,

# அயோத்தியாகாண்டம்.

---

### முதலாவது மந்திரப்படலம்.

காப்பு.

வானின்றிழிந்துவரம்பிகந்தமாபூதத்தின்வைப்பெங்கும்
ஊனுமுயிருமுணர்வும்போலுள்ளும்புறத்துமுளனென்ப
கூனுஞ்சிறியகோத்தாயுங்கொடுமையிழைப்பக்கோற்றுறந்து
கானுங்கடலுங்கடந்திமையோரிடுக்கண்காத்தகழல்வேந்தை. (க)

நூல்.

மண்ணுறுமுரசினமழையினார்ப்புறப்
பண்ணுறுபடர்சினப்பருமயானையான்
கண்ணுறுகவரியின்கற்றைசுற்றுற
எண்ணுறுசூழ்ச்சியினிருக்கையெய்தினான். (உ)

புக்கபின்னிருபரும்பொருவில்சுற்றமும்
பக்கமும்பெயர்கெனப்பரிவினீக்கினான்
ஒக்கநின்றுலகளித்தியோகினெய்திய
சக்கரத்தவனெனத்தமியனாயினான். (ங)

சந்திரற்குவமைசெய்தரளவெண்குடை
அந்தரத்தளவுநின்றளிக்குமாணையான்
இந்திரற்கிமையவர்குருவையேய்ந்ததன்
மந்திரக்கிழவரைவருகென்றேவினான். (ச)

---

1. கூன்என்றது - மந்தரையை, ஆகுபெயர். சிறியகோத்தாய் என்றது- கைகேசியை, கழல்வேந்தை என்றது - ஸ்ரீராமனை,

பூவருபொலங்கழற்பொருவின்மன்னவன்
காவலிலாணையின்கடவுளாமெனத்
தேவருமுனிவருமுணருந்தேவர்கள்
மூவரினல்வராமுனிவந்தெய்தினன். (ரு)

குலமுதற்றொன்மையுங்கலையின்குப்பையும்
பலமுதற்கேள்வியும்பயனுமெய்தினர்
நலமுதனலியினும்நடுவுநோக்குவார்
சலமுதலறுத்தருந்தருமந்தாங்கினர். (சு)

வேறு.

உற்றதுகொண்டுமேல்வந்துறுபொருளுணருங்கோளார்
மற்றதுவினையின்வந்ததாயினும்மாற்றலாற்றும்
பெற்றியர்பிறப்பின்மேன்மைப்பெரியவராரியநூலும்
கற்றவர்மானநோக்கிற்கவரிமாவனையநீரார். (எ)

காலமுமிடனுமேற்றகருவியுந்தெரியக்கற்ற
நூலுறநோக்கித்தெய்வநுனித்தறங்குணித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ்செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வருமுறுதியாவுந்தலைவற்குப்பயக்குநீரார். (அ)

தம்முயிர்க்குறுதியெண்ணார்தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதிவிடாதுநின்றுரைக்கும்வீரர்
செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்காலம்
மும்மையுமுணரவல்லாரொருமையேமொழியுநீரார். (சு)

வேறு.

நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவனியல்பினெண்ணுவார்
ஒல்லைவந்துறுவனவுற்றபெற்றியின்
தொல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார். (௧௦)

அறுபதினாயிரரெனினுமாண்டகைக்
குறுதியிலொன்றிவர்க்குணர்வென்றுன்னலாம்
பெறலருஞ்சூழ்ச்சியர்திருவின்பெட்பினர்
மறிதிரைக்கடலெனவந்துசுற்றினர். (௧௧)

---

7. மானத்திற்கவரிமாவொடுவமை கூறினர் "மயிர்நீப்பின் வாழாக்கவரிமா" என்றதுமிப்பெற்றி நோக்கி.

8. பால் என்றது - ஊழை.

முறைமையினெய்தினர்முந்தியந்தமிழ்
அறிவனைவணங்கித்தம்மரசைக்கைதொழு
திறையிடைவரன்முறையேறியேற்றசொற்
றுறையறிபெருமையானருளுஞ்சூடினார். (௧௨)

அன்னவரருளமைந்திருந்தவாண்டையில்
மன்னவனவர்முகமரபினோக்கினான்
உன்னியதரும்பெறலுறுதியொன்றுள
தென்னுணர்வனையநீரினிதுகேட்கென. (௧௩)

வெய்யவன்குலமுதல்வேந்தர்மேலவர்
செய்கையினொருமுறைதிறம்பலின்றியே
வையம்யானுண்டவாண்டுங்கண்மாட்சியால்
ஐயமிலறுபதினாயிரம்மரோ. (௧௪)

கன்னியர்க்கமைவருங்கற்பின்மாநிலம்
தன்னையித்தகைதரத்தருமங்கைதர
மன்னுயிர்க்குறுவதேசெய்துவைகினேன்
என்னுயிர்க்குறுவதுஞ்செய்யவெண்ணினேன். (௧௫)

விரும்பியமூப்பெனும்வீடுகண்டயான்
இரும்பியலனந்தனுமிசைந்தயானையும்
பெரும்பெயர்க்கிரிகளும்பெயரத்தாங்கிய
அரும்பொறையினிச்சிறிதாற்றவாற்றலேன். (௧௬)

நங்குலக்குரவர்கணவையினீங்கினார்
தங்குலப்புதல்வரே தரணிதாங்கப்போய்
வெங்குலப்புலன்கெடவீடுநண்ணினார்
எங்குலப்புறவரென்றெண்ணிநோக்குகேன். (௧௭)

வெள்ளநீருலகினில்விண்ணினுகரில்
தள்ளரும்பகையெலாந்தவிர்த்துநின்றயான்
கள்ளரிற்கரந்துறைகாமமாதியா
உள்ளுறைபகைஞருக்கொதுங்கிவாழ்வெனோ. (௧௮)

12. அந்தமிலறிவனென்றது - வசிட்டமுனிவனை.

14. வெய்யவன்குலமுதல் வேந்தரென்றது - மனுத்தொடக்கமான அரசரை.

16, பெரும்பெயர்க்கிரிகளென்றது - குலாசலங்களெட்டினை.

17. குலக்குரவரென்றது - மனுத்தொடக்கமானவரை.

18, காமமாதியாவென்றது - காமம், வெகுளி, மயக்கங்களை.

பஞ்சிமென் றளிரடிப்பாவைகோல்கொள
வெஞ்சினத் தவுணர்தேர்பத்தும்வென் றுளேற்
கெஞ்சலில்மனமெனுமிழுதையேறிய
அஞ்சுதேர்வெல்லுமீதருமையாவதோ. (௧௯)

ஒட்டியபகைஞர்வந்துருத்தபோரிடைப்
பட்டவரல்லரேற்பரமஞானம்போய்த்
தெட்டவரல்லரேற்செல்வநீண்டென
விட்டவரல்லரேல்யாவர்வீடுளார். (௨௦)

இறப்பெனுமெய்ம்மையையிம்மையாவர்க்கும்
மறப்பெனுமதனின்மேற்கேடுமற்றுண்டோ
துறப்பெனுந்தெப்பமேதுணைசெயாவிடில்
பிறப்பெனும்பெருங்கடல்பிழைக்கலாகுமோ. (௨௧)

அருஞ்சிறப்பமைவருந்துறவுமவ்வழி
தெருஞ்சுறவெனமிகுந்தெளிவுமாய்வரும்
பெருஞ்சிறகுளவெனிற்பிறவியென்னுமிவ்
விருஞ்சிறைகடத்தலினினியதியாவதே. (௨௨)

இனியதுபோலுமிவ்வரசையெண்ணுமோ
துனிவருநலனெனத்தொடர்ந்துதோற்கலா
நனிவரும்பெரும்பகைநவையினீங்கிய
தனியரசாட்சியிற்றுறுமுமுள்ளமே. (௨௩)

உம்மையானுடைமையினுலகம்யாவையும்
செம்மையின்ஞெம்பிநல்லறமுஞ்செய்தனென்
இம்மையினுதவிநல்லிசைகடாயநீர்
அம்மையுமுதவுதற்கமையவேண்டுமால். (௨௪)

இழைத்ததீவினையையுங்கடக்கவெண்ணுதல்
தழைத்தபேரருளுடைத்தவத்தினுக்குமேற்
குழைத்ததோரமுதுடைக்கோரநீக்கிவே
றழைத்ததீவிடத்தினையருந்தலாகுமோ. (௨௫)

கச்சையங்கடகரிக்கழுத்தின்கண்ணுறப்
பிச்சமுங்கவிகையும்பெய்யுமின்னிழல்

19. பஞ்சின்மென் றளிரடிப்பாவையென்றது - கைகேசியை. 21. இறப்பெனு மெய்ம்மையை மறப்பெனுமதனின்மேல் இம்மை யாவர்க்குங்கேடு மற்றுண்டோ எனக்கூட்டுக. 25. தவத்திற்கு அருள்சிறந்த வுறுப்பாகலின் "பேரருளுடைத்தவ" மென்றார்.

நிச்சயமன்றெனினெடிதுநாளுண்ட
எச்சிலைநுகருவதின்பமாகுமோ. (உ௬)

மைந்தரையின்மையின்வரம்பில்காலமும்
நொந்தனனிராமனென்னுநோயைநீக்குவான்
வந்தனனினியவன்வருந்தயான்பிழைத்
துய்ந்தனன்போவதோருறுதியெண்ணினேன். (உ௭)

இறந்திலன்செருக்களத்திராமன்றாதைதான்
அறந்தலைநிரம்பமூப்படைந்தபின்னரும்
துறந்திலனென்பதோர்சொல்லுண்டானபின்
பிறந்திலனென்பதிற்பிறிதுண்டாகுமோ. (உ௮)

பெருமகனென்வயிற்பிறக்கச்சீதையாம்
திருமகண்மணவினைதெரியக்கண்டயான்
அருமகனிறைகுணத்தவனிமாதெனும்
ஒருமகண்மணமுங்கண்டுவப்பதாயினேன். (உ௯)

சிவப்புறுசிலனெனுநிரம்புநங்கையுஞ்
சிவப்புறுமலர்மிசைச்சிறந்தசெல்வியும்
உவப்புறுகணவனையுயிரினோம்பிய
தவப்பயன்றூழ்ப்பதுதருமமன்றரோ. (௩௦)

ஆதலாலிராமனுக்கரசைநல்கியிப்
பேதைமைத்தாய்வரும்பிறப்பைநீக்குவான்
மாதவந்தொடங்கியவனத்தைநண்ணுவேற்
கியாதுநுங்கருத்தெனவினையகூறினான். (௩௧)

வேறு.

திரண்டதோளினனிப்படிச்செப்பலுஞ்சிந்தை
புரண்டுமீதிடப்பொங்கியவுவகையராங்கே
வெருண்டுமன்னவன்பிரிவெனும்விம்முறனிலையால்
இரண்டுகன்றினுக்கிரங்குமோராவெனவிருந்தார். (௩௨)

அன்னராயினுமரசனுக்கதுவலதுறுதி
பின்னரில்லெனக்கருதியும்பெருநிலவரைப்பில்
மன்னுமன்னுயிர்க்கிராமனின்மன்னவரில்லை
என்னவுன்னியும்விதியதுவலியிறுமிசைந்தார். (௩௩)

32. ஸ்ரீராமனரசெய்தலானுவகையும், அரசனபிரிவான்வருந்துதலுமுண்மையின் 'இரண்டுகன்றினுக்கிரங்குமோரா' என்றமைச்சர்க்குவமைகூறினார்.

இருந்தமந்திரக்கிழவரதெண்ணமுந்தன்பாற்
பரிந்தசிந்தையம்மன்னவன்கருதியபயனும்
பொருந்துமன்னுயிர்க்குறுதியும்பொதுவுறநோக்கித்
தெரிந்துநான்மறைத்திசைமுகன்றிருமகன்செப்பும். (௩௪)

நிருபநின்குலமன்னவர்நேமிபண்டுருட்டிப்
பெருமையெய்தினர்யாவரேயிராமனைப்பெற்றார்
கருமமேயிதுகற்றுணர்ந்தோய்க்கினிக்கடவ
தருமமும்மிதுதக்கதேநினைத்தனைதகவோய். (௩௫)

புண்ணியந்தொடர்வேள்விகள்யாவையும்புரிந்த
அண்ணலேயினியருந்தவமியற்றவுமடுக்கும்
வண்ணமேகலைநிலமகள்மற்றுனைப்பிரிந்து
கண்ணிழந்திலளெனச்செயுநீதந்தகழலோன். (௩௬)

புறத்துநாமொருபொருளினிப்புகலுவதெவனோ
அறத்தின்மூர்த்திவந்தவதரித்தானென்பதல்லால்
பிறத்தியாவையுங்காத்தவைபின்னுறத்துடைக்கும்
திறத்துமூவருந்திருத்திய திருத்துமத்திறலோன். (௩௭)

பொன்னுயிர்த்தபூமடந்தையும்புவியெனுந்திருவும்
இன்னுயிர்த்துணையிவனெனநினைக்கின்றவிராமன்
தன்னுயிர்க்கென்கைபுல்லிதுதற்பயந்தெடுந்த
உன்னுயிர்க்கெனநல்லன்மன்னுயிர்க்கெலாமுரவோய். (௩௮)

வாரமென்னினிப்பகர்வதுவைகலுமனையான்
பேரினால்வருமிடையுறுபெயர்கின்றபயத்தால்
வீரநின்குலமைந்தனைவேதியர்முதலோர்
யாரும்யாஞ்செய்தநல்லறப்பயனெனவிருப்பார். (௩௯)

மண்ணினுந்நல்லண்மலர்மகள்கலைமகள்கலையூர்
பெண்ணினுந்நல்லள்பெரும்புகழ்ச்சனகியோநல்லள்

---

34. திசைமுகன் றிருமகனென்றது - வசிட்டமுனிவனை.

36. வேள்விபுண்ணியம்பயத்தலின் "புண்ணியந்தொடர்வேள்வி" என்றார்.

37. பிறப்பித்து என்றது - பிறத்தெனை விவ்விகுதிதொகுத்தல் பெற்றது.

39. தாரகமந்திரமாதலின் "அனையான்பேரினால் வருமிடையுறுபெயர்கின்ற பயத்தால்" என்றார். இடையூறு என்பது குறுக்கும் வழிகுறுக்கல் பெற்றது.

கண்ணினுந்நல்லன்கற்றவர்கற்றிலாதவரும்
உண்ணுநீரினுமுயிரினுமவனையேயுவப்பார். (௪௦)

மனிதர்வானவர்மற்றுளாரறங்கள்காத்தளிப்பார்
இனியிம்மன்னுயிர்க்கிராமனிற்சிறந்தவரில்லை
அனையனாதலினரசநிற்குறுபொருளரியிற்
புனிதமாதவமல்லதொன்றில்லெனப்புகன்றான். (௪௧)

மற்றவன்சொன்னவாசகங்கேட்டலுமகனைப்
பெற்றவன்றினும்பிஞ்ஞகன்பிடித்தவப்பெருவில்
இற்றவன்றினுமெறிமழுவாளவனிழுக்கும்
உற்றவன்றினும்பெரியதோருவகையனானான். (௪௨)

அனையதாகியவுவகையன்கண்கணீரரும்ப
முனிவன்மாமலர்ப்பாதங்கண்முறைமையினிறைஞ்சி
இனியசொல்லினையெம்பெருமானருள்விழியின்
தனியனானிலந்தாங்கியதவற்கிதுதகாதோ. (௪௩)

எந்தைநீயுவந்திதஞ்சொலவெங்குலத்தரசர்
அந்தமில்லரும்பெரும்புகழவனியினிறுவி
முந்துவேள்வியுமுடித்துத்தம்மிருவினைமுடித்தார்
வந்ததவ்வருளெனக்குமென்றுரைசெய்துமகிழ்ந்தான். (௪௪)

பழுதின்மாதவன்பின்னொன்றும்பணித்திலனிருந்தான்
முழுதுமெண்ணுறுமந்திரக்கிழவர்தம்முகத்தால்
எழுதிநீட்டியவிங்கிதமிறைமகற்கேறத்
தொழுதகையினன்சுமந்திரன்முன்னின்றுசொல்லும். (௪௫)

உறத்தகும்பரசிராமற்கென்றுவக்கின்றமனத்தைத்
துறத்திநீயெனுஞ்சொற்சுடுநின்குலத்தொல்லோர்
மறத்தல்செய்திலாத்தருமத்தைமறப்பதும்வழக்கன்
றறத்தினூஉங்கினிக்கொடிதெனலாவதொன்றியாதே. (௪௬)

---

40. உண்ணுநீரென்றது - நீரொடுகூடிய சோற்றினை உயிரினும் என்றது பிராணாயாமத்தை.

42. பிஞ்ஞகனென்றது சிவனை. மழுவாளவன் என்றது - பரசுராமனை.

43. பாலைக்கு நிலமின்மையின், நானிலம் என்றார்.

44. இருவினை - நல்வினை, தீவினை.

45. இங்கிதம் - குறிப்புமொழி.

புரசைமாக்கரிநிருபர்க்கும்புரத்துறைவோர்க்கும்
உரைசெய்மந்திரக்கிழவர்க்குமுனிவர்க்குமுள்ளம்
முரசமார்ப்பநின்முதன்மணிப்புதல்வனைமுறையால்
அரசனுக்கிப்பின்னப்புறத்தடுத்ததுபுரிவாய். (சஎ)

என்றவாசகஞ்சுமந்திரனியம்பலுமிறைவன்
நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டி
இன்றுநின்றதுசெய்வதுவிரைவினினீயே
சென்றுகொண்டணைதிருமகள்கொழுநனையென்றான். (சஅ)

அலங்கன்மன்னனையடிதொழுதவன்மனமனையான்
இலங்கன்மாளிகைவீதியில்விரைவொடுசென்றான்
தலங்கள்யாவையும்பெற்றனன்றெனனத்தளிர்ப்பான்
பொலங்கொடேரொடுமிராகவன்றிருமனைபுக்கான். (சகூ)

பெண்ணினின்னமுதன்னவடன்னொடும்பிரியா
வண்ணவெஞ்சிலைக்குரிசிலுமருங்கினிதிருப்ப
அண்ணலாண்டிருந்தானழகருநறவெனத்தன்
கண்ணுமுள்ளமும்வண்டெனக்களிப்புறக்கண்டான். (ரு0)

கண்டுகைதொழுதையவிக்கடலிடைக்கிழவோன்
உண்டோர்காரியம்வருகெனவுரைத்தனனென்னலும்
புண்டரீகக்கட்புரவலன்பொருக்கெனவெழுந்தேர்
கொண்டல்போலவன்கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டான். (ருக)

முறையின்மொய்முகிலெனமுரசார்த்திடமடவார்
இறைகழன்றசங்கார்த்திடவிமையவரெங்கள்
குறைமுடிந்ததென்றார்த்திடக்குஞ்சிமைச்சூழ்ந்த
நறையலங்கல்வண்டார்த்திடத்தேர்மிசைநடந்தான். (ருஉ)

பணைநிரைந்தனபாட்டொலிநிரைந்தனவனங்கள்
கணைநிரைந்தனநாணொலிகறங்கினநிறைப்பேர்
அணைநிரைந்தனவறிவெனும்பெரும்புனலணையார்
பிணைநிரைந்தெனப்பரந்தனர்நாணமும்பிரிந்தார். (ருங)

---

47. அப்புறத்தடுத்ததுபுரிதல் - துறவறநிலையை மேற்கோடலை.
50. அழகினை நறவென்றமையான் அழகினை 'அருநற' வென்றார்.
51. புண்டரீகக்கட்புரவலன் - செந்தாமரைக்கண்ணையுடையனாகிய சிராமன்.
52. இமையாநாட்டமுடையாரை 'இமையவரென்றது' மரபுவழுவமைதி.
53. நிறைப்பேரணைநிரைந்தனவறிவெனும் பெரும்புனல் - கற்பாகிய பெரிய தோரணையினின்றும் அறிவெனப்படும் பெரும்புனல்.

நீளெழுத்தொடர்வாயிலுங்குழையொடுநெகிழ்ந்த
ஆளகத்தினோடரமியத்தலத்தினுமலர்ந்த
வாளரத்தவேல்வண்டொடுகெண்டைகண்மயங்கச்
சாளரத்தினும்பூத்தனதாமரைமலர்கள். (௫௪)

மண்டலந்தருமதிகெழுமழைமுகிலனைய
அண்டர்நாயகன்வரைபுரையகலத்துளலங்கல்
தொண்டைவாய்ச்சியர்நிறையொடுநாணொடுந்தொடர்ந்த
கெண்டையும்முளகிளைபயில்வண்டொடுங்கிடந்த. (௫௫)

சரிந்தபூவுளமழையொடுகலையுறத்தாழ்வ
பரிந்தபூவுளபணிக்கடைமுத்தினம்படைப்ப
எரிந்தபூவுளவிளமுலையிழையிடைநுழைவ
விரிந்தபூவுளமீனுடைவானின்றும்வீழ்வ. (௫௬)

வள்ளுறைகழித்தொளிர்வனவாணிமிர்மதியம்
தள்ளுறச்சுமந்தெழுதருந்தமனியக்கொம்பில்
புள்ளிநுண்பனிப்பொடிப்பனபொன்னிடைப்பொதிந்த
எள்ளுடைப்பொரிவிரவினவுளசிலவிளநீர். (௫௭)

ஆயதவ்வழிநிகழ்தரவாடவரெல்லாம்
தாயைமுன்னியகன்றெனநின்றுயிர்தளிர்ப்பத்
தூயதம்பியுந்தானுமச்சுமந்திரன்றேர்மேல்
போயகங்குளிர்புரவலனிருந்துழிப்புக்கான். (௫௮)

மாதவன்றனைவரன்முறைவணங்கிவாளுழவன்
பாதபங்கயம்பணிந்தனன்பணிதலுமனையான்
காதல்பொங்கிடக்கண்பனியுகுத்திடக்கனிவாய்ச்
சீதைகொண்கனைத்திருவுறைமார்பகஞ்சேர்த்தான். (௫௯)

நலங்கொண்மைந்தனைத்தழுவினனென்பதென்னளிநீர்
நிலங்கடாங்குறுநிலையினைநிலையிடநினைத்தான்
விலங்கலன்னதிண்டோளையுமெய்த்திருவிருக்கும்
அலங்கன்மார்பையுந்தனதுதோண்மார்புகொண்டளந்தான். (௬௦)

---

54. அளகமென்றது, ஆளகமெனநீட்டும் வழிநீட்டல்பெற்றது.

55. அண்டர்நாயகனென்றார், அயர்வருமமரர்கட்கிறைவனாகலின். கெண்டை - கண்ணினை உவமித்தது.

57. சில - இரண்டினை, இதனைச் 'சில்காழல்குல்' என்புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

59. வாளுழவன் - ஈண்டுதயரதனை.

ஆண்டுதன்மருங்கிரீஇயுவந்தன்புறநோக்கிப்
பூண்டபோர்மழுவுடையவனெடும்புகழ்குறுக
நீண்டதோளையநிற்பயந்தெடுத்தயானின்னை
வேண்டியெய்திடவிரைவதொன்றுளதெனவிளம்பும். (௬௧)

ஐயசாலவுமலசினனரும்பெருமூப்பும்
வெய்யதாயதுவியலிடப்பெரும்பரம்விசித்த
தொய்யன்மாநிலச்சுமையுறுசிறைதுறந்தினியான்
உய்யலாவதோர்நெறிபுகவுதவிடவேண்டும். (௬௨)

உரிமைமைந்தரைப்பெறுகின்றதுறுதுயர்நீங்கி
இருமையும்பெறற்கென்பதுபெரியவரியற்கை
தருமமன்னநிற்றந்தயான்றளர்வதுதகவோ
கருமமென்வயிற்செய்யிலென்கட்டுரைகோடி. (௬௩)

மைந்தநங்குலமரபினின்மணிமுடிவேந்தர்
தந்தமக்களைகடைமுறைநெடுநிலந்தாங்க
ஐந்தொடாகியமுப்பகைமருங்கறவகற்றி
உய்ந்துபோயினரூழிநின்றெண்ணினுமுலவார். (௬௪)

முன்னையூழ்வினைப்பயத்தினுமுற்றியவேள்விப்
பின்னையெய்தியநலத்தினுமரிதினிற்பெற்றேன்
இன்னமியானிந்தவரசியலிடும்பையனென்றால்
நின்னையீன்றுளபயத்தினிரம்புவதியாதோ. (௬௫)

ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவினார்தி
எருத்தினீங்குநின்றியல்வரக்குழைந்திடருழக்கும்
வருத்தநீங்கியவ்வரம்பறுதிருவினைமருவும்
அருத்தியுண்டெனக்கையவீதருளிடவேண்டும். (௬௬)

ஆளுநன்னெறிக்கமைவருமமைவினனாகி
நாளுநங்குலநாயகனறைவிரிகமலத்

61. மழுவுடையவன் - பரசுராமனை.

63. உருமை - உருமைக்கடனை.

63. இருமை - இம்மை, மறுமைகளை.

64. ஐந்தென்னுந்தொகைக்குறிப்பு, இந்திரியமைந்தனையுமென்க. முப்பகை - காமம், வெகுளி, மயக்கங்களை.

67. நங்குலநாயகன் - ஆயிரமோலியரும்பாஞ்சுடர். நறைவிரிகமலத்தாளினல்கியகங்கை, என்றூர் புண்டரீகமென்பதத் திடைப்பிறந்தென, முற்காண்டத்துக் கூறுதல்நோக்கி.

தாளினல்கியகங்கையைத்தந்துதந்தையரை
மீள்விலினுலகேற்றினொருமகன்மேனாள். (௬௭)

மன்னரானவரல்லர்மேல்வானவர்க்கரசாம்
பொன்னின்வார்கழற்புரந்தரன்போலியரல்லர்
பின்னுமாதவந்தொடங்கிநோன்பிழைத்தவர்பிறரார்
சொன்மறாமகற்பெற்றவரருந்துயர்துறந்தார். (௬௮)

அனையதாதலினருந்துயர்ப்பெரும்பரமரசன்
வினையினென்வயின்வைத்தனனெனக்கொளவேண்டா
புனையுமாமுடிபுனைந்திந்தநல்லறம்புரக்க
நினையல்வேண்டும்யானின்வயிற்பெறுவதீதென்றான். (௬௯)

தாதையப்பரிசுரைசெயத்தாமரைக்கண்ணன்
காதலுற்றிலனிகழ்ந்திலன்கடனிதென்றுணர்ந்தும்
யாதுகொற்றவனேவியததுசெயலன்றோ
நீதியெற்கெனநினைந்துமப்பணிதலைநின்றான். (௭௰)

குரிசில்சிந்தையைமனக்கொண்டகொற்றவெண்குடையான்
தருதியிவ்வரமெனச்சொலியுயிருறத்தழுவிச்
சுருதியன்னதன்மந்திரச்சுற்றமுஞ்சுற்றப்
பொருவின்மேருவும்பொருவருங்கோயில்போய்ப்புக்கான். (௭௧)

நிவந்தவந்தணர்நெடுந்தகைமன்னவர்நகரத்
துவந்தமைந்தர்கண்மடந்தையருழையர்பின்றொடரச்
சுமந்திரன்றடந்தேர்மிசைச்சுந்தரத்திரடோள்
அமைந்தமைந்தனுந்தன்னெடுங்கோயில்சென்றடைந்தான். (௭௨)

வென்றிவேந்தரைவருகவென்றுவணம்வீற்றிருந்து
பொன்றிணிந்ததோட்டருப்பெறலிலச்சினைபோக்கி
நன்றுசித்திரநளிர்முடிகவித்தற்குநல்லீர்
சென்றுவேண்டுவவரன்முறையமைக்கெனச்செப்ப. (௭௩)

---

68. யார் - என்றது, ஆரெனமரீயது, அது ஈண்டு இன்மைப்பொருள் குறித்து நின்றது.

69. இந்தநல்லறம் - துறவறவொழுக்கினை.

70. தாமரைக்கண்ணன் - செங்கண்மாலை இதனைத் 'தாமரைக்கண்ணா னுலகு' என்புழிப்பரிமேலழகர் கூறலானுமறிக.

72. அந்தணர் - அழகியதட்பமாகிய குணமுடையார், இவ்வாறே 'அந்தணரென்போரறவோர்' என்புழிப்பரிமேலழகர் உரைப்பர், வேதாந்தத்தினணவு வாரென நச்சினார்க்கினியர் கூறுவர்.

73. இலச்சினை - முடங்கல்.

உரியமாதவனுள்ளிதென்றமைந்தனன்விரைந்தோர்
பொருவிறோர்மிசையந்தணர்குழாத்தோடும்போக
நிருபர்கேண்மின்களிராமற்குநெறிமுறைமையினால்
திருவும்பூமியுஞ்சிந்தையிற்சிறந்தனவென்முன். (எச)

இறைவன்சொல்லெனுமின்னறவருந்தினர்யாரும்
முறையினின்றிலர்முகந்துறுகளியிடைமூழ்கி
நிறையுநெஞ்சிடையுவகைபோய்மயிர்வழிநிமிர
உறையும்விண்ணகமுடலொடுமெய்தினரொத்தார். (எரு)

ஒத்தசிந்தையருவகையரொருவர்க்கங்கொருவர்
தத்தமக்குற்றவரசெனத்தனைமூக்கின்றமனத்தர்
முத்தவெண்குடைமன்னனைமுறைமுறைதொழுதார்
அத்தநன்றெனவன்பினோடறிவிப்பதானார். (எசு)

வேறு.

மூவெழுமுறைமையெங்குலங்கண்முற்றுறப்
பூவெழுமழுவினற்பொருதுபோக்கிய
சேவகன்சேவகஞ்செகுத்தசேவகற்
காவவிவ்வுலகமீதறனென்றாரரோ. (எஎ)

வேறெலாமன்னரும்விரும்பியின்னது
கூறினாதுமனங்கொண்டகொற்றவன்
ஊறினனுவகையையொளிக்குஞ்சிந்தையான்
மாறுமோரளவைசால்வாய்மைகூறினான். (எஅ)

மகவயினன்பினன்மயங்கியானிது
புகலநீர்புகன்றவிப்பொம்மல்வாசகம்
உகவையின்மொழிந்ததோவுள்ளநோக்கியோ
தகவெனநினைந்ததோதன்மையென்னென்முன். (எகூ)

இவ்வகையுரைசெயவிருந்தவேந்தவை
செவ்வியநின்றிருமகற்குத்தேர்ந்துளோர்

---

74. திருவும் பூமியுஞ்சிந்தையிற் சிறந்தனவென்முன் - செல்வமும் அரசுமென் சிந்தைபோலுஞ்சிறந்தனவென்முன், என்பதன்றி கைகேசி கருத்தின்வண்ணம் அன்னவை சிறந்தன அவள் மகனுக்கென்பதுமொன்று.

75. உவகைமிகுதியான் 'உறையும் விண்ணகமுடலொடு மெய்தினர்க்கு' வமைகூறினர்.

77. பூ - கூர்மை.

அவ்வவர்க்கவ்வவராற்றவாற்றும்
எவ்வமிலன்பினையினிதுகேளொடு. (அ0)

தானமுந்தருமமுந்தகவுந்தன்மைசேர்
ஞானமுநல்லவர்ப்பேணுநன்மையும்
மானவவையநின்மகற்குவைகலும்
ஈனமில்செல்வம்வந்தியைகவென்னவே. (அக)

ஊருணிநிறையவுமுதவுமாடுயர்
பார்கெழுபழுமரம்பழுத்தற்றுகவும்
கார்மழைபொழியவுங்கழனிபாய்நதி
வார்புனல்பெருகவும்மறுக்கின்றார்கள்யார். (அ௨)

பனையவாநெடுங்கரப்பருமயானையாய்
நினையவாந்தன்மையைநினைந்தமன்னுயிர்க்
கெனையவாறன்பினனிராமனீண்டவற்
கனையவாறன்பினவவைபுமென்றனர். (அ௩)

மொழிந்ததுகேட்டலுமொய்த்துநெஞ்சினைப்
பொழிந்தபேருவகையான்பொங்குகாதலான்
கழிந்ததோரிடரினன்களிக்குஞ்சிந்தையான்
வழிந்தகண்ணீரினன்மன்னன்கூறுவான். (அ௪)

செம்மையிற்றருமத்திற்செயலிற்றீங்கின்பால்
வெம்மையினொழுக்கத்தின்மெய்ம்மைமேவினீர்
என்மகனென்பதென்னெறியினீங்கிவன்
றும்மகன்கையடைநோக்குமென்கென்றான். (அ௫)

அரசரைவிடுத்தபின்னணைமன்னவன்
புரைதபுநாளொடுபொழுதுநோக்குவான்
உரைதெரிகணிதரையொருங்குகொண்டொரு
வரைபொருமண்டபமருங்குபோயினன். (அ௬)

வேறு.

ஆண்டவன்னிலையாகவறிந்தவர்
பூண்டகாதலர்பூட்டவிழ்கொங்கையர்

80. எவ்வமிலன்பினை - மிகவும் செய்யுங்குற்றமில்லாத எழுமையுந்தொடர்ந்த அன்பு. 83. பருமம் - மேற்றவிசு.

85. கையடை - கையிடை யடைக்கலப்பொருளை.

86. ஆனை - பாகதச்சிதைவு, இவ்வாறே கண்ணன் வட்டம் எனவருதல் காண்க.

நீண்டகூந்தலர் நீள்கலைதாங்கலர்
ஈண்டவோடினரிட்டிடையிற்றிலர். (௮௭)

ஆடுகின்றனர்பண்ணொடவின்றியே
பாடுகின்றனர்பார்த்தவர்க்கேகரம்
சூடுகின்றனர்சொல்லுவதோர்கிலர்
மாடுசென்றனர்மங்கையர்நால்வரே. (௮௮)

கண்டமாதரைக்காதலினோக்கினள்
கொண்டல்வண்ணனைநல்கியகோசலை
உண்டுபேருவகைப்பொருளன்னது
தொண்டைவாயினிர்சொல்லுமினீண்டென்றாள். (௮௯)

மன்னெடுங்கழல்வந்துவணங்கிடப்
பன்னெடும்பகல்பாரளிப்பாயென
நின்னெடும்புதல்வன்றனைநேமியான்
தொன்னெடும்முடிசூட்டுகின்றானென்றார். (௯௰)

சிறக்குஞ்செல்வமகற்கெனச்சிந்தையில்
பிறக்கும்பேருவகைக்கடல்பெட்புற
வறக்குமாவடவைக்கனலானதால்
துறக்குமன்னவனென்னுந்துணுக்கமே. (௯௧)

அன்னளாயுமரும்பெறலாரமும்
நன்னிதிக்குவையுந்நனிநல்கித்தன்
துன்னுகாதற்சுமித்திரையோடும்போய்
மின்னுநேமியன்மேவிடமேவினள். (௯௨)

மேவிமென்மலராணிலமாதெனும்
தேவிமாரொடுந்தேவர்கள்யாவர்க்கும்
ஆவியும்மறிவும்முதலாயவன்
வாவிமாமலர்ப்பாதம்வணங்கினள். (௯௩)

ஏன்வயிற்றருமைந்தற்கினியருள்
உன்வயிற்றதென்றாளுலகியாவையும்
மன்வயிற்றினடக்கியமாயனைத்
தன்வயிற்றினடக்குந்தவத்தினள். (௯௪)

---

90. நேமியான் - பூமியாளுந்தயாதன். 93. மலராணிலமாதெனுந்தேவிமார் - பூதேவி, சிதேவி. வாவிவணங்கினள் - அடியாரிதயமாகிய தடாகத்தில் மலர்ந்ததாமரைமலரையொத்த திருவடியைவணங்கினார்.

94. அவனைச்சிற்றுதரத்தினகண்வைத்திருந்து முன்னைப்பிறவியிற்செய்த முதுதவமாதலின் 'தன்வயிற்றினடக்குந்தவத்தினள்' என்றார்.

என்றிறைஞ்சியவ்விந்திரைகேள்வனுக்
கொன்றுநான்மறையோதியபூசனை
நன்றிழைத்தவணல்லதவர்க்கெலாம்
கன்றுடைப்பசுவின்கடனல்கினாள். (கூரு)

பொன்னுமாமணியும்புனைசாந்தமும்
கன்னிமாரொடுகாசினியீட்டமும்
இன்னயாவையுமீந்தனளந்தணர்க்
கன்னதானமுமாடையுநல்கினாள். (கூசு)

நல்கிநாயகனுண்மலர்ப்பாதத்தைப்
புல்லிப்போற்றிவணங்கிப்புரையிலா
மல்லன்மாளிகைக்கோயில்வலங்கொளாத்
தொல்லைநோன்புகள்யாவுந்தொடங்கினாள். (கூஎ)

ஆ திருவிருத்தம் - கூஎ.

---

## உ-வது, மந்தரைசூழ்ச்சிப்படலம்.

---

கடிகமழ்தாரினன்கணிதமாக்களை
முடிவுறநோக்கியோர்முதன்மைகூறிப்பின்
வடிமழுவாளவற்கடந்தமைந்தற்கு
முடிபுனைகடிகைநாண்மொழிமினென்றனன். (க)

பொருந்துநாளினைநின்புதல்வற்கென்றனர்
திருந்தினரன்னசொற்கேட்டசெய்கழல்
பெருந்திண்மால்யானையான்பிழைப்பில்செய்தவம்
வருந்தினன்வருகெனவசிட்டனெய்தினன். (உ)

நல்லியன்மங்கலநாளினையவ்
வில்லியரோளவற்கீண்டுவேண்டுவ
ஒல்லையினியற்றிநல்லுறுதிவாய்மையும்
சொல்லுதிபெரிதெனத்தொழுதுசொல்லினன். (௩)

---

95. இந்திரை - திருமாமகள்.

97. தொல்லைதொடங்கினாள் - தொன்றுதொட்டுள்ள விரதங்களெல்லா வற்றையும் செய்யத்தொடங்கினாள். மந்தரை - கூனி.

1- முடிபுனைகடிகைநாள் - முடிபுனையுஞ் சுபவோரை என்றதன்றி முடிபுனை தலைக்கடியுமோரையென்று இருபொருள்படக்கூறியதாமெனவுங்கொள்க.

முனிவனுமிவகையுந்தானுமுந்துவான்
மனுகுலநாயகன்வாயன்முன்னினான்
அனையவன்வரவுகேட்டலங்கல்வீரனும்
இனிதெதிர்கொண்டுதன்னிருக்கையெய்தினான். (ச)

வேறு.

ஒல்கலிற்றவத்துத்தமனோதுநூல்
மல்குகேள்வியவள்ளலைநோக்கினான்
புல்குகாதற்புரவலன்போர்வலாய்
நல்குநானிலநாளைநினக்கென்றான். (ரு)

என்றபின்னுமிராமனைநோக்கினான்
ஒன்றுகூறுவதுண்டுறுதிப்பொருள்
நன்றுகேட்டுக்கடைப்பிடிநன்றெனத்
துன்றுதாரவற்சொல்லுதன்மேயினான். (சு)

கரியமாலினுங்கண்ணுதலானினும்
உரியதாமரைமேலுறைவானினும்
விரியும்பூதமொரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதியுள்ளத்தால். (எ)

அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரில்
நொந்துளாரையுநொந்துயர்ந்தாரையும்
மைந்தவெண்ணவரம்புமுண்டாங்கொலோ. (அ)

அனையராதலினையவிவ்வெய்யதீ
வினையினீங்கியமேலவர்தாளிணை
புனையுஞ்சென்னியையாய்ப்புகழ்ந்தேத்துதி
இனியகூறிநின்றேயினசெய்தியால். (கூ)

ஆவதற்கும்மழிவதற்கும்மவர்
ஏவநிற்கும்விதியுமென்றாலினி
யாவதெப்பொருளிம்மையுமம்மையும்
தேவரைப்பரவுந்துணைசேர்த்ததே. (கo)

உருளுநேமியுமொண்கவரெஃகமும்
மருளில்வாணியும்வல்லவர்மூவர்க்கும்

---

4. மனுகுலநாயகன் - ஸ்ரீராமன்.

11. உருளுநேமியு—மூவர்க்கும் - சக்ராயுதம், சூலம், வாக்குமுள்ள மும்மைப்பெருந்தேவர் அதாவது பிரமன் முதலிய மூவர்,

தெருளுநல்லறமும்மனச்செம்மையும்
அருளுநீத்தபின்னாவதுண்டாகுமோ. (கக)

சூதுமுந்துறச்சொல்லியமாத்துயர்
நீதிமைந்தநிணக்கிலையாயினும்
ஏதமென்பனயாவையுமெய்துதற்
கோதுமூலமவையெனவோர்தியே. (கஉ)

யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்கும்புகழொடுங்காதுதன்
தாரொடுங்கல்செல்லாததுதந்தபின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ. (கந)

கோளுமைம்பொறியுங்குறையப்பொருள்
நாளுங்கண்டுநெடுக்குறுநோன்மையின்
ஆளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேல்வருமாதவமன்னனே. (கச)

உமைக்குநாதற்குமோங்குபுள்ளூர்திக்கும்
இமைப்பிலாட்டமொரெட்டுடையானுக்கும்
சமைத்ததோள்வலிதாங்கினராயினும்
அமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே. (கரு)

என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம்
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென்
முன்புபின்பின்றிமூவுலகத்தினும்
அன்பினல்லதோராக்கமுண்டாகுமோ. (கசு)

வையமன்னுயிராகவம்மன்னுயிர்
உய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கையமின்றியறங்கடவாதருள்
மெய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ. (கஎ)

இனியசொல்லினனீகையனெண்ணினன்
வினையன்றூயன்விழுமியன்வென்றியன்
நினையுநீதிநெறிகடவானெனில்
அனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ. (கஅ)

15. உமைக்குநாதன் - உருத்திரன். புள்ளூர்தி - திருமால். நாட்டமொரெட்டுடையான் - பிரமன்.

17. வாய்மையினும் வேள்விபெரிதன்றென்பார், "மெய்யினின்றபின் வேள்வியும் வேண்டுமோ' என்றார்.

சீலமல்லனநீக்கிச்செம்பொற்றுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகண்ணுமுண்டாகுமோ. (க௯)

ஓர்வினல்வினையூற்றத்திருநரை
பேர்விருல்விதிபெற்றுளதென்றரோ
தீர்விலன்புசெலுத்தலிற்செவ்வியோர்
ஆர்வமன்னவற்காயுதமாவதே. (உ௦)

தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வரும்
காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லைநரகமுமில்லையே. (உக)

ஏனைநீதியினையனவையகப்
போனகற்குவிளம்பிப்புலன்கொளீஇ
ஆனவன்றொடுமாயிரமௌலியான்
தானநண்ணினன்றத்துவநண்ணினான். (உஉ)

நண்ணிநாகணைவள்ளலைநான்மறைப்
புண்ணியப்புனலாட்டிப்புலமையோர்
எண்ணுநல்வினைமுற்றுவித்தேற்றினான்
வெண்ணிறத்ததருப்பைவிரித்தரோ. (உ௩)

வேறு.

ஏற்றிடவாண்டகையினிதிருந்துழி
நாற்றடமார்பனுநொய்தினெய்தப்போய்
ஆற்றல்சாலரசனுக்கறிவித்தானவன்
சாற்றுகநகரணிசமைக்கவென்றனன். (உச)

ஏவினவள்ளுவரிராமனையே
பூமகள்கொழுநனைப்புனையுமௌலியிக்
கோநகரணிகெனக்கொட்டும்பேரியத்
தேவருங்களிகொளத்திரிந்துசாற்றினார். (உ௫)

---

19. துலைத்தால் - துலைநா. 21. தூமகேது - உலகிற்குப்பின்வரும் தீங்கை முன்னறிவிக்கும்காலக்கோளாகிய உற்பாதக்குறி.

22. வையகப்போனகன் - உலகமுண்டபெருவாயனாகிய விஷ்ணு.

23. நாகணைவள்ளல் - சர்ப்பசயத்தையுடைய இராமமூர்த்தி.

25. பூமகள் கொழுநன் - நிலமடந்தைக் கிறையாகிய விஷ்ணு. கோநகரென்றார் - முத்திநகரமேழினுஞ் சிறந்தமைநோக்கி.

கலியமைகிர்த்தியக்காளைநாளையே
புலியமைமணிமுடிபுனையுமென்றசொல்
செவியமைநுகர்ச்சியவெனினுந்தேவர்தம்
அவியமுதன்னவந்நகருளார்க்கெலாம். (உசு)

ஆர்த்தனர்களித்தனராடிப்பாடினர்
வேர்த்தனர்தடித்தனர்சிலிர்த்துமெய்ம்மயிர்
போர்த்தனர்மன்னனைப்புகழ்ந்துவாழ்த்தினர்
தூர்த்தனர்நீணிதிசொல்லினார்க்கெலாம். (உஎ)

திணிசுடரிரவியைத்திருத்துமாறுமப்
பணியிடைப்பள்ளியான்பரந்தமார்பிடை
மணியினைவேகடம்வகுக்குமாறும்போல்
அணிநகரணிந்தனரருத்திமாக்களே. (உஅ)

வெள்ளியகரியனசெய்யவேறுள
கொள்ளைவான்கொடிநிரைக்குழாங்கடோன்றுவ
கள்ளவிழ்கோதையான்செல்வங்காணிய
புள்ளெலாந்திருநகர்புகுந்தபோன்றவே. (உகூ)

மங்கையர்குறங்கெனவகுத்தவாழைகள்
அங்கவர்கழுத்தெனக்கமுகுமாந்தன
தங்கொளிமுறுவலிற்றாமநான்றன
கொங்கையைநிகர்த்தனகனககும்பமே. (௩0)

முதிரொளியுயிர்த்தனமுடுகிக்காலையில்
கதிரவன்வேறொருருகவின்கொண்டானென
மதிதொடநிவந்தனமகரதோரணம்
புதியனவலர்ந்தனபுதவராசியே. (௩க)

துனியுறுசெம்மணித்தூணநீறுதோய்
வனிதைபோர்கூறினன்வடிவுகாட்டின
புனைதுகிலுறைதொறும்பொதிந்துதோன்றின
பனிபொதிகதிரெனப்பவளத்தூண்களே. (௩உ)

---

26. புகழ்என்றது உரை, பாட்டென்றிருவகைப்படுதலின் 'கவியமைகீர்த்தி, என்றார்.

31. புதவராசி - கதவின் கூட்டங்கள்.

முத்தினின்முழுநிலவெறிப்பமொய்ம்மணிப்
பத்தியினிளவெயில்பரப்பநீலத்தின்
றொத்தினமிருள்வரத்தூண்டச்சோதிட
வித்தகர்விரித்தநாளொத்தவீதியே. (௩௩)

ஆடன்மான்றேர்க்குழாமவனிகாணிய
வீடெனுமுலகின்வீழ்விமானம்போன்றன
ஓடைமாக்கடகளிறுதயமால்வரை
தேடருங்கதிரொடுந்திரிவபோன்றவே. (௩௪)

வளங்கெழுதிருநகர்வைகும்வைகலும்
பளிங்குடைநெடுஞ்சுவரடுத்தபத்தியில்
கிளர்ந்தெரிசுடர்மணியிருளைக்கீறலால்
வளர்ந்திலபிறிந்திலசெக்கர்வானமே. (௩௫)

பூமழைபுனன்மழைபுதுமென்சுண்ணத்தின்
தூமழைதரளத்தின்றூமில்வெண்மழை
தாமிழைநெறிதலிற்றகர்ந்தபொன்மழை
மாமழைநிகர்த்தனமாடவீதியே. (௩௬)

காரொடுதொடர்மதக்களிறுசென்றன
வாரொடுதொடர்கழன்மைந்தராமெனத்
தாரொடுநடந்தனபிடிகடாழ்கலைத்
தேரொடுநடக்குமத்தெரிவைமாரினே. (௩௭)

ஏய்ந்தெழுசெல்வமுமழகுமின்பமும்
தேய்ந்திலவனையதுதெரிகலாமையால்
ஆய்ந்தனர்பெருகவுமமரரிம்பரில்
போந்தவர்போந்திலமென்னும்புந்தியால். (௩௮)

அந்நகரணிவுறுமமலைவானவர்
பொன்னகரியல்பெனப்பொலியுமெல்லையில்
இன்னல்செயிராவணனிழைத்ததீமைபோல்
துன்னருங்கொடுமனக்கூனிதோன்றினாள். (௩௯)

தோன்றியகூனியுந்துடிக்குநெஞ்சினாள்
ஊன்றியவெகுளியாளுளைக்குமுள்ளத்தாள்

33. சந்திரன், சுக்கிரன், வெண்ணிறமுடைமையாலும், சூரியன், செவ்வாய், குரு, கேது செந்நிறமுடைமையாலும், புதன், சனி, இராகு கருநிறமுடைமையாலும் "சோதிடவித்தகர் விரித்தநாளொத்த" என்றார்.
37. கலையென்றது - மேகலையை; அதுமுதற்குறைபெற்றது.

கான்றெரிநயனத்தாள்கதிக்குஞ்சொல்லினாள்
மூன்றுலகினுக்குமோரிடுக்கண்மூட்டுவாள். (சo)

தொண்டைவாய்க்கேகயன்றோகைகோயின்மேல்
மண்டினாள்வெகுளியின்மடித்தவாயினாள்
பண்டைநாளிராகவன்பாணிவில்லுமிழ்
உண்டையுண்டதனைத்தன்னுள்ளத்துள்ளுவாள். (சக)

நாற்கடற்படுமணிநளினம்பூத்ததே தார்
பாற்கடற்படுதிரைபவளவல்லியே
போற்கடைக்கண்ணளிபொழியப்பொங்கணை
மேற்கிடந்தாடனைவிரைவினெய்தினாள். (சஉ)

எய்தியக்கேகயன்மடந்தையேடவிழ்
நொய்தலர்தாமரைநோற்றநோன்பினால்
செய்தபேருவமைசால்செம்பொற்சீறடி
கைகளிற்றீண்டினாள்காலக்கோளனாள். (சங)

தீண்டலுமுணர்ந்தவத்தெய்வக்கற்பினாள்
நீண்டகணனந்தருநீங்ககிற்றிலள்
மூண்டெழுபெரும்பழிமுடிக்கும்வெவ்வினை
தூண்டிடக்கட்டுரைசொல்லன்மேயினாள். (சச)

அணங்குவாள்விடவராவணுகுமெல்லையும்
குணங்கெடாதொளிவிரிகுளிர்வெண்டிங்கள்போல்
பிணங்குவான்பேரிடர்பிணிக்கநண்ணவும்
உணங்குவாயல்லைநீயுறங்குவாயென்றாள். (சரு)

வெவ்விடமனையவள்விளம்பவேற்கணாள்
தெவ்வடுசிலைக்கையென்சிறுவர்செவ்வியர்
அவ்வவர்துறைதொறுமறந்திறம்பலர்
எவ்விடரெனக்குவந்தடுப்பதீண்டென்றாள். (சசா)

பராவரும்புதல்வரைப்பயக்கயாவரும்
உராவருந்துயரைவிட்டுறுதிகாண்பரால்
விராவரும்புவிக்கெலாம்வேதமேயன
இராமனைப்பயந்தவெற்கிடருண்டோவென்றாள். (சஎ)

41. ராகவன் - ரகுமரபிற்பிறந்தவன்.

43. காலக்கோளனாள் - காலக்கோள் பின்னடக்குந் தீமையை முன்னுணர்த்தும் ஒரு தீக்கோளுக் கொப்பானகூனி.

ஆழ்ந்தபேரன்பினளனையகூறலும்
சூழ்ந்ததீவினைநிகர்கூனிசொல்லுவாள்
வீழ்ந்ததுநின்னலந்திருவும்வீந்தது
வாழ்ந்தனள்கோசலைமதியினாலென்றாள். (சஅ)

அன்னவளவ்வுரையுரைப்பவாயிழை
மன்னவர்மன்னனேற்கணவன்மைந்தனேல்
பன்னரும்பெரும்புகழ்ப்பரதன்பார்தனில்
என்னிதன்மேலவட்கெய்தும்வாழ்வென்றாள். (சகூ)

ஆடவர்நகையுறவாண்மைமாசுறத்
தாடகையெனும்பெயர்த்தையலாள்படக்
கோடியவரிசிலையிராமன்கோமுடி
சூடுவனாளைவாழ்விதெனச்சொல்லினாள். (ருO)

மாற்றமஃதுரைசெயமங்கையுள்ளமும்
ஆற்றல்சால்கோசலையறிவுமொத்தலால்
வேற்றுமையுற்றிலள்வீரன்றாதைபுக்
கேற்றவளிருதயத்திருக்கவேகொலாம். (ருக)

ஆயபேரன்பெனுமளக்கரார்த்தெழத்
தேய்விலாமுகமதிவிளங்கித்தேசுறத்
தூயவளுவகைபோய்மிகச்சுடர்க்கெலாம்
நாயகமனையதோர்மாலைநல்கினாள். (ருஉ)

தெழித்தனளுரப்பினள்சிறுக்கண்வெயுக
விழித்தனள்வைதனள்வெய்துயிர்த்தனள்
அழித்தனளழுதனளம்பொன்மாலையால்
குழித்தனணிலத்தையக்கொடியகூனியே. (ருங)

வேதனைக்கூனிபின்வெகுண்டுநோக்கியப்
பேதையைப்பித்திநிற்பிறந்தசேயொடும்
நீதுயர்படுகநானெடிதுன்மாற்றவள்
தாதியர்க்காட்செயத்தரிக்கிலேனென்றாள். (ருச)

சிவந்தவாய்ச்சீதையுங்கரியசெம்மலும்
நிவந்தவாசனத்தினிதிருப்பநின்மகன்
அவந்தனாய்வெறுநிலத்திருக்கலானபோ
துவந்தவாறென்னிதற்குறுதியாதென்றாள். (ருரு)

---

52. சுடர்க்கெலா நாயகம் - ஞாயிறு. 55. கரியசெம்மல் - ஸ்ரீராமன்.

மறந்திலள்கோசலையுறுதிமைந்தனும்
சிறந்தநற்றிருவினிற்றிருவுமெய்தினுன்
இறந்திலனிருந்தனனென்செய்தாற்றுவான்
பிறந்திலன்பரதனீபெற்றதாலென்ருள். (௫௬)

சரதமிப்புவியெலாந்தம்பியோடுமிவ்
வரதனேகாக்குமேல்வரம்பில்காலமும்
பரதனுமிளவலும்பதியினீங்கிப்போய்
விரதமாதவஞ்செயவிடுதனன்றென்ருள். (௫௭)

பண்ணுறுகடகரிப்பரதன்பார்மகள்
கண்ணுறுகவினராயினிதுகாத்தவம்
மண்ணுறுமுரசுடைமன்னர்மாலையில்
எண்ணுறப்பிறந்திலனிறத்தனன்றென்ருள். (௫௮)

பாக்கியம்புரிந்திலாப்பரதன்றன்னைப்பண்
டாக்கியபொலன்கழலரசனுணையால்
தேக்குயர்கல்லதர்கடிதுசேணிடைப்
போக்கியபொருளெனக்கின்றுபோந்ததால். (௫௯)

மந்தரைபின்னரும்வரைந்துகூறுவாள்
அந்தரந்தீர்ந்துலகளிக்குநீரினுல்
தந்தையுங்கொடியனற்ருயுந்தீயளால்
எந்தையேபரதனேயென்செய்வாயென்ருள். (௬௦)

அரசரிற்பிறந்துபின்னரசரில்வளர்ந்
தரைசரிற்புகுந்துபேரரசியானநீ
கரைசெயற்கருந்துயர்க்கடலில்வீழ்கின்ருய்
உரைசெயக்கேட்கிலையுணர்தியோவென்ருள். (௬௧)

கல்வியுமிளமையுங்கணக்கிலாற்றலும்
வில்வினையுரிமையுமழகும்வீரமும்
எல்லையில்குணங்களும்பரதற்கேயது
புல்விடையுகுத்தமுதேயும்போலென்ருள். (௬௨)

வேறு.

வாய்கயப்புறமந்தரைவழங்கியவெஞ்சொல்
காய்கனற்றலைநெய்சொரிந்தெனக்கதங்கனற்ற

59. அரசர்மாலையிற் பிறவாமையாற் 'பாக்கியம் புரிந்திலாப் பரதன்' என்ருர்.

கேகையர்க்கிறைதிருமகள்கிளரிளவரிகள்
தோய்கயற்கண்கள்சிவப்புறநோக்கினள்சொல்லும். (௬௩)

வெயின்முறைக்குலக்கதிரவன்முதலியமேலோர்
உயிர்முதற்பொருடிறம்பினுமுரைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையைமனுமுதன்மரபைச்
செயிருறப்புலச்சிந்தையாலென்சொனாய்தீயோய். (௬௪)

எனக்குநல்லையுமல்லைநீயென்மகன்பரதன்
தனக்குநல்லையுமல்லையத்தருமமேநோக்கில்
உனக்குநல்லையுமல்லைவந்தூழ்வினைதூண்ட
மனக்குநல்லனசொல்லினைமதியிலாமனத்தோய். (௬௫)

பிறந்திறந்துபோய்ப்பெறுவதுமிழப்பதும்புகழேல்
நிறந்திறம்பினுநியாயமேதிறம்பினுநெறியின்
திறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறம்பினும்வரன்முறைதிறம்புதல்வழக்கோ. (௬௬)

போதியென்னெதிர்நின்றுநின்புன்பொறிநாவைச்
சேதியாதிதுபொறுத்தனனென்புறஞ்சிலரறியின்
நீதியல்லவுநெறிமுறையல்லவுநினைந்தாய்
ஆதியாதலினறிவிலியடங்குதியென்றாள். (௬௭)

அஞ்சிமந்தரையகன்றிலளம்மொழிகேட்டும்
நஞ்சுதீர்க்கினுந்தீர்கிலாததுநவின்றென்னத்
தஞ்சமேயுனக்குறுபொருளுணர்த்துகைதவிரேன்
வஞ்சிபோலியென்றடியிசைவீழ்ந்துரைவழங்கும். (௬௮)

மூத்தவற்குரித்தரசெனுமுறைமையினுலகம்
காத்தமன்னனிவ்விளையனன்றேகடல்வண்ணன்
ஏத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றால்
மீத்தருஞ்செல்வம்பரதனைவிலக்குமாறெவனோ. (௬௯)

---

63. கண்சிவப்புறல் - சினக்குறிப்பு.

64. மயில்முறைகுலத்துரிமையாவது - மயில் தான் முதற்பொரித்தகுஞ்சுக்குச் சிறைமுளைத்தபின் இரண்டாவதற்குச்சிறை முளைப்பது, அதுபோல இராமனுக்குப் பட்டங்கட்டியபின் பரதனுக்கும் பட்டங்கட்டுதல் முறைமை யென்பதாம்.

69. ஏத்து நீண்முடியென்றார் - மனுத்தொடக்கமானவர் புனைந்தமுடி யாதலின், மீத்தருஞ் செல்வம் - பெருமிதந்தருஞ் செல்வம்.

அறனிரம்பியவருளுடையருந்தவர்க்கேனும்
பெறலருந்திருப்பெற்றபின்சிந்தனைபிறிதாம்
மறநினைந்துமைவிலிகிலராயினுமனத்தால்
இறலுறும்படியியற்றுவரிடையறுவின்னல். (௭0)

புரியுந்தன்மகனரசெனிற்பூதலமெல்லாம்
விரியுஞ்சிந்தனைக்கோசலைக்குடைமையாமென்றால்
பரியுநின்குலப்புதல்வற்குமுனக்குமிப்பார்மேல்
உரியதென்னவளுதவியதொருபொருளல்லால். (௭௧)

தூண்டுமின்னலும்வறுமையுந்தொடர்தரத்துயரால்
ஈண்டுவந்துனையிரந்தவர்க்கிருநிதியவளை
வேண்டியீதியோவெள்குதியோவிம்மனையால்
மாண்டுபோதியோமறுத்தியோவெங்ஙனம்வாழ்தி. (௭௨)

சிந்தைசெய்கையிற்றிகைத்தனையினிச்சிலநாளில்
தந்தமின்மையுமெளிமையுநிற்கொண்டுதவிர்க்க
உந்தையுன்னையுன்கிளைஞர்மற்றுன்குலத்துள்ளோர்
வந்துகாண்பதுன்மாற்றவள்செல்வமோமதியாய். (௭௩)

காதலுன்பெருங்கணவனையஞ்சியக்கனிவாய்ச்
சீதைதந்தையுன்றாதையைத்தெறுகிலனிராமன்
மாதுலனவனுந்தைக்குவாழ்வினியுண்டோ
பேதையுன்றுணையாருளர்பழிபடப்பிறந்தார் (௭௪)

மற்றுநுந்தைக்குவான்பகைபெரிதுளமறத்தார்
செற்றபோதிவர்சென்றுதவாரெனிற்செருவில்
கொற்றமென்பதொன்றெவ்வழியுண்டதுகூறாய்
சுற்றமுங்கெடச்சுடுதுயர்க்கடல்விழத்துணிந்தாய். (௭௫)

கெடுத்தொழிந்தனையுனக்கரும்புதல்வனைக்கிளர்நீர்
உடுத்தபாரகமுடையவனொருமகற்கெனவே
கொடுத்தபோரரசவன்குலக்கோமைந்தர்தமக்கும்
அடுத்ததம்பிக்குமாம்பிறர்க்காகுமோவென்றாள். (௭௬)

தீயமந்தரையவ்வுரைசெப்பலுந்தேவி
தூயசிந்தையுந்திரிந்ததுசூழ்ச்சியினிமையோர்

---

71. தன்மகன் - ஸ்ரீராமன், நின்குலப்புதல்வன் - பரதன்.
74. இராமன் மாதுலன் - சனகன்,

மாயையும்மவர்பெற்றநல்வரமுண்மையாலும்
ஆயவந்தணரியற்றியவருந்தவத்தாலும். (௭௭)

அரக்கர்பாவமுமல்லவரியற்றியவறமும்
துரக்கநல்லருடுறந்தனடுய்மொழிமடமான்
இரக்கமின்மையன்றோவின்றிவ்வுலகங்களிராமன்
பரக்குந்தொல்புகழமுதினைப்பருகுகின்றதுவே. (௭௮)

அனையதன்மையளாகியகைகயனன்னம்
வினைநிரம்பியகூனியைவிரும்பினணோக்கி
எனையுவந்தனையினியையென்மகனுக்குமனையான்
புனையுநீண்முடிபெறும்படிபுகலுதியென்றாள். (௭௯)

மாழையுண்கணியுரைசெயக்கேட்டமந்தரையென்
தோழிவல்லளென்றுணைவல்லளென்றடிதொழுதாள்
தாழுமன்னிலையென்னுரைதலைநிற்பினுலகம்
ஏழுமேழுமுன்னொருமகற்காக்குவெனென்றாள். (௮௦)

நாடியொன்றுனக்குரைசெய்வெனளிர்மணிநகையாய்
தோடிவர்ந்ததார்ச்சம்பரன்றொலைவுற்றவேலை
ஆடல்வென்றியானருளியவரமவையிரண்டும்
கோடியென்றனளுள்ளமுங்கோடியகொடியாள். (௮௧)

இருவரத்தினிலொன்றினாலரசுகொண்டிராமன்
பெருவனத்திடையேழிருபருவங்கள்பெயர்ந்து
திரிதரச்செய்தியொன்றினாற்செழுநிலமெல்லாம்
ஒருவழிப்படுமுன்மகற்குபாயமிதென்றாள். (௮௨)

உரைத்தகூனியையுவந்தனளுயிருறத்தழுவி
நிரைத்தமாமணியாரமுநிதியமுநீட்டி
இரைத்தவேலைசூழுலகமென்னொருமகற்கீந்தாய்
தரைக்குநாயகன்றாயினிநீயெனத்தணியா. (௮௩)

நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டல்
துன்றுகானத்திலிராமனைத்துரத்தலிவ்விரண்டும்
அன்றதாமெனிலரசன்முன்னாருயிர்துறந்து
பொன்றிநீங்குதல்புரிவென்யான்போதிநீயென்றாள். (௮௪)

---

80. உண்கண் - மையுண்டகண், இதனை "இருநோக்கிவளுண்கண்" என்புழிப் பரிமேலழகர் கூறலானுமறிக.

82. எழிருபருவங்கள் - பதினான்காண்டு,

கூனிபோனபின்குலமலர்க்குப்பைநின்றிழிந்தாள்
சோனைவார்குழற்கற்றையிற்சொருகியமாலை
வானவார்மழைநுழைதருமதிபிதிர்ப்பாள்போல்
தேனவாவுறுவண்டினமலமரச்சிதைத்தாள். (அரு)

விளையுந்தன்புகழ்வல்லியைவேரறுத்தென்னக்
கிளைகொண்மேகலைசிந்தினள்கிங்கிணியோடும்
வளைதுறந்தனண்மதியினின்மறுத்துடைப்பாள்போல்
அளகவாணுதலரும்பெறற்றிலதமுமழித்தாள். (அசா)

தாவின்மாமணிக்கலன்மற்றுந்தனித்தனிச்சிதறி
நாவிநன்குழனிலந்தைவரப்பரப்பிக்
காவியுண்கண்களஞ்சனங்கான்றிடக்கலுழாப்
பூவுதிர்ந்ததோர்கொம்பெனப்புவிமிசைப்புரண்டாள். (அஎ)

நவ்விவீழ்ந்தெனநாடகமயிறுயின்றென்னக்
கவ்வைகூர்தரச்சனகியாங்கடிகமழ்கமலத்
தவ்வைநீங்குமென்றயோத்திவந்தடைந்ததம்மடந்தை
தவ்வையாமெனக்கிடந்தனள்கைகயன்றனயை. (அஅ)

ஆ_ திருவிருத்தம் - கஅரு.

---

## ௩-வது, கைகேசிசூழ்வினைப்படலம்.

நாழிகைகங்குலினள்ளடைந்தபின்றை
யாழிசையஞ்சியவஞ்சொலேழைகோயில்
வாழியவென்றயின்மன்னர்துன்னவந்தான்
ஆழிநெடுங்கைமடங்கலாளியன்னான். (க)

வாயிலின்மன்னர்வணங்கிநிற்பவந்தாங்
கேயினசெய்யுமடந்தைமாரொடேகிப்
பாயறுறந்தபடைத்தடங்கண்மென்றோள்
ஆயிழைதன்னையடைந்தவாழிமன்னன். (உ)

அடைந்தவனோக்கியரந்தையென்கொல்வந்து
தொடர்ந்ததெனத்துயர்கொண்டுசோருநெஞ்சன்

---

88. சனகி - னகன்புத்திரி சானகி, இது தத்திதாந்தபதம்.

மடந்தையைமானையெடுக்குமானையேபோல்
தடங்கைகள்கொண்டுதழீஇயெடுக்கலுற்றான். (௩)

நின்றுதொடர்ந்தநெடுங்கைதம்மைநீக்கி
மின்றுவள்கின்றதுபோலமண்ணில்வீழ்ந்தாள்
ஒன்றுமியம்பலணீடுயிர்க்கலுற்றாள்
மன்றலருந்தொடைமன்னனாவியன்னாள். (௪)

அன்னதுகண்டவலங்கன்மன்னனஞ்சி
என்னைநிகழ்ந்ததிஞ்ஞாலமேழில்வாழ்வார்
உன்னையிகழ்ந்தவர்மாள்வருற்றதெல்லாம்
சொன்னபினென்செயல்காண்டிசொல்லிடென்றான். (௫)

வண்டுளர்தாரவன்வாய்மைகேட்டமங்கை
கொண்டனெடுங்கணிணலிகொங்கைகோப்ப
உண்டுகொலாமருளென்கணுன்கணுக்கில்
பண்டையவின்றுபரிந்தளித்தியென்றாள். (௬)

கள்ளவிழ்கோதைகருத்துணர்ந்தமன்னன்
வெள்ளநெடுஞ்சுடர்மின்னின்மின்னநக்கான்
உள்ளமுவந்துளசெய்வனென்றும்லோபேன்
வள்ளலிராமனுன்மைந்தனாணையென்றான். (௭)

ஆன்றவனவ்வுரைகூறவையமில்லாள்
தோன்றியபேரவலந்துடைத்ததுண்டேல்
சான்றிமையோர்குலமாகமுன்னீதருதற்
கேன்றவரங்களிரண்டுமீதியென்றாள். (௮)

வரங்கொளவித்துணைமன்னுமல்லலெய்தி
இரங்கிடல்வேண்டுவதீவனேகொளென்பால்
பரங்கெடவிப்பொழுதேபகர்ந்திடென்றான்
உரங்கொண்மனத்தவள்வஞ்சமோர்கிலாதான். (௯)

ஏயவரங்களிரண்டினொன்றினாலென்
சேயரசாள்வதுசீதைகேள்வனொன்றால்

---

6. பண்டையவின்றுபரிந்தளித்தியென்றாள் - சம்பரனைத்தடிந்த ஞான்றுபெற்றவரங்களை யிப்போது அன்புகூர்ந்தளிப்பாயென்றாள்.

7. வள்ளல் - வரையாதுகொடுப்பவன்.

8. ஆன்றவனென்றது - அகன்றவனென்பதன் மரூஉ.

9. உரங்கொண்மனத்தவள் - பிடிவாதமுடையவள்.

போய்வனமாள்வதெனப் புகன்று நின்றாள்
தீயவையாவையினுஞ் சிறந்த தீயாள். (கo)

நாகமெனுங் கொடியாடன் வாயினீந்த
சோகவிடந் தொடரத் துணுக்க மெய்தா
ஆகமடங்கலும் வெந்தழிந்த ராவின்
வேகமடங்கிய வேழமென்ன வீழ்ந்தான். (கக)

பூதலமுற்ற தனிற் புரண்ட மன்னன்
மாதுயரத் தினையாவர் சொல்ல வல்லார்
வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன்
ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான். (கஉ)

உலர்ந்தது நாவுயிரோடலுற்ற துள்ளம்
புலர்ந்தது கண்கள் பொடித்த பொங்கு சோரி
சலந்தலை மிக்கது தக்கதென் கொலென்றென்
றலந்தலையுற்றவ ரும்புலன்களைந்தும். (கங)

மேவி நிலத்தி லிருக்கு நிற்கும் வீழும்
ஓவிய மொப்ப வுயிர்ப்படங்கியோயும்
பாவியை யுற்றெதிர் பற்றியெற்ற வெண்ணும்
ஆவி பதைப்ப வலக்கணெய்துகின்றான். (கச)

பெண்ணெனவுற்ற பெரும் பழிக்கு நாணும்
உண்ணிறை வெப்பொடுயிர்த்துயிர்த்துலாவும்
கண்ணினிலேக்கு மயர்க்கு மிக்க கைவேல்
புண்ணுழை தக்கவுழைக்கு மானை போல்வான். (கரு)

கம்ப நெடுங்களியானையன்ன மன்னன்
வெம்பி விழுந்தெழும் விம்மல் கண்டு வெய்துற்
றும்பர் நடுங்கின ரூழிபேர்வதொத்த
தம்பன கண்ணவளுள்ள மன்னதேயால். (கசு)

அஞ்சலளையன தல்லல் கண்டு முள்ளம்
நஞ்சிலணையில ளென்ன நாணமாமால்
வஞ்சனை பண்டு மடந்தை வேடமென்றே
தஞ்செனமா தரையுள்ள லார்கடக்கோர். (கஎ)

---

11. நாகமெனுங் கொடியாளென்றார் - தன்னைப் பாலூட்டி வளர்த்தானையே தீண்டலின்.

இந்நிலைநின்றவடன்னையெய்தநோக்கி
நெய்ந்நிலைவேலவனீதிசைத்ததுண்டோ
பொய்ந்நிலையோர்கள்புணர்த்தவஞ்சமுண்டோ
அந்நிலைசொல்லெனதாயையுண்மையென்றான். (௧௮)

இசைத்ததுமில்லையெனக்குவந்துதீயோர்
இசைத்ததுமில்லைமுனீந்தவிவ்வரங்கள்
குசைப்பரியோய்தரினின்றுகொள்வனென்றேல்
வசைத்திறநின்வயின்வைத்துமாள்வனென்றாள். (௧௯)

இந்தநெடுஞ்சொலவ்வேலைகூறுமுன்னே
வெந்தகொடும்புணில்வேலுழைந்ததொப்பச்
சிந்தைதிரிந்துதிகைத்தயர்ந்துவீழ்ந்தான்
மைந்தனலாதுயிர்வேறிலாதமன்னன். (௨0)

ஆகொடியாயெனுமாவிகாலுமந்தோ
ஓகொடிதேயறமென்னுமுண்மையொன்றும்
சாகவெறுவெழுமெய்தளாடிவீழும்
மாகமுநாகமுமண்ணும்வென்றவாளான். (௨௧)

நாரியரில்லையிஞ்ஞாலமேழுமென்னக்
கூரியவாள்கொடுகொன்றுநீக்கியானும்
பூரியரெண்ணிடைவீழ்வனென்றுபொங்கும்
வீரியர்வீரம்விழுங்கிநின்றவேலான். (௨௨)

கையொடுகையைப்புடைக்கும்வாய்கடிக்கும்
பொய்யுரைகுற்றமெனப்புழுங்கிவாடும்
நெய்யெரியுற்றெனநெஞ்சழிந்துசோரும்
வையகமுற்றுநடந்தவாய்மைமன்னன். (௨௩)

ஒறுப்பினுமந்தரமுண்மையொன்றுமோவா
மறுப்பினுமந்தரமென்றுவாய்மைமன்னன்

---

20. சீராமனைத் தன்னுயிராகக் கருதுபவனாதலின் "மைந்தனலாதுயிர் வேறிலாதமன்னன்" என்றார்.

21. மண்ணுலகமும் விண்ணுலகமும் பாதலமும் வாளால்வெற்றிகொண்டவனாதலின் தயாதனை "மாகமுநாகமு மண்ணும் வென்றவாளான்" என்றார்.

22. "வீரியர்வீரம் விழுங்குகின்றவேலான்" வீரர்களுடைய வீரத்தை விழுங்கி மேம்பட்டுநின்ற வேலையேந்திய அரசன்.

23. வையகமுற்றி நடந்தவாய்மை - மன்னன்நிலவுலகமுழுதும் சென்று பரந்த உண்மையைப்பூண்ட அரசன்.

பொறுப்பினுமிங்கிலைபோகிலாளைவாளால்
இறுப்பினுமாவதிரப்பதென்றெழுந்தான். (௨௪)

வேறு.

கோன்மேற்கொண்டுங்குற்றமகற்றிக்குறிகொண்டார்
போன்மேலுற்றதுண்டெனினன்றாம்பொறையென்னாக்
கான்மேல்வீழ்ந்தான்கந்துகொல்யானைக்களிமன்னர்
மேன்மேல்வந்துமுந்திவணங்கிமிடைதாளான். (௨௫)

கொள்ளானின்சேயிவ்வரசன்னான்கொண்டாலும்
நள்ளாதிந்தநாணிலஞாலந்தனிலென்றும்
உள்ளாரெல்லாமோதவுவக்கும்புகழ்கொள்ளாய்
எள்ளாநிற்கும்வன்பழிகொண்டென்பயனென்றான். (௨௬)

வானோர்கொள்ளார்மண்ணவருய்யாரினிமற்றென்
ஏனோர்செய்கையாரொடுநீயிவ்வரசாள்வாய்
யானேசொல்லக்கொள்ளவிசைந்தான்முறையாலே
தானேநல்குமுன்மகனுக்குந்தரையென்றான். (௨௭)

கண்ணேவேண்டுமென்னினுமீயக்கடவேனென்
உண்ணேராவிவேண்டினுமின்றேயுனதன்றோ
பெண்ணேவண்மைக்கைகயன்மானேபெறுவாயேல்
மண்ணேகொண்ணீமற்றையதொன்றுமறவென்றான். (௨௮)

வாய்தந்தேனென்றேனினியானோவதுமாற்றேன்
நோய்தந்தென்னைநோவனசெய்துநவலாதே
தாய்தந்தென்னத்தன்னையிரந்தாற்றழல்வெங்கட்
பேய்தந்தீயுநீதுதந்தாற்பிழையாமோ. (௨௯)

இன்னேயின்னேபன்னியிரந்தானிகல்வேந்தன்
தன்னேரில்லாத்தீயவளுள்ளந்தடுமாறாள்
முன்னேதந்தாயிவ்வரநல்காய்முனிவாயேல்
என்னேமன்னாபாருளர்வாய்மைக்கினியென்றாள். (௩௦)

அச்சொற்கேளாவாவிபுழுங்காவயர்கின்றான்
பொய்ச்சொற்கேளாவாய்மொழிமன்னன்பொறைகூர
நச்சுத்தீயேபெண்ணுருவன்றோவெனநாணு
முச்சத்தார்போற்பின்னுமிரந்தேமொழிகின்றான். (௩௧)

---

29. தந்தையென்றது - தந்தென்ன நின்றது தொகுத்தல்விகாரம்.
31. முச்சத்தார்போல் - மனமடங்கிய பெரியோரைப்போல,

நின்மகனாள்வானீயினி தாள்வாய்நிலமெல்லாம்
உன்வயமாமேயாளுதி தந்தேனுரைகுன்றேன்
என்மகனென்கண்ணென்னுயிரெல்லாவுயிர்கட்கும்
நன்மகனிந்தநாடிறவாமைநயவென்றான். (௩௨)

மெய்யேயென்றன்வேரறநாறும்வினைநோக்கி
மையாநின்றேனுவுமுலர்ந்தேனளினம்போல்
கையாநின்றென்கண்ணெதிர்நின்றுங்கழிவானேல்
உய்யேனங்காயுன்னபயம்மென்னுயிரென்றான். (௩௩)

இரந்தான்சொல்லுமின்னுரைகொள்ளாண்முனிவெஞ்சாள்
மரந்தானென்னுநெஞ்சினளுள்வசைபாராள்
சரந்தாவில்லாய்தந்தவரத்தைத்தவிர்கென்றல்
உரந்தானல்லானல்லறமோமோவுரையென்றாள். (௩௪)

கொடியாளின்னகூறினள்கூறக்குலவேந்தன்
முடிசூடாமற்காத்தலுமொய்கானிடைமெய்யே
நெடியானீங்கநீங்குமென்னுவியினியென்னு
இடியேறுண்டமால்வரைபோன்மண்ணிடைவீழ்ந்தான். (௩௫)

வீழ்ந்தான்வீழாவெந்துயரத்தின்கடல்வெள்ளத்
தாழ்ந்தானுழாவக்கடலுக்கோர்கரைகாணான்
சூழ்ந்தாடன்பஞ்சொற்கொடியாள்சொற்கொடுநெஞ்சம்
போழ்ந்தானுள்ளப்புன்மையைநோக்கிப்புலர்கின்றாள். (௩௬)

ஒன்றாநின்றவாருயிரோடுமுயிர்கேள்வர்
பொன்றாமுன்னம்பொன்றினரென்னும்புகழல்லால்
இன்றோர்காறுமெல்வளையார்தம்மிறையோரைக்
கொன்றாரில்லைக்கொல்லுதியோநீகொடியாளே. (௩௭)

ஏவம்பாராயினமுறைநோக்காயறமெண்ணாய்
ஆவென்பாயோவல்லைமனத்தாலருள்கொன்றாய்
நாவம்பாலென்னாருயிருண்டாயினிஞாலம்
பாவம்பாராதின்னுயிர்கொள்ளப்படுகின்றாய். (௩௮)

ஏண்பாலோவாநாண்மடமச்சமிவையேதம்
பூண்பாலாகக்காண்பவர்நல்லார்புகழ்பேணி

34. வாளிகளைவிடுகின்ற வில்லையுடையா யென்பார். சரந்தாவில்லாய்- அம்புதாவும் வில்லையேந்திய அரசனே.

37. இன்றோர்காறும் - இற்றைவரையும்.

நாண்பாலோராநங்கையர் தம்பானனுகாரே
ஆண்பாலாராபெண்பாலாரோடடைவம்மா. (௩௯)

மண்ணாள்கின்றாராகிலதந்தான்மதியால்வைத்
தெண்ணாநின்றார்யாரையுமெல்லாவிகலாலும்
விண்ணோர்காறும்வென்றவெனக்கென்மனைவாழும்
பெண்ணால்வந்ததந்தரமென்னப்பெறுவேனோ. (௪௦)

என்றென்றுன்னும்பன்னியிரக்குமிடர்தோயும்
ஒன்றொன்றொவ்வாவின்னலுழக்குமுயிருண்டோ
இன்றின்றென்னும்வண்ணமயங்குமிடியும்பொன்
குன்றொன்றொன்றோடொன்றியதென்னக்குவிதோளான். (௪௧)

ஆழிப்பொற்றேர்மன்னவனிவ்வாறயர்வெய்திப்
பூழிப்பொற்றோண்முற்றுமடங்கப்புரள்போழ்தில்
ஊழிற்பொய்த்தாலுன்னுரையின்றேயுயிர்மாய்வென்
பாழிப்பொற்றார்மன்னவவென்றாள்பசையற்றாள். (௪௨)

அரிந்தான்முன்னோர்மன்னவனன்றேயருமேனி
வரிந்தார்வில்லாய்வாய்மைவளர்ப்பான்வரநல்கிப்
பரிந்தாலென்னாமென்றனள்பாயுங்கனலேபோல்
எரிந்தாறாதேயின்னுயிருண்ணுமெரியன்னாள். (௪௩)

வீய்ந்தாளேயிவ்வெய்யவளென்னாவிடல்வேந்தன்
ஈந்தேனீந்தேனிவ்வரமென்சேய்வனமாள
மாய்ந்தேநான்போய்வானுலகாள்வென்வசைவெள்ளம்
நீந்தாய்நீந்தாய்நின்மகனோடுநெடிதென்றான். (௪௪)

கூறாமுன்னங்கூறுபடுக்குங்கொலைவாளின்
வேறாமென்னும்வன்றுயராகத்திடைமூழ்கத்
தேறாதாகிச்செய்கைமறந்தான்செயன்முற்றி
ஊறாநின்றசிந்தையினாளுந்துயில்வுற்றாள். (௪௫)

வேறு.

சேணுலாவியநாளெலாமுயிரொன்றுபோல்வனசெய்துபின்
ஏணுலாவியதோளினானிடரெய்தவொன்றுமிரங்கிலா

---

43. அரிந்தான் முன்னோர் மன்னவன் சிபியரசன், 'இதனைபறவைக்கு மாறாகவழங்கினனால்' என இவ்வாசிரியர் முற்கூறலானும் என்பு முரியர்பிறர்க்கு, என்புழிப்பரிமேலழகர் கூறலானுமுணர்க.

46. சேணுலாவிய நாளெலா முயிரொன்றுபோல்வனயங்களைச் செய்து,

வாணிலாநகைமாதரார்செயல்கண்டுமைந்தர்முனிற்கவும்
நாணினாலெனவேகினாளளிர்கங்குலாகியநங்கையே. (௪௬)

எண்டருங்கடைசென்றயாமமியம்புகின்றனவேழையால்
வண்டுதங்கியதொங்கன்மார்பன்மயங்கிவிம்மியவாறெலாம்
கண்டுநெஞ்சுகலங்கியஞ்சிறையானகாமர்துணைக்கரம்
கொண்டுதம்வயிறெற்றியெற்றிவிளிப்பபோன்றனகோழியே. (௪௭)

தோய்கயத்துமரத்துமென்சிறைதுள்ளிமீதெழுபுள்ளெலாம்
தேய்கையொத்தமருங்குன்மாதர்சிலம்பினின்றுசிலம்புவ
கேகயத்தரசன்பயந்தவிடத்தையின்னதொர்கேடுசூழ்
மாகயத்தியைபுட்கொதித்துமனத்துவைவனபோன்றவே. (௪௮)

சேமமென்பனபற்றியன்புதிருந்தவின்றுயில்செய்தபின்
வாமமேகலைமங்கையோடுவனத்துள்யாருமறக்கிலா
நாமநம்பிநடக்குமென்றுநடுங்குகின்றமனத்தவாய்
யாமுமிம்மணிறத்துமென்பனபோலெழுந்தனயானையே. (௪௯)

சிரித்தபங்கயமொத்தசெங்கணிராமனைத்திருமாலையக்
கரிக்கரம்பொருகைத்தலத்துயர்காப்புநாணணிதற்குமுன்
வரித்ததண்கதிர்முத்ததாகியிம்மண்ணனைத்துநிழற்றமேல்
விரித்தபந்தர்பிரித்ததாமெனமீனொளித்தனவானமே. (௫௦)

நாமவிற்கையிராமனைத்தொழுநாளடைந்தநமக்கெலாம்
காமவிற்குடைகங்குன்மாலைகழிந்ததென்பதுகற்பியாத்
தாமொலித்தனபேரியவ்வொலிசாரன்மாரிதழங்கலான்
மாமயிற்குலமென்னமுன்னமலர்ந்தெழுந்தனர்மாதரே. (௫௧)

இனமலர்க்குலம்வாய்விரித்திளவாசமாருதம்வீசமுன்
புனைதுகிற்கலைசோரநெஞ்சுபுழுங்கினார்சிலபூவைமார்
மனமனுக்கம்விடத்தனித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன்
கனவினுக்கிடையூறடுக்கமயங்கினார்சிலகன்னிமார். (௫௨)

---

47. பகலுமிரவுமாமெண்யாமத்துக்கடையாகலின் 'எண்டருங்கடைசென்றயாம' மென்றார்.

48. அரசனுக்குயிரைநீக்கவரங்கோடலின் 'கேகயத்தரசன்பயந்தவிடத்தை' என்றார்.

50. மலர்ந்ததாமரை மலரையொத்தமையின் 'செங்கணிராம' னென்றார்.

51. யாவருக்கு மச்சம் விளைக்கும் வில்லாகலின் 'நாமவில்' என்றார், அது கோதண்டத்தை.

சீர்படங்கநலங்கலந்து தயங்கு தன்குலநன்மையும்
போயடங்கநெடுங்கொடும்பழிகொண்டரும்புகழ்சிந்துமத்
தீயடங்கியசிந்தையாள்செயல்கண்டுசீரியநங்கைமார்
வாயடங்கினவென்னவந்துகுவிந்தவண்குமுதங்களே. (௫௩)

மொய்யராகநிரம்பவாசைமுருங்குதீயின்முழங்கமேல்
வையராயியமாரன்வாளியும்வானிலாநெடுவாடையும்
மெய்யராவிடவாவிசோரவெதும்புமாதர்தமின்செவிப்
பையராநுழைகின்றபோன்றனபண்கனிந்தெழுபாடலே. (௫௪)

ஆழியான்முடிசூடுநாளிடையானபாவியிதோரிரா
ஊழியாயினவாறெனாவுயர்போதின்மேலுறைபேதையும்
ஏழுலோகமுமெண்டவஞ்செய்தகண்ணுமெங்கண்மனங்களும்
வாழுநாளிதெனாவெழுந்தனர்மஞ்சுதோய்புயமஞ்சரே. (௫௫)

ஐயுறுஞ்சுடர்மேனியானெழில்காணமூளுமவாவினால்
கொய்யுறுங்குலமாமலர்க்குவைநின்றெழுந்தனர்கூர்மைகூர்
நெய்யுறுஞ்சுடர்வேனெடுங்கண்முகிழ்த்துநெஞ்சினினைப்பொடும்
பொய்யுறங்குமடந்தைமார்குழல்வண்டுபொம்மெனவிம்மவே. (௫௬)

ஆடகந்தருபூண்முயங்கிடவஞ்சியஞ்சியனந்தரால்
ஏடகம்பொதிதார்பொருந்திடயாமபேரியிசைத்தலால்
சேடகம்புனைகோதைமங்கையர்சிந்தையிற்செறிதிண்மையால்
ஊடல்கண்டவர்கூடல்கண்டிலர்நையுமைந்தர்களுய்யவே. (௫௭)

தழையொலித்தனவண்டொலித்தனதாரொலித்தனபேரியாம்
முழவொலித்தனதேரொலித்தனமுத்தொலித்தெழுமல்குலார்
இழையொலித்தனபுள்ளொலித்தனயாழொலித்தனவெங்கணும்
மழையொலித்தனபோல்கலித்தமனத்தின்முந்துறுவாசியே. (௫௮)

வையமேழுமொரேழுமாருயிரோடுகூடவழங்குமம்
மெய்யன்வீரருள்வீரன்மாமகன்மேல்விளைந்ததொர்காதலால்
நையநையநலம்புலன்களவிந்தடங்கிநடுங்குவான்
தெய்வமேனிபடைத்தசேயொளிபோன்மழுங்கினதீபமே. (௫௯)

---

53. சாயனமேன்மை என்புழிச்சாயல் கடைக்குறைந்தது.

54. மாதர்மயலாற் பண்கனிந்தெழுபாடல் இன்செவிப்பையராநுழைகின்ற போன்றன என்றுவமைகூறினர்.

55. உயர்போதின் மேலுறைபேதை - மணமிக்க தாமரைமேல் வசிக்குமிலக்குமி. மைந்தர் - மஞ்சர் மரூஉ.

வங்கியம்பலதேன்விளம்பினவாணிமுந்தினபாணியின்
பங்கியம்பரமெங்கும்விம்மினபம்பைபம்பினபல்வகைப்
பொங்கியம்பலவுங்கறங்கினநூபுரங்கள்புலம்பவெண்
சங்கியம்பினகொம்பலம்பினசாமகீதநிரம்பவே. (௬0)

தூபமுற்றியகாரிருட்பகைதுள்ளியோடிடவுள்ளெழும்
தீபமுற்றவுநீர்த்தகன்றனசெயதாருயிர்தேய்தலால்
பாபமுற்றியபேதைசெய்தபகைத்திறத்தினில்வெய்யவன்
கோபமுற்றிமிகச்சிவந்தனனொத்தனன்குணக்குன்றிலே. (௬௧)

மூவராய்முதலாகிமூலமதாகிஞாலமுமாகியத்
தேவதேவர்பிடித்தபோர்விலொடித்தசேவகர்சேணிலங்
காவன்மாமுடிசூடுபேரெழில்காணலாமெனுமாசைகூர்
பாவைமார்முகமென்னமுன்னமலர்ந்தபங்கயராசியே. (௬௨)

இன்னவேலையினேழுவேலையுமொத்தபோலவிரைத்தெழுந்
தன்னமாநகர்மைந்தன்மாமுடிசூடும்வைகலிதாமெனுத்
துன்னுகாதலுரைப்பவந்தமைசொல்லலாம்வகையெம்மனோர்க்
குன்னலாவனவல்லவென்னினுமுற்றபெற்றியுணர்த்துவாம். (௬௩)

வேறு.

குஞ்சரமனையார்சிந்தைகொளிளையார்
பஞ்சினையணிவார்பால்வளைதெரிவார்
அஞ்சனமெனவாளம்புகளிடையே
நஞ்சினையிடுவார்நாண்மலர்புனைவார். (௬௪)

வேறு.

பொங்கியவுவகைவெள்ளம்பொழிதரக்கமலம்பூத்த
சங்கையின்முகத்தார்நம்பிதம்பியரனையரானார்
செங்கயனறவமாந்திக்களித்தெனச்சிவக்குங்கண்ணார்
குங்குமச்சுவடுநீங்காக்குவவுத்தோட்குமரரெல்லாம். (௬௫)

மாதர்கள்கற்பின்மிக்கார்கோசலைமனத்தையொத்தார்
வேதியர்வசிட்டனொத்தார்வேறுளமகளிரெல்லாம்
சீதையையொத்தாரன்னடிருவினையொத்தாளவ்வூர்
சாதுகைமாந்தரெல்லாந்தயரதன்றன்னையொத்தார். (௬௬)

இமிழ்திரைப்பரவைஞாலமெங்கணும்வறுமைகூர
உமிழ்வதொத்துதவுகாதலுந்திடவந்ததன்றே

62. தேவதேவர் - தேவர்களுக்குத் தேவனுயுள்ள உருத்திரமூர்த்தி.

குமிழ்முலைச்சினைதகொண்கன்கோமுடிபுனைதல்காண்பான்
அமிழ்துணக்குழுவுகின்றவமரரினரசவெள்ளம். (௬௭)

பாகியல்பவளச்செவ்வாய்ப்பணைமுலைப்பரவையல்குல்
தோகையர்குழாமுமைந்தர்சும்மையுந்துவன்றியெங்கும்
ஏகுமினேகுமென்றென்றிடையிடைநிற்றலல்லால்
போகிலமீளகில்லாபொன்னகர்வீதியெல்லாம். (௬௮)

வேந்தரேபெரிதென்பாரும்வீரரேபெரிதென்பாரும்
மாந்தரேபெரிதென்பாருமகளிரேபெரிதென்பாரும்
போந்ததேபெரிதென்பாரும்புகுவதேபெரிதென்பாரும்
தேர்ந்ததேதேரினல்லால்யாவரேதெரியக்கண்டார். (௬௯)

குவளையினெழிலும்வேலின்கொடுமையுங்குழைத்துக்கூட்டித்
திவளுமஞ்சனமென்றேய்ந்தநஞ்சினைத்தெரியதீட்டித்
தவளவொண்மதியுள்வைத்ததன்மைசாறடங்கணல்லார்
துவளுநுண்ணிடையாராடுந்தோகையங்குழாத்திற்றெருக்கார். (௭௦)

நலங்கிளர்பூமியென்னுநங்கையைநறுந்துழாயின்
அலங்கலான்புணருஞ்செல்வங்காணவந்தடைந்திலாதார்
இலங்கையினிருதரேயிவ்வேழுலகத்துவாழும்
விலங்கலுமாசைநின்றவிடாமதவிலங்கலேயால். (௭௧)

சந்திரர்கோடியென்னத்தரளவெண்கவிகையோங்க
அந்தரத்தன்னமெல்லாமார்ந்தெனக்கவரிதுன்ன
இந்திரற்குவமைசாலுமிருநிலக்கிழவரெல்லாம்
வந்தனர்மௌலிசூட்டுமண்டபமரபிற்புக்கார். (௭௨)

முற்பயந்தெடுத்தகாதற்புதல்வனைமுறையினோடும்
இற்பயன்சிறப்பிப்பாரினீண்டியவுவகைதூண்ட
அற்புதன்றிருவைச்சேருமருமணங்காணப்புக்கார்
நற்பயன்றவத்தினுய்க்குநான்மறைக்கிழவரெல்லாம். (௭௩)

விண்ணவர்விசும்புதூர்த்தார்விரிதிரையுடுத்தகோல
மண்ணவர்திசைகடூர்த்தார்மங்கலமிசைக்குஞ்சங்கம்
கண்ணகன்முரசினோதைகண்டவர்செவிகடூர்த்த
எண்ணருங்கனகமாரியெழுதிரைக்கடல்கடூர்த்த. (௭௪)

67. பொருளாற் பன்மையாயினும் வெள்ளம் என்னுஞ்சொல் ஒருமையாதலால் வந்தது என ஒருமை முடிபுதந்து கூறினார்.

74. கேட்டவரைக் கண்டவரென்றது மயக்கம்.

விளக்கொளிமறைத்தமன்னர்மின்னொளிமகுடகோடி
துளக்கொளிவிசும்பினூருஞ்சுடரையுமறைத்தசூழ்ந்த
அளக்கர்வாய்முத்தமூரன்முறுவலாரணியின்சோதி
வளைக்கலாமென்றவ்வாரோர்கண்ணையுமறைத்தவன்றே. (௭௫)

ஆயதோரமைதியின்கணையனைமகுடஞ்சூட்டற்
கேயுமங்கலங்களானயாவையுமியையக்கொண்டு
தூயநான்மறைகள்வேதபாரகர்சொல்லத்தொல்லை
வாயில்கணெருக்கநீங்கமாதவக்கிழவன்வந்தான். (௭௬)

கங்கையேமுதலவாயகன்னியீருனதீர்த்த
மங்கலப்புனலுநாலுவாரியினீரும்பூரித்
தங்கியின்வினையிற்கேற்றயாவையுமமைத்துவீரச்
சிங்கவாதனமும்வைத்துச்செய்வனபிறவுஞ்செய்தான். (௭௭)

கணிதநூலுணர்ந்தமாந்தர்காலம்வந்தடுத்ததென்னப்
பிணியறநோற்றுநின்றபெரியவன்விரைவினோகி
மணிமுடிவேந்தன்றன்னைவல்லையிற்கொணர்தியென்னப்
பணிதலைநின்றகாதற்சுமந்திரன்பரிவிற்சென்றான். (௭௮)

விண்டொடநிவந்தகோயில்வேந்தர்தம்வேந்தன்றன்னைக்
கண்டிலன்வினவக்கேட்டான்கைகயள்கோயினண்ணி
தொண்டைவாய்மடந்தைமாரிற்சொல்லமற்றவருஞ்சொல்லப்
பெண்டிரிற்கூற்றமன்னாள்பிள்ளையைக்கொணர்கவென்றாள். (௭௯)

என்றனளென்னக்கேட்டானெழுதபேருவகைபொங்கப்
பொன்றிணிமாடவீதிபொருக்கெனநீங்கிப்புக்கான்
தன்றிருவுள்ளத்துள்ளேதன்னையேநினையுமற்றக்
குன்றிவர்தோளினானைத்தொழுதுவாய்புதைத்துக்கூறும். (௮௦)

கொற்றவர்முனிவர்மற்றுங்குவலயத்துள்ளாருன்னைப்
பெற்றவன்றன்னைப்போலப்பெரும்பரிவியற்றிநின்றார்
சிற்றவைதானுமாங்கேகொணர்கெனச்செப்பினாளப்
பொற்றடமகுடஞ்சூடப்போதுதிவிரைவினென்றான். (௮௧)

ஐயனுமச்சொற்கேளாவாயிரமௌலியானைக்
கைதொழுதரசவெள்ளங்கடலெனத்தொடர்ந்துசுற்றத்

---

76. வேதபாரகர் - வேதபாராயணஞ்செய்பவர்.

77. நாலுவாரி - நாற்றிசைக்கடல்.

79. தன்கணவனை உயிர் கொல்லசசமைந்தவளாகலிற் ‘பெண்டிரிற்கூற்றமன்னாள்’ ளென்றார்.

தெய்வகீதங்கள்பாடத்தேவருமகிழ்ந்துவாழ்த்தத்
தையலாரிரைத்துநோக்கத்தாரணிதேரிற்சென்றான். (அ௨)

திருமணிமகுடஞ்சூடச்சேவகன்செல்கின்றானென்
றொருவரினொருவர்முந்தக்காதலோடுவகையுந்த
இருகையுமிரைத்துமொய்த்தாரின்னுயிர்யார்க்குமொன்றாய்
பொருவருந்தேரிற்செல்லப்புறத்திடைக்கண்டார்போல்வார். (அ௩)

துண்ணெனுஞ்சொல்லாள்சொல்லச்சுடர்முடிதுறந்துதூய
மண்ணெனுந்திருவைநீங்கிவழிக்கொளாமுன்னவள்ளல்
பண்ணெனுஞ்சொல்லினார்தந்தோளெனும்பணைத்தவேயும்
கண்ணெனுங்காலவேலுமிடைநெடுங்கானம்புக்கான். (அ௪)

சுண்ணமுமலருஞ்சாந்துங்கனகமுந்தூவவந்து
வண்ணமேகலையுநாணும்வளைகளுந்தூவுவாரும்
புண்ணுறவனங்கன்வாளிபுதைத்ததம்புணர்மென்கொங்கை
கண்ணுறப்பொழிந்தகாமவெம்புனல்கழுவுவாரும். (அ௫)

அங்கணனவனிகாத்தற்காமிவனென்னலாமோ
நங்கணன்பிலனென்றுள்ளந்தள்ளுறநடுங்கிநைவார்
செங்கணுங்கரியகோலமேனியுந்தேருமாகி
எங்கணுந்தோன்றுகின்றானொருவனோவிராமனென்பார். (அ௬)

இளையராமகளிரெல்லாமிரைத்தனர்நிரைத்துமொய்த்தார்
முளைவருநகரமூதூர்முதிருருமிளைஞர்தாமும்
அளையவன்மேனிகண்டாரன்பினுக்கெல்லைகாணார்
நினைவினர்மனத்தால்வாயாணிகழ்ந்ததுநிகழ்த்தலுற்றாம். (அ௭)

உய்ந்ததிவ்வுலகமென்பாருழிகாண்கிற்பாயென்பார்
மைந்தநீகோடியெங்கள்வாழ்க்கைநாள்யாவுமென்பார்
ஐந்தவித்தரிதிற்செய்ததவமுனக்காகவென்பார்
பைந்துழாய்த்தெரியலாய்க்கேநல்வினைபயக்கவென்பார். (அ௮)

உயாருளொண்கணுக்குந்தாமரைநிறத்தையொக்கும்
புயல்மொழிமேகமென்னபுண்ணியஞ்செய்தவென்பார்

82. தாரணிதேர் - பொன்னரிமாலையாலலங்கரித்ததேர். முனைவர் - முற்றத்துறந்தமுனிவர்.

89. உயாருளொகண்ணுக்கும். (1) எல்லா நற்குணங்களிலு முயர்ந்த கருணையானது இவனது ஒள்ளிய திருநோக்கத்தையொத்துத் தோனறும். (2) தாமரைநிறத்தையொக்கும்,

செயலருந்தவங்கள்செய்திச்செம்மலைத்தந்தசெல்வத்
தயரதற்கென்னகைம்மாறுடையம்யாந்தக்கதென்பார். (அகூ)

வாரணமரற்றவந்துகராவுயிர்மாற்றுநேமி
நாரணனொக்குமிந்தநம்பிதன்கருணையென்பார்
ஆரணமறிதறேற்றாவையனையனுகிநோக்கிக்
காரணமின்றியேயுங்கண்கணீர்கலுழநிற்பார். (கூ0)

நீலமாமுகிலனான்றனிநிறையினோடறிவுநிற்க
சீலமார்க்குண்டுகெட்டேன்றேவரினடங்குவானோ
காலமாக்கணிக்குநுண்மைக்கணக்கையுங்கடந்துநின்ற
மூலமாய்முடிவிலாதமூர்த்தியிம்முன்பனென்பார். (கூக)

ஆர்கலியகழ்ந்தோர்கங்கையவனியிற்கொணர்ந்தோர்முந்தைப்
போர்கெழுபுலவர்க்காகியசுரரைப்பொருதுவென்றோர்
பேர்கெழுசிறப்பின்வந்தபெரும்புகழ்நிற்பதையன்
தார்கெழுதிரடோடந்தபுகழினைத்தழுவியென்பார். (கூ௨)

வேறு.

சந்தமிவைதாவின்மணியாரமிவையாவும்
சிந்துரமுமிங்கிவைசெறிந்தமதவேழப்
பந்திகள்வயப்பரிபசும்பொனின்வெறுக்கை
மைந்தவறியோர்கொளவழங்கெனநிரைப்பார். (கூ௩)

மின்பொருவுதேரின்மிசைவீரன்வருபோழ்தில்
தன்பொருவில்கன்றுதனிதாவிவரல்கண்டாங்
கன்புருகுசிந்தையொடுமாவுருகுமாபோல்
என்புருகிநெஞ்சுருகிநஞ்சுருகிநிற்பார். (கூச)

சத்திரநிழற்றநிமிர்தானையொடுநாளு
அத்திரநிழற்றவருளோடவனியாள்வார்
புத்திரரினிப்பெறுதல்புல்லிதெனநல்லோர்
சித்திரமெனத்தனிதிகைத்துருகிநிற்பார். (கூ௫)

கார்மினொடிலாயதெனநூல்களுளுமார்பன்
தேர்மிசைநம்வாயில்கடிதேகுதல்செய்வானோ

---

91. நிறை - விதிவழிநிற்றல். 92. ஆர்கலியகழ்ந்தோர் - அறுபதினாயிரஞ் சகரர்கள். கங்கையை யவனிற்கொணர்ந்தோன் - பகீரதன். அசுரரைப் பொருதுவென்றோர் - மாந்தாதா முதலியோர். தோள்தந்தபுகழ் - இராமர்தாடகை, பரசுராமர் முதலியோரையும் வென்றதனால் வந்தபுகழ்.

கூர்கனகராசியொடுகோடிமணியாலும்
தூர்மினெடுவீதியினையென்றுசொரிவாரும். (கூசு)

தாய்கையில்வளர்ந்திலன்வளர்த்ததுதவத்தால்
கேகயன்மடந்தைகிளர்ஞாலமிவனாள
ஈகையிலுவந்தவவளியற்கையிதுவென்றால்
தோகையிவள்பேருவகைசொல்லலரிதென்பார். (கூஎ)

பாவமுமருந்துயரும்வேர்பறியுமென்பார்
பூவலயமின்று தனியன்றுபொதுவென்பார்
தேவர்பகையுள்ளனவிவவள்ளலெறுமென்பார்
ஏவல்செயுமன்னர்தவம்யாவதுகொலென்பார். (கூஅ)

ஆண்டினையராயினையகூறவடல்வீரன்
தூண்டுபுரவிப்பொருவில்சுந்தரமணித்தேர்
நீண்டகொடிமாடநிரைவீதிநிறையப்போய்ப்
பூண்டபுகழ்மன்னனுறைகோயில்புகலோடும். (கூகூ)

வேறு.

ஆங்குவந்தடைந்தவண்ணலாசையின்கவரிவீசப்
பூங்குழன்மகளிருள்ளப்புதுக்களியாடனோக்கி
வீங்கிருங்காதல்காட்டிவிரிமுககமலபீடத்
தோங்கியமகுடஞ்சூடியுவகைவீற்றிருப்பக்காணான். (கOO)

வேத்தவைமுனிவரோடுவிருப்பொடுகளிக்குமெய்ம்மை
ஏத்தவையிசைக்குஞ்செம்பொன்மண்டபமினிதினெய்தான்
ஓத்தவைபுலகத்தெங்குமுள்ளவையுணர்ந்தாருள்ளம்
பூத்தவவ்வடிவையொப்பான்சிற்றவைகோயில்புக்கான். (கOக)

புக்கவன்றன்னைநோக்கிப்புரவலர்முனிவர்யாரும்
தக்கதேநினைந்தான்றாதைதாமரைச்சரணஞ்சூடித்

---

96. நெடுவீதி- அரசவீதி. 98. பூவலயமின்று தனியன்று பொதுவென்பதற்கு - வட்டமாகிய நிலவுலகம் இன்று தனிமை அவன் பிறவாதமுன் பொது வென்பதன்றி இற்றைநாள் சீராமனுக்கே நிலவலயமுரித்து பலர்க்கு முரித் தன்றெனக் கொள்ளலுமாம்.

101. ஐவடிவு - பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அச்சாவதாரம், பரத்துவம்; ஸ்ரீவைகுந்தத்தில் எழுந்தருளி யிருத்தல். வியூகம் - திருப்பாற்கடலிலறி துயிலமர்ந்திருத்தல். விபவம் - இராமாவதார முதலிய திருவவதாரங்கள். அந்தரியாமித்துவம் - அடியவர்மனங்களிலிருத்தல். அச்சாவதாரம்:- திருக்கோயிலி லெழுந்தருளியிருத்தல்.

திக்கினைநிமிர்த்தகோலச்செல்வனைசெம்பொற்சோதி
மிக்குயர்மகுடஞ்சூட்டச்சூடுதல்விழுமிதென்றார். (க0உ)

ஆயனநிகழும்வேலையண்ணலுமயர்ந்துதேறாத்
தூயவனிருந்தசூழறுருவினன்வருதனோக்கி
நாயகனுரையான்வாயானினிதுபகர்வேனென்னாத்
தாயெனநினைவான்முன்னேகூற்றெனத்தமியள்வந்தாள். (க0௩)

வந்தவடன்னைச்சென்னிமண்ணுறவணங்கிவாய்த்த
சிந்துரப்பவளச்செவ்வாய்செங்கையிற்புதைத்துமற்றைச்
சுந்தரத்தடக்கைதானைமடக்குறத்துவண்டுநின்றான்
அந்திவந்தடைந்ததாயைக்கண்டவான்கன்றினன்னான். (க0ச)

நின்றவன்றன்னைநோக்கியிரும்பினாலியைந்தநெஞ்சிற்
கொன்றுழல்கூற்றமென்னும்பெயரினிற்கொடுமைபூண்டாள்
இன்றெனக்குணர்த்தலாவதேயதேயென்னினாரும்
ஒன்றுனக்குந்தைமைந்தவுரைப்பதோருரையுண்டென்றாள். (க0ரு)

எந்தையேயேவநீரேயுரைசெயவினையதுண்டேல்
உய்ந்தனனடியேனென்னிற்பிறந்தவருளரோவாழி
வந்ததென்றவத்தினாயவருபயன்மற்றொன்றுண்டோ
தந்தையுந்தாயுநீரேதலைநின்றேன்பணிமினென்றான். (க0சு)

ஆழிசூழுலகமெல்லாம்பரதனேயாளநீபோய்த்
தாழிருஞ்சடைகடாங்கித்தாங்கருந்தவமேற்கொண்டு
பூழிவெங்கானநண்ணிப்புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின்வாவென்றியம்பினனரசனென்றாள். (க0எ)

இப்பொழுதேதம்மனோராலியம்புதற்கெளிதேயாரும்
செப்பருங்குணத்திராமன்றிருமுகச்செவ்விநோக்கில்
ஒப்பதேமுன்புபின்பவ்வாசகமுணரக்கேட்ட
அப்பொழுதலர்ந்தசெந்தாமரையினைவென்றதம்மா. (க0அ)

தெருளுடைமனத்துமன்னனேவலிற்றிறம்பவஞ்சி
இருளுடையுலகந்தாங்குமின்னலுக்கியைந்துநின்றான்
உருளுடைச்சகடம்பூண்டவுடையவனுய்த்தகாரே
றருளுடையொருவனீக்கவப்பிணியவிழ்ந்ததொத்தான். (க0கூ)

மன்னவன்பணியன்றாகினும்பணிமறுப்பனோவென்
பின்னவன்பெற்றசெல்வமடியனேன்பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பாலிப்பணிதலைமேற்கொண்டேன்
மின்னொளிர்கானமின்றேபோகின்றேன்விடையுங்கொண்டேன். ()

ஆக திருவிருத்தம் - உகூரு.

---

## ச-வது, நகர்நீங்குபடலம்.

என்றுகொண்டிணையகூறியடியிணையிறைஞ்சிமீட்டுந்
தன்றுணைத்தாதைபாதமத்திசைநோக்கித்தாழ்ந்து
பொன்றிணிபோதினாளும்பூமியும்புலம்பிநையக்
குன்றினுமுயர்ந்ததோளான்கோசலைகோயில்புக்கான். (க)

குழைக்கின்றகவரியின்றிக்கொற்றவெண்குடையுமின்றி
இழைக்கின்றவிதிமுன்செல்லத்தருமம்பின்னிரங்கியேக
மழைக்குன்றமனையான்மௌலிகவித்தனன்வருமென்றென்று
தழைக்கின்றவுள்ளத்தன்னாள்முன்னொருதமியன்சென்றான். (உ)

புனைந்திலன்மௌலிகுஞ்சிமஞ்சனப்புனிதநீரால்
நனைந்திலனென்கொலென்னுமையத்தாணளினபாதம்
வனைந்தபொற்கழற்கால்வீரன்வணங்கலுங்குழைந்துவாழ்த்தி
நினைந்ததென்னிடையூறுண்டோநெடுமுடிபுனைதற்கென்றாள். (ந)

வேறு.

மங்கையம்மொழிகூறலுமானவன்
செங்கைகூப்பிநின்காதற்றிருமகன்
பங்கமில்குணத்தெம்பிபரதனே
துங்கமாமுடிசூடுகின்றானென்றான். (ச)

முறைமையன்றென்பதொன்றுண்டுமும்மையின்
நிறைகுணத்தவனின்னினுநல்லனால்
குறைவிலன்னெனக்கூறினளல்வர்க்கும்
மறுவிலன்பினில்வேற்றுமைமாற்றினாள். (ரு)

என்றுபின்னருமன்னவனேவிய
தன்றெனுமைமகனேயுனக்கறன்
நன்றுநும்பிக்குநானிலநீகொடுத்
தொன்றிவாழுதியூழிபலவென்றாள். (சு)

தாயுரைத்தசொற்கேட்டுத்தழைக்கின்ற
தூயசிந்தையத்தோமில்குணத்தினான்

2. இழைக்கின்றவிதி - நிகழும் ஆதிசங்கற்பம்.

4. மானவன் மனுகுலத்திற்றோன்றினான் - ஸ்ரீராமன், இது தத்திதாந்த பதம்.

நாயகன்னெனைநன்னெறியுய்ப்பதற்
கேயதுண்டோர்பணியென்றியம்பினான். (எ)

ஈண்டுரைத்தபணியென்னையென்றவட்
காண்டொரேழிரேடேழுகன்கானிடை
மாண்டமாதவரோடுடன்வைகிப்பின்
மீண்டுநீவரல்வேண்டுமென்றுனென்றான். (அ)

ஆங்கவ்வாசகமென்னுமனல்குழை
தூங்குதன்செவியிற்றொடாமுனம்
ஏங்கினாளிளைத்தாடிகைத்தாண்மனம்
வீங்கினாள்விம்மினாள்விழுந்தாளரோ. (௯)

வஞ்சமோமகனேயுனைமாநிலம்
தஞ்சமாகநீ தாங்கென்றவாசகம்
நஞ்சமோவினிநானுயிர்வாழ்வனோ
அஞ்சுமஞ்சுமென்னாருயிரஞ்சுமால். (௧௦)

கையைக்கையினெரிக்குந்தன்காதலன்
வைகுமாலிலையன்னவயிற்றினைப்
பெய்வளைத்தளிராற்பிசையும்புகை
வெய்துயிர்க்கும்விழுங்கும்புழுங்குமால். (௧௧)

நன்றுமன்னன்கருணையெனாநகும்
நின்றமைந்தனைநோக்கிநெடுஞ்சுரத்
தென்றுபோவதெனவெழுமின்னுயிர்
பொன்றும்போதுற்றதுற்றதுபோலுமே. (௧௨)

அன்பிழைத்தமனத்தரசற்குநீ
என்பிழைத்தனையென்றுநின்றேங்குமால்
முன்பிழைத்தவறுமையின்முற்றினோர்
பொன்பிழைக்கப்பொதிந்தனர்போலவே. (௧௩)

அறமெனக்கிலையோவெனுமாவிநைந்
திறவிடுத்ததென்றெய்வதங்காளெனும்
பிறவுரைப்பதென்கன்றுபிரிந்துழிக்
கறவையொப்பக்கரைந்துகலங்கினாள். (௧௪)

---

8. மாண்டமாதவர் - தவத்தால் மனந்தூய்மையானவர்.
10. காடுசெல்லச் செய்ததாகலின் 'நஞ்சமோ' என்றார்.
13. பொன்பிழைக்கப் பொதிந்தனர்போல, நடவையிற்செல்வங்கிடைப்பதனையிழந்தவர்போல.

இத்திறத்தினிடருறுவாடனைக்
கைத்தலத்தினெடுத்தருங்கற்பினேய்
பொய்த்திறத்தினனுக்குதியோபுகல்
மெய்த்திறத்துநம்வேந்தனைநீயென்றான். (கரு)

பொற்புறுத்தனமெய்ம்மைபொதிந்தன
சொற்புறுத்தற்குரியனசொல்லினான்
கற்புறுத்தியகற்புடையாடனை
வற்புறுத்திமனங்கொளத்தேற்றுவான். (கசு)

சிறந்ததம்பிதிருவுறவெந்தையை
மறந்தும்பொய்யிலனுக்கிவனத்திடை
உறைந்துதிருமுறுதிபெற்றேனிதிற்
பிறந்துயான்பெறும்பேறென்பதியாவதே (கஎ)

விண்ணுமண்ணுமிவ்வேலையுமற்றும்வே
றெண்ணுப்பூதமெலாமிறந்தேகினும்
அண்ணலேவன்மறுக்கவடியனேற்
கொண்ணுமோவிதற்குள்ளழியேலென்றான். (கஅ)

ஆகினையவரசன்றனுணையால்
ஏகலென்பதியானுமுரைக்கிலென்
சாகலாவுயிர்தாங்கவல்லேலேனையும்
போகினின்றொடுங்கொண்டனைபோகென்றாள். (ககூ)

என்னைநீங்கியிடர்க்கடல்வைகுறும்
மன்னர்மன்னனைவற்புறுத்தாதுடன்
துன்னுகானந்தொடரத்துணிவதோ
அன்னையேயறம்பார்க்கிலையாமென்றான். (உ0)

வரிவிலெம்பியிம்மண்ணரசாயவற்
குரிமைமாநிலமுற்றபின்கொற்றவன்
திருவினீங்கித்தவஞ்செயுநாளுடன்
அருமைநோன்புகளாற்றுதியாமன்றே. (உக)

---

15. அருங்கற்பினேய் - கோசலையை.

16. பொற்பு - அழகு. சொற்பு - சொற்றன்மை. கற்பு - கணவன்வழி நிற்றல்.

18. ஒன்றுமோ - ஒண்ணுமோ என மரீஇயது.

சித்தநீ திகைக்கின்றதென்றேவரும்
ஒத்தமா தவஞ்செய்துயர்ந்தாரன்றே
எத்தனைக்குளவாண்டுகளீண்டவை
பத்துநாலும்பகலலவோவென்றான். (உஉ)

முன்னர்க்கோசிகனென்னுமுனிவரன்
தன்னருட்டலைதாங்கியவிஞ்சையும்
பின்னரெய்தியபேறும்பிழைத்தவோ
இன்னநன்றவர்க்கேயினசெய்தலே. (உங)

மாதவர்க்குவழிபாடிழைத்தரும்
போதமுற்றிப்பொருவருவிஞ்சைகள்
ஏதமற்றனதாங்கியிமையவர்
காதல்பெற்றநன்காவரக்காண்டியால். (உச)

மகரவேலைமண்டொட்டவண்டாடுதார்ச்
சகரர்தாதைபணிதலைநின்றதம்
புகரில்யாக்கையினின்னுயிர்போக்கிய
நிகரின்மாப்புகழ்நின்றதன்றேவென. (உரு)

மான்மறிக்கரத்தான்மழுவேந்துவான்
தான்மறுத்திலன்றாதைசொற்றாயையே
ஊனறக்குறைத்தானுரவோனருள்
யான்மறுப்பதென்றெண்ணுவதோவென்றான். (உசு)

இத்திறத்தவெனைப்பலவாசகம்
உய்த்துரைத்தமகனுரையுட்கொளா
எத்திறத்துமிறக்குமிந்நாடென
மெய்த்திறத்துவிளங்கிழையுன்னுவாள். (உஎ)

அவனிகாவல்பரதனதாகுக
இவனிஞ்ஞாலமிறந்திருங்கானிடைத்
தவனிலாவகைகாப்பென்றகைவிலாப்
புவனிநாதற்றொழுதென்றுபோயினள். (உஅ)

போகின்றாளைத்தொழுதுபுரவலன்
ஆகமற்றவடன்னையுமாற்றியிச்

---

22. தேவருந்தவஞ்செய்தே யுயர்ந்தாராகலின் 'தேவருமொத்த மாதவஞ் செய்துயர்ந்தார்' என்றார். பத்துநாலுபகலலவோ, தேவமானத்தால் பதினான்கு நாளல்லவா.

23. விஞ்ஞை - மந்திரம், விற்றொழில்.

சோகந்தீர்ப்பவளென்றுசுமித்திரை
மேகந்தோய்தனிக்கோயிலைமேயினான். (உகூ)

நடந்தகோசலைகேகயநாட்டிறை
மடந்தைகோயிலையெய்தினண்மன்னவன்
கிடந்தபார்மிசைவீழ்ந்தனள்கெட்டுயிர்
உடைந்தபோழ்தினுடல்விழுந்தென்னவே. (௩௦)

வேறு.

பிறியார்பிறிவேதென்னும்பெரியோய்தகவோவென்னும்
நெறியோவடியேநிலைநீநினையாநினைவேதென்னும்
வறியோர்தனமேயென்னுந்தமியேன்வலியேயென்னும்
அறிவோவினையோவென்னுமரசேயரசேயென்னும். (௩க)

இருளற்றிடவுற்றொளிருமிரவிக்கெதிருந்திகிரி
உருளத்தனியுய்த்தொருகோனடையிற்கடைகாணுலகம்
பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற்புகுதற்கென்றோ
அருளக்கருதிற்றிதுவோவரசர்க்கரசேயென்னும். (௩உ)

திரையார்கடல்சூழுலகின்றவமேதிருவின்றிருவே
நிரையார்கலையின்கடலேநெறியார்மறையின்னிலையே
கரையாவயர்வேனெனைநீகருணாலயனேயெனினென்
றுரையாவிதுதானழகோவுலகேழுடையாயென்னும். (௩௩)

மின்னின்றனையமேனிவெறிதாய்விடநின்றதுபோல்
உன்னுந்தகைமைக்கடையாவுறுநோயுறுகின்றுணரான்
இன்னென்றுரையானென்னேயிதுதான்யாதென்றறியேன்
மன்னன்றகைமைகாணவாராய்மகனேயென்னும். (௩ச)

இவ்வாறழுவாளிரியற்குரல்சென்றிசையாமுன்னம்
ஒவ்வாதொல்லாதென்னுவொளிவாணிருபர்முனிவர்
அவ்வாறறிவாயென்னவந்தான்முனிவன்னவனும்
வெவ்வாளரசன்னிலைகண்டென்னும்விளைவென்றுன்னா. (௩௫)

இறந்தானல்லன்னரசன்னிறவாதொழிவானல்லன்
மறந்தானுணர்வென்றுன்னுவன்கேகயர்கோன்மங்கை

---

34. மின்தோன்றிய வழிநிற்றல் கண்கூடாகமாட்டாமையின் 'மின்னின் றனையமேனி' என்றார்.

துறந்தாடயரந்தன்னைத்துறவாதொழிவாளிவளே
பிறந்தார்பெயருந்தன்மைபிறராலறிதற்கெளிதோ. (௩௬)

என்றுவுன்றமுனிவனிடராலழுவாடயரம்
சொன்னாளாகாளெனமுன்றெழுகேகயர்கோன்மகளே
அன்றுயுரையாயரசனயர்வாணிலையென்னென்னத்
தன்றுணிகழ்ந்ததன்மைதானேதெரியச்சொன்னாள். (௩௭)

சொற்றாள்சொற்றமுன்னஞ்சுடர்வாளரசர்க்கரசைப்
பொற்றாமரைபோற்கையாற்பொடிசூழ்படிநின்றெழுவிக்
கற்றாயபரேலவளேதருநின்காதற்கரசன்
றெற்றேறசெயலின்றொழிநீயென்றென்றிரவாநின்றான். (௩௮)

சீதப்பனிநீரளவித்திண்காலுதவுந்தண்கால்
போதத்தளவேதவழ்வித்தின்சொற்புகலாநின்றான்
ஓதக்கடனஞ்சனையாளுறைநஞ்சொருவாறவியக்
காதற்புதல்வன்பெயரேபுகல்வானுயிருங்கண்டான். (௩௯)

காணுவையாவினிநீயொழிவாய்கழிபேரவலம்
ஆணுயகனேயினிநாடாள்வாணிடையூறுளதோ
மாணுவுரையாடானேதருமாமழையேயனையான்
பூணுதொழிவானெனில்யாமுளமோபொன்றேலென்றான். (௪௦)

என்றம்முனிவன்றன்னைநினையாவினையேனினியான்
பொன்றும்மளவில்லவனைப்புனைமாமகுடம்புனைவித்
தொன்றும்வனமென்றுன்றுவண்ணஞ்செய்தென்னுரையும்
குன்றும்பழிபூணுமற்காவாய்கோவேயென்றான். (௪௧)

முனியும்முனியுஞ்செய்கைக்கொடியாண்முகமேமுன்னி
இனியுன்புதல்வற்கரசுமேனையோர்க்கின்னுயிரும்
மனுவின்வழிநின்கணவற்குயிரும்முதவிவசைதீர்
புனிதம்மருவும்புகழேபுனையாய்பொன்னேயென்றான். (௪௨)

மொய்ம்மாண்வினைவேரறவென்றொழிவான்மொழியாமுன்னம்
விம்மாவழுவாளரசன்மெய்யிற்றிரிவாளெனின்னில்
இம்மாவுலகத்துயிரோடினிவாழ்வுகவேனென்சொல்
பொய்ம்மாணுமற்கின்றேபொன்றுதொழியேனென்றாள். (௪௩)

40. ஆணுயகன் - புருடோத்தமனென்னும்பெயர்பற்றி வந்தது.

கொழுநன்றுஞ்சும்மெனவுங்கொள்ளாதுலகம்மெனவும்
பழிநின்றுயரும்மெனவும்பாபம்முளதாமெனவும்
ஒழிகின்றிலையன்றியுமொன்றுணர்கின்றிலையானினிமேல்
மொழிகின்றனவென்னென்றுமுனியும்முறையன்றென்பான். (சச)

கண்ணோடாதேகணவனுயிரோடிடர்காணுதே
புண்ணோடோடுங்கனலோவிடமோவென்னப்புகல்வாய்
பெண்ணோநீயோமாயாப்பேயோகொடியாய்நீயிம்
மண்ணோடின்றோடென்னும்வசையோவலிதேயென்றான். (சரு)

வாயான்மன்னன்மகனைவனமேகென்றுமுன்னம்
நீயோசொன்னுயவனோநிமிர்கானிடைவெங்நெறியில்
போயோபுகலோதவிரான்புகழோடுயிரைச்சுடுவெந்
தீயோய்நின்போற்றீயாருளரோசெயலென்னென்றான். (சகூ)

தாவின்முனிவன்புகலத்தளராநின்றமன்னன்
நாவினஞ்சம்முடையநங்கைதன்னைநோக்கிப்
பாவிநீயேவெங்கான்படர்வாயென்றனுயிரை
ஏவினுயோவவனுமேகினுனோவென்றான். (சஎ)

கண்டேனஞ்சங்கனிவாய்க்கனிவாய்விடநாளெடுநாள்
உண்டேனதனைநீயென்னுயிரையுமுதலோடுண்டாய்
பண்டேயெரிமுன்னுன்னைப்பாவீதேவியாகக்
கொண்டேனல்லேன்வேறோர்கூற்றந்தேடிக்கொண்டேன். (சஅ)

விழிக்குங்கண்வேறில்லாவெங்கானென்கான்முளையைச்
சுழிக்கும்வினையாலேகச்சூழ்வாயென்னைப்போழ்வாய்
பழிக்குந்நாணுய்மாணுப்பாவியினியென்பலவுன்
கழுத்தினுணுன்மகற்குக்காப்பின்னுணுமென்றான். (சகூ)

இன்னேபலவும்பகர்வானிரங்காதாளைநோக்கிச்
சொன்னேனின்றேயிவளென்றாரமல்லடிறந்தேன்

---

46. புறத்தேசுடுந் தீயைப்போலாதுயிரைச் சென்றுவெதுப்புந் தீயாகலின்'உயிரைச்சுடுந்தீ' என்றார்.

47. விடத்தைப்பாலின்கணுடைய நாகத்தினின்றும் வேறுபடுத்தற்கு நாவினஞ்சமுடைய' என்றார்.

49. சுழிக்கும்வினை - முன்னைவினை என்பதன்றி வரங்கொடுத்தமையாகிய கொடுந்தொழிலுமாம்.

மன்னேயாவான்வருமப்பரதன்றனேயுமகனென்
றுன்னேன்முனிவாவவனுமாகானுரிமைக்கென்றுன். (ருo)

என்னேக்கண்டும்மேகாவண்ணம்மிடையூறுடையான்
உன்னேக்கண்டும்மிலனேயென்றுனுயர்கோசலேயைப்
பின்னேக்கண்டானனேயான்பிரியக்கண்டதுயரம்
தன்னேக்கண்டேதவிர்வான்தளர்வாணிலேயிற்றளர்வான். (ருக)

மாற்றுள்செயலாமென்றுங்கணவன்வரமீந்துள்ளம்
ஆற்றுதயர்ந்தானென்றுமறிந்தாளவளும்மவனேத்
தேற்றுநின்றுண்மகனேத்திரிவானென்றுளரசன்
தோற்றுன்மெய்யென்றுலகஞ்சொல்லும்பழிக்குஞ்சோர்வாள். ()

தள்ளாநிலேசான்மெய்ம்மைதழுவாவழுவாவகைநின்
றெள்ளாநிலேகூர்பெருமைக்கிழிவாமென்றுலுரவோய்
விள்ளாநிலேசேரன்பான்மகன்மேன்மெலிவின்னுலகம்
கொள்ளாதன்றேயென்றுள்கணவன்குறையக்குறைவாள். (ருஉ)

போவாதொழியானென்றுள்புதல்வன்றன்னேக்கணவன்
சாவாதொழியானென்றென்றுள்ளாந்தளர்வுற்றயர்வாள்
காவாயென்றுண்மகனேக்கணவன்புகழுக்கழிவாள்
ஆவாவுயர்கோசலேயாமன்னம்மென்னுற்றனளே. (ருச)

உணர்வானனேயானுரையாலுயர்ந்தானுரைசால்குமரன்
புணரானிலமேவனமேபோவானேயாமென்று
இணரார்தருதாரரசனிடராலயர்வான்வினேயேன்
துணேவாதுணேவாவென்றுன்றேன்றுல்தோன்றுலென்றுன். (ருரு)

கண்ணும்நீராயுயிரும்மொழுகக்கழியாநின்றேன்
எண்ணும்நீர்நான்மறையோரெரிமுன்னின்மேற்சொரிய
மண்ணும்நீராய்வந்தபுனலேமகனேவினேயேற்
குண்ணும்நீராயுதவியுயர்கானடைவாயென்றுன். (ருசு)

படைமாணரசைப்பலகாற்பழிவாய்மழுவாலெறிவான்
மிடைமாவலிதானனேயான்வில்லாலடுமாவல்லாய்
உடைமாமகுடம்புனேயென்றுரையாவுடனேகொடியேன்
சடைமாமகுடம்புனேயத்தந்தேனந்தோவென்றுன். (ருஎ)

---

53. அறிவுடையானெனப்பட்டு நன்றன்றென்பாள் 'உரவோய்' என்றூர்.

கறுத்தாயுருவம்மனமுங்கண்ணுங்கையுஞ்செய்ய
பொறுத்தாய்பொறையேயிறைவன்புரமூன்றெரித்தபோர்வில்
இறுத்தாய்தமியேனென்றுதென்னையிம்மூப்பிடையே
வெறுத்தாயினிநான்வாணாள்வேண்டேன்வேண்டேனென்றான். ()

பொன்னின்முன்னம்மொளிரும்பொன்னேபுகழின்புகழே
மின்னின்மின்னும்வரிவிற்குமராமெய்யின்மெய்யே
என்னின்முன்னம்வனநீயடைதற்கெளியேனல்லேன்
உன்னின்முன்னம்புகுவேனுயர்வானகம்யானென்றான். (௫௯)

நெகுதற்கொத்தநெஞ்சம்நேயத்தாலேயாவி
உகுதற்கொத்தவுடலுமுடையேனுன்போலல்லேன்
தகுதற்கொத்தசனகன்றையல்கையைப்பற்றிப்
புகுதற்கண்டகண்ணாற்போகக்காணேனென்றான். (௬௦)

எற்றேபகர்வேனினியானென்னையுன்னிற்பிரிய
வற்றேயுலகம்மெனினும்வானேவருந்தாதெனினும்
பொற்றேரரசேதமியேன்புகழேயுயிரேயுன்னைப்
பெற்றேனருமையறிவேன்பிழையேன்பிழையேனென்றான். (௬௧)

அள்ளற்பள்ளப்புனல்சூழகன்மாநிலமுமரசும்
கொள்ளக்குறையாநிதியின்குவையும்முதலாமெவையும்
கள்ளக்கைகேசிக்கேயுதவிப்புகழ்கைக்கொண்ட
வள்ளற்றனமென்னுயிரைமாய்க்கும்மாய்க்குமென்றான். (௬௨)

ஒலியார்கடல்சூழுகத்துயர்வானிடைநாகரினும்
பொலியாநின்றாருன்னைப்போல்வாருளரோபொன்னே
வலியாருடையாரென்றான்மழுவாளுடையான்வரவும்
சலியாநிலையாயென்றாற்றவிர்வாருளரோவென்றான். (௬௩)

கேட்டேயிருந்தேனெனினுங்கிளர்வானின்றேயடைய
மாட்டேனாகிலன்றோவன்கண்ணேன்கண்மைந்தா
காட்டேயுறைவாய்நீயிக்கைகேசியையுங்கண்டிந்
நாட்டேயுறைவேனென்றானன்றென்றன்மையென்றான். (௬௪)

---

58. 'கரியவோ' என்பவராகலின்கறுத்தாயுருவமென்றும், கண் கைகால்முதலியன செந்தாமரையொப்பவாகலின மனமுங்கண்ணுங் கையுஞ்செய்ய பொறுத்தா யென்றுங்கூறினார்.

90. தவவொழுக்கநனி நிரம்பியோகனாகலின் சனகனைத் 'தகுதற்கொத்த' வெனவிசேடித்தார்.

32. நல்லவள்போற் காட்டிவஞ்சித்தலின் 'கள்ளக்கைகேசி' யென்றார்.

63. மழுவாளுடையான் - பரசுராமன்.

மெய்யார்தவமேசெய்துன்மிடன்மார்பரிதிற்பெற்ற
செய்யாளென்னும்பொன்னும்நிலமாதென்னுந்திருவும்
உய்யாருய்யார்கெடுவேனுன்னைப்பிரியின்வினையேன்
ஐயாகைகேசியைநேராகேனோநானென்றான். (௬௫)

பூணாரணியும்முடியும்பொன்னாசனமுங்குடையுஞ்
சேணார்மார்புந்திருவுந்தெரியக்காணத்திரிவேன்
மாணாமாவற்கலையுமானிற்றோலுமனைவநான்
காணாதொழிந்தேனென்றானென்றாப்த்தன்றோகருமம். (௬௬)

என்றேறவொன்றொன்றொவ்வாவிசைதந்தரசனுயிரும்
சென்றானின்றோடென்னுநதன்மையெய்தித்தேய்ந்தான்
மென்றோன்மார்பின்முனிவன்வேந்தேயயரேலவனை
இன்றேகாதவண்ணந்தகைவெனுலகோடென்னா. (௬௭)

முனிவன்சொல்லும்மளவின்முடியுங்கொல்லென்றரசன்
தனிநின்றுழறன்னுயிரைச்சிறிதேதகைவானிநதப்
புனிதன்போனாலிவனாற்போகாதொழிவாளென்னா
மனிதன்வடிவங்கொண்டமனுவுந்தன்னைமறந்தான். (௬௮)

மறந்தானினைவும்முயிரும்மன்னனென்னாமறுகா
இறந்தான்கொல்லோவரசனென்னாவிடருற்றழிவாள்
துறந்தாய்மகனேயுலகோடெமையும்மென்னத்துணையாம்
அறந்தானிதுவோவையாவரசர்க்கரசேயென்றாள். (௬௯)

மெய்யின்மெய்யேயுலகின்வேந்தர்க்கெல்லாம்வேந்தே
உய்யும்வகைநின்னுயிரையோம்பாதிங்ஙன்றேம்பின்
வையம்முழுதுந்துயரான்மறுகும்முனிவனுடனம்
ஐயன்வரினும்வருமாலயரேலரசேயென்றாள். (௭௦)

என்றென்றரசன்மெய்யுமிருதாளிணையும்முகமும்
தன்றன்செய்யகையாற்றைவந்திடுகோசலையை
ஒன்றுந்தெரியாமம்மருள்ளத்தரசன்மெள்ள
வன்றிண்சிலைநங்குரிசில்வருமேவருமேயென்றான். (௭௧)

---

65. பொன்னுக் கதிதெய்வமாகலின்‘செய்யாளென்னுந்திருவு’மென்றார்.

67. மென்றோல் - ஈண்டு மான்றோல்.

71. பரசுராமனைவென்றவாற்றோன்ற ‘வன்றிண்சிலைநங்குரிசில்’ என்றார்.

வன்மாயக்கைகேசிவாக்காலென்றன்னுயிரை
முன்மாய்விப்பத்துணிந்தாளன்றேறற்கூனிமொழியால்
தன்மாமகனுந்தானுந்தரணிபெறுமாறன்றி
என்மாமகனைக்கானேகென்றுவென்றேவென்றான். (எ௨)

பொன்னார்தோளான்காடேபுகுதப்போதறவிரான்
என்னாருயிரோவகலாதொழியாநிறுகோசலைகேள்
முன்னுளொருமாமுனிவன்மொழியுஞ்சாபமுளதென்
றந்நாளுற்றதெல்லாமவளுக்கரசன்னறைவான். (எ௩)

வெய்யகானத்திடையேவேட்டைவேட்கைமிகவே
ஐயசென்றுகரியோடரிகடுருவித்திரிவேன்
கையார்சிலையுங்கணையுங்கொடுகான்மிருகம்வருமோர்
செய்யநதியின்கரைவாய்ச்சென்றேமறையநின்றேன். (எ௪)

ஒருமாமுனிவன்மனையோடொளிபொன்றிலவாய்நயனம்
திருமாமகனேதுணையாய்த்தவமேபுரிபோழ்தினில்வாய்
அருமாமகனேபுனல்கொண்டகல்வான்வருமாறறியேன்
பொருமாகனைவிட்டிடலும்புவிமீதலறிப்புரள. (எ௫)

புக்குப்பெருநீர்நுகரும்பொருபோதகமென்றுலிமேல்
கைக்கட்கணைசென்றதலாற்கண்ணிற்றெரியக்காணேன்
அக்கைக்கரியின்குரலையன்றிதென்னவெருவா
மக்கட்குரலென்றயர்வேன்மனநொந்தவண்வந்தனனால். (எ௬)

கையுங்கடனுந்நெகிழக்கணையோடுருள்வோற்காணு
மெய்யுந்தனுவும்மனனும்வெறிதேதகிடமேல்வீழா
ஐயன்னீதான்யாவன்னந்தோவருள்கென்றயரப்
பொய்யொன்றறியாமைந்தன்கேணீயென்னப்புகல்வான். (எ௭)

சேலாகியமாமுதல்வன்றிருவுந்தியினீண்மலரின்
மேலாகியநான்முகனால்வேதங்களின்மாமுறையின்
பாலாகியயோனிகளின்பலவாம்வருணந்தருவான்
நாலாகியதாம்வருணந்தனின்முன்னெனமைநல்கினனால். (எ௮)

---

72. கூனி - மந்தரை.

74. கார்மிருகமென்றது - யானையை.

76. போதகம் - யானை.

78. சேலாகியமாமுதல்வன் - மச்சவடிவங்கொண்ட திருமால்.

அந்நான்மறையோன்வழியிலருள்காசிபனன்மைந்தன்
மின்ஞர்புரிநூன்மார்பன்விருத்தேதசனன்மெய்ப்புதல்வன்
நன்ஞன்மறைநூற்றெறியும்நாவான்சலபோசனனெனச்
சொன்ஞன்முனிவன்றருசூரோசனன்யாதெனென்ருன். (எசு)

இருகண்களுமின்றியதாய்தந்தைக்கும்மீங்கிவர்கள்
பருகும்புனல்கொண்டகல்வான்படர்ந்தேன்பழுதாயினதால்
இருகுன்றனையபுயத்தாயிபமென்றுணராதெய்தாய்
உருகுந்துயரந்தவிர்நீயூழின்செயலீதென்ருன். (அ௦)

உண்ணீர்வேட்கைமிகவேயுயங்கும்மெந்தைக்கொருநீ
தண்ணீர்கொடுபோயளித்தேதன்சாவும்முரைத்தும்புதல்வன்
விண்மீதடைவான்றெழுதானெனவும்மவர்பால்விளம்பென்
றெண்ணீர்மையிஞன்விண்ணேரெதிர்கொண்டிடவேகினஞல். ()

மைந்தன்வரவேநோக்கும்வளமாதவன்பான்மகவோ
டந்தண்புனல்கொண்டணுகாவையாவிதுபோதளவாய்
வந்திங்கணுகாதென்னேவந்ததென்றேநொந்தோம்
சந்தங்கமழுந்தோளாய்தழுவிக்கொள்வாவெனவே. (அஉ)

ஐயாயானோரரசனயோத்திநகரத்துள்ளேன்
மையார்களபந்துருவிமறைந்தேதவதிந்தேனிருள்வாய்
பொய்யாவாய்மைப்புதல்வன்புனன்மொண்டிடுமோதையின்மேல்
கையார்கணைசென்றதலாற்கண்ணிற்றெரியக்காணேன். (அங)

வீட்டுண்டலறுங்குரலால்வேழக்குரலன்றெனவே
ஓட்டந்தெதிராநீயாரெனவுற்றவெலாமுரையா
வாட்டந்தருநெஞ்சினஞய்நின்ருன்வணங்காவானோர்
ஈட்டம்மெதிர்வந்திடவேயிறந்தேகினன்விண்ணிடையே. (அச)

அறுத்தாய்கணையாலென்றேயடியேன்றன்னையையா
கறுத்தேயருளாயானேகண்ணிற்கண்டேனல்லேன்
மறுத்தாணில்லான்வனமொண்டிடுமோதையினைப்ததலால்
பொறுத்தேயருள்வாயென்ஞவிருதாள்சென்னிபுனைந்தேன். (அரு)

---

80. பருகும்புனல் - உண்ணீர்.

81. துன்மரணமாகா தூழினடந்தமையான் ‘விண்ணேரெதிர்கொண்டிட வேகின’ னென்ருர்.

83. களபம் - யானை.

85. கறுத்தல் - கோபித்தல்.

வீழ்ந்தாரயர்ந்தார்புரண்டார்விழிபோயிற்றின்றென்றார்
ஆழ்ந்தார்துன்பக்கடலுள்ளேயாவையாவென்றார்
போழ்ந்தாய்நெஞ்சையென்றார்பொன்னுடதனிற்போய்நீ
வாழ்ந்தேயிருப்பத்தரியேம்வந்தேதம்வந்தேதமினியே. (அரு)

என்றென்றயருந்தவரையிருதாள்வணங்கியானே
இன்றும்புதல்வன்னினிநீரேவும்பணிசெய்திடுவேன்
ஒன்றுந்தளர்வுற்றயரீரொழிமின்னிடரென்றிடலும்
வன்றிண்சிலையாய்கேண்மோவெனவேயொருசொல்வகுத்தார். ()

கண்ணுண்மணிபோன்மகவையிழந்தும்முயிர்காதலியா
உண்ணவெண்ணியிருந்தாலுலகோரென்னென்றுரையார்
விண்ணின்றலைசேருதும்யாமெம்போல்விடலையிரியப்
பண்ணும்பரிமாவுடையாயடைவாய்படர்வானென்னு. (அஅ)

தாவாதொளிருங்குடையாய்தவறிங்கிதுநின்சரணம்
காவாயென்றாயதனுற்கடியசாபங்கருதேதம்
ஏவாமகவைப்பிரிதின்றெம்போலிடருற்றனைநீ
போவாயகல்வானென்னுப்பொன்னுட்டிடைபோயினரால். (அகூ)

சிந்தைதளர்வுற்றயர்தல்சிறிதும்மிலனுயின்சொல்
மைந்தன்னுளனென்றதனுன்மகிழ்வோடிவண்வந்தனனுல்
அந்தமுனிசொற்றமையுமண்ணல்வனமேகுதலும்
என்றன்னுயிர்வீகுதலுமிறையுந்தவருவென்றான். (கூ0)

இம்மாமொழிதந்தரசன்னிடருற்றிடுபோழ்தினிலச்
செம்மாமயில்கோசலையுந்திகையாவுணர்வோய்வினளாய்
விம்மாநெறியின்விதியின்விளைவுந்தளர்வின்றொடர்வும்
அம்மாதவனும்விரைவோடவலந்தருநெஞ்சினளாய். (கூக)

வேறு.

உரைசெய்பெருமையுயர்தவத்தோரோங்கல்
புரசைய்மதகளிற்றான்பொற்கோயின்முன்னர்
முரசமுழங்கமுடிசூட்டமொய்த்தாண்
டரசரினிதிருந்தநல்லவையினுனன். (கூஉ)

---

88. கண்ணிற் குண்மணி யறிவிப்பது போன்ற சீராமனறிவித்தலின் 'கண்ணுண்மணிபோன்மகவை' என்றார்.

89. குறிப்பறிந்து செய்யுமகன் 'ஏவாமகன்'

91. சாயலைநோக்கிச் 'செம்மாமயில்' என்றதென்க.

வந்தமுனியைமுகநோக்கிவாள்வேந்தர்
எந்தைபுகுதற்கிடையூறுண்டாயதோ
அந்தமில்சோகத்தழுதகுராமுனென்ன
சிந்தைதெளிந்தோய்தெரியெமக்கிவ்வென்றுரைத்தார். (௯௩)

கொண்டாள்வரமிரண்டுகைகேயர்கோன்கொம்பவட்குத்
தண்டாதசெங்கோற்றயரதனுந்தானளித்தான்
ஒண்டார்முகிலைவனம்போகென்றொருப்படுத்தாள்
எண்டானும்வேறில்லையீதடுத்தவாறென்றான். (௯௪)

வேந்தன்பணியினாற்கைகேசிமெய்ப்புதல்வன்
பாந்தண்மிசைக்கிடந்தபாரளிப்பானாயினான்
ஏந்துதடந்தோளிராமன்றிருமடந்தை
காந்தனொருமுறையேகாடுறைவானாயினான். (௯௫)

வாரார்முலையாருமற்றுள்ளமாந்தர்களும்
ஆராதகாதலரசர்களுமந்தணரும்
போராதவாய்மைப்பெரியோனுரைசெவியிற்
சாராதமுன்னந்தயரதனைப்போல்வீழ்ந்தார். (௯௬)

புண்ணுற்றதீயிற்புகையுற்றுயிர்பதைப்ப
மண்ணுற்றயர்ந்துமறுகுற்றுடம்பெல்லாம்
கண்ணுற்றவாரிகடலுற்றதந்நிலையே
விண்ணுற்றதெம்மருங்கும்விட்டழுதபேரோசை. (௯௭)

மாதருங்கலமுமங்கலமுஞ்சிந்தித்தம்
கோதையுடைபெயரக்கூற்றனையகண்சிவப்பப்
பாதமலர்சிவப்பத்தாம்பதைத்துப்பார்சோர்ந்தார்
ஊதையெறியவொசிபூங்கொடியொப்பார். (௯௮)

ஆவாவரசனருளிலனேயாமென்பார்
காவாவறத்தையினிக்கைவிடுவேம்யாமென்பார்
தாவாதமன்னர்தலைத்தலைவீழ்ந்தேங்கினார்
மாவாதஞ்சாய்த்தமராமரமேபோல்கின்றார். (௯௯)

கிள்ளையொடுபூவையழுதகிளர்மாடத்
துள்ளுறையும்பூசையழுதவுருவறியாப்

---

94. ஒருப்படுத்தல் - உடன்படுத்தல்.
96. போராதவாய்மைப்பெரியோன் - வசிட்டமுனிவன்.
98. கூற்றனையகண் - கண்ணின்கொடுமை விளக்கிற்று.
99. மாவாதம் - பெருங்காற்று.

பிள்ளையழுதபெரியோரையென்சொல்ல
வள்ளல்வனம்புகுவானென்றுரைத்தமாற்றத்தால். (௧௦௦)

சேதாம்பற்போதனையசெங்கனிவாய்வெண்டளவப்
போதாம்பற்றோன்றப்புணர்முலைமேற்பூந்தரள
மாதாம்பற்றென்னமழைக்கண்ணீராலியுக
நாதாம்பற்றாமழலைநங்கைமாரேங்கினார். (௧௦௧)

ஆவுமழுதவதன்கன்றழுதவன்றலர்ந்த
பூவுமழுதபுனற்புள்ளழுதகள்ளொழுகும்
காவுமழுதகளிறழுதகால்வயப்போர்
மாவுமழுதனவம்மன்னவனைமானவே. (௧௦௨)

ஞானீயுமுய்கலானென்றாதேநாயகனைக்
கானீயுமென்றுரைத்தகைகேசியுங்கொடிய
கூனீயுமல்லாற்கொடியார்பிறருளரோ
மேனீயுமின்றிவெறுநீரேயாயினார். (௧௦௩)

தேறாதறிவழுந்தாரெங்குலப்பார்தேரோட
நீறாகிச்சுண்ணம்நிறைந்ததெருவெல்லாம்
ஆறாகியோடினகண்ணீராருநெஞ்சம்
கூறாகியோடாதவித்துணையேகுற்றமே. (௧௦௪)

மன்செய்தபாவமுளதென்பார்மாமலர்மேற்
பெண்செய்தபாவமதனிற்பெரிதென்பார்
புண்செய்தநெஞ்சைவிதியென்பார்பூதலத்தோர்
கண்செய்தபாவங்கடலிற்பெரிதென்பார். (௧௦௫)

ஆளான்பரதனரசென்பாரையனினி
மீளானமக்குவிதிகொடிதுகாணென்பார்
கோளாகிவந்தவாகொற்றமுடிதானென்பார்
மாளாதநம்மின்மனம்வலியாராரென்பார். (௧௦௬)

ஆதியரசனருங்கேயன்மகண்மேற்
காதன்முதிரக்கருத்தழிந்தானென்பார்

---

101. மாதாம்பு அற்று என்ன எனப்பிரிக்க.

102. மடல்பெரியதாழை என்றாற்போல் 'கால்வயம்' எனவந்தது.

103. ஞானி, கூனி, மேனி இவற்றினீற்றிகரம் நீட்டல் விகாரம்.

106. இராமமூர்த்திக்கு முடிசூட்டத்தொடங்கியது காட்டிற்குச்செல்ல நேர்ந்ததால் 'கோளாகிவந்தவாகொற்றமுடிதான்' என்பார்.

சீதைதமணவாளன்றன்னோடுந்தீக்கானம்
போதுமதுவன்றேறற்புகுதுமெரியென்பார். (க0எ)

கையாணிலந்தடவிக்கண்ணீர்மெழுகுவார்
உய்யாள்பொற்கோசலையென்றேவாதுவெய்துயிர்ப்பார்
ஐயாவிளங்கோவேயாற்றுதியோநீயென்பார்
நெய்யாரழலுற்றுதுற்றாரந்நீணகரார். (க0அ)

தள்ளாறுவேறில்லைத்தன்மகற்குப்பார்கொள்வான்
எள்ளாறியகருமம்நேர்ந்தாளிவளென்னுக்
கள்ளாறுசெவ்வாய்க்கணிகைகாண்கைகேசி
உள்ளாறுகாதலிவள்போலென்றுள்ளழிந்தார். (க0௯)

நின்றுதவமியற்றித்தான்பிரநேர்ந்ததோ
அன்றிவ்வுலகத்துளாருயிராய்வாழ்வாரைக்
கொன்றுகளையக்குறித்தபொருளன்றோ
நன்றுவரங்கொடுத்தநாயகற்குநன்றென்பார். (கக0)

பெற்றுடையமண்ணவனுக்கீந்துபிறந்துலகம்
முற்றுடையகோவைப்பிரியாதுமொய்த்தீண்டி
உற்றுனறதும்யாருமுறையவேசின்னுளில்
புற்றுடையகாடெல்லாநாடாகிப்போமென்பார். (கக௧)

என்னேநிருபரியற்கையிருந்தவா
தன்னேரிலாதகலைமகற்குத்தாரணியை
முன்னேகொடுத்துமுறைதிறப்பத்தம்பிக்குப்
பின்னேகொடுத்தாற்பிழையாதோமெய்யென்பார். (ககஉ)

கோதைதவரிவிற்குமரற்கொடுத்தநில
மாதையொருவர்புணர்வாராவஞ்சித்த
பேதைசிறுவனைப்பின்பார்த்துநிற்குமா
சீதைபிரியினுந்தீராத்திருவென்பார். (ககங)

உந்தாதுநெய்வார்த்துதவாதுகாலெறிய
நந்தாவிளக்கினடுங்குகின்றநங்கைமார்

---

108. இளங்கோ - இளையபெருமாள்.

111. தான்பரம்பரையாகவந்தமையின் 'பிறந்துலகமுற்று முடையகோ' என்றார்.

112. நிருபரெனவெகுளிபற்றிப் பன்மைப்பாலாற் கூறினர்.

113. வஞ்சித்தபேதை சிறுவன் - பரதன்.

செந்தாமரைத்தடங்கட்செவ்வியருளேநாக்கம்
அந்தோபிரிதுமோவாவிதியேயோவென்பார். (கககச)

வேறு.

கேட்டானிளையோன்கிளர்ஞாலம்வரத்தினாலே
மீட்டாளளித்தாள்வனந்தம்முனின்வெம்மைமுற்றித்
நீட்டாதவேற்கட்சிறுதாயெனயாவராலும்
மூட்டாதகாலக்கடைத்தீயெனமூண்டெழுந்தான். (கககரு)

கண்ணிற்கடைத்தீயுகநெற்றியிற்கற்றைநாற
விண்ணிற்சுடருஞ்சுடர்தோன்றமெய்ந்நீர்விரிப்ப
உண்ணிற்குமுயிர்ப்பெனுமூழைதபிறங்கநின்ற
அண்ணற்பெரியோன்றனதாதியின்மூர்த்தியொத்தான். (கககசு)

சிங்கக்குருளைக்கிடுதீஞ்சுவையூனைநாயின்
வெங்கட்கடுங்குட்டியையூட்டவிரும்பினாளை
நங்கைக்கறிவின்றிறநன்றிதுநன்றிதென்னாக்
கங்கைக்கிறைவன்கடகக்கைபுடைத்துநக்கான். (கககஎ)

சுற்றார்மணியார்வடிவாள்புடைதோன்றவார்த்து
விற்றாங்கிவாளிப்பெரும்புட்டில்புறத்துவீக்கிப்
பற்றார்ந்தசெம்பொற்கவசம்பணிமேருவாங்கோர்
புற்றாமெனவோங்கியதோளொடுமார்புபோர்க்க. (கககஅ)

அடியிற்சுடர்பொற்கழலார்கலிநாணவார்ப்பப்
பொடியிற்றடவுஞ்சிறுநாண்பெரும்பூசலோசை
இடியிற்றொரக்கடலேழுமடுத்திஞ்ஞால
முடியிற்குமுறும்மழைமும்மையின்மேன்முழங்க. (கககசு)

வானுநிலனும்முதலீறில்வரம்பில்பூதம்
மேனின்றுகீழ்காறும்விரிந்தனவீழ்வபோலத்
தானுந்தனதம்முனுமல்லதுமும்மைஞாலத்
தானும்முயிரும்முடையார்களுடைந்தொதுங்க. (கஉ0)

புவிப்பாவைபரங்கெடப்போருவந்தோரையெல்லாம்
அவிப்பானுமவித்தவராக்கைகையண்டமுற்றக்

---

114. செந்தாமரைத்தடங்கண்செவ்வியருளேநாக்கம் - இராமமூர்த்தியின் கருணை பொழியும் பார்வை.

115. ஊழித்தீயோடிவன் சினத்திற்கு வேற்றுமைதோன்ற 'மூட்டாத காலக்கடைத்தீ' என்றார்.

116. தனதாதியின்மூர்த்தி - திருவனந்தாழ்வானை.

குவிப்பானுமெனக்கொருகோவினைக்கொற்றமௌலி
கவிப்பானுநின்றேனிதுகாக்குநர்காமினென்றான். (கஉக)

விண்ணாட்டவர்மண்ணவர்விஞ்சையர்நாகர்மற்றும்
எண்ணாட்டவர்யாவருநிற்கவோர்மூவராகி
மண்ணாட்டுநர்காக்குநர்வீட்டுநர்வந்தபோதும்
பெண்ணாட்டமொட்டேனினிப்பெருலகத்துளென்ன. (கஉஉ)

காலக்கதிரோனடுவுற்றதோர்வெம்மைகாட்டி
ஞாலத்தவர்கோமகனந்நகரத்துநாப்பண்
மாலைச்சிகரத்தனிமந்தரமேருமுந்தை
வேலைத்திரிகின்றதுபோற்றிரிகின்றவேலை. (கஉ௩)

வேற்றுக்கொடியாள்விளைவித்தவினைக்குவிம்மித்
தேற்றத்தெளியாதயர்சிற்றவைபாலிருந்தான்
ஆற்றற்றுணைத்தம்பிதன்விற்புயலண்டகோளம்
கீற்றுத்துடையப்படுநாணுருமேறுகேட்டான். (கஉ௪)

வீறுக்கியபொற்கலன்வில்லிடவாரமின்ன
மாறாத்தனிச்சொற்றுளிமாரிவழங்கிவந்தான்
காறக்கதிர்ந்துபுகைந்துகனன்றுபொங்கும்
ஆறுக்கனலாற்றுமொரஞ்சனமேகமென்ன. (கஉ௫)

மின்னொத்தசீற்றக்கனல்விட்டுவிளங்கநின்ற
பொன்னொத்தமேனிப்புயலொத்ததடக்கையானை
என்னத்தவென்னீயிமையோரைமுனிந்திலாதாய்
சன்னத்தனாகித்தனுவேந்துதற்கேதுவென்றான். (கஉ௬)

மெய்யைச்சிதைவித்துநின்மெய்ம்முறைநீத்தநெஞ்சம்
மையிற்கரியாளெதிர்நின்னைநன்மௌலிசூட்டல்
செய்யக்கருதித்தடைசெய்குநர்தேவரேனும்
துய்யைச்சுடுவெங்கனலிற்சுடுவான்றுணிந்தேன். (கஉ௭)

---

122. மண்ணாட்டுநர் காக்குநர் வீட்டுநர் - பிரமன், மால், அரன்.

124. சிற்றவை - சுமித்திரை.

125. தம்பிசீற்றந் தணிப்பான்பொருட்டு வருகின்றமையின் 'அஞ்சன மேகமென்ன' என்றார்.

126. இமையோரை முனிந்திலாதாய். (1) தேவர்களை கோபியாதவன். 2) இமைப்பொழுதாயினுங் கோபமில்லாதிருப்பவன்.

127. துய் - பஞ்சினுனி.

வலக்கார் முகமென்கைய தாகவவ்வா னுளோரும்
விலக்கா ரவர்வந்துவிலக்கினுமென்கைவாளிக்
கிலக்காவெரிவித்துலகேழினொடேழுமன்னர்
குலக்காவலுமின்றுனக்கியா னரக்கோடியென்றான். (கஉஅ)

இளையானிதுகூறவிராமனியைந்த நீதி
வளையாவருநன்னெறிநின்னறிவாகுமன்றே
உளையாவறம்வற்றிடவூழ்வழுவுற்றசீற்றம்
விளையாதநிலத்துனக்கெங்ஙன்விளைந்ததென்றான். (கஉகூ)

நீண்டானதுரைத்தலுநித்திலங்தோற்கநக்குச்
சேண்டான்றொடர்மாநிலம்நின்னதென்றுந்தைசெப்பப்
பூண்டாய்பகையாலிழந்தேவனம்போதியென்றால்
யாண்டோவடியேற்கினிச்சீற்றமடுப்பதென்றாள். (கஙo)

நின்கட்பரிவில்லவர்நீள்வனத்துன்னைநீக்கப்
புன்கட்பொறியாக்கைபொறுத்துயிர்போற்றுகேனோ
என்கட்புலமுன்னுனக்கீந்துவைத்தில்லையென்ற
வன்கட்புலந்தாங்கியமன்னவன்காண்கொலென்றான். (கஙக)

பின்குற்றமன்னும்பயக்கும்மரசென்றல்பேணேன்
முன்கொற்றமன்னன்முடிகொள்கெனக்கொள்ளமூண்ட
தென்குற்றமன்றோவிகன்மன்னவன்குற்றம்யாதோ
மின்குற்றொளிரும்வெயிநீக்கொடைமைந்தவேலோய். (கஙஉ)

நதியின்பிழையன்றுநறும்புனலின்மையற்றே
பதியின்பிழையன்றுபயந்துநமைப்புரந்தாள்
மதியின்பிழையன்றுமகன்பிழையன்றுமைந்த
விதியின்பிழைநீயிதற்கென்னைவெகுண்டதென்றான். (கஙங)

உதிக்கும்முலைபுள்ளுறுதீயெனவூதைபொங்கக்
கொதிக்கும்மனமெங்ஙனமாற்றுவென்கோளிழைத்தாள்
மதிக்கும்மதியாய்முதல்வானவர்க்கும்வலீஇதாம்
விதிக்கும்விதியாகுமென்விற்றொழில்காண்டியென்றான். (கஙச)

ஆய்தந்தவனவ்வுரைகூறலுமையநின்றன்
வாய்தந்தனகூறுதியோமறைதந்தநாவால்

---

128. கார்முகம் - வில். 130. நீண்டான் - திரிவிக்கிரமன்.

134. மனத்துயரை உலையுள்ளுறுதீயோடுவமைகூறினார்.

நீதந்ததன்றேநெறியோர்கணிலாததீன்ற
தாய்தந்தையென்றாலவர்மேற்சலிக்கின்றதென்னோ. (௧௩௫)

நற்றாதையும்நீ தனிநாயகனீ வயிற்றிற்
பெற்றாயுநீயேபிறரில்லைப்பிறர்க்குநல்கக்
கற்றாயிதுகாணுதியின்றெனக்கைமறித்தான்
முற்றாமதியம்மிலைந்தான்முனிந்தானையன்னான். (௧௩௬)

வரதன்பகர்வான்வரம்பெற்றவடானிவ்வையம்
சரதம்முடையாளவளென்றனித்தாதைசெப்பப்
பரதன்பெறுவானினியான்படைக்கின்றசெல்வம்
விரதம்மிதினல்லதுவேறினியாவதென்றான். (௧௩௭)

ஆன்றான்பகர்வான்பினுமையயிவ்வையமையல்
தோன்றாநெறிவாழ்துணைத்தம்முனைப்போர்தொலைத்தோ
சான்றோர்புகழுந்தவத்தாதையைவாதைகொண்டோ
ஈன்றாளைவென்றோவினியிக்கதந்தீர்வதென்றான். (௧௩௮)

செல்லுஞ்சொல்வல்லானெதிர்தம்பியுந்தெவ்வர்சொல்லும்
சொல்லுஞ்சுமந்தேனிருதோளெனச்சோம்பியோங்கும்
கல்லுஞ்சுமந்தேன்கணைப்புட்டிலுங்கட்டமைந்த
வில்லுஞ்சுமக்கப்பிறந்தேன்வெகுண்டென்னையென்றான். (௧௩௯)

நன்சொற்கடந்தேனைநாளும்வளர்த்ததாதை
தன்சொற்கடந்தேற்கரசாள்வதுதக்கதன்றால்
என்சொற்கடந்தாலுனக்கியாதுளதீனமென்றான்
தென்சொற்கடந்தான்வடசொற்கடற்கெல்லைதேர்ந்தான். (௧௪௰)

சீற்றந்துறந்தானெதிர்நின்றுதெரிந்துசெப்பும்
மாற்றந்துறந்தான்மறைநான்கெனவாங்கல்செல்லா
நாற்றெண்டிரைவேலையினம்பிதனாணையாலே
ஏற்றந்தொடங்காக்கடலிற்றணிவெய்திநின்றான். (௧௪௧)

அன்னான்றனையையனுமாதியொடந்தமென்று
தன்னாலுமளப்பருந்தானுந்தன்பாங்கர்நின்ற

136. அன்பின்மிகுதியான் 'நற்றாதையுநீ தனிநாயகனீ' யென்றான். கைமறித்தல் - இதுசெய்யற்கவெனத்தடுத்தல்.

137. இதின்நல்லது என்பதன்றி இதின் அல்லது எனப்பிரிக்க.

138. ஆன்றான் - ஈண்டு சீராமன்.

139. தெவ்வர் - என்றதுகைகேசிமுதலாயினோரை. கணைப்புட்டில் - அம்பறாத்தூணி.

பொன்மானுரியானுந் தழீஇயெனப்புல்லிப்பின்னைச்
சொன்மாண்புடையன்னைசுமித்திரைகோயில்புக்கான். (க௪௨)

கண்டாள்மகனும்மகனுந் தன்கண்கள்போல்வார்
தண்டாவனஞ்செல்வதற்கேசமைந்தார்கடம்மை
புண்டாங்குநெஞ்சத்தனளாய்ப்படிமேற்புரண்டாள்
உண்டாயதுன்பக்கடற்கெல்லைபுணர்ந்திலாதாள். (க௪௩)

சோர்வாளையோடித்தொழுதேத்தினன்றுன்பமென்னும்
ஈர்வாளைவாங்கமனந்தேற்றுதற்கேற்றசெய்வான்
போர்வாளரசர்க்கிறைபொய்த்தனனுக்ககில்லேன்
கார்வானெடுங்கானிறைகண்டிங்ஙன்மீள்வெனென்றான். (க௪௪)

கான்புக்கிடினுங்கடல்புக்கிடினுங்கலிப்பேர்
வான்புக்கிடினுமெனக்கன்னவைமாணயோத்தி
யான்புக்கதொக்குமெனையார்நலிகிற்குமீட்டார்
ஊண்புக்குயிர்புக்குணர்புக்குலையற்கவென்றான். (க௪௫)

தாயாற்றுகிலாடனையாற்றுகின்றார்கடம்பால்
தீயாற்றுகிலார்தனிச்சிந்தையினின்றுஞ்செற்ற
நோயாற்றுலகில்லாவுயிர்போலநுடங்கிடையார்
மாயாப்பழியாடரவற்கலையேந்திவந்தார். (க௪௬)

கார்வானமொப்பானதனைக்காண்டொறுங்காண்டொறும்போய்
நீராயுகக்கண்ணினுநெஞ்சழிகின்றநீரார்
பேராவிடர்பட்டயலாருறுபீழைகண்டும்
தீராமனத்தாடரவந்தனசீரமென்றார். (க௪௭)

வாணித்திலவெண்ணகையார்தரவள்ளறம்பி
யாணர்த்திருநாடிழப்பித்தவரீந்தவெல்லாம்
பூணப்பிறந்தானுநின்றானவைபோர்விலோடும்
காணப்பிறந்தேனுநின்றேனவைகாட்டுமென்றான். (க௪௮)

அன்னனவர்தந்தனவாதரத்தோடுமேந்தி
இன்னுவிடர்தீர்ந்துடனேகெனவெம்பிராட்டி
சொன்னாலதுவேதுணையாமெனத்தூயநங்கை
பொன்னாரடிமேற்பணிந்தானவளும்புகன்றாள். (க௪௯)

---

142. பொன்மானுரியான் - பொன்னிறமமைந்த மான்றோலையுடைய உருத்திரமூர்த்தி.

143. தண்டகவனமென்றது - தண்டாவனமென மரீஇயது.

149. ஆதரத்தோடுமேந்தி - விருப்பத்தோடுங் கையிலேந்தி,

ஆகாததன்றாலுனக்கவ்வனமிவ்வயோத்தி
மாகாதலிராமனம்மன்னவன்வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர்நம்பூங்குழற்சீதையென்றே
ஏகாயினியிவ்வயினிற்றலுமேதமென்றாள். (கருo)

பின்னும்பகர்வாண்மகனேயிவன்பின்செறம்பி
என்னும்படியன்றடியாரினிலேவல்செய்தி
மன்னும்நகர்க்கேயிவன்வந்திடின்வாவதன்றேல்
முன்னம்முடியென்றனள்பான்முலேசோரநின்றாள். (கருக)

வேறு.

இருவருந்தொழுதனரிரண்டுகன்றுரீஇ
வெருவருமாவினிற்றாயும்விம்மினாள்
பொருவருங்குமாரரும்போயினார்புறம்
திருவரைத்துகிலொரீஇச்சீரைசாத்தவே. (கருஉ)

தான்புனைசீரையைத்தம்பிசாத்திடத்
தேன்புனைதெரியலான்செய்கைநோக்கினான்
வான்புனையிசையினாய்மறுக்கிலாதுநீ
யான்புகலினைபதோருறுதிகேளெனா. (கருங)

அன்னையரனைவருமாழிவேந்தனும்
முன்னையரல்லர்வெந்துயரின்மூழ்கினார்
என்னையும்பிரிந்தனரிடருறாவகை
உன்னைநீயென்பொருட்டுதவுவாயென்றான். (கரு௪)

ஆண்டகையம்மொழிபகரவன்பனும்
தூண்டகுதிரள்புயந்துளங்கத்துண்ணென
மீண்டதோருயிரிடைவிம்மவிம்முவான்
ஈண்டுனக்கடியனேன்பிழைத்ததியாதென்றான். (கருரு)

நீருளவெனினுளமீனுநீலமும்
பாருளவெனினுளயாவும்பார்ப்புறின்
நாருளதனுவுளாய்நானுஞ்சீதையும்
ஆருளரெனினுளோமருளுவாயென்றான். (கருசு)

150. மாகாதலிராமன் (1) பெருங்காதலையுடையசீராமன் (2) திருமாமகள் விழைதலையுடைய சீராமன்.

151. பான்முலேசோரல் - மக்கண்மாட்டுத்தாயர் வைத்த காதன்மிகுதி.

152. பொருவருங்குமரர் - ஈடுமெடுப்பு மில்லவர்.

153. வான்புனையிசையினாய்-விண்ணுலகுமட்டும் பரந்த புகழுடையாய்.

பைந்தொடியொருத்திசொற்கொண்டுபார்மகள்
நைந்துயிர்நடுங்கவுநடத்திகாணெறு
உய்ந்தனனிருந்தனனுண்மைகாவலன்
மைந்தனென்றிஃனயசொல்வழங்கிறையெறு. (௧௫௭)

மாறினியென்ஃனநீவனங்கொள்வாயென
ஏறினவெகுளியையாதுமுற்றுற
ஆறிஃனதவிர்கெனவையவாஃணயிற்
கூறியமொழியினுங்கொடிதிதாமென்றான். (௧௫௮)

செய்துடைச்செல்வமோயாதுந்தீர்ந்தமை
கைதுடைத்தேதகவுங்கடவையோவையா
நெய்துடைத்தடையலர்நேயமாதர்கண்
மைதுடைத்துறைபுகும்வயங்கொள்வேலிறைய். (௧௫௯)

உரைத்தபின்னிராமனென்றுரைக்கநேர்ந்திலன்
வரைத்தடந்தோளிறைன்வதனநோக்கினன்
விரைத்தடந்தாமரைக்கண்ணின்மிக்கநீர்
நிரைத்திடையிடைவிழநெடிதுநிற்கின்றான். (௧௬௦)

அவ்வயினரசவைநின்றுமன்பினன்
எவ்வமிலிருந்தவமுனிவனெய்தினன்
செவ்வியகுமரருஞ்சென்னிதாழ்ந்தனர்
கௌவையம்பெருங்கடன்முனியுங்கால்வைத்தான். (௧௬௧)

அன்னவர்முகத்திறேடகத்தைநோக்கினன்
பொன்னரைச்சீரையின்பொலிவுநோக்கினன்
என்னினியுணர்த்துவதெடுத்ததுன்பத்தால்
தன்ஃனயுமுணர்ந்திலனுணருந்தன்மையான். (௧௬௨)

வாழ்விஃனநுதலியமங்கலத்துநாள்
தாழ்விஃனயதுவரச்சீரைசாத்தினன்
சூழ்விஃனநான்முகத்தொருவர்ச்சூழினும்
ஊழ்விஃனயொருவராலொழிக்கற்பாலதோ. (௧௬௩)

வெவ்விஃனயவடாவிளைந்ததேயுமன்
றிவ்விஃனயிவன்வயினெய்தற்பாற்றுமன்

159. கய்துடைத்தல் - விட்டொழிதல்.

161. செவ்வியகுமரர் - உலகவர் விழையும் பேரழகினர்.

162. உணருந் தன்மையான் - ஈண்டு வசிட்டமுனிவன்.

றெவ்வினைநிகழ்ந்ததோவேவரெண்ணமோ
செவ்விதின்ஞருமுறைதெரியும்பின்னென்ருன். (௧௬௪)

விற்றடந்தாமரைச்செங்கண்வீரனை
உற்றடைந்தையநீயொருவியோங்கிய
கற்றடங்கானுதியென்னிற்கண்ணகன்
மற்றடந்தானையான்வாழ்கிலானென்ருன். (௧௬௫)

அன்னவன்பணிதலையேந்தியாற்றுதல்
என்னதுகடனவனிடைநீக்குதல்
நின்னதுகடனிதுநெறியுமென்றனன்
பன்னகப்பாயலுட்பள்ளிநீங்கினன். (௧௬௬)

வெவ்வரம்பையில்சுரம்விரவென்ருனலன்
தெவ்வரம்பனையசொற்றீட்டினுடனக்
கவ்வரம்பொருதவேலரசனுய்கிலா
திவ்வரந்தருவனென்றேன்றதுண்டென்ருன். (௧௬௭)

என்றனனெந்தையிவ்வரங்களேவினுள்
ஈன்றவள்யானதுசென்னியேந்தினேன்
சான்றெனநின்றநீதடுத்தியோவென்ருன்
றோன்றியநல்லறநிறுத்தத்தோன்றினன். (௧௬௮)

என்றபின்முனிவனென்றியம்பநேர்ந்திலன்
நின்றனனெடுங்கணீர்நிலத்துநீர்த்துகக்
குன்றனதோளவன்றொழுதுகொற்றவன்
பொன்றிணிநெடுமதில்வாயில்போயினன். (௧௬௯)

சுற்றியசீரையன்றொடர்ந்ததம்பியன்
முற்றியவுவகையன்முளரிப்போதினும்
குற்றமின்முகத்தினன்கொள்கைகண்டவர்
உற்றதையொருவகையுணர்த்துவாமரோ. (௧௭௦)

---

165. வில் - கோதண்டம். கற்றடம் - கானையுங் காடலையுமென்க.

166. தேவகாரியமாகப் பாற்கடற் பரமன் பாம்பணை துறந்தவனாகிய இராமமூர்த்தி 'பன்னகப்பாயலுட் பள்ளிநீங்கினன்' 167. வெவ்வரம்பையில் என்புழி ஐ சாரியை.

168. அறத்தைநிறுத்தற்பொருட்டே யவதரித்தலின் 'தோன்றிய நல்லற நிறுத்தத்தோன்றினேன்' என்றார்.

அந்தணருந் தவரவனிகாவலர்
நந்தலினகருளார்நாட்டுளார்கடம்
சிந்தையென்புகல்வதுதேவருள்ளமும்
வெந்தனர்மேல்வருமுறுதிவேண்டலார். (கஎக)

ஐயனைக்காண்டலுமணங்கனார்கடாம்
மொய்யிளந்தளிர்களான்முளரிமேல்விழும்
மையலின்மதுகரங்கடியுமாறெனக்
கைகளின்மதர்நெடுங்கண்களொற்றினார். (கஎஉ)

தம்மையுமுணர்ந்திலர்தணிப்பிலன்பினால்
அம்மையினிருவினையகற்றவோவன்றேல்
விம்மியபேருயிர்மீண்டிலாமைகொல்
செம்மறன்றுணைதயிற்சிலவர்முந்தினார். (கஎங)

விழுந்தனர்சிலர்சிலர்விம்மிவிம்மிமேல்
எழுந்தனர்சிலர்முகத்திருகண்ணீரிடை
அழுந்தினர்சிலர்பதைத்தளகவல்லியின்
கொழுந்தெரியுற்றெனத்துயரங்கூர்கின்றார். (கஎச)

கரும்பனமொழியினர்கண்பனிக்கிலர்
வரம்பறுதுயரினான்மயங்கியேகொலாம்
இரும்பனமனத்தினரென்னநின்றனர்
பெரும்பொருளிழந்தவர்போலும்பெற்றியார். (கஎரு)

நெக்கனவுடலுயிர்நிலையினின்றில
இக்கணமிற்றுகுமென்னுந்தன்மையும்
புக்கனபுறத்தனபுண்ணிற்கண்மலர்
உக்கனநீர்வறந்துதிரவாரியே. (கஎசு)

இருகையிற்கரிநிகரெண்ணிறந்தவர்
பெருகையிற்பெயர்த்தனர்தலையைப்பேணலர்
ஒருகையிற்கொண்டனருருட்டுகின்றனர்
சுரிகையிற்கண்மலர்சூன்றுநீக்கினார். (கஎஎ)

---

171. நகருளார் - நகரமாந்தர். நாட்டுளர் - நாட்டவர். மேல்வருமுறுதி - இறைவன் இராவணவேட்டையாடித் தம்பதந் தருதல்.

173. சிலவரென்றது - நகரமாந்தரை.

175. பெரும்பொருளிழந்தவர்போலும் பெற்றியார் - பெரியபொருளை யிழந்தவரையொத்த அளவில்லாததுன்பத் தன்மை யுடையவராய்.

சிந்தினவணிமணிசிதறிவீழ்ந்தன
பைந்துணர்மாலையிற்பரிந்தமேகலை
நந்தினர்நகையொளிவிளக்கநங்கைமார்
சுந்தரவதனமுமதிக்குத்தோற்றவே. (௧௭௮)

அறுபதினுயிரரசன்றேவியர்
மறுவறுகற்பினர்மழைக்கண்ணீரினர்
சிறுவனைத்தொடர்ந்தனர்திறந்தவாயினர்
எறிதிரைக்கடலெனவிரங்கியேங்கினார். (௧௭௯)

கன்னிநன்மயில்களுங்குயிற்கணங்களும்
அன்னமுஞ்சிறையிழந்தவனிசோர்ந்தன
என்னவீழ்ந்துழந்தனரிராமனல்லது
மன்னுயிர்ப்புதல்வரைமற்றும்பெற்றிலார். (௧௮௦)

கிளையினுநரம்பினுநிரம்புங்கேழன
அளவிறந்துயிர்க்கவிட்டரற்றுந்தன்மையால்
தொளைபடுகுழலினோடியாழ்க்குத்தோற்றன
இளையவரமுதினுமினியசொற்களே. (௧௮௧)

புகலிடங்கொடுவனம்போலுமென்றுதம்
மகன்வயினிரங்குறுமகளிர்வாய்களால்
அகன்மதினெடுமனையரத்தவாம்பல்கள்
பகலிடைமலர்ந்ததோர்பழனம்போன்றவே. (௧௮௨)

திடருடைக்குங்குமச்சேறுஞ்சாந்தமும்
இடையிடைவண்டலிட்டாரமீர்த்தன
மிடைமுலைக்குவடொரீஇமேகலைத்தடங்
கடலிடைப்புகுந்தகட்கலுழியாறரோ. (௧௮௩)

---

178. இதுகாறு மதியம் முகத்துக்குத்தோல்வியெய்த, இற்றை ஞான்று அது இறைவனீக்கத்தான் வருந்துதலின் 'சுந்தரவதனமு மதிக்குத்தோற்ற' என்றார்.

179. அரசன்தேவியர் பலராதலின் அவரேங்கினமையை மறிதிரைக் கடற்குவமை கூறினார்.

180. அரசன் சிராமனையல்லது காதற்புதல்வனை வேறுபெற்றிலாமையா னவற்குடலன்னவராகலின் இராமனல்லது 'மன்னுயிர்ப்புதல்வரை மற்றும் பெற்றிலார்' என்றார்.

181. யாழ்சொற்குத் தோற்றவேனும் சிராமனீக்கத்தான் 'அமுதினுமி னியசொற்கள் யாழ்க்குத் தோற்ற' என்றார்.

தண்டலைக்கோசலைத்தலைவன்மாநகரைக்
கண்டனனிரவியுங்கமலவாண்முகம்
விண்டலத்துறையுநல்வேந்தற்காயினும்
உண்டிடருற்றபோதென்னுறுதன. (௧அ௪)

தாயருகிளைஞருஞ்சார்ந்துளார்களும்
சேயருமணியருஞ்சிறந்தமாதரும்
காயெரியுற்றனரனையகவ்வையர்
வாயிலுமுன்றிலுமறையமொய்த்தனர். (௧அ௫)

இரைத்தனரிரைத்தெழுந்தேங்கியெங்கணும்
திரைப்பெருங்கடலெனத்தொடர்ந்துபின்செல
உரைப்பதையுணர்கிலனொழிப்பதோர்கிலன்
வரைப்புயத்தண்ணறன்மனையைநோக்கினான். (௧அ௬)

நன்னெடுநளிர்முடிசூடநன்மணிப்
பொன்னெடுந்தேரொடும்பவனிபோனவன்
துன்னெடுஞ்சிரையுஞ்சுற்றிமீண்டுமப்
பொன்னெடுந்தெருவிடைப்போதன்மேயினான். (௧அ௭)

அஞ்சனமேனியிவ்வழகற்கெய்திய
வஞ்சனைகண்டபின்வகிர்ந்துநீங்கலா
நெஞ்சினும்வலிதுயிர்நினைப்பதென்சில
நஞ்சினும்வலியநந்நலமென்றார்சிலர். (௧அ௮)

மண்கொடுவருமெனவழியிருந்தியாம்
எண்கொடுசுடர்வனத்தெய்தல்காணவோ
பெண்கொடுவினைசெயப்பெற்றநாட்டினிற்
கண்கொடுபிறத்தலுங்கடையென்றார்சிலர். (௧அ௯)

முழுவதேபிறந்துலகுடையமொய்ம்பினோன்
உழுவைசேர்கானகத்துறைவென்யானென

184. விண்டலத்துறையுநல்வேந்தனென்பதால் - இந்திரனைக்குறிக்கின்றது. 186. வரைப்புயத்தண்ணல் - ஸ்ரீராமன்.

189. கைகேசிசூழ்வினையாற் பெற்றநாடாகலின் 'பெண்கொடு வினை செயப்பெற்ற நாடு' என்றார். 'அந்தகராய்ப் பிறக்கிலிக் கோலத்தைக்கண்டு வருந்துத லில்லையேயென்பார்' கண்கொடுபிறத்தலுங் கடையென்றார்' என்றனர்.

190. அரசபரம்பரையின் முற்றோன்றலாகலின் 'முழுவதே பிறந்துலகுடைய மொய்ம்பினோன்' என்றார்.

எழுவதேயெழுதல்கண்டிருப்பதேயிருந்
தழுவதேயழுகிதிவ்வன்பென்றார்சிலர். (௧௯௦)

வலங்கடிந்தேதனையராயமன்னனை
நலங்கடிந்தறங்கெடநயக்கலீர்கணுங்
குலங்கடிந்தான்வலிகொண்டகொண்டலை
நிலங்கடிந்தாளொடுநிகரென்றார்சிலர். (௧௯௧)

திருவரைசுற்றியசீரையாடையன்
பொருவருந்துயரினன்றொடர்ந்துபோகின்றான்
இருவரைப்பயந்தவளீன்றகான்முளை
ஒருவனேவிவற்கிவ்வூருறவென்றார்சிலர். (௧௯௨)

முழுக்கலின்வலியநம்மூரிநெஞ்சினை
மழுக்களிற்பிளத்துமென்றோடுவார்வழி
ஒழுக்கியகண்ணினிற்கலுழியூற்றிடை
இழுக்கலில்வழுக்கிவீழ்ந்திடருற்றார்சிலர். (௧௯௩)

பொன்னணிமணியணிமெய்யிற்போக்கினர்
மின்னெனமின்னெனவிளங்குமெய்விலைப்
பன்னிறத்துகிலினைப்பறித்துநீக்கினர்
சின்னநுண்டுகிலினைப்புனைகின்றார்சிலர். (௧௯௪)

நிறைமகவுடையவர்நெறிசெலைம்பொறி
குறைமககுறையினுங்கொடுப்பராமுயிர்
முறைமகன்வனம்புகமொழியைக்காக்கின்ற
இறைமகன்றிருமனமிரும்பென்றார்சிலர். (௧௯௫)

வாங்கியமருங்குலார்வைத்தகொங்கையார்
பூங்கொடியொதுங்குவபோலொதுங்கினர்
ஏங்கியகுரலினரிணைந்தகாந்தளில்
தாங்கியசெங்கைதந்தலைகண்மேலுளார். (௧௯௬)

தலைக்குவட்டயன்மதிதவழுமாளிகை
நிலைக்குவட்டிடையிடைநின்றநங்கைமார்

---

191. நயக்கலீர்கள் விகுதிமேல் விகுதி.

192. இலக்குவ சத்துருக்கர்களைப் பெற்றமையால் சுமித்திரா தேவிக்கு 'இருவரைப்பயந்தவள்' என்றது காரணப்பெயராய் நின்றது.

195. ஐம்பொறிகுறை - கண்முதலிய வறிவின்மையை.

முலைக்குவட்டிழிகணீராலிமொய்த்துக
மலைக்குவட்டகவுறுமயிலின்மாழ்கினர். (கசுஎ)

மஞ்செனவகிற்புகைவழங்குமாளிகை
எஞ்சலில்சாளரத்திரங்குமின்சொலார்
அஞ்சனக்கண்ணினீரருவிசோர்தரப்
பஞ்சரத்திருந்தழுங்கிளியிற்பன்னினர். (கசுஅ)

நன்னெடுங்கண்களினன்றநீர்த்துளி
தன்னெடுந்தாரைகடளத்தின்வீழ்தலால்
மன்னெடுங்குமரன்மாட்டமுங்கிமாடமும்
பொன்னெடுங்கண்குழித்தழுவபோன்றவே. (கசுகு)

மக்களைமறந்தனர்மாதர்தாயரைப்
புக்கிடமறிந்திலர்புதல்வர்பூசலிட்
டுக்கனருயங்கினருருகிச்சோர்ந்தனர்
துக்கநின்றறிவினைச்சூறையாடவே. (உ00)

காமரங்கனிந்தெனக்கனிந்தமென்மொழி
மாமடந்தையரெலாமறுகுசேர்தலால்
தேமறுநறுங்குழற்றிருவினீங்கிய
தாமரையொத்தனதவளமாடமே. (உ0க)

மழைக்குலம்புரைகுழல்விரிந்துமண்ணுற
குழைக்குலமுகத்தியர்குழாங்கொண்டேகினர்
இழைக்குலஞ்சிதறிடவேவுண்டோய்வுறும்
உழைக்குலமுழைப்பனவொத்தொர்பாலெலாம். (உ0உ)

கொடியடங்கினமனைக்குன்றங்கோமுர
சிடியடங்கினமுழக்கிழந்தபல்லியம்
படியடங்கலுநிமிர்பசுங்கண்மாரியால்
பொடியடங்கினமதிற்புறத்துவீதியே. (உ0ங)

அட்டிலுமிழந்தனபுகையகிற்புகை
நெட்டிலுமிழந்தனநிறைந்தபால்கிளி

201. மனையினின்றும் வீதியாய்மாதர் வந்தமையான் மாடங்களை திரு நீங்கிய தாமரைக்குவமைகூறினார்.

203. மனைக்குன்றம் - வீடுகளாகிய மலைகள், மலையையொத்த வீடுகளெனினுமமையும்,

வட்டிலுமிழந்தனமகளிர்வான்மணித்
தொட்டிலுமிழந்தனமகவுஞ்சோரவே. (உ0ச)

ஒளிதுறந்தனமுகமுயிர்துறந்தென
துளிதுறந்தனமுகிற்றொகையுந்தூயநீர்த்
தளிதுறந்தனபரிதானயானையும்
களிதுறந்தனமலர்க்கள்ளுண்வண்டினே. (உ0ரு)

நிழல்பிரிந்தனகுடைநெடுங்கணேழையர்
குழல்பிரிந்தனமலர்குமரர்தாளிணை
கழல்பிரிந்தனசினக்காமன்வாளியும்
அழல்பிரிந்தனதுணைபிரிந்தவன்றிலே. (உ0சா)

தாரொலிநீத்தனபுரவிதண்ணுமை
வாரொலிநீத்தனமழையின்விம்முறும்
தேரொலிநீத்தனதெருவுந்தெண்டிரை
நீரொலிநீத்தனநீத்தம்போலவே. (உ0எ)

முழவெழுமொலியிலமுறையின்யாழ்நரம்
பெழவெழுமொலியிலவிமைப்பில்கண்ணினர்
விழவெழுமொலியிலவேறுமொன்றில
அழவெழுமொலியிலவரசவீதியே. (உ0அ)

தெள்ளொலிச்சிலம்புகள்சிலம்புபொன்மணை
நள்ளொலித்திலநளிர்கலையுமன்னவே
புள்ளொலித்திலபுனல்பொழிலுமன்னவே
கள்ளொலித்திலமலர்களிறுமன்னவே. (உ0கூ)

செய்ம்மறந்தனபுனல்சிவந்தவாய்ச்சியர்
கைம்மறந்தனபசுங்குழவிகாந்தெரி
நெய்ம்மறந்தனநெறியறிஞர்யாவரும்
மெய்ம்மறந்தனரொலிமறந்தவேதமே. (உக0)

ஆடினரழுதனரமுதவேழிசை
பாடினரழுதனர்பரித்தகோதையர்
ஊடினரழுதனருயிரினன்பரைக்
கூடினரழுதனர்குழாங்குழாங்கொடே. (உகக)

210. ஒலி உதாத்தம், அநுதாத்தம். செய்மறந்தன, கைமறந்தன, சொளிதம் வேதமறந்தன என உடையவர் தொழிலையுடைமைமேலேற்றிக்கூறினர்.

நீட்டிலகளிறுகைந்நீரின்வாய்புதல்
பூட்டிலபுரவிகள்புள்ளும்பார்ப்பினுக்
கீட்டிலவிரைபுனிற்றீன்றகன்றையும்
ஊட்டிலகறவைகன்றுருகிச்சோர்ந்தவே. (உகஉ)

மாதர்தம்மொய்ம்பினின்மகளிர்கொங்கையாம்
ஏந்திளநீர்களும்வறுமையெய்தின
சாந்தமம்மகிணர்தம்முடியிற்றையலார்
கூந்தலின்வறுமையம்மலரின்கூலமே. (உகங)

வேறு.

ஓடைநல்லணிமுனிந்தனவுயர்களிறுச்சி
சூடைநல்லணிமுனிந்தனதொடர்மனைகொடியின்
ஆடைநல்லணிமுனிந்தனவம்பொன்செயிஞ்சி
பேடைநல்லணிமுனிந்தனமென்னடைப்புறவம். (உகச)

திக்குநோக்கியதீவினைப்பயனெனச்சிந்தை
நெக்குநோக்குவோர்நல்வினைப்பயனெனநேர்வோர்
பக்கநோக்கலென்பருவரலின்பமென்றிரண்டும்
ஒக்கநோக்கியயோகருமருந்துயருழந்தார். (உகரு)

ஒவினல்லுயிருயிர்ப்பினோடுடல்பதைத்துலைய
மேவிநல்லழகெழில்கெடவிம்மனோய்விம்மத்
தாவிலேம்பொறிமறுகுறத்தயரதனென்ன
ஆவிநீக்கின்றதொத்ததவ்வயோத்திமாநகரம். (உகசு)

உயங்கியந்நகருலைவுறவொருங்குழைசுற்ற
மயங்கியேங்கினர்வயின்வயின்வரம்பிலர்தொடர
இயங்குபல்லுயிர்க்கோருயிரெனநின்றவிராமன்
தயங்குபூண்முலைச்சானகியிருந்துழிச்சார்ந்தான். (உகஎ)

அழுதுதாயரோடருந்தவரந்தணரரசர்
புழுதியாடியமெய்யினர்புடைவந்துபொருமப்

---

213. ஏந்திளநீர்களும், சாந்தம் வறுமையெய்தினவென்வினை முடிக்க.

214. சூடை - உச்சியிலணியு மொருவகையாபரணம்.

(215). திக்கு - இடம். (215). பருவரலின்பமென்பன துன்பவின்பக் கூறுபாடுகளே.

217. இயங்கு பல்லுயிர்க்கோருயிரென நின்றவிராமன் - உலகிற் சஞ்சரிக்கும் எல்லா வுயிர்களிடத்து மந்தரியாமியா யிருக்கு மிராமமூர்த்தி.

பழுதுசீரையினுடையினன்வரும்படிபாரா
எழுதுபாவையன்னாண்மனத்துனுக்கமொடெழுந்தாள். (உகஅ)

எழுந்தநங்கையைமாமியர்தழுவினரேங்கிப்
பொழிந்தவொண்கணீர்ப்புதுப்புனலாட்டினர்புலம்ப
அழிந்தசிந்தையளன்னமிதின்னதென்றறியாள்
வழிந்தநீர்நெடுங்கண்ணினள்வள்ளலைநோக்கி. (உகக)

## வேறு.

பொன்னையுற்றபொலன்கழலோய்புகழ்
மன்னையுற்றதுண்டோமற்றிவ்வன்றுயர்
என்னையுற்றதியம்பென்றியம்பினாள்
மின்னையுற்றநடுக்கத்துமேனியாள். (உஉ0)

பொருவிலெம்பிபுவிபுரப்பான்புகல்
இருவராணையுமேந்தினெனின்றுபோய்க்
கருவிமாமழைக்கற்றடங்கண்டுநான்
வருவெனீண்டுவருந்தலைநீயென்றான். (உஉக)

நாயகன்வனநண்ணலுற்றானென்றும்
மேயமண்ணிழந்தானென்றும்விம்மலள்
நீய்வருந்தலைநீங்குவென்யானென்ற
தீயவெஞ்சொல்செவிசுடத்தேம்புவாள். (உஉஉ)

துறந்துபோமெனச்சொற்றசொற்றேறுமோ
உறைந்தபாற்கடற்சேக்கையுடனீஇ
அறந்திறம்புமென்றையனயோத்தியில்
பிறந்தபின்பும்பிரிவிலளாயினாள். (உஉங)

அன்னதன்மையளையனுமன்னையும்
சொன்னசெய்யத்துணிந்ததுதூயதே
என்னையென்னையிருத்தியென்றானென்று
உன்னவுன்னவுயிருமிழாநின்றாள். (உஉச)

வல்லரக்கரின்மால்வரைபோய்விழுந்
தல்லரக்கினுருக்கழல்காட்டயற்
கல்லரக்குங்கடுமையவல்லநின்
சில்லரக்குண்டசேவடிப்போதென்றான். (உஉரு)

---

221. இருவர் - ஈண்டு தந்தைதாயரை. கருவியென்றது மின்னு முழக்கு முதலியவற்றின் றொகுதியை.

பரிவிகந்தமனத்தொடுபற்றிலா
தொருவுகின்றனையூழியருக்கனும்
எரியுமென்பதியாண்டையதீண்டுநின்
பிரிவினுஞ்சுடுமோபெருங்காடென்றாள். (உ௨௬)

அண்ணலன்னசொற்கேட்டனனன்றியும்
உண்ணிவந்தகருத்துமுணர்ந்தனன்
கண்ணினீர்க்கடல்கைவிடநேர்கிலன்
எண்ணுகின்றனனென்செயற்பாற்றென. (உ௨௭)

அனையவேலையகன்மனையெய்தினள்
புனையுஞ்சீரந்துணிந்துபுனைந்தனள்
நினைவில்வள்ளல்பின்வந்தயனின்றனள்
பனையினீள்கரம்பற்றியகையினாள். (உ௨௮)

ஏழைதன்செயல்கண்டவர்யாவரும்
வீழுமண்ணிடைவீழ்ந்தனர்வீந்திலர்
வாழுநாளுளவென்றபின்மாள்வரோ
ஊழிபேரினுமுய்குநருய்வரே. (உ௨௯)

தாயர்தவ்வையர்தன்றுணைச்சேடியர்
ஆயமன்னியவன்பினரென்றிவர்
தீயின்மூழ்கினரொத்தனர்செங்கணான்
தூயதையலைநோக்கினன்சொல்லுவான். (உ௩௦)

முல்லையுங்கடன்முத்துமெதிர்ப்பினும்
வெல்லும்வெண்ணகையாய்விளைவுன்னுவா
யல்லைபோதவமைந்தனையாதலின்
எல்லையற்றவிடர்தருவாயென்றான். (உ௩௧)

கொற்றவன்னதுகூறலுங்கோகிலம்
செற்றதன்னகுதலையள்சீறுவாள்

223. சீராமனாகத் திருவவதரித்து பாற்கடற் பரமனாகலானும், அறத்தை நிறுத்தற் பொருட்டுத்தானு முடன்றோன்றினாளாகலானும். ஐயனயோத்தியிற் பிறந்தபின்பும் பிரிவிலளென்றதென்க.

128. நினைவில் - நினைக்குமளவினை. பனையினீள்கரம் பற்றியகையினாள். தன்னைப்பாணிக்கிரகணஞ் செய்தமையுணர்த்துதற்கு.

231. சனகியை இலங்கையர்கோன் சிறைவைக்குமென்ப துணர்ந்த எல்லையற்ற யிடர்தருவாயென்ற தென்க.

உற்றுநின்றதுயரமிதொன்றுமே
எற்றுறந்தபினின்பங்கொலாமென்றாள். (உ௩உ)

பிறிதொர்மாற்றம்பெருந்தகைபேசலன்
மறுகிவீழ்ந்தழுமைந்தருமாதரும்
செறிவில்வீழ்ந்தநெடுந்தெருச்சென்றனன்
நெறிபெருமையரிதினினீங்குவான். (உ௩௩)

சீரைசுற்றித்திருமகள்பின்செல
மூரிவிற்கையிளையவன்முன்செலக்
காரையொத்தவன்போம்படிகண்டவவ்
வூரையுற்றதுணர்த்தவொண்ணுமோ. (உ௩௪)

ஆரும்பின்னராழுதவலித்திலர்
சோருஞ்சிந்தையர்யாவருஞ்சூழ்ந்தனர்
வீரன்முன்வனமேவுதும்யாமெனாப்
போரென்றோல்லொலிகைம்மிகப்போயினார். (உ௩௫)

தாதைவாயிற்குறுகினன்சார்தலும்
கோதைவேலவன்றுயரைக்கும்பிடா
ஆதிமன்னனையாற்றுமினீரென்றான்
மாதராரும்விழுந்துமயங்கினார். (உ௩௬)

ஏத்தினார்தம்மகனைமருகியை
வாழ்த்தினாரிளையோனைவழுத்தினார்
காத்துநல்குமின்றெய்வதங்காளென்றார்
நாத்தழும்பவரற்றிநடுங்குவார். (உ௩௭)

அன்னதாயரரிதிற்பிரிந்தபின்
முன்னர்நின்றமுனிவனைக்கைதொழாத்
தன்னதாருயிர்த்தம்பியுந்தாமரைப்
பொன்னுந்தானுமோர்தேர்மிசைப்போயினான். (உ௩௮)

ஆ திருவிருத்தம் - ௫௩௩.

---

234. ஊரையுற்றதுணர்த்தவு மொண்ணுமோ - உலகமுழுதாண்டவரசன் இறந்துபடுதலை யுணர்த்துவது தன்னாலுரைப்பரிதென்றார்.

# ௫-வது, தைலமாட்டுபடலம்.

ஏவியகுரிசில்பின்யாவரேகிலார்
மாவியல்தானையம்மன்னைநீங்கலாத்
தேவியரொழிந்தனர்தெய்வமாநகர்
ஓவியமொழிந்தனவுயிரிலாமையால். (௧)

கைகணீபரந்துகாரெருடரக்கண்ணுகும்
வெய்யநீர்வெள்ளத்துமெள்ளச்சேறலால்
உய்யவேழுலகுமொன்றானநீருழல்
தெய்வமீனொத்தச்செம்பொற்றேரரோ. (௨)

மீன்புகழ்பெறவெயிலொதுங்கமேதியோ
டான்புகக்கதிரவனத்தம்புக்கனன்
கான்புகக்காண்கிலேனென்றுகல்லதர்
தான்புகமுடுகினனென்னுந்தன்மையான். (௩)

பகுத்தவான்மதிகொடுபதுமத்தண்ணலே
வகுத்தவாணுதலியர்வதனராசிபோல்
உகுத்தகண்ணீரினிலொளியுநீங்கின
முகுழ்த்தழகிழந்தனமுளரியீட்டமே. (௪)

அந்தியில்வெயிலொளியழியவானகம்
நந்தலில்கைகயன்பயந்தநங்கைதன்
மந்தரையுரையெனுங்கடுவின்மட்கிய
சிந்தையினிருண்டதுசெம்மைநீங்கியே. (௫)

பரந்துமீனரும்பியபசலைவானகம்
அரந்தையின்முனிவரனறைந்தசாபத்தால்
நிரந்தரமிமைப்பிலாநெடுங்கண்ணீடிய
புரந்தரனுருவெனப்பொலிந்ததெங்குமே. (௬)

---

2. சோமுகாசுரனென்பவன் வேதங்களைக்கவர்ந்து கடலில் ஒளித்த போது அவ்வேதத்தை மீட்டுக்கொண்டுவர மச்சாவதாரங் கொண்டு அவனுயிரை வாங்கினமையால் 'உய்யவேழுலகுமொன்றான நீருழல்' தெய்வமீனொத்தது என்றார்.

3. மாலைக்காலத்தில் ஆவினமுதலிய மனையின்மீட லுண்மையாகலின் 'மேதியோ டான்புக' என்றார்.

4. பகுத்தவான்மதி - அட்டமிச்சந்திரன்.

6. அரந்தையின்முனிவரன் - துருவாசன். புரந்தரன் - இந்திரன்.

திருநகர்க்கியோசனையிரண்டுசென்றொரு
விரைசெறிசோலையைவிரைவினெய்தினான்
இரதநின்றிழிந்தபினிராமனின்றுணை
உரைசெறிமுனிவரோடுறையுங்காலையே. (௭)

வட்டமோரோசனைவளைவிற்றாய்நடு
எட்டனையிடவுமோரிடமிலாவகைப்
புட்டகுசோலையின்புறத்துப்போர்த்தென
விட்டதுகுருசிலைவிடாதசேனையே. (௮)

குயின்றியகுலமணிநதியின்கூலத்தில்
பயின்றுயர்வாலுகப்பரப்பில்பைம்புலில்
வயின்றொறும்வைகினரொன்றும்வாய்மடுத்
தயின்றிலர்துயின்றிலரழுதுவிம்மினார். (௯)

வேறு.

வாவிவிரிதாமரையின்மாமலரின்வாசக்
காவிவிரிநாண்மலர்முகிழ்த்தனையகண்ணார்
ஆவிவிரிபானுரையின்றுடையணையாக
நாவிவிரிகூழையிளநவ்வியர்துயின்றார். (௧௦)

பெரும்பகல்வருந்தினர்பிறங்குமுலைதெங்கின்
குரும்பைகள்பொருஞ்செவிலிமங்கையர்குறங்கில்
அரும்பனையகொங்கையயிலம்பனையவுண்கண்
கரும்பனையசெஞ்சொனவில்கன்னியர்துயின்றார். (௧௧)

பூவகநிறைந்தபுளினத்திரள்கடோறும்
மாவகிரினுண்கணார்மடப்பிடியின்வைகச்
சேவகமமைந்தசிறுகட்கரிகளென்னத்
தூவகலில்குந்தமறமைந்தர்கடுயின்றார். (௧௨)

தகவுமிகுதவமுதிவைதழுவவுயர்கொழுநர்
முகமுமவரருணுகர்சிலர்கடியர்முடுக
அகவுமிளமயில்களுயிரலசியனவனையார்
மகவுமுலைவருடவிளமகளிர்கடுயின்றார். (௧௩)

---

8. குரிசில் - ஸ்ரீராமன்.

10. காவிவிரிதாமரை - நாண்மலர்.

12. சேவகம் - விலங்கின் படுக்கையிடம். தூ - (பகைவர்) வான்.

மாகமணிவே திகையின்மா தவிசெய்பந்தல்
கேகயநெடுங்குலமெனச்சிலர்கிடந்தார்
பூகவனமூடுபடுகர்ப்புளினமுன்றில்
தோகையிளவன்னநிரையிற்சிலர்துயின்றார். (௧௪)

சம்பகநறும்பொழில்களிற்றருணவஞ்சிக்
கொம்பழுதொசிந்தினவெனச்சிலர்குழைந்தார்
வம்பளவுகொங்கைபொருவாலுகம்வளர்க்கும்
அம்பவளவல்லிகளெனச்சிலரசைந்தார். (௧௫)

குங்குமமலைக்குளிர்பனிக்குழுமியென்னத்
துங்கமுலையிற்றுகளுறச்சிலர்துயின்றார்
அங்கையணையிற்பொலிவழுங்கமுகமெல்லாம்
பங்கையமுகிழ்த்தனவெனச்சிலர்படிந்தார். (௧௬)

தொடுத்தகலிடைச்சிலர்துவண்டனர்துயின்றார்
அடுத்தவடையிற்சிலரழிந்தனரயர்ந்தார்
உடுத்ததுகில்சுற்றொருதலைச்சிலருறைந்தார்
படுத்ததளிரிற்சிலர்பசந்தனரசந்தார். (௧௭)

எனையருமின்னணமிறங்கினருறங்கா
மானவனுமந்திரிசுமந்திரனைவாவென்
றானமில்பெருங்குணமொருங்குடையவுன்னால்
மேனிகழ்வதுண்டவுரைகேளெனவிளம்பும். (௧௮)

வேறு.

பூண்டபேரன்பினுரைப்போக்குவதரிதுபோக்கா
தீண்டுநின்றேகல்பொல்லாதெந்தைநீயிரதமின்னே
தூண்டினைமீளநோக்கிச்சுவட்டையோர்ந்தென்னையங்கே
மீண்டனனென்னமீள்வரிதுநின்னைவேண்டிற்றென்றான். (௧௯)

செவ்வியகுரிசில்கூறத்தேர்வலான்செப்புவானவ்
வெவ்வியதாயிற்றீயவிதியினின்மேலென்போலாம்
இவ்வயினின்னைநீக்கியின்னுயிர்தீர்ந்தின்றேகி
அவ்வயினையகாண்டற்கமைதலாலரியனென்றான். (௨௦)

---

14. மாகம் - விண்ணுலகு.

18. மானவன் - மனுமரபிற்றோன்றினவன் என்னும்பொருள்மேல் நிற்றலால் தத்திதாந்தபதம்.

21. என்கு - எதிர்காலத்தில்வந்த தன்மை யொருமைமுற்று.

## வேறு.

தேவியுமிளவலுந்தொடரச்செல்வனைப்
பூவியல்கானகம்புகவுய்த்தேனென்கோ
கோவினையுடன்கொடுகுறுகினேனென்கோ
யாவதுகூறுகேனிரும்பினெஞ்சினேன். (உக)

தாருடைமலரினுமொதுங்கத்தக்கிலா
வாருடைமுலையொடுமதுகைமைந்தரைப்
பாரிடைச்செலுத்தினேன்பழையநண்பினேன்
தேரிடைவந்தனென்றீதிலேனென்கோ. (உஉ)

வன்புலக்கன்மனமதியில்வஞ்சனேன்
என்புலப்புறவுடைந்திரங்குமன்னன்பால்
உன்புலக்குரியசொல்லுணர்த்தச்செல்கெனோ
தென்புலக்கோமகன்றாதிற்செல்கெனோ. (உங)

நாற்றிசைமாந்தருநகரமாக்களும்
தேற்றினர்கொணர்வருன்சிறுவன்றன்னையென்
றாற்றினவரசனையயவெய்யவென்
கூற்றுறழ்சொல்லினாற்கொலைசெய்வேன்கொலோ. (உச)

அங்கிமேல்வேள்விசெய்தரிதிற்பெற்றநின்
சிங்கவேறகன்றதென்றுணர்த்தச்செல்கனோ
எங்கள்கோமகற்கினியென்னிற்கேகயன்
நங்கையேகடைமுறைநல்லள்போலுமால். (உரு)

முடிவுறவின்னனமொழிந்தபின்னரும்
அடியுறத்தழுவினனழுங்குபேரரா
இடியுறத்துவளுவதென்னுமின்னலன்
படியுறப்புரண்டனன்பலவும்பன்னினான். (உசு)

தடக்கையாலெடுத்தவற்றழுவிக்கண்ணநீர்
துடைத்துவேறிருத்திமற்றினையசொல்லினான்

22. ஆய்ந்து மாலையாகத்தொடுத்த மலருமிறைவி நடக்கப்பாதங்களை வருத்துதலின் 'தாருடைமலரினு மொதுங்கத்தக்கிலா' என்றார். வாருடைமுலை - கச்சணிந்தமுலை, என்பதன்றி வாருடைகின்றமுலையெனினுமமையும்.

25. அங்கிமேல் வேள்விசெய்து - யாகாக்கினிமேல் அவிப்பாகஞ்செய்து மகவருவேள்வி.

அடக்குமைம்பொறியொடுகரணத்தப்புறம்
கடக்கும்வாலுணர்வினுக்கணுகுங்காட்சியான். (உஎ)

பிறத்தலென்றுற்றபின்பெறுவயாவையும்
திறத்துளியுணர்வதோர்செம்மையுள்ளத்தாய்
புறத்துறுபெரும்பழிபொதுவின்றெய்தலும்
அறத்திறமறத்திறயோவவலமுண்டெனு. (உஅ)

முன்புநின்றிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்புநின்றுறுதியைப்பயக்கும்பேரறம்
இன்பம்வந்துறுமெனினினியதாயிடைத்
துன்பம்வந்துறுமெனிற்றுறக்கலாகுமோ. (உகூ)

நிறப்பெரும்படைக்கலநிறத்தினேருற
மறப்பயன்விளைக்குறும்வன்மையன்றரோ
இறப்பினுந்திருவெலாமிழப்பவெய்தினும்
துறப்பிலரறமெனல்சூரராவதே. (௩௦)

கான்புறஞ்சேறலிலருமைகொண்டலால்
வான்பிறங்கியபுகழ்மன்னர்தொல்குலம்
யான்பிறந்தறத்தினின்றிழுக்கிற்றென்னவோ
ஊன்றிறந்துயிர்குடிக்துழலும்வேலினுய். (௩க)

வினைக்கருமெய்மையன்வனத்துள்விட்டனன்
மனைக்கரும்புதல்வனையென்றன்மன்னவன்
தனக்கருந்தவமதுதலைக்கொண்டேகுதல்
எனக்கருந்தவமிதிற்கிரங்கலெந்தைநீ. (௩உ)

முந்தினைமுனிவனையிறைஞ்சிமுற்றுமென்
வந்தனைமுதலியமாற்றங்கூறினை
எந்தையையவனொடுமெய்தியீண்டெனச்
சிந்தனையுணர்த்துதியென்றுசெப்புவாய். (௩௩)

முனிவனையெம்பியைமுறையினின்றரும்
புனிதவேதியர்க்குமேலுறைபுத்தேளிர்க்கும்

---

27. அடக்குமைம்பொறியொடு கரணத்தப்புறங் கடக்கும் வாலுணர்வினுக்கணுகுங் காட்சியின் என்முர் - ஐம்பொறியுங் கரணநான்குங் கடந்த மெய் யுணர்ச்சியுடையார் வாலறிவினுக் கண்மையனுன இராமமூர்த்தி.

28. உளி - மூன்முவதன் பொருள்படுவதோர் இடைச்சொல்,

29. ஆன்மாவோடுகூடக் கலந்துளது என்பதுதோன்ற நின்று என்முர்.

இனியனவிழைத்தியென்றியம்பியெற்பிரி
தனிமையுந்தீர்த்தியென்றுரைத்திதன்மையால். (௩௪)

வெவ்வியதன்னையால்விளைந்ததீண்டொரு
கவ்வையென்றிறையுந்தன்கருத்தினோக்கலன்
எவ்வருளென்வயின்வைத்ததின்சொலால்
அவ்வருளவன்வயினருளுகென்றியால். (௩௫)

வேண்டினனிவ்வரமென்றுமேலவன்
ஈண்டருளெம்பிபாணிறுவியேகினை
பூண்டமாதவனெடுங்கோயில்புக்கென
தாண்டகைவேந்தனையவலமாற்றிப்பின். (௩௬)

ஏழிரண்டாண்டுநீத்தீண்டவந்துனைத்
தாழ்குவன்றிருவடிதளரலீண்டெனச்
சூழிவெங்கடகளிற்றரசற்சொல்லிப்பின்
வாழிமாதவன்சொலான்மனந்தெருட்டுவாய். (௩௭)

முறைமையாலெற்பயந்தெடுத்தமூவர்க்கும்
குறைவிலாவென்னொடுவணக்கங்கூறிப்பின்
இறைமகன்றுயர்துடைத்திருத்திமாடென்றான்
மறைகளைமறைந்துபோய்வனத்துள்வைகுவான். (௩௮)

ஆள்வினையாண்மையிற்றிறப்பலன்றெனாத்
தாள்முதல்வணங்கியதனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர்நிலையென்றுன்னுவான்
வாழ்வினைநோக்கியைவணங்கிநோக்கினான். (௩௯)

அன்னவள்கூறுவாளரசற்கத்தையர்க்
கென்னுடைவணக்கமுன்னியம்பியானுடைப்
பொன்னிறப்பூவையுங்கிளியும்போற்றுகென்
றன்னுமென்றங்கையர்க்குணர்த்துவாயென்றாள். (௪௦)

தேர்வலானவ்வுரைகேட்டுத்தீங்குறின்
யார்வலாருயிர்துறப்பெளிதன்றேயெனாப்

---

38. குறைவிலாவென்னொடு வணக்கம் - தீர்க்கதெண்டம். மறையனந் தங்கடந்தானாயினும் தாய்மொழியான் கான்போந் திருத்தலின் 'மறைகளை மறைந்துபோய் வனத்துள்வைகுவான்' என்றார்.

39. வாழ்வினைநோக்கி - இல்வாழ்க்கையின் வழியைநோக்கிய சீதாபிராட்டியை, அல்லது தன்னை வழிபடுவோர்க்கு வாழ்வினையருள்பவளெனினுமமையும்.

போர்வலான் றடுக்கவும்பொருமிவிம்மினுன்
சோர்விலாளறிவிலாத்துயர்க்குச்சோர்கின்றுன். (சக)

ஆறினன்போற்சிறிதவலமவ்வழி
வேறிலாவன்பினுய்விடைதந்நீகெனு
ஏறுசேவகற்ருெழுதிளையமைந்தனைக்
கூறுவதியாதெனவினையகூறினுன். (சஉ)

உரைசெய்தெங்கோமற்குறுதியாக்கிய
தரைகெழுசெல்வத்தைத்தவிரமற்ருெரு
விரைசெறிகுழலிமாட்டளித்தமெய்யனை
அரசனென்றின்னமொன்றறையற்பாலதோ. (சங)

கானகம்பற்றிநற்புதல்வன்காயுணப்
போனகம்பற்றியபொய்யின்மன்னர்க்கிங்
கூனகம்பற்றியவுயிர்கொடின்னும்போய்
வானகம்பற்றிலாவலிமைகூறென்றுன். (சச)

மின்னுடன்பிறந்தவாட்பரதவேந்தற்கு
மன்னுடன்பிறந்திலென்மண்கொண்டாள்கின்ற
தன்னுடன்பிறந்திலென்றம்பிமுன்னலென்
என்னுடன்பிறந்தயான்வலியனென்றியால். (சரு)

ஆரியனிளவலைநோக்கியையவிச்
சீரியவல்லனசெப்பலென்றபின்
பாரிடைவணங்கினன்பதைக்குநெஞ்சினன்
தேரிடைவித்தகன்சேறன்மேயினுன். (சசு)

கூட்டினன்றேர்பொறிகூட்டிக்கோன்முறை
பூட்டினன்புரவியப்புரவிபோநெறி
காட்டினன்காட்டித்தன்கல்விமாட்சியால்
ஓட்டினனொருவருமுணர்வுறுமலே. (சஎ)

தையறன்கற்புந்தன்றகவுந்தம்பியும்
மையறுகருணையுமுணர்வும்வாய்மையும்
செய்யதன்வில்லுமேசேமமாகக்கொண்
டையனும்போயினுனல்லினுப்பணே. (சஅ)

42. ஏறுசேவகன் - ஈண்டு சீராமன்.

44. வானகம்பற்றிலாவலிமை - துக்கமடையாதிருப்பது.

47. பொறி - எந்திரம்.

## வேறு.

பொய்வினைக்குதவும்வாழ்க்கையரக்கரைப்பொருந்தியன்னார்
செய்வினைக்குதவுநட்பாற்செல்பவர்த்தடுப்பதேய்க்கும்
மைவிளக்கியதேயன்னவயங்கிருளரக்கவானம்
கைவிளக்கெடுத்ததென்னவந்தது கடவுட்டிங்கள். (சகூ)

மருமத்துத்தன்னையூன்றுமறக்கொடும்பாவந்தீர்க்கும்
உருமொத்தசிலையினேரையொருப்படுத்துதவிநின்ற
கருமத்தின்வினைவையெண்ணிக்களிப்பொடுகாணவந்த
தருமத்தின்வதனமென்னப்பொலிந்தது தனிவெண்டிங்கள். (௫௦)

காம்புயர்கானஞ்செல்லுங்கரியவன்வறுமைநோக்கித்
தேம்பினகுவிந்தபோலுஞ்செங்கழுநீருஞ்சேரைப்
பாம்பினதலையவாகிப்பரிந்தனகுவிந்துசாய்ந்த
ஆம்பலுமென்றபோதுநின்றபோதலர்வதுண்டோ. (௫௧)

அஞ்சனக்குன்றமன்னவழகனுமழகன்றன்மேல்
எஞ்சலில்பொன்போர்த்தன்னவிளவலுமிந்துவென்பான்
வெஞ்சிலைப்புருவத்தாடன்மெல்லடிக்கேற்பவெண்ணூற்
பஞ்சிடைப்படுத்தாலென்னவெண்ணிலாப்பரப்பப்போனார். (௫௨)

சிறுநிலைமருங்குல்கொங்கையேந்தியசெல்வமென்னும்
நெறியிருங்கூந்தனங்கைசீறடிநீர்க்கொப்பூழின்
நறியனதொடர்ந்துசென்றுநடந்தெனினவையினீங்கும்
உறுவலியன்பினூங்கொன்றுண்டெனவுணர்வதுண்டோ. (௫௩)

பரிதிவானவனுங்கீழ்பாற்பருவரைபற்றுமுன்னம்
திருவினுயகனுந்தென்பால்யோசனையிரண்டுசென்றான்
அருவிபாய்கண்ணும்புண்ணுயழிகின்றமனமுந்தானும்
துரிதமான்றேரிற்போனான்செய்ததுசொல்லலுற்றாம். (௫௪)

கடிகையோரிரண்டுமூன்றிற்கடிமதிலயோத்திகண்டான்
அடியிணைதொழுதானுதிமுனிவனையவனுமுற்ற
படியெலாங்கேட்டுநெஞ்சிற்பருவரலுழந்தான்முன்னே
முடிவெலாமுணர்ந்தானந்தோமுடிந்தனன்மன்னனென்றான். (௫௫)

நின்றுயர்பழியையஞ்சிநேர்ந்திலன்றடுக்கவள்ளல்
ஒன்றுநானுரைத்ததேனுக்கான்றருமத்திற்குறுதிபார்ப்பான்

51. கரியவன் - ஸ்ரீராமன்.

வென்றவருளரேமேலைவிதியினையென்றுவிம்மிப்
பொன்றிணிமன்னன்கோயில்சுமந்திரனோடும்போனான். (௫௬)

தேர்கொண்டுவள்ளல்வந்தானென்றுதஞ்சிந்தையுந்த
ஊர்கொண்டதிங்களன்னமன்னனையுழையர்சுற்றக்
கார்கொண்டமேனியானைக்கண்டிலர்கண்ணில்வற்றா
நீர்கொண்டநெடுந்தேர்ப்பாகனிலைகண்டேநிலையிற்பேர்ந்தார். (௫௭)

இரதம்வந்துற்றதென்றாங்கியாவருமியம்பலோடும்
வரதன்வந்தானென்றுமன்னனுமயக்கந்தீர்ந்தான்
புரைதபுகமலநாட்டம்பொருக்கெனவிழித்துநோக்கி
விரதமாதவனைக்கண்டான்வீரன்வந்தனனோவென்றான். (௫௮)

இல்லையென்றுரைக்கலாற்றானேங்கினன்முனிவனின்றான்
நல்லவன்முகமேநம்பிநடந்திலனென்னுமாற்றம்
சொல்லலுமரசன்சோர்ந்தான்றுயருறுமுனிவனுமிவ்
வல்லல்காண்கில்லேனென்றுவாங்குநின்றகலப்போனான். (௫௯)

நாயகன்பின்னுந்தன்றேர்ப்பாகனைநோக்கிநம்பி
சேயனோவணியனோவென்றுரைத்தலுமனையான்செய்ய
வேயுயர்கானந்தானுந்தம்பியுமிதிலைப்பொன்னும்
போயினனென்றானென்றபோழ்தத்தேயாவிபோனான். (௬௦)

இந்திரன்முதல்வராயகடவுளர்யாருமீண்டிச்
சந்திரனனையதாங்கோர்மானத்தின்றலையிற்றாங்கி
வந்தனனெந்தைதந்தையெனமனங்களித்துவள்ளல்
உந்தியானுலகினும்பர்மீள்கிலாவுலகத்துய்த்தார். (௬௧)

உயிர்ப்பிலன்றுடிப்புமில்லனென்றுணர்ந்துருவந்தீண்டி
அயிர்த்தனனோக்கிமன்னற்காருயிரின்மைதேறி
மயிற்குலமனையநங்கைகோசலைமறுகிவீழ்ந்தாள்
வெயிற்சுடுகோடைதன்னிலென்பிலாவுயிரின்வேவாள். (௬௨)

இருந்தவந்தணனோடெல்லாமீன்றவன்றன்னையீனப்
பெருந்தவஞ்செய்தநங்கைகணவனிற்பிரிந்துதெய்வ
மருந்திழந்தவரின்விம்மிமணிபிரியரவின்மான்றி
அருந்துணைபிரிந்தவன்றிற்பெடையெனவரற்றலுற்றாள். (௬௩)

---

57. ஊர் - ஊர்கோள்.
61. மீள்கிலாப்பதமென்பது, ஒளிசூழ்பரமபதம்.
63. இருந்தவந்தணன் - அயன்.

வேறு.

தானே தானே தஞ்சமிலான்றனகவில்லான்
போனான்போனானெங்களைநீத்திப்பொழுதென்னா
வானீர்சுண்டியண்ணறவற்றிமறுகுற்ற
மீனேயென்னமெய்தடுமாறிவிழுகின்றாள். (௬௪)

ஒன்றோநன்னாட்டுய்க்குவரிந்நாட்டுயிர்காப்பார்
அன்றேமக்கட்பெற்றுயிர்வாழ்வார்க்கவமுண்டே
இன்றேவந்தீண்டஞ்சலெனாதெம்மகனென்பான்
கொன்றானன்றோதந்தையையென்றாள்குலைகின்றாள். (௬௫)

நோயும்மின்றிநோன்கதிர்வாள்வேலிவையின்றி
மாயுஞ்செல்வமக்களினாலோமறமன்னன்
காயும்புள்ளிக்கர்க்கடநாகங்கனிவாழை
வேயும்போன்றானென்றுமயங்காவிழுகின்றாள். (௬௬)

வடித்தாழ்கூந்தற்கேகயன்மாதேமதியாலே
பிடித்தாய்வையம்பெற்றனைபோவாவரமின்னே
முடித்தாயன்றேமந்திரமென்றாண்முகில்வாய்மின்
துடித்தாலென்னமன்னவன்மார்பிற்றுவள்கின்றாள். (௬௭)

அருந்தோரானைச்சம்பரனைப்பண்டமர்வென்றாய்
இருந்தார்வானோருன்னருளாலேயினிதிந்நாள்
விருந்தாகின்றாயென்றனள்வேழத்தரசொன்னைப்
பெருந்தாளன்பிற்சூழ்பிடியென்னப்பிரிவுற்றாள். (௬௮)

வேள்விச்செல்வந்துய்த்திகொன்மெய்ம்மைத்துணையின்மை
சூழிச்செல்வந்துய்த்திகொலோமனுநூலின்
வாழிச்செல்வந்துய்த்திகொன்முன்னென்றலள்வானோர்
கேள்விச்செல்வந்துய்க்கவயிற்றோர்கிளைதந்தாள். (௬௯)

வேறு.

ஆழிவேந்தன்பெருந்தேவியன்னபன்னியழுதரற்றத்
தோழியன்னசுமித்திரையுந்துளங்கியேங்கியுயிர்சோர
ஊழிதிரிவதெனக்கோயிலுலையும்வேலைமற்றொழிந்த
மாழையுண்கட்டேவியருமயிலின்குழாத்தின்வந்திரைத்தார். (௭௦)

---

66. ஞெண்டு, பாம்பு, வாழை, வேய், இவை கேடுறுங்காலத்தவற்றின் கருவே நாசமெய்துவித்தலின், காயும் புள்ளிக்கர்க்கட நாகங்கனி வாழைவேயும் போன்றானென்றார். 'நண்டுசிப்பிவேய்கதலி நாசமுறுங்காலத்திற் கொண்ட கருவழிக்குங்கொள்கைபோல்' என்றார் பிறரும்.

துஞ்சினானைத் தம்முயிரின் றுணையைக்கண்டார் துணுக்கத்தான்
நஞ்சுகவர்ந்தாலெனவுடலுநடுங்காநின்றாரென்றாலும்
அஞ்சியழுங்கிவிழுந்திலராலன்பிற்றறுகண்பிறிதுண்டோ
வஞ்சமில்லாமனத்தானைவானிற்றொடர்வான்மனம்வலித்தார். (எக)

அளங்கொளளக்கரிரும்பரப்பிலண்டருலகிலப்புறத்தில்
விளங்குமாதர்கற்பினரிவரின்யாவரெனநின்றார்
களங்கநீத்தமதிமுகத்தார்கானவெள்ளங்கால்கோப்பத்
துளங்கலில்லாத்தனிக்குன்றிற்றொக்கமயிலிற்சூழ்ந்திருந்தார். ()

கைத்தசொல்லாலுயிரிழந்தும்புதல்வர்பிரிந்துங்கடையோட
மெய்த்தவேந்தன்றிருவுடம்பைப்பிரியாதரற்றிவிட்டிலரால்
பித்தமபக்காஞ்சுறவெறியும்பிறவிப்பெரியகடல்கடக்க
உய்த்துமீண்டநாவாயிற்றும்போவாரொக்கின்றார். (எ௩)

மாதரார்களறுபதினாயிரருமுள்ளம்வலித்திருப்பக்
கோதில்குணத்துக்கோசலையுமிளையமாதுங்குழைந்தேங்கச்
சோதிமணித்தேர்ச்சுமந்திரன்சென்றரசன்றன்மைசொலவந்த
வேதமுனிவன்விதிசெய்தவினையைநோக்கிவிம்முவான். (எச)

செய்யக்கடவசெயற்குரிவசிறுவரீண்டையாரல்லர்
எய்தக்கடவபொருளெய்தாதிகவாவென்னவியல்பென்ன
மையற்கொடியாண்மகனீண்டுவந்தான்முடித்துமற்றென்ன
தையற்கடனின்றெடுத்தவனைத்தயிலக்கடலின்றலையுய்த்தான். ()

தேவிமாரையிவற்குரிமைசெய்புநாளிற்செந்தீயின்
ஆவிநீத்திரெனநீக்கியரிவைமார்களிருவரையும்
தாவில்கோயிற்றலையிருத்தித்தண்டார்ப்பரதற்கொண்டணைகென்
றேவினான்மன்னவனோலையெழுதிமுடங்கல்கொடுத்தவரை. (எ௬)

போனாரவருங்கேகயர்கோன்பொன்மாநகரம்புகவெய்த
ஆனவறிவினருந்தவனுமறமார்பள்ளியதுசேர்ந்தான்
சேனாபதியிற்சுமந்திரனைச்செயற்பாற்குரியசெய்கென்னா
மேனாஞ்சொன்னமாந்தர்க்குவிளைந்ததினிநாம்விளம்புவாம். (எஎ)

மீனீர்வேலைமுரசியம்பவிண்ணோரேத்தமண்ணிறைஞ்சத்
தூநீரொளிவாள்புடையிலங்கச்சுடர்த்தேரேறித்தோன்றினான்

---

74. வேதமுனிவன் - வசிட்டமுனிவன்.

76. செந்தீயினாவி நீத்திரென்றது - சகமனத்தை.

வானைபுக்கானரும்புதல்வன்மக்களகன்றார்வருமளவும்
யானைகாப்பனிவ்வுலகையென்பான்போலவெறிகதிரோன். (௭அ)

வருந்தாவண்ணம்வருந்தினார்மறந்தார்தம்மைவள்ளலுமங்
கிருந்தானென்றேயிருந்தார்களெல்லாமெழுந்தாரருளிருக்கும்
பெருந்தாமரைக்கட்கருமுகிலைப்பெயர்ந்தார்காணார்பேதுற்றார்[டார்.
பொருந்தாநயனம்பொருந்திநமைப்பொன்றச்சூழ்ந்தவெனப்புரண்

எட்டுத்திசையுமோடுவாரெழுவார்விழுவாரிடர்க்கடலுள்
விட்டுநீத்தானமையென்பார்வெய்யவையன்வினையென்பார்
ஒட்டிப்படர்ந்ததண்டகமிவ்வுலகத்துளதன்றேவுணர்வைச்
சுட்டிச்சேர்தலாற்றுதுமேற்றொடாதுந்தேரின்சுவடென்பார். ()

தேரின்சுவடுநோக்குவார்திருமாநகரின்மிசைதிரிய
ஊருந்திகிரிக்குறியொற்றியுணர்ந்தாரெல்லாமுயிர்வந்தார்
ஆருமஞ்சலையன்போயயோத்தியடைந்தானெனவசனிக்
காருங்கடலுமொருவழிக்கொண்டார்த்தவென்னக்கடிதார்த்தார்.

மானவரவின்வாய்த்திய வளைவான்றளைவாளெயிற்றின்வழி
ஆனகடுவுக்கருமந்தாவருந்துமமுதம்பெற்றுய்ந்து
போனபொழுதிற்புகுந்தவுயிர்பொறுத்தாரொத்தார்பொருவரிய
வேனின்மதனைமதனழித்தான்மீண்டானென்னவாண்டையார். ()

ஆறுசெல்லச்செல்லத்தேராழிகண்டாரயலப்பால்
வேறுசென்றநெறிகாணார்விம்மாநின்றவுவகையராய்
மாறியுலகம்வகுத்தநள்வரம்புகடந்துமண்முழுதும்
ஏறியொடுங்குமெறிகடல்போலெயின்மாநகரமெய்தினார். (அ௩)

புக்காரரசன்பொன்னுலகம்போனானென்னும்பொருள்கேட்டார்
உக்காரநெஞ்சமுயிருகத்தாருற்றதெம்மானுரைப்பரிதால்
தக்கான்போனான்வனமென்னுந்தகையுமுணர்ந்தார்மிகையாவி
அக்காலத்தேயகலுமோவவதியென்றொன்றுளதானால். (அ௪)

மன்னற்கல்லார்வனம்போனமைந்தற்கல்லார்வாங்கரிய
இன்னற்சிறையினிடைப்பட்டாரிருந்தார்நின்றவருந்தவனும்
உன்னற்கரியபழிக்கஞ்சியன்றோவொழிந்ததியானென்று
பன்னற்குரியபலநெறியும்பகர்ந்துபதப்பைநீக்கினான். (அ௫)

82. வேனின்மதனை மதனழித்தான் - சிவனையொப்பானாகிய ஸ்ரீராமன்.
84. பொன்னுலகம்போனான் - துறக்கமடைந்தனன்.

வெள்ளத்திடைவாழ்வடவனலையஞ்சிவேலைகடவாத
பள்ளக்கடலின்முனிபணியாற்பையுணகரம்வைகிடமேல்
வள்ளற்றுறைதபணியென்னும்வானோர்தவத்தால்வயங்கிருளின்
நள்ளிற்போனவரிசிலைக்கைநம்பிசெய்கைநடத்துவாம். (அகூ)

ஆ திருவிருத்தம் - கூகக.

## கா-வது, கங்கைப்படலம்.

வெய்யோனொளிதன்மேனியின்விரிசோதியின்மறையப்
பொய்யோவெனுமிடையாளொடுமிளையானொடும்போனான்
மையோமரகதமோமறிகடலோமழைமுகிலோ
ஐயோவிவன்வடிவென்பதொரழியாவழகுடையான். (க)

அளியன்னதொரறுன்னியகுழலாள்கடலமிர்தின்
தெளிவன்னதொர்மொழியாணிறைதவமன்னதொர்செயலாள்
வெளியன்னதொரிடையாளொடும்விடையன்னதொர்நடையான்
களியன்னமுமடவன்னமுநடமாடுவகண்டான். (உ)

அஞ்சம்பையுமையன்றனதலகம்பையுமளவா
நஞ்சங்களைவெலவாகியநயனங்களையுடையாள்
துஞ்சுங்களிவரிவண்டுகள்குழலின்படிசுழலும்
கஞ்சங்களைமஞ்சன்கழனகுகின்றநுகண்டாள். (ங)

மாகந்தமுமகரந்தமுமளகந்தருமதியின்
பாகந்தருநுதலாளொடுபவளந்தருமிதழான்
மேகந்தனிவருகின்றதுமின்னோடெனமிளிர்பூண்
நாகந்தனிவருகின்றதுபிடியோடெனநடவா. (ச)

தொளைகட்டியகிளைமுட்டியசுருதிச்சுவையமுதின்
கிளைகட்டியகருவீக்கிளரிசையிற்பசைநறவின்
விளைகட்டியின்மதுரித்தெழுகிளவிக்கிளர்விழிபோல்
களைகட்டவர்தளைவிட்டெறிகுவளைத்தொகைகண்டான். (ரு)

86. வானோர்செய்தவமே அரசன்பணியாற்கானேகச் செய்தலின். வள்ளற்றுறை பணியென்னும் வானோர்தவமென்றார்.

3. அஞ்சம்பு - மன்மதன் பூவாளியைந்தனையும், அவை மா, அசோகு, முல்லை, தாமரை, நெய்தல் என்பன.

5. சுருதிச்சுவை - இசைச்சுவை.

12

அருப்பேந்தியகலசத்துணையமுதேந்தியமதமா
மருப்பேந்தியவெனலாமுலைமழையேந்தியகுழலாள்
கருப்பேந்திரமுதலாயினகண்டாளிடர்காணாள்
பொருப்பேந்தியதோளாளொடுவிளையாடினள்போனாள். (௬)

பன்னந்துகடாளங்கொகுபடர்பந்திகள்படுநீர்
அன்னந்துயில்வதிதண்டலையயனந்துறைபுளினம்
சின்னந்தருமலர்தந்தனசெறிநந்தனவனநன்
பொன்னந்தியநதிகண்டுளமகிழ்ந்தனர்போனார். (௭)

கால்பாய்வனமுதுமேதிகள்கதிர்மேய்வனகடைவாய்
பால்பாய்வனநறைபாய்வனமலர்வாயளிபடரச்
சேல்பாய்வனகயல்பாய்வனசெங்கான்மடவன்னம்
போல்பாய்புனன்மடவார்படிநெடுநாடவைபோனார். (௮)

வேறு.

பரிதிபற்றியபல்கலன்முற்றினர்
மருதவைப்பின்வளங்கெழுநாடொரீஇச்
சுருதிகற்றுயர்தோமிலர்சுற்றுறும்
விரிதிரைப்புனற்கங்கையைமேவினார். (௯)

கங்கையென்றுங்கடவுட்டிருநதி
தங்கிவைகுந்தபோதனர்யாவரும்
எங்கள்செல்கதிவந்ததென்றேமுறு
அங்கணாயகற்காணவந்தண்மினார். (௧0)

பெண்ணினேக்குஞ்சுவையிற்பிறர்பிறர்க்
கெண்ணிநோக்கியியம்பருமின்பத்தைப்
பண்ணினேக்கும்பராவமுதைப்பசுங்
கண்ணினேக்கினருள்ளங்களிக்கின்றார். (௧௧)

எதிர்கொடேத்தினரின்னிசைபாடினர்
வெதிர்கொள்கோலினராடினர்வீரனைக்
கதிர்கொடாமரைக்கண்ணனைக்கண்ணினால்
மதுரவாரியமுதெனமாந்துவார். (௧௨)

---

10. செல்கதியென்றார் சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாகிய வந்தமிலின்பத்தழிவில் வீட்டினை. 1. [அங்கணாய] கன் - அவ்விடத்து இராமமூர்த்தி. 2. அழகிய திருக்கண்களையுடையான்.

11. பிறரென்புழிமுன்னையது இவ்வாழ்வாரை பின்னையது துறவறவொழுக்க முடையாரை. 12. வெதிர்கொள்கோலினர் - முக்கோற்பகவர்.

மனையினீங்கியமக்களைவைகலும்
நினையுநெஞ்சினர்கண்டிலர்தேடுவார்
அனையர்வந்துறவாண்டெதிர்ந்தார்களில்
இனையமாதவப்பள்ளிகொண்டெய்தினர். (௧௩)

பொழியுங்கண்ணிற்புதுப்புனலாட்டினர்
மொழியுமின்சொலின்மொய்ம்மலர்சூட்டினர்
அழிவிலன்பெனுமாரமிர்தூட்டினர்
வழியில்வந்தவருத்தத்தைவாட்டினர். (௧௪)

காயுங்கானிற்கிழங்குங்கனிகளும்
தூயதேடிக்கொணர்ந்தனர்தோன்றனீ
ஆயகங்கையரும்புனலாடினை
தீயையோம்பினைசெய்யமுதென்றனர். (௧௫)

மங்கையர்க்குவிளக்கன்னமானையும்
செங்கைபற்றினன்சேறவருந்துன்பறப்
பங்கையத்தயன்பண்டுதன்பாதத்தின்
அங்கையிற்றருங்கங்கையினாடினான். (௧௬)

கன்னிநீக்கருங்கங்கையுங்கைதொழாப்
பன்னிநீக்கரும்பாதகம்பாருளோர்
என்னினீக்குவர்யானுமின்றெற்றந்த
உன்னினீக்கினெனுய்ந்தனென்யானென்றாள். (௧௭)

வெங்கணாகக்கரத்தினன்வெண்ணிறக்
கங்கைவார்சடைக்கற்றையன்கற்புடை
மங்கைகாணநின்றாடுகின்றான்வகிர்த்
திங்கள்சூடியசெல்வனிற்றோன்றினான். (௧௮)

தள்ளுநீர்ப்பெருங்கங்கைத்தரங்கத்தால்
வள்ளிநுண்ணிடைமாமலராளொடும்

---

15. தீயையோம்பல் - வேள்விசெய்தல்.

16. பங்கயத்தயன் பண்டுதனபாதத்தினங்கையிற்றருங் கங்கை திருவிக்கிரம வடிவங்கொண்டருளிய காலத்தில் உலகினையளக்க மேலேநீட்டிய திருவடிக்கு பிரமன் ஆட்டிய இறைவன்பாதோதகம்.

18. நாகக்கரத்தினன் - யானைபோலு நீண்டகையினன் அல்லதுபாம்பணிந்தகையினன். கற்புடைமங்கைகாண நின்றாடுகின்றான் - கற்பினையுடைய சனகிகாண நீராடுகின்றான். அல்லது மலைமங்கைகாணச் சிற்சபையி லாடுகின்றான் எனவுஞ்சிலேடையாகப் பொருள்கொள்க, அல்லதுசடாமுடியையுடைய இராமமூர்த்தி கங்கையினீராடுதலால் கங்கையைச்சூடிய சிவபெருமானைப்போலத் தோன்றினானென்றும் பொருள்கொள்ளலாம்,

வெள்ளைவெண்ணிறப்பாற்கடன்மேலைநாள்
பள்ளிநீங்கியபான்மையிற்றேன்றினன். (௧௯)

வஞ்சிநாணவிடைக்குமடநடைக்
கஞ்சியன்னமொதுங்கவடியன்ன
கஞ்சநீரிலொளிப்பக்கயலுகப்
பஞ்சிமெல்லடிப்பாவையுமாடினள். (௨௦)

தேவர்தேவன்செறிசடைக்கற்றையுள்
கோவைமாலையெருக்கொடுகொன்றையின்
பூவுநாறலள்பூங்குழற்கூந்தலின்
நாவிநாண்மலர்கங்கையுநாறினள். (௨௧)

நுரைக்கொழுந்தெழுந்தோங்கிநுடங்கலால்
நரைத்தகூந்தலினங்கைமந்தாகினி
உரைத்தசீதைதனிமையையுன்னுவாள்
திரைக்கைநீட்டிச்செவிலியினட்டினள். (௨௨)

மங்கைவார்குழற்கற்றைமழைக்குலம்
தங்குநீரிடைத்தாழ்ந்துகுழைப்பன
கங்கையாற்றெடுங்காளிந்திதன்னெடும்
பொங்குநீர்ச்சுழிபோவனபோன்றவே. (௨௩)

சுழிபட்டோங்கியதூங்கொலியாற்றுத்தன்
விழியிற்சேலுகள்வானிறவெள்ளத்து
முழுகித்தோன்றுகின்றுண்முதற்பாற்கடல்
அழுவத்தன்றெழுவாளெனலாயினள். (௨௪)

செய்யதாமரைத்தாள்பண்டுதீண்டலால்
வெய்யபாதகந்தீர்த்துவிளகுவாள்
ஐயன்மேனியெலாமளைந்தாலினி
வையமாநரகத்திடைவைகுமே. (௨௫)

---

19. பாற்கடற்பரமனே சீராமனைகலின். வெண்ணிறப்பாற்கடன் மேலை நாள்பள்ளி நீங்கிய பான்மையிற் றேன்றின ளென்றார்.

21. தேவர்தேவன் - சிவபெருமான். நாவிநாண்மலர்கங்கையு நாறினளெ னத்திணை விரவிச் சிறப்பானுயர்திணை முடிபேற்றது.

22. மந்தாகினி - கங்கை.

23. குழற்கற்றை நீரிடைக்குழைப்பன கங்கையாற்றெடுங்காளிந்தியொடு நீர்ச்சுழிபோவன போன்றனவென் றுவமை கூறினர்.

24. விழியிற்சேலென்றது - விரோதவுவமை.

துறைநறும்புனலாடிச்சுருதியோர்
உறையுளெய்தியுணர்வுடையோருணர்
இறைவர்கைதொழுதேதந்தெரியோம்பிப்பின்
அறிஞர்காதற்கமைவிருந்தாகினான். (௨௬)

வருந்தித்தான்றரவந்தவமுதையும்
அருந்துநீரென்றமரரையூட்டினான்
விருந்துமெல்லடகுண்டுவிளங்கினான்
திருந்தினார்வயிற்செய்தனதேயுமோ. (௨௭)

ஆயகாலையினாயிரமம்பிக்கு
நாயகன்போர்க்குகனெனுநாமத்தான்
தூயகங்கைத்துறைவிடுந்தொன்மையான்
காயும்வில்லினன்கற்றிரடோளினான். (௨௮)

துடியனாயினன்றோற்செருப்பார்த்தபேர்
அடியனற்சிறந்தன்னநிறத்தினான்
நெடியதானைநெருங்கலினீர்முகில்
இடியினோடெழுந்தாலென்னவீட்டினான். (௨௯)

கொம்புதுத்தரிகொட்டுமுறைமையன்
பம்பைபம்புபடையினன்பல்லவத்
தம்பனம்பிக்குநாதனழிகவுள்
தும்பியீட்டம்புரைகிளைசுற்றத்தான். (௩௦)

காழமிட்டகுறங்கினன்கங்கையின்
ஆழமிட்டநெடுமையினானரை
தாழவிட்டசெந்தோலன்றயங்குறச்
சூழவிட்டதொருபுலிவாலினான். (௩௧)

பற்றொடுத்தன்னபல்சூற்கவடியன்
கற்றொடுத்தன்னபோலுங்கழலினான்
அற்றொடுத்தன்னகுஞ்சியனாளியின்
நெற்றொடுத்துநெரிந்தபுருவத்தான். (௩௨)

பெண்ணைவன்செறும்பிற்பிறங்கிச்செறி
வண்ணவன்மயிர்வார்ந்துயர்முன்கையன்

---

27. அருந்துநீரென்றது - நீரருந்துமினென்பதன்றி அருந்துகின்ற நீர் போலெனினுமாம். 29. ஈடு - பெருமை.

30. பல்லம் - ஓரெண். வப்பிரத்தியன் பெற்றுப் பல்லவமென நின்றது.

கண்ணகன்றடமார்பெனுங்கல்லினன்
எண்ணெயுண்டவிருள்புரைமேனியான். (௩௩)

கச்சொடார்த்தகறைக்கதிர்வாளினன்
நச்சராவினடுக்குறுநோக்கினன்
பிச்சராமன்னபேச்சினனிந்திரன்
வச்சிராயுதம்போலுமருங்கினான். (௩௪)

ஊற்றுமெய்ந்நறவூனொடுமீனுகர்
நாற்றமேயநகையில்முகத்தினான்
சீற்றமின்றியுந்தீயெழுநோக்குவான்
கூற்றமஞ்சக்குமுறுங்குரலினான். (௩௫)

சிருங்கிபேரமெனத்திரைக்கங்கையின்
மருங்குதோன்றுநகருடைவாழ்க்கையான்
ஒருங்குதேனொடுமீனுபகாரத்தன்
இருந்தவள்ளலைக்காணவந்தெய்தினான். (௩௬)

சுற்றமப்புறநிற்கச்சுடுகணை
விற்றுறந்தரைவீக்கியவாளொழித்
தற்றநீத்தமனத்தினனன்பினன்
நற்றவப்பள்ளிவாயிலைநண்ணினான். (௩௭)

கூவாமுன்னமிளையோன்குறுகிநீ
ஆவான்யாரெனவன்பினிறைஞ்சினான்
தேவாநின்கழல்சேவிக்கவந்தனென்
நாவாய்வேட்டுவனாயடியேனென்றான். (௩௮)

வேறு.

நிற்றியீண்டென்றுபுக்குநெடியவற்றொழுது தம்பி
கொற்றவநின்னைக்காணக்குறுகினனிமிர்ந்தகூட்டச்
சுற்றமுந்தானுமுள்ளந்தூயவன்றாயினல்லான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க்கிறைகுகனொருவனென்றான். (௩௯)

அண்ணலும்விரும்பியென்பாலழைத்திநீயவனையென்றான்
பண்ணவன்வருகவென்னப்பரிவினன்விரைவிற்புக்கான்

33. செறம்பு - பனைமரத்தின்மேலுள்ள பொருக்கு அது இக்காலத்தில் செதும்பென வழங்கும்.

36. சிருங்கிபேரம் - குகப்பெருமாள் வாழும் ஊர்.

கண்ணனைக்கண்ணினோக்கிக்கனிந்தனனிருண்டகுஞ்சி
மண்ணுறப்பணிந்துமேனிவளைத்துவாய்புதைத்துநின்றான். (௪௦)

இருத்தியீண்டென்னலோடுமிருந்திலனெல்லைநீத்த
அருத்தியன்றேனுமீனுமமுதினுக்கமைவதாகத்
திருத்தினென்கொணர்ந்தேனென்கொல்திருவுளமென்னவீரன்
விருத்தமாதவரைநோக்கிமுறுவலன்விளம்பலுற்றான். (௪௧)

அரியதாமுவப்பவுள்ளத்தன்பினாலமைந்தகாதல்
தெரிதரக்கொணர்ந்தவென்றாலமிர்தினுஞ்சீர்த்தவன்றே
பரிவினிற்றழீஇயவென்னிற்பவித்திரமெம்மனோர்க்கும்
உரியனவினிதினாமுமுண்டனமன்றோவென்றான். (௪௨)

சிங்கவேறனையவீரன்பின்னருஞ்செப்புவான்யாம்
இங்குறைந்தெறிநீர்க்கங்கையேறுதுநாளையாணர்ப்
பொங்குநின்சுற்றத்தோடும்போயுவந்தினிதுனூரில்
தங்கிநீநாவாயோடுஞ்சாருதிவிடியவென்றான். (௪௩)

கார்குலாம்நிறத்தான்கூறக்காதலனுணர்த்துவானிப்
பார்குலாஞ்செல்வநின்னையிங்ஙனம்பார்த்தகண்ணை
ஈர்கிலாக்கள்வனேன்யானின்னலினிருக்கைநோக்கித்
தீர்கிலேனானதையசெய்குவனடிமையென்றான். (௪௪)

கோதைவிற்குரிசிலன்னான்கூறியகொள்கைகேட்டான்
சீதையைநோக்கித்தம்பிதிருமுகநோக்கித்தீராக்
காதலனாகுமென்றுகருணையின்மலர்ந்தகண்ணன்
யாதினுமினியநண்பவிருத்தியீண்டெம்மொடென்றான். (௪௫)

திருநகர்தீர்ந்தவண்ணமானவதெரித்தியென்னப்
பருவரற்றம்பிகூறப்பரிந்தவன்பையுளெய்தி
இருகணீரருவிசோரக்குகனுமாண்டிருந்தானென்னே
பெருநிலக்கிழத்திநோற்றும்பெற்றிலள்போலுமென்னா. (௪௬)

விரியிருட்பகையையோட்டித்திசைகளைவென்றுமேனின்
றொருதனித்திகிரியுந்தியுயர்புகழ்நிறுவிநாளும்
இருநிலத்தெவர்க்குமுள்ளத்திருந்தனனென்னவீந்த
செருவலிவீரனென்னச்செங்கதிர்ச்செல்வன்சென்றான். (௪௭)

---

40. கண்ணன் - ஸ்ரீராமன்; கிருஷ்ணன் என்ற பிராகிருதச் சிதைவு.

46. மானவன் ஈண்டு இளையபெருமாள்.

மாலைவாய்நியமஞ்செய்துமரபுளியியற்றிவைகல்
வேலைவாயமிர்தன்னானும்வீரனும்விரித்தநாணல்
மாலைவாய்ப்பாரின்பாயல்வைகினன்வரிவில்லேந்திக்
காலைவாயளவுந்தம்பியிமைப்பிலன்காத்துநின்றான். (௪௮)

தும்பியின்குழாத்திற்சுற்றுஞ்சுற்றத்தன்றொடுத்தவில்லன்
வெம்பிவெந்தழியாநின்றநெஞ்சினன்விழித்தகண்ணன்
தம்பிநின்றானைநோக்கித்தலைமகன்றன்மைநோக்கி
அம்பியின்றலைவன்கண்ணீரருவிசோர்குன்றினின்றான். (௪௯)

துறக்கமேமுதலவாயதூயனயாவையேனும்
மறக்குமாநினையலம்மாவரம்பிலதோற்றுமாக்கள்
இறக்குமாறிதுவென்பான்போன்முன்னைநாளிறந்தான்பின்னாள்
பிறக்குமாறிதுவென்பான்போற்பிறந்தனன்பிறவாவெய்யோன். ()

செஞ்செவேசேற்றிற்றோன்றுந்தாமரைதேரிற்றோன்றும்
வெஞ்சுடர்ச்செல்வன்மேனிநோக்கினவிரிந்தவேறோர்
அஞ்சனநாயிறன்னவையனைநோக்கிச்செய்ய
வஞ்சிவாழ்வதனமென்னுந்தாமரைமலர்ந்ததன்றே. (௫௧)

நாண்முதற்கமைந்தயாவுநயந்தனனியற்றிநாமத்
தோண்முதற்கமைந்தவில்லான்மறையவர்தொடரப்போனான்
ஆண்முதற்கமைந்தகேண்மையன்பனைநோக்கியையுய
கோண்முதற்கமைந்தநாவாய்கொணருதிவிரைவினென்றான். (௫௨)

வேறு.

ஏவியமொழிகேளாவிழிபுனல்பொழிகண்ணான்
ஆவியுமுலைகின்றானடியிணைபிரிகில்லான்
காவியின்மலர்காசாக்கடன்மழையனையானைத்
தேவியோடடிதாழாச்சிந்தனையுரைசெய்வான். (௫௩)

பொய்முறையிலரேமெம்புகலிடம்வனமேயால்
கொய்முறையுறுதாராய்குறைவிலெம்வலியேமால்
செய்முறைகுற்றேவல்செய்குதுமடியோமை
இம்முறையுறவென்னவினிதிருநெடிதெம்மூர். (௫௪)

தேனுளதினையுண்டாற்றேவருநுகர்தற்காம்
ஊனுளதுணைநாயேமுயிருளவிளையாடக்

50. பிறவாவெய்யோன். (ஏனைத்தேவர்போலப்) பிறவாத சூரியன்.
55. வேடராதலின் உள்ளனத்தேவரு நுகர்தற்காமூனுலவென்றார்.

காணுளபுனலாடக்கங்கையுமுளதன்றே
நாணுளதனையுந்நீயினிதிருநடவெம்பால். (நரு)

தோலுளதுகில்போலுஞ்சுவையுளதொடர்மஞ்சம்
போலுளபறண்வைகும்புரையுளகடிதோடும்
காலுளசிலைபூணுங்கையுளகலிவானின்
மேலுளபொருளேனும்விரைவொடுகொணர்வேமால். (நசு)

ஐயிருபத்தோடைந்தாயிரருளராணை
செய்குநர்சிலைவேடர்தேவரின்வலியாரால்
உய்குதுமடியேமெங்குடிலிடையொருநாளீ
வைகுதியெனின்மேலோர்வாழ்விலைபிறிதென்றான். (நஎ)

அண்ணலுமதுகேளாவகநிறையருண்மிக்கான்
வெண்ணிறநகைசெய்தான்வீரநின்னுழையாமப்
புண்ணியநதியாடிப்புனிதரைவழிபாடுற்
றெண்ணியசிலநாளிற்குறுகுதுமினிதென்றான். (நஅ)

சிந்தனையுணர்கிற்பான்சென்றனன்விரைவோடும்
தந்தனனெடுநாவாய்தாமரைநயனத்தான்
அந்தணர்தமையெல்லாமருளொடுவிடையென்று
இந்துவினுதலாளோடிளவலொடினிதேறு. (நகூ)

விடுநதிகடிதென்றான்மெய்யுயிரனையானும்
முடுகினனெடுவாய்முரிதிரைநெடுநீர்வாய்க்
கடிதினின்மடவன்னக்கதியதுசெலநின்றார்
இடருறமறையோருமெரியுறுமெழுகானார். (சுo)

பாலுடைமொழியாளும்பகலவனனையானும்
சேலுடைநெடுநன்னீர்சிந்தினர்விளையாடத்
தோலுடைநிமிர்கோலிற்றுழவிடவெழுநாவாய்
காலுடைநெடுநீண்டிற்சென்றதுகடிதம்மா. (சுக)

சாந்தணிபுளினத்தின்றடமுலையுயர்கங்கை
காந்தினமணிமின்னக்கடிகமழ்கமலத்திற்

59. புண்டரீகாட்சனென்னும் பெயர்பற்றித் தாமரை நயனத்தானென்றார்.

60. அன்னக்கதியென்றது அன்னம் விரைந்து நடக்கும் கதியை.

61. பாலுடை மொழியாளென்பதற்கு பால்போலுஞ் சுவையுடையமொழியாளென்பதன்றிப் பாலுந் தோல்வியெய்து மொழியாளெனினுமாம்.

சேந்தொளிவிரியுந்தெண்டிரையெனுங்கிமிர்கையால்
ஏந்தினனொருதானேயேற்றினளினதப்பால். (௬௨)

அத்திசையுற்றையனன்பனைமுகநோக்கிச்
சித்திரகூடத்திற்சென்னறிபகரென்னப்
பத்தியினுயிரீயும்பரிவினனடிதாழா
உத்தமவடிநாயேனறிதுவதுளதென்றான். (௬௩)

நெறியிடைநெறிவல்லேனேடினன்வழுவாமல்
நறியனகனிகாயுநறவினவைதரவல்லேன்
உறைவிடமமைவிப்பனொருநொடிவரையும்மைப்
பிறிகலெனுடனேகப்பெறுகுவெனெனினாயேன். (௬௪)

தீயனவகையாவுந்திசைதிசைசெலநூறித்
தூயனவுறைகானந்துருவினென்வரவல்லேன்
மேயினபொருளுய்த்தநுகுவென்வினைமுற்றும்
ஏயினசெயவல்லேனிருளினுநெறிசெல்வேன். (௬௫)

கல்லுவென்மலைமேலுங்கவலையின்முதல்யாவும்
செல்லுவெனெறிதூரஞ்செறியுனறரவல்லேன்
வில்லினமுளனென்றுஞ்செருவலெனிருபோதும்
மல்லினுமுயர்தோளாய்மலரடிபிரியாதேன். (௬௬)

திருவுளமெனின்மற்றென்சேனையுமுடனேகொண்
டொருவலெனிருபோதுமுறைகுவெனுளராளர்
மருவலரெனின்முன்னேமாள்குவென்வசையில்லேன்
பொருவருமணிமார்பாபோதுவெனுடனென்றான். (௬௭)

அன்னவனுரைகேளாவமலனுமுரைநேர்வான்
என்னுயிரனையாய்நீயிளவலுனினியானிந்
நன்னுதலவணின்கேணளிர்கடனிலமெல்லாம்
உன்னுடையதுநானுன்றொழிலுரிமையினுள்ளேன். (௬௮)

துன்புளதெனினன்றோசுகமுளததுவன்றிப்
பின்புளதிடைமன்னும்பிரிவுளதெனவுன்னேல்

---

63. உத்தமவென்பது யாதினுஞ் சிறந்தானேயென்பதன்றி இருளிற்காப்பாற்படயவனேயெனினுமாம்.

66. முதல் கிழங்குவேர்.

67. திருவுளம் - கருத்து.

முன்புளெமொருநால்வேமுடிவுளதெனவுன்று
அன்புளவினிநாமோரைவர்களுளரானேம். (௬௯)

படருறவுளனும்பிகானுறைபகலெல்லாம்
இடருறுபகையாபோயானெனவுரியாய்நீ
சுடருறுவடிவேலாய்சொன்முறைகடவேல்யான்
வடதிசைவருமந்நாணின்னுழைவருகின்றேன். (௭௦)

அங்குளகிளைகாவற்கமைதியினுளனுமபி
இளங்குளகிளைகாவற்கியாருளருரைசெய்யாய்
உன்கிளையெனதன்றோவுறுதுயருறலாமோ
என்கிளையிதுகாவென்னேவலினினிதென்றான். (௭௧)

பணிமொழிகடவாதான்பருவரலிகவாதான்
பிணியுடையவனென்னும்பிரிவினன்விடைகொண்டான்
அணியிழைமயிலோடுமையனுமிளையோனும்
திணிமரநிறைகானிற்சேணுறநெறிசென்றார். (௭௨)

ஆ திருவிருத்தம் ௩௯௧.

---

## ௭-வது, வனம்புகுபடலம்.

---

பூரியர்புணர்மாதர்பொதுமனமெனமன்னும்
ஈரமுமுளதில்லென்றறிவருமிளவேனில்
ஆரியன்வரலோடுமமுதளவியசீதக்
காருறுகுறிமானக்காட்டியதவணங்கும். (௧)

வெயிலிளநிலவேபோல்விரிகதிரிடைவீசப்
பயின்மரநிழலீனப்பனிபுரைதுளிமேகப்
புயல்தரவிளமென்கால்பூவளவியதெய்த
மயிலினநடமாடும்வழியினியனபோனார். (௨)

மன்றலின்மலிகோதைமயிலியலிளமானே
இன்றுயில்வதிகோபத்தினம்விரிவனவெங்கும்
கொன்றைகள்சொரிபோதின்குப்பைகொள்குலமாலை
பொன்றிணிமணிமானப்பொலிவனபலகாணாய். (௩)

பாணிளமிஞிறுகப்படுமழைபணையாக
நாணினதொகுபீலிகோலினநடமாடல்

பூணியணின் சாயல்பொலிவது பலகண்ணில்
காணியவெனலாகுங்களிமயிலவைகாணாய். (௪)

சேந்தொளிவிரிசெவ்வாய்ப்பைங்கிளிசெங்கோலக்
காந்தளின்மலரேறிக்கோதுவகவினாரும்
மாந்தளிர்நறுமேனிமங்கைநின்மடமுன்கை
வந்தினவெனலாகுமியல்பினவிவைகாணாய். (௫)

நெய்ஞ்ஞின்றைநெடுவேலினிறமுறுதிறமுற்றிக்
கைஞ்ஞின்றைநிமிர்கண்ணாய்கருதினவினமென்றே
மெய்ஞ்ஞின்றைவிரிசாயல்கண்டுநின்விழிகண்டும்
மஞ்ஞையுமடமானும்வருவனபலகாணாய். (௬)

பூவலர்குரவோடும்புடைதவிழ்பிடவீனும்
மாவலர்சொரிசூழற்றுயிலெழுமயிலொன்றின்
தூவியின்மணநாறத்துணைபிரிபெடைதானச்
சேவலோடுறவூடித்திரிவதினியல்காணாய். (௭)

அருந்ததியனையாளேயமிர்தினுமினியாளே
செருந்தியின்மலர்தாங்குஞ்செறியிதழ்வனசோகம்
பொருந்தினகளிவண்டிற்பொதிவனபொன்னூதும்
இருந்தையினெழுதீயொத்தெழுவனவியல்காணாய். (௮)

வந்தினமுலையாளேயெழுதருமெழிலாளே
காந்தளின்முகைகண்ணிற்கண்டொருகளிமஞ்ஞை
பாந்தளிதெனவுன்னிக்கவ்வியபடிபாராய்
தீந்தளவுகள்செய்யுஞ்சிறுகுறுநகைகாணாய். (௯)

குன்றுறைவயமாவின்குருளையுமிருள்சிந்திப்
பின்றினதெனலாகும்பிடிதருசிறுமாவும்
அன்றலபிறிவொல்லாவண்டர்தமனையாவின்
கன்றொடுவிளையாடுங்களியனபலகாணாய். (௧0)

அகில்புனைகுழன்மாதேயணியிழையெனலாகும்
நகுமலர்நிறைமாலைக்கொம்பர்கணதிதோறும்

---

7. பணிமொழி - பணிவைப்புலப்படுத்திய மொழி.

8. கற்பிற் சிறப்புடையவளாகலின் அருந்ததியொடுவமை கூறினார்.

9. கோம்பிக்கொதுங்கி மேயாமஞ்ஞை குஞ்சரங்கோளிழைக்கும் பாம் பெனப் பிறர்கூறலின் களிமஞ்ஞை பாந்தளிதெனவுன்னியென்றார்.

10. அண்டர் - முல்லைநிலமாக்கள்.

துகில்புரைநறுநீரிற்றோய்வனதுறையாடும்
முகிழிளமுலையாரின்மூழ்குவபலகாணாய். (௧௧)

முற்றுறுமுகைகிண்டிமுயல்கிலசிலதும்பி
விற்றிருநுதன்மாதேயம்மலர்விரிகோங்கின்
சுற்றுறுமலரேறித்துயில்வனசுடர்மின்னும்
பொற்றகடுறுநீலம்புரைவனபலகாணாய். (௧௨)

கூடியநறைவாயிற்கொண்டனவிழிகொள்ளா
மூடியகளிமன்னமுடுகினநெறிகாணா
ஆடியசிறைமாவண்டந்தரினிசைமுன்னாப்
பாடியபெடைகண்ணாவருவனபலகாணாய். (௧௩)

கன்னியரணிகோலங்கற்றறிகுநரென்னப்
பொன்னணிநிறவேங்கைக்கொம்பர்கள்புதுமென்பூ
அன்னமென்னடையாய்நின்னளகநன்னுதலப்பும்
சின்னமென்மலர்மானச்சிந்துவபலகாணாய். (௧௪)

மணங்கிளர்மலர்வாசமாருதம்வரவீசக்
கணங்கிளர்தருசுண்ணங்கல்லுடையனகானத்
தணங்கினுமினியாயுன்னணிவடமுலைமுன்றிற்
சுணங்கினமவைமானத்துறுவனபலகாணாய். (௧௫)

அடியிணைபொறைகல்லாவென்றுகொலதரெங்கும்
இடையிடைமலர்சிந்துமினமரமிவைகாணாய்
கொடியிடைளவாசக்கொம்பர்கள்குயிலாயுன்
துடிபுரையிடைநாணித்துவள்வனவவைகாணாய். (௧௬)

வாள்புரைவிழியாயுன்மலர்புரையடிமானத்
தாள்புரைதளிர்வைகுந்தசைஞிமிறிவைகாணாய்
கோள்புரையிருள்வாசக்குழல்புரைமழைகாணாய்
தோள்புரையிளவேயின்றொகுதிகளவைகாணாய். (௧௭)

---

11. நீரின்றூய்மைநோக்கித், துகில்புரைநறுநீரென்றார்.

12. வண்டு கோங்கிற்றுயில்வதனை 'சுடர்மின்னும் பொற்றகடுறுநீலம் புரைவன' என்றார்.

13. மாவண்டு என்புழிமாகருமை.

14. சின்னமென்மலர் சின்னப்பூ வினை.

16. அடியிணைபொறுக்கமாட்டா கொல்என்பார் அடியிணை பொறைகல் லாவென்றார்.

பூநனைசினைதுன்றிப்புள்ளிடையிடைபம்பி
நானிறநளிர்வல்லிக்கொடியளவிலமல்கி
மானினமயின்மாலைக்குயிலினம்வருகானந்
தீநிகர்தொழிலாடைத்திரைபொருவனபாராய். (௧அ)

என்றனன்மடவாளோடினிதினில்விளையாடிப்
பொன்றிணிதிரடோளான்போயினனெறிபோதும்
சென்றதுகுடபாலத்திருமலையிதுவன்றோ
என்றனன்வினைவென்றோர்மேவிடமெனலோடும். (௧௯)

அருத்தியினகம்விம்முமன்பினினெடுநாளில்
திருத்தியவினைமுற்றிற்றென்றனன்றெரிகின்றான்
பரத்துவனெனுநாமப்பரமுனிபவநோயின்
மருத்துவனனையானைவரவெதிர்கொளவந்தான். (௨௦)

குடையினனிமிர்கோலன்குண்டிகையினன்மூரிச்
சடையினனுரிமானின்சருமனன்மரநாரின்
உடையினன்மயிர்நாலுமுருவினனெறிபேணும்
நடையினன்மறைநாலுநடநவிறருநாவான். (௨௧)

செந்தழல்புரிசெல்வன்றிசைமுகமுனிசெவ்வே
தந்தனவுயிரெல்லாந்தன்னுயிரெனநல்கும்
அந்தணனுலகேழமைபேணினமரேசன்
உந்தியினுதவாமேயுதவிடுதொழில்வல்லான். (௨௨)

அம்முனிவரலோடுமநகனுமலர்தூவி
மும்முறைதொழுதானம்முதல்வனுமெதிர்புல்லி
இம்முறையுருவோநானெய்துவதெனவுள்ளம்
விம்மினனிழிகண்ணீர்விழிவழிபுகநின்றான். (௨௩)

---

18. நானிறம் - நாலுவிதம்.

19. போதுஎன்பது ஆகுபெயராய் சூரியனுக்காகியது, போதுகாலம் பொழுது என்பதனை முதனிலை நீண்டு இடைநிலைகெட்டுபோதென்றாகியது எனபாருமுளர், மரூஉ.

19. திருமலை - சித்திரகூடம்.

20. பிறவிநோய்க்கு மருத்துவனாகலின், பவநோயின்மருத்துவனென்றார்.

21. நெறி - (துறவற) வொழுக்கத்தை.

22. திசைமுகமுனி - பிரமன். அமரேசன் - அயர்வருமமரர்கட்கிறை.

23. நானென்னுமுளப்பாட்டுத்தன்மை யுயர்த்தற்கண்முன்னிலையிடத்து வந்தது.

அகலிடநெடிதாளுமமைதியையதுதீரப்
புகலிடமெமதாகும்புரையிடையிதுநாளில்
தகவிலதவவேடந்தழுவினைவருவானேன்
இகலடுசிலைவீரவினையவனொடுமென்றான். (௨௪)

உற்றுளபொருளெல்லாமுணர்வுறவுரைசெய்தான்
நற்றவமுனியந்தோவிதிதருநவையென்பான்
இற்றதுசெயலுண்டோவினியெனவிடர்கொண்டான்
பெற்றிலடவமந்தோபெருநிலமகளென்றான். (௨௫)

துப்புறழ்துவர்வாயின்றாமொழிமயிலோடும்
அப்புறுகடன்ஞாலமாளுதிகடிதென்று
ஒப்பறுமரசன்னையுயர்வனமுறவேவகென்
றெப்பரிசுயிருய்ந்தானென்றுணையவனென்றான். (௨௬)

அல்லலுமுளவின்பமறுகலுமுளவன்றே
நல்லவுமுளசெய்யுநவைகளுமுளவந்தோ
இல்லையொர்பயனின்றிடகுறுமதினென்னுப்
புல்லினனுடனேனகொண்டினிதுறைபுரைபுக்கான். (௨௭)

புக்குறைவிடநல்கிப்பூசனைமுறைபேணித்
தக்கனகனிகாயுந்தந்துரைதருமன்பால்
தொக்கநன்முறைகூறித்தூயவனுயிர்போலும்
மக்களினருளுற்றான்மைந்தருமகிழ்வுற்றார். (௨௮)

வைகினர்கதிர்நாறுமளவையின்மறைபோனும்
உய்குவதிவணேடியாமுடனுறைதலினென்பான்
செய்தனனினிதெல்லாஞ்செல்வனைமுகமுன்னுக்
கொய்குலமலர்மார்பகூறுவதுளதென்றான். (௨௯)

வேறு.

நிறைநீர்மலர்நெடுங்கனிகிழங்குகாய்நேர்ந்த
குறையுந்தீயவைதூயவைகுறைவிலவெம்மோ
டுறையுமிவ்வழியொருங்கினிலுயர்தவமுயல்வார்க்
கிறையுமீதலாதினியதோரிடமரிதின்னும். (௩௦)

---

24. இகலடுசிலை - பகைவரை வெல்லுஞ்சிலை.
25. உற்றுளபொருள் - நடந்தசெய்தி.
28. பூசனைமுறைபேணல் அதிதிகளையுபசரிக்கும் முறையிலுபசரித்தல்.
29. கதிர்நாறுமளவை ஞாயிற்றினுதயபரியந்தம். உய்தல் - நிரதிசய இன்பவீடடைதல்.

கங்கையாளொடுகரியவளுமகள்கலந்த
சங்கமாதலிற்பிரியலென்றுமரைச்செங்கண்
அங்கணாயகவயனுக்குமரும்பெறற்றீர்த்தம்
எங்கள்போலியர்தரத்ததன்றிருத்திரீண்டென்றான். (௩௧)

பூண்டமாதவனவ்வழிவிரும்பினன்புகல
நீண்டதன்றிதுநிறைபுனனாட்டுக்குநடுவாம்
மாண்டசிந்தையவிவ்வழிவைகுவனென்றால்
ஈண்டயாவருநெருங்குவரென்றனனிராமன். (௩௨)

ஆவதுள்ளதேயையகேளாயிரண்டமைந்த
காவதப்பொழிற்கப்புறங்கழிந்தபின்காண்டி
மேவுகாதலின்வைகுதிவிண்ணினுமினிதால்
தேவர்கைதொழுஞ்சித்திரகூடமென்றுளதால். (௩௩)

என்றுகாதலினேயினனடிதொழுதேத்திக்
கொன்றைவேய்ங்குழற்கோவலர்முல்லையங்குடுமி
சென்றுசெங்கதிர்ச்செல்வனுநடுவுறச்சிறுமான்
கன்றுநீர்நுகர்காளிந்தியெனுநதிகண்டார். (௩௪)

ஆறுகண்டனரகமகிழ்ந்திறைஞ்சினரறிந்து
நீறுதோய்மணிமேனியர்நெடும்புனல்படிந்தார்
ஊறுமென்கனிகிழங்கினோடுண்டுநீருண்டார்
ஏறியேகுவதெங்ஙனமெனறலுமிளையோன். (௩௫)

வாங்குவேய்ங்கழைதுணித்தனன்மாணையின்கொடியால்
ஓங்குதெப்பமொன்றமைத்ததினும்பரினுலம்போல்
வீங்குதோளண்ணறேவியோடினிதுவீற்றிருப்ப
நீங்கினானந்தநெடுநதியிருகையானீந்தி. (௩௬)

ஆலைபாய்வயலயோத்தியராண்டகைக்கிளையான்
மாலைமால்வரைத்தோளனுமந்தரந்திரியக்
காலைவேலையைக்கடந்ததுகழிந்தநீர்கடிதின்
மேலைவேலையிற்பாய்ந்ததுநீண்டநீர்வெள்ளம். (௩௭)

---

31. கங்கையாளொடு - கரியவளுமகள். கலந்தசங்கம் - கங்கா நதியுடன்யமுனையும் சரசுவதியும் சேர்ந்தசங்கமுகம்.

33. பொழில் - பூமி, வனம், சோலை என்று உரைக்கினும் பொருந்தும்.

34. காளிந்தி எனினும் கரியவளெனினும் யமுனை எனினுமமையும்.

36. வேய்ங்கழை ஒருசாதிமூங்கில், விசேடம். மாணை ஒருசாதிக்கொடி விசேடம்.

அனையரப்புனலேறினரக்கரையணைந்தார்
புனையும்வற்கலைப்பொற்பினர்நெடுநெறிபோனார்
சினையுமூலமும்வேரும்வெந்திருநிலந்தீய்ந்து
நினையுநெஞ்சமுஞ்சுடுவதோர்நெடுஞ்சுரநேர்ந்தார். (௩அ)

நீங்கலாற்றலள்சனகியென்றன்னவர்நினைய
ஓங்குவெய்யவனுடுபதியெனக்கதிருகுத்தான்
தாங்குவேங்கடத்துலவைகடமைகொண்டுதழைத்த
பாங்குவேங்கனல்பங்கயவனங்களாய்ப்பரந்த. (௩௯)

வறுத்துவித்தியவனையனவல்லயிற்பரல்கள்
பறித்துவித்தியமலரெனக்குளிர்ந்தனபசந்த
இறுத்தெரிந்தனவல்லிகளிளந்தளிரீன்ற
கறுத்தவாளரவெயிற்றினுளமுதுகக்களித்த. (௪௦)

குழுமிமேகங்கள்குமுறினகுளிர்துளிகொணர்ந்த
முழுவில்வேடருமுனிவரின்முனிகிலருயிரைத்
தழுவிநின்றனபசியிலபகையில தணிந்த
உழுவையின்முலைமானிளங்கன்றுகளுண்ட. (௪௧)

கல்லளைக்கிடந்தகடுவெந்தயர்கின்றகதம்பாம்
பல்லலுற்றிலவலைபுனற்கிடந்தனவனைய
வல்லியுற்றவேய்புற்றெருடுமெரிவனமணிவாழ்
புல்லெயிற்றிளங்கன்னியர்தோளெனப்பொலிந்த. (௪௨)

படர்ந்தெழுந்தபுல்பசுநிறக்கம்பளம்பரப்பிக்
கிடந்தபோன்றனகேகயங்தோகைகள்கிளர
மடந்தைமாரெனநாடகம்வயின்றொறுநவின்ற
தொடர்ந்தபாணரிற்பாங்கிசைமுரன்றனதும்பி. (௪௩)

காலமின்றியுங்கனிந்தனகனிநெடுங்கந்தம்
மூலமின்றியுமுகிழ்த்தனநிலனுறமுழுதும்
கோலமங்கையரொத்தனகொம்பர்களின்பச்
சீலமன்றியுஞ்செய்தவம்வேறுமொன்றுளதோ. (௪௪)

---

38. சுடுவதன் கடுமையுணர்த்த நினையுநெஞ்சமுஞ் சுடுவதோர் நெடுஞ்சுரமென்றார். 39, வேங்கடம் - வேகுங்காடு.

40. கிருட்டின சருப்பமென்னும் வடமொழிபெயர்பற்றிக், கறுத்துவாளராவென்றார். 43. கேகயம் - மயில்.

44. இன்பம் பயக்குமொழுக்கநெறியினுஞ்செய்தவமின்றென்பார், இன்பச்சீலமன்றியுஞ் செய்தவம் வேறுமொன்றுளதோ என்றார்.

எயினர் தங்கிடமிருடிகளிருப்பிடமேய்ந்த
வயின்வயின்றெறுமணிநிறக்கோபங்கண்மலர்ந்த
பயின்மரந்தொறும்பரிந்தனபேடையைப்பயிலும்
குயிலிரங்கினகுருந்தநின்றரும்பினமுருந்தம். (௪௫)

பந்தருட்புரைபாசறைப்பொருள்வயிற்பருவம்
தந்தகேள்வரையுயிருறத்தழுவினர்பிரிந்த
கந்தவோதியர்சிந்தையிற்கொதிப்பதக்கழலோர்
வந்தபோதவர்மனமெனக்குளிர்ந்ததவ்வனமே. (௪௬)

வெளிறுநீங்கியபாலையைமெல்லெனப்போனார்
குளிறுவார்மதிக்குழவிதன்சூல்வயிற்றெளிப்பப்
பிளிறுமேகத்தைப்பிடியெனப்பெரும்பனைத்தடக்கைக்
களிறுநீட்டுமச்சித்திரகூடத்தைக்கண்டார். (௪௭)

ஆக திருவிருத்தம் - எ௯அ.

## அ-வது, சித்திரகூடப்படலம்.

நினையுந்தேவர்க்குநமக்குமொத்தொருநெறிநின்ற
அனகனங்கணையுயிரப்பெயருடையமலன்
சனகன்மாமடமயிற்கந்தச்சந்தனஞ்செறிந்த
கனகமால்வரையியல்பெலாந்தெரிவுறக்காட்டும். (௧)

வாளும்வேலும்விட்டனபினவனையகண்மயிலே
தாளினேலமுமாலமுந்தொடர்தருசாரல்
நீளமாமலைதுயில்வனநீருண்டகமஞ்சூற்
காளமேகமுநாகமுந்தெரிகிலகாணாய். (௨)

குருதிவாளெனச்செவ்வரிபரந்தகட்குயிலே
மருவிமால்வரையும்பரிற்குதிக்கின்றவருடை
சுருதிபோற்றெளிமரகதக்கொழுஞ்சுடர்சுற்றப்
பருதிவானவன்பசும்பரிபுரைவனபாராய். (௩)

46. இயற்கைமணங்கமழுங் கூந்தலாகலிற் கந்தவோதியரென்றார்.

47. யானை மேகத்தைப் பிடியெனக்கருதினமை கூறலான் மயக்கவணி.

1. தேவரையுமன்றி நம்மையுமொப்பக் கருதிவீற்றிருத்தலின் 'நினையுந் தேவர்க்கு நமக்கு மொத்தொரு நெறிநின்ற' என்றார்.

3. குருதிவாளுண்டல் செவ்வரிபரந்த கண்ணொடொக்குமென்றார்.

வடங்கொள்பூண்முலைமடமயிலேமதக்கதமா
அடங்குபேழ்வயிற்றரவுரியமைதொறுந்தொடக்கித்
தடங்கடோறுநின்றுடுவதண்டலையயோத்தி
நடங்குமாளிகைத்துகிற்கொடிநிகர்ப்பனநோக்காய். (௪)

உவரிவாயன்றிப்பாற்கடலுதவியவமுதே
துவரிநீண்மணித்தடந்தொறுமிடந்தொறுந்துவன்றிக்
கவரிபானிறவால்புடைபெயர்வனகடிதில்
பவளமால்வரையருவியைப்பொருவியபாராய். (௫)

சலந்தலைக்கொண்டசீயத்தாற்றனிமதக்கதமா
உலந்துவீழ்தலிற்சிந்தினவுதிரத்தின்மடவார்
புலந்தகாலையற்றுக்கனக்குங்குமப்பொதியில்
கலந்தமுத்தெனவேழமுத்திமைப்பனகாணாய். (௬)

நீண்டமால்வரைமதிபுறநெடுமுடிநிவந்த
தூண்டுமாமணிச்சுடரதன்கற்றையிற்சொருக
மாண்டவானிறவருவிபம்மழவிடைப்பாகன்
காண்டகுஞ்சடைக்கங்கையைநிகர்ப்பனகாணாய். (௭)

தொட்டமாசுணஞ்சுடரொளிமணியொடுந்தூவி
விட்டசென்றனவிடாமழையனவேழம்
வட்டவேங்கையின்மலரொடுந்ததைந்தனவயங்கும்
பட்டநெற்றியிற்சுற்றியபோல்வனபாராய். (௮)

இழைந்தநாலிணைமணிக்குடஞ்சுமக்கின்றதென்ன
குழைந்தநுண்ணிடைக்குவியிளவனமுலைக்கொம்பே
தழைந்தசந்தனச்சோலைதன்செலவினைத்தடுப்ப
நுழைந்துபோகின்றதொக்கின்றமதியினைநோக்காய். (௯)

உருகுகாதலிற்றழைகொண்டுமழலைவண்டோச்சி
முருகுநாறுசெந்தேனினைமுழைநின்றும்வாங்கிப்
பெருகுசூலிளம்பிடிக்கொருபிறைமருப்பியானை
பருகவாயினிற்கையினின்றளிப்பதுபாராய். (௧0)

அளிக்குநாயகன்மாயைபுக்கடங்கினனெனினும்
களிப்பிலிந்தியத்தியோகியைக்கரக்கிலனதுபோல்

4. தடங்கள் - ஈண்டுகாடுகள்.
5. பாற்கடலுதவியவமுது - திருமாமகள்.
6. முத்துகடோன்றுமிட மிருபதாகலின் 'வேழமுத்து' என்றார்.
7. மழவிடைப்பாகன் - சிவன். 11. அளிக்குநாயகன் - திருமால்.

ஒளித்துநின்றுளராயினுமுருத்தெரிகின்ற
பளிக்கறைச்சிலபரிமுகமாக்களைப்பாராய். (கக)

ஆடுகின்றமாமயிலினுமழகியகுயிலே
கூடுகின்றிலர்கொடிச்சியர்தம்மனங்கொதிப்ப
ஊடுகின்றனர்கொழுநரையுருகினர்நோக்கப்
பாடுகின்றனகின்னரமிதுனங்கள்பாராய். (கஉ)

வில்லிவாங்கியசிலையெனப்பொலிநுதல்விளக்கே
வல்லிதாங்கழைதாக்கலில்வழிந்திழிபிரசம்
கொல்லிவாங்கியகுன்றவர்கொடிநெடுங்கவலை
கல்லிவாங்கியகுழிகளைநிறைப்பனகாணாய். (கங)

ஒருவில்பெண்மையென்றுரைக்கின்றவுடலினுக்குயிரே
மருவுகாதலினினிதுடனாடியமந்தி
அருவிநீர்கொடுவீசத்தானப்புறத்தேறிக்
கருவிமாமழையுதிர்ப்பதோர்கடுவனைக்காணாய். (கச)

வீறுபஞ்சின்றியமுதநெய்மாட்டியவிளக்கே
சீறுவெங்கதிர்செறிந்தனபேர்கலதிரியா
மாறின்மண்டிலநிரப்பியமாணிக்கமணிக்கற்
பாறைமற்றொருபரிதியிற்பொலிவனபாராய். (கரு)

சீலமின்னதென்றருந்ததிக்கருளியதிருவே
நீலவண்டினம்படிந்தெழவளைந்துடனிமிர்வ
சோலைவேங்கையின்கொம்பர்கள்பொன்மலர்தூவிக்
காலினிற்றொழுதெழுவனநிகர்ப்பனகாணாய். (கசு)

விற்கொள்வாணுதல்விளங்கிழையிளந்தளிர்க்கொழுந்தே
எற்கொண்மால்வரையும்பரிணிரும்புனங்காக்கும்
கொற்கொள்வேற்கணார்குரீஇயினத்தெறிகுருவிந்தக்
கற்கள்வானிடைமீனெனவீழ்வனகாணாய். (கஎ)

வரிகொளொண்சிலைவயவர்தங்கணிச்சியின்மறிந்த
பரியகாரகில்சுடநிமிர்பசும்புகைப்படலம்

12. கின்னரமிதுனங்களென்றது ஒருவகைப் பறவைவிசேடம்.
13. கவலை - ஒருகிழங்கின்விசேடம்.
15. புக்ககத்தையும் - பிறந்தகத்தையும் விளக்குபவளாகலின் விளக்கே' யென்றார்.
16. ஒழுக்கத்தையார்க்கு முரைப்பவளாகலின் 'சீலமின்னதென்றருந்ததிக்கருளிய திருவே' என்றார்.
18. கணிச்சி - மழுப்படை.

அரியவேதியராகுதிப்புகையொடுமௌவிக்
கரியமால்வரைக்கொழுந்தெனப்படர்வனகாணாய். (௧௮)

நாணநாண்மலர்நறையகினுவிதேறைறும்
சோனைவார்குழற்சுமைபொறுதிடுகிடைத்தோகாய்
வானயாற்றுநீன்மலர்ந்தனவெனப்புனல்வறந்த
கானயாறுகள்கணமணியிமைப்பனகாணாய். (௧௯)

மஞ்சளாவியமாணிக்கப்பாறையின்மறைவ
செஞ்செவேநெடுமரகதப்பாறையிற்றெரிவ
விஞ்சைநாடியர்கொழுநரோடேடினர்விமலப்
பஞ்சளாவியசீறடிச்சுவடுகள்பாராய். (௨0)

சுழித்தசெம்பொனின்றொளைபுரையுந்தியின்றுணையே
கொழித்தமாமணியருவியோடிழிவனகோலம்
அழித்துமேவியவரம்பையரல்புரைகூந்தல்
கழித்துநீக்கியகற்பகநறுமலர்காணாய். (௨௧)

அறைகழற்சிலைக்குன்றவரகன்புனங்காவற்
பறையெடுத்தொருகடுவனின்றடிப்பதுபாராய்
பிறையையெட்டினள்பிடித்திதற்கிதுபிழையென்னுக்
கறைதுடைக்குறுபேதையோர்கொடிச்சியைக்காணாய். (௨௨)

அடுத்தபல்பகலன்பரிற்பிரிந்தவரென்ப
தெடுத்துநந்தமக்கியம்புவவெனக்கரிந்திருண்ட
தொடுத்தமாதவிச்சூழலிற்சூரரமகளிர்
படுத்துவைகியபல்லவசயனங்கள்பாராய். (௨௩)

நினைந்தபோதினுமமிர்தொக்குநேரிழைநிறைதேன்
வனைந்தவேங்கையிற்கோங்கினில்வயின்றொறுந்தொடுத்துக்
குனிந்தவூசலிற்கொடிச்சியரெடுத்தவின்குறிஞ்சிக்
கனிந்தபாடல்கேட்டசுணமாவருவனகாணாய். (௨௪)

19. சோனை - விடாமழை.

20. விஞ்சைநாடியர் - பஞ்சளாவிய சீறடி மஞ்சளாவிய மாணிக்கப் பாறையாகலின் மறைவவென்றும், மரகதப்பாறையாகலிற் றெரிவவென்றுங் கூறினர்.

22. குன்றவர் - குறிஞ்சிநிலமாக்கள்.

23. பல்லவசயனம் - தளிர்ப்படுக்கை.

24. அசுணமா - கேகயப்புள்.

இலவுமிந்திரகோபமும்புரைபிதழினிபோய்
அலவு நுண்டுளியருநீரரம்பையராடக்
கலவைசாந்துசெங்குங்குமங்கற்பகங்கொடுத்த
பலவுந்தோய்தலிற்பரிமளங்கமழ்வனபாராய். (உரு)

செம்பொன்ஞற்செய்துகுலிகமிட்டெழுதியசெப்போர்
கொம்பர்தாங்கியதெனப்பொலிவனமுலைக்கொடியே
அம்பொன்மால்வரையலர்கதிருச்சிசென்றணுகப்
பைம்பொன்மாமுடிமிலைச்சியதொப்பதுபாராய். (உசு)

மடந்தைமார்களிற்றிலதமேமணிநிறத்திணிகல்
தொடர்ந்தபாறையில்வேயினஞ்சொரிகதிர்முத்தம்
இடந்தொறுங்கிடந்திமைப்பனவெக்களஞ்செக்கர்
படர்ந்தவானிடைத்தாரகைநிகர்ப்பனபாராய். (உஎ)

குழுவுநுண்டொளைவேயினுங்குறிநரம்பெறிவுற்
றெழுவுதண்டமிழ்யாழினுமினியசொற்கிளியே
முழுவதும்மலர்விரியநாண்முருக்கிடைமிடைந்த
பழுவம்வெங்கனல்கதுவியதொப்பனபாராய். (உஅ)

வளைகள்காந்தளிற்பெய்தனவளையகைம்மயிலே
தொளைகொடாழ்தடக்கைநெடுந்துருத்தியிற்றூக்கி
அளவின்மூப்பினரருந்தவர்க்கருவிநீர்கொணர்ந்து
களபமால்கரிகுண்டிகைசொரிவனகாணாய். (உகூ)

வடுவின்மாவகிரிவையெனப்பொலிந்தகண்மயிலே
இடுகுகண்ணினரிடருறுமூப்பினரேக
நெடுகுகூனல்வானீட்டினவுருகுறுநெஞ்சக்
கடுவன்மாதவர்க்கருநெறிகாட்டுவகாணாய். (௩௰)

பாந்தடேரிவைபழிபடப்பரந்தபேரல்குல்
ஏந்துநூன்மணிமார்பினராகுதிக்கியைந்த
கூந்தன்மென்மயிற்குருகினைநெடுஞ்சிறைகோலிக்
காந்துகுண்டத்தின்வயங்கெரியெழுப்புவகாணாய். (௩௧)

அலம்புவார்குழலாய்மயிற்பெண்ணருங்கலமே
நலம்பெய்வேதியர்மார்பினுக்கியைவுறநாடிச்

---

29. புழைக்கை என்றதுபற்றித் 'தொளைகொடாழ் தடக்கை' என்றார்.
30. அருநெறி - செல்லற்கரிய வழி.
31. பேரல்குல் - அன்மொழித்தொகை.
31. காந்துகுண்டம் - கனல்கின்ற குண்டம்.

சிலம்பிபஞ்சினிற்சிக்கறத்தெரிந்தநூறேமாம்
பலம்பெய்மந்திகளுடன்வந்துகொடுப்பனபாராய். (௩௨)

தெரிவைமார்க்கொருகட்டளையெனச்செய்ததிருவே
பெரியமாக்கனிபலாக்கனிபிறங்கியவாழை
அரியமாக்கனிகடுவன்களன்புகொண்டளிப்பக்
கரியமாகிழங்ககழ்ந்தனகொணர்வனகாணாய். (௩௩)

ஐவனக்குரறினைக்கதிரிறுங்கவையவரை
மெய்வணக்குறுவேயினமீன்றமெல்லரிசி
பொய்வணக்கியமாதவர்புரைதொறும்புகுந்துன்
கைவனத்தவாப்க்கிள்ளைதந்தளிப்பனகாணாய். (௩௪)

இடிகொள்வேழத்தையெயிற்றொடுமெடுத்துடன்விழுங்கும்
கடியமாசுணங்கற்றறிந்தவரெனவடங்கிச்
சடைகொள்சென்னியர்தாழ்விலர்தாமிதித்தேறப்
படிகடாமெனத்தாழ்வரைகிடப்பனபாராய். (௩௫)

அசும்புபாய்வரையருந்தவமுடித்தவர்துணைக்கட்
டசும்புவேய்ந்தவரொத்தவர்தமக்குவிண்டருவான்
விசும்புதூர்ப்பனவாமெனவெயிலெனவிளங்கும்
பசும்பொன்மானங்கள்போவனவருவனபாராய். (௩௬)

நெய்கொணீருண்டுநெருப்புண்டுநீண்டமைநிறைந்த
வைகொள்வேலெனக்காலனுமறுகுறுங்கண்ணாய்
மெய்கணோக்கின்றபிடிகளைவிரும்பியவேழம்
கைகணோக்கிலதாங்கினநிற்பனகாணாய். (௩௭)

விடங்கணோக்கிநின்னடையினைமின்னெனவெருவிப்
படங்கொணாகங்கண்முழைபுகப்பதைப்பனபாராய்
மடங்கலாளிகளெனக்கொடுமழையினமுழங்க
கடங்கொள்கார்மதக்கைம்மலையிரிவனகாணாய். (௩௮)

---

32. தேமாம்பலம் - இனியமாங்கனி.

33. கட்டளை - உரையாணி.

35. இடிகொள்வேழத்தை யெயிற்றொடு மெடுத்து விழுங்குமாசுணமென்றார், குருசரங்கோளிழைக்கும் பாம்பெனப் பிறரும் கூறலின்.

36. துணைக்கட்டசும்பு - சடைமுடி.

37. கைகளென்றது - புழைக்கையை.

38. நோக்கியென்றது - வினைப்பெயர்.

இனையயாவைவுமேந்திழைக்கியம்பினன்காட்டி
அனையமால்வரையருந்தவரெதிர்வரவணங்கி
வினையினீங்கியவேதியர்விருந்தினனானன்
மனையின்மெய்யெனுமாதவம்புரிந்தவன்மைந்தன். (௩௯)

வேறு.

மாவியலுதயமாந்துளபவானவன்
மேவியபகையிருளவுணர்வீந்தாகக்
காவியல்குடவரைக்காலநேமிமேல்
ஏவியதிகிரிபோலிரவியேகினான். (௪௦)

சக்கரந்தானவனுடலிற்றுக்குற
எக்கியசோரியிற்பரந்தசெங்கணும்
செக்கரத்தீயவன்வாயிற்றீர்ந்துவே
றுக்கவான்றனியெயிறொத்ததிந்துவே. (௪௧)

ஆனனமகளிருக்களித்ததாமரைப்
பூநனிமுகிழ்த்தனபுலரிபோனபின்
மீனெனவிளங்கியவெள்ளியாம்பல்வீ
வானெனமணித்தடமலர்ந்தவெங்குமே. (௪௨)

மந்தியுங்கடுவனுமரங்களேறக்கின
தந்தியும்பிடிகளுந்தடங்களேறக்கின
நிந்தையில்சகுந்தங்கணீளநோக்கின
அந்தியைநோக்கினனறிவைநோக்கினான். (௪௩)

மொய்யுறுநறுமலர்முகிழ்த்தவாஞ்சில
மையறுநறுமலர்மலர்ந்தவாஞ்சில
ஐயனேடிளவற்குமமிழ்தனாளுக்கும்
கைகளுங்கண்களுங்கமலப்போன்றவே. (௪௪)

மாலைவந்தகன்றபின்மருங்கிலாளொடும்
வேலைவந்துறைவிடமேயதாமெனக்
கோலைவந்துமிழ்சிலைத்தம்பிகோலிய
சாலைவந்தெய்தினன்றவத்தினெய்தினான். (௪௫)

---

39. புகழுடம்பு நிறீஇப் பூதவுடம்பை நீத்தமையான் 'மனையின் மெய்யெனு மாதவம்' என்றார்.

40. துளபவானவன் - திருமால். 41. தானவன் - காலநேமி.

44. மாலைக்கடன்முடிப்பக் கண்முகிழ்த்துத் தியானித்தலின் 'கைகளுங் கண்களுங் கமலம்போன்ற' வென்றார்.

45. மருங்கிலாள் - சனகியை, தவத்தானல்லது வேறொன்றானெய்தப் படுபவனன்மையின் 'தவத்தினெய்தினான்' என்றார்.

நெடுங்கழைக்குறுந்துணிநிறுவிமேனிரைத்
தொடுங்கலிநெடுமுகடொழுக்கியூழுற
இடுங்கவில்கைவிசித்தேற்றியெங்கணும்
முடங்கலில்வரிச்சுமேல்விரிச்சுமூட்டியே. (சசு)

தேக்கடைப்படலையிற்செறிவுசெய்துபின்
பூக்கிளர்நாணலின்புல்லுவேய்ந்துகீழ்
தூக்கியவேய்களிற்சுவருஞ்சுற்றுறப்
போக்கிமண்ணெறிந்தவைபுனலிற்றீற்றியே. (சஎ)

வேறிடமியற்றினன்மிதிலைநாடிக்கும்
கூறினநெறிமுறைகுயிற்றிக்குங்குமச்
சேறுகொண்டமுகுறத்திருத்தித்திண்சுவர்
ஆறிடுமணியொடுங்கனகமப்பியே. (சஅ)

மயிலுடைப்பீலியின்விதானமேல்வகுத்
தயிலுடைச்சுரிகையாலருகுதூக்கறுத்
தெயிலிளங்கழைகளாலியற்றியாறிடு
செயலுடைப்புதுமலர்பொற்பச்சிந்தியே. (சகூ)

இன்னணமிளையவனிழைத்தசாலையிற்
பொன்னிறத்திருவொடுங்குடிபுக்கானரோ
நன்னெடுந்திசைமுகனகத்துநம்மனோர்க்
குன்னருமுயிருளுமொக்கவைகுவான். (ருO)

வேறு.

மாயநீங்கியசிந்தனைமாமறை
தூயபாற்கடல்வைகுந்தஞ்சொல்லலாம்
ஆயசாலையரும்பெறலன்பினன்
நேயநெஞ்சின்விரும்பிநிரப்பினன். (ருக)

மேவுகானமிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவிலெம்பிகைசாலைசமைத்தன
யாவையாதுமிலார்க்கியையாதவே. (ருஉ)

என்றுசிந்தித்திளையவற்பார்த்திரு
குன்றுபோலக்குவவியதோளிறுய்

48. மிதிலைநாடி - சனகி

51. சாலையை மாயைநீக்கிய சிந்தனையோடும், மாமறையோடும், பாற்கடலோடும், வைகுந்தத்தோடு முவமைகூறினார்,

என்றுகற்றனைநீயிதுபோலென்றான்
துன்றுதாமரைக்கண்பனிசோர்கின்றான். (௫௩)

அடருஞ்செல்வமளித்தவனாணையாற்
படருநல்லறம்பாலித்திரவியிற்
சுடருமெய்ப்புகழ்சூடினென்பதென்
இடருணக்கிழைத்தேனெடுநாளென்றான். (௫௪)

அந்தவாய்மொழியையனியம்பலும்
நொந்தசிந்தையிளையவனுக்கினால்
எந்தைகாண்டியிடரினுக்கங்குரம்
முந்திவந்துமுளைத்தன்றோவென்றான். (௫௫)

ஆகசெய்தக்கதில்லையறத்தினின்
றேகலென்பதறிதென்றுமெண்ணினான்
ஓகைகொண்டவனுள்ளிடர்நோக்கினான்
சோகபங்கந்துடைப்பரிதாலென. (௫௬)

பின்னுந்தம்பியைநோக்கிப்பெரியவன்
மன்னுஞ்செல்வத்திற்குண்டுவரம்பிதற்
கென்னகேடுண்டிவ்வெல்லையிலின்பத்தை
உன்னுமேல்வருமுதியத்தோடென்றான். (௫௭)

தேற்றித்தம்பியைத்தேவருங்கைதொழ
நோற்றிருந்தனரோன்சிலையோனிப்பால்
ஆற்றன்மாதவனாணையிற்போனவர்
கூற்றினுற்றதுகூறலுற்றாமரோ. (௫௮)

ஆ திருவிருத்தம் - எ௧௬.

---

## ௬-வது, பள்ளியடைப்படலம்.

---

பொருவிறாதுவர்போயினர்பொய்யிலார்
இரவுநன்பகலுங்கடிதேகினார்
பரதன்கோயிலுற்றார்படிகாரிரெம்
வரவுசொல்லுதிர்மன்னவற்கேயென்றார். (௧)

---

57. இவ்வெல்லையிலின்பம் - துறவறவொழுக்கினை.

1. படிகாரிர் - காவலாளர்.

தூதர்வந்தனருந்தைசொல்லோடெனக்
காதன்முந்திக்களிக்கின்றசிந்தையான்
போதுகென்னெனப்புக்கவர்கைதொழத்
தீதிலன்கொறிருமுடியோனென்ருன். (உ)

வலியனென்னறவர்கூறமகிழ்ந்தனன்
இலைகொள்பூணிளங்கோனெம்பிரானெடும்
உலைவில்செல்வத்தனேவெனவுண்டெனத்
தலையினேந்தினன்ருழ்தடக்கைகளே. (௩)

மற்றுஞ்சுற்றத்துளார்க்கும்வரன்முறை
உற்றதன்மைவினவியுவந்தபின்
இற்றதாகுமெழுதருமேனியாய்
கொற்றவன்றன்றிருமுகங்கொள்கென்ருர். (௪)

என்றுகூறலுமேத்தியிறைஞ்சினன்
பொன்றிணிந்தபொருவிறடக்கையால்
நின்றுவாங்கியுருகியநெஞ்சினன்
துன்றுநாண்மலர்ச்சென்னியிற்சூடினன். (௫)

சூடிச்சந்தனந்தோய்த்துடைசுற்றுமண்
மூடுதோட்டின்முடங்கனிமிர்த்ததன்
ஈடுநோக்கிவந்தெய்தியதூதர்க்குக்
கோடிமேலுநிதியங்கொடுத்தனன். (௬)

வாணிலாநகைதோன்றமயிர்புறம்
பூணவானுயர்காதலிற்பொங்கினன்
தாணிலாமலர்தூவினன்றம்முனைக்
காணலாமெனுமாசைகடாவவே. (௭)

எழுகசேனையென்றேவினனெய்தினன்
தொழுகேகயர்கோமகன்சொல்லொடும்
தழுவுதேரிடைத்தம்பியொடேறினன்
பொழுதுநாளுங்குறித்திலன்போயினன். (அ)

யானைசுற்றினதேரிரைத்தீண்டின
மானவேந்தர்குழுவினர்வாளுடைத்

2. திருமுடியோன் - தயாதன்.
4. திருமுகம் - முடங்கல், மங்கலவழக்கு.
7. தாணிலா - தாளில் பொருந்தும்படி.

தானைசூழ்ந்தனசங்கமுரன்றன
மீனவேலையின்விம்மினபேரியே. (௯)

கொடிநெருங்கினதொங்கல்குழுமின
வடிநெடுங்கண்மடந்தையரூர்மடப்
பிடிதுவன்றினபூணெவிபோர்ந்தன
இடிதுவன்றினமின்னெனவெங்குமே. (க0)

பண்டியங்கள்பரந்தனபல்லியம்
கொண்டியம்பினகொண்டலிற்கோதையில்
வண்டியம்பினவாளியின்வாவுறுஞ்
செண்டியங்குபரியுஞ்செறிந்தவே. (கக)

தொளைமுகத்திற்சுருதிவிளம்பின
உளைமுகத்தினவும்பரினேகிட
விளைமுகத்தனல்வேலையின்மீதுசெல்
வளைமுகத்தனவாசியும்வந்தவே. (கஉ)

வில்லின்வேதியர்வாள்செறிவித்தகர்
மல்லின்மல்லர்சுரிகையின்வல்லவர்
கொல்லும்வேல்குந்தங்கற்றுயர்கொற்றவர்
தொல்லைவாரணப்பாகருஞ்சுற்றினர். (கங)

எறிபகட்டினமாடுகளேற்றைமா
குறிகொள்கோழிசிவல்குறும்பூழ்நெடும்
பொறிமயிர்க்கவுதாரிகள்போற்றுறும்
நெறியின்மாக்களுமுந்திநெருங்கினர். (கச)

நிறைந்துமாந்தர்நெருங்கினர்நெஞ்சினிற்
பறந்துபோதுங்கொலென்றுபதைக்கின்றார்
பிறந்துதேவருணர்ந்துபெயர்ந்துமுன்
உறைந்தவானுறுவார்களையொக்கின்றார். (கரு)

ஊனளந்தவுடற்குயிராமெனத்
தானளந்துதழுவினதண்ணுமை
தேனளந்துசெவியுறவார்த்தென
வானளந்ததுமாகதர்பாடலே. (க௬)

---

11. செண்டியங்குபரி - வையாளியாகச்செல்கின்ற குதிரை.
12. வேலையின்மீதுசெல்லுகின்ற, அல்லது கடலினுமதிகமாகச் செல்கின்ற எனினுமமையும். 13. வில்லின்வேதியர் - தனுர்வேதம் வல்லார்.
16. வானளந்தது - சுவர்க்கபரியந்தம் எட்டியது.

ஊறுகொண்டமுரசுமிழோதையை
வீறுகொண்டனவேதியர்வாழ்த்தொலி
எறுகொண்டெழுமல்லரிடிப்பினை
மாறுகொண்டனவந்திகரேத்தரோ. (௧௭)

ஆறுங்கானுமகன்மலையுங்கடந்
தேறியேழ்பகனீந்திப்பின்னெனந்திரத்
தூறுபாகுமடையுடைத்தொண்முளை
நாறுபாய்வயற்கோசலைநண்ணினன். (௧௮)

ஏர்துறந்தவயலிளமைந்தர்தோள்
தார்துறந்தனதண்டலைநெல்லினும்
நீர்துறந்தனதாமரைநீத்தெனப்
பார்துறந்தனள்பங்கயச்செல்வியே. (௧௯)

பிதிர்ந்துசாறுபெறுந்துறைமண்டிடச்
சிதிர்ந்துசிந்தியழிந்தனதேங்கனி
முதிர்ந்துகொய்புநரின்மையின்மூக்குமிழ்த்
துதிர்ந்துலர்ந்தனவொண்மலரீட்டமே. (௨௦)

ஏய்ந்தகாலமிதுவிதற்காமென
ஆய்ந்துமள்ளரரிகுநரின்மையால்
பாய்ந்தசூதப்பசுநறுந்தேறலால்
சாய்ந்தொசிந்துமுளைத்தனசாலியே. (௨௧)

எட்குலாமலரேசியநாசியர்
புட்குலாவயற்பூசற்கடைசியர்
கட்கிலார்களைகாதற்கொழுநரோ
டெட்கலாமுடையாரினுயங்கினார். (௨௨)

ஓதுகின்றிலகிள்ளையுமோதியர்
தூதுசென்றிலவந்திலதோழர்பால்
மோதுகின்றிலபேரிமுழாவிழா
போதுகின்றிலபொன்னணிவீதியே. (௨௩)

பாடனீத்தனபண்டொடர்பண்குழல்
ஆடனீத்தவரங்கொடகன்புனல்
சூடனீத்தனசூடிகைசூளிகை
மாடநீத்தனமங்கலவள்ளையே. (௨௪)

---

19. பங்கயச்செல்வி - திருமாமகள்.

24. மங்கலவள்ளை - மங்கலகரமான வள்ளைப்பாட்டு, மங்கலமும் வள்ளைப்பாட்டு என்றுங்கூறுவர். வள்ளை - உலக்கைப்பாட்டு.

நகையிழந்தனவாண்முகநாறகிற்
புகையிழந்தனமாளிகைபொங்கழற்
சிகையிழந்தனதீவிகைதேமலர்த்
தொகையிழந்தனதோகையரோதியே. (உ௫)

அலர்ந்தபைங்கூழகன்குளக்கீழன
மலர்ந்தவாயிற்புனல்வழங்காமையால்
உலர்ந்தவன்கண்ணுலோபர்கடைத்தலை
புலர்ந்துநிற்கும்பரிசிலர்போலவே. (உ௬)

நாவிநீத்தருநல்வளந்துன்னிய
பூவிநீத்தெனநாடுபொலிவொரீஇத்
தேவிநீத்தருஞ்சேணெறிதாவிட
ஆவிநீத்தவுடலெனலாயதே. (உ௭)

என்றநாட்டினைநோக்கியிடருழந்
தொன்றுமுற்றதுணர்ந்திலனுன்னுவான்
சென்றுகேட்பதொர்தீங்குளதாமெனு
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ. (உ௮)

மீண்டுமெய்தியம்மெய்யெனுநல்லணி
பூண்டவேந்தன்றிருமகன்புந்திதான்
தூண்டுதேரினுமுந்துறத்தூங்குவான்
நீண்டவாயினெடுநகர்நோக்கினான். (உ௯)

அண்டமுற்றுந்திரிந்தயர்ந்தாயமூ
துண்டுபோதியென்றுண்கதிர்ச்செல்வனை
விண்டொடர்ந்துவிலக்குவபோல்வன
கண்டிலன்கொடியின்னெடுங்கானமே. (௩0)

ஈட்டுநன்புகழ்க்கீட்டயயானையும்
வேட்டவேட்டவர்கொண்மின்விரைந்தெனக்
கோட்டிமாக்களைக்கூவுவபோல்வன
கேட்டிலன்முரசின்கிளரோதையே. (௩௧)

கள்ளைமாக்கவர்கண்ணியன்கண்டிலன்
பிள்ளைமாக்களிறும்பிடியீட்டமும்

---

25. தீவிகை - விளக்குகள்.
26. பரிசிலர் - உலோபர்கடைத்தலை நின்றிரப்போர்.
29. தன்னுயிர்நீத்தும் தன்சொற்கடவாமையின் 'மெய்யெனு நல்லணி பூண்டவேந்தன்' என்றார்.

வள்ளைமாக்கணி திட்பும்வயிரியர்
கொள்ளைமாக்களிற்கொண்டனரேகவே. (௩௨)

காவன்மன்னவன்கான்முளைகண்டிலன்
ஆவுமாவுமழிகவுள்வேழமும்
மேவுகாதனிதியும்வெறுக்கையும்
பூவின்வானவர்கொண்டனர்போகவே. (௩௩)

சூழமைந்தசுரும்புநரம்புந்தம்
ஏழமைந்தவிசையிசையாமையான்
மாழையுண்கண்மயிலெனுஞ்சாயலார்
கூழைபோன்றபொருநர்குழாங்களே. (௩௪)

தேருமாவுங்களிறுஞ்சிவிகையும்
ஊரும்பண்டியுமூருநரின்மையால்
யாருமின்றியெழிலழிவீதிகள்
வாரியின்றியவாலுகவாற்றினே. (௩௫)

அன்னதன்மையகநகர்நோக்கினன்
பின்னையப்பெரியோர்தம்பெருந்தகை
மன்னன்வைகும்வளநகர்போலுமீ
தென்னதன்மையிளையவனேயென்றான். (௩௬)

வேற்றடங்கலர்விண்ணுறவென்றிடும்
கூற்றடங்கப்பொருநெடுங்கோளிழய்
சேற்றடங்கட்டிருவொடுநீங்கிய
பாற்றடங்கடலொத்ததுபாரென்றான். (௩௭)

குருமணிப்புணரசிளங்கோளரி
இருகைகூப்பியிறைஞ்சினனெய்திய
தொருவகைத்தன்றுறுதுயரூழிவாழ்
திருநகர்த்திதீர்ந்தனளாமென்றான். (௩௮)

அனையவேலையிலக்கடைத்தோரண
மனையினீணெடுமங்கலவீதிகள்

---

32. வள்ளைமாக்கள் - மங்கலபாடகர்கள்.

33. பூசுரரென்னும் பெயர்பற்றிப் 'பூவின் வானவர்' என்றார்.

34. ஏழமைந்தவிசை - ஏழாகப்பொருந்திய இசை.

35. வாலுகம் - மணற்குன்று.

38. ஏழுநகரத்துஞ்சிறந்தமையின் 'ஊழிவாழ் திருநகர்' என்றார்.

நினையுமாத்திரத்தேகியநேமியான்
தனையனுந்தந்தைசார்விடமேவினுன். (௩௯)

விருப்பினெய்தினன்வெந்திறல்வேந்தனை
இருப்புநல்விடமெங்கணுங்கண்டிலன்
அருப்பமன்றிதென்றையுறவெய்தினுன்
பொருப்புநாணவுயர்ந்தபுயத்தினுன். (௪0)

ஆயகாலையிலையனைநாடித்தன்
தூயகையிற்றெழுதுவான்றனை
கூயளன்னைகுறுகுதீரீண்டென
வேய்கோடோளியொருத்திவிளம்பினுள். (௪௧)

வந்துதாயையடியில்வணங்கலும்
சிந்தையாரத்தழுவினடதிலர்
எந்தையென்னையரெங்கையரென்றனள்
அந்தமில்குணத்தானுமதாமென்றான். (௪உ)

வேறு.

மூண்டெழுகாதலான்முளரித்தாடொழ
வேண்டினனெய்தினனுள்ளம்விம்முமால்
ஆண்டகைநெடுமுடியரசர்கோமகன்
யாண்டயான்பணித்திரென்றிருகைகூப்பினுன். (௪௩)

ஆனவனுரைசெயவழிவில்சிந்தையாள்
தானவர்வலிதவநிமிர்ந்ததானையத்
தேனமர்தெரியலான்றேவர்கைதொழ
வானகமெய்தினுன்வருந்தனீயென்றாள். (௪௪)

எறிந்தனகடியசொற்செவியுளெய்தலும்
நெறிந்தலர்குஞ்சியானெடிதுவீழ்ந்தனன்
அறிந்திலனுயிர்த்திலனசனியேற்றினுல்
மறிந்துயர்மராமரமண்ணுற்றென்னவே. (௪௫)

வாயொளிமழுங்கத்தன்மலர்ந்ததாமரை
ஆயலர்நயனங்களருவிசோரத்

---

39. நினையுமாத்திரம் - நுண்ணியதாகிய காலவளவு அந்தமில்குணத்தன்- [1] அழிவற்றகுணத்தினையுடைய பரதாழ்வான். (2) பிதாவினைக் காணுமை யால் அழிகழிந்துள்ள எண்ணத்தினையுடைய பரதன் எனினுமமையும்.

44. வானகமெய்தினுன் - துறக்கமடைந்தான். இது மங்கலவழக்கு.

47. முருகிற்செவ்வியான் - பரதன்.

தீயெரிசெவியில்வைத்தனையதீயசொல்
நீயலதுரைசெயநினைப்பரோவென்றான். (சசு)

எழுந்தனனேங்கினனிரங்கிப்பின்னரும்
விழுந்தனன்விம்மினன்வெய்துயிர்த்தனன்
அழிந்தனராற்றினனாற்றியின்னன
மொழிந்தனன்பின்னருமுருகிற்செவ்வியான். (சஎ)

அறந்தனைவேராறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்றண்ணளித்திருவைத்தேசழித்
திறந்தனையாமெனிலிறைவநீதியை
மறந்தனையுனக்கிதின்மாசுமேலுண்டோ. (சஅ)

சினக்குறும்பெறிந்தெழுகாமத்தீயவித்
தினக்குறும்பியாவையுமெற்றியாவர்க்கும்
மனக்குறுநெறிசெலும்வள்ளியோய்மறந்
துனக்குறுநெறிசெலவொழுக்கின்பாலதோ. (சகூ)

முதலவன்முதலியமுந்தையோர்பழங்
கதையையும்புதுக்கியதலைவன்கண்ணுடை
நுதலவன்சிலைவிலிறுேன்மைநூறிய
புதல்வனையெங்கணம்பிரிந்துபோயினாய். (ருo)

செவ்வழியுருட்டியதிகிரிமன்னவ
எவ்வழிமரபினுமிரவலாளர்தாம்
இவ்வழியுலகினிலின்மைநண்பினோர்
அவ்வழியுலகினுமுளர்கோலோவையா. (ருக)

பற்பகனிழற்றுநின்கவிகைபாய்நிழல்
நிற்பனபல்லுயிருணங்கநீநெடுங்
கற்பகநறுநிழல்காதலித்தியோ
மற்பகமலர்ந்ததோண்மன்னர்மன்னனே. (ருஉ)

இம்பர்நின்றேகினையிருக்குஞ்சார்பிழந்
தும்பர்வந்துன்கழலொதுங்கினார்கொலாம்
சம்பரனனையவத்தானைத்தானவர்
அம்பரத்தின்னமுமுளர்கொலாமையா. (ருங)

---

50. முதலவன் - இட்சுவாகு. கண்ணுடை நுதலவன் - சிவன். சிலை வில் - மலைபோன்ற வில்.

54. அம்பரம் - துறக்கம்.

இயங்கெழுதானையரிறுத்தமாத்திறை
உயங்கலில்மறையவர்க்குதவியும்பரின்
அயங்கெழுவேள்வியோடமரர்க்காக்கிய
வயங்கெரிவளர்த்தனைவைகவல்லையோ. (ருச)

ஏழுயர்மதகளிற்றிறைவவேகினை
வாழியகரியவன்வறியன்கையெனப்
பாழியம்புயத்துநின்பணியினீங்கிலா
ஆழியையினியவற்களிக்கவெண்ணியோ. (ருரு)

பற்றிலைதவத்தினிற்பயந்தமைந்தற்கு
முற்றுலகளித்ததுமுறையினெய்திய
கொற்றவன்முடிமணக்கோலங்காணவும்
பெற்றிலைபோலுநின்பெரியகண்களால். (ருசா)

ஆற்றலனின்னனபன்னியாவலித்
தூற்றுறுகண்ணினனுறுகுவான்றனைத்
தேற்றினனொருவகைசிறிதுதேறிய
கூற்றுறழ்வரிசிலைக்குரிசில்கூறுவான். (ருஎ)

எந்தையுமியாயுமெம்பிரானுமெம்முனும்
அந்தமில்பெருங்குணத்திராமனாதலால்
வந்தனையவன்கழல்வைத்தபோதலாற்
சிந்தைவெங்கொடுந்துயர்தீர்கலாதென்றான். (ருஅ)

அவ்வுரைகேட்டலுமசனியேறென
வெவ்வுரைவல்லவள்மீட்டுங்கூறுவாள்
தெவ்வடுசிலையினாய்தேவிதம்பியென்
றிவ்விருவோரொடுங்கானத்தானென்றாள். (ருகூ)

வனத்தினனென்றவளிசைத்தமாற்றத்தை
நினைத்தனனிருந்தனனெருப்புண்டானென
வினைத்திறம்யாதினிவிளைவதின்னமும்
எனைத்துளகேட்பனதுன்பமியானென்றான். (கூ0)

ஏங்கினவிம்மலோடிருந்தவேந்தலப்
பூங்கழற்காலவன்வனத்துப்போயது

56. பெரியகண்ணென்றார் - முடிமணக்கோலங்காணுங் கண்ணாதலின்.
54. அயங்கெழுகேள்வி - அச்சுவமேதம்.
59. வெவ்வுரைவல்லவள் - கைகேசி.
60, எனைத்து - எத்தனைத்தென் பதன்மரூஉ.

தீங்கிழைத்ததனிலோ தெய்வஞ்சீறியோ
ஓங்கியவிதியினோயாதினோவென. (௬௧)

தீயனவிராமனேசெய்யுமேலவை
தாய்செயலல்லவோதலத்துளோர்க்கெலாம்
போயதுதாதைவிண்புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோவருளுவீரென்றான். (௬௨)

குருக்களையிகழ்தலினன்றுகூறிய
செருக்கினாலன்றொருதெய்வத்தாலுமன்
றருக்கனேயனையவவ்வரசர்கோமகன்
இருக்கவேவனத்தவனேகினானென்றாள். (௬௩)

குற்றமொன்றில்லையேற்கொதித்துவேறுளோர்
செற்றதுமில்லையேற்றெய்வத்தாலன்றேற்
பெற்றவனிருக்கவேபிள்ளைகான்புக
உற்றதென்பின்னவனுலந்ததென்னென்றான். (௬௪)

வாக்கினால்வரந்தரக்கொண்டுமைந்தனைப்
போக்கினேன்வனத்திடைப்போக்கிப்பாருனக்
காக்கினேனவனதுபொறுக்கலாமையால்
நீக்கினான்றன்னுயிர்நேமிவேந்தென்றாள். (௬௫)

சூடினமலர்க்கரஞ்சொல்லின்முன்செவி
கூடினபுருவங்கள்குதித்துக்கூத்துநின்
றாடினவுயிர்ப்பினோடழற்கொழுந்துகள்
ஓடினவுமிழ்ந்தனவுதிரங்கண்களே. (௬௬)

துடித்தனகபோலங்கள்சுற்றுந்தீச்சுடர்
பொடித்தனமயிர்த்தொளைபுகையும்போர்த்தது
மடித்ததுவாய்நெடுமழைக்கைம்மண்பக
அடித்தனவொன்றொடொன்றசனியஞ்சவே. (௬௭)

பாதங்கள்பெயர்தொறும்பாருமேருவும்
போதங்கொணெடுந்தனிப்பொருவில்கூம்பொடு
மாதங்கம்வருகலமறுகிக்கால்பொர
ஓதங்கொள்கடலினின்றுலைவபோன்றவே. (௬௮)

---

64. பிள்ளை - ஈண்டு சீராமனை.

65. நேமிவேந்து - சக்கிரவர்த்தி.

68. கூம்பு - பாய்மரம்.

அஞ்சினர்வானவரவுணரச்சத்தால்
துஞ்சினரெனைப்பலசொரிமதத்தொளை
எஞ்சினதிசைக்கரியிரவிமீண்டனன்
வெஞ்சினக்கூற்றுந்தன்விழிபுதைத்ததே. (௬௯)

கொடியவெங்கோபத்தாற்கொதித்தகோளரி
கடியவடாயெனக்கருதுகின்றிலன்
நெடியவன்முனியுமென்றஞ்சிநின்றனன்
இடியுருமனையவெம்மொழியியம்புவான். (எ0)

மாண்டனனெனந்தையென்றம்முன்மாதவம்
பூண்டனனின்கொடும்புணர்ப்பினுலென்றூற்
றீண்டிலென்வாயதுகேட்டுநின்றயான்
ஆண்டனனேயன்றோவரசையாசையால். (எக)

நீயினமிருந்தனையானுநின்றனென்
ஏயெனுமாத்திரத்தெறற்றுகிற்றிலென்
ஆயகன்முனியுமென்றஞ்சினேனலால்
தாயெனும்பெயரெனைத்தடுக்கற்பாலதோ. (எஉ)

மாளவுமுளனொருமன்னன்வன்சொலால்
மீளவுமுளனொருவீரன்மேயபார்
ஆளவுமுளனொருபரதனுகினுல்
கோளலதறநெறிகுறையுண்டாகுமோ. (எ௩)

சூழியுடைத்தாயுடைக்கொடியசூழ்ச்சியால்
வழியுடைத்தாய்வருமரபைமாய்த்தொரு
பழியுடைத்தாக்கினன்பரதன்பண்டெனும்
மொழியுடைத்தாக்கலின்முறைமைவேறுண்டோ. (எச)

வேறு.

நோயீரல்லீர்நுங்கணவன்றன்னுயிருண்டீர்
பேயீரேநீரின்னமிருக்கப்பெறுவீரே
மாயீர்மாயாவன்பழிதந்தீர்முலைதந்தீர்
தாயீரேநீரின்னுமெனக்கென்றருவீரே. (எரு)

ஒன்றும்பொய்யாமன்னனைவாயாலுயிரோடுந்
தின்றுந்தீராவன்பழிகொண்டுந்திருவெய்தி

70. நெடியவன் - ஸ்ரீராமன்.
72. ஆயகன் - தாய்போலுமிரங்குநெஞ்சுடையான்

ஒன்றுந்நீரேவாழவுவந்தீரவனேகக்
கன்றுந்தாயும்போவனகண்டுங்கழியீரே. (எசு)

இறந்தான்றந்தையீந்தவரத்துக்கிழிவென்று
அறந்தானீதென்றன்னவன்மைந்தனரசெல்லாம்
துறந்தான்றாயின்சூழ்ச்சியின்ஞாலமவனோடும்
பிறந்தானுண்டானென்னுமதென்றாற்பெறலாமே. (எஎ)

மாளுமென்றேதந்தைதையுன்னுவசைகொண்டாள்
கோளும்மென்றாலையெனல்கொண்டானதுவன்றேல்
மீளும்மன்றேயென்னையுமெய்யேயுலகெல்லாம்
ஆளுமென்றேபோயினனன்றோவரசாள்வான். (எஅ)

ஓதாநின்றதொல்குலமன்னனுணர்வப்பால்
யாதானுந்தானாகவெலாக்கேபணிசெய்வான்
தீதாநின்றசிந்தனைசெய்தானவனென்னப்
போதாதோவென்றாயிவள்கொண்டபுகழம்மா. (எகூ)

உய்யாநின்றேனின்னமுமென்முன்னுடன்வந்தான்
கையார்கல்லைப்புல்லடக்குண்ணக்கலமேந்தி
வெய்யோனானின்சாலியின்வெண்சோறமுதென்ன
நெய்யோடுண்ணநின்றதுநின்றார்நினையாரோ. (அ0)

வில்லார்தோளான்மேவினன்வெங்கானகமென்ன
நல்லானன்றேதுஞ்சினனஞ்சேயனையாளைக்
கொல்லேன்மாயேன்வன்பழியாலேகுறைவற்றேன்
அல்லேனோயானன்புடையார்போலழுகின்றேன். (அக)

பாரோர்கொள்ளார்யானுயிர்பேணிப்பழிபூணேன்
தீராதொன்றோதுன்பமிவ்வூரிற்றிருநில்லாள்
ஆரோடெண்ணிற்றாருரைதந்தாரறமெல்லாம்
வேரோடுங்கேடாகமுடித்தென்விளைவித்தாய். (அஉ)

கொன்றேனானென்றந்தையைமற்றுன்கொலைவாயால்
ஒன்றோகானத்தண்ணலையுய்த்தேனுலகாள்வான்
நின்றேனென்றானின்பிழையுண்டோபழியுண்டோ
என்றேனுந்தானென்புகழ்மாயுமிடமுண்டோ. (அங)

---

78. அரசாள்வாள் என்றது - சீராமனை.

81. நல்லான் - தயரதன்.

கண்ணாலேயென் செய்வினையின்னுஞ்சிலகாண்பார்
மண்ணார்பாராதெள்ளுவர்வாளாபழிபூண்டாய்
உண்ணாநஞ்சங்கொல்கிலதென்னுமுரையுண்டேன்
றெண்ணாநின்றேனன்றியிரேனென்னுயிரோடே. (அச)

என்றுன்பாவிக்கும்பிவயிற்றினிடைவைகித்
தோன்றுநதீராப்பாதகமற்றென்றுயர்தீரச்
சான்றுந்தானேநல்லறமாகத்தகைஞாலம்
மூன்றுங்காணமாதவம்யானேமுயல்கின்றேன். (அரு)

சிறந்தார்சொல்லுநல்லுரைசொன்னேன்செயலெல்லாம்
மறந்தாய்செய்தாயாகுதிமாயாவுயிர்தன்னைத்
துறந்தாயாகிற்றாயையுமாதியுலகத்தே
பிறந்தாயாதியீதலதில்லைபிறிதென்றான். (அசு)

வேறு.

இன்னணமினையனவியம்பியானுமிப்
பன்னருங்கொடுமைனப்பாவிபாடிரேன்
துன்னருந்துயர்கெடத்தூயகோசலை
பொன்னடிதொழுவெனென்றெழுந்துபோயினான். (அஎ)

ஆண்டகைகோசலையருகரெய்தினன்
மீண்டுமண்கிழிதரவீழ்ந்துகேழ்கிளர்
காண்டகுதடக்கையிற்கமலச்சீறடி
பூண்டனன்கிடந்தனன்புலம்பினனரோ. (அஅ)

எந்தையெவ்வுலகுளானெம்முன்யாண்டையான்
வந்ததுதமியெனிம்மறுக்கங்காணவோ
சிந்தையினுறுதுயர்தீர்த்திராலெனும்
அந்தரத்தமரருமழுதுசோரவே. (அகூ)

அடித்தலங்கண்டிலென்யானெனையனைப்
படித்தலங்காவலன்பெயரற்பாலனோ
பிடித்திலிர்போலுநீர்பிழைத்திராலெனும்
பொடித்தலந்தோளுறப்புரண்டுசோர்கின்றான். (கூ0)

கொடியவர்யாவருங்குலங்கள்வேரற
நொடிகுவென்யானதுநுவல்வதெங்ஙனம்

---

84. உண்ணா - ஈறுகெட்டவெதிர்மறை வினையெச்சம்.
86. உயிர்நித்தமென்பார் மதம்பற்றி 'மாயாவுயிர்' என்றார்.
88. ஆண்டகை - பரதன்.

கடியவள்வயிற்றினிற்பிறந்தகள்வனேன்
முடிகுவெனருந்துயர்முடியவென்னுமால். (கூக)

இரதமொன்றூர்ந்துபாரிருளைநீக்குமவ்
வரதனிலொளிபெறவளர்ந்ததொல்குலம்
பரதனென்றொருபழிபடைத்ததென்னுமால்
மரகதமலையெனவளர்ந்ததோளினான். (கூஉ)

வாடொடுதானையான்வானில்வைகிடக்
காடொருதலைமகனேய்தக்கண்ணிலா
நாடொருதுயரிடைநைவதேயெனும்
தாடொடுதடக்கையத்தருமமேயனான். (கூ௩)

புலம்புறுகுரிசிறன்புலர்வுநோக்கினள்
குலம்பொறைகற்பிவைசுமந்தகோசலை
நிலம்பொறையாற்றலனெஞ்சந்தூய்தெனாச்
சலம்பிறிதுறமனந்தளர்ந்துகூறுவாள். (கூச)

மையறுமனத்தொருமாசுளானலன்
செய்யனேயென்பதுதேருஞ்சிந்தையாள்
கைகயர்கோமகளிழைத்தகைதவம்
ஐயநீயறிந்திலைபோலுமாலென்றாள். (கூரு)

தாளுறுகுரிசிலத்தாய்சொற்கேட்டலும்
கோளுறுமடங்கலிற்குமுறிவிம்முவான்
நாளுறுநல்லறநடுங்கநாவினால்
சூளுறுகட்டுரைசொல்லன்மேயினான். (கூசா)

அறங்கெடமுயன்றவனருளினெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறரைச்சீறினோன்
மறங்கொடுமன்னுயிர்கொன்றுவாழ்ந்தவன்
துறந்தமாதவர்க்கருந்துயரஞ்சூழ்ந்துளோன். (கூஎ)

குரவரைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலனுறுபொருள்புனைவில்வாரினோன்

92. வரதன் - சூரியன். பரதனைத் தருமமேயனானென்று வமைமுகத் தாற் கூறினர்.

96. கோளுறுமடங்கல்-வன்மைபொருந்தியசிங்கம், அல்லதுதடையுண்ட சிங்கம் என்றும் கூறுவர்.

விரவலர்வெரிநிடைவிழிக்கமீண்டுளோன்
இரவலருநிதியெறிந்துவெளவினேன். (௯௮)

தழைத்ததண்டுளவினேன்றலைவனல்லனென்
றழைத்தவனறநெறியந்தணாளரிற்
பிழைத்தவன்பிழைப்பிலாமறையைப்பேணலா
திழைத்தவன்பொய்யெனுமிழுதைநெஞ்சினேன். (௯௯)

தாய்பசியுழந்துயிர்தளரத்தான்றனிப்
பாய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவியும்
நாயகன்படநடந்தவனுநண்ணுமத்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான். (௧௦௦)

தாளினிலடைந்தவர்தம்மைத்தற்கொரு
கோளுறவஞ்சினன்கொடுத்தபேதையும்
நாளினுமறமறந்தவனுநண்ணுறும்
மீளருநரகிடைக்கடிதுவீழ்கயான். (௧௦௧)

பொய்க்கரிகூறினேன்போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலங்கரந்துவவ்வினேன்
எய்த்திடத்திடர்செய்தோனென்றின்னோர்புகும்
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான். (௧௦௨)

அந்தணருறையுளையனலியூட்டினேன்
மைந்தரைக்கொன்றுளோன்வழக்கிற்பொய்த்துளோன்
நிந்தனைதேவரைநிகழ்த்தினேன்புகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே. (௧௦௩)

கன்றுயிரோய்ந்துகக்கறந்துபாலுண்டோன்
மன்றிடைப்பிறர்பொருண்மறைத்துவவ்வினேன்
நன்றியைமறந்திடுநயமிலுவினேன்
என்றிவருறுநரகென்னதாகவே. (௧௦௪)

ஆறுதன்னுடன்வருமஞ்சொன்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டேகினேன்
சோறுதன்னயலுளோர்பசிக்கத்துய்த்துளோன்
ஏறுமக்கதியிடையானுமேறவே. (௧௦௫)

---

98. இரவலர் அருநிதி - ஏழைகள் வெகு கஷ்டப்பட்டு பற்பலரிடத்து நின்றுஞ் சேகரிக்கின்றபொருள். 102. கரி - சாக்ஷி.

103. அந்தணருறையுளை யனலியூட்டினேன் - பிரமத்தோஷி.

எஃநெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையான்
அஃகலிலறநெறியாக்கியான்பொருள்
வெஃகியமன்னன்வீழ்நரகின்வீழ்கயான். (௧௦௬)

அழிவருமரசியலெய்தியாகுமென்
றிழிவருசிறுதொழிலியற்றியாண்ட,கின்
வழிதருதருமத்தைமறந்துமற்றொரு
பழிவருநெறிபடர்பதகனாகயான். (௧௦௭)

தஞ்செனவொதுங்கினர்தனதுபாருளோர்
எஞ்சலின்மறுக்கினோடிரியல்போயுற
வஞ்சிசென்றிறுத்தவன்வாகைமீக்கொள
அஞ்சினமன்னவனாகயானுமே. (௧௦௮)

கன்னியையழிசெயக்கருதினேன்குரு
பன்னியைநோக்கினேன்பருகினேனறை
பொன்னிகழ்களவினிற்பொருந்தினேனென
இன்னவருறுகதியென்னதாகவே. (௧௦௯)

ஊணலவுண்வழிநாயினுண்டவன்
ஆணலன்பெண்ணலனார்கொலாமென
நாணலனரகமுண்டென்னுநல்லுரை
பேணலன்பிறர்பழிபிதற்றியாகயான். (௧௧௦)

மறுவிறொல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலையெளியவருணவுசிந்தினேன்
நறியனவயலவர்நாவினீர்வர
உறுபதநுங்கியவொருவனாகயான். (௧௧௧)

வில்லினும்வாளினும்விரிந்தவாண்டொழில்
புல்லிடையுகுத்தனென்பொய்மையாக்கையைச்
சில்பகலோம்புவான்செறுநர்சீறிய
இல்லிடையிடுபதமேற்கவெண்கையால். (௧௧௨)

---

106. எஃகினன் - அஞ்சினவன்.

108. வஞ்சி - வட்கார் மேற்செல்வார் புனையுமாலை. வாகை - வெற்றி கொண்டார் புனையுமாலை.

111. உறுபதம் - உண்ணுமுணவு, இடுபதம்மது.

ஏற்றவற்கொருபொருளுள்ளதின்றென்று
மாற்றலனுதலவன்வரம்பில்பல்பகல்
ஆற்றினனுழற்றுமோராதனெய்துமக்
கூற்றுறுநரகினோர்கூறுகொள்கயான். (ககங)

பிணிக்குறுமுடையுடல்பேணிப்பேணலார்த்
துணிக்குறுவயிரவாடக்கைதூக்கிப்போய்
மணிக்குறுநகையிளமங்கைமார்கண்முன்
தணிக்குறுபஙகளுரைத்தாழ்கவென்றலே. (ககச)

கரும்பலர்செந்நெலங்கழனிக்கானநா
டரும்பகைகவர்ந்துணவாவிபேணினென்
இரும்பலர்நெடுந்தளையீர்த்தகாலொடும்
விரும்பலர்முகத்தெதிர்விழித்துநிற்கயான். (ககரு)

தீயனகொடியவள்செய்தசெய்கையை
நாயினேனுணரினன்னெறியினீங்கலாத்
தூயவர்க்கிடரிழைத்துழலுந்தோமுடை
ஆயவர்வீழ்கதியதனில்வீழ்கயான். (ககசு)

வேறு.

தூயவாசகஞ்சொன்னதோன்றலைத்
தீயகானகந்திருவினீங்கிமுன்
போயினான்வரக்கண்டபொம்மலாள்
ஆயகாதலாலழுதுபுல்லினாள். (ககஎ)

செம்மைநன்மனத்தண்ணல்செய்கையும்
அம்மைதீமையுமறிதறேற்றினாள்
கொம்மைவெம்முலைகுமுறுபாலுக
விம்மல்விம்மநின்றழுதுவீங்கினாள். (ககஅ)

முன்னைநுங்குலமுதலுளோர்கடாம்
நின்னையாவரேநிகர்க்குநீர்மையார்
மன்னர்மன்னவாவென்றுவாழ்த்தினாள்
உன்னவுன்னநைந்துருகிவிம்முவாள். (ககக)

113. ஆதன் - அறிவிலி.
115. இரும்பலர் - பகைவர்.
116. வெள்ளிப்பாட்டு.
117. தோன்றல் - ஈண்டு பரதன்.
119, நுங்குலமுதலுளோர் - மனுத்தொடக்கமானவரை.

உன்னவுன்னநைந்துருகுமன்புகூர்
அன்னை தாளில்வீழ்ந்திளையவண்ணலும்
சொன்னநீர்மையாற்றொழுதுமாழ்கினான்
இன்னவேலைவாய்முனிவனெய்தினான். (கஉ0)

வந்தமாதவன்தாளில்வள்ளல்வீழ்ந்
தெந்தையாண்டையானியம்புவீரென
நொந்துமாழ்கினானுவல்வதோர்கிலா
தந்தமாதவனழுதுபுல்லினான். (கஉக)

மருவின்மைந்தனேவள்ளலுந்தையார்
இறுதியெய்திநாளேழிரண்டின
சிறுவர்செய்கடன்செய்துதீர்த்தியென்
றுறுவன்மேயினானுரையின்மேயினான். (கஉஉ)

அன்னையேவினாளடியிறைஞ்சினான்
பொன்னின்வார்சடைப்புனிதனோடும்போய்த்
தன்னைநல்கியத்தருமநல்கினான்
பன்னுதொல்லறப்படிவநோக்கினான். (கஉங)

மண்ணின்மேல்விழுந்தலறிமாழ்குவான்
அண்ணலாழியானவனிகாவலான்
எண்ணெயுண்டபொன்னெழில்கொள்மேனியைக்
கண்ணநீரினாற்கழுவியாட்டினான். (கஉச)

பற்றியவ்வயின்பரிவின்வாங்கினார்
சுற்றுநான்மறைத்துறைசெய்கேள்வியார்
கொற்றமண்கணைகுமுறமன்னனை
மற்றோர்பொன்னின்மாமானமேற்றினார். (கஉரு)

கரைசெய்வேலைபோனகரிகையெடுத்
துரைசெய்பூசலிட்டுயிர்துளங்குற
அரசவேலைசூழ்ந்தழுதுகைதொழப்
புரசயானையிற்கொண்டுபோயினார். (கஉசா)

---

123. தன்னையிழந்து வாய்மைகாத்தமையின் 'தன்னைநல்கியத்தருமநல்கினான்' என்றார்.

124. ஆழியான் - தெய்வீகமான சக்கரத்தினையுடையவன்.

125. மாமானம் - பெரியவிமானம்.

126. தேவிமார் - அறுபதினாயிரவரை.

உந்துபொற்றடந்தேர்வலாளொடும்
மந்திரப்பெருந்தலைவர்மற்றுளோர்
தந்திரத்தனித்தலைவர்நண்பினோர்
வந்துசுற்றமுற்றழுதுமாழ்கினார். (கஉஎ)

சங்குபேரியுந்தழுவுசின்னமும்
எங்குமெங்குநின்றிரங்கியேங்குவ
மங்குறோய்நகர்மகளிராமெனப்
பொங்குகண்புடைத்தழுவபோன்றவே. (கஉஅ)

மாவும்யானையும்வயங்குதேர்களும்
கோவுநான்மறைக்குழுவுமுன்செலத்
தேவிமாரொடுங்கொண்டுதெண்டிரை
தாவுவார்புனற்சரயுவெய்தினார். (கஉகூ)

எய்திநூலுளோர்மொழிந்தயாவையும்
செய்துதீக்கலந்திருத்திச்செல்வனை
வெய்தினேற்றினார்வீரநுந்தைபால்
பொய்யின்மாக்கடன்கழித்திபோந்தென்றார். (கங0)

என்னும்வேலையிலெழுந்தவீரனை
அன்னைதீமையாலரசனின்னையும் .
துன்னுதுன்பத்தாற்றுறந்துபோயினான்
முன்னரேயெனமுனிவன்கூறினான். (கஙக)

துறந்துபோயினானெனவேதோன்றனீ
பிறந்துபோறம்பிழைத்ததென்றல்போல்
இறந்துபோயினானிருந்ததாண்டது
மறந்துவேறொருமைந்தனுங்கொலாம். (கஙஉ)

இடிக்கண்வாளராவிடைவதாமெனப்
படிக்கண்வீழ்ந்தகம்பதைக்குநெஞ்சினான்
தடுக்கலாகலாத்துயரந்தன்னுளே
துடிக்கவிம்மிநின்றழுதுசொல்லுவான். (கஙங)

உரைசெய்மன்னன்மற்றுன்னிலென்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
பிரதபூசனைக்குரியபேறிலேன்
அரசுசெய்யவோவாவதாயினேன். (கஙச)

130. கடன் - உரிமைச்சடங்கு.
134. பிரதபூசனை - பிரதேசம்ஸ்காரத்தை.

பூவினான்முகன்புதல்வனாதியாம்
தாவின்மன்னர்தந்தருமநீதியால்
தேவராயினார்சிறுவனாகியே
ஆவநான்பிறந்தவத்தனானவா. (கஙரு)

துன்னுதாள்வளைஞ்சுமந்ததாழையில்
பன்னுவான்குலைப்பதடியாயினேன்
என்னையென்னையேயீன்றுகாத்தவென்
அன்னையாரெனக்கழகுசெய்தவா. (கஙசு)

என்றுகூறிநொந்திடரின்மூழ்குமத்
துன்றுதாரவற்கிளையதோன்றலால்
அன்றுநேர்கடனமைவதாக்கினான்
நின்றுநான்மறைநெறிசெய்நீர்மையான். (கஙஎ)

இழையுமாரமுமிடையுமின்னிடக்
குழையுமாமலர்க்கொம்பனார்கடாம்
தழையின்முண்டகந்தழுவுகானிடை
முழையின்மஞ்ஞைபோலெரியின்மூழ்கினார். (கஙஅ)

அங்கிநீரினுங்குளிரவம்புயத்
திங்கள்வாண்முகந்திருவிளங்குறச்
சங்கைதீர்ந்துதங்கணவர்பின்செலும்
நங்கைமார்புகுமுலகநண்ணினார். (கஙகூ)

அனையசெய்கையாலரசர்கோமகற்
கினையதன்மையாலியைவசெய்துபின்
மனையுளெய்தினான்மரபின்வாழ்வினை
வினையினெய்துமோர்பிணியின்வேலையான். (கசO)

ஐந்துமைந்துநாளேழியாமெனா
மைந்தன்வெந்துயர்க்கடலின்வைகினான்
தந்தைதன்வயிற்றருமம்யாவையும்
முந்துநூலுளோர்முறைவின்முற்றினான். (கசக)

135. ஆவஎன்றது - இரக்கத்தின்கட்குறிப்பு.
136. தாழை - தெங்கு.
139. தங்கணவர் பின்செலு நங்கைமார் புகுமுலகம் - சககமனமடைந்த மாதரடையும் புண்ணிய உலகம்.
141. ஐந்துமைந்துநாள் - தசராத்திரி.

முற்றுமுற்றுவித்துதவிழும்மைநூற்
சுற்றம்யாவையுந்தொடரத்தோன்றினான்
வெற்றிமாதவன்வினைமுடித்தவன்
கொற்றவேனெடுங்குமரற்கூடினான். (௧௪௨)

மன்னரின்றியேவையம்வைகரூன்
றொன்மையன்றெனத்துணியுநெஞ்சினார்
அன்னமாநிலத்தறிஞர்தம்மொடும்
முன்னைமந்திரக்கிழவர்முந்தினார். (௧௪௩)

ஆ திருவிருத்தம்-௩௩௯.

## ௧௦-வது, ஆற்றுப்படலம்.

வரன்முறைதெரிந்துணர்மறையின்மாதவத்
தருமறைமுனிவனுமாண்டையானென
விரைவின்வந்தீண்டினர்விரகினெய்தினர்
பரதனைவணங்கினர்பரியுநெஞ்சினர். (௧)

மந்திரக்கிழவருநகரமாந்தரும்
தந்திரத்தலைவருந்தரணிபாலரும்
அந்தரமுனிவரோடறிஞர்யாவரும்
சுந்தரக்குரிசிலைமரபிற்சுற்றினார். (௨)

சுற்றினரிருந்துழிச்சுமந்திரப்பெயர்
பொற்றடந்தேர்வலான்புலமையுள்ளத்தான்
கொற்றவற்குறுபொருள்குறித்தகொள்கையான்
முற்றுணர்முனிவனைமுகத்துநோக்கினான். (௩)

நோக்கினாற்சுமந்திரனுவலலுற்றதை
வாக்கினாலன்றியேயுணர்ந்தமாதவன்
காக்குதியுலகுநின்கடனதாமெனக்
கோக்குமரனுக்கதுதெரியக்கூறுவான். (௪)

வேதியருந்தவர்விருத்தர்வேந்தர்கள்
ஆதியர்நின்வயினடைந்தகாரியம்
நீதியுந்தருமமுநிறுவநீயிது
கோதறுகுணத்தினாய்மனத்துட்கோடியால். (௫)

4. நோக்கினால் - குறிப்புப்பார்வையால்.

தருமமென்றொருபொருடந்துநாட்டுதல்
அருமையென்பதுபெரிதறிதியையநீ
இருமையுந்தருவதற்கியைவதீண்டிது
தெருண்மனத்தார்செயுஞ்செயலிதாகுமால். (௬)

வள்ளுறுவயிரவாளரசில்வையகம்
நள்ளுறுகதிரிலாப்பகலுநாளொடும்
தெள்ளுறுமதியிலாவிரவுந்தேவுடன்
உள்ளுறையுயிரிலாவுடலுமொக்குமே. (௭)

தேவர்தம்முலகினுந்தீமைசெய்துழல்
மாவலியவுணர்கள்வைகுநாட்டினும்
ஏவெவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்தலைவரையின்மைகண்டிலம். (௮)

முறைதெரிந்தொருவகைமுடியநோக்குறின்
மறையவன்வகுத்தனமண்ணில்வானிடை
நிறைபெருந்தன்மையினிற்பசெல்வன
இறைகளையில்லனவெவையுங்காண்கிலம். (௯)

பூத்தநாண்மலரயனாதிப்புண்ணியர்
ஏத்துவான்புகழினரின்றுகாறுங்கூ
காத்தனர்பின்னொருகளைகணின்மையால்
நீத்தநீருடைகலநீரதாகுமால். (௧௦)

உந்தையேயாவிறந்தனனும்முனீத்தனன்
வந்ததுமன்னைதன்வரத்தின்மைந்தநீ
அந்தமில்பேரரசளித்தியன்னது
சிந்தனையெமக்கெனத்தெரிந்துகூறினான். (௧௧)

தஞ்சமிவ்வுலகநீதாங்குவாயெனச்
செஞ்செவேமுனிவரன்செப்பக்கேட்டலும்
நஞ்சினைநுகரெனநடுங்குவாரினும்
அஞ்சினனயர்ந்தனனருவிக்கண்ணினான். (௧௨)

நடுங்கினனாத்தடுமாறிநாட்டமும்
இடுங்கினன்மகளிரினிரங்குநெஞ்சினன்

---

6. இருமை - இம்மை, மறுமை.

10. நீத்தநீருடை கலநீரதென்றது - கடலிற் கவிழ்ந்த மரக்கலத் தன்மையை.

ஒடுங்கியவுயிரினனுணர்வுகைதரத்
தொடங்கினனரசவைக்குள்ளளுஞ்சொல்லுவான். (கங)

மூன்றுலகினுக்குமோர்முதல்வனுய்முதல்
தோன்றினனிருக்கயான்மகுடஞ்சூடுதல்
சான்றவருரைசெயத்தருமமாதலால்
ஈன்றவள்செய்கையினிழுக்குண்டாகுமோ. (கச)

அடைவருங்கொடுமையென்னன்னைசெய்கையை
நடைவருந்தன்மைநீர்நன்றிதென்றிரேல்
இடைவருங்காலநீண்டிரண்டுநீத்தது
கடைவருந்தீநெறிக்கலியிளுட்சியோ. (கரு)

வேத்தவையிருந்தநீர்விமலனுந்தியில்
பூத்தவன்முதலியபுவியுட்டோன்றினுர்
மூத்தவரிருக்கவேமுறைமையாணிலம்
காத்தவருளரெனிற்காட்டிக்காண்டிரால். (கசு)

நன்னெறியென்னினுநானிந்நானில
இன்னுயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்
அன்னவன்றனைக்கொணர்ந்தலங்கன்மாமுடி
தொன்னெறிமுறைமையிற்சூட்டிக்காண்டிரால். (கஎ)

அன்றெனிலவனொடுமரியகானிடை
நின்றினிதிருந்தவநெறியினுற்றுவென்
ஒன்றினியுரைப்பினென்னுயிரைநீக்குவென்
என்றனனென்றபோதிருந்தபேரவை. (கஅ)

ஆன்றபேரரசனுமிருப்பவையனும்
ஏன்றனன்மணிமுடியேந்தல்வேந்தநீ
வான்றொடர்திருவினைமறுத்திமன்னிளந்
தோன்றல்கள்யாருளர்நின்னிற்றோன்றினுர். (கக)

ஆழியையுருட்டியுமறங்கள்போற்றியும்
வேள்வியையியற்றியும்வளர்க்கவேண்டுமோ
ஏழிரேடேழுமுலகுமெஞ்சினும்
வாழியநின்புகழென்றுவாழ்த்தினுர். (உ0)

குரிசிலுந்தம்பியைக்கூவிகொண்டலின்
முரசறைந்திந்நகர்முறைமைவேந்தனைத்

16. முதலுதல் - சிருஷ்டியில் முற்பட்டுநிற்றல்.

தருதுமீண்டென்பதுசாற்றித்தானையை
விரைவினிலெழுகெனவிளம்புவாயென்றான். (உக)

நல்லவனுரைசெயநம்பிகூறலும்
அல்லலிலழுங்கியவன்பின்மாநகர்
ஒல்லெனவிரைத்ததாலுயிரில்யாக்கையைச்
சொல்லெனுமமிர்திறற்றுளித்ததென்னவே. (உஉ)

அவித்தவைம்புலத்தவராதியாயுள
புவித்தலையுயிரெலாமிராமன்பொன்முடி
கவிக்குமென்றுரைக்கவேகளித்ததாலது
செவிப்புலநுகர்வதோர்தெய்வத்தேன்கொலாம். (உங)

படுமுரசறைந்தனர்பரதன்றம்முனைக்
கொடிநகர்தருமவற்கொணரச்சேனையை
முடுகுகவென்றசொன்மூரிமாநகர்
உடுபதிவேலையினுதயம்போன்றதே. (உச)

எழுந்ததுபெரும்படையேழுவேலையின்
மொழிந்தபேரூழியின்முழங்கிமுந்தெழ
அழிந்ததுகேகயன்மடந்தையாசைபோய்க்
கழிந்ததுயர்நெடுங்காதறாண்டவே. (உரு)

பண்ணினபகடுதேர்புரவிபண்டியும்
மண்ணினைமறைத்தனவளர்ந்தமாக்கொடி
விண்ணினைமறைத்தனவிரிந்தமாத்துகள்
கண்ணினைமறைத்தனகமலத்தோனையே. (உசு)

ஈசனிவ்வுலகினையழிக்குநாளெழும்
ஓசையினிமிர்ந்துளதொல்லென்பேரொலி
காசையில்கரியவற்காணமூண்டெழும்
ஆசையினிமிர்ந்ததவ்வணிகராசியே. (உ௭)

படியொடுதிருநகர்துறந்துபன்மரம்
செடியொடுகொடுவனநோக்கிச்சீதையாம்

22. நம்பி - ஈண்டு சத்துருக்கனை. துளித்தல் - ஈண்டு உயிர்பெற்றுக்கண்ணீர்வார்தல் - துளிர்த்தலென்னும் கிராம்மியமொழி, துளித்ததென நின்றது. துளிர்த்தல் - உயிர்பெறுதல்.

27. அவ்வணிகராசி - அந்தச்சேனையின் பிரிவுகள். அவையாவன, இரதம், கசம், துரகம், பதாதி, என்பனவாகிய இவைகள்,

கொடியொடுநடந்தவக்கொண்டலாமெனப்
பிடியொடுநடந்தனபெருங்கைவேழமே. (உஅ)

சேற்றிளமரைமலர்சிறந்தவாமெனக்
காற்றளம்பொலிதருகன்னிமாரொடும்
ஏற்றிளம்பிடிக்குலமிகலியின்னடை
தோற்றிளமகளிரைச்சுமப்பபோன்றவே. (உகூ)

வேதனைவெயிற்கதிர்தணிக்கமென்மழைச்
சீதநீர்கொடுநெடுங்கொடியுஞ்சென்றன
கோதைவெஞ்சிலையவன்கோலங்காண்கிலா
மாதரினுடங்குவவரம்பில்கோடியே. (ஙo)

வெண்மதிமீச்செலமேகமூர்ந்தென
அண்ணல்வெங்கதிரவனளவின்மூர்த்தியாய்
மண்ணிடையிழிந்தொருவழிக்கொண்டாலென
எண்ணருமன்னவர்களிற்றினேகினர். (ஙக)

தேர்மிசைச்சென்றதோர்சிந்துசெம்முகக்
கார்மிசைக்கழிந்ததார்கலியொர்கார்க்கடல்
ஏர்மிசையிவுளிமேலேகிற்றெங்கணும்
பார்மிசைப்படர்ந்ததுபதாதிப்பௌவமே. (ஙஉ)

தாரையுஞ்சங்கமுந்தாளங்கொம்பொடு
வார்மிசைப்பம்பையுந்துடியுமற்றவும்
பேரியுமியம்பலசென்றபேதைமைப்
பூரியர்குழாத்திடையறிஞர்போலவே. (ஙங)

தாவருநாண்முதலணியலாற்றகை
மேவருகலங்களைவெறுத்தமேனியர்
தேவருமருள்கொளத்தெரியுங்காட்சியர்
பூவுதிர்கொம்பெனமகளிர்போயினர். (ஙச)

அதிர்கடல்வையகமனைத்துங்காத்தவன்
விதிவருந்தனிக்குடைமீதிலாப்படை
பொதிபலகவிகைமீன்பூத்ததாகிலும்
கதிர்மதிநீங்கியகங்குல்போன்றதே. (ஙரு)

---

35. விதிவரும் தனிக்குடை - சூரியவங்கிசத்து முதலரசன் காலந் தொட்டு பட்டாபிஷேகவரசர் தலைமீது பிடிக்கப்பட்டுவருகிற ஒப்பற்றகுடை, அது வேதமந்திரவழியாய் புனிதப்படுத்தப்பட்ட இயல்பினையுடையதாகலின், அதற்கு 'விதிவரும்' என்ற சிறப்படை கொடுத்தனர்.

செல்வியசெலவினுற்சிறிய திக்கெனச்
சொல்லியசேனையைச்சுமந்ததேயெனில்
ஒல்லியல்வேலைநீருடுத்தபாரையோர்
மெல்லியலென்றவர்மெலியரேகொலாம். (நகூ)

தங்குசெஞ்சாந்தகில்கலவைசார்கில
குங்குமங்கொட்டிலகோவைமுத்தில
பொங்கிளங்கொங்கைகள்புதுமைவேறில
தெங்கிளநீரெனத்தெரிந்தகாட்சியே. (நஎ)

இன்றுணையவர்முலையெழுதுசாந்தினம்
மன்றலந்தாரினுமறைந்திலாமையால்
துன்றிளங்கொடிமுகிற்றாசுநீங்கிய
குன்றெனப்பொலிந்தனகுவவுத்தோள்களே. (நஅ)

நறையறுகோதையர்நாட்செய்கோலத்தின்
துறையறவஞ்சனந்துறந்தநாட்டங்கள்
குறையறநிகர்த்தனகொற்றமுற்றுவான்
கறையறக்கழுவியகாலவேலையே. (நகூ)

விரிமணிமேகலைவிரவியார்க்கில
தெரிவையரல்குருரொலியிறேறெனப்
பரிபுரமார்க்கிலாப்பவளச்சீறடி
அரியினமார்க்கிலாக்கமலமென்னவே. (சO)

மல்கியகேகயன்மடந்தைவாசகம்
நல்கியதரிவையர்நடுவிற்கேகொலாம்
புல்கியமலர்வடம்பூண்கிலாமையால்
ஒல்கியவொருவகைபொறையுயிர்க்கவே. (சக)

கோமகன்பிரிதலிற்கோலநீத்துள
தாமரைச்செல்வியுந்தவத்தைமேவினாள்
காமனுமருந்துயர்க்கடலின்மூழ்கினான்
ஆமெனநிகழ்ந்ததவ்வளவில்சேனையே. (சஉ)

மண்ணையும்வானையும்வயங்குதிக்கையும்
உண்ணியநிமிர்கடலொக்குமென்பதென்

36. ஒல்லியல்வேலைநீர் - ஒலியையியல்பாகவுடைய கடல்.
39. காலவேலை - காலன்போன்ற வேலினை.

கண்ணினுமனத்தினுங்கமலத்தண்ணறன்
எண்ணினுநெடிதவணெழுந்தசேனையே. (சங)

அலைநெடும்புனலறக்குடித்தலாலகம்
நிலைபெறநிலைநெறிநிறுத்தலானெடு
மலைகளைமண்ணுறவழுத்தலாற்றமிழ்த்
தலைவனைநிகர்த்ததத்தயங்குதானையே. (சச)

அறிஞருஞ்சிறிஞருமாதியந்தமாச்
செறிபெருந்தானையுந்திருவுநீங்கலால்
குறியவன்புனலெலாம்வயிற்றிற்கொண்டநாள்
மறிகடலொத்ததவ்வயோத்திமாநகர். (சரு)

பெருந்திரைநதிகளும்வயலும்பெட்புறு
மரங்களுமலைகளுமண்ணுங்கண்ணுறத்
திருந்தவிலயோத்தியாந்தெய்வமாநகர்
அருந்தெருவொத்ததப்படைசெல்லாறரோ. (சசு)

தார்கடாங்கோதைதாந்தாமந்தாந்தகை
ஏர்கடாங்கலவைதாங்கமழ்ந்தின்றென்பரால்
கார்கடாமெனமிகக்கடுத்தகைம்மலை
வார்கடாமல்லதம்மன்னன்சேனையே. (சஎ)

ஆளுலாங்கடலினுமகன்றவக்கடல்
தோளுலாங்குண்டலமுதலதொல்லணி
கேளுலாமின்னொளிகிளர்ந்ததில்லையால்
வாளுலாநுதலியர்மருங்குல்போலவே. (சஅ)

மத்தளமுதலியவயங்குபல்லியம்
ஒத்தனசேறலினுரையிலாமையில்
சித்திரச்சுவர்நெடுஞ்சேனைதீட்டிய
பத்தியைநிகர்த்ததப்படையினீட்டமே. (சகூ)

ஏடறுகோதையர்விழியினெய்தகோல்
ஊடுறவுரந்தொளைத்துயிருணுவகை
ஆடவர்க்கரும்பெருங்கவசமாயது
காடுறைவாழ்க்கையக்கண்ணனண்ணலே. (ருo)

44. தமிழ்த்தலைவன் - அகத்தியமுனிவன்

45. குறியவன் - குறுமுனியென்னுந்துணையாநின்றது.

கனங்குழைக்கைகயன்மகளிற்கண்ணிய
சினங்கிடந்தெரிதலிற்றீய்ந்தவேகொலாம்
அனங்கனைங்கொடுங்கணைகடந்தவாடவர்
மனங்கிடந்துண்கிலமகளிர்கொங்கையே. (ருக)

இன்னணநெடும்படையேகவேந்தனும்
தன்னுடைத்திருவரைச்சிரைசாத்தினான்
பின்னிளையவனேடுபிறந்ததுன்பொடும்
நன்னெடுந்தேர்மிசைநடத்தன்மேயினான். (ருஉ)

தாயருமருந்தவத்தவருந்தந்தையின்
ஆயமந்திரியருமளவில்சுற்றமும்
தூயவந்தணர்களுந்தொடர்ந்துசூழ்வரப்
போயினன்றிருநகர்ப்புரிசைவாயிலே. (ருங)

மந்தரைக்கூற்றமும்வழிச்செல்வாரொடும்
உந்தியேபோதல்கண்டிளவலோடியார்த்
தந்தரத்தெற்றுவானமுன்றுபற்றலும்
சுந்தரத்தோளவன்விலக்கிச்சொல்லுவான். (ருச)

முன்னையர்முறைகெடமுடித்தபாவியைச்
சின்னபின்னஞ்செய்தென்சினத்தைத்தீர்வெனேல்
என்னையின்றென்னைபன்றுறக்குமென்றலால்
அன்னையென்றுணர்ந்திலெனைநானென்முன். (ருரு)

ஆதலான்முனியுமென்னையனந்தமில்
வேதனைக்கூனியைவெகுண்டுமென்னினும்
கோதிலாவருமறைகுலவுநூல்வலாய்
போதுநாமென்றுகொண்டரிதிற்போயினான். (ருசு)

மொய்பெருஞ்சேனையுமூரிஞாலமும்
கைகலந்தயலொருகடலிற்சுற்றிட
ஐயனுந்தேவியுமிளையவாளியும்
வைகியசோலையிற்றானும்வைகினான். (ருஎ)

அல்லணைநெடுங்கவிரருவியாடினன்
கல்லணைகிழங்கொடுகனியுமுண்டிலன்
வில்லணைத்துயர்ந்ததோள்வீரன்வைகிய
புல்லணைமருங்கிற்றான்பொடியின்வைகினான். (ருஅ)

56. வெகுண்டும் - டும்மீற்றுத்தன்மைப்பன்மை.

ஆண்டுநின்றாண்டகையடியிணைகிறுன்
ஈண்டியநெறியெனத்தானுமேகிறுன்
தூண்டிடுதேர்களுந்துரகராசியும்
காண்டகுகரிகளுந்தொடரக்காலினே. (௫௯)

ஆ திருவிருத்தம் - ௯௯௮.

## ௧௧-வது, குகப்படலம்.

பூவிரிபொலங்கழற்பொருவிற்றானையான்
காவிரிநாடன்னகழனிநாடொரீஇத்
தாவரசங்கமமென்னுந்தன்மைய
யாவையுமிரங்கிடக்கங்கையெய்தினான். (௧)

எண்ணருஞ்சுரும்புதம்மினத்துக்கல்லது
கண்ணகன்பெரும்புனற்கங்கையெங்கணும்
அண்ணல்வெங்கரிமதத்தருவிபாய்தலால்
உண்ணவுங்குடையவுமுரித்தன்றாயதே. (௨)

அடிமிசைதூளிபுக்கடைந்ததேவர்தம்
முடியுறப்புலர்ந்ததோர்முறைமைதேர்ந்திலென்
நெடிதுயிர்த்துண்டவுநீந்தநின்றவும்
பொடிமிசைப்புரண்டவும்புரவியீட்டமே. (௩)

பாலையெய்நிறத்தொடுபண்டுதான்படர்
ஓலையெய்நெடுங்கடலோடிற்றில்லையால்
மாலையெய்நெடுமுடிமன்னன்சேனையாம்
வேலையேமடுத்ததக்கங்கைவெள்ளமே. (௪)

கான்றலைநண்ணியகாளைபின்படர்
தோன்றலையவ்வழிதொடர்ந்துசென்றன
ஆன்றவருணர்த்தியவக்குரோணிகள்
மூன்றுபத்தாயிரத்திரட்டிமுற்றுமே. (௫)

59. புருடோத்தமனென்னும் பெயர்பற்றி, ஆண்டகையென்றார்.

2. யானையின்மதத்தை வண்டுகளல்லாமல் மற்றையுயிர்கள் பருகுதலில் லாமையால், 'உண்ணவுங்குடையவு முரித்தன்றாயது' என்றார்.

4. ஓலையெய் - ஒலிமிகுந்த.

அப்படைகங்கையையடைந்தவாயிடைத்
துப்புடைக்கடலினீர்சுமந்தமேகத்தை
ஒப்புடையண்ணலோடுடற்றவேகொலாம்
இப்படையெடுத்ததென்றெடுத்தசீற்றத்தான். (சு)

குகனெனப்பெயரியகூற்றினாற்றலான்
தொகைமுரட்சேனையைத்துகளின்நோக்குவான்
நகைமிகக்கண்கடைநாறநாசியில்
புகையுறக்குனிப்புறும்புருவப்போர்விலான். (எ)

மையுறவுயிரெலாமிருந்திவாங்குவான்
கையுறுகவரயில்பிடித்தகாலன்றான்
ஐயைநூறுயிரமுருவமாயின
மெய்யுறுதானையான்வில்லின்கல்வியான். (அ)

கட்டியசுரிகையன்கடித்தவாயினன்
வெட்டியமொழியினன்விழிக்குந்தீயினன்
கொட்டியதுடியினன்குறிக்குங்கொம்பினன்
கிட்டியதமரெனக்கிளர்ந்ததோளினான். (கூ)

எலியெலாமிப்படையரவம்யானென
ஒலியுலாஞ்சேனையையுவந்துகூறினான்
வலியுலாமுலகினில்வாழும்வள்ளுகிர்ப்
புலியெலாமொருவழிபுகுந்தபோலவே. (கo)

மருங்கடைதென்கரைவந்துதோன்றினான்
ஒருங்கடைநெடும்படையொல்லெனார்ப்பினோ
டருங்கடையுகந்தனிலசனிமாமழை
கருங்கடல்கிளர்ந்தெனக்கலந்துசூழவே. (கக)

தோன்றினபுளினரைநோக்கிச்சூழ்ச்சியின்
ஊன்றியசேனையும்பரேற்றுதற்
கேன்றனெனென்னுயிர்த்துணைவற்கீகுவான்
ஆன்றபோரசுரநீரமைதிராலென்றான். (கஉ)

துடியெறிநெறிகளுந்துறையுஞ்சுற்றுற
ஒடியெறியம்பிகள்யாதுமோட்டலிர்
கடியெறிகங்கையின்கரைவந்தோர்களைப்
பிடியெறிபடவெனப்பெயர்த்துங்கூறுவான். (கங)

வேறு.

அஞ்சனவண்ணனென்னுருயிர்நாயகனுளாமே
வஞ்சனையாலரசெய்தியமன்னரும்வந்தாரே
செஞ்சரமென்பனதீயுமிழ்கின்றனசெல்லாவோ
உய்ஞ்சிவர்போய்விடினுய்க்குகனென்றெனையேசாரோ. (கச)

ஆழநெடுந்திரையாறுகடந்திவர்போவாரோ
வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
தோழமையென்றவர்சொல்லியசொல்லொருசொல்லன்றோ
ஏழமைவேடனிறந்திலனென்றெனையேசாரோ. (கரு)

முன்னவனென்றுநினைந்திலன்மொய்ப்புலியன்னானோர்
பின்னவனின்றனனென்றிலனன்னவைபேசானேல்
என்னிவனென்னையிகழ்ந்ததிவ்வெல்லைகடந்தன்றோ
மன்னவர்நெஞ்சினில்வேடர்விடுஞ்சரம்வாயாவோ. (கசு)

பாவமுநின்றபெரும்பழியும்பகைநண்போடும்
ஏவமுமென்பவைமண்ணுலகாள்பவரெண்ணாரோ
ஆவதுபோகவென்னுயிருர்த்தோழமைதந்தான்மேல்
போவதுசேனையுமாருயிருங்கொடுபோயன்றோ. (கஎ)

அருந்தவமென்றுணையாளவிவன்புவியாள்வானோ
மருந்தெனினன்றுயிர்வண்புகழ்கொண்டுபின்மாயேனோ
பொருந்தியகேண்மையுகந்தவர்தம்மொடுபோகாதே
இருந்ததுநன்றுகழிக்குவெனென்கடனின்றோடே. (கஅ)

தும்பியுமாவுமிடைந்தபெரும்படைசூழ்வாரும்
வம்பியறுரிவர்வாள்வலிகங்கைகடந்தன்றோ
வெம்பியவேடருளீர்துறையோடம்விலக்கீரோ
நம்பிமுன்னேயினிநம்முயிர்மாய்வதுநன்றன்றோ. (கசு)

போனபடைத்தலைவீரர்தமக்கிரைபோதாவிச்
சேனைகிடக்கிடுதேவர்வரிற்சிலைமாமேகம்
சோனைபடக்குடர்சூறைபடச்சுடர்வாளோடும்
தானைபடத்தனியானைபடத்திரள்சாயேனோ. (உ0)

---

14. மன்னருமென இழித்தலாற் பன்மையிற் கூறினர்.

16. பின்னவன் - பரதன். 18. துணை - சீராமன்.

19. விலக்கீர் - முன்னிலைப்பன்மையுடன்பாட்டேவல் வினைமுற்று.

20. கிடக்கிடு என்றது - திசைச்சொல். சோனை - விடாமற்சிந்து மழைத் துளி.

நின்றகொடைக்கையென்னன்பனுடுக்கநெடுஞ்சீரை
அன்றுகொடுத்தவண்மைந்தர்பலத்தையெனம்பாலே
கொன்றுகுவித்தநிணங்கொள்பிணக்குவைகொண்டோடித்
துன்றுதிரைக்கடல்கங்கைமடுத்திடைதூராதோ. (௨௧)

ஆடுகொடிப்படைசாடியறத்தவரேயாள
வேடுகொடுத்ததுபாரெனுமிப்புகழ்மேவீரோ
நாடுகொடுத்தவென்னாயகனுக்கிவர்நாமாளும்
காடுகொடுக்கிலராகியெடுத்ததுகாணீரோ. (௨௨)

மாமுனிவர்க்குறவாகிவனத்திடையேவாழும்
கோமுனியத்தகுமென்றுமனத்திறைகொள்ளாதே
எமுனையுற்றிடிலேழுகடற்படையென்றாலும்
ஆமுனையிற்சிறுகூழெனவிப்பொழுதாகாதோ. (௨௩)

என்பனசொல்லியிரும்பனமேனியரானோர்முன்
வன்பணைவில்லினன்மல்லுயர்தோளினன்வாள்வீரற்
கன்பனுநின்றனனின்றதுகண்டரியேறன்ன
முன்பனில்வந்துமொழிந்தனன்மூரியதேர்வல்லான். (௨௪)

வேறு.

கங்கையிருகரையுடையான்கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத்தனிநாதற்குயிர்த்துணைவனுயர்தோளான்
வெங்கரியினேறனையான்விற்பிடித்தவேலையினான்
கொங்கலருநறுந்தண்டார்க்குகனென்னுங்குறியுடையான். (௨௫)

கற்காணுந்திண்மையான்கரைகாணாக்காதலான்
அற்காணிற்கண்டனையவழகமைந்தமேனியான்
மற்காணுந்திருநெடுந்தோண்மழைகாணுமணிநிறத்தோய்
நிற்காணுமுள்ளத்தானெறியெதிர்நின்றனனென்றான். (௨௬)

தன்முன்னேயவன்றன்மைதன்றுணைவன்முந்துரைத்த
சொன்முன்னேயுவக்கின்றதுரிசிலாத்திருமனத்தான்
மன்முன்னேதழீஇக்கொண்டமனக்கினியதுணைவனேல்
என்முன்னேயவற்காண்பேன்யானேசென்றெனவெழுந்தான். (௨௭)

---

22. வேடு - சொல்லானஃறிணை.

23. கோ - இறைவன்.

25. எற்றுதலும் இறக்குதலும் உடைமைபற்றிக் 'கங்கையிருகரையுடையான் என்றார்.

என்றெழுந்ததம்பியொடுமெழுகின்றகாதலொடும்
குன்றெழுந்துசென்றதெனக்குளிர்கங்கைக்கரைகுறுகி
நின்றவனைநோக்கினன்றிருமேனிநிலையுணர்ந்தான்
துன்றுகருநறுங்குஞ்சியெயினர்கோன்றுண்ணென்றான். (உஅ)

வற்கலையினுடையானைமாசடைந்தமெய்யானை
நற்கலையின்மதியென்னநகையிழந்தமுகத்தானைக்
கற்கனியக்கனிகின்றதுயரானைக்கண்ணுற்றான்
விற்கையினின்றிடைவீழவிம்முற்றுநின்றொழிந்தான். (உகூ)

நம்பியுமென்னயகனையொக்கின்றானயனின்றான்
தம்பியையுமொக்கின்றான்றவவேடந்தலைநின்றான்
துன்பமொருமுடிவில்லைத்திசைநோக்கித்தொழுகின்றான்
எம்பெருமான்பின்பிறந்தாரிழைப்பரோபிழைப்பென்றான். (௩0)

உண்டிடுக்கணொன்றுடையானுலையாதவன்புடையான்
கொண்டதவவேடமேகொண்டிருந்தான்குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்துபெயர்கின்றேன்காமின்கணெறியென்னாத்
தண்டுறையோர்நாவாயிலொருதனியேதான்வந்தான். (௩க)

வந்தெதிரேதொழுதானைவணங்கினன்மலரிருந்த
அந்தணனுந்தனைவணங்குமவனுமவனடிவீழ்ந்தான்
தந்தையினுங்களிகூரத்தழுவினன்றகவுடையோர்
சிந்தையினுஞ்சென்னியினும்வீற்றிருக்குஞ்சீர்த்தியான். (௩உ)

வேறு.

தழுவினபுளினர்வேந்தன்றாமரைச்செங்கணானை
எழுவினுமுயர்ந்ததோளாயெய்தியதென்னையென்ன
முழுதுலகளித்ததந்தைமுந்தையோர்முறையினின்றும்
வழுவினனதனைநீக்கமன்னனைக்கொணர்வான்வந்தேன். (௩௩)

கேட்டனன்கிராதர்வேந்தன்கிளர்ந்தெழுமுயிரனாகி
மீட்டுமண்ணதனில்வீழ்ந்தான்விம்மினனுவகைவீங்கத்
தீட்டருமேனிமைந்தன்சேவடிக்கமலப்பூவில்
பூட்டியகையன்பொய்யிலுள்ளத்தான்புகறலுற்றான். (௩ச)

தாயுரைகொண்டுதாதையுதவியதரணிதன்னைத்
தீவினையென்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கி

32. தொழுதானைய - வணங்கி குகனை.
32. சீர்த்தியான் - பரதன்.

போயினையென்றபோழ்துபுகழினோய் தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின்கேளாவரோதெரியினம்மா. (௩௫)

என்புகழ்கின்றதேழைமையெயினனேனிரவியென்பான்
தன்புகழ்க்கற்றைமற்றையொளிகளைத் தவிர்க்குமாபோல்
மன்புகழ்பெருமைநுங்கண்மரபினோர்புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக்கொண்டாயுயர்குணத் துரவுத்தோளாய். (௩௬)

எனவிவையன்னமாற்றமினையவனபலவுங்கூறிப்
புனைகழற்புலவுவேற்கைப்புளினர்கோன்பொருவில்காதல்
அனையவற்கமைவிற்செய் தானாரவற்கன்பிலாதார்
நினைவருங்குணங்கொடன்றோவிராமன்மேனிமிர்ந்தகாதல். (௩௭)

அவ்வழியவனைநோக்கியருடருவாரியன்ன
செவ்வழியுள்ளத் தண்ணறென்றிசைச்செங்கைகூப்பி
எவ்வழியுறைந்தானம்முன்னென்றலுமெயினர்வேந்தன்
இவ்வழிவீரயானேகாட்டுவலெழுகவென்றான். (௩௮)

காரெனக்கடிதுசென்றான்கல்லிடைப்படுத்தபுல்லின்
வார்சிலைத் தடக்கைவள்ளல்வைகியபள்ளிகண்டான்
பார்மிசைப்பதைத்துவீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார்மணிப்புனலான்மண்ணைமண்ணுநீராட்டுங்கண்ணான். (௩௯)

இயன்றதென்பொருட்டினாலிவ்விடருனக்கென்றபோழ்தும்
அயின்றனைகிழங்குங்காயுமமிர்தெனவரியபுல்லில்
துயின்றனையெனவுமாவிதுறந்திலென்சுடருங்காசு
குயின்றுயர்மகுடஞ்சூடுஞ்செல்வமுங்கொள்வென்யானே. (௪௦)

தூண்டரநிவந்ததோளான்பின்னருஞ்சொல்லுவானந்
நீண்டவன்றுயின்றசூழலிதுவெனினிமிர்ந்தநேயம்
பூண்டவன்றொடர்ந்துபின்னேபோந்தவன்பொழுதுநீத்த
தியாண்டெனவினிதுகேட்டானெயினர்கோனிதனைச்சொன்னான்.

அல்லையாண்டமைந்தமேனியழகனுமவளுந்துஞ்ச
வில்லையூன்றியகையோடும்வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லைபாண்டுயர்ந்ததோளாய்கண்கணீர்சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவுநின்றானிமைப்பிலனயனமென்றான். (௪௨)

36. மற்றையொளிகள் - திங்கண்முதலியவற்றை.
39. மணிப்புனல் - வற்றாதநீர் எனப்பரிமேலழகர் உரையிற்காண்க.

என்பத்தைக்கேட்டமைந்தனிராமனுக்கிளையாரென்று
முன்பொத்ததோற்றத்தேதமில்யானென்றுமுடிவிலாத
துன்பத்துக்கேதுவானேனவனதுதுடைக்கநின்றான்
அன்பத்துக்கெல்லையுண்டோவழகிதென்னடிமையென்றான். (சங)

அவ்விடையண்ணானுமன்றரும்பொடியின்வைகித்
தெவ்விடைதரநின்றார்க்குஞ்செறிகழற்புளிஞர்கோமான்
இவ்விடைக்கங்கையாற்றினேற்றினையாயினெம்மை
வெவ்விடர்க்கடனின்றேற்றிவேந்தன்பால்விடுத்ததென்றான். (சச)

நன்றெனப்புளிஞர்வேந்தனண்ணினன்றமரைநாவாய்
சென்றினித்தருதிரென்னவந்தனசிவன்சேர்வெள்ளிக்
குன்றெனக்குனிக்குமம்பொற்குவடெனக்குபேரன்மானம்
ஒன்றெனநாணிப்பல்வேறுருவுகொண்டனையவான. (சரு)

நங்கையர்நடையினன்னநாணுறுசெலவினாவாய்
கங்கையுமிடமிலாமைமிடைந்தனகலந்தவெங்கும்
அங்கொடிங்கிழித்தியேற்றுமமைதியினமரர்வையத்
திங்கொடங்கிழித்தியேற்றுமிருவினையென்னலான. (சசு)

வந்தனவரம்பினாவாய்வரிசிலைக்குரிசின்மைந்த
சிந்தனையாவதென்றுசிருங்கிபேரியர்கோன்செப்பச்
சுந்தரவரிவிலானுஞ்சுமந்திரன்றன்னைநோக்கி
எந்தையித்தானைதன்னையேற்றுதிவிரைவினென்றான். (சஎ)

குரிசிலதேவலாலக்குரகதத்தேர்வலானும்
வரிசையின்வழாமைநோக்கிமரபுளிவகையினேற்றக்
கரிபரியிரதங்காலாள்கணக்கறுகரையில்வேலை
எரிமணிதிரையின்வீசுங்கங்கையாறேறிற்றன்றே. (சஅ)

இடுபடுமுழக்கம்பொங்கவினமழைமகரநீரை
முடிவுறமுகப்பவூழியிறுதியின்மொய்ப்பபோலக்
கொடியொடுவங்கம்வேலைகூம்பொடுபடர்வபோல
நெடியகையெடுத்துநீட்டிநீந்தினநெடுங்கைவேழம். (சக)

சங்குமுமகரமீனுந்தளரமுமணியுந்தள்ளி
வங்கநீர்கடலும்வந்துதன்வழிபடமானப்

---

45. வெள்ளிக்குன்றம் - கயிலை. அம்பொற்குவடு - சுவணமேரு. குபேரன்மானம் - குபேரனது புட்பகவிமானம்.

49. மகரநீர் - கடல்.

பொங்குவெங்களிறு நூக்கக்கரையொரீஇப்போயிற்றம்மா
கங்கையுமிராமற்காணுங்காதலதென்னமாதோ. (ரு)

கொடிஞ்சொடுதட்டுமச்சுமாழியுங்கோத்தமொட்டும்
நெடுஞ்சுவர்கொடியும்யாவுநெறிவருமுறையினீக்கி
விடுஞ்சுவற்புரவியோடும்வேறுவேறேற்றிச்சென்ற
மடிஞ்சபினுடம்புகூட்டும்வினையெனவயிரத்தேர்கள். (ருக)

நாலிரண்டாயகோடிநவையினுவாய்கண்மீதா
சேறிரண்டனையவாயகதியொடுநதியிற்சென்ற
பாறிரண்டனையமெய்யபயந்திரண்டனையநெஞ்ச
காறிரண்டனையகாலகடுநடைக்கலினப்பாய்மா. (ருஉ)

ஊடுறநெருக்கியோடத்தொருவர்முன்னொருவர்கிட்டிச்
சூடகத்தளிர்க்கைமாதர்குழுமினர்துவன்றித்தோன்றப்
பாடியல்களிநல்யானைப்பந்தியங்கடையிற்குத்தக்
கோடுகண்மிடைந்தவென்னமிடைந்தனகுவவுக்கொங்கை. (ருங)

பாங்கினுத்தரியமானப்படர்திரைதவழப்பாரின்
வீங்குநீரழுவந்தன்னுள்விழுமதக்கலுழிவெள்ளத்
தோங்கல்கடலைகடோன்றவொளித்தவணுயர்ந்தகும்பம்
பூங்கழற்கங்கைநங்கைமுலையெனப்பொலிந்தமாதோ. (ருச)

பொலங்குழைமகளிர்நாவாய்ப்போக்கினென்றொன்றுதாக்க
மலங்கினரிரண்டுபாலுமறுகினர்வெருவிநோக்க
அலங்குநீர்வெள்ளந்தள்ளியழிதரவங்குமிங்கும்
கலங்களின்வெருவிப்பாயுங்கயற்குலநிகர்த்தகண்கள். (ருரு)

இயல்வுறுசெலவினுவாயிருகையுமெயினர்தூண்டத்
துயல்வனதுடுப்புவீசுந்துவலைகண்மகளிர்மென்றா
சுயல்வுறுபரவையல்குலொளிப்பறத்தளிர்ப்பவுள்ளத்
தயர்வுறுமதுகைமைந்தர்க்கயர்வுயிர்ப்பளித்தவம்மா. (ருசு)

இக்கரையிரைத்தசேனையெறிசடன்முகந்துவெஃகி
அக்கரையடையவீசிவறியனவணுகுநாவாய்
புக்கலையாழிநன்னீர்பொறுத்தனபோக்கிபோக்கி
அக்கணத்துவரிமீளுமகன்மழைநிகர்த்தமாதோ. (ருஎ)

---

52. கதி - மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி இயல்பாயுள்ளன.

53. சூடகம் - வலையலில் ஒருவகை.

58. நவ் - மரக்கலம். இது வடசொல் - நாவாய் வடசொற்றிபு.

அகிலிடுதூபமன்னவாய்மையிற்பீலியார்த்த
முகுளிடுமுரண்மாத்தண்டுகூம்பெனமுகிலின்வண்ணத்
துகிலொடுதொடுத்தசெம்பொற்றகட்டிடைதொடுத்தமுத்தம்
நகுகொடிநெடியபாயினவ்வெனச்சென்றநாவாய். (௫௮)

ஆனனங்கமலத்தன்னமின்னன்னவமிர்தச்செவ்வாய்
தேனனைகுழலாரேறுமம்பிகள்சிந்துமுத்தம்
மீனெனவிரிந்தகங்கைவிண்ணெனப்பண்ணைமுற்றி
வானவர்மகளிரூருமானமேநிகர்த்தமாதோ. (௫௯)

துளிபடத்துழாவுதிண்கோற்றுடுப்பிருகாலிற்றோன்ற
நளிர்புனற்கங்கையாற்றினடந்தெனச்செல்லுநாவாய்
களியுடைமஞ்ஞையன்னகனங்குழைகயற்கண்மாதர்
ஒளிரடிக்கமலந்தீண்டவுயிர்படைத்தனவேயொத்த. (௬௦)

மையறுவிசும்பின்மண்ணின்மற்றுமோருலகின்முற்றும்
மெய்வினைதவமேயன்றிமேலுமொன்றுளதோகேழோர்
செய்வினைநாவாயேறித்தீண்டலர்மனத்திற்செல்லும்
மொய்விசும்போடமாகத்தேவரின்முனிவர்போனார். (௬௧)

வேறு.

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமெல்லைதீர்நகர்
மறுவுறுமாக்களுமகளிர்வெள்ளமும்
செறிதிரைக்கங்கைபின்கிடக்கச்சென்றவே. (௬௨)

சுழித்துநீர்வருதுறையாற்றைச்சூழ்படை
கழித்துநீங்கியதெனக்கள்ளவாசையை
அழித்துவேறவனிபண்டாண்டவேந்தரை
இழித்துமேலேறினான்றானுமேறினான். (௬௩)

தன்னனதம்பியுந்தாயார்மூவரும்
சொன்னதேர்வலவனுந்தூயதோழனும்
துன்னினரேறலுந்துழாதுடுப்பெனும்
நன்னயக்காலினானடத்தன்மையினான். (௬௪)

---

61. மற்றுமோருலகு - ஈண்டு. பாதலத்தை நினைத்தமாத்திரையிற் சேறலின் மனத்திற்செல்லு மொய்விசும்போடமாக என்றார்.

63. தன்புகழான் யாவரையும் வென்றவனாகலின் 'பண்டாண்ட வேந்தரை யிழித்து மேலேறினான்' என்றார்.

## வேறு.

சுற்றத்தார்தேவரொடுந் தொழநின்றகோசலையைத் தொழுது நோக்கி, வெற்றித்தார்க்குரிசிலிவ ராரென்றுகுகன்வினவ வேந்தர் வைகும், முற்றத்தான்முதற்றேவி மூன்றுலகுமீன்றானை முன்னீன் றானைப், பெற்றத்தாற் பெருஞ்செல்வம் யான்பிறத்த லாற்றுறந்த பெரியாளென்றான். (௬௫)

என்றலுமேயடியின்மிசை நெடிதுவீழ்ந்தழுவானை யிவன்யா ரென்று, கன்றுபிரிகாராவின் றுயருடையகொடிவினவக் கழற்கான் மைந்தன், இன்றுணைவனிராகவனுக் கிலக்குவற்குமிளையவற்கு மெ னக்குமூத்தான், குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா னிந் நின்றகுரிசிலென்றான். (௬௬)

நைவீரலீர்மைந்தீ ரினித்துயரா லுடிறந்துகாடுநோக்கி, மெய் வீரர்பெயர்ந்ததுவு நலமாயிற்றுமன்றே விலங்கற்றிண்டோள், கை வீரக்களிறனைய காளையிவன்றன்னோடு கலந்துநீங்கள், ஐவீருமொ ருவீரா யகலிடத்தைநெடுங்கால மளித்திரென்றான். (௬௭)

அறந்தானே யென்கின்ற வயனின்றாளைநோக்கி யையவன் பின்னா நிறைந்தானையுரையென்ன நெறிதிறம்பாத்தன்மெய்யை நிற்ப தாக்கி, இறந்தான்றன்னிளந்தேவி யாவர்க்குந்தொழுகுலமா மிரா மன்பின்பு, பிறந்தானுமுளனென்னப் பிரியாதான்றனைப்பயந்த பெ ரியாளென்றான். (௬௮)

சுடுமயா னத்திடைதன் றுணையேகத் தோன்றதுயர்க் கடலி னேகக், கடுமையார்கானகத்துக் கருணையார்கலியேகக் கழற்கான் மாயன், நெடுமையாலன்றளந்த வுலகெல்லாந்தன்மனத்தே நினைந்து செய்யுங், கொடுமையாலளந்தானை யாரிவரென்றுரையென்னக் குரி சில்கூறும். (௬௯)

படரெல்லாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலியைத் தன் பாழ்த்தபாவிக், குடரிலேநெடுங்காலங் கிடந்தேற்கு முயிர்ப்

---

65. மூன்றுலகுமீன்றான்-மூன்றுலகையுஞ் சிருஷ்டித்தபிரமன்.

67. மெய்வீரர்-சீராமலக்குவரை. நீங்கள்-முன்னிலைப் பன்மைபெயர்.

69. தான் பெற்றவரத்தான் - அரசரைப் பெற்றமையான் தன்மனத்தே நினைந்து செய்யுங்கொடுமையாலளந்தானை என்றார்.

70. பழிவளர்க்குஞ் செவிலியென்றது ஏகதேசவுருவகம். இங்நின்றா ளொறுத்தி யென்னை ஈன்றாளெனமுடிக்க.

பாரங் குறைந்துதேய, உடலெலாமுயிரிலா வெனத்தோன்று மூல கத்தே யொருத்தியன்றே, இடரிலாமுகத்தாளை யறிந்திலேயேலிந் நின்ற வென்னையீன்றாள். (எ0)

வேறு.

என்னக்கேட்டவ்விரக்கமிலாளையும்
தன்னற்கையின்வணங்கினன்றெயென
அன்னப்பேடைசிறையிலதாய்க்கரை
துன்னிற்றென்னவும்வந்ததுதோணியே. (எக)

இழிந்ததாயர்சிவிகையினேறத்தான்
பொழிந்தகண்ணிற்புதுப்புனற்போயினான்
ஒழிந்திலன்குகனும்முடனேகினான்
கழிந்தனன்பலகாவதங்காலினே. (எ௨.)

பரத்தினீங்கும்பரத்துவனென்னும்பேர்
வரத்தின்மிக்குயர்மாதவன்வைகிடம்
அருத்திகூறவணுகினனண்டவன்
விருத்திவேதியரோடெதிர்மேயினான். (எங)

ஆ திருவிருத்தம் க0எக.

## க௨-வது, கிளைகண்டு நீங்குபடலம்.

வந்தமாதவத்தோனையம்மைந்தனும்
தந்தையாமெனத்தாழ்ந்துவணங்கினான்
இந்துமோலியன்னானுமிரங்கினான்
அந்தமில்குணத்தாசிகள்கூறினான். (க)

எடுத்தமாமுடிசூடிநின்பாலியைந்
தடுத்தபேரரசாண்டிலையைநீ
முடித்தவார்சடைக்கற்றையைமூசுதூ
சுடுத்துநண்ணுதற்குற்றுளதியாதென்றான். (௨)

சினக்கொடுந்திறற்சீற்றவெந்தீயினான்
மனக்கடுப்பினன்மாதவத்தோங்கலை
எனக்கடுத்ததியம்பிலைநீயென்றான்
உனக்கடுத்ததுமன்றுராவோவென்றான். (ங)

72. ஏகினான் - திசைச்சொல்.
3. சினம் - சீற்றம். ஒருபொருட்பன் மொழி.

மறையின்கேள்வற்குமன்னிளந்தோன்றல்பின்
முறையினீங்கிமுழுநிலங்கொள்கிலேன்
இறையவன்காக்கிலனுமெனில்யாண்டெலாம்
உறைவென்கானத்தொருங்குடனேயென்றான். (௪)

உரைத்தவாசகங்கேட்டலுமுள்ளெழுந்
திரைத்தகாதலிருந்தவர்த்தோர்க்கெலாம்
குரைத்தமேனியொடுள்ளங்குளிர்ந்ததால்
அரைத்தசாந்துகொண்டப்பியதென்னவே. (௫)

ஆயகாதலொடையனைக்கொண்டுதன்
தூயசாலையுறைவிடந்துன்னினான்
மேயசேனைக்கமைப்பென்விருந்தெனத்
தீயினாவுதிசெங்கையினீக்கினான். (௬)

துறந்தசெல்வனிளையத்துறக்கந்தான்
பறந்துவந்துபடிந்தெனப்பல்சனர்
பிறந்துவேறொருலகுபெற்றாரென
மறந்துவைகினர்முன்னைத்தம்வாழ்வெலாம். (௭)

நந்தலில்லறநந்தினராமென
அந்தரத்தினரம்பையரன்பினர்
வந்துவந்தெதிரேத்தினர்மைந்தரை
இந்துவிற்சுடர்கோயில்கொண்டேகினார். (௮)

நானநன்குரைத்தார்நளிர்வானிடை
ஆனகங்கையரும்புனலாட்டினார்
தானமாமணிக்கற்பகந்தாங்கிய
ஊனமின்மலராடையுடுத்தினார் (௯)

கொம்பினின்றுநுடங்குறுகொள்கையார்
செம்பொனின்கலராசிதிருத்தினார்
அம்பரத்தினரம்பையரன்பொடும்
உம்பர்கோனகரின்னமிர்தூட்டினார். (௧௦)

அஞ்சடுத்தவமளியலத்தகப்
பஞ்சடுத்தபரிபுரப்பல்லவ

---

4. மறையின்கேள்வன் - ஈண்டுபரத்துவாசனை.
6. ஆவுதி - வடசொற்சிதைவு.
7. வேறோருலகுதுறக்கம். 10. சலராசி - சலத்தின்கூட்டம்.
11. அஞ்சடுத்தவமளி - பஞ்சசயனம், அதாவது—இலவம் பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி.

நஞ்சடுத்தநயனியர்நவ்வியில்
துஞ்சவத்தனைமைந்தருந்துஞ்சினர். (௧௧)

ஏந்துசெல்வத்திமையவராமெனக்
கூந்ததெய்வமகளிர்கொண்டாடினர்
வேந்தராதிசிவிகையின்வீங்குதோள்
மாந்தர்காறும்வரிசைவழாமலே. (௧௨)

மாதர்யாவரும்வானவர்தேவியர்
கோதில்செல்வத்துவைகினர்கொவ்வைவாய்த்
தீதில்செல்வமடந்தையர்சேடியர்
தாதிமாரெனத்தம்பணிகேட்பவே. (௧௩)

நந்தநந்தவனங்களினுண்மலர்
கந்தமுந்தியகற்பகக்காவினின்
றந்தர்வந்தெனவந்திதன்கைதர
மந்தமந்தமணந்ததுவாடையே. (௧௪)

மான்றளிக்குலநன்மதம்வந்துணத்
தேன்றளிர்த்தகவளமுஞ்செங்கதிர்
கான்றநெற்றழைக்கற்றையுங்கற்பகம்
ஈன்றளிக்கநுகர்ந்தனயானையே. (௧௫)

நரகதர்க்கறநல்குநலத்தநீர்
கரகதக்கரிகானிமிர்த்துண்டன
மரகதத்தின்கொழுந்தெனவார்ந்தபுல்
குரகத்தின்குழாங்களுங்கொண்டவே. (௧௬)

இன்னரின்னணம்யாவருமிந்திரன்
துன்னுபோகங்கடுய்த்தனர்தோன்றுரன்
அன்னகாயுங்கிழங்குமுண்டப்பகல்
பொன்னின்மேனிபொடியுறப்போக்கினான். (௧௭)

நீலவல்லிருணீங்கலுநீங்குமம்
மூலமில்கனவிற்றிருமுற்றுற
ஏலும்நல்வினைதுய்ப்பவர்க்கீறுசெல்
காலமென்னக்கதிரவன்றோன்றினான். (௧௮)

---

14. அந்தர் - குறைந்து நின்றது.
18. ஈறுசெல்காலம் - கடைபோகுங்காலம்.

ஆறுநின் றறமாற் றலர்வாழ்வெனப்
பாறிவீழ்ந் ததுசெல்வம்பரிந்திலர்
தேறிமுந்தைத் தஞ்சிந்தையராயினார்
மாறிவந்துபிறந் தன்னமாட்சியார். (கக)

வேறு.

காலையென்றெழுந் ததுகண்டுவானவர்
வேலையன்றனிகமேயென் றுவிம்மறச்
சோலையுங்கிரிகளுஞ்சுண்ணமாயெழப்
பாலைசென்றடைந் ததுபரதன்சேனையே. (உ0)

எழுந்ததுதுகளதினெரியும்வெய்யவன்
அழுந்தினனவிப்பரும்வெம்மையாறினன்
பொழிந்தனகரிமதம்பொடிவெங்கானகம்
இழிந்தனவடிநடந்தேகெருணமையே. (உக)

வடியுடையயிற்படைமன்னர்வெண்குடை
செடியுடைநெடுநிழல்செய்ததீப்பொதி
படியுடைப்பாலுறைப்பாலைமேலுயர்
கொடியுடைப்பந்தரிற்குளிர்ந்ததெங்குமே. (உஉ)

பெருகியசெல்வநீ பிடியென்றாள்வயின்
திருகியசீற்றத்தாற்செம்மையாய்நிறங்
கருகியவண்ணலைக்கண்டுகாதலின்
உருகியதளிர்த்தனவுலவையீட்டமே. (உங)

வன்றெறுபாலையைமருதமாமெனச்
சென்றதுசித்திரகூடஞ்சேர்ந்ததால்
ஒன்றுரைத்துயிரினுமொழுக்கநன்றெனப்
பொன்றியபுரவலன்பொருவில்சேனையே. (உச)

தூளியின்படலையுந்துரகத்தேரொடு
மூளிருஞ்சினக்கரிமுழங்குமோதையும்
ஆளிருங்குழுவினராரவாரமுங்
கோளிரும்படையிதென்றுணரக்கூறவே. (உரு)

எழுந்தனனிளையவனேறினனிலங்
கொழுந்துயர்ந்தனையதோர்நெடியகுன்றின்மேற்

19. மாறிவந்து பிறந்தன்ன மாட்சியா ரென்று ரென்றது - பரதன் சேனையை. 23. நிறங்கருகிய வண்ணலென்றது - பரதனே.
24. 'ஒழுக்க முயிரினு மோம்பப்படும்' என்பவாகலின் உயிரினு மொழுக்க நன்றென்றார்.

செழுந்திரைப்பரவையைச்சிறுமைபேசிய
கழுந்துடைவரிசிலைக்கடலைநோக்கினான். (உசு)

பரதனிப்படைகொடுபோர்கொண்டாண்மறங்
கருதியுட்கிடந்ததோர்கறுவுகாதலால்
விரதமுற்றிருந்தவன்மேல்வந்தானிது
சரதமற்றிலதெனத்தழங்குசீற்றத்தான். (உஎ)

குதித்தனன்பாரிடைக்குவடுநீறெழ
மிதித்தனனிராமனைவிரைவினெய்தினான்
மதித்திலன்பரதனின்மேல்வந்தான்மதில்
பதிப்பெருஞ்சேனையின்பரப்பினோடென்றான். (உஅ)

கட்டினன்சுரிகையுங்கழலும்பல்கணைப்
புட்டிலும்பொறுத்தனன்கவசம்பூட்டமைத்
திட்டனனெடுத்தனன்வரிவிலேந்தலைத்
தொட்டடிவணங்கிநின்றினையசொல்லினான். (உகூ)

இருமையுமிழந்தவப்பரதனேந்துதோள்
பருமையுமன்னவன்படைத்தசேனையின்
பெருமையும்நின்னொருபின்புவந்தவென்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளநீ. (௩௦)

படரெலாம்படப்படும்பருமயானையின்
திடரெலாமுருட்டினதேருமீர்த்தன
குடரெலாந்திரைத்தனகுருதியாறுகள்
கடரெலாமடுப்பனபலவுங்காண்டியால். (௩௧)

கருவியுங்கைகளுங்கவசமார்பமும்
உருவினவுயிரினோடுதிரந்தோய்வில
திரிவனசுடர்க்கணைதிசைக்கையானைகள்
வெருவரச்செய்வனகாண்டிவீரநீ. (௩௨)

கோடகத்தேர்படுகுதிரைதாவிய
ஆடகத்தட்டிடையலகையற்றுகு
கேடகத்தடக்கைகள்கவ்விக்கீதத்தின்
நாடகநடிப்பனகாண்டிநாதநீ. (௩௩)

---

31. குடல் - குடர், கடல் - கடர் இறுதிநிலைப்போலி.

33. ஆடகம் - நால்வகைப்பொன்னில் ஒன்று, ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம்.

பண்முதிர்களிற்றொடுபரதன்சேனையின்
எண்முதலறுத்துநாணிமைப்பினீக்கலால்
விண்முதுகுளுக்கவும்வேலையாடையின்
மண்முதுகாற்றவுங்காண்டிவள்ளனீ. (௩௪)

நிவந்தவான்குறுதியினீத்தநீந்திமெய்
சிவந்தசாதகரொடுசிறுகட்கூளியுங்
கவந்தமுமுலகநின்கையதாயதென்
றுவந்தனகுனிப்பனகாண்டியும்பர்போல். (௩௫)

சூழிவெங்கடகரிதுரகராசிகள்
பாழிவன்புயத்திகல்வயவர்பட்டற
வீழிவெங்குருதியாலலைந்தவேலைகள்
ஏழுமொன்றாகிநின்றிரைப்பக்காண்டியால். (௩௬)

ஆளறவலங்குதேரழியவாடவர்
வாளறவரிசிலைதுணியமாக்கரி
தாளறத்தலையறப்புரவிதாளொடுந்
தோளறவடிக்கணைதொடுப்பக்காண்டியால். (௩௭)

தழைத்தவான்சிறையனதசையுங்கவ்வின
அழைத்தவான்பறவைகளலங்குபொன்வடிம்
பிழைத்தவான்பகழிபுக்கிருவர்மார்பிடைப்
புழைத்தவான்பெருவழிபோவகாண்டியால். (௩௮)

ஒருமகள்காதலினுலகைநோய்செய்த
பெருமகனேவலிற்பரதன்முன்பெறும்
இருநிலமாள்கைவிட்டின்றெனேவலால்
அருநரகாள்வதுகாண்டியாழியாய். (௩௯)

வையகந்துறந்துவந்தடவிவைகுதல்
எய்தியதுனக்கெனநின்னையீன்றவள்
நைதல்கண்டுவந்தணவையின்றேங்கிய
கைகயன்மகள்விழுந்தரற்றக்காண்டியால். (௪௦)

அரஞ்சுடவழுணிமிரலங்கல்வேலினாய்
விரஞ்சொருநொடியிலிவ்வனிகவேலையை

---

34. வள்ளல் - வரையாது கொடுப்போன்.

41. விரைந்து - விரைஞ்சு இடைநிலைப்போலி. முப்புரஞ்சுடுமொருவன்- சிவன்.

உரஞ்சுடுவடிக்கணையொன்றில்வென்றுமுப்
புரஞ்சுடுமொருவனிற்பொலிவன்யானென்ருன். (சக)

இலக்குவவுலகமோரேழுமேழுநீ
கலக்குவனென்பதுகருதினலது
விலக்குவதரிததுவிளம்பல்வேண்டுமோ
புலக்குரித்தொருபொருள்புகலக்கேட்டியால். (சஉ)

நங்குலத்துதித்தவர்நவையுணீங்கினர்
எங்குலப்புறுவர்களெண்ணில்யாவரே
தங்குலத்தொருவருந்தருமநீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருதவேதாளிஞய். (சங)

எனைத்துளமறையவையியம்பற்பாலன
பனைத்திரள்கரக்கரிப்பரதன்செய்கையே
அனைத்திறமல்லனவல்லவன்னது
நினைத்திலையென்வயினேயநெஞ்சினல். (சச)

பெருமகனென்வயிற்பிறந்தகாதலின்
வருமெனநினைகையுமண்ணையென்வயின்
தருமெனநினைகையுந்தவிரத்தானையால்
பொருமெனநினைகையும்புலமைப்பாலதோ. (சரு)

பொன்ஞெடும்பொருகழற்பரதன்போந்தனன்
நன்னெடும்பெரும்படைநல்கலன்றியே
என்ஞெடும்பொருமெனவியம்பற்பாலதோ
மின்ஞெடும்பொருவுறவிளங்கும்வேலிஞய். (சசு)

சேனுயர்தருமத்தின்றேவைச்செம்மையின்
ஆணியையன்னதுநினைக்கலாகுமே
பூணியன்மொய்ம்பிஞய்போந்ததீண்டெனைக்
காணியநீயிதுபின்னுங்காண்டியால். (சஎ)

என்றனனிளவலைநோக்கியேந்தலும்
நின்றனன்பரதனுநிமிர்ந்தசேனையைப்
பின்றருகென்றுதன்பிரிவில்காதலில்
தன்றுணைத்தம்பியுந்தானுமுந்தினன். (ச௮)

தொழுதுயர்கையினன்றுவண்டமேனியன்
அழுதழிகண்ணினனவலநீதென

42. புலக்குறித்தென்றது, ராமகுடச்சித்திரமென்றூர்போல.

எழுதியபடிவமொத்தெய்துவான்றனை
முழுதுணர்சிந்தையான்முடியநோக்கினான். (சகூ)

கார்ப்பொருமேனியக்கண்ணன்காட்டினான்
ஆர்ப்புறுவரிசிலையிளையவையரீ
தேர்ப்பெருந்தானையாற்பரதன்சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கென. (௫௦)

எல்லொடுங்கியமுகத்திளவனின்றனன்
மல்லொடுங்கியபுயத்தவனைவைதெழும்
சொல்லொடுஞ்சினத்தொடுமுணர்வுசோர்தர
வில்லொடுங்கண்ணநீர்நிலத்துவீழவே. (௫க)

கோதறத்தவஞ்செய்துகுறிப்பினெய்திய
நாதனைப்பிரிந்தனனலத்துநீங்கினான்
வேதனைத்திருமகண்மெலிகின்றாள்விடு
தூதெனப்பரதனுங்கொழுதுதோன்றினான். (௫௨)

அறந்தனைநினைந்திலையருளைநீத்தனை
துறந்தனைமுறைமையையென்னுஞ்சொல்லினான்
மறந்தனன்மலரடிவந்துவீழ்ந்தனன்
இறந்தனன்றாதையையெதிர்கண்டென்னவே. (௫௩)

உண்டுகொலுயிரெனவொடுங்கினானுருக்
கண்டனனின்றனன்கண்ணன்கண்ணெனும்
புண்டரீகம்பொழிபுனலவன்சடா
மண்டிலநிறைந்துபோய்வழிந்துசோரவே. (௫௪)

அயாவுயிர்த்தழுகணீரருவிமார்பிடை
உயாவுறத்திருவுளமுருகப்புல்லினான்
நியாயமத்தனைக்குமோர்நிலையமாயினான்
தயாமுதலறத்தினைத்தழுவியென்னவே. (௫௫)

புல்லினனின்றவன்புனைந்தவேடத்தைப்
பன்முறைநோக்கினான்பலவுமுன்னினான்
அல்லலினழுங்கினையையவாளுடை
மல்லுயர்தோளினான்வலியனோவென்றான். (௫௬)

---

53. இறந்தனன்றாதை யென்றது பெயரெச்சமுற்று. உண்டாஞ் சாத்தனூர்க்குப்போயினா னென்புழிப்போல.

55. தயா இராமமூர்த்தியும், அறம்பரதாழ்வானுமாகக் கூறினமையால், ஒப்புமைக்கூட்ட வுவமையணி.

56. அரசர்க்குத்தோள் சிறந்தமையின் மல்லுயர்தோளென்றார்.

அரியவனுரைசெயப்பரதனையநின்
பிரிவெனும்பிணியினுலென்னைப்பெற்றவக்
கரியவள்வரமெனுங்காலனுற்றனக்
குரியமெய்ந்நிறுவிப்போயும்பரானென்முன். (ருஎ)

விண்ணிடையடைந்தனனென்றவெய்யசொல்
புண்ணிடையயிலெனச்செவிபுகாமுனம்
கண்ணொடுமனஞ்சுழல்கறங்குபோலவாய்
மண்ணிடைவிழுந்தனன்வானினும்பரான். (ருஅ)

இருநிலஞ்சேர்ந்தனனிறையுயிர்த்திலன்
உருமினையரவெனவுணர்வினீங்கினான்
அருமையினுயிர்வரவயர்வுயிர்த்தகம்
பொருமினன்பன்முறைபுலம்பினனரோ. (ருகூ)

வேறு.

நந்தாவிளக்கனையநாயகனேநானிலத்தோர்
தந்தாய்தனியறத்தின்றாயேதயாநிலையே
எந்தாயிகல்வேந்தரேறேயிறந்தனையே
அந்தோவினிவாய்மைக்காருளரேமற்றென்றான். (கூO)

சொற்பெற்றநோன்பின்றுறையோனருள்வேண்டி
நற்பெற்றவேள்விநவைநீங்கநீயியற்றி
எற்பெற்றுநீபெற்றதின்னுயிர்போய்நீங்கவோ
கொற்பெற்றவெற்றிக்கொலைபெற்றகூர்வேலோய். (கூக)

மன்னுயிர்க்குநல்குரிமைமண்பாரநான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந்தாரோய்பொறையுயிர்த்தவாறிதுவோ
உன்னுயிர்க்குங்கூற்றாயுலகாளவுற்றேனோ
மின்னுயிர்க்குந்தீவாய்வெயிலுயிர்க்கும்வெள்வேலோய். (கூஉ)

என்பரத்ததாக்கியரசுரிமையிந்தியங்கள்
வெம்பவத்தின்வீயத்தவம்விளைத்தவாறிதுவோ
சம்பரப்பேர்த்தானவனைத்தள்ளிச்சதமகன்றன்
அம்பரத்தினீங்காவரசளித்தவாழியாய். (கூங)

---

57. மெய் - உருவுடம்பினை.

58. வானினும் பரானென்றது நிரதிசய இன்பவீட்டுலகமுடையானென்பதனை.

59. உணர்வினீங்கலை உருமினையரவினோடுவமை கூறினர்.

61. கொல் - கொல்லன்.

63. சதமகன் - இந்திரன். அம்பரம் - துறக்கம்.

வேண்டுந் திறத்தாரும் வேண்டாவரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்த புல்லனேன்
மாண்டுமுடிவதல்லான் மாயாவுடம்பிது கொண்
டாண்டுவருவதினியார்முகத்தை நோக்கவோ. (சுச)

தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தே தன்னெனத்தரியாது காவலநீ
வானடைந்தாயின்னமிருந்தே தனுன் வாழ்வுகந்தே
யூனடைந்த தெவ்வருயிரடைந்த வொள்வேலாய். (சுரு)

வண்மை இயுமானமுமேல்வானவர்க்கும் போக்கிலாத்
திண்மை இயுஞ்செங்கோனெறியுந் திறம்பாத
உண்மை இயுமெல்லாமுடனேகொண்டேகினையே
தண்மை இதகைமதிக்குமீந்த தனிக்குடையோய். (சுசு)

என்றெடுத்துப்பற்பலவும் பன்னியிடருழக்குங்
குன்றெடுத்த தோக்குங்குவவுத்தோட்கோளரியை
வன்றடக்கைத்தம்பியருமற்றுள்ள மன்னவருஞ்
சென்றெடுத்துத்தாங்கினார் மாவதிட்டன் றேற்றினான். (சுஎ)

பன்னரியநோன்பின் பரத்துவனேயாதியாம்
பின்னுசடையோரும் பேருலகமோரேழின்
மன்னவருமந்திரியரெல்லாரும் வந்தடைந்தார்
தன்னுரிமைச்சேனைத் தலைவோருந் தாமடைந்தார். (சுஅ)

மற்றும்வரற்பாலரெல்லாரும் வந்தடைந்தார்
சுற்றுமிருந்தவமைதியினிற்றுன்புழக்குங்
கொற்றக்குரிசின்முகநோக்கிக் கோமலரோன்
பெற்றபெருமைத்தவமுனிவன் பேசுவான். (சுகூ)

வேறு.

துறத்தலு நல்லறத்துறையுமல்லது
புறத்தொருதுணையிலைப்பொருந்துமன்னுயிர்க்
கிறத்தலும் பிறத்தலுமியற்கையென்பதை
மறத்தியோ மறைகளின் வரம்புகண்டநீ. (எ௦)

---

67. கோளரி - சிங்கம், இராமமூர்த்தி.

68. உலகமோரேழ் - ஏழுதீவுகளை நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம் புட்காம், தெங்கு கமுகு.

உண்மையில்பிறவிகளுலப்பில்கோடிகள்
தண்மையில்வெம்மையிற்றழுவினவ்வெனும்
வண்மையைநோக்கியவறியகூற்றின்பால்
கண்மையுமுளதெனக்கருதலாகுமோ. (எக)

பெறுவதன்முன்னுயிர்பிரிதல்காண்டியால்
மறுவறுகற்பினில்வையம்யாவையும்
அறுவதினாயிரமாண்டுமாண்டவன்
இறுவதுகண்டவற்கிரங்கல்வேண்டுமோ. (எஉ)

சீலமுந்தருமமுஞ்சிதைவில்செய்கையுஞ்
சூலமுந்திகிரியுஞ்சொல்லுந்தாங்கிய
மூலம்வந்துதவியமூவர்க்காயினுங்
காலமென்றொருவலைகடக்கலாகுமோ. (எங)

கண்முதற்காட்சியகரையினீளத்த
உண்முதற்பொருட்கெலாமூற்றமாவன
மண்முதற்பூதங்கண்மாயுமென்றபோ
தெண்முதலுயிர்க்குநீயிரங்கல்வேண்டுமோ. (எச)

புண்ணியநறுநெயிற்பொருவில்காலமாந்
திண்ணியதிரியினில்விதியென்றீயினில்
எண்ணியவிளக்கவையிரண்டுமெஞ்சினால்
அண்ணலேயவிவதற்கையமாவதோ. (எரு)

இவ்வுலகத்தினுமிடரினைகிடந்
தவ்வுலகத்தினுநரகினாழ்ந்துபின்
வெவ்வினைதுய்ப்பனவிரிந்தயோனிகள்
எவ்வளவிற்செலவெண்ணலாகுமோ. (எசு)

உண்டுகொலிதுவலதுதவிநீசெய்வ
தெண்டகுகுணத்தினாய்தாதையென்றலால்
புண்டரீகத்தனிமுதற்கும்போக்கரு
விண்டுவினுலகிடைவிளங்கினானரோ. (எஎ)

---

71. பிரமன்முதல் பிபீலி காந்தங்காறும் என்பார் பிறவிகளுலப்பில் கோடிகள் எனவும். அப்பிறப்புகள் புண்ணிய பாவங்களின் வழிபட்டன என்பார் தண்மையில் வெம்மையில் தழுவினவெனவும், எல்லா வுயிர்களிடத்தும் இயமன் ஒருதன்மையன் என்பார் கண்மையுமுளதென எனவுங்கூறினார்.

73. மூலம் - பரமபதநாதனை, மூவர் - பிரமன், விஷ்ணு, உருத்திரன்.

77. புண்டரீகத்தனிமுதல் - பிரமன்.

ஐயநீயாதொன்றுமவலிப்பாயலை
உய்திறமவற்கினியிதனினாங்குண்டோ
செய்வனவரன்முறைதிருத்திச்சேந்தநின்
கையினாலொழுக்குதிகடனெலாமென்றான். (எ௮)

விண்ணினீர்மொக்குளின்விளியும்யாக்கையை
எண்ணிநீயழுங்குதலிழுதைப்பாலதால்
கண்ணினீருகுத்தலிற்கண்டதில்லைபோய்
மண்ணுநீருகுத்திதாமரைக்கையாலென்றான். (எ௯)

என்றபினேந்தலையேந்திவேந்தரும்
பொன்றிணிந்தனசடைப்புனிதனோடும்போய்ச்
சென்றனர்செறிதிரைப்புனலிற்செய்கென
நின்றனனிராமனுநெறியைநோக்கினான். (௮௦)

புக்கனன்புனலினின்முழுகிப்போந்தனன்
தக்கநன்மறையவன்சடங்குகாட்டத்தான்
முக்கையினீர்விதிமுறையினீந்தனன்
ஒக்கநின்றுயிர்தொறுமுணர்வுநல்குவான். (௮௧)

ஆனவன்பிறவுளயாவுமாற்றிப்பின்
மானமந்திரத்தவர்மன்னர்மாதவர்
ஏனையர்பிறர்களுஞ்சுற்றவேகினன்
சானகியிருந்தவச்சாலையெய்தினான். (௮௨)

எய்தியவேலையிற்றமியளெய்திய
தையலைநோக்கினன்சாலைநோக்கினன்
கைகளிற்கண்மலர்புடைத்துக்கான்மிசை
ஐயனப்பரதன்வீழ்ந்தரற்றினானரோ. (௮௩)

வெந்துயர்தொடர்தரவிம்மல்விம்மநீர்
உந்தியநிரந்தரமூற்றுமாற்றில
சிந்தியகுரிசிலச்செம்மல்சேந்தகண்
இந்தியங்களிலெறிகடலுண்டென்னவே. (௮௪)

அங்கெடுந்துயருறுமரியவீரனைத்
தன்னெடுந்தடக்கையாலிராமன்றாங்கினான்

---

79. யாக்கை நிலையாமை தோன்ற விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கை யென்றார்.
85. வீரன் - ஈண்டு பரதன்.

நன்னெடுங்கூந்தலைநோக்கிநாயகன்
என்னெடும்பிரிவினிலிறந்திட்டானென்ருன். (அரு)

துண்ணெனும்நெஞ்சினுடுளங்கிருடிணைக்
கண்ணெனுங்கடனெடுங்கலுழிகான்றிட
மண்ணெனுஞ்செவிலிமேல்வைத்தகையினுள்
பண்ணெனுங்கிளவியாற்பன்னியேங்கிருள். (அசு)

கன்னகுதிரள்புயக்கணவன்பின்செல
நன்னகரொத்ததுநடந்தகானமும்
மன்னவன்றுஞ்சினனென்றமாற்றத்தால்
அன்னமுந்துயர்க்கடலடிவைத்தாளரோ. (அஎ)

ஆயவடன்னைநேர்ந்தங்கையேந்தினர்
தாயரின்முனிவர்தந்தருமபன்னியர்
தூயநீராட்டினர்துயரநீக்கினர்
நாயகற்சேர்த்தினர்நவையுணீங்கினர். (அஅ)

தேன்றருந்தெரியலச்செம்மனல்வரை
ஈன்றவர்மூவரோடிருமைநோக்குறுஞ்
சான்றவர்குழாத்தொடுந்தருமநோக்குறுந்
தோன்றல்பாற்சுமந்திரன்ருெழுதுதோன்றினன். (அகூ)

வேறு.

எந்தையாண்டையாணியம்புவீரெனு
வந்ததாயர்தம்வயங்குசேவடிச்
சிந்தினன்றனன்சேந்தகண்ணினீர்
முந்தைநான்முகத்தவற்குமுந்தையான். (கூ0)

தாயருந்தலைப்பெய்துதாந்தழீஇ
ஓய்விலன்பினுலூரறலோங்கினர்
ஆயசேனையுமணங்கனர்களும்
தீயில்வீழ்ந்துதீமெழுகிற்றேம்பினர். (கூக)

பின்னவ்வீரரைப்பெற்றபெற்றியப்
பொன்னனர்களுஞ்சனகன்பூவையைத்

87. இதுகாறுந் துயரமென்ப தறியாளாகலின் துயர்க்கட லடிவைத்தாளென்ருர்.

89. செம்மல் - பெருமையிற் சிறந்தோன்.

92. பூவை - உவமையாகுபெயராய்ச் சீதைமேல் நின்றது.

துன்னிமார்புறத்தொடர்ந்துபுல்லினர்
இன்னல்வேலைபுக்கிழிந்தழுந்துவார். (சஉ.)

சேனைவீரருந்திருநன்மாநகர்
மானமாந்தருமற்றுளோர்களும்
ஏனைவேந்தருப்பிறரும்யாவரும்
கோனையெய்தினர்குறையுஞ்சிந்தையார். (சங)

படஞ்செய்நாகணைப்பள்ளிநீங்கினன்
இடஞ்செய்தொல்குலத்திறைவனுதலால்
தடஞ்செய்தேரினன்றானுநீரினல்
கடஞ்செய்வானெனக்கடலின்மூழ்கினன். (சச)

அன்றுதீர்ந்தபின்னரசவேலையுந்
துன்றுசெஞ்சடைத்தவருஞ்சுற்றமும்
தன்றுணைத்திருத்தம்பிமார்களும்
சென்றுசூழவாண்டிருந்தசெம்மறுன். (சரு)

வரதன்றுஞ்சினன்வையமாணையால்
சரதநின்னதேமகுடந்தாங்கலாய்
விரதவேடநீயென்கொல்வேண்டுவான்
பரதகூறெனப்பரிந்துகூறினன். (சசா)

என்றலும்பதைத்தெழுந்துகைதொழா
நின்றுதோன்றலைநெடிதுநோக்கிநீ
அன்றியாவரேயறத்துளோரதிற்
பின்றுவாய்கொலாமென்னப்பேசுவான். (சஎ)

மனக்கொன்றுதனவரத்தினின்னையும்
நினக்கொன்றுநிலைநிறுவிநேமியான்
தனைக்கொன்றுடருந்தனையனுதலால்
எனக்கொன்றுதவமடுப்பதெண்ணினல். (சஅ)

நோவதாகவிவ்வுலகைநோய்செய்த
பாவகாரியிற்பிறந்தபாவியேன்
சாவதோர்கிலேன்றவஞ்செய்வேனலேன்
யாவனுகியிப்பழிநின்றேறுவேன். (சசு)

நிறையினீங்கியமகளிர்நீர்மையும்
பொறையினீங்கியதவமும்பொங்கருள்

துறையினீங்கியவறமுந்தொல்லையோர்
முறையினீங்கியவரசின்முந்துமோ. (௧௦௦)

பிறந்துநீயுடைப்பிரிவிற்றல்பதம்
துறந்துமாதவந்தொடங்குவாயென்றால்
மறந்துநீதியிற்றிறம்பிவாளிற்கொன்
றறந்தின்றாலெனவரசதாள்வேனோ. (௧௦௧)

தொகையிலன்பினாலிறைவன்றுஞ்சநீ
புகையும்வெஞ்சுரம்புகுதப்புந்தியால்
வகையில்வஞ்சனையரசுவெளவயான்
பகைவனேகொலாமிறவுபார்க்கின்றேன். (௧௦௨)

உந்ததீமையுமுலகுறாதநோய்
தந்ததீவினைத்தாய்செய்தீமையும்
எந்தநீங்கமீண்டரசுசெய்கெனச்
சிந்தையாவதுந்தெரியக்கூறினான். (௧௦௩)

சொற்றவாசகத்துணிவுணர்ந்தபின்
இற்றதோவிவன்மனமென்றெண்ணுவான்
வெற்றிவீரயான்விளம்பக்கேளென
முற்றநோக்கினன்மொழிதன்மேயினான். (௧௦௪)

முறையும்வாய்மையுமுயலுநீதியும்
அறையுமேன்மையோடறனுமாதியாந்
துறையும்யாவையுஞ்சுருதிநூல்விடா
இறைவரேவலாலியைவகாண்டியால். (௧௦௫)

பரவுகேள்வியும்பழுதின்ஞானமும்
விரவுசீலமும்வினையின்மேன்மையும்
உரவிலோய்தொழற்குரியதேவரும்
குரவரேயெனப்பெரிதுகோடியால். (௧௦௬)

அந்தநற்பெறுங்குரவராரெனச்
சிந்தைதேர்வுறத்தெரியநோக்கினல்
தந்தைதாயரென்றிவர்கடாமலால்
எந்தைகூறவேறெவருமில்லையால் (௧௦௭)

---

101. நீயுடைப்பதம் மூன்றுசொல் இரண்டுசெந்தியாக்கி முன்னது எழுவாய்த் தொடரும் பின்னதுகுறிப்பு வினையெச்சத்தொடருமாகக்கொள்க.

தாய்வரங்கொளத் தந்தையேவலால்
மேயகங்குலத் தருமமேவினேன்
நீவரங்கொளத் தவிர்தனீர்மையோ
ஆய்வரும்புலத் தறிவுமேவினாய். (க0அ)

தனையராயினார் தந்தைதாயரை
வினையினல்லதோரிசையைவேய்தலோ
நினையலோவிடாநெடியவன்பழி
புனைதலோவையபுதல்வராதரூன். (க0கூ)

இம்மைபொய்யுரைத்திவறியெந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகமாளுமான்
கொம்மைவெம்முலைக்குவையின்மைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வெனோ. (ககO)

வரனிலுந்தைசொன்மரபினாலுடைத்
தரணிநின்னதென்றியைந்ததன்மையால்
உரனினீபிறந்துரிமையாதலால்
அரசுநின்னதேயாள்கவென்னவே. (ககக)

முன்னர்வந்துதித்துலகமூன்றினும்
நின்னையொப்பிலாநீபிறந்தபார்
என்னதாகில்யானின்றுதந்தனென்
மன்னபோர்ந்துநீமகுடஞ்சூடென. (கசஉ)

மலங்கிவையகம்வருந்துவைகனீ
உலங்கொடோளுனக்குறுவசெய்திபோ
கலங்குறுவணங்காத்திபோந்தெனப்
பொலங்குலாவுதாள்பூண்டுவேண்டினான். (ககங)

பசைந்தசிந்தைநீபரிவின்வையமென்
வசஞ்செய்தாலதுமுறைமையோவசைக்
கசைந்தவெந்தையாரருளவன்றுநான்
இசைந்தவாண்டெலாமின்றுடேறுமோ. (ககச)

வாய்மையென்னுமீதன்றிவையகந்
தூய்மையென்றுமொன்றுண்மைசொல்லுமோ
தீய்மைதானதிற்றீர்தலன்றியே
ஆய்மெய்யாகவேறறையலாவதே. (ககரு)

---

109. வேய்தல் - புனைதல்.

எந்தையேவவாண்டேமொடேழெறு
வந்தகாலநான்வனத்துள்வைகநீ
தந்தபாரகந்தன்னைமெய்ம்மையால்
அந்தநாளெலாமாளென்றனையால். (கககசு)

வேறு.

மன்னவனிருக்கவேயுமணியணிமகுடஞ்சூடு
கென்னயானியைந்ததன்றேனயதுமறுக்கவஞ்சி
அன்னதுநினைந்துநீயென்றனையமறுக்கலாமோ
சொன்னதுசெய்திபையதுயருழந்தயரலென்றான். (கக௭)

ஒள்ளியோனினையவெல்லாமுணர்த்தலுமுரைக்கலுற்ற
பள்ளநீர்வெள்ளமன்னபரதனைவிலக்கிப்பண்டு
தெள்ளியோர்குலத்துச்செய்கைசிக்கறச்சிந்தைநோக்கி
வள்ளியோய்கேட்டியென்றுவசிட்டமாமுனிவன்சொன்னான். ()

வேறு.

கிளரகன்புனலுணின்றரியொர்கேழலாய்
இளையெனுந்திருவினையேந்திறனரோ
உளைவரும்பெருமையோரெயிற்றினுட்புரை
வளரிளம்பிறையிடைமறுவிற்றோன்றவே. (கககசு)

ஆதியவமைதியினிறுதியம்பெரும்
பூதமும்வெளியொழித்தெவையும்புக்கபின்
நாதனவ்வகன்புனனல்கிநண்ணருஞ்
சோதியாந்தன்மையிற்றுயிறன்மேயினான். (கஉ0)

எற்றவித்தன்மையினமரர்க்கின்னமு
தூற்றுடைக்கடல்வணனுந்தியுந்திய
நூற்றிதழ்க்கமலத்தினெய்தின்யாவையும்
தோற்றுவித்துதவிடமுதல்வன்றோன்றினான். (கஉக)

---

118. வெள்ளம் பள்ளத்தடங்கல்போன்று எல்லாநற்குணங்களும் தன்னகத்தடங்கலி னங்ஙனங் கூறினர். மேட்டினின்றுபள்ளத்தில் விழும்வெள்ளம் கீழ்மேலாதல்போல் அவனிலை துன்பத்தால் கீழ்மேலாய் நிற்றலிற்' பள்ள நீர் வெள்ளமன்ன பரதன்' என்றார்.

119. இளை - இளையென்னும் பூப்பிராட்டி

120. வெளி - ஆகாயம்.

121. சகத்திரதளமென்னும் வடமொழிப்பெயர் பற்றி நூற்றிதழ்த்தாமரையென்றார்.

அன்றவனுலகிளையளிக்கவாகிய
துன்றனிக்குலமுதலுள்ளவேந்தர்கள்
இன்றளவினுமுறையிகந்துளாரிலை
ஒன்றுளதுரையினமுணரக்கேட்டியால். (கஉஉ)

இதவியலியற்றியகுரவர்யாரினும்
மதவியல்களிற்றிறும்மறுவில்விஞ்சைகள்
பதவியவிருமையும்பயக்கப்பண்பினால்
உதவியவொருவனேயுயருமென்பரால். (கஉந)

என்றலால்யானுனையெடுத்துவிஞ்சைகள்
ஒன்றலாதனபலவுதவிற்றுண்மையே
அன்றெனுதின்றெனதாணையைய நீ
நன்றுபோந்தளியுனக்குரியநாடென்றான். (கஉச)

கூறியமுனிவனைக்குவிந்ததாமரை
சீறியகைகளாற்றொழுதுசெங்கணான்
ஆறியசிந்தனையறிஞவொன்றுரை
கூறுவதுளதெனக்கூறன்மேயினான். (கஉரு)

சான்றவராகதன்குரவராகதாய்
போன்றவராகமெய்ப்புதல்வராகதான்
தோன்றருமலருளான்சிறுவசெய்வெனென்
றேன்றபின்னவ்வுரைமறுக்குமீட்டதோ. (கஉசு)

தாய்பணித்துவந்தனதந்தைசெய்கென
வேயவப்பொருள்களுமிறைஞ்சிமேற்கொளாத்
தீயவப்புலையனிற்செய்கைதேர்கிலா
நாயெனத்திரிவதுநல்லதல்லவோ. (கஉஎ)

முன்னுறப்பணித்தவர்மொழியையானெனை
சென்னியிற்கொண்டதுசெய்வெனென்றதின்
பின்னுறப்பணித்தனைபெருமையோவெனக்
கொன்னினிச்செய்வதையுரைசெயீங்கென்றான். (கஉஅ)

முனிவனுமுரைப்பதோர்முறைமைகண்டிலெம்
இனியெனவிருந்தனனிளையமைந்தனும்

---

123. குரவர் - அரசர், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன்.
125. சிந்தனையடங்கியோனாகலின், ஆறிய சிந்தனை என்றார்.

அனையதே தலாள்பவ ராள்கநாடுநான்
பணிபடர் காடுடன் படர் தன்மெய்யென்றான். (கஉகூ)

அவ்வழி யிமையவ ரறிந்து கூடினார்
இவ்வழி யிராமனை யிவன்கொண் டேகுமேல்
செவ்வழித் தன்றுநஞ் செயலென் றெண்ணினார்
கவ்வையர் விசும்பிடைக் கழறன் மேயினார். (கநூ0)

ஏத்தரும் பெருங்குணத் திராமனிவ் வழி
போத்தருந் தாதைசொற் புரக்கும் பூட்சியான்
ஆத்தவாண் டேழினோ டேழுமந் நிலம்
காத்தலுன் கடனிவை கடமை யென்றனர். (கநூக)

வானவருரைத்தலு மறுக்கற் பாலதன்
றியானுனை யிரந்தன னினியென் னாணையால்
ஆனதோ ரமைதியி னளித்தி பாரெனாத்
தானவன் றுணைமலர்த் தடக்கை பற்றினான். (கநூஉ)

ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச்
சாமிது சரதநின் னாணை சாற்றினேன். (கநூநூ)

என்பது சொல்லிய பரதன் யாதுமோர்
துன்பிலனவனது துணிவை நோக்கினான்
அன்பினனுருகின னன்ன தாகென்றான்
தன்புகழ் தன்னினும் பெரிய தன்மையான். (கநூச)

விம்மினன் பரதனும் வேறு செய்வதொன்
றின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்
செம்மையின் றிருவடித் தலந் தந்தீகென
எம்மையுந் தருவன விரண்டு நல்கினான். (கநூரு)

அடித்தல மிரண்டையு மழுதகண்ணினான்
முடித்தல மிவையென முறையிற் சூடினான்
படிதலத் திறைஞ்சினன் பரதன் போயினான்
பொடித்தல மிலங்கு பொலங்கொண் மேனியான். (கநூகூ)

---

134. புகழினுங் குணங்களால் பெரியனாகலின் 'தன்புகழ் தன்னினும் பெரியதன்மையான்' என்றார்.

ஈன்றவர் முதலியவெண்ணில்சுற்றமும்
சான்றவர்குழுவொடுதவத்துளோர்களும்
வான்றருசேனையுமற்றுஞ்சுற்றுற
மூன்றுநூல்கிடந்தகோண்முனியும்போயினான். (கநஎ)

பண்டைநூறெரிபரத்துவனும்போயினான்
மண்கீதீர்நெடுநகர்மாந்தர்போயினார்
விண்டுறைதேவரும்விலகிப்போயினார்
கொண்டறன்றுணையாற்குகனும்போயினான். (கநஅ)

பாதுகந்தலைக்கொடுபரதன்பைம்புனல்
மோதுகங்கையின்கரைகடந்துமுந்தினான்
போதுகுங்கடிபொழிலயோத்திபுக்கிலன்
ஓதுகங்குலினெடிதுறக்கம்நீங்கினான். (கநகூ)

நந்தியம்பதியிடைநாதன்பாதுகம்
செந்தனிக்கோன்முறைசெலுத்தசிந்தையான்
இந்தியங்களையவித்திருத்தன்மேயினான்
அந்தியும்பகலுநீராருதகண்ணினான். (கச0)

குன்றினிலிருந்தனனென்னுங்கொள்கையால்
நின்றவர்நலிவராமேனயத்தாலெனாத்
தன்றுணைத்தம்பியுந்தானுந்தையலும்
தென்றிசைநெறியினைச்சேறன்மேயினான். (கசக)

ஆக திருவிருத்தம் - கஉகஉ.

அயோத்தியாகாண்டம்

முற்றிற்று.

---

138. பண்டைநூல் - முதனூல் அதாவது வேதம்.
140. நந்தியம்பதி - நந்திக்கிராமம்.
141. குன்று - சித்திரகூடம்.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

மூன்றாவது

# ஆரணியகாண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

# ஆரணியகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

ஹரிஓம்　　நன்றாக　　குருவாழ்க　　குருவே　　துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## மூன்றாவது,

# ஆரணியகாண்டம்.

---

## முதலாவது: விராதன்வதைப்படலம்.

### காப்பு.

பேதியாதுநிமிர்பேதவுருவம்பிறழ்கிலா
ஓதியோதியுணருந்தொறுமுணர்ச்சியுதவும்
வேதம்வேதியர்விரிஞ்சன்முதலோர்தெரிகிலா
ஆதிதேவரவரெம்மறிவினுக்கறிவரோ. (க)

### நூல்.

முத்திருத்தியவ்விருந்தனையமொட்டாய்ந்நகையொடும்
சித்திரக்குனிசிலைக்குமரர்சென்றணுகினர்
அத்திரிப்பெயரருந்தவனிருந்தவமைதி
பத்திரப்பழுமரப்பொழிறுவன்றபழுவம். (உ)

திக்குறுஞ்செறிபரந்தெரியநின்றதிறள்பொற்
கைக்குறுங்கண்மலைபோற்குமரர்காமமுதலா
முக்குறும்பறவெரிந்தவினைவான்முனிவனைப்
புக்கிறைஞ்சினரருந்தவனுவந்துபுகலும். (௩)

குமரர்நீரிவணடைந்துதவுகொள்கையெளிதோ
அமரர்யாவரொடுமெவ்வுலகும்வந்தவளவே

---

1. வெளியிடாவென்றும்பாடம்.
2. பழுவம் - ஆச்சிரமம்.

எமரின்யார் தவமுயன்றவர்களென்றருகினன்
தமரெலாம்வரவுகந்தனைய தானமுனிவன். (ச)

அன்னமாமுனியொடன்றவணுறைந்தவனரும்
பன்னிகற்பினநசூயைபணியாலணிகலன்
துன்னுதூசினொடுசந்திவைசுமந்தசனகன்
பொன்னொடேகியுயர்தண்டகவனம்புகுதலும். (ரு)

எட்டொடெட்டுமதமாகரியிரட்டியரிமா
வட்டவெங்கண்வரையாளிபதினாறுவகையில்
இட்டவிட்டிடைகிடந்தனசெறிந்தவொருகை
தொட்டமுத்தலையிற்றொகைமிடற்கழுவொடே. (சு)

செஞ்சுடர்ச்செறிமயிர்ச்சுருள்செறிந்தசெனியன்
நஞ்சுதட்டுருவுபெற்றிடைநடந்தனெனமா
மஞ்சுசுற்றியவயங்குகிரிபாதவிசையில்
பஞ்சுபட்டதுபடப்படியின்மேன்முடுகியே. (எ)

புண்டுளங்கியனகண்கள்கனல்பொங்கமழைசூழ்
விண்டுளங்கிடவிலங்கல்குலுங்கவெயிலும்
அண்டுளங்கதிர்குறைந்திடநெடுங்கடல்சுலாம்
மண்டுளங்கவயவந்தகன்மனந்தளரவே. (அ)

புக்குவாளரிமுழங்குசெவியின்பொறியுறப்
பக்கமின்னுமணிமேருசிகரங்குழைபடச்
செக்கர்வான்மழைநிகர்த்தவெதிருற்றசெருவத்
துக்கவீரருதிரத்தினொளிர்செச்சையினொடே. (கூ)

படையொடாடவர்கள்பாய்புரவிமால்களிறுதேர்
நடையவாளரிகள்கோளுழுவைநண்ணியவெலாம்
அடையவாரியரவாலசையநேகவிதவந்
தொடையன்மாலைதுயல்வந்துலவுதோள்பொலியவே. (கo)

குன்றுதின்றினவெனக்குமுறுகோபமதமா
ஒன்றினொன்றிடையடுக்கினதடக்கையுதவப்
பின்றுகின்றபிலனிற்பெரியவாயினொருபால்
மென்றுதின்றுவிளியாதுவிரியும்பசியொடே. (கக)

---

5. அநசூயை - அழுக்காறில்லாதவள்.
8. அந்தகன் - எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைச்செய்பவன்.

பன்னகாதிபர்பணாமணிபறித்தவைபகுத்
தென்னவிண்ணவர்விமானமிடையிட்டரவிடைத்
துன்னுகோளினொடுதாரகைதொடுத்ததுமுனிச்
சன்னவீரமிடைமின்னுதடமார்பினொடுமே. (கஉ)

பம்புசெக்கரெரியொக்குமயிர்பக்கமெரியக்
கும்பமுற்றவுயர்நெற்றியின்விசித்தொளிகுலா
உம்பருக்கரசன்மால்கரியினோடையெயிறின்
கிம்புரிப்பெரியதோள்வளையொடுங்கிளரவே. (கங)

தங்குதிண்கரியகாளிமைதழைந்துதவழப்
பொங்குவெங்கொடுமையென்பதுபுழுங்கியெழமா
மங்குபாதகம்விடங்கனல்வயங்கிநிமிரக்
கங்குபூசிவருகின்றகலிகாலமெனவே. (கச)

செற்றவாளுழுவைவன்செறியதட்டிருகுறச்
சுற்றிவாரணவுரித்தொகுதிநீவிதொடரக்
கொற்றமேவுதிசையானையின்மணிக்குலமுடைக்
கற்றைமாசுணம்விரித்துவரிகச்சொளிரவே. (கரு)

செங்கணங்கவரவின்பொருவில்செம்மணிவிராய்
வெங்கணங்கவலயங்களும்விலங்கவிரவிச்
சங்கணங்கியசலஞ்சலமலம்புதவளக்
கங்கணங்களுமிலங்கியகரம்பிறழவே. (கசு)

முந்துவெள்ளிமலைபொன்னின்மலையோடுமுரணப்
பந்துமுந்துகழல்பாடுபடவூடுபடர்வோன்
வந்துமண்ணினிடையோனெனினும்வானினிமையோர்
சிந்தையுள்ளும்விழியுள்ளுமுளனென்றதிறலோன். (கஎ)

பூதமத்தனையுமோர்வடிவுகொண்டுபுதிதென்
றோதவொத்தவுருவத்தனுருமொத்தகுரலன்
காதலித்தயனளித்தகடையிட்டகணிதப்
பாதலக்கமதவெற்பிடைபடைத்தவலியான். (கஅ)

சாரவந்தயல்விலங்கினன்மரங்கடரையில்
பேரவன்கிரிபிளந்துகவளர்ந்திகல்பெரு

12. விமானம் - தேவரூர்தி.

13. கிம்புரி - யானைக்கொம்பிற்பூண்.

16. சலஞ்சலம் - வலம்புரி ஆயிரம் சூழ்ந்தசங்கு.

வீரவெஞ்சிலையினோரெதிர்விராதனெனுமக்
கோரவெங்கணுருமேறனகொடுந்தொழிலினான். (௧௯)

நில்லுநில்லுமெனவந்துநிணமுண்டநெடுவெண்
பல்லும்வல்லெயிறுமின்னுபகுவாய்முழைதிறந்
தல்லிபுல்லுமலரன்னமனையாளையொருகைச்
சொல்லுமெல்லையின்முகந்துயர்விசும்புதொடர. (௨௦)

காளைமைந்தரதுகண்டுகதம்வந்துகதுவத்
தோளில்வெஞ்சிலையிடங்கொடுதொடர்ந்துசுடர்வாய்
வாளிதங்கியவலங்கையவர்வஞ்சனையடா
மீளுகெங்ககறியென்பதுவிளம்பவவனும். (௨௧)

ஆதிநான்முகன்வரத்தினெனதாவியகலேன்
ஏதியாவதுவுமின்றியுலகியாவுமிகலில்
சாதியாதனவுமில்லையுயிர்தந்தனவடா
போதிமாதிவளையுந்தியினியென்றுபுகல. (௨௨)

வீரனுஞ்சிறிதுவெண்முறுவல்வெண்ணிலவுகப்
போரறிந்திலனிவன்றனதுபொற்புமுரணும்
தீருமெஞ்சியெனநெஞ்சினுறுசிந்தைதெரியாப்
பாரவெஞ்சிலையினாணொலிபடைத்தபொழுதே. (௨௩)

இலைகொள்வேலடலிராமனெழுமேகவுருவன்
சிலைகொணாணெடியகோதையொலியேறுதிரைநீர்
மலைகணீடுதலநாகர்பிலம்வானமுதலாய்
உலகமேழுமுருமேறெனவொலித்துரறவே. (௨௪)

வஞ்சகக்கொடியபூசைநெடுவாயின்மறுகும்
பஞ்சரக்கிளியெனக்கதறுபாவையைவிடா
நெஞ்சுளுக்கினனெனச்சிறிதுநின்றுநினையா
அஞ்சனக்கிரியனானெதிரரக்கனழலா. (௨௫)

பேய்முகப்பிணியறப்பகைஞர்பெட்பினுதிரம்
தோய்முகத்ததுகனத்ததுசுடர்க்குதிரையின்
வாய்முகத்திடைநிமிர்ந்துவடவேலைபருகும்
தீய்முகத்திரிசிகைப்படைதிரித்தெறியவே. (௨௬)

திசையும்வானவருநின்றதிசைமாவுமுலகும்
அசையுமாலமெனவன்னவயின்மின்னிவரலும்

20. வய்லெயிறு - வக்கிரதந்தம்.

வசையின்மேருமுதன்மால்வரைகளேழின்வலிசால்
விசையவார்சிலையிராமனொருவாளிவிடவே. (உ௭)

இற்றதின்றொடிவ்வரக்கர்குலமென்றுபகலே
வெற்றவிண்ணினிடைநின்றுநெடுமீன்விழுவபோல்
சுற்றமைந்தசுடரங்கமதிரண்டுதுணியா
அற்றகண்டமவையாசையினதந்தமுறவே. (உ௮)

சூரொடுங்கயிறுணிந்திறுதல்கண்டுசிறிதும்
போரொடுங்கிலன்மறங்கொடுபுழுங்கிநிருதன்
பாரொடுங்குறுகரங்கொடுபருப்பதமெலாம்
வேரொடுங்கடிதெடுத்தெதிர்விசைத்துவிடலும். (உ௯)

வட்டமிட்டகிரியற்றுகவயங்குவயிரக்
கட்டமைந்தகதிர்வாளியெதிரேகடவலால்
விட்டவிட்டமலைமீளவவன்மெய்யில்விசையால்
பட்டபட்டவிடமெங்குமுடலூறுபடலும். (௩௦)

ஓமராமமரையொருங்குமுணர்வோருணர்வுறும்
நாமராமவரைநல்லறநிறுத்தநணுகித்
தாமராவணைதுறந்துதரைநின்றவரையோர்
மாமராமரமிறுத்ததுகொடெற்றவரலும். (௩௧)

ஏறுசேவகனிரண்டிரொடிரண்டுகணையால்
வேறுவேறுதுணிசெய்ததுவிழுத்திவிசையால்
மாறுமாறுநிமிர்தோளிடையுமார்பினிடையும்
ஆறுமாறுமயில்வெங்கணைபழுத்தவவனும். (௩௨)

மொய்த்தமுரட்டனதுடற்றலைதொளைப்பமுடுகிக்
கைத்தலத்தினிமிரக்கடிதுகன்றிவிசிறும்
மெய்த்தமெய்ப்பெரியகேழலெனவெங்கும்விசையில்
தைத்தவக்கணைதெறிப்பமெய்சிலிர்த்துதறவே. (௩௩)

எரியின்வார்கணையிராமன்விடவெங்குருதியா
துருவியோடமறமோடுதல்செயாவுணர்விலன்
அருவிபாயும்வரைபோல்குருதியாறுபெருகிச்
சொரியவேகவலிகெட்டுணர்வுசோர்வுறுதலும். (௩௪)

---

29. பருப்பதம் - பர்வதமென்பதன்சிதைவு.
31. மராமரம் - ஆச்சாமரம்.
34. வேகவலி - வேகமும் வலியுமென்றுமாம்.

மெய்வரத்தினன்மிடற்படைவிடப்படுகிலன்
செய்யுமற்றுமிகலென்றுசினவாளுருவிவன்
கைதுணித்துமெனமுந்துகடுகிப்படர்புயத்
தெய்வின்மற்பொருவுதோளிருவரோறறநிருதன். (௩௫)

உண்டெழுந்தவுணர்வவ்வயினுணர்ந்துமுடுகித்
தண்டெழுந்தனையதோழ்கொடுசுமந்துதழுவிப்
பண்டெழுந்தனதுவன்கதிபதிற்றின்முடுகிக்
கொண்டெழுந்தனன்விழுந்தழிகொழுங்குருதியான். (௩௬)

முந்துவான்முகடுறக்கடிதுமுட்டிமுடுகிச்
சிந்துசோரியொடுசாரிகைதிரிந்தனனரோ
வந்துமேருவினைநாடொறும்வலஞ்செய்துழல்வோர்
இந்துசூரியரையொத்திருவரும்பொலியவே. (௩௭)

சுவணவண்ணனெடுகண்ணனுறைதோளன்விசைதோய்
அவணன்விண்ணிடைநிமிர்ந்துபடர்கின்றவனறம்
சிவணதன்னசிறைமுன்னவரொடேகுசெலவத்
துவணனென்னுநெடுமென்னவனுமொத்தனனரோ. (௩௮)

மாதயாவுடையதன்கணவன்வஞ்சன்வினையில்
போதலோடுமலமந்தனள்புலர்ந்துபொடியில்
கோதையோடுமொசிகொம்பெனவிழுந்தனள்குலச்
சீதைசேவல்பிடியுண்டசிறையன்னமனையாள். (௩௯)

பின்னையேதுமுதவுந்துணைபெறுளுரைபெறுள்
மின்னையேயிடைநுடங்கிடவிரைந்துதொடர்வாள்
அன்னையேயனையவன்பிறைவோர்கடமைவிட்
டென்னையேநுகர்தியென்றனளெழுந்துவிழுவாள். (௪௦)

அழுதுவாய்குழறியாருயிரழுங்கியலையா
எழுதுபாவையனையாணிலையுணர்ந்திளையவன்
தொழுதுதேவிதுயர்கூரவினையாடெறுழிலோ
பழுதுவாழியெனவூழிமுதல்வன்பகர்வுறும். (௪௧)

ஏகநின்றநெறியெல்லைகடிதேறியினிதின்
போகனன்றெனநினைந்தனனிவன்பொருவிலோய்

37. சாரிகை - மண்டலாகாரமானகதி.

38. உவணன் - ஸுபர்ணனென்பதன் சிதைவு, அழகிய சிறகுடையவனென்று பொருள்.

சாகலின்றுபொருளன்றெனநகுந்தகைமையோன்
வேகவெங்கழலினுந்தலும்விராதன்விழுவே. (சஉ)

தோளிரண்டும்வடிவாள்கொடுதுணித்துவிசையால்
மீளிமெய்ம்பினர்குதித்தலும்வெருண்டுபுருவத்
தேளிரண்டுநெறியச்சினவுசெங்கணரவக்
கோளிரண்டுசுடருந்தொடர்வதிற்குறுகலும். (சஙு)

புண்ணிடைப்பொழிபுயிர்ப்புனல்பொலிந்துவரவும்
விண்ணிடைப்படர்தல்விட்டெழுவிகற்பநினையா
எண்ணுடைக்குரிசிலெண்ணியினையோயினையிம்
மண்ணிடைக்கடிதுபொத்துதல்வழக்கெனலுமே. (சச)

மதநல்யானையனையானிலம்வகிர்ந்தகுழிவாய்
நதமுலாவுநளிநீர்வயினழுந்தநவைதீர்
அதவமாய்நறுநெயுண்டுலகிலன்பர்கருதிற்
றுதவுசேவடியினாலமலனுந்துதலுமே. (சரு)

பட்டதன்மையுமுணர்ந்துபடர்சாபமிடமுன்
கட்டவன்பிறவிதந்தகடையானவுடறன்
விட்டுவிண்ணிடைவிளங்கினன்விரிஞ்சனெனவோர்
முட்டைதந்ததனில்வந்தமுதன்முன்னவனியே. (சசு)

பொறியிறென்றியயல்சென்றுதிரிபுந்திபுணரான்
நெறியினின்றிநிலைநின்றநினைவுண்டதனினும்
பிறவிலன்புதனிபண்டுடையபெற்றிதனினும்
அறிவுவந்துதவநம்பனையறிந்துபகர்வான். (சஎ)

வேறு.

வேதங்களறைகின்றவுலகெங்கும்விரிந்தனவுன்
பாதங்களிவையென்னிற்படிவங்களெப்படியோ
ஓதங்கொள்கடலன்றியொன்றினோடொன்றுவ்வாப்
பூதங்கடொறுமுறைந்தாலவைபுன்னைப்பொறுக்குமோ. (சஅ)

---

44. குரிசில் - பெருமையிற் சிறந்தோன், ஆண்பாற் சிறப்புப்பெயர்.

45. நதம் - மேற்குநோக்கி செல்லுமாறு, ஈண்டு தபதி, நருமதை இரண்டிலொன்றைக் கொள்ளலாம்.

48. பூதங்கள் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. நிலம் நிலையாயிருத்தலும், கந்தமுடையததாலாலும்; நீர் - பாய்ந்தோடுதலும், குளிர்ந்த பரிசமுடையதாதலும்; தீ - மேல்நோக்கி எரிதலும், சுடும்பரிசமுடையதாதலும்; விசும்பு - எங்கும் பரவியிருத்தலும், சப்தகுண முடையதாதலுமாகிய தன்மை வேறுபாடுகளைப்பற்றி 'ஒன்றினோடொன் றொவ்வாப் பூதங்கள், என்றார்.

கடுத்தகராங்கதுவநிமிர்கையெடுத்தூமெய்கலங்கி
உடுத்ததிசையனைத்திலுஞ்சென்றொலிகொள்ளவுறுதுயரால்
அடுத்தபெருந்தனிமூலத்தருபரமேபரமேயென்
றெடுத்தொருவாரணமழைப்பநீயோவன்றேனென்றாய். (௪௯)

புறங்காணவகங்காணப்போதுமுகத்தினருணோக்கம்
இறங்காததாமரைக்கணெம்பெருமான்னியம்புதியால்
அறங்காத்தற்குனக்கொருவராருமொருதுணையின்றிக்
கறங்காகுமெனத்திரியநீயேயோகடவாய்தான். (௫௦)

துறப்பதேதொழிலாகத்தோன்றினோர்தோன்றியக்கால்
மறப்பரோதம்மையதுவன்றாகின்மற்றவர்போல்
பிறப்பரோவெவர்க்குந்தாம்பெற்றபதம்பெறலரிதோ
இறப்பதேபிறப்பதேயெனும்விளையாட்டினிதுகந்தோய். (௫௧)

பணிநின்றபெரும்பிறவிக்கடல்கடக்கும்படிபற்றி
நணிநின்றசமயத்தோரெல்லாருநன்றென்னத்
தனிநின்றதத்துவத்தின்றகைமூர்த்திநீயாகில்
இனிநின்றமுதற்றேவரென்கொண்டென்செய்வாரே. (௫௨)

ஓயாதமலரயனைமுதலாகவுளராகி
மாயாதவானவர்க்குமற்றொழிந்தமன்னுயிர்க்கும்
நீயாகின்முதற்றாலைதநெறிமுறையானின்றெடுத்த
தாயாவாரியாவரேதருமத்தின்றனிமூர்த்தி. (௫௩)

நீயாதிபரம்பரமுநின்னவேவுலகங்கள்
ஆயாதசமயமுநின்னடியவேயயலில்லை
தீயாரினொளித்தியால்வெளிநின்றாற்றீங்குண்டோ?
வீயாதபெருமாயைவிளையாட்டும்வேண்டுமோ.? (௫௪)

தாய்தன்னையறியாதகன்றில்லைதன்கன்றை
யாயுமறியும்முலகின்றாயாகினைய
நீயறிதியெப்பொருளுமவையுன்னைநிலையறியா
மாயையிதுவென்கொலோவாராதேவரவல்லாய். (௫௫)

பன்னலாமென்றுலகம்பலபலவுநினையுமால்
உன்னலாற்பெருந்தெய்வமுயர்ந்துளோரொழுக்கன்றே?
அன்னவூர்தியைமுதலாமந்தணர்மாட்டருந்தெய்வம்
நின்னலாலில்லாமைநெறிநின்றார்நினையாரோ. (௫௬)

பொருவரியசமயங்கள்புகல்கின்றபுத்தேளிர்
இருவினையுமுடையார்போலருந்தவநின்றியற்றுவார்
திருவுறையுமணிமார்பநினக்கென்னைசெயற்பால
ஒருவினையுமில்லார்போலுறங்குதியாலுறங்காதாய்.! (ருஎ)

அரவாகிச்சுமத்தியாலயிலெயிற்றினேந்துதியால்
ஒருவாயின்விழுங்குதியாலோரடியாலொளித்தியால்
திருவானநிலமகளையிஃதறிந்தாற்சீறுளோ!
மருவாருந்துழாயலங்கன்மணிமார்பின்வைகுவாள். (ருஅ)

மெய்யைத்தான்சிறிதுணர்ந்துநீதிவித்தமன்னுயிர்கள்
உய்யத்தானுகாதேனுனக்கென்னகுறையுண்டோ?
வையத்தார்வானத்தார்மழுவாளிக்கன்றளித்த
ஐயத்தாற்சிறிதையந்தவிர்ந்தாருமுளரையா. (ருகூ)

அன்னமாயருமறைகளறைந்தாய்நீயவையுன்னை
முன்னமாரோதுவித்தாரெல்லாருமுடிந்தாரோ?
பின்னமாயொன்றுதல்பிறிந்தேதேபோபிறியாதோ?
என்னமாமாயமிவையேனமாய்மண்ணிடந்தாய்.! (௬௦)

ஒப்பிறையும்பெறலரியவொருவாமுன்னுவந்துறையும்
அப்புறையுமுறந்தடியேனருந்தவத்தாலணுகுறலால்
இப்பிறவிக்கடல்கடந்தேனினிப்பிறவேனிருவினையும்
துப்புறழுநீர்த்தசுடர்த்திருவடியாற்றுடைத்தாய்நீ. (௬௧)

வேறு.

இற்றெலாமியம்பினன்
நிற்றலோடுநீயிவ்வா
றுற்றவாறுணர்த்தெனு
வெற்றியான்விளம்பினன். (௬௨)

கள்ளமாயவாழ்வெலாம்
விள்ளஞானம்வீசுதாள்
வள்ளல்வாழிகேளெனு
உள்ளவாறுணர்த்தினன். (௬௩)

இம்பருற்றிதெய்தினேன்
வெம்புவிற்கைவீரபேர்

---

59. ஐயம் - பிச்சையும், சந்தேகமும்.

2

தும்புருத் தனதன்சூழ்
அம்பரத் துளனரோ. (௬௪)

ஆடரம்பைநீடரங்
கூடுநின்றுபாடலால்
ஊடுவந்துகூடலிக்
கூடுவந்துகூடினேன். (௬௫)

கரக்கவந்தகாமநோய்
துரக்கவந்ததோமினால்
இரக்கமின்றியேயவினான்
அரக்கன்மைந்தனாயினேன். (௬௬)

அன்னயக்கனாதியாய்
இன்னநீருநீகையான்
நின்னதாளினீங்குமென்
றுன்னுமெற்குணர்த்தினான். (௬௭)

வலஞ்செய்திந்தவானெலாம்
நலிஞ்சுதின்னநாமவேல்
பொலிஞ்சவென்றிபூணுமக்
கிலிஞ்சன்மைந்தனாயினேன். (௬௮)

அன்றுமூலமாதியாய்
இன்றுகாறுமேமையேன்
நன்றுதீதுநாடலேன்
தின்றுதீயதேடினன். (௬௯)

தூண்டநின்றதொன்மைதான்
வேண்டநின்றவேதநூல்
பூண்டநின்பொலங்கொடாள்
தீண்டவின்றுதேறினேன். (௭௦)

தெறுத்துவந்ததீதெலாம்
அறுத்தவுன்னையாதனேன்
ஒறுத்ததன்மையூழியாய்
பொறுத்தியென்றுபோயினான். (௭௧)

64. தனதன் - சம்பத்தைக்கொடுக்கின்றவன்.
70. தூண்டுதல் - உண்டாக்கிவளர்த்தல்.

தேவுகாதல்சீறியோன்
ஆவிபோயினானெனாப்
பூவுலாவுபூவையோ.
டேவலாருமேகினார். (எஉ)

கைகொள்காலவேவினார்
மெய்கொள்வேதமெய்யர்வாழ்
மொய்கொள்சோலைமுன்னினார்
வைகருணும்வைகினார். (எஙு)

ஆ திருவிருத்தம்-எங.

## உ-வது, சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்.

குரவங்குவிகோங்கலர்கொம்பினொடும்
இரவங்கணுறும்பொழுதேகினரால்
சரவங்கனிருந்துதவங்கருது
மரவங்கிளர்கோங்கொளிர்வாசவனம். (க)

செவ்வேலவர்சென்றனர்சேரலுறும்
அவ்வேலைவயினெய்தினாயிரமாம்
தவ்வாதிரவும்பொலிதாமரையின்
வெவ்வேறலர்கண்ணினன்விண்ணவர்கோன். (உ)

அன்னச்செலவிற்படிமேலயல்சூழ்
பொன்னிற்பொலிவாரணிபூணொளிமேல்
மின்னிற்செறிகற்றைவிரிந்தனபோல்
பின்னிச்சுடரும்பிறழ்பேரொளியான். (ங)

வானிற்பொலிதோகையர்கண்மலர்வண்
கானிற்படர்கட்களிவண்டொடுகார்
மேனித்திருநாரதன்வீணையிசைத்
தேனிற்பொலியுஞ்செவிவண்டுடையான். (ச)

73. வேதமெய்யர் - வேதவிதிப்படி நித்தியநைமித்திய கருமங்களிற் சிறிதும் வழுவாது ஒழுகுபவர்.

1. வாசவனம் - வாசனையையுடைய ஆச்சிரமம், வாசஸ்தானமாகிய சோலை எனினும் பொருந்தும்,

4. நாரதன் என்பதற்கு ஆத்மஞானத்தை உபதேசிப்பவனென்றும், நரர்களுக்கு உள்ள ஒற்றுமையைப் பிளப்பவனென்றும் இருவகையாகப்பொருள் கொள்ளலாம்.

அனையின் றுறையைம்பதொ டைம்பதுநூல்
வினையின் றொகைவேள்வி நிரம்பியமா
முனைவன் முதுதேவரின் மூவரலார்
புனையும் முடிதுன் றுபொலன் கழலான். (ரு)

செம்மா மலராணிகர் தேவியொடும்
மும்மா மதவெண்ணிற முன் னுயர்தாள்
வெம்மா மிசையான் விரிவெள்ளிவிளங்
கம்மாமலையண்ணலையேயனையான். (சு)

தானின் றயனின் றொளிர் தண்கதிரோன்
யானின் றதெனன்றொளியெஞ்சிடமா
வானின் றபெரும்பதம் வந்துருவாய்
மேனின் றெனநின் றொளிர் வெண்குடையான். (எ)

திசைகட்டியமால்கரி தெட்டமதப்
பசைகட்டினகிட்டினபற்பலபோர்
விசைகட்டழி தானவர் விட்டவர்பேர்
இசைகட்டியவொத்திவர் சாமரையான். (அ)

தீர்விற் றிரிசெங்கதிர் தங்குவதோர்
ஊருற் றதெனப்பொலியொண் முடியான்
போர்வித்தகனேமிபொறுத்தவன்மா
மார்விற் றிருவிற்பொலிமாலையினான். (கூ)

செற்றிக்கதிரிற் பொலிசெம்மணியின்
கற்றைச்சுடர்விட் டெரிகஞ்சுகியான்
வெற்றித் திருவின் குளிர் வெண்ணகைபோல்
சுற்றிக்கிளருஞ்சுடர் தோள்வளையான். (௧௦)

பல்லாயிரமாமணிபாடமுறுந்
தொல்லாரணிகால்சுடரின் றொகைதாம்
எல்லாமுடனுயெழலானயலே
வில்லாலொளிர் மேகமெனப்பொலிவான். (௧௧)

மானுவுலகந் தனின் மன்றல்பொருந்
தேனுறுநலஞ்செறி தொங்கலினன்

8. சாமரை - சமரமென்னும் மானினது வாலின்மயிராற் செய்யப்பட்டதொரு இராஜ சிந்நம்.

மீனோடுகெடுத்துயர்வென்றியவாம்
வானோடியர்கண்ணொணும்வாரூடையான். (க௨)

வெல்வானசையால்விசையால்விடுநாள்
மல்வான்சுடர்மாலையிராவணன்மேல்
நெல்வானுமருந்நிறம்பிறழா
வல்வாய்மடியாவயிரப்படையான். (க௩)

நின்றானெதிர்நின்றநெடுந்தவனுஞ்
சென்றானெதிர்கொண்டுசிறப்பமையா
என்றானிவணெய்தியவாறெனலும்
பொன்றாதபொலங்கழலோன்புகலும். (க௪)

நின்னாலியனீதிநெடுந்தவமின்
றென்னானும்விளம்பரிதென்றுணர்வான்
அந்நான்முகனின்னையழைத்தனனால்
பொன்னார்சடைமாதவபோதுதியால். (க௫)

ஈந்தாயுலகியாவையுமெவ்வுயிரும்
தந்தானுறையுநெறிதந்தனனால்
நந்தாதபெருந்தவநாடதுநீ
வந்தாயெனினின்னெதிரேவருவான். (க௬)

எல்லாவுலகிற்குமுயர்ந்தமையான்
சொல்லாவகைநீயுணர்தொன்மையயால்
நல்லாயுடனேநடநீயெனலும்
அல்லேலெனவாலறிவானறைவான். (க௭)

சொற்பொங்குபெரும்புகழோய்தொழின்மாய்
சிற்பங்களின்வீவனசேர்குவெனே
அற்பங்கருதேதெனைநருந்தவமோ
கற்பம்பலசென்றதுகாணுதியால். (க௮)

சொற்றுந்தரமன்றிதுசூழ்கழலாய்
பெற்றும்பெறுகில்லதோர்பெற்றியதே
மற்றென்பலசொல்லிவண்வந்துதவம்
முற்றும்பகருனுமுடித்தனனால். (க௯)

---

17. வால்அறிவான் தத்துவஞானத்தையுடையவர். வால் - தூய்மை.
18. கற்பம் - யுகம்.

சிறுகாலையிலாநிலையோதிரியா
குறுகாநெடுகாகுணம்வேறுபடா
உறுகால்கிளர்பூதமெலாமுகினும்
மறுகாநெறியெய்துவெண்வானுடையாய். (உ0)

என்றின்னவிளம்பிடுமெல்லையின்வாய்
வன்றிண்சிலைவீரரும்வந்தனுகா
ஒன்றுங்கிளரோதையினுலுணர்வார்
நின்றென்னைகொலின்னதெனநினைவார். (உக)

கொம்பொத்தனநாலொளிர்கோள்வயிரக்
கம்பக்கரிநின்றதுகண்டனமால்
இம்பர்த்தலைமாதவர்பாலிவனும்
உம்பர்க்கரசெய்தினனென்றுணரா. (உஉ)

மானேயனையாளொடுமைந்தனையும்
பூனேர்பொழிலின்புறனேனிறுவா
ஆனேறெனவாளரியேறிதெனத்
தானேயவகன்பொழில்சாருதலும். (உ௩)

கண்டாமவையாயிரமுங்கதுவக்
கண்டாமரைபோற்கருஞாயிறெனக்
கண்டானிமையோரிறைகாசினியின்
கண்டானருநான்மறையின்கனியை. (உ௪)

காணுமனநொந்துகவன்றனனால்
ஆணுதனையந்தணர்நாயகனை
நாணும்வணங்கியநன்முடியால்
தாணுகியதோள்கொடவற்றெழுவான். (உ௫)

வேறு.

துவசமார்தொல்லமருட்டுன்னுரைச்செற்றுஞ்
சுருதிப்பெருங்கடலின்சொற்பொருள்கற்பித்தும்
திவசமார்நல்லறத்தின்செந்நெறியினுய்த்துந்
திருவளித்தும்வீடளித்துஞ்சிங்காமைத்தங்கள்

24. காசினிகாஸ்யபீ என்னும் வடசொல்லின் சிதைவு; பாசுராமராற்கச்யப முனிவருக்கு யக்ஞதக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதனால் பூமிக்கு இப்பெயர்.

26. சிங்காமை - அழியாமை.

கவசமாயாருயிராய்த் தவமாய்க்கண்ணாய்
கடையிலாஞானமாய்க்காப்பானைக்காணு
அவசமாய்சிந்தையழிந்தயலேநின்று
னறியாதான்போலவறிந்தவெலாஞ்சொன்னான். (உசு)

தோய்ந்தும்பொருளனைத்துந்தோயாதுநின்ற
சுடரேதொடக்கறுத்தோர்சுற்றமேபற்றி
நீய்ந்தவரியநெடுங்கருணைக்கெல்லா
நிலயமேவேதநெறிமுறையினேடி
ஆய்ந்தவுணர்வினுணர்வேபகைபா
லலைப்புண்டடியேமடிபோற்றவந்நாள்
ஈந்தவரமுதவவெய்தினையேயெந்தா
யிருநிலத்தவோநின்னிணையடித்தாமரைதாம். (உஎ)

மேவாதவரில்லைமேவினருமில்லை
வெளியோடிருளில்லைமேல்கீழுமில்லை
மூவாமையில்லைமூத்தமையுமில்லை
முதலிடையோடீறில்லைமுன்னொடுபின்னில்லை
தேவாவிங்கிவ்வோநீசென்றநிலையென்றாற்
சிலையேந்திவந்தெம்மைச்சேவடிகளேவக்
காவாதொழியிற்பழிபெரிதோவன்றேற்
கருங்கடலிற்கண்வளராப்பைம்மாறுமுண்டோ. (உஅ)

நாழிந்வைகிருலகெலாமாக
நளினத்துநீதந்தநான்முகனுர்தாமே
ஊழிபலபலவுநின்றளந்தாலொன்று
மூலவாப்பெருங்குணத்தவுத்தமனேமேனாள்
தாழிதரையாகத்தண்டயிர்நீராகத்
தடவரையேமத்தாகத்தாமரைக்கைநோவ
ஆழிகடைந்தமுதமெங்களுக்கேயீந்தா
யவுணர்கடாநின்னடிமையல்லாமையுண்டோ. (உகூ)

ஒன்றாகிமூலத்துருவம்பலவாகி
யுணர்வுமுயிரும்பிறிதாகியூழி
சென்றசறுங்காலத்தந்நிலையதாகித்
திறத்துலகந்தாணுகிச்செஞ்செவேநின்ற

27. இணையடி - உபயபாதம்.

நன்றுயஞானத் தனிக்கொழுந்தேயெங்க
ணவைதீர்க்குநாயகமேநல்வினையேநோக்கி
நின்றுரைக்கத்தியயற்பேரைக்காய்தி
நிலையில்லாத்தீவினையுநீ தந்ததன்றே. (௩௦)

வல்லைவரம்பில்லாதமாயவினைதன்னுன்
மயங்கினரோடெய்திமதிமயங்கிமேனாள்
அல்லையிறைபவனியாதியெனப்பேதுற்
றலமருவேமுன்னையறப்பயனுண்டாக
எல்லைவலயங்கணின்னுழையென்றந்நா
ளெரியோனைத்தீண்டியெழுவரெனநின்ற
தொல்லைமுதன்முனிவர்சூழநற்றபோதே
தொகைநின்றவைபர்துடைத்திலேயோவெந்தாய். (௩க)

வேறு.

இன்னபலநினைந்தேத்தினனியம்பாத்
துன்னுதலிடையுளதெனநனிதுணிவான்
தன்னிகர்முனிவனைத்தரவிடையென்னுப்
பொன்னெளிர்நெடுமுடிப்புரந்தரன்போனன். (௩௨)

போனவனகநிலைப்புலமையினுணர்வான்
வானவர்தலைவனைவரவெதிர்கொண்டான்
ஆனவனடிதொழவருள்வரவெழுதான்
தானடவிடவகைதழுவினனுழைவான். (௩௩)

ஏழையுமிளவலும்வருகெனவினிதா
வாழியவவரொடும்வந்தனன்மகிழ்வால்
ஊழியின்முதன்முனியுறையுளையணுகா
ஆழியில்விழிதுயிலவனெனமகிழ்வான். (௩௪)

அவ்வயினழகனும்வைகினனறிஞன்
செவ்வியவறவுரைசெவிவயினுதவ
நவ்வியின்விழியவளொடுநனியிருளைக்
கவ்வியநிசியொருகடையுறுமளவில். (௩௫)

விலகிடுநிழலினன்வெயில்விரியயில்வாள்
இலகிடுசுடரவனிசையனதிசைதோய்

---

30. ஆசறுதல் - முடிதல்.

31. எழுவர் - சப்தருஷிகள் - அத்திரி, பிருகு: குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காஸ்யபர், ஆங்கிரஸர்.

அலகிடலரிய தனவிர்கரநிரையால்
உலகிடுநிறையிருளுறையிணையுரிவான். (௩௬)

ஆயிடையறிஞனுமவனெதிரழுவத்
தீயினைநுழைவடெதார்தெளிவினையுடையான்
நீவிடைதருகெனநிறுவினனெறியால்
காயெரிவரன்முறைகடிதினிலிடுவான். (௩௭)

வரிசிலையுழவனுமறையுழவனைநீ
புரிதொழிலெனையதுபுகலுதியெனலும்
திருமகடலைவசெய்திருவினையுறயான்
எரிபுகநினைகுவெனருளெனவிறைவன். (௩௮)

யான்வருமமைதியினிதுசெயலெவனோ
மான்வருதனியுரிமார்பினையெனலும்
மீன்வருகொடியவன்விறலடுமறவோன்
ஊன்வருமுவகையினுரைநனிபுரிவோன். (௩௯)

ஆயிரமுகமுளதவமயர்குவென்யான்
நீயிவண்வருதிகொலெனுநிலையுடையேன்
போயினவிருவினைபுகலுறுவிதியால்
மேயினையினியொருவினையிலைவிறலோய். (௪௦)

இந்திரனருளினனிறுதிசெய்பகலா
வந்தனன்மருவுதிமலரயனுலகம்
தந்தனனெனவதுசாரலெனாலோய்
அந்தமிலுயர்பதமடைதலைமுயல்வேன். (௪௧)

ஆதலினிதுபெறவருளெனவுரையாக்
காதலியவளொடுகதழெறிமூழ்கிப்
போதலைமருவினனொருநெறிபுகலா
வேதமுமறிவருமிகுபொருளுணர்வோன். (௪௨)

தேவருமுனிவருமுறுவதுதெரிவோர்
மாவருநறுவிரைமலரயன்முதலோர்
ஏவருமறிவினிலிருவினையொருவிப்
போவதுகருதுமவ்வருநெறிபுக்கான். (௪௩)

43. மா - அழகும்; ஒளியுமாம்.

அண்டமுமகிலமுமறிவருநெறியால்
உண்டவனொருபெயருணர்குநருறுபே
றெண்டவநெடிதெனிலிறுதியிலவனைக்
கண்டவருறுபொருள்கருதுவதெளிதே!. (௫௪)

ஆ திருவிருத்தம் - ககஎ.

## ௩-வது, அகத்தியப்படலம்.

அனையவணிறுதியினமைவுநோக்கலின்
இனியவரின்னலினிரங்குநெஞ்சினர்
குனிவருதிண்சிலைக்குமரர்கொம்பொடும்
புனிதனதுறையுணின்றரிதிற்போயினார். (க)

மலைகளுமரங்களுமணிக்கற்பாறையும்
அலைபுனனதிகளுமருவிச்சாரலும்
இலைசெறிபழுவமுமினியசூழலும்
நிலைமிகுதடங்களுமினிதுநீங்கினார். (௨)

பண்டயன்பயந்தருள்பாலகில்லரும்
முண்டருமோனருமுதலினோர்களாத்
தண்டகவனத்துறைதவத்துளோர்கடாம்
கண்டனரிராமனைக்களிக்குஞ்சிந்தையார். (௩)

கனைவருகடுஞ்சினத்தரக்கர்காயவோர்
வினையிறிதின்மையின்வெதும்புகின்றனர்
அனைவருகானகத்தமுதனாவிய
புனைவரவுயிர்வருமுலைவைபோல்கின்றார். (௪)

ஆய்வரும்பெருவலியரக்கர்நாமமே
வாய்வெரீஇயலமருமறுக்கநீங்கினார்
தீய்வருவனத்திடையிட்டுத்தீர்ந்ததோர்
தாய்வரநோக்கியகன்றின்றன்மையார். (௫)

கரக்கருங்கடுந்தொழிலரக்கர்காய்தலில்
பொரற்கிடமின்மையிற்புழுங்கிச்சோருநர்
அரக்கரென்கடலிடையாழ்கின்றாரொரு
மரக்கலம்பெற்றெனமறுக்கநீங்கினார். (௬)

3. பாலகில்லர் - வாலகில்லியர், பகவானதுமயிரினின்றுந்தோன்றினவர்.

தெரிஞ்சுறநோக்கினர்செய்தசெய்தவம்
அருஞ்சிறப்புதவநல்லறிவுகைதர
விரிஞ்சுறப்பற்றியபிறவிவெந்துயர்ப்
பெருஞ்சிறைவீடுபெற்றனையபெற்றியார். (எ)

வேண்டினவேண்டினர்க்களிக்குமெய்த்தவம்
பூண்டுளராயினும்பொறையினாற்றலால்
மூண்டெழுவெகுளியைமுதலினீங்கினார்
ஆண்டுறையரக்கரானலைப்புண்டாரரோ. (அ)

எழுந்தனரெய்தினரிருண்டமேகத்தின்
கொழுந்தெனநின்றவக்குரிசில்வீரனைப்
பொழிந்தெழுகாதலிற்பொருந்தினாரவன்
தொழுந்தொறுந்தொழுந்தொறுமாசிசொல்லுவார். (௯)

இனியதோர்சாலைகொண்டேகியிவ்வயின்
நனியுறையென்றவற்கமையநல்கித்தாம்
தனியிடஞ்சார்ந்தனர்தங்கிமாதவர்
அனைவருமெய்தினரல்லல்சொல்லுவான். (௧0)

ஐயமுனிவரையிறைஞ்சியேத்துவந்
ஐயனுமிருந்தனனருளென்னென்றலும்
வையகங்காவலன்மைந்தவந்தோர்
வெய்யவெங்கொடுந்தொழில்விளைவுகேளென. (௧௧)

இரக்கமென்றொருபொருளிலாதநெஞ்சினர்
அரக்கரென்றுளர்சிலரறத்தினீங்கினார்
நெருக்கவும்யாம்படர்நெறியலாநெறி
துரக்கவுமருந்தவத்துறையுணீங்கினேம். (௧௨)

வல்லியம்பலதிரிவனத்துமானென
எல்லியும்பகலுநொந்திரங்கியாற்றலெம்
சொல்லியவறநெறித்துறையுணீங்கினேம்
வில்லியன்மொய்ம்பினுய்வீடுகாண்குமோ. (௧௩)

மாதவத்தொழுகலெமறைகள்யாவையும்
ஓதலெமோதுவார்க்குதவலாற்றலெம்

13. கும் - தன்மைப்பன்மை விகுதி, எதிர்காலம் காட்டிற்று.

மூடெரிவளர்க்கிலெமுறையினீங்கினேம்
ஆதலினந்தணரேயுமாகிலேம். (கச)

இந்திரனெனிலவனரக்கரேயின
சிந்தையிற்சென்னியிற்கொள்ளுஞ்செய்கையான்
எந்தமற்றியாருளரிடுக்கணீக்குவார்
வந்தனையாஞ்செயத்தவத்தின்மாட்சியால். (கரு)

உருளுடைநேமியாலுலகையோம்பிய
பொருளுடைமன்னவன்புதல்வபோக்கிலா
இருளுடைவைகலேமிரவிதோன்றினாய்
அருளுடைவீரநின்னபயம்யாமென்றார். (கசு)

வேறு.

புகல்புகுந்திலரேற்புறத்தண்டத்தின்
அகல்வரேனுமென்னம்பொடும்வீழ்வரால்
தகவிறுன்பந்தவிருதிர்நீரெனாப்
பகலவன்குலமைந்தன்பணிக்கின்றான். (கஎ)

வேந்தன்வீயவும்யாய்வரமேவவும்
ஏந்தலெம்பிவருந்தவுமென்னகர்
மாந்தர்வன்றுயர்கூரவும்யான்வனம்
போந்ததென்னுடைப்புண்ணியத்தாலென்றான். (கஅ)

அறந்தவாநெறியந்தணர்தன்மையை
மறந்தபுல்லர்வலிதொலையேனெனின்
இறந்துபோகினுநன்றிதுவல்லது
பிறந்தியான்பெறும்பேறென்பதியாவதோ. (கக)

நிவந்தவேதியர்நீவிருந்தீயவர்
கவந்தபந்தக்களிநடங்கண்டிட
அமைந்தவில்லுமருங்கணைத்தூணியும்
சுமந்ததோளும்பொறைத்துயர்தீருமால். (உ0)

ஆவுக்காயினுமந்தணர்க்காயினும்
யாவர்க்காயினுமெளியவர்க்காயினும்
சாவப்பெற்றவரேதகைவானுறை
தேவர்க்குந்தொழுந்தேவர்களாகுவார். (உக)

சூரறுத்தவனுஞ்சுடர்நேமியும்
ஊரறுத்தவொருவனுமோம்பினும்

14. மூடெரி - காருகபத்தியம், ஆகவநீயம், தக்ஷிணாக்கினி என்பவை. அந்தணர் - ஈண்டு முனிவரை.

ஆரறத்திறைேன்றிநின்றாரவர்
வேராறுப்பெண்வெருவன்மினீரென்றான். (உஉ)

உரைத்தவாசகங்கேட்டுவந்தோங்கிட
இரைத்தகாதலரேகியவின்னலர்
திரித்தகோலினர்தேமறைபாடினர்
நிருத்தமாடினர்நின்றுவிளம்புவார். (உங)

தோன்றனீமுனியிற்புவனத்தொகை
மூன்றுபோல்வனமுப்பதுகோடிவந்
தேன்றபோதுமெதிரலவென்றலின்
சான்றுவேதந்தவம்பெருஞானமே. (உச)

அன்னதாதலினேயினவாண்டெலாம்
இன்னல்காத்திங்கினிதுறைவாயெனச்
சொன்னமாதவர்பாதந்தொழுதுயர்
மன்னர்மன்னவன்மைந்தனும்வைகினான். (உரு)

ஐந்துமைந்துமமைதியினுண்டவண்
மைந்தர்தீதிலர்வைகினர்மாதவர்
சிந்தையெண்ணியகத்தியற்சேர்கென
இந்துநன்னுதறன்றொடுமேகினார். (உசா)

விடரகங்களும்வேய்செறிகானமும்
படருஞ்சின்னெறிபைப்பையநீங்கினார்
சுடருமேனிச்சுதீக்கணனென்னுமவ்
விடரிலானுறைசோலைசென்றெய்தினார். (உஎ)

அருக்கனன்னமுனிவனையவ்வழிச்
செருக்கில்சிந்தையர்சேவடிதாழ்தலும்
இருக்கவீண்டென்றினியனகூறினான்
மருக்கொள்சோலையின்மைந்தரும்வைகினார். (உஅ)

வைகும்வைகலின்மாதவன்மைந்தன்பால்
செய்கையாவையுஞ்செய்திவட்செல்வநீ

---

23. தேமறை - இனிப்பானவேதங்கள், தெய்வத்தன்மையை யுடைய வேதம் என்றுமாம்.

24. பெருஞானம் - ஐயந்திரிபில்லாத உண்மை யுணர்வு.

29. செல்வன் - இம்மை மறுமைவீடுகளில் அடையும் பாக்கியங்களைத் தன் அடியார்க்குத்தருபவன்.

மெய்தயான்செய்தகெதத்தவமென்றனன்
ஐயனும்மவற்கன்பினன்கூறுவான். (௨௯)

சொன்னநான்முகன்றன்வழித்தோன்றினர்
முன்னையோருளுயர் தவமுற்றினர்
உன்னின்யாருளருன்னருளெய்திய
என்னின்யாருளரிற்பிறந்தாரென்றான். (௩௦)

உவமைநீங்கியதோன்றலுரைக்கெதிர்
நவமைநீங்கியநற்றவன்சொல்லுவான்
அவமிலாவிருந்தாகியென்னுலமை
தவமெலாங்கொள்கதக்கணையாவென்றான். (௩௧)

மறைவலானெதிர்வள்ளலுங்கூறுவான்
இறைவநின்னருளெத்தவத்திற்கெளி
தறைவதீண்டொன்றகத்தியற்காண்பதோர்
குறைகிடந்ததினியெனக்கூறினான். (௩௨)

நல்லதேதினிநாயதுநானுமுன்
சொல்லுவான்றுணிகின்றதுதோன்றனீ
செல்தியாண்டவற்சேருதிசேர்ந்தபின்
இல்லைநின்வயினெய்தவில்லாதவே. (௩௩)

அன்றியுநின்வரவினையாதரித்
தின்றுகாறுநின்றேமுறுமாலவற்
சென்றுசேருதிசேருதல்செவ்வியோய்
நன்றுதேவர்க்கும்யாவர்க்குநன்றெனு. (௩௪)

வழியுங்கூறிவரம்பகலாசிகள்
மொழியுமாதவன்மொய்ம்மலர்த்தாடொழாப்
பிழியுந்தேனிற்பிறங்கருவித்திரள்
பொழியுஞ்சோலைவிரைவினிற்போயினர். (௩௫)

வேறு.

ஆண்டகையரவ்வயினடைந்தமையறிந்தான்
ஈண்டுவகைவேலைதுணையேழுலகுமெய்த
மாண்டவரதன்சரண்வழங்கவெதிர்வந்தான்
நீண்டதமிழாலுலகைநேமியினளந்தான். (௩௬)

36. தமிழால் உலகை அளத்தல் - தமிழ்பாஷையை உலகமுழுவதும் பரவச்செய்தல்.

பண்டவுணர்மூழ்கினர்படார்களெனவானோர்
எண்டவவெமக்கருளெனக்குறையிரந்தார்
கண்டொருகைவாரினன்முகந்தகடலெல்லாம்
உண்டவர்கள்பின்னுமிழ்கவென்றலுமுமிழ்ந்தான். (௩௭)

தூயகடனீரடிசிலுண்டதுதுரந்தான்
ஆயவதலாலமருமெய்யுடையவன்றான்
மாயவினைவாளவுணன்மாயவவன்வன்மைக்
காயமினிதுண்டுலகினோரிடர்களைந்தான். (௩௮)

யோகமுறுபேருயிர்கடாமுலைவுறாமல்
ஏகுநெறியாதெனமிதித்தடியினேறி
மேகநெடுமாலைதவழ்விந்தையெனும்விண்டோய்
நாகமதுநாகமுறநாகமெனநின்றான். (௩௯)

மூசரவுசூடுமுதலோனுரையின்மூவா
மாசிறவவேகெனவடாதுதிசைமேனார்
நீசமுறவானிநெடுமாமலயநேரா
ஈசனிகராயுலகுசீர்பெறவிருந்தான். (௪0)

உழக்குமறைநாலினுமுயர்ந்துலகமோதும்
வழக்கினுமதிக்கவியினினும்மரபினோடி
நிழற்பொலிகணிச்சிமணிநெற்றியுமிழ்செங்கண்
தழற்புரைசுடர்க்கடவுடந்ததமிழ்தந்தான். (௪௧)

விண்ணினினிலத்தினில்விகற்பவுலகிற்பேர்
எண்ணினிலிருக்கினிலிருக்குமெனயாரும்
உண்ணினைகருத்தினையுறப்பெறுவெனுலென்
கண்ணினிலெனக்கொடுகளிப்புறுமனத்தான். (௪௨)

இரைத்தமறைநாலினொடியைந்தபிறயாவும்
நிரைத்தநெடுஞானநிமிர்கல்விநெடுநாளிட்
டரைத்துமயனுமறியாதபொருணோர்நின்
றுரைக்குதவுமாலெனுமுணர்ச்சியினுவப்பான். (௪௩)

உய்ந்தனரிமைப்பிலருயிர்த்தனர்தவத்தோர்
அந்தணரறத்திநெறிநின்றனர்களாற

---

38. துரத்தல் - வெளிப்படுத்துதல்.

43. இயைந்த பிறயாவும் என்றது - அவ்வேதங்களின் பொருளை யறியக் கருவியாகிய மீமாம்சை, புராணம், நியாயம் தருமசாத்திர முதலியவற்றை.

வெந்திறலரக்கர்விடவேர்முதலறுப்பான்
வந்தனன்மருத்துவனெனத்தனிவலிப்பான். (௪௪)

ஏனையுயிராமுதலயாவுமிடைவேவித்
தூனுகராரக்கருருமைச்சுடுசினத்தின்
ஆனவனலைக்கடிதவித்துலகளிப்பான்
வானமழைவந்ததெனமுந்துறுமனத்தான். (௪௫)

கண்டனனிராமனைவரக்கருணைகூரப்
புண்டரிகவாணயனநீர்பொழியநின்றான்
எண்டிசையுமேழுலகுமெவ்வுயிருமுய்யக்
குண்டிகையினிற்பொருவில்காவிரிகொணர்ந்தான். (௪௬)

நின்றவனைவந்தநெடியோனடிபணிந்தான்
அன்றவனுமன்பொடுதழீஇயழுதகண்ணான்
நன்றுவரவென்றுபலநல்லுரைபகர்ந்தான்
என்றுமுளதென்றமிழியம்பியிசைகொண்டான். (௪௭)

வேதியர்கள்வேதமொழிவேறுபலகூறி
காதன்மிகநின்றெறிழில்கமண்டலுவினன்னீர்
மாதவர்கள்வீசிநெடுமாமலர்கள்தூவப்
போதுமணநாறுகுளிர்சோலைகொடுபுக்கான். (௪௮)

பொருந்தவமலன்பொழிலகத்தினிதுபுக்கான்
விருந்தவனமைத்தபின்விரும்பினன்விரும்பி
இருந்தவமிழைத்தவெனதில்லிடையில்வந்தென்
அருந்தவமுடித்தனையருட்காசவென்றான். (௪௯)

என்றமுனியைத்தொழுதிராமனிமையோரும்
நின்றதவமுற்றுநெடியோரினெடியோரும்
உன்றனருள்பெற்றிலர்களுன்னருள்சுமந்தேன்
வென்றனெனனைத்துலகுமேலினிதெனென்றான். (௫0)

தண்டகவனத்துறைதியென்றுரைதரக்கொண்
டுண்டுவாவித்திசையெனப்பெரிதுவந்தேன்
எண்டகுகுணத்தினையெனக்கொடுபர்சென்னி
துண்டமதிவைத்தவனையொத்தமுனிசொல்லும். (௫௧)

44. மருத்துவன் - மருந்தின் தன்மையறிந்து கொடுப்பவன்.

51. எண்டகுகுணம் - அபஹதபாப்மத்வம், விஜரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜகத்சத்வம், அபிபாஸத்வம், ஸத்யகாமத்வம், ஸத்யசங்கல்பத்வம்.

ஈண்டுறைதியையவினியிவ்வயினிருந்தால்
வேண்டியனமாதவம்விரும்பினமுடிப்பாய்
தூண்டுசினவாணிருதர்தோன்றியுளரென்றால்
மாண்டுகெமலைங்கெதமர்மனத்துயர்துடைப்பாய். (ருஉ)

வாழுமறைவாழுமனுநீதியறம்வாழும்
தாழுமிமையோருயர்வர்தானவர்கடாழ்வார்
ஆழியுழவன்புதல்வவையமிலைமெய்யே
ஏழுலகும்வாழுமினியிங்குறைதியென்றான். (ருங)

செருக்கடையரக்கர்புரிதீமைசிதைதெய்தித்
தருக்கழிதரக்கடிதுகொல்வதுசமைந்தேன்
வருக்கமறையோயவர்வருந்திசையின்முந்துற்
றிருக்கைநலிற்கருளெனென்றனனிராமன். (ருச)

விழுமியதுசொற்றனையிவ்வில்லிதிவண்மேனாள்
முழுமுதல்வன்வைத்துளதுமூவுலகும்யானும்
வழிபடவிருப்பதிதுதன்னைவடிவாளிக்
குழுவமுவில்புட்டிலொடுகோடியெனநல்கி. (ருரு)

இப்புவனமுற்றுமொருதட்டினிடையிட்டால்
ஒப்புவரவிற்றெனவுரைப்பரியவானும்
வெப்புருவுபெற்றவரன்மேருவரைவில்லா
முப்புரமெரித்ததனிமொய்கணையுநல்கா. (ருகா)

ஓங்குமரனோங்கிமலையோங்கிமணலோங்கிப்
பூங்குலைகுலாவுகுளிர்சோலைபுடைவிம்மித்
தூங்குதிரையாறுதவழ்சூழலதோர்குன்றின்
பாங்கருளதாலுறையுள்பஞ்சவடிமஞ்ச. (ருஎ)

கன்னியிளவாழைகனியீவகதிர்வாலின்
செந்நெலுளதேனொழுகுபோதுமுளதெய்வப்
பொன்னியெனலாயபுனலாறுமுளபோதா
அன்னமுளபொன்னிவளொடன்பின்விளையாட. (ருஅ)

ஏகியினியவ்வயினிருந்துறைதியென்றான்
மேகநிறவண்ணனும்வணங்கிவிடைகொண்டான்
பாகனையசொல்லியொடுதம்பிபரிவிற்பின்
போகமுனிசிந்தைதொடரக்கடிதுபோனான். (ருகூ)

ஆ திருவிருத்தம் - கஎகூ.

---

56. அரன் - ஹரன் பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவன்.
58. போதா - பெருநாரை.

## ௪-வது, சடாயுகாண்படலம்.

நடந்தனர்காவதம்பலவுநன்னதி
கிடந்தனநின்றனகிரிகள்கேண்மையின்
தொடர்ந்தனதுவன்றினசூழல்யாவையும்
கடந்தனர்கண்டனர்கழுகின்வேந்தையே. (க)

உருக்கியசுவணமொத்துதயத்துச்சிசேர்
அருக்கனவ்வகலிடத்தலங்குறிக்கெலாம்
தெரிப்புறுசெறிசுடர்ச்சிகையினூற்சிறை
விரித்திருந்தனனெனவிளங்குவான்றனை. (உ)

முந்தொருகருமலைமுகட்டுமுன்றிலின்
சந்திரனொளியொடுதழுவச்சாத்திய
அந்தமில்கனகடலமரர்நாட்டிய
மந்தரகிரியெனவயங்குவான்றனை. (௩)

மானிறவிசும்பெழின்மறையத்தன்மணிக்
கானிறச்சேயொளிகதுவக்கண்ணகல்
நீனிறவரையினிற்பவளநீள்கொடி
போனிறம்பொலிந்தெனப்பொலிகின்றான்றனை. (௪)

தூய்மையனிருங்கலைதுணிந்தகேள்வியன்
வாய்மையன்மறுவிலன்மதியின்கூர்மையன்
ஆய்மையின்மந்திரத்தறிஞனென்மனச்
சேய்மையினேக்குறுசிறுகணான்றனை. (௫)

வீட்டிவாளவுணரைவிருந்துகூற்றினை
யூட்டிவீழ்மிச்சிறாவுண்டுநாடொறும்
தீட்டிமேலிந்திரன்சிறுகண்யானையின்
தோட்டிபோற்றேய்ந்தொளிர்துண்டத்தான்றனை. (௬)

கோளிருநாலினேடொன்றுகூடின
ஆளுறுதிகிரிபோலாரத்தான்றனை
நீளுறுமேருவினெற்றிமுற்றிய
வாளிரவியிற்பொலிமௌலியான்றனை. (௭)

சொற்பங்கமுறநிமிரிசையின்சும்மையை
அற்பங்கமுறவருமருணன்செம்மலைச்

8. அருணன் - சூரியன் சாரதி.

சிற்பங்கொள்பகலெனக்கடிதுசென்றுதீர்
கற்பங்களைனைப்பலகண்டுளான்றனே. (அ)

ஓங்குயர்நெடுவரையொன்றினின்றது
தாங்கலதிருநிலந்தாழ்ந்துதாழ்வுற
வீங்கியவலியினிலிருந்தவீரனை
ஆங்கவரணுகினாயிர்க்குஞ்சிந்தையார். (௯)

இறுதியைத்தன்வயினியற்றவெய்திறலோன்
அறிவிலியரக்கனுமல்லனுமெனின்
எறும்வலிக்கழுமுனையென்னஉன்னியச்
செறிகழல்வீரருஞ்செயிர்த்துநோக்கினர். (௧௦)

வனைகழல்வரிசிலைமதுகைமைந்தரை
அனையவன்றானுங்கண்டயிர்த்துநோக்கினன்
வினைபறுநோன்பினரல்லர்வில்லினர்
புனைசடைமுடியினர்புலவரோவெனா. (௧௧)

புரந்தரன்முதலியபுலவர்யாரையும்
நிரந்தரநோக்குவெனேமியானுமல்
வரந்தருமிறைவனுமழுவலாளனும்
கரந்திலரென்னையானென்றுங்காண்பெனால். (௧௨)

காமனென்பவனையுங்கண்ணினோக்கினேன்
தாமரைச்செங்கணித்தடக்கைவீரர்கள்
பூமருபொலன்கழற்பொடியினோடுமொப்
பாமெனவறிகிலனார்கொலாமிவர். (௧௩)

உலகொருமூன்றுந்தம்முடைமையாக்குறும்
அலகறுமிலக்கணமமைந்தமெய்யினர்
மலர்மகட்குவமையாளோடும்வந்தவிச்
சிலைவலிவீரரைத்தெரிகிலேனெனா. (௧௪)

கருமலைசெம்மலைபனையகாட்சியர்
திருமகிழ்மார்பினர்செங்கண்வீரர்தாம்
அருமைசெய்குணத்தினென்றுணைவனாழியான்
ஒருவனையிருவருமொத்துளாரரோ. (௧௫)

---

11. புலவர் - அறிவுடையவர்.

14. அலகறும் - அளவில்லாத, குற்றமற்றவென்றுமாம்.

எனப்பலநினைப்பினமனத்துளெண்ணுவான்
சினப்படைவீரர்மேற்செல்லுமன்பினான்
கனப்படைவரிசிலைக்காளையீர்கள்யார்
மனப்படவெனக்குரைவழங்குவீரென்றான். (கசு)

வினவியகாலையின்மெய்ம்மையல்லது
புனைமலர்த்தாரவர்புகல்கிலாமையால்
கனைகடனெடுநிலங்காவலாழியான்
வனைகழற்றயரதன்மைந்தர்யாமென்றார். (கஎ)

உரைத்தலும்பொங்கியவுவகைவேலையன்
தரைத்தலையிழிந்தவர்த்தழுவுங்காதலன்
விரைத்தடந்தாரினிர்வேந்தர்வேந்தன்றன்
வரைத்தடந்தோளிணைவலியவோவென்றான். (கஅ)

மறக்கமுற்றதனவாய்மைகாத்தவன்
துறக்கமுற்றனனமுன்னஞ்சொல்லலும்
இறக்கமுற்றனனவேக்கமெய்தினான்
உறக்கமுற்றனனவுணர்வுநீங்கினான். (கக)

தழுவினரெடுத்தனர்தடக்கையான்முகம்
கழுவினரிருவருங்கண்ணினீரினால்
வழுவினவின்னுயிர்வந்தமன்னனும்
அழிவுறுநெஞ்சினனரற்றினனரோ. (உ0)

வேறு.

பரவலருங்கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும்பொறைக்கு நெடும்பண்புதோற்ற, கரவலருங்கற்பகமுமுடிபதியுங்கடலிடமுங்க ளித்துவாழப், புறவலர்தம்புரவலனேபொய்ப்பகையேமெய்க்கனி யேபுகழின்வாழ்வே, இரவலருநல்லறமும்யானுமினியென்படநீத் தேகினாயே. (உக)

அலங்காரமெனவுலகுக்கமுதளிக்குந்தனிக்குடையாயாழிசூழ்ந்த
நிலங்காவலதுகிடக்கநிலையாதநிலையுடையேனையநெஞ்சின்
நலங்காணநடந்தனையோநாயகனேதீவினையேனண்பினின்றும்
விலங்கானோதலினால்விலங்கினேனின்னுமுயிர்விட்டிலேனால். ()

16. நினைப்பின நினைத்தலையுடையவை. நினைப்பு இனம் எனப்பிரித்து நினைப்புக்களின் கூட்டமென்றுமாம்.

20. தடக்கை - முழந்தாளளவும் நீண்டகை.

22. அமுதளித்தல் - ஈண்டு அருள்வைத்துக்காத்தல்

தயிருடைக்குமத்தென்னவுல்கைநலிசம்பரனைத்தடிந்தவந்நாள் அயிர்கிடக்குங்கடல்வலயத்தபலறியநீயுடனுவியென்று [சொல் செயிர்கிடத்தல் செய்யாததிருமனத்தாய் செப்பிணுப் திறம்பாநின் உயிர்கிடக்கவுடலைவிசும்பேற்றினுருணர்விறந்தகூற்றினரே. (௨௩)

எழுவதோரிசைபெருக விப்பொழுதேயொப்பரிய வெரியுந்தீயின், விழுவதெதிற்கமடமெல்லியலார் தம்மைப்போனிலத்தின்மேல் வீழ்ந், தழுவதே பாவென்னு வறிவுற்றுனெனவெழுந்தாங் கவரை நோக்கி, முழுவதேழுலகுடையபமைந்தன்மீர்கேண்மினெனமுறை யிற்சொல்வான். (௨௪)

தக்கனனிவயிற்றுதித்தாரைம்பதின்மர் தடங்கொங்கைத்தை யலாருள், தொக்கபதின்மூவரையக்காசிபனும்புணர்ந்தனனத்தோ கைமாருள், மிக்கவதிதிப்பெயராண்முப்பத்துமுக்கோடிவிண்ணோ ரீந்தாள், மைக்கருங்கட்டிதியென்பாளதினிரட்டியசுரர்தமைவயிறு வாய்த்தாள். (௨௫)

தானவரேமுதலோரைத்தனுப்பயந்தாண்மதியென்பாண்மனி தர்தம்மூ, டானவருணங்களவயவத்தடைவேபயந்தனளால் சுரபி யென்பாள், தேனுவுடன்கந்தருவமற்றுள்ளபிறபயந்தாடெரிக்குங் காலை, மானமுடைக்குரோதவசைகழுதைமரையொட்டைபிறவயி றுவாய்த்தாள். (௨௬)

மழைபுரைபூங்குழல்விநதை வானிடிமினருணனுடன்வயிநதே யன், தழைபுரையுஞ்சிறைக்கூகைபாறுமுதற்பெரும்பறவைதம்மை யீன்றாள், இழைபுரையுந்தாம்பிரை யூர்க்குருவிசிவல்காடைபலபிறவு மீன்றாள், கழையெனுமக்கொடிபயந்தாள்கொடியுடனேசெடிமுதலா க்கண்டவெல்லாம். (௨௭)

வெருட்டிபெழுங்கணபணப்பைவியாளமெலாங்கத்துருவாமின் னுமீன்றாள், மருட்டிகழுமொருதலையபுயங்கமெலாஞ்சுதையென்னு மாதுதந்தாள், அருட்டையெனும்வல்லிதந்தாளோந்தியுடும்பணில் கண்முதலானவெல்லாம், தெருட்டிமாதினையீந்தாள்செலசரமாகி யபலவுந்தெரிக்குங்காலை. (௨௮)

---

23. அயிர் - நுண்மணல்.

24. மெல்லியலார் - மெல்லிய இயற்கையையுடையவர். அன்பர் இறந்த காலத்து மண்ணில் விழுந்து புரண்டு அழுதல் பெண்களுக்கு இயற்கை; 'புனையிழை மகளிர் போலப்புலம்பல்' என்றார் சிந்தாமணியாரும்.

27. வயிநதேயன் - விநதையின் மகன்.

அதிதிதிதிதனுவருட்டைசுதைதகைழயேசுரபியணிவிநதையர்ன்ற, மதியிளைகத்துருவுடனேகுரோதவசைதாம்பிரையாமடநலார்கள், விதிமுறையேயிவையனைத்தும்பயந்தனர்கள்விநதைசுதனருணன்மென்றோள், புதுமதிசேர்நுதலரம்பைதனைப்புணரவுதித்தனம்யாம்புவனிமீதே. (௨௯)

அருணன்றன்புதல்வனியானவன்படருமுலகெல்லாம்படர்வேனாழி, இருண்மொய்ம்புகெடத்துரந்ததயரதற்கின்னுயிர்த்துணைவனிமையாரோடும், வருணங்கள்வகுத்திட்டகாலத்தேவந்துதித்தேன்கழுகின்மன்னன், தருணங்கொள்பேரொளியீர்சம்பாதிபின்வருசடாயுவென்றான். (௩௦)

ஆண்டவனீதுரைசெய்யவஞ்சலித்தமலர்க்கையாரன்பினோடும், மூண்டபெருந்துன்பத்தான் முறைமுறையினிறைமலர்க்கண்மொய்த்தநீரார், பூண்டபெரும்புகழ்நிறுவித்தம்பொருட்டான்மேலுலகம்புக்கதாதை, மீண்டனன்வந்தானவனைக்கண்டனரேயொத்தனரவ்விலங்கற்றோளார். (௩௧)

மருவினியகுணத்தவரையிருசிறகாலுறத்தழுவிமக்காணீரே
உரியகடன்வினையேற்குமுதவுவீருடலிரண்டுக்குயிரொன்றானான்
பிரியவுந்தான்பிரியாதேயினிதிருக்குமுடற்பொறையாம்பிழைபாரா
தெரியதனினின்றேபுக்கிறவேனேலித்துயரமறவேனென்றான். ()

வேறு.

என்றுரைத்தவெருவையரசனைத்
துன்றுதாரவர்நோக்கித்தொழுதுகண்
ணொன்றுமுத்தமுறையுறையாயுக
நின்றுமற்றின்னநீர்மைநிகழ்த்தினார். (௩௩)

உய்விடத்துதவற்குரியானுந்தன்
மெய்விடக்கருதாதுவிண்ணேறினான்
இவ்விடத்தினிலெம்பெருமானனைக்
கைவிடிற்பினையார்களைக்கண்ணுளார். (௩௪)

தாயினீங்கருந்தந்தையிற்றண்ணகர்
வாயினீங்கிவனம்புகுந்தெய்திய
நோயினீங்கினெநுன்னினென்னெங்களை
நீயுநீங்குதியோநெறிநீங்கலாய். (௩௫)

---

31. அஞ்சலித்தல் - கூப்புதல்.

என்றசொல்லரிரந்தழிநெஞ்சினர்
நின்றவீரரைநோக்கிநினைந்தவன்
அன்றதென்னினயோத்தியினையன்னீர்
சென்றபின்னவற்சேர்குவென்யானென்றான். (௩௬)

வேந்தன்விண்ணடைந்தானெனின்வீரர்நீர்
ஏந்துஞாலமினிதளியாதிவட்
போந்ததென்னைபுகுந்தவென்புந்திபோய்க்
காந்துகின்றதுகட்டுரையீரென்றான். (௩௭)

தேவர்தானவர்திண்டிறனுகர்வே
றேவராகவிடரிழைத்தாரெனின்
யூவராவுபொலங்கறைவேலினீர்
சாவராக்கித்தருவெனரசென்றான். (௩௮)

தாதைகூறலுந்தம்பியைநோக்கினன்
சீதைகேள்வனவனுந்தன்சிற்றவை
மாதரால்வந்தசெய்கைவரம்பிலா
ஓதவேலையொழிவின்றுணர்த்தினன். (௩௯)

உந்தையுண்மையனுக்கியுன்சிற்றவை
தந்தசொல்லைத்தலைக்கொண்டுதாரணி
வந்ததம்பிக்குதவியவள்ளலே
எந்தைவல்லதியாவர்வல்லாரெனு. (௪௦)

அல்லித்தாமரைக்கண்ணனையன்புறப்
புல்லிமோந்துபொழிந்தகண்ணீரினன்
வல்லமைந்தவம்மன்னையுமென்னையும்
எல்லையில்புகழேப்துவித்தாயென்றான். (௪௧)

பின்னரும்மப்பெரியவன்பெய்வளை
அன்னமன்னவணங்கினைநோக்கினன்
மன்னர்மன்னவன்மைந்தவில்வாணுதல்
இன்னதென்னவியம்புதியாலென்றான். (௪௨)

அல்லிறுத்தனதாடகையாதியா
வில்லுறுத்ததிடையெனமேலைநாள்

---

36. அயோத்தி - சண்டையிடுதற்குக் கூடாதென்பது பொருள்.
39. சிற்றவை - சிறு - அவ்வை; ஔவை - தாய்.
43. தாடகை - மலைகளில் திரிபவள்.

புல்லிறுத்ததியாவும்புகன்றுதன்
சொல்லிறுத்தனன்றோன்றல்பின்றோன்றினான். (சங)

கேட்டுவந்தனன்கேழ்கிளர்மௌலியான்
தோட்டலங்கலினீர்துறந்தீர்வள
நாட்டினீவிருநன்னுதறானுமிக்
காட்டில்வைகுதிர்காக்குவென்யானென்றான். (சச)

இறைவவெண்ணிவகத்தியனீந்துள
தறையுநன்மணியாற்றினகன்கரைத்
துறையுளுண்டொருசூழலச்சூழல்புக்
குறைதுமென்றனனுள்ளத்துறைகுவான். (சரு)

பெரிதுநன்றப்பெருந்துறைவைகிநீர்
புரிதிர்மாதவம்போதுமின்யானது
தெரிவுறத்துவெனென்றவர்திண்சிறை
விரியுநீழலிற்செல்லவிண்சென்றனன். (சசு)

ஆயசூழலறியவுணர்த்தியத்
தூயசிந்தையதோமில்குணத்தினான்
போயபின்னைப்பொருசிலைவீரரும்
ஏயசோலையினிதுசென்றெய்தினார். (சஎ)

வார்ப்பொற்கொங்கைமருங்கியைமக்களை
ஏர்ப்பச்சிந்தனையிட்டவரக்கர்தம்
சீர்ப்பைச்சிக்கறுத்தேறினன்சேக்கையில்
பார்ப்பைப்பார்க்கும்பறவையிற்பார்க்கின்றான். (சஅ)

ஆ திருவிருத்தம் உஉச.

## ரு-வது, சூர்ப்பணகைப்படலம்.

புவியினுக்கணியாயான்றபொருடந்துபுலத்திற்றாகி
அவியகத்துறைகடாங்கியைந்திணைநெறியளாவிச்
சவியுறத்தெளிந்துதண்ணென்றொழுக்கமுந்தழுவிச்சான்றோர்
கவியெனக்கிடந்தகோதாவிரியினைவீரர்கண்டார். (க)

வண்டுறைகமலச்செவ்விவாண்முகம்பொலியவாசம்
உண்டுறைகுவளையொன்கணொருங்குறநோக்கியூழின்

48. பார்ப்பு - இளமைப்பெயர். 'பார்ப்பும் பிள்ளையும் பரப்பவற்றிலமை' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார்.

தெண்டிரைக்கரத்தின்வாரித்திருமலர்தூவிச்செல்வர்க்
கண்டடிபணிவதென்னப்பொலிந்ததுகடவுள்யாறு. (௨)

எழுவுறுகாதலாலிங்கிரைத்திரைத்தேங்கியேங்கிப்
பழுவநாட்குவளைச்செவ்விக்கண்பனிபரந்துசோர
வழுவிலாவாய்மைமைந்தர்வனத்துறைவருத்தநோக்கி
அழுவதுமொத்ததாலவ்வலங்குநீராறுமன்னோ. (௩)

நாளங்கொணளினப்பள்ளிநயனங்களனையநேமி
வாளங்களுறவைகண்டுமங்கைதன்கொங்கைநோக்கும்
நீளங்கொள்சிலையோன்மற்றைநேரிழைநெடியநம்பி
தோளின்கண்மனம்வைத்தன்னசுடர்மணித்தடங்கள்கண்டாள். (௪)

ஓதிமமொதுங்கக்கண்டவுத்தமனுழையளாகும்
சீதைதன்னடையைநோக்கிச்சிறியதோர்முறுவல்செய்தான்
மாதவடானுமாண்டுவந்துநீருண்டுமீளும்
போதகநடப்பநோக்கிப்புதியதோர்முறுவல்பூத்தாள். (௫)

வில்லியறடக்கைவீரன்வீங்குநீராற்றின்பாங்கர்
வல்லிகளுடங்கக்கண்டான்மங்கைதன்மருங்குனோக்க
எல்லியங்குவளைக்கானத்திடையிடைமலர்ந்துநின்ற
அல்லியங்கமலங்கண்டாளண்ணறன்வடிவங்கண்டாள். (௬)

அனையதோர்தன்மையாலவ்வருவிநீராற்றின்பாங்கர்ப்
பனிதருபடிவப்பஞ்சவடியெனும்பருவச்சோலைத்
தனியிடமதனைநண்ணித்தம்பியாற்சமைக்கப்பட்ட
இனியபூஞ்சாலையெய்தியிருந்தனனிராமனிப்பால். (௭)

வேறு.

நீலமாமணிநிறநிருதர்வேந்தனை
மூலநாசம்பெறமுடிக்குமொய்ம்பினாள்
மேலைநாளுயிரொடும்பிறந்துதான்விளை
காலமோர்ந்துடனுறைகடியநோயனாள். (௮)

செம்பராகம்படச்செறிந்தகூந்தலாள்
வெம்பராகுத்தனைவிளைந்தமெய்யினாள்
உம்பரானவர்க்குமொண்டவர்க்குமோதநீர்
இம்பரானவர்க்குமோரிறுதியீட்டுவாள். (௯)

7. பஞ்சவடி - ஓர்தலம்.

வெய்யதோர்காரணமுண்மைமெயினள்
வைகலுந்தமியளவ்வனத்துவைகுவாள்
நொய்தினிவ்வுலகெலாநுழையுநோன்மையள்
எய்தினளிராகவனிருந்தசூழல்வாய். (௧௦)

எண்டகுமிமையவரரக்கரெங்கண்மேல்
விண்டனர்விலக்குதியென்னமேலைநாள்
அண்டசத்தருந்துயிறுறந்தவையனைக்
கண்டனடன்கிளைக்கிறுதிகாட்டுவாள். (௧௧)

சிந்தையினுறைபவற்குருவந்தீர்ந்ததால்
இந்திரற்காயிரநயனமீசற்கு
முந்தியமலர்க்கணோர்மூன்றுநான்குநாள்
உந்தியினுலகளித்தாற்கென்றுன்னுவாள். (௧௨)

கற்றையஞ்சடையவன்கண்ணிற்காய்தலால்
இற்றவனன்றுதொட்டின்றுகாறுந்தான்
நற்றவமியற்றியவ்வநங்கனல்லுருப்
பெற்றனனாமெனப்பெயர்த்துமெண்ணுவாள். (௧௩)

தரங்களினமைந்துதாழ்ந்தமுகின்சார்பின்
மரங்களுநிகர்க்கிலமலையும்புல்லிய
உரங்களினுயர்திசையோம்புமானையின்
கரங்களையிவன்புணிக்கரமென்றுன்னுவாள். (௧௪)

வின்மலைவல்லவன்வீரத்தோளொடிர்
கன்மலைநிகர்க்கிலகனிந்தநீலத்தின்
நன்மலையல்லதுநாமமேருவும்
பொன்மலையாதலாற்பொருவலாதென்பாள். (௧௫)

தாளுயர்தாமரைத்தளங்கடம்மொடும்
கேளுயர்நாட்டத்துக்கிரியின்றேற்றத்தான்
தோளொடுதோள்செலத்தொடர்ந்துநோக்குறின்
நீளியவல்லகணெடியமாரென்றாள். (௧௬)

அதிகநின்றொளிருமிவ்வழகனுண்முகம்
பொதியவிழ்தாமரைப்பூவையொப்பதோ

12. சிந்தையி லுறைபவற் குருவந்தீர்ந்தது - மனத்திலுறையும் மன்மதனுக்கு உருவம்போயிற்று.

கதிர்மதியாமெனிற்கலைகடேயுமம்
மதியெனின்மதிக்குமோர்மறுவுண்டென்பரால். (கஎ)

எவன்செயவினியவிவ்வழகையெய்தினோன்
அவன்செயத்திருவுடம்பலசநோற்கின்றான்
நவன்செயத்தகையவிந்நளினநாட்டத்தான்
தவன்செயத்தவன்செய்ததவனென்னென்கின்றாள். (கஅ)

உடுத்தநீராடையளுருவச்செவ்வியள்
பிடித்தருநடையினள்பெண்மைநன்றிவன்
அடித்தலந்தீண்டலினவனிக்கம்மயிர்
பொடித்தனநிகர்க்குமாற்புல்லென்றுன்னுவாள். (ககூ)

வாணிலைமருங்குலான்வயங்குசோதியைக்
காணிலனேகொலோகதிரினாயகன்
சேணெலாம்புல்லொளிசெலுத்திச்சிந்தையின்
நாணலன்மீமிசைநடக்கின்றானென்றாள். (௨௦)

குப்புறற்கரியமாக்குன்றைவென்றுயர்
இப்பெருந்தோளவனிதழுக்கேற்பதோர்
ஒப்பெனவுலகமேலுரைக்கினுள்ளமே
துப்பெனிற்றுப்புடையானைச்சொல்லுகேன். (௨௧)

நற்கலைமதியுறவயங்குநம்பிதன்
எற்கலைதிருவரையெய்தியேமுற
வற்கலைநோற்றனமாசிலாமணிப்
பொற்கலைநோற்றிலபோலுமாலென்றாள். (௨௨)

தொடையமைநெடுமழைத்தொங்கலாமெனக்
கடைகுழன்றிடைநெரிகரியகுஞ்சியைச்
சடையெனப்புனைந்திலனென்னிற்றையலார்
உடையுயிர்யாவையுமுடையுமாலென்றாள். (௨௩)

நாறியநகையணிநல்லபுல்லிமுல்
ஏறியசெவ்வியினியற்றுமோவெறு
மாறகன்முழுமணிக்கசின்மாட்சிதான்
வேறொருமணியினால்விளங்குமோவென்பாள். (௨௪)

கரந்திலனிலக்கணமெடுத்துக்காட்டிய
பரந்தருநான்முகன்பழிப்புற்றானரோ

---

18. அலச - வாட.

இரந்திவணிணையடிப்பொடியுமேற்கிலாப்
புரந்தரனுலகெலாம்புரக்கின்றானென்றாள். (உ௫)

நீத்தரும்பரவையுங்குறுகநெஞ்சிடைக்
கோத்தவன்புணர்விடைக்குளிப்பமீக்கொள
ஏத்தவம்புரியவொன்றீகலான்பொருள்
காத்தவன்புகழெனத்தேயுங்கற்பினாள். (உ௬)

வான்றனில்வரைந்ததோர்மாதரோவியம்
போன்றனள்புலர்ந்தனள்புழுங்குநெஞ்சினள்
தோன்றலசுடர்மணித்தோளினாட்டங்கள்
ஊன்றினள்பறிக்கவோராற்றம்பெற்றிலள். (உ௭)

நின்றனளிருந்தவனெடியமார்பகம்
ஒன்றுவெனன்றெனியமுதமுண்கினும்
பொன்றுவென்போக்கினியரிதுபோன்மெனாச்
சென்றெதிர்நிற்பதோர்செய்கைதேடுவாள். (உ௮)

எயிறுடையரக்கியெவ்வுயிருமிட்டதோர்
வயிறுடையாளெனமறுக்குமாதலால்
குயிறொடர்குதலையோர்கொவ்வைச்செவ்விவாய்
மயிறொடரியலியாய்மருவனன்றெனா. (உ௯)

பங்கயச்செல்வியைமனத்துப்பாவியா
அங்கையினாயமந்திரத்தையாய்ந்தனள்
திங்களிற்சிறந்தொளிர்முகத்தள்செவ்வியள்
பொங்கொலிவிசும்பினிற்பொலியத்தோன்றினாள். (௩0)

வேறு.

பஞ்சியொளிர்விஞ்சுகுளிர்பல்லவமனுங்கச்
செஞ்செவியகஞ்சநிமிர்சீறடியளாகி
அஞ்சொலிளமஞ்ஞையெனவன்னமெனமின்னும்
வஞ்சியெனநஞ்சமெனவஞ்சமகள்வந்தாள். (௩௧)

பொன்னொழுகுபூவிலுறைபூவையெழில்பூவைப்
பின்னெழில்கொள்வாளிணைபிறழ்ந்தொளிர்முகத்தாள்
கன்னியெழில்கொண்டதுகலைத்தடமணித்தேர்
மின்னிழிவதன்மையிதுவிண்ணிழிவதென்ன. (௩௨)

---

26. ஏத்தவம் - மிகுதியானதவம்.
31. குளிர்பல்லவமனுங் - குளிர்ந்ததளிர்களும் ஒப்பாகாமையால்வருந்த.
32. இணைவாள் ஈண்டுகண்கள்.

கானினுயர்கற்பகமுயிர்த்ததகிர்வல்லி
மேனிநனிபெற்றுவிளைகாமநெறிவாசத்
தேனின்மொழியுற்றினியசெவ்விநனிபெற்றோர்
மானின்விழிபெற்றுமயில்வந்ததெனவந்தாள். (௩௩)

நூபுரமுமேகலையுநூலுமறலோதிப்
பூமுரலும்வண்டுமிவைபூசலிடுமோசை
தாமுரைசெய்கின்றதொருதையல்வருமென்னாக்
கோமகனுமத்திசைகுறித்தனன்விழித்தான். (௩௪)

விண்ணருளவந்ததொருமெல்லமுதமென்ன
வண்ணமுலைகொண்டிடைவணங்கவருபோழ்தத்
தெண்ணருளியேழைமைதுடைத்தெழுமெய்ஞ்ஞானக்
கண்ணருள்செய்கண்ணனிருகண்ணினெதிர்கண்டான். (௩௫)

பேருழையநாகருலகிற்பிறிதின்வானின்
பாருழையினில்லதொருமெல்லுருவுபாரா
ஆருழையடங்குமழகிற்கவதியுண்டோ
நேரிழையர்யாவரிவர்நேரெனநினைந்தான். (௩௬)

அவ்வயினவாசைதனகத்துடையவன்னாள்
செவ்விமுகமுன்னியடிசெங்கையினிறைஞ்சா
வெவ்வியநெடுங்கணயில்வீசியயல்பாரா
நவ்வியினொதுங்கியிறைநாணியயனின்றாள். (௩௭)

தீதில்வரவாகதிருநின்வரவுசேயோய்
போதவுளதெம்முழையோர்புண்ணியமதன்றோ
ஏதுபதியேதுபெயர்யாவருறவென்றான்
வேதமுதல்பேதையவடன்னிலைவிரிப்பாள். (௩௮)

வேறு.

பூவிலோன்புதல்வன்மைந்தன்புதல்விமுப்புரங்கள்செற்ற
சேவலோன்றுணைவனானசெங்கையோன்றங்கைதிக்கின்
மாவெலாந்தொலைத்துவெள்ளிமலையெடுத்துலகமூன்றும்
காவலோன்பின்னைகாமவல்லியாங்கன்னியென்றாள். (௩௯)

அவ்வுரைகேட்டவீரனையுறுமனத்தான்செய்கை
செவ்விதன்றறிதலாகுஞ்சிறிதினென்றுணரச்செங்கண்

38. வேதமுதல் - வேதங்களால் துதிக்கப்படுமாதிபகவன்.

வெவ்வுருவமைந்தோன்றங்கையென்றதுமெய்ம்மையாயின்
இவ்வுருவினையந்ததன்மையியம்புதியியல்பினென்றான். (சo)

தூயவன்பணியாமுன்னஞ்சொல்லுவாள்சோர்விலாளம்
மாயவல்லரக்கரோடுவாழ்வினைமதிக்கலாதேன்
ஆய்வுருமனத்தேனுகியறந்தலைநிற்பதானேன்
தீய்வினைதீயநோற்றுத்தேவரிற்பெற்றதென்றாள். (சக)

இமையவர்தலைவனேயுமெளிமையினேவல்செய்யும்
அமைதியினுலகமூன்றுமாள்பவன்றங்கையாயின்
சுமையுறுசெல்வத்தோடுந்தோன்றலைதுணையுமின்றித்
தமியைநீவருதற்கொத்ததன்மையென்றையலென்றான். (சஉ)

வீரனஃதுரைத்தலோடுமெய்யிலாள்விமலயானச்
சீரியரல்லார்மாட்டுச்சேர்கிலென்றேவர்பாலும்
ஆரியமுனிவர்பாலுமடைந்தனெனிறைவவீண்டோர்
காரியமுண்மைநின்னைக்காணியவந்தெனென்றாள். (சங)

அன்னவளுரைத்தலோடுமையனுமறிதற்கொவ்வா
நன்னுதன்மகளிர்சிந்தைநன்னெறிப்பாலவல்ல
பின்னிதுதெரியுமென்னுப்பெய்வளைத்தோளியென்பால்
என்னைகாரியத்தைசொல்லஃதியையுமேலிழைப்பலென்றான். (சச)

தாமுறுகாமத்தன்மைதாங்களேயுரைப்பதென்ப
தாமெனலாவதன்றாலருங்குலமகளிர்க்கம்மா
ஏமுறுமுயிர்க்குநோவேனென்செய்கேன்யாருமில்லேன்
காமனென்றொருவன்செய்யும்வன்மையைக்காத்தியென்றாள். (சரு)

சேணுறநீண்டுநீண்டுசெவ்வரிசிதரிவெவ்வே
றேணுறமிளர்ந்துநாளுவிதப்புரண்டிருண்டவாட்கட்
பூணியல்கொங்கையன்னளம்மொழிபுகறலோடும்
நாணிலளையனெய்யனல்லளுமல்லளென்றான். (சசு)

பேசலனிருந்தவள்ளலுள்ளத்தின்பெற்றியோராள்
பூசல்வண்டரற்றுங்கூந்தற்பொய்மகள்புகன்றவென்கண்
ஆசைகண்டருளிற்றுண்டோவன்றெனலுண்டோவென்னும்
ஊசலாலுலாவுகின்றாண்மீட்டுமோருரையைச்சொல்வாள். (சஎ)

எழுதருமேனியாயீண்டெய்தியதறிந்திலாதேன்
முழுதுணர்முனிவரேவல்செய்தொழின்முறையின்முற்றிப்

47. பெற்றி - தன்மை.

பழுதருபெண்மையோடுமிளமையும்பயனின்றேகப்
பொழுதொடுநாளும்வாளாகழிந்தனபோலுமென்றாள். (௪அ)

நிந்தனையரக்கிநீதிநிலையிலாள்வினைமற்றெண்ணி
வந்தனளாகுமென்றேவள்ளலுமனத்துட்கொண்டான்
சுந்தரீமரபிற்கொத்ததொன்மையின்றுணிவிற்றன்றால்
அந்தணர்பாவைநீயானரசரில்வந்தேனென்றான். (௪௯)

ஆரணமறையோனெந்தையருந்ததிக்கற்பினெம்மோய்
தாரணிபுரந்தசாலகடங்கர்தமரபின்றையல்
போரணிபொலங்கொள்வேலாய்பொருந்தலையிகழ்தற்கொத்த
காரணமிதுவேயாயினென்னுயிர்காண்பேனென்றாள். (௫௦)

அருத்தியளனையகூறவகத்துறுநகையின்வெள்ளைக்
குருத்தெழுகின்றநீலக்கொண்டலுண்டாட்டங்கொண்டான்
வருத்தநீங்கரக்கர்தம்மின்மானுடர்மணத்தனங்கை
பொருத்தமன்றென்றுசாலப்புலமையோர்புகல்வரென்றான். (௫௧)

பராவருஞ்சிரத்தையாரும்பத்தியின்பயத்தையோரா
திராவணன்றங்கையென்றதேழமைப்பாலதென்னா
அராவணையமலனன்னாயறிவித்தேன்முன்னங்கேதவர்ப்
பராவினினீங்கினேனப்பழிபடுபிறவியென்றாள். (௫௨)

ஒருவனேயுலகமூன்றிற்கோங்கொருதலைவனாங்கில்
ஒருவனேகுபேரனின்னோடுடன்பிறந்தவர்களன்னார்
தருவரேற்கோடுமன்றேற்றமியையேவறிடத்துச்சார
வெருவுவெனங்கையென்றான்வேதத்தினறிவைவென்றான். (௫௩)

காந்தர்ப்பமென்பதுண்டாற்காதலிற்கலந்தசிந்தை
மாந்தர்க்குமடந்தைமார்க்குமறைகளேவகுத்தகூட்டம்
ஏந்தற்பொற்றோளினாயிஃதியைந்தபினெனக்குமூத்த
வேந்தர்க்கும்விருப்பிற்றாகும்வேறுமோருரையுண்டென்றாள். (௫௪)

முனிவரோடுடையர்முன்னேமுதிர்பகைமுறைமைநோக்கார்
தனியைநீயாதலான்மற்றவரொடுந்தழுவற்கொத்த
வினையமீதல்லதில்லைவிண்ணாநின்னாட்சியாக்கி
இனியராயன்னர்வந்துன்னேவலினிற்பரென்றாள். (௫௫)

நிருதர்தமருளும்பெற்றேனின்னலம்பெற்றேனின்னோ
டொருவருஞ்செல்வத்தியாண்டுமுறையவும்பெற்றேனென்றோ

51. புலமையோர் - கணிதவல்லோர்.

திருநகர்தீர்ந்தபின்னர்ச்செய்தவம்பயந்ததென்ன
வரிசிலைவடித்ததோளான்வாளெயிறிலங்கநக்கான். (௫௬)

விண்ணிடையிம்பர்நாகர்விரிஞ்சனேமுதலோர்க்கெல்லாம்
கண்ணிடையொளியின்பாங்கர்க்கடிகமழ்சாலைநின்றும்
பெண்ணிடையரசிதேவர்பெற்றநல்வரத்தாற்பின்னர்
மண்ணிடைமணியின்வந்தவஞ்சியேபோல்வாள்வந்தாள். (௫௭)

ஊன்சுடவுணங்குபேழ்வாயுணர்விலியுருவநாறும்
வான்சுடர்ச்சோதிவெள்ளம்வந்திடைவயங்கநோக்கி
மீன்சுடர்விண்ணுமண்ணும்விரிந்தபோரரக்கரென்னும்
கான்சுடமுளைத்தகற்பின்கனலியைக்கண்ணிற்கண்டாள். (௫௮)

மருவொன்றுகூந்தலாளைவனத்திவன்கொண்டுவாரான்
உருவிங்கிதுடையராகமற்றையோர்யாருமில்லை
அரவிந்தமலருணீங்கியடியிணைபடியிற்றோயத்
திருவிங்குவருவாள்கொல்லோவென்றகந்திகைத்துநின்றாள். (௫௯)

பண்புறநெடிதுநோக்கிப்படைக்குநர்சிறுமையல்லால்
எண்பிறங்கழகிற்கெல்லையில்லையாமென்றுநின்றாள்
கண்பிறபொருளிற்செல்லாகருத்தெனின்அஃதேகண்ட
பெண்பிறந்தேனுக்கென்றாலென்படும்பிறருக்கென்றாள். (௬௦)

பொருதிறத்தானைநோக்கிப்பூவையைநோக்கிநின்றாள்
கருதமற்றினிவேறில்லைகாலத்துக்கடவுடானே
ஒருதிறத்துணரநோக்கியுருவினுக்குலகமூன்றின்
இருதிறத்தார்க்குஞ்செய்தவரம்பிவரிருவரென்றாள். (௬௧)

பொன்னைப்போற்பொருவின்மேனிப்பூவைப்பூவண்ணத்தானிம்
மின்னைப்போலிடையாளோடுமேவுமெய்யுடையனல்லன்
தன்னைப்போற்றகையோரில்லாத்தளிரைப்போலடியினாளும்
என்னைப்போலிடையேவந்தாளிகழ்விப்பேனிவளையென்ன. (௬௨)

வருமிவண்மாயம்வல்லவஞ்சனையரக்கிநெஞ்சம்
தெரிவிலடேறுந்தன்மைசீரியோய்செயலிற்றன்றாள்
உருவிதுமெய்யதன்றாலூனுகர்வாழ்க்கையாளை
வெருவினெனைத்திடாமல்விலக்குதிவீரவென்றாள். (௬௩)

57. கண்ணிடை யொளியின் பாங்கர் - கண்ணிலுள்ள சோதியாகிய ஸ்ரீராமபிரான் பக்கலில்.

ஒள்ளிது னுணர்வுமின்னேயுன்னையாரொளிக்குமீட்டார்
தெள்ளியநலத்திறு லுன்சிந்தனேதெரிந்ததம்மா
கள்ளவல்லரக்கிபோலாமிவளெனீகாண்டியென்று
வெள்ளியமுறுவன்முத்தம்வெளிப்படவீரனக்கான். (சுச)

ஆயிடையமுதின்வந்தவருந்ததிக்கற்பினஞ்சொல்
வேயிடைதோளினாளும்வீரனைச்சேரும்வேலை
நீயிடைவந்ததென்னைநிருதர்தம்பாவையென்னுக்
காயெரியனையகள்ளவுள்ளத்தாள்கதித்தலோடும். (சுரு)

அஞ்சினளஞ்சியன்னமின்னிடையலசவோடிப்
பஞ்சின்மெல்லடிகளுேவப்பதைத்தனள்பருவக்கால
மஞ்சிடைவயங்கித்தோன்றும்பவளத்தின்வல்லியென்னக்
குஞ்சரமனையவீரன்குவவுத்தோடழுவிக்கொண்டாள். (சுசு)

வளையெயிற்றவர்களோடுவரும்விளையாட்டென்றுலும்
விளைவனதீமையேயாமென்பதையுணர்ந்துவீரன்
உளைவனவியற்றலொல்லையுன்னிலையுணருமாயின்
இளையவன்முனியுநங்கையேகுதிவிரைவினென்றுன். (சுஎ)

பொற்புடையரக்கிபூவிற்புனலினிற்பொருப்பில்வாழும்
அற்புடையுள்ளத்தாருமநங்கனுமமரர்மற்றும்
எற்பெறத்தவஞ்செய்கின்றுரென்னைநீயிகழ்வதென்னே
நற்பொறைநெஞ்சினில்லாக்கள்வியைநச்சியென்றுள். (சுஅ)

தன்றெடுந்தொடர்விலாதேதமென்னவுந்தவிராடாணிக்
கன்னெடுமனத்திசொல்லுங்கள்ளவாசகங்களென்று
மின்றெடுதொடர்ந்துசெல்லுமேகம்போன்மிதிலைவேந்தன்
பொன்னெடும்புனிதன்போயப்பூம்பொழிற்சாலைபுக்கான். (சுகூ)

புக்கபின்போயதென்னுமுணர்வினள்பொறையுணீங்கி
உக்கதாமுயிரளொன்றுமுயிர்த்திலளொடுங்கிநின்றுள்
தக்கிலண்மனத்துள்யாதுந்தழுவிலள்சலமுங்கொண்டாள்
மைக்கருங்குழலினண்மாட்டன்பினில்வலியனென்பாள். (எ௦)

நின்றிலளவனைச்சேருநெறியினைநினைந்துபோனுள்
இன்றிவனுகம்புல்லேலெனினுயிரிழப்பெனென்னுப்

66. குவவுத்தோள் - திரண்டுயர்ந்ததோள்.
68. அன்பு - அற்பெனத்திரிந்தது. எஉ, வயின் - இடம்,

பொன்றிணிசரளச்சோலைப்பளிக்கறைப்பொதும்பர்புக்காள்
சென்றதுபரிதிமேல்பாற்செக்கர்வந்திறுத்ததன்றே. (௭௧)

வேறு.

அழிந்தசிந்தையளாயயர்வாள்வயின்
மொழிந்தகாமக்கடுங்கனன்மூண்டதால்
வழிந்தநாகத்தின்வன்றொளைவாளெயிற்
றிழிந்தகார்விடமேறுவதென்னவே. (௭௨)

தாடகைக்கொடியாடடமார்பிடை
ஆடவர்க்கரசன்னயிலம்புபோல்
பாடவத்தொழின்மன்மதன்பாற்கணை
ஓடவுட்கியுயிருலைந்தாளரோ. (௭௩)

கலையுவாமதியேகறியாகவன்
சிலையின்மாரனைத்தின்னுநினைப்பினாள்
மலையமாருதமாநெடுங்காலவேல்
உலையமார்பிடையூன்றிடவோயுமால். (௭௪)

அலைக்குமாழியடங்கிடவங்கையால்
மலைக்குலங்களிற்றூர்க்குமனத்தினாள்
நிலைக்கும்வானினெடுமதிநீணிலா
மலைக்கநீங்குமிடிக்கினண்மாந்துமால். (௭௫)

பூவெலாம்பொடியாகவிப்பூமியுள்
காவெலாமொடிப்பென்னெனக்காந்துவாள்
சேவலோடுறைசெந்தலையன்றிலின்
நாவினல்வலியெஞ்சநடுங்குமால். (௭௬)

அணிவிறிங்களைநுங்கவராவினைக்
கொணர்வெனோடியெனக்கொதித்துன்னுவாள்
பணையின்மென்முலைமேற்பனிமாருதம்
புணரவாருயிர்வெந்துபுழுங்குமால். (௭௭)

கைகளாற்றன்கதிரிளங்கொங்கைமேல்
ஐயதன்பனியள்ளினளப்பினள்
மொய்கொடாயிடைவெந்துமுருங்கிய
வெய்யபாறையில்வெண்ணெய்நிகர்க்குமால். (௭௮)

---

77. பணையின்மென்முலை - பெரிய மெல்லியதனங்கள், அல்லது முரசு போன்ற முலையெனினும் பொருந்தும்,

அளிக்குமெய்ப்புயிர்கான்றழுஞ்சினள்
குளிக்குநீருங்கொதித்தெழக்கூசுமால்
விளிக்குவேலையைவெங்கணநங்கனை
ஒளிக்கலாமிடமியாதெனவுன்னுமால். (எகூ)

வந்துகார்மழைதோன்றினுமாமணிக்
கந்துகாணினுங்கைத்தலங்கூப்புமால்
இந்துகாந்தத்தினீரநெடுங்கலும்
வெந்துகாந்தவெதுப்புறுமேனியாள். (அ0)

வாமமாமதியும்பனிவாடையும்
காமனுந்தனைக்கண்டுணராவகை
நாமவாளெயிற்றோர்கதநாகம்வாழ்
சேமமால்வரையின்முழைசேருமால். (அக)

அன்னகாலையழன்மிகுதென்றலும்
முன்னின்முழ்மடியாய்முலைவெந்துக
இன்னவாசெய்வதென்றறியாதிளம்
பொன்னின்வார்தளிரிற்புரண்டாளரோ. (அஉ)

வீரன்மேனிவெளிப்படவெய்யவள்
கார்கொண்மேனியைக்கண்டனளாமெனச்
சோரும்வெள்குந்துணுக்கெனுமவ்வுருப்
பேருங்கால்வெம்பிணியிடைப்பேருமால். (அங)

ஆகக்கொங்கையிணையனென்றஞ்சன
மேகத்தைத்தழுவும்மவைவெந்தன
போகக்கண்டுபுலம்புமப்புன்மையாள்
மோகத்துக்கொர்முடிவுமுண்டாங்கொலோ. (அச)

ஊழிவெங்கனலுற்றனளொத்துமவ்
வேழையாவியிறந்திலளென்பரால்
ஆழியானையடைந்தனள்பின்னையும்
வாழலாமெனுமாசைமருந்தினே. (அரு)

---

79. 'அழலஞ்சினன் - குளிக்குநீருங் கொதித்தெழக்கூசும்' என்ற இடத்து. 'ஊருளெழுந்த வுருகெழுசெந்தீக்கு. நீருட்குளித்து முயலாகும் நீருட் குளிப்பினுங் காமஞ்சுடுமே' என்றது அறியத்தக்கது.

80. இந்துகாந்தம் - சந்திரனது பிரகாசம். இந்தபிரகாசத்தினாலே நீர்காலும் கல்லுக்குச் சந்திரகாந்தக்கல் என்று பெயர்.

வஞ்சனைக்கொடுமாயைவளர்க்குமென்
நெஞ்சுபுக்கெனதாவத்தைநீக்கெனும்
அஞ்சனக்கிரியேயருளாயெனும்
நஞ்சநக்கினள்போலநடுங்குவாள். (அசு)

காவியோகயலோவெனுங்கண்ணிணைத்
தேவியோதிருமங்கையிற்செவ்வியாள்
பாவியேனையும்பார்க்குங்கொலோவெனும்
ஆவியோயினுமாசையிறேய்விலாள். (அஎ)

மாண்டகற்புடையாண்மலர்மாமகள்
ஈண்டிருக்குநல்லாண்மகனென்னுமால்
வேண்டகிற்பினல்லான்வரமெய்யிடைத்
தீண்டகிற்பதன்றேதெறுங்காமமே. (அஅ)

ஆன்றகாதலகைத்துறவெய்துழி
மூன்றுலோகமுமூடுமரக்கராம்
ஏன்றகாரிருணீக்கவிராகவன்
தோன்றினனெனவெய்யவன்றோன்றினன். (அசு)

வேறு.

விடியல்காண்டலினீண்டுதனுயிர்கண்டவெய்யாள்
படியிலாண்மருங்குள்ளவெனையவன்பாரான்
கடிதினேடினனெடுத்தொல்லைக்கரந்தவள்காதல்
வடிவினூனுடன்வாழ்வதேவாழ்வெனமதியா. (கூ0)

வந்துநோக்கினள்வள்ளல்போயொருமணித்தடத்தான்
சந்திநோக்கினனிருந்ததுகண்டனடம்பி
இந்துநோக்கியநுதலியைக்காத்தயலிருண்ட
கந்தநோக்கியசோலையிலிருந்ததுகாணாள். (கூக)

தனியிருந்தனள்சமைந்ததென்சிந்தனைதாழ்வுற்
றினியிருந்தெனக்கெண்ணுவதில்லெனவெண்ணாத்
துனியிருந்தவன்மனத்தினடோகையைத்தொடர்ந்தாள்
கனியிரும்பொழில்காத்தயலிருந்தவன்கண்டான். (கூஉ)

நில்லடீஇயெனக்கடுகினன்பெண்ணெனநினைந்தான்
வில்லெடாதவள்வயங்கெரியாமெனவிரிந்த

87. காவியோகயலோ ஓகாரமிரண்டும் ஐயவினாப்பொருளன.
89. காதல் எல்லாப்பொருளையும் நுகர்தற்குச்செல்லும் வேட்கை.

சில்லலோதியைச்செங்கையிற்றிருகுறப்பற்றி
ஒல்வயிற்றுதைத்தொளிகிளர்சுற்றுவாளுருவி. (௯௩)

ஊக்கித்தாங்கிவிண்படர்வெமென்றுருத்தெழுவாளை
நூக்கிநொய்தினின்வெய்திழையேலென நுவலா
மூக்குங்காதும்வெம்முரண்முலைக்கண்களுமுறையால்
போக்கிப்போக்கியசினத்தொடும்புரிகுழல்விட்டான். (௯௪)

அக்கணத்தவள்வாய்திறந்தரற்றியவமலை
திக்கனைத்தினுஞ்சென்றதுதேவர்தஞ்செவியும்
புக்கதுற்றதுபுகல்வதென்மூக்கெனும்புழையூ
டுக்கசோரியினீரமுற்றுருகியதுலகம். (௯௫)

கொலைதுமித்துயர்கொடுங்கதிர்வாளினக்கொடியாள்
முலைதுமித்துயர்மூக்கினைநீக்கியமுறைமை
மலைதுமித்தெனவிராவணன்மணியுடைமகுடத்
தலைதுமித்தற்குநாட்கொண்டதொத்ததோர்தன்மை. (௯௬)

அதிரமாநிலத்தடிபதைத்தரற்றியவரக்கி
கதிர்கொள்காலவேற்கரன்முதனிருதர்வெங்கதப்போர்
எதிரிலாதவரிறுதியினிமித்தமாவெழுந்தாண்
டுதிரமாரிபெய்கார்நிறமேகமொத்துயர்ந்தாள். (௯௭)

உயரும்விண்ணிடைமண்ணிடைவிழுங்கிடந்துழைக்கும்
அயருங்கைகுலைத்தலமருமாருயிர்சோரும்
பெயரும்பெண்பிறந்தேன்பட்டபிழையெனப்பிதற்றும்
துயருமஞ்சிமுன்றொடர்ந்திலாத்தொல்குடிப்பிறந்தாள். (௯௮)

ஒற்றுமூக்கினையுலையுறுதீயெனவுயிர்க்கும்
எற்றுங்கையினைநிலத்தினிலிணைத்தடங்கொங்கை
பற்றும்பார்க்குமெய்வெயர்க்குந்தன்பருவலிக்காலால்
சுற்றுமோடும்போய்ச்சோரிநீர்சொரிதரச்சோரும். (௯௯)

ஊற்றுமிக்கநீரருவியினொழுகியகுருதிச்
சேற்றுவெள்ளத்துட்டிரிபவடேவருமிரியக்
கூற்றமுட்குந்தன்குலத்தினோர்பெயரெலாங்கூறி
ஆற்றுகிற்கிலாள்பற்பலபன்னிநின்றழைத்தாள். (௧௦௦)

---

96, மூத்தம் எனப்பாடமுமுண்டு, முகூர்த்தம் என்னும்வடசொற்சிதைவு

## வேறு.

நிலையெடுத்துநெடுநிலத்துநீயிருக்கத்தாபதர்கள்
சிலையெடுத்துத்திரியுமிதுசிறிதன்றோதேவரெதிர்
தலையெடுத்துவிழியாமைசமைப்பதேதழலெடுத்தான்
மலையெடுத்ததனிமலையேயிவைகாணவாராயோ. (௧௦௧)

புலிதானேபுறத்தாகக்குட்டிகோட்படாதென்ன
ஒலியாழியுலகுரைக்குமுரைபொய்யோவூழியினும்
சலியாதமூவருக்கும்வானவர்க்குந்தானவர்க்கும்
வலியானேயான்பட்டவலிகாணவாராயோ. (௧௦௨)

ஆர்த்தானைக்கரசுந்தியமரர்கணத்தொடுமடர்ந்த
போர்த்தானையிந்திரனைப்பொருதவனைப்போர்தொலைத்து
வேர்த்தானையுயிர்கொண்டுமீண்டானைவெரிந்பண்டு
பார்த்தானேயான்பட்டபழிவந்துபாராயோ. (௧௦௩)

காற்றினையும்புனலினையுங்கனலினையுங்கடுங்காலக்
கூற்றினையும்விண்ணினையுங்கோளினையும்பணிகோடற்
காற்றினைநீயீண்டிருவர்மானுடவர்க்காற்றாது
மாற்றினையோவுன்வலத்தைச்சிவன்றடக்கைவாள்கொண்டாய். ()

உருப்படிவமன்மதனையொத்துளரேயாயினுமுன்
செருப்படியாற்பொடியொவ்வாமானுடரைச்சீறுதியோ
நெருப்படியிற்பொடிசிதறநிறைந்தமதத்திசையானை
மருப்பொடியப்பொருப்பிடியத்தோணிமிர்த்தவலியோனே. (௧௦௫)

தேனுடையநறுந்தெரியற்றேவரையுந்தெறுமாற்றல்
தானுடையவிராவணற்குந்தம்பியர்க்குந்தவிர்ந்ததோ
ஊனுடையவுடம்பினராயெங்குலத்தோர்க்குணவாய
மானுடவர்மருங்கேபுக்கொடுங்கினதோவலியம்மா. (௧௦௬)

மரனேயுநெடுங்கானின்மறைந்துறையுந்தாபதர்கள்
உரனேயோவடலரக்கரோய்வேயோவுற்றெதிர்ந்தார்

---

101. தாபதர் - தாபஸரென்ற வடசொல்லின்றிரிபு; தவஞ்செய்பவரென்றுபொருள். 103. ஆனைக்கரசு - ஐராவதம்.

104. சிவபிரானிட மிராவணன் பெற்ற வாளுக்குச் சந்திரஹாஸமெனப் பெயர்.

105. செருபடி - யுத்தபூமி. செருப்பினடியிலுள்ள எனச்சிலேடை.

அரனேயோவயனேயோவரியேயோவெனுமாற்றற்
கரனேயோயான்பட்டகையறவுகாணுயோ. (க0எ)

இந்திரனுமரன்யனுமிமையவரும்பணிகேட்பச்
சுந்தரிபல்லாண்டிசைப்பவுலகேழுந்தொழுதேத்தச்
சந்திரன்போற்றனிக்குடைக்கீழ்நீயிருக்குஞ்சவைநடுவே
வந்தடியேனுற்றதுமுகங்காட்டவல்லேனே. (க0அ)

உரநெறிந்துவிழவென்னையுதைத்துருட்டிமூக்கரிந்த
நரனிருந்துதோள்பார்க்கநான்கிடந்துபுலம்புவதோ
கரனிருந்தவனமன்றேவிளைபடவுங்கடவேனே
அரனிருந்தமலையெடுத்தவண்ணுவோவண்ணுவோ. (க0கூ)

நகையாலேமூக்கிழந்துநாணமிலாநான்பட்ட
வகையாலேநினதுபுகழ்மாசுண்டதாகாதோ
திசையானைவிசைகலங்கச்செருச்செய்துமருப்பொசித்த
இசையாலேநிறைந்தபுயத்திராவணவோவிராவணவோ. (கக0)

கானமதினிடையிருவர்காதொடுமூக்குடனரிய
மானமதாற்பாவியேனிவண்மடியக்கடவேனே
தானவரைக்கருவறுத்துச்சதமகனைத்தளையிட்டு
வானவரைப்பணிகொண்டமருகாவோமருகாவோ. (கக்க)

ஒருகாலத்துலகேழுமுருத்தெரியத்தனுவொன்றால்
திருகாதசினந்திருகித்திசையனைத்துஞ்செலநூறி
இருகாலிற்புரந்தரனையிருந்தளையினிடுவித்த
மருகாவோமானுடவர்வலிகாணவாராயோ. (ககஉ)

கல்லீரும்படைத்தடக்கையடற்கரதூடணர்முதலா
அல்லீருஞ்சுடர்மணிப்பூணரக்கர்குலத்தவதரித்தீர்
கொல்லீரும்படைக்கும்பகருணனைப்போற்குவலயத்துள்
எல்லீருமுறங்குதிரோயானழைத்தல்கேளீரோ. (ககந)

என்றின்னபலபன்னியிகலரக்கியழுதிரங்கிப்
பொன்றுன்னும்படியகத்துப்புரள்கின்றபொழுதகத்து

107. கையறவு - துன்பம்.

111. மருகன் - மருமகன்: இங்கே உடன்பிறந்தான் மகன்.

113. கும்பகருணன் - குடம்போன்ற காதினையுடையான்.

114. பொன்றுன்னும்படி - அழகுவிளங்கும் பூமி, இலக்குமியாகிய பிராட்டி யிருக்குமிடமென்று கூறலுமமையும்.

நின்றந்தநதியகத்துநிறைதவத்தின்குறைமுடித்து
வன்றிண்கைச்சிலைநெடுந்தோண்மரகதத்தின்மலைவந்தான். (கக௪)

வந்தானையிடைநோக்கிவயிறலைத்துமழைக்கண்ணீர்
செந்தாரைக்குருதியொடுசெழுநிலத்தைச்சேறாக்கி
அந்தோவுன்றிருமேனிக்கன்பிழைத்தவன்பிழையால்
எந்தாயான்பட்டபடியிதுகாணென்றெதிர்விழுந்தாள். (கக௫)

விரிந்தாயகூந்தலாள்வெய்யவினையாதானும்
புரிந்தாளென்பதுதனதுபொருவரிய திருமனத்தால்
தெரிந்தானின்றிளையானேயிவளைநெடுஞ்செவியொடுமூக்
கரிந்தானென்பதுமுணர்ந்தானவளைநீயாரென்றான். (கக௬)

அவ்வுரைகேட்டடலரக்கியறியாயோநீயென்னைத்
தெவ்வுரையென்றோருலகுமில்லாதசீற்றத்தான்
வெவ்விலைவேலிராவணனும்விண்ணுலகமுதலாக
எவ்வுலகுமுடையானுக்குடன்பிறந்தேன்யானென்றாள். (ககஎ)

தாமிருந்ததகையரக்கர்புகலொழியத்தவமியற்ற
யாமிருந்தநெடுஞ்சூழற்கென்செயவந்தீரெனலும்
வேமிருந்தையெனக்கனலும்வெங்காமவெம்பிணிக்கு
மாமருந்தேதநெருநலினும்வந்திலனோயானென்றாள். (ககஅ)

செங்கயல்போற்கருநெடுங்கட்டேமருதாமரையுறையும்
நங்கையிவரெனநெருநனடந்தவோராதாமென்னக்
கொங்கைகளுங்குழைக்காதுங்கொடிமூக்குங்குறைத்தழித்தால்
அங்கணரசேயொருவர்க்கழியாதோவழகென்றாள். (கக௯)

மூரன்முறுவலனிளையமொய்ம்பினோன்முகநோக்கி
வீரவிரைந்தனையிவடன்விடுகாதுங்கொடிமூக்கும்
ஈரநினைந்திவளிழைத்தபிழையென்னென்றிறைவினவச்
சூரநெடுந்தகையவனையடிவணங்கிச்சொல்லுவான். (க௨0)

தேட்டந்தான்வானையிற்றிற்றின்னவோதீவினையோர்
கூட்டந்தான்புறத்துளதோகுறித்தபொருளறிந்திலமால்
நாட்டந்தானெரியுமிழநல்லாண்மேற்பொல்லாதாள்
ஓட்டந்தாளரிதினிவளுடன்றெழுந்தாளெனவுரைத்தான். (க௨க)

ஏற்றவளைவரிசிலையோனியம்பாமுனிகலரக்கி
சேற்றவளைதன்கணவனருகிருப்பச்சினந்திருகிச்

121. தேட்டந்தான்-தேடிவந்ததுதான். ஓட்டந்தாள்-ஓடிவந்தாள்,
122, வரிசிலையோன்-ஈண்டுஇலக்குமணன்,

சூற்றவளை நீருழக்குந்துறைகெழுநீர்வளநாடா
மாற்றவளைக்கண்டக்காலழுலாதே தாமனமென்றாள். (கஉஉ)

பேடிப்போர்வல்லரக்கர்பெருங்குலத்தைதயொருங்கவிப்பான்
தேடிப்போந்தனமின்றுதீமாற்றஞ்சிலவிளம்பி
வீடிப்போகாதேயிம்மெய்வனத்தைதவிட்டகல
ஓடிப்போவென்றுரைத்தவுரைகடந்தாற்கவளுரைப்பாள். (கஉ௩)

நரைதிரையென்றில்லாதநான்முகனேமுதலமரர்
கரையிறந்தோரிராவணற்குக்கரனிருக்குங்குடியென்றால்
விரையுமிதுநன்றன்றுவேறாகயானுரைக்கும்
உரையுளதுநுமக்குறுதியுணர்வுளதேதலென்றுரைப்பாள். (கஉ௪)

ஆக்கரியமூக்குங்கையரியுண்டாளென்றுரை
நாக்கரியுந்தயமுகனார்நாகரிகரல்லாமை
மூக்கரிந்துநுங்குலத்தைமுதலரிந்தீரினியுமக்குப்
போக்கரிதிவ்வழகையெல்லாம்புல்லிடையேயுகுத்தீரே. (கஉ௫)

வான்காப்போர்மண்காப்போர்மாநாகர்வாழுலகந்
தான்காப்போரினித்தங்கடலைகாத்துநின்றுங்கள்
ஊன்காக்கவுரியார்யாரென்னையுயிர்நீர்காக்கின்
யான்காப்பெனல்லாலவ்விராவணனருளரென்றாள். (கஉ௬)

காவற்றிண்கற்பமைந்தார்தம்பெருமைதாங்கழறார்
ஆவற்போன்பிறனலரைகின்றேறனுமன்றே
தேவர்க்கும்வலியான்றன்றிருத்தங்கையாளிவளீண்
டேவர்க்கும்வலியாளென்றிளையானுக்கியம்பீரோ. (கஉ௭)

மாப்போரிற்புறங்காப்பேன்வான்சுமந்துசெலவல்லேன்
தூப்போலக்கனிபலவுஞ்சுவையுடையதரவல்லேன்
காப்போரைக்கைத்தென்னீர்கருதியதுதருவேனிப்
பூப்போலுமெல்லியலாற்பொருளென்னோபுகல்வீரால். (கஉ௮)

குலத்தாலுநலத்தாலுங்குறித்தனவேகொணர்தக்க
வலத்தாலுமதியாலும்வடிவாலுமடத்தாலும்
நிலத்தாரும்விசும்பாருநேரிழையாரென்னைப்போல்
சொலத்தானிங்குரியாரைச்சொல்லீரோவல்லீரேல். (கஉ௯)

---

125. நாகரிகம் - கண்ணோட்டம் 'பெயக்கண்டு நஞ்சுண்டமைவர் நயத் தக்க நாகரிகம்வேண்டுபவர்' என்புழிநாகரிகம்-கண்ணோட்டம் என்றார். பரிமே லழகியாரும், 128. தூ - தசை,

போக்கினீரென்னாசிபோய்த்தென்னீர்பொறுக்குவிரேல்
ஆக்குவனோர்நொடிவரையினழகமைவெனருள்கூறும்
பாக்கியமுண்டெனினதனாற்பெண்மைக்கோர்பழுதுண்டோ
மேக்குயருநெடுமூக்குமடந்தையர்க்குமிகையன்றோ. (௧௩௦)

விண்டாரேயல்லாரோவேண்டாதார்நான்வேண்டின்
உண்டாயகாதலினென்னுயிரென்பதுமதன்றோ
கண்டாரேகாதலிக்குங்கட்டழகும்விடமன்றோ
கொண்டாரேகொண்டாடுமுருப்பெற்றாற்கொள்ளீரோ. (௧௩௧)

சிவனுமலர்த்திசைமுகனுந்திருமாலுந்தெறுகுலிசத்
துவனுமடுத்தொன்றாகினின்றன்னவருவோனை
புவனமனைத்தையுமொருதன்பூங்கணையாலுயிர்வாங்கும்
அவனுமுனக்கிளையானோயிவனைபோலருளிலனால். (௧௩௨)

வேறு.

பொன்னுருவப்பொருகழலீர் புழைகாணமூக்கரிவான் பொருள்வேறுண்டோ, இன்னுருவமிதுகொண்டிங் கிருந்தொழியு நம்மருங்கேயேகாளப்பால், பின்னிவளையயலொருவர் பாராரென்றேயறிந்தீர் பிழைசெய்தீரோ, அன்னதனையறிந்தன்றோ வன்பிராட்டிபூண்டதுநா னறிவிலேனோ. (௧௩௩)

வெப்பழியாநெடுவெகுளி வேலரக்கிதறிந்து வெகுண்டுநோக்கின், அப்பழியாலுலகனைத்து நம்பொருட்டாலறிந்தனவா மறத்தைநோக்கி, ஒப்பழியச்செய்கிலா ருயர்குலத்துத் தோன்றினோருணர்ந்துநோக்கி, இப்பழியைத்துடைத்தவி யினிதிருத்தீரென்னொடுமென் றிறைஞ்சிநின்றாள். (௧௩௪)

நாடறியத்துயரிழைத்த நவையரக்கிநின்னன்னைதன்னைநல்கும், தாடகையையுயிர்கவர்ந்தசரமிருந்ததன்றியுநான்றவமேற்கொண்டு, தோடகையத்துறுமலர்த்தா ரிகலரக்கர்குலந்தொலைப்பான் றோன்றினின்றேன், போடகலப்புல்லொழுக்கைவல்லரக்கியென்றிறைவன் புகலும்பின்னும். (௧௩௫)

தரையளித்ததனிநேமித் தயரதன்றன்புதல்வர்யாந் தாய்சொற்றாங்கி, விரையளித்தகான்புகுந்தேம்வேதியருமாதவரும்வேண்டநீண்டு, கரையளித்தற்கரியபடைக்கடலரக்கர்குலந்தொலைத்துக்க

---

130. போக்கினீர்-அரிந்தீர். போய்த்தென்-அதனால்போயதென்னே.

ண்டாய்பண்டை. வரையளித்தகுலமாடநகர்புகுவேமினைவெதரியம
னக்கொளென்றான். (கஙரு)

நெறித்தாரைசெல்லாத நிருதரெதிர்நில்லாதே நெடியதேவர்,
மறித்தாரீண்டிவரிருவர்மானுடவரென்றதுவல்லையாகின், வெறித்
தாரைவேலரக்கர்விறலியக்கர்முதலினர்நீ மிடலோரென்று, குறித்
தாரையாவரையுங்கொணருதியேனின்னெதிரேகோறுமென்றான்.

கொல்லலாமாயங்கள்குறித்தனவேகொள்ளலாங்கொற்றமுற்ற
வெல்லலாமற்றியற்றும்வினையெலாங்கடக்கலாமேல்வாய்நீங்கிப்
பல்லெலாமுறத்தோன்றும்பகுவாயளென்றுநுபார்த்தியாயின்
நெல்லெலாஞ்சுரந்தளிக்குநீர்நாடகேவென்றுநிருதிகூறும். (கஙஅ)

காம்பறியுந்தோளாளைக் கைவிடரெனினும்யான் மிகையோகள்
வர், ஆம்பொறியிலடலரக்கரவரோடேசெருச்செய்வானமைந்திரா
யின், தாம்பொறியிற்பலமாயந்தரும்பொறிகளறிந்தவற்றைத்தடுப்
பெனன்றே, பாம்பறியும்பாம்பினகாலெனமொழியும்பழமொழியும்
பார்த்திலீரோ. (கஙகூ)

உளங்கோடலுனையிழைத்தாளுளளொருத்தியென்னுதியேனி
ருதரோடும், களங்கோடற்குரியசெருக்கண்ணியக்காலொருமூவே
ங்கலந்தகாலே, குளங்கோடுமென்றிதுவுமுறுகோளேயென்றுணருங்
குறிக்கோளில்லா, இளங்கோவேவாடேனையிருத்திநிருகோளுஞ்சி
றைவைத்நாற்கிளையேனென்றாள். (கச0)

பெருங்குலாவுறுநகர்க்கேயேகுநாள்வேண்டுமுருப்பிடிம்பேன
ன்றேல், அருங்கலாமுற்றிருந்தாளென்னினுமீங்கிளையவன்றானரி
ந்தநாசி, ஒருங்கிலாவிவளோடு முறைவேறேவென்பானே விறைவ
வொன்றும், மருங்கிலாதவளோடுமன்றேநீ நெடுங்காலம்வாழ்ந்ததெத
ன்பாய். (கசக)

136. வரைதல் - எழுதல். இனிவரை - மலையெனக்கொண்டு மலைபோ
ன்ற குலமாடமென்னலுமமையும்.

137. வெறிதாரைவேல் அரக்கர் - கோபாவேசத்தையும் கூர்மைபொரு
ந்திய வேலாயுதத்தையுமுடைய அரக்கருள்ளும் வெறிதார் ஐவேலரக்கரெனப்
பிறித்து வாசனைபொருந்திய வெற்றிமாலையையணிந்த அழகிய வேலினையு
டையரெனப்பொருள் கோடலுமாம்.

140. குளங்கோடும் - குளம்பறித்துவிடுவோம், அதாவது அவ்வரக்கரது
தலைகொள்ளுவோம் என்றபடி. இனைத்தல் - தளர்தல்.

என்றவண்மேலிளையவன்றானிலங்கிலைவேல்கடைக்கணியா வி வளையீண்டு, கொன்றுகளையேமென்றுனெடிதலைக்குமருளென்கொல்கோவேயென்ன, நன்றதுவேயாமன்றேபோகாளேலாகவெனநாதன்கூற, ஒன்றுமினெரனக்கிரங்காருயிரிழப்பெனிற்கிலெனவரக்கியுன்னு. (கசஉ)

ஏற்றநெடுங்கொடிமூக்குமிருகாதுமுலையிரண்டுமிழந்தும்வாழ, ஆற்றுவனேவஞ்சனையா லுமையுள்ளபரிசறிவா னமைந்ததன்றே, காற்றினிலுங்கனலினிலுங் கடியானைக்கொடியானைக் கரனையுங்கள், கூற்றுவனையிப்பொழுதே கொணர்கின்றேனென்று சலங்கொண்டு போனாள்.

ஆக திருவிருத்தம் - ருகூஎ.

## கூ-வது, கரன்வதைப்படலம்.

இருந்தமாக்கரன்றாளிணையின்மிசை
சொரிந்தசோரியள்கூந்தலடும்பெனத்
தெரிந்தமூக்கினள்வாயினள்செக்கர்மேல்
விரிந்தமேகமெனவிழுந்தாளரோ. (க)

அழுங்குநாளிதென்றந்தகனுணையால்
தழங்குபேரியெனத்தனித்தேங்குவாள்
முழங்குமேகமுடித்தவெந்தீயினால்
புழுங்குநாகமெனப்புரண்டாளரோ. (உ)

வாக்கிற்கொக்கப்புகைமுந்துவாயினுன்
நோக்கிக்கூசலர்நுன்னையித்தன்மையை
ஆக்கிப்போனவரார்கொலென்றுவனன்
மூக்கிற்சோரிமுழீஇக்கொண்டகண்ணினுள். (ங)

இருவர்மானுடர்தாபதரேந்திய
வரிவில்வாட்கையர்மன்மதன்மேனியார்
தருமநீரர்தயரதன்காதலர்
செருவினேருநிருதரைத்தேடுவார். (ச)

1. அரக்கியின் செம்பட்டமயிர்க்கும் அரத்தத்துக்கும் செவ்வானமும் அவள்கரியமேனிக்கு மேகமும் உவமை. சொரிந்த என்பதைக் கூந்தலொடும் தூம்பெனத் தெரிந்த என்பதை வாயொடுங்கூட்டுக.

4. செருவில் - போரில் சொருவில் என்றும் பிரிக்கலாம்.

ஒன்றுநோக்கலருன்வலியோங்கறன்
நின்றுநோக்கிநிறுத்துநினைப்பினூர்
வென்றிவேற்கைநிருதரைவேறறக்
கொன்றுநீக்குதுமென்றுணர்கொள்கையார். (ரு)

மண்ணினோக்கருவானினின்மற்றினில்
எண்ணிநோக்குறின்யாவர்க்குநோக்கலாப்
பெண்ணினோக்குடையாளொருபேதையென்
கண்ணினோக்கியுரைப்பருங்காட்சியாள். (௬)

கண்டுநோக்கருங்காரிகையாடனைக்
கொண்டுபோவலிலங்கையர்கோக்கெனு
விண்டுமேல்விழுந்தேனைவெகுண்டவர்
துண்டமாக்கினர்மூக்கெனச்சொல்லினுள். (௭)

கேட்டனன்னுரைகண்டிலன்கேடினர்
தோட்டநூங்கிற்றெருளையுறுமூக்கினைக்
காட்டெனுவெழுந்தானெதிர்கண்டவர்
நாட்டந்தீயவுலகைநடுக்குவான். (௮)

எழுந்துநின்றுலகேழுமெரிந்துகப்
பொழிந்தகோபக்கனலுகப்பொங்குவான்
கழிந்துபோயினர்மானுடரென்னுங்கால்
அழிந்ததேதாவிவ்வரும்பழியென்னுமால். (௯)

வருகதேரெனுமாத்திரைமாடுளோர்
இருகைமால்வரையேழினெடேழனூர்
ஒருகையாலுலகேந்துமுரத்தினூர்
தருகவிப்பணியெம்வயிற்றுனென்றுர். (௧௦)

சூலம்வாண்மழுத்தோமரஞ்சக்கரம்
காலபாசங்கதைபொருங்கையினூர்
வேலைஞாலம்வொருவுறுமார்ப்பினூர்
ஆலகாலந்திரண்டன்னவாக்கையார். (௧௧)

வெம்புகோபக்கனலர்விலக்கினூர்
நம்பியெம்மடிமைத்தொழினன்றெனு
உம்பர்மேலின்றுருத்தனைபோதியோ
இம்பர்மேலினியாமுளேமோவென்றுர். (௧௨)

---

11. ஆலகாலம் - நிறத்துக்கும் கொடியசெயலுக்கும் உவமை.

நன்றுசொல்லினிர்நாணிச்சிறார்கண்மேல்
சென்றுபோர்செயிற்றேவர்சிரிப்பரால்
கொன்றுசோரிகுடித்தவர்கொள்கையை
வென்றுநீருதிரமெல்லியலோடென்றான். (கங)

என்னலோடும்விரும்பியிறைஞ்சினார்
சொன்னநாணிலியந்தகனாதென
அன்னள்பிற்படர்வாரெனவாயினார்
மன்னன்காதலர்வைகிடநண்ணினார். (கச)

துமிலப்போர்வல்லரக்கர்க்குச்சுட்டினாள்
அமலத்தொல்பெயராயிரத்தாழியான்
நிமலப்பாதநினைவினிருந்தவக்
கமலக்கண்ணனைக்கையினிற்காட்டினாள். (கரு)

ஏற்றுவாம்பிடித்தேந்துதுமென்குநர்
பற்றுவாநெடும்பாசத்தினென்குநர்
முற்றுவாமிறைசொன்முறையாலெனாச்
சுற்றினார்வரைசூழ்ந்தன்னதோற்றத்தார். (கசு)

ஏத்துவாய்மையிராமனிளவலைக்
காத்திதையலையென்றுதன்கற்பகம்
பூத்ததன்னபொருவிறடக்கையால்
ஆத்தநாணினருவரைவாங்கினான். (கஎ)

வாங்கிவாளொடுவாளிபெய்புட்டிலும்
தாங்கித்தாமரைக்கண்ணனச்சாலையை
நீங்கியிவ்வழிநேர்மினடாவெனா
வீங்குதோளன்மலைதலைமேயினான். (கஅ)

மழுவும்வாளும்வயங்கொளிமுச்சிகைக்
கழுவுங்காலவெந்தியன்னகாட்சியார்
எழுவினீடடக்கையெழுநான்கையும்
தழுவும்வாளிகளாற்றலஞ்சார்த்தினான். (கசு)

---

13. மெல்லியல் - பண்புத்தொகைபுறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

14. அரக்கர் குழமுழுதும் அழிதற்கு இச்சூர்ப்பநகையே காரணமாகவிருத்தல்பற்றி 'அந்தகனாதெனவன்னள்' என்றார்.

16. பிடித்து - இடைநிலைத்தீவகம்.

மரங்கள்போனெடுவானொடு தோள்விழ
உரங்களானடர்ந்தார்க்குரவோன்விடும்
சரங்களோடினதைக்கவவர்கடம்
சிரங்களோடினதீயவளோடினாள். (௨0)

ஒளிறுவேற்கரற்குற்றதுணாத்தினுள்
குளிறுகோபவெங்கோளரிமாவடக்
களிறெலாம்படக்கைதலைமேலுறப்
பிளிறியோடும்பிடியன்னபெற்றியாள். (௨க)

அங்கரக்கரவிந்தழிந்தாரெனப்
பொங்கரத்தம்விழிவழிபோந்துக
வெங்கரப்பெயரோன்வெகுண்டான்விடைச்
சங்கரற்குந்தடுப்பருந்தன்மையான். (௨௨)

அழையென்றேறெனக்காக்குகென்கோர்ப்படை
உழையரோடியொருநொடியோங்கன்மேல்
மழையென்மாமுரசெற்றுதிர்வல்லென்றான்
முழையின்வாளரியஞ்சமுழங்குவான். (௨௩)

பேரியோசைபிறத்தலும்பெட்புறு
மாரிமேகம்வரம்பிலவந்தெனத்
தேரின்சேனைதிரண்டனதேவர்தம்
ஊருநாகருலகுமுலைபவே. (௨௪)

போர்ப்பெரும்பணைபொம்மென்முழக்கமா
நீர்த்தரங்கநெடுந்தடந்தோள்களா
ஆர்த்தெழுந்ததிறுதினுர்கலி
கார்க்கருங்கடல்கால்கிளர்ந்தென்னவே. (௨௫)

காடுதுன்றிவிசும்புகரந்தென
நீடியெங்குநிமிர்ந்தநெடுங்கொடி
ஓடுமெங்கள்பசியென்றுவந்தெழுந்
தாடுகின்றவலகையினுடவே. (௨௬)

---

20. உரம் - ஊக்கம், மார்பு, வலி எனப்பலபொருள்குறிக்கும் ஒருசொல். உரவோன் - வலிமையுடையோன் - ஒருதாமாகிய "உரவோர்" என்னும் புறப்பாட்டினும் இப்பொருட்டாதல் காண்க.

23. வென் - வெற்றி.

தறியினீங்கியதாழ்தடக்கைத்துணை
குறிகொளாமதவேழக்குழுவனூர்
செறியும்வாளொடுவாளிடைதேய்த்துகும்
பொறியிற்கானெங்கும்வெங்கனல்பொங்கவே. (உஎ)

முருடிரண்டுமுழங்குறத்தாக்கொலி
உருடிரண்டெழுந்தேரொலியுட்புக
அருடிரண்டவருக்கன்றன்மேல்வழங்
கிருடிரண்டுவந்தீண்டியதென்னவே. (உஅ)

தலையின்மாசுணந்தாங்கியதாரணி
நிலைநிலாதுமுதுகைநெளிப்புற
உலைவிலேழுலகத்தினுமோங்கிய
மலையெலாமொருமாடுதொக்கென்னவே. (உகூ)

வேறு.

வல்லியக்குழாங்களோமழையினீட்டமோ
ஒல்லிபத்தொகுதியோவோங்குமோங்கலோ
அல்லமற்றரிகளினணிகமேயெனப்
பல்பதினாயிரம்படைக்கைவீரரே. (௩௦)

ஆளிகள்பூண்டனவரிகள்பூண்டன
மீளிகள்பூண்டனவேங்கைபூண்டன
ஞாளிகள்பூண்டனநரிகள்பூண்டன
கூளிகள்பூண்டனகுதிரைபூண்டன. (௩க)

ஏற்றினமார்த்தனவேனமார்த்தன
காற்றினமார்த்தனகழுதையார்த்தன
தோற்றினமாத்திரத்துலகுசூழ்வரும்
பாற்றினமார்த்தனபணிலமார்த்தன. (௩உ)

தேரினந்துவன்றினசிறுகட்செம்முகக்
காரினந்துவன்றினகாலிற்கால்வரு
தாரினங்குழுமினதடையில்கூற்றன்ன
பேரினங்கடலெனப்பெயருங்காலையே. (௩௩)

மழுக்களுமயில்களும்வயிரவாட்களும்
எழுக்களுந்தோமரத்தொகையுமீட்டியும்

---

28. முருடு - பத்தல். பத்தளமுமாம்.
33. (31-32-33) கருத்து; இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைப்படையும் ஒன்றுசேர்ந்தன வென்பதாம்.

முழுக்களுமுசுண்டியுந் தண்டுமுத் தலைக்
கழுக்களுமுலக்கையுங் காலபாசமும். (௩௪)

குந்தமுங்குலிசமுங் கோலும்பாலமும்
அந்தமில்சாபமுஞ் சரமுமாழியும்
வெகுதொழில்வலயமும் விளங்குசங்கனு
பந்தமுங்கற்பணப்படையும்பாசமும். (௩௫)

ஆதியினருக்கனுமனலுமஞ்சுறும்
சோதியசோரியுந் தூவுந் துன்னிய
ஏதிகண்மிடைந்தனவிமையவர்க்கெலாம்
வேதனைகொடுத்தனவாகைவேய்ந்தன. (௩௬)

ஆயிரமாயிரங்களிற்றினாற்றலார்
மாயிருஞாலத்தைவிழுங்கும்வாயினர்
தீயெரிவிழியினர்நிருதர்சேனையின்
நாயகர்பதின்மரோடடுத்தநால்வரே. (௩௭)

ஆறிரண்டாயிரமமைந்தவாயிரம்
கூறினவொருபடைகுறித்தவப்படை
ஏறினவேழினதிரட்டியென்பரால்
ஊறினசேனையின்றொகுதியுன்னுவார். (௩௮)

உரத்தினருருவெனவுரறும்வாயினர்
கரத்தெரிபடையினர்கமலத்தோன்றரும்
வரத்தினர்மலையெனமழைதுயின்றெழு
சிரத்தினர்தருக்கினர்செருக்குஞ்சிந்தையார். (௩௯)

விண்ணளவிடநிமிர்ந்துயர்ந்தமேனியர்
கண்ணளவிடவருமார்பர்காலினால்
மண்ணளவிடுநெடுவலத்தர்வானவர்
எண்ணளவிடவருஞ்செருவென்றேறினார். (௪௦)

இந்திரன்முதலினோரெறிந்தமாப்படை
சிந்தினதெறித்துகச்செறிந்ததோளினார்
அந்தகனடிதொழுதடங்குமாணையார்
வெந்தழலுருவுகொண்டனையமேனியார். (௪௧)

சூலமும்பாசமுந்தொடர்ந்தசெம்மயிர்ச்
சாலமுந்தறுகணுமெயிறுந்தாங்கினார்

41. செறிந்த - வன்மைபொருந்திய.

ஆலமும்வெளிதெனுநிறத்தராற்றலால்
காலனுங்காலனென்றயிர்க்குங்காட்சியார். (சஉ)

கழலினர்தாரினர்கவசமார்பினர்
நிழலுறுபூணினர்நெறித்தநெற்றியர்
அழலுறுகுஞ்சியரமரைவேட்டுவந்
தெழலுறுமனத்தினரொருமையெய்தினார். (சங)

மருப்பிறுமதகளிற்றமரர்மன்னனும்
விருப்புறுமுகத்தெதிர்விழிக்கின்வெந்நிடும்
உருப்பொருவுலைவுறுமுலகமூன்றினும்
செருப்பெறுத்தினவுறுசிகரத்தோளினார். (சச)

குஞ்சரங்குதிரைபேய் குரங்குகோளரி
வெஞ்சினக்கரடிநாய்வேங்கையாளியென்
றஞ்சுறக்கனல்புரைமுகத்தரார்கலி
நஞ்சுதொக்கெனப்புரைநயனத்தார்களும். (சரு)

எண்கையரெழுகையரேழுமெட்டுமாய்க்
கண்கனல்சொரிதருமுகத்தர்காலினர்
வண்கையில்வளைத்துயிர்வாரிவாயிலிட்
டுண்கையினுவகையருலப்பிலார்களும். (சசு)

இயக்கரிற்பரித்தனவளரிட்டன
மயக்குறுத்தமரரைவலியின்வாங்கின
துயக்கில்கந்தர்ப்பரைத்துரந்துவாரின
நயப்புறுசித்தரைநலிந்துவவ்வின. (சஎ)

கொடிதழைகவிகைவான்றொங்கல்குஞ்சரம்
படியுறுபதாகைமீவிதானம்பல்வகை
இடையிலாதெங்கணுமிசையமீமிசை
மிடைதலினுலகெலாம்வெயிலிழப்பவே. (சஅ)

எழுவரொடெழுவராமுலகமேழொடேழ்
தழுவியவென்றியர்தலைவர்தானையர்
மழுவினர்வாளினர்வயங்குசூலத்தர்
உழுவையோடரியெனவுடற்றுசீற்றத்தார். (சகூ)

43. கவசம் - இருப்புச்சட்டை.
46. காலினர் - கால்களையுமுடையவர்.
47. மயக்குறுத்தல் - மாயப்போர்புரிந்து மயங்கச்செய்தல்.

வில்லினர்வாளினரிதழின்மீதிடும்
பல்லினர்மேருவைப்பறிக்குமாற்றலர்
புல்லினர்திசைதொறும்புரவித்தேரினர்
சொல்லினமுடிக்குறுந்துணிவினெஞ்சினர். (௫௦)

தூடணன்றிரிசிரத்தோன்றலாதியர்
கோடணைமுரசினங்குளிறுசேனையர்
ஆடவருயிர்கவரலங்கல்வேலினர்
பாடவநிலையினர்பலருஞ்சுற்றினர். (௫௧)

ஆன்றமையெறிபடையழுவத்தார்கலி
வான்றொடர்மேருவைவளைத்ததாமென
ஊன்றினதேரினனுயர்ந்ததோளினன்
தோன்றினன்யாவருந்துணுக்கமெய்தவே. (௫௨)

அசும்புறுமதகரிபுரவியாடகத்
தசும்புறுசயந்தனமரக்கர்தாடர
விசும்புறுதூளியான்வெண்மைமேயின
பசும்பரிபகலவன்பைம்பொற்றேரரோ. (௫௩)

வனந்துகள்பட்டனமலையின்வானுயர்
கனந்துகள்பட்டனகடல்கடூர்ந்தன
இனந்தொகுதூளியாலிசைப்பதென்னினிச்
சினந்தொகுநெடுங்கடற்சேனைசெல்லவே. (௫௪)

நிலமிசைவிசும்பிடைநெருக்கலானெடு
மலைமிசைமலையினம்வருவபோன்மலைத்
தலைமிசைத்தலைமிசைதாவிச்சென்றனர்
கொலைமிசைநஞ்செனக்கொதிக்குநெஞ்சினர். (௫௫)

வேறு.

வந்ததுசேனைவெள்ளம்வள்ளியோன்மருங்குமாய
பந்தமாவினையைமாளப்பற்றறுபெற்றியோர்க்கும்
உந்தருநிலையதாகியுடனுறைந்துயிர்கடம்மை
அந்தகற்களிக்குநோய்போலரக்கிமுன்னுகவம்மா. (௫௬)

தூரியக்குரலின்வானின்முகிற்கணந்துணுக்கங்கொள்ள
வார்சிலையொலியினஞ்சியுறுமெலாமறுக்கங்கொள்ள

---

51. தூஷணன் - கரனுடைய தம்பி. திரிசிரா - மூன்றுதலைகளையுடையவன். 54. சேனை - நால்வகைப்படைக்கும்பொதுப்பெயராயினும், ஈண்டு சினைமிகுதிபற்றிக் காலாட்படை மாத்திரையாய் நின்றது.

ஆர்கலியார்ப்பினுட்கியசைவுறவரக்கர்சேனை
போர்வலத்திருந்தவீரருறைவிடம்புக்கதன்றே. (ருஎ)

வாய்புலர்ந்தழிந்தமெய்யின்வருத்தத்தவழியில்யாண்டும்
ஓய்விலநிமிர்ந்துவீங்குமுயிர்ப்பினவுலைந்தகண்ண
தீயவர்சேனைவந்துசேர்ந்தமைதெரியச்சென்று
வேய்தெரிந்துரைப்பபோன்றபுள்ளொடும்விலங்குமம்மா. (ருஅ)

தூளியின்படலைவந்துதொடர்வுறமரமுந்தூறும்
தாளிடையொடியுமோசைசடசடவொலிப்பக்கானத்
தாளியுமரியுமஞ்சியிரிதருமலக்கணோக்கி
மீளிமொய்ம்பினருஞ்சேனைமேல்வந்ததுளதென்றுன்னா. (ருகூ)

மின்னின்றசிலையன்வீரக்கவசத்தன்விசித்தவாளன்
பொன்னின்றவடிம்பின்வாளிப்புட்டிலன்புகையுநெஞ்சன்
நின்னின்றுகாண்டியான்செய்நிலையெனவிரும்பிநேரா
முன்னின்றுபின்வந்தோனைநோக்கினன்மொழியலுற்றான். (கூO)

நெறிக்கொண்மாதவர்க்குமுன்னேநேர்ந்தனனிருதராவி
பறிக்குவென்யானேயென்றபழமொழிபழுதுறாமே
வெறிக்கொள்பூங்குழலினாளைவீரநீவேண்டினேன்யான்
குறிக்கொடுகாத்தியின்னேகொல்வெனிக்குழுவையென்னா. (கூக)

மரன்படர்கானமெங்குமதர்படவந்தசேனை
கரன்படையென்பதெண்ணிக்கருநிறக்கமலக்கண்ணன்
சரன்படர்புட்டில்கட்டிச்சாபமுந்தரித்தான்றள்ளா
உரன்படர்தோளின்மீளாக்கவசமிட்டுடைவாளார்த்தான். (கூஉ)

மீளருஞ்செருவின்விண்ணுமண்ணுமென்மேல்வந்தாலும்
நாளுலந்தழியுமென்றேநானுனக்குறைப்பதன்னே
ஆளியின்றுப்பிறுயிவ்வமரெனக்கருளிநின்றென்
தோளினைத்தின்னுகின்றசோம்பினைத்துடைத்தியென்றான். (கூங)

என்றனனிளையவீரனிசைந்திலனிராமனேந்தும்
குன்றனதோளினாற்றலுள்ளத்தினுணரக்கொண்டான்
அன்றியுமண்ணலாணைமறுக்கிலனங்கைகூப்பி
நின்றனனிருந்தான்கண்ணீர்நிலனுறப்புலர்கின்றாள்பால். (கூச)

62. தள்ளாவுரம் - எவராலும் வெல்லமுடியாத வலிமை. மீளாக்கவசம் ஸ்ரீ ராமபிரானுடலினின்னும் பிறர்கணையால் பெயர்த்துவிடமுடியாத வலிய கவசம்.

குழையுறுமதியம்பூத்தகொம்பனாள்குழைந்துபேச
தழையுறுசாலேநின்றுந்தனிச்சிலைதரித்தமேரு
மழையெனமுழங்குகின்றவாளெயிற்றரக்கர்காண
முழையினின்றெழுந்துசெல்லுமடங்கலின்முனிந்துசென்றான். ()

தோன்றியதோன்றறன்னைச்சுட்டினள்காட்டிச்சொன்னாள்
வான்றொடர்முழங்கிறந்தவயங்குவெந்தீயிதென்னத்
தான்றொடர்குலத்தையெல்லாந்தொலைக்குமாசமைந்துநின்றாள்
ஏன்றுவந்தெதிர்த்தவீரனிவனிகலிராமனென்ன. (௬௬)

கண்டனன்கனகத்தேர்மேற்கதிரவன்கலங்கிநீங்க
விண்டனினின்றவென்றிக்கரனெனும்விலங்கற்றோளான்
மண்டமர்யானேசெய்திம்மானுடன்வலியைநீக்கிக்
கொண்டனன்வாகையென்றுபடைஞரைக்குறித்துச்சொன்னான். ()

மானுடனொருவன்வந்தவலிகெழுசேனைக்கம்மா
கானிடமில்லையென்னுங்கட்டுரைகலந்தகாலை
யானுடைவென்றியென்னும்யாவருங்கண்டுநிற்றிர்
ஊனுடையிவனையானேயுண்குவெனுயிரையென்றான். (௬அ)

அவ்வுரைகேட்டுவந்தானகம்பனென்றமைந்தகல்விச்
செவ்வியானொருவனையசெப்புவென்செருவிற்சால
வெவ்வியராதனன்றேவீரரிலாண்மைவீர
இவ்வயினுளவாந்தீயநிமித்தமென்றியம்பலுற்றான். (௬௯)

வேறு.

குருதிமாமழைசொரிந்தனமேகங்கள்குமுறிப்
பருதிவானவனூர்வளைப்புண்டதுபாராய்
கருதுவீரநின்கொடிமிசைக்காக்கையின்கணங்கள்
பொருதுவீழ்வனபுலம்புவநிலம்படப்புரள்வ. (௭0)

வாளின்வாய்களையீவளைக்கின்றனவயவர்
தோளுநாட்டமுமிடந்துடிக்கின்றனதூங்கி
மீளிமொய்ம்பரினிவுளிவீழ்கின்றனவிரவி
ஞாளியோடுநின்றுளைக்கின்றநரிக்குலம்பலவால். (௭௧)

பிடியெலாமதம்பெய்திடப்பெருங்கவுள்வேழம்
ஒடியுமான்மருப்புலகமுங்கம்பிக்குமுயர்வான்
இடியும்வீழ்ந்திடும்மெரிந்திடும்பெருந்திசையெவர்க்கும்
முடியின்மாலைகள்புலாலொடுமுழுமுடைநாறும். (௭௨)

இனையவாகலின்மானுடனொருவனென்றிவனை
நினையலாவதொன்றன்றதுநீதியாநின்ற
வினையெலாஞ்செய்துவெல்லலாந்தன்மையனல்லன்
புனையும்வாகையாய்பொறுத்தியென்னுரையெனப்புகன்றான். (எங)

உரைத்தவாசகங்கேட்டலுமுலகெலாமுலையச்
சிரித்துநின்றவென்சேவகந்தேவரைத்தேய
அரைத்தவம்மியாமலங்கெழிற்றோளமர்வேண்டி
இரைத்துவீங்குவமானுடற்கெளியவோவென்றான். (எச)

என்னுமாத்திரத்தெறிபடையிடியெனவிடியா
மன்னர்மன்னவன்மதலையைவளைந்தனவளைந்து
மின்னும்வாளுளைமடங்கலைமுனிந்தனவேழம்
துன்னினாலெனச்சுடுசினத்தரக்கர்தந்தொகுதி. (எரு)

வளைந்தகாலையில்வளைந்தனவிராமன்கைவரிவில்
விளைந்தபோரையுமாவதும்விளம்புதும்விசையால்
புளைந்தபாய்புரிபுரண்டனபுகர்முகப்பூட்கை
உளைந்தமால்வரையுருமிடிபடவொடிந்தென்ன. (எசு)

சூலமற்றனவற்றனசுடர்மழுத்தொகைவாள்
மூலமற்றனவற்றனமுரட்டண்டுபிண்டி
பாலமற்றனவற்றனபகழிவெம்பகுவாய்
வேலுமற்றனவற்றனவில்லொடுபல்லம். (எஎ)

தொடிதுணிந்தனதோளொடுதோமரந்துணிந்த
அடிதுணிந்தனகடகளிறச்சொடுநெடுந்தேர்
கொடிதுணிந்தனகுரகதந்துணிந்தனகுலமா
முடிதுணிந்தனமுளையொடுதுணிந்தனமுசலம். (எஅ)

கருவிமாவொடுகார்மதக்கைம்மலைக்கணத்தோ
டுருவிமாதிரத்தோடினசுடுசரமுதிரம்
அருவிமாரியிற்றேங்கினதவனியிலரக்கர்
திருவின்மார்பகந்திறந்தனதுறந்தனசிரங்கள். (எகூ)

ஒன்றுபத்துநூறாயிரங்கோடியென்றுணராத்
துன்றுபத்தியவிராகவன்சுடுகரந்துரப்பச்
சென்றுபத்திரத்தலையெனமலைதிரண்டென்னக்
கொன்றுபத்தியிற்குவித்தனபிணப்பெருங்குன்றம். (அ0)

77. பிண்டிபாலம் - பீலித்தண்டு. எஃகம் என்பனவாம்.

காடுகொண்டனாருலவைகள்கதழெரிகதுவச்
சூடுகொண்டனவெனத்தொடர்குருதிமீத்தோன்ற
ஆடுகின்றனவறுகுறையயிலம்புவிண்மேல்
ஓடுகின்றனவுயிரையுந்தொடர்வனவொத்த. (அக)

கைகள்வாளொடுகளம்படக்கழுத்தறக்கவசம்
மெய்கள்போழ்படத்தாள்விழவெருவிடநிருதர்
செய்யமாத்தலைசிந்தினதிசையுறச்சென்ற
தையலார்நெடுவிழியெனக்கொடியனசரங்கள். (அஉ)

மாரியாக்கியவடிக்கணைவரைபுரைநிருதர்
பேரியாக்கையின்பெருங்கரைவயின்றொழும்பிறங்க
ஏரியாக்கினயாறுகளியற்றினநிறையச்
சோரியாக்கினபோக்கினவனமெனுந்தொன்மை. (அங)

அலைமிதந்தனகுருதியின்பெருங்கடலரக்கர்
தலைமிதந்தனநெடுந்தடிமிதந்தனதடக்கை
மலைமிதந்தனவாம்பரிமிதந்தனவயப்போர்ச்
சிலைமிதந்தனகொடியொடுமிதந்தனதேர்கள். (அச)

ஆயகாலையினனல்விழித்தார்த்திகலரக்கர்
தீயவார்கணைமுதலியவடுசினப்படைகள்
மேயமால்வரையொன்றினைவளைத்தனமேகம்
தூயதாரைகள்சொரிவனவாமெனச்சொரிந்தார். (அரு)

சொரிந்தபல்படைதுணிபடத்துணிபடச்சரத்தால்
அரிந்துபோந்தனசிந்திடத்திசைதிசையகற்றி
நெரிந்துபார்மகண்முதுகிறவனமுற்றுநிறைய
விரிந்தசெம்மயிர்க்கருந்தலைமலையெனவீழ்த்தான். (அசு)

கவந்தபந்தங்கள்களித்தனகுளித்தகைம்மலைகள்
சிவந்தபாய்ந்தவெங்குருதியிற்றிருகியசினத்தால்
நிவந்தவெந்தொழினிருதர்தநெடுநிணந்தெவிட்டி
உவந்தவன்கழுதுயிர்சுமந்துளுக்கியதும்பர். (அஎ)

மருடருங்களிவஞ்சனைவளையெயிற்றரக்கர்
கருடனஞ்சுறுகண்மணிகாகமுங்கவர்ந்த
இருடரும்புரத்திழுதையர்பழுதுறற்கெளிதே
அருடருந்திறத்தறனன்றிவலியதுண்டாமோ. (அஅ)

---

88. வளையெயிறு - வளைந்தபற்கள், வச்சிரதந்தங்கள்.

### வேறு.

பல்லாயிரமிருள்கீறியபகலோனெனவொளிரும்
வில்லாளனைமுனியாவெயிலயிலாமெனவிழியாக்
கல்லார்மழைகணமாமுகில்கடைநாள்விடுவனபோல்
எல்லாமொருதொடையாவுடனெய்தார்வினைசெய்தார். (அகூ)

எறிந்தாரெனவெய்தாரெனநினைந்தாரெனவெறிய
அறிந்தாரெனவறியாவகையயில்வாளியினறுத்தான்
செறிந்தாரையும்பிரிந்தாரையுஞ்செறுத்தாரையுஞ்சினத்தால்
மறிந்தாரையும்வலித்தாரையுமடித்தான்சிலைபிடித்தான். (கூ0)

வானத்தனகடலின்புறவலயத்தனமதிசூழ்
மீனத்தனமிளிர்குண்டலமிதுனத்துனமிடல்வெங்
கானத்தனமலையத்தனதிசைசுற்றியகரியின்
தானத்தனகாருத்தனசரமுந்தியசிரமே. (கூக)

மண்மேலனமலைமேலனமழைமேலனமதிதோய்
விண்மேலனநெடுவேலையின்மேல்கீழனமிடலோர்
புண்மேலனகுருதிப்பொழிதிரையாருகள்பொங்கத்
திண்மேருவைநகுமார்பினையுருவித்திரிசரமே. (கூ௨)

பொலந்தாரினரனலின்சிகைபொதிகண்ணினரெவரும்
வலந்தாங்கியவடிவெம்படைவிடுவார்சரமழையால்
உலந்தாருடல்நடலோடுறவுலவாருடலூற்றார்
அலந்தார்நிசிசரராமெனவிமையோரொடுமார்த்தார். (கூந)

ஈரற்செறிகமலத்தனவிரதத்திரள்புளினம்
வீரக்கரிமுதலைக்குலமிதக்கின்றனவுதிக்கும்
பாரக்குடர்மிடைபாசடைபடர்கின்றனபலவாம்
மூரித்திரைபுதிரக்கடன்முழிகிக்கழுதெழவே. (கூச)

அழைத்தார்சிலரயர்ந்தார்சிலரழிந்தார்சிலர்கழிந்தார்
உழைத்தார்சிலருயிர்த்தார்சிலருருண்டார்சிலர்புரண்டார்
குழைத்தாழ்திரைக்குருதிக்கடல்குளித்தார்சிலர்கொலைவாய்
மழைத்தாரைகள்படப்பாரிடைமடிந்தார்சிலருடைந்தார். (கூரு)

உடைந்தார்களைநகைசெய்தனருருடேரினருடனாய்
அடைந்தார்படைத்தலைவீரர்கள்பதினால்வருமயில்வாள்
மிடைந்தார்நெடுங்கடற்றானையர்மிடல்வில்லினர்விரிநீர்
கடைந்தார்வெருவுறமீதெழுகடுவாமெனக்கொடியார். (கூசா)

நாகத்தனியொருவில்லினைநளிர்முப்புரர்முன்னாள்
மாகத்திடைவளைவுற்றனரெனவள்ளலைமதியார்
ஆகத்தெழுகனல்கண்வழியுகவுற்றெதிரழன்றார்
மேகத்தினைநிகர்வில்லியைவளைத்தார்செருவிளைத்தார். (கூ௭)

எய்தார்பலரெறிந்தார்பலர்மழுவோச்சினரெழுவால்
பெய்தார்புலர்புடைத்தார்பலர்கிடைத்தார்பலர்பொருப்பாப்
பெய்தார்மழைபிதிர்த்தாரெரிபிறைவாளெயிற்றரக்கர்
வைதார்பலர்தெழித்தார்பலர்மலையாமெனவளைத்தார். (கூ௮)

தேர்பூண்டனவிலங்கியாவையுஞ்சிலைபூண்டெழுகொலையால்
பார்பூண்டனமதமாகரிபலிபூண்டனபரிமாத்
தார்பூண்டனவுடல்பூண்டிலதலைவெங்கதிர்தழிவந்
தூர்பூண்டனபிரிந்தாலெனவிரிந்தாருயிருலைந்தார். (கூகூ)

மால்பொத்தினமறவோருடன்மழைபொத்தினவழிசெம்
பால்பொத்தினநதியிற்கிளர்படிபொத்தினபடர்வான்
மேல்பொத்தினகுழுவிண்ணவர்விழிபொத்தினர்விரைவெங்
கால்பொத்தினர்நமன்றூதுவர்கடிதுற்றுயிர்கவர்வார். (க00)

பேயேறினசெருவேட்டெழுபித்தேறினர்பிலவாய்
நாயேறினதலைமேனெடுநறியேறினவெரிகால்
வாயேறினவடிவாளியின்வானேறினர்வந்தார்
தீயேறிகலரியேறெனமுகிலேறெனச்செறிந்தார். (க0க)

தலைசிந்தினவிழிசிந்தினதழல்சிந்தினதரைமேல்
மலைசிந்தினபடிசிந்தினவரிசிந்துரமழைபோல்
சிலைசிந்தினகணைசிந்தினதிசைசிந்தினதிசையோ
டுலைசிந்தினபொறிசிந்தினவுயிர்சிந்தினவுடலம். (க0உ)

வேறு.

படைப்பெருந்தலைவரும்படைத்ததேர்களும்
உடைத்தடம்படைகளுமொழியவுற்றெதிர்
விடைத்தடர்ந்தெதிர்ந்தவர்வீரன்வாளியால்
முடைத்தவெங்குருதியின்கடலின்மூழ்கினார். (க0ங)

100. மால் - தப்பிப்பிழைக்க வழிகாணாது கொண்டமயக்கம். பொத்துதல் - மூடுதல்.

101. வானேறினர் - இறந்தனர்.

சுற்றுறநோக்கினர்தொடர்ந்தசேனையில்
அற்றிலதலையெனுமாக்கைகண்டிலர்
தெற்றினரெயிறுகடிருகினுர்சினம்
முற்றினரிராமனைமுடுகுதேரினுர். (௧0௪)

ஏழிருதேரும்வந்திமைப்பின்முன்பிடைச்
சூழ்வனகணைகளிற்றுணியநூறினன்
ஆழியும்புரவியுமாளுமற்றவை
ஊழிவெங்காலெறியோங்கலொத்தவே. (௧0௫)

அழிந்தனதேரவரவனிகீண்டுக
இழிந்தனர்வரிசிலையெடுத்தகையினர்
ஒழிந்திலர்சரங்களையுருமினேறெனப்
பொழிந்தனர்பொழிகனல்பொடிக்குங்கண்ணினுர். (௧0௬)

நூறியசரமெலாநுறுங்கவாளியால்
ஈறுசெய்தவர்சிலையேழொடேழையும்
ஆறிரெடாறுமோரிரண்டுமம்பினுன்
கூறுசெய்தமர்த்தொழிற்கொதிப்பைநீக்கினுன். (௧0௭)

வில்லிழந்தனைவருங்வெகுளிமீக்கொளக்
கல்லுயர்நெடுவரைகடிதினேந்தினர்
ஒல்லையினுருத்துயர்விசும்பினேங்கிநின்
றெல்லுயர்பொறியுகவெறிதன்மேயினுர். (௧0௮)

கலைகளின்பெருங்கடல்கடந்தகல்வியான்
இலைகொள்வெம்பகழியேழிரண்டுவாங்கினுன்
கொலைகொள்வெஞ்சிலையொடுபுருவங்கோட்டினுன்
மலைகளுந்தலைகளும்விழுந்தமண்ணினே. (௧0௯)

படைத்தலைத்தலைவர்கள்படலும்பல்படை
புடைத்தடர்ந்தெதிரழல்புரையுங்கண்ணினுர்
கிடைத்தனரரக்கர்கள்கீழுமேலுமாய்
அடைத்தனர்திசைகளையமரரஞ்சினுர். (௧௧0)

முழங்கினபெரும்பணைமூரிமால்கரி
முழங்கினவரிசிலைமுடுகுநாணெலி
முழங்கினசங்கொடுபுரவிமுற்றுற
முழங்கினவரக்கர்தமுகிலினுர்ப்பரோ. (௧௧௧)

---

109. கலைகள் - தநுர்வேதமுதலிய நூல்கள்.

வேறு.

வெம்படைநிருதர்வீசவிண்ணிடைமிடைந்தவீரன்
அம்பிடையறுக்கச்சிந்தியற்றனபடுமென்றஞ்சி
உம்பருமிரியல்போனாருலகெலாமுலைந்துசாய்ந்த
கம்பமிற்றிசையினின்றகளிறுங்கண்ணிமைத்தவன்றே. (௧௧௨)

வேறு.

அத்தலைத்தானையனளவிலாற்றலன்
முத்தலைக்குரிசில்பொன்முடியன்முக்கணான்
கைத்தலைச்சூலமேயனையகாட்சியான்
வைத்தலைப்பகழியான்மழைசெய்வில்லினான். (௧௧௩)

அன்னவனடுவுறவாழியூழியி
தென்னவந்தெங்கணுமிரைத்தசேனையுள்
தன்னிகர்வீரனுந்தமிபன்வில்லினன்
துன்னிருளிடையதோர்விளக்கிற்றோன்றினான். (௧௧௪)

ஓங்கொளிவாளினனுருமினார்ப்பினன்
வீங்கியகவசத்தன்வெய்யகண்ணினன்
ஆங்கவனணிக்கெதிரணிகளாகநேர்
தாங்கினனிராமனுஞ்சரத்தின்றானையால். (௧௧௫)

தாளிடையற்றனதலையுமற்றன
தோளிடையற்றனதொடையுமற்றன
வாளிடையற்றனமழுவுமற்றன
கோளிடையற்றனகுடையுமற்றன. (௧௧௬)

கொடியொடுகொடுஞ்சினப்புரவிக்கூட்டறப்
படியிடைபடிந்தனபருத்ததேர்பணை
நெடியவன்கடகரிபுரண்டநெற்றியின்
இடியொடுமுறிந்துவீழ்சிகரமென்னவே. (௧௧௭)

அற்றனசிரமெனவறிந்தேற்றலர்
கொற்றவெஞ்சிலைச்சரங்கோத்துவாங்குவார்
இற்றவரிருதவரெழுந்துவிண்ணினைப்
பற்றினமழையெனப்படைவழங்குவார். (௧௧௮)

கேடகத்தடக்கையர்கிரியின்மேற்றத்தர்
ஆடகக்கவசத்தர்கவந்தமாடுவ

பாடகத்தரம்பையர்மருளப்பல்வித
நாடகத்தொழிலினைநடிப்பவொத்தவே. (௧௧௯)

கவரிவெண்குடையெனுநுரையகைம்மலை
சுவறருசுறவமாழ்சுழியதண்டுறைப்
பவரினப்படுமணிகுவிக்கும்பண்ணைய
உவரியைப்புதுக்கினவுதிரயாறரோ. (௧௨௦)

சண்டவெங்கடுங்கணைதடியத்தான்சில
திண்டிறல்வளையெயிற்றரக்கர்தேவராய்
வண்டுழல்புரிகுழன்மடந்தைமாரொடும்
கண்டனர்தம்முடைக்கவந்தநாடகம். (௧௨௧)

ஆய்வளைமகளிரோடமரரீட்டத்தர்
தூயவெங்கடுங்கணைதுணித்ததங்கடோள்
பேயொருதலைகொளப்பிணங்கிவாய்களின்
நாயொருதலைகொளநகையுற்றார்சிலர். (௧௨௨)

தெரிகணைமூழ்கலிற்றிறந்தமார்பினர்
இருவினைகடந்துபோயும்பரெய்தினார்
நிருதர்தம்பெரும்படைநெடிதுநின்றவன்
ஒருவனென்றுள்ளத்தினுலைவுற்றாரரோ. (௧௨௩)

கைக்கரியன்னவன்பகழிகண்டகர்
மெய்க்குலம்வேறொடுந்துணித்துவீழ்த்தின
மைக்கருமனத்தொருவஞ்சன்மாண்பிலன்
பொய்க்கரிகூறியகொடுஞ்சொல்போன்றவே. (௧௨௪)

அஞ்சிறையறுபதமடைந்தகீடத்தைத்
தஞ்செனத்தன்மயமாக்குந்தன்மைபோல்
வஞ்சகத்தரக்கரைவளைத்துவள்ளறான்
செஞ்சரத்தூய்மையாற்றேவராக்கினான். (௧௨௫)

வலங்கொள்போர்மானுடன்வலிந்துகொன்றமை
அலங்கல்வேலிராவணற்கறிவிப்பாமெனச்
சலங்கொள்போரரக்கர்தமுருக்கடாங்கின
இலங்கையினுற்றவக்குருதியாறரோ. (௧௨௬)

---

121. சண்டவெங் கடுங்கணை - வேகம்பொருந்திய கொடியபாணங்கள் நமன்போன்ற கொடிய கணைகளுமாம்.

125. அறுபதம்-சினையாகுபெயராய் அறுகாற்பறவையை யுணர்த்திற்று.

சூழ்ந்ததார்நெடும்படைபகழிசுற்றுறப்
போழ்ந்துயிர்குடித்தலிற்புரளப்பொங்கினான்
தாழ்ந்திலன்முத்தலைத்தலைவன்சேரியின்
ஆழ்ந்ததேரம்பரத்தோட்டியார்க்கின்றான். (௧௨௭)

ஊன்றியதேரினானுருமின்வெங்கணை
வான்றொடர்மழையெனவாய்மையாவர்க்கும்
சான்றெனநின்றவத்தருமமன்னவன்
தோன்றறன்றிருவுருமறையத்தூவினான். (௧௨௮)

தூவியசரமெலாந்துணியவெங்கணை
ஏவினனிராமனுமேவியேழிரு
பூவியல்வாளியாற்பொலங்கொடேரழித்
தாவிவெம்பாகனையழித்துமாற்றினான். (௧௨௯)

அன்றியுமக்கணத்தமரரார்தெழப்
பொன்றெரிவடிம்புடைப்பொருவில்வாளியால்
வன்றொழிறீயவன்மகுடமாத்தலை
ஒன்றொழித்திரண்டையுமுருட்டினானரோ. (௧௩௦)

தேரழிந்தவ்வழித்திரிசிராவெனும்
பேரழிந்ததனினுமறம்பிழைத்திலன்
வாரழிந்துமிழ்சிலைவானநாட்டுழிக்
காரிழிந்தாலெனக்கணைகள்சிந்தினான். (௧௩௧)

ஏற்றியநுதலினனிருண்டகார்மழை
தோற்றியவில்லொடுந்தொடரமீமிசைக்
காற்றிடையழிந்தெனக்கார்முகத்தையும்
மாற்றரும்பகழியாலறுத்துமாற்றினான். (௧௩௨)

வேறு.

வில்லிழந்தனனென்னினும்விழித்தவாண்முகத்தின்
எல்லிழந்திலனிழந்திலன்வெங்கதமிடிக்கும்
சொல்லிழந்திலன்றோள்வலியிழந்திலன்சொரியும்
கல்லிழந்திலனிழந்திலன்கறங்கெனத்திரிதல். (௧௩௩)

ஆளிரண்டுநூறுளவெனவந்தரத்தொருவன்
மூளிரும்பெருமாயவெஞ்செருமுயல்வானைத்
தாளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றடிந்து
தோளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றுணித்தான். (௧௩௪)

அற்றதாளொடுதோளினையிலெயிறிலங்கப்
பொற்றைமாமுழைட்புலாலுடைவாயினன்புகுந்து
பற்றவாதரிப்பான்றனைநோக்கினன்பரியான்
கொற்றவார்சிலைச்சரங்கொடுதலையையுங்குறைத்தான். (௧௩௫)

திரிசிராவெனுஞ்சிகரமண்சேர்தலுஞ்செறிந்த
நிருதரோடினர்தூடணன்விலக்கவுநில்லார்
பரிதிவாளினர்கேடகத்தடக்கையர்பரந்த
குருதிநீரிடைவார்கழற்கொழுங்குடர்தொடக்க, (௧௩௬)

கணத்தின்மேனின்றவானவர்கைபுடைத்தார்த்தார்
பணத்தின்மேனிலங்குழியுறக்கால்கொடுபதைத்தார்
நிணத்தின்மேல்விழுந்தழுந்தினர்சிலர்சிலர்நிவந்த
பிணத்தின்மேல்விழுந்துருண்டனருயிர்கொடுபிழைப்பார். (௧௩௭)

வேய்ந்தவாளொடுவேலிடைமிடைத்தனவெட்ட
ஓய்ந்துளார்சிலருலந்தனருதிரநீர்யாற்றில்
பாய்ந்துகால்பதிந்தழுந்தினர்சிலர்சிலர்பயத்தால்
நீந்தினார்நெடுங்குருதியங்கடல்புக்குநிலையார். (௧௩௮)

கச்சும்வாளுந்தங்காருடர்ந்தீர்வனகாணார்
அச்சமென்பதொன்றுருவுகொண்டாலெனவழிவார்
உச்சவீரன்கைச்சுடுசரநிருதர்நெஞ்சுருவத்
தச்சுநின்றனகண்டனரவ்வழித்தவிர்ந்தார். (௧௩௯)

மண்டியோடினர்சிலர்நெடுங்கடகரிவயிற்றில்
புண்டிறந்தமாமுழையிடைவாளொடும்புகுவார்
தொண்டைநீங்கியகவந்தத்தைத்துணைவநீயெம்மைக்
கண்டிலேனெனப்புகலெனக்கைதலைக்கொள்வார். (௧௪௦)

அனையராகியவரக்கரையாண்டொழிற்கமைந்த
வினையநீங்கியமனித்தரைவெருவன்மினன்ன
நினையுநானுமக்குரைப்பதுமுண்டெனநின்றே
துனையும்வார்ப்பரித்தேரினன்றூடணன்சொன்னான். (௧௪௧)

வச்சையாமெனும்பயமனத்துண்டெனவாழும்
கொச்சைமாந்தரைக்கோல்வளைமகளிருங்கூசார்

---

136. கழல் - வீரர்காலில் அணிகின்ற அணி.
139. ஈர்தல் - இழுத்தலும் பிளத்தலுமாம்.

நிச்சயம்மெனுங்கவசந்தானிலைநிற்பதன்றி
அச்சமென்னுமிதாருயிர்க்கருந்துணையாமோ. (கசஉ)

பூவராவுவேற்புரந்தரனோடுதான்பொன்று
மூவரோடுதான்முன்னின்றுமுட்டியமுனையில்
ஏவரோடினரிராக்கதர்நுமக்கிடைந்தோடும்
தேவரோடுகற்றறிந்துளிராமெனத்திகைத்தீர். (கசங)

இங்கொர்மானுடற்கித்தனைவீரர்களிடைந்தீர்
உங்கைவாளொடுபோய்விழுந்தூர்புகலுற்றீர்
கொங்கைமார்பிடைக்குறிப்புறக்களிப்புறுங்கொழுங்கண்
நங்கைமார்களைப்புல்லுதிரோநலநுகர்வீர். (கசச)

செம்புகாட்டியகண்ணிணைபாலெனத்தெளிந்தீர்
வெம்புகாட்டிடைநுழைதொறும்வெரிநுறப்பாய்ந்த
கொம்புகாட்டுதிரோதடமார்பிடைக்குளித்த
அம்புகாட்டுதிரோகுலமங்கையர்க்கம்மா. (கசரு)

எக்கமிங்கிதன்மேலுமுண்டேயிகன்மனிதன்
ஆக்குவெஞ்சமத்தாண்மையவ்வமரர்க்குமரிதாத்
தாக்கரும்புயத்துங்குலத்தலைமகன்றங்கை
மூக்கொடன்றியும்முறுகொடும்போம்பழிமுயன்றீர். (கசசு)

ஆரவாழ்க்கையின்வணிகராயமைதிரோவயில்வேல்
வீரவாட்கொடுவென்மடுத்துழுதிரோவெறிபோர்த்
தீரவாழ்க்கையிற்றெறல்வரைச்செருவிடைப்பறித்த
வீரவாட்கையிரெங்ஙனம்வாழ்திரோவிளம்பீர். (கசஎ)

என்றுதானுந்தன்னெறிகடற்சேனையுமிறைநீர்
நின்றுகாண்டிரென்னெடுஞ்சிலைவலியெனநேராச்
சென்றுதாக்கினன்றேவருமருள்கொண்டுதிகைத்தார்
நன்றுகாத்தியென்றிராமனுமெதிர்செலநடந்தான். (கசஅ)

ஊடறுப்புண்டமொய்படைக்கையொடுமுயர்ந்த
கோடறுப்புண்டகுஞ்சரங்கொடிஞ்சொடுகொடியின்
காடறுப்புண்டகாலியதேர்கதிர்ச்சாலி
சூடறுப்புண்டவெனக்கழுத்தறுப்புண்டதுரகம். (கசகூ)

---

143. பூவராவுவேல் - இலைபோலும் அராவுவேல், பொலிவுற்ற அராவிய வச்சிராயுதமுமாம்.

147. வீரவாட் - கொடுவெழுமடுத்துழுதிரோ எனப் பிரதியந்தரம்.

துருவியோடினவுயிர்நிலைசுடுசரந்துரந்த
கருவியோடினகச்சையுங்கவசமுங்கழல
அருவியோடினவெனவழிகுருதியாறொழுக
உருவியோடினகேடகத்தட்டொடுமுடலம். (கரு௦)

ஆய்ந்தகங்கபத்திரங்கள்புக்கரக்கரதாவி
தோய்ந்ததோய்விலாப்பிறைமுகச்சரஞ்சிரந்துமித்த
காய்ந்தவெஞ்சரநிருதர்தங்கவசமார்புருவப்
பாய்ந்தவஞ்சகரிதயமும்பிளந்தனபல்லம். (கருக)

தூடணன்விடுசுடுசரம்யாவையுந்துணிய
மாடுநின்றவர்வழங்கியபடைகளுமாற
ஆடல்கொண்டனனளப்பரும்பெருவலியரக்கர்
கூடிநின்றவக்குரைகடல்வறள்படக்குறைத்தான். (கரு௨)

ஆர்த்தெழுந்தனர்வானவரருவரைமரத்தோ
டீர்த்தெழுந்தனகுருதியின்பெருநதியிராமன்
தூர்த்தசெஞ்சரந்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்து
போர்த்தவெஞ்சினத்தரக்கரைப்புரட்டினபுவியில். (கருந)

தோன்றுமால்வரைத்தொகையெனத்துவன்றியநிணச்சே
றூன்றபாழ்வயிற்றலகையைப்புகல்வதெனமேவெட்
டீன்றிறொலாமுலைந்தனரொல்லையிலொழிந்தார்
கான்றவின்னுயிர்காலனுங்கவர்ந்துமெய்ம்மறந்தான். (கருச)

களிறுதேர்பரிகடுத்தவர்முடித்தலைகவந்தம்
ஒளிறுபல்படைத்தங்குலத்தரக்கர்தமுடலம்
வெளிறுசேர்நிணம்பிறங்கியவடுக்கலின்மீதாக்
குளிறுதேர்கடிதோட்டினன்றூடணன்கொதித்தான். (கருரு)

அறங்கொளாதவராக்கைகளடுக்கியவடுக்கல்
பிறங்கிநீண்டனகணிப்பிலபெருங்கடுவிசையால்
கறங்குபோன்றுளதாயினும்பிணப்பெருங்கட்டத்
திறங்குமேறுமத்தேர்பட்டதியாதெனவுரைப்பாம். (கருசு)

அரிதினெய்தினனையைந்துகொய்யுளைப்பரிமா
உருளுமாழியதொருதனித்தேரினனுலகத்
திருளைநீக்கியவிந்துவிற்பொலிகின்றவிராமன்
தெருளுநும்வார்கணைக்கூற்றெதிராவிசென்றென்ன. (கருஎ)

155, உடலம் - உறுப்புகளறுபடாமல் வீழ்ந்திறந்த சரீரம்,

சென்றதேரையுஞ்சிலையுடைமலையெனத்தேர்மேல்
நின்றதூடணன்றன்னையுநோக்கியநிமலன்
நன்றுநன்றுநின்னிலையெனவருளிறைநயந்தான்
என்றகாலத்தவ்வெய்யவன்பகழிமூன்றெய்தான். (௧௫௮)

தூரவட்டவெண்டிசைகளைத்தனித்தனிசுமக்கும்
பாரவெட்டினோடிரண்டினிலொன்றுபார்புரக்கப்
பேரவிட்டவனுதலணியோடையிற்பிறழும்
வீரபட்டிகைபட்டனவிண்ணவர்வெருவ. (௧௫௯)

எய்தகாலமும்வலியுநல்லெனநினைந்திராமன்
செய்தசேயொளிமுறுவலன்கடுங்கணைதெரிந்தான்
நொய்தினங்கவனேறிற்பரித்தேர்படநூறிக்
கையின்வெஞ்சிலையறுத்தொளிர்கவசமுங்கடிந்தான். (௧௬0)

தேவரார்த்தெழமுனிவர்கடிசைதொறுஞ்சிலம்பும்
ஓவில்வாழ்த்தொலிநாற்கடன்முழக்கெனவோங்கக்
காவடாவிதுவல்லையேனீயெனக்கணையொன்
றேவினனவனெயிறுடைநெடுந்தலையிழந்தான். (௧௬௧)

வேறு.

தம்பிதலையற்றபடியுந்தயரதன்சேய்
அம்புபடையைத்துணிபடுத்ததுமறிந்தான்
வெம்புபடைவிற்கைவிசயக்கரன்வெருண்டான்
கொம்புதலைகட்டியகுலக்கரிகடுப்பான். (௧௬௨)

அந்தகனுமுட்கிடவரக்கர்கடலோடும்
சிந்துரம்வயப்புரவிதேர்திசைபரப்பி
இந்துவைவளைக்குமெழிலிக்குலமெனத்தான்
வந்துவரிவிற்கைமதயானையைவளைத்தான். (௧௬௩)

அடங்கலில்கொடுந்தொழிலரக்கரவ்வநந்தன்
படங்கிழிதரப்படிதனிற்பலவிதப்போர்
கடங்கலுழ்தடங்களிறுதேர்பரிகடாவித்
தொடங்கினர்நெடுந்தகையும்வெங்கணைதுரந்தான். (௧௬௪)

துடித்தனகடக்கரிதுடித்தனபரித்தேர்
துடித்தனமுடித்தலைதுடித்தனதொடித்தோள்

158. நிமலன் - மலரகிதன்.
160. சேயொளி - செம்மையொளி.
164. அநந்தன் - அந்தமில்லாதவன்.

துடித்தனமணிக்குடர்துடித்தனதசைத்தோல்
துடித்தனகழற்றுணைதுடித்தனவிடத்தோள். (கசரு)

வாளின்வனம்வேலின்வனம்வார்சிலைவனந்திண்
டோளின்வனமென்றிவைதுவன்றிநிருதப்பேர்
ஆளின்வனநின்றதனையம்பின்வனமென்னும்
கோளின்வனவன்குழுவினிற்குறைபடுத்தான். (கசசு)

தானுருவுகொண்டதருமந்தெரிசரந்தான்
மீனுருவுமேருவைவிலங்குருவுமேலாம்
வானுருவுமண்ணுருவும்வாளுருவிவந்தார்
ஊனுருவுமென்னுமிதுணர்த்தவுமுரித்தோ. (கசஎ)

அன்றிடைவளைந்தவர்குலங்களொடடங்கச்
சென்றுலைவுறும்படிதெரிந்துகணைசிந்த
மன்றிடைநலிந்துவலியோர்களெளியோரைக்
கொன்றனர்நுகர்ந்தபொருளிற்கடிதுகொன்ற. (கசஅ)

கடுங்கரனெனப்பெயர்படைத்தகழல்வீரன்
அடங்கலும்மரக்கரழிவுற்றிடவழன்றான்
ஒடுங்கலினிணக்குருதியோதமதினுள்ளான்
நெடுங்கடலின்மந்தரமெனத்தமியனின்றான். (கசகூ)

செங்கணெரிசிந்தவரிவிற்பகழிசிந்தப்
பொங்குகுருதிப்புணரியுட்புகையுநெஞ்சன்
கங்கமொடுகாகமிடையக்கடலிறேடும்
வங்கமெனலாயதொருதேரின்மிசைவந்தான். (கஎ0)

செறுத்திறுதியிற்புவனிதீயவெழுதீயின்
மறத்தின்வயிரத்தொருவன்வந்தணுகுமுந்தைக்
கறுத்தமணிகண்டர்கடவுட்சிலைகரத்தால்
இறுத்தவனும்வெங்கணைதெரிந்தனனெதிர்ந்தான். (கஎக)

தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையரக்கர்பதியெய்தான்
தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையிராமனுமறுத்தான். (கஎஉ)

ஊழியெறியிற்கொடியபாய்பகழியொன்பான்
ஏழுலகினுக்குமொருநாயகனுமெய்தான்

சூழ்சுடர்வடிக்கணையவற்றெதிர்த்தொடுத்தே
ஆழிவரிவிற்கரனுமன்னவையறுத்தான். (கள௩)

கள்ளவமர்மாயவினைகல்வியின்விளைத்தான்
வள்ளலுருவைப்பகழிமாரியின்மறைத்தான்
உள்ளமுலைவுற்றமரரோடினரொளித்தார்
வெள்ளியிறிதம்பவளவீரனும்வெகுண்டான். (கள௪)

வேறு.

முடிப்பெனின்றொருமொய்கணையாலெனத்
தொடுத்துநின்றுயர்தோளுறவாங்கினான்
பிடித்ததிண்கிலைபோகல்வானிடை
இடிப்பிழேறுசைபடக்கடிதிற்றதே. (கள௫)

வெற்றிகூறியவானவர்வீரன்வில்
இற்றபோதுதுணுக்கமுற்றேங்கினார்
மற்றொர்வெஞ்சிலையின்மைமனக்கொளா
அற்றதாலெம்வலியெனவஞ்சினார். (கள௬)

என்னுமாத்திரத்தேந்தியகார்முகம்
சின்னமென்றுந்தனிமையுஞ்சிந்தியான்
மன்னர்மன்னவன்செம்மன்மரபினால்
பின்னுறத்தன்பெருங்கரநீட்டினான். (கள௭)

கண்டுநின்றுகருத்துணர்ந்தானென
அண்டர்நாதன்றடக்கையினத்துணை
பண்டுபோர்மழுவாளியைப்பண்பினால்
கொண்டவில்லைவருணன்கொடுத்தனன். (கள௮)

கொடுத்தவில்லையக்கொண்டனிறத்தினன்
எடுத்துவாங்கிவலங்கொண்டிடக்கையில்
பிடித்தபோதுநெறிபிழைத்தோர்க்கெலாம்
துடித்தவாலிடக்கண்ணொடுதோளுமே. (கள௯)

ஏற்றிநாணிமையாமுனெடுத்தது
கூற்றினொருங்குனிக்கக்குனித்தெதிர்
ஆற்றினானவனாழியந்தேர்சரம்
நூற்றினானும்பொடிபடநூறினான். (க௮0)

174, கள்ளவமர் - உருமறைந்துநின்றுசெய்யும் போர்.

எந்திரத்தடந்தேரழிந்தானிழந்
தந்தரத்திடையார்த்தெழுந்தம்பெலாம்
சுந்தரத்தனிவில்லிதன்ருேளொனும்
மந்தரத்தின்மழைபின்வழங்கினுன். (கஅக)

தாங்கிநின்றதயரதராமனும்
தூங்குதூணியிடைச்சுடுசெஞ்சரம்
வாங்குகின்றவலக்கையோர்வாளியால்
வீங்குதோளொடுபார்மிசைவீழ்த்திஞன். (கஅஉ)

வலக்கைவீழ்தலுமற்றைக்கையால்வெற்றி
உலக்கைவானத்துருமெனவோச்சினுன்
இலக்குவற்குமுன்வந்தவிராமனும்
விலக்கினுனொருவெங்கதிர்வாளியால். (கஅங)

விராவருங்கடுவெள்ளெயிறிற்றபின்
அராவழன்றதனையதன்னுற்றலால்
மராமரங்கையில்வாங்கிவந்தெய்திஞன்
இராமனங்கோர்தனிக்கணையேவினுன். (கஅச)

வரமரக்கன்படைத்தவின்மாயையின்
உரமுடைத்தன்மையாலுலகேழையும்
பரமுருக்கியபாவத்திஞல்வலக்
கரமெனக்கரன்கண்டமுற்ருனரோ. (கஅரு)

ஆர்த்தெழுந்தனராடினர்பாடினர்
தூர்த்தமைந்தனர்வானவர்தூய்மலர்
தீர்த்தனும்பொலிந்தான்கதிரோன்றிசை
போர்த்தமென்பனிபோக்கியதென்னவே. (கஅசு)

முனிவர்வந்துமுறைமுறைமொய்ப்புற
இனியசிந்தையிராமனுமேகினுன்
அனிகவெஞ்சமத்தாருயிர்போகத்தான்
தனியிருந்தவுடலன்னதையல்பால். (கஅஎ)

விண்ணினீங்கியவெய்யவர்மேனியில்
புண்ணினீரும்பொடிகளும்போயுக

183. இலக்குவற்குமுன்வந்தபோர்க்கோலங்கொண்ட இளையபெருமாளைத்தடுத்து நிறுத்திவிட்டுவந்த என்றும், இலக்குவற்குமுன்னே பிறந்த என்றுமாம். 186. தீர்த்தன் - பரிசுத்தன்.

188. போயுக - நீங்க.

அண்ணல்வீரனைத்தம்பியுமன்னமும்
கண்ணினீரினிற்பாதங்கழுவினர். (கஅஅ)

மூத்தமொன்றின்முடிந்தவர்மொய்புணீர்
நீத்தமோடிநெடுந்திசைநேருறக்
கோத்தவேலைக்குரலெனவானவர்
ஏத்தவீரனினிதிருந்தானரோ. (கஅகூ)

இங்குநின்றதுரைத்துமிராவணன்
தங்கைதன்கைவயிறுதகர்த்தனள்
கங்குலன்னகரனைத்தழீஇநெடும்
பொங்குசெங்குருதிப்புரண்டாளரோ. (ககூ0)

ஆக்கினேன்மனத்தாசையவ்வாசையென்
மூக்கினோடுமுடியமுடிந்திலேன்
வாக்கினாலுங்கள்வாழ்வையுநாளையும்
போக்கினேன்கொடியேனென்றுபோயினள். (ககூக)

அலங்கல்வேற்கையரக்கரையாசறக்
குலங்கள்வேரறுப்பான்குறித்தாளுயிர்
கலங்குசூறைவன்போர்நெடுங்காலென
இலங்கைமாநகர்நொய்திற்சென்றெய்தினள். (ககூஉ)

ஆ_ திருவிருத்தம் - ருருகூ.

---

## எ-வது, மாரீசன்வதைப்படலம்.

---

இரைக்குநெடும்பணையரக்க ரிறந்ததனைமறந்தனள்போ லிரா மன்றுங்க, வரைப்புயத்தி னிடைக்கிடந்த பேராசை மனங்கவற்ற வாற்றாளாகித், திரைப்பரவைப்பேரகழித் திண்ணகரிற்கடிதோடிச் சீதைதன்மை, உரைப்பனெனச்சூர்ப்பணகை வரவிருந்தானிருந்த பரி சுரைத்துமன்றே. (க)

---

189. மூத்தம் - முகூர்த்தம்.

192. அரக்கரை-பாவத்தைப்போக்கித் தேவராக்குந் தன்மையையுடைய ராமபாணத்துக்கு இரையாக்கக் குறித்தாளென்பார் 'ஆசற' என்றார்.

1. சூர்ப்பணகை-சூர்ப்பணகாஎன்றவடசொல்ஆவீறுஐயாயிற்று; இப்பெ யர் சூர்ப்பம்நகம் எனப்பிரிந்து முறம்போன்ற (வடிவமுடைய) நகமுள்ளவ ளென்று ஏதுப்பொருள்படும். இது அவளுக்கு வடிவுபற்றி வைக்கப்பட்ட காரணக்குறியாகிய இயற்பெயர்

நிலையிலாவுலகினிடை நிற்பனவுநடப்பனவு நெறியினீந்த, மல ரின்மேனான்முகற்கும் வகுப்பரிதுநுனிப்பதொரு வரம்பிலாற்றல், உலைவிலா வகையுழந்த தருமமென நினைந்தவெலா முதவுந்தச்சன், புலனெலாந் தெரிப்பதொரு புனைமணிமண் டபமதனிற் பொலிய மன்னோ. (௨)

பண்டலங்கு திசைக்களிற்றின் பணைமருப்பி னிணையொடியப் படர்ந்த பொற்றோள், விண்டலங்களூறவீங்கி யோங்குதய மால்வ ரையின் விளங்கமீதில், குண்டலங்கள்குலவரையை வலம்வருவானி ரவிகொழுங் கதிர்சூழ்கற்றை, மண்டலங்கள்பன்னிரண்டு நாலேந்தா ய்ப்பொலிந்தவென வயங்கமன்னோ. (௩)

புலியினதளுடையானும் பொன்னுடைபுனைந்தானும்பூவினானு ம், நலியும்வலத் தாரல்லர் தேவரினிங் கியாவரினி நாட்டலாவார், மெலியுமிடைத் தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றி மாதர், வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க மன்னோ. (௪)

வாளுலாமுழுமணிகள் வயங்கொளியின் றொகைவழங்கவயிரக் குன்றத், தோளெலாம்படிசுமந்த விடவரவின்படநிரையிற் றோன்ற வான்ற, நாவெலாம்புடைதயங்கநாமநீரிலங்கையிற்றன்வாரியிட்ட, கோளெலாங்கிடந்தநெடுஞ்சிறையன்னநிறையாரங்குலவமன்னோ ()

வேறு.

ஆய்வரும்பெருவலியரக்காதியோர்
நாயகர்நளிர்மணிமகுடநண்ணலால்
தேய்வுறத்தேய்வுறப்பெயர்ந்துசெஞ்சுடர்
ஆய்மணிப்பொலங்கழலடிநின்றார்ப்பவே. (௬)

மூவகையுலகினுமுதல்வர்முந்தையோர்
ஓவலருதவியபரிசினோங்கல்போல்
தேவருமவுணருமுதலினோர்திறை
தூவியநறுமலர்க்குப்பைதுன்னவே. (௭)

இன்னபோதிவ்வழிநோக்குமென்பதை
உன்னலர்சரதலஞ்சுமந்நவுச்சியர்

4. புலவியாவது - ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் கோபித்தல்.

5. முழுமணி-உத்தமவிலக்கணம் நிறைந்த இரத்தினம். ஒளிநிரம்பி இரத் தினம்.

மின்னவிர்மணிமுடிவிஞ்சைவேந்தர்கள்
துன்னினர்முறைமுறைதுறையிற்சுற்றவே. (அ)

மங்கையர்திறத்தொருமாற்றங்கூறினும்
தங்களையாமெனத்தாழுஞ்சென்னியர்
அங்கையுமுள்ளமுங்குவிந்தவாக்கையர்
சிங்கவேறெனத்திறற்சித்தர்சேரவே. (கூ)

அன்னவனமைச்சரைநோக்கியாண்டொரு
நன்மொழிபகரினுநடுங்குஞ்சிந்தையர்
என்னைகொள்பணியெனவிறைஞ்சுகின்றனர்
கின்னரர்பெரும்பயங்கிடந்தநெஞ்சினர். (கo)

பிரகரநெடுந்திசைப்பெருந்தண்டேந்திய
கரதலத்தண்ணலைக்கண்ணிநோக்கிய
நரகினராமெனநடுங்குநாவினர்
உரகர்கடம்மனமுலைந்துசூழவே. (கக)

திசையுறுகரிகளைச்செற்றுத்தேவனும்
வசையுறக்கைலையைமறித்துவாளெலாம்
அசையுறப்புரந்தரனடர்த்ததோள்களின்
இசையினைத்தும்புருவிசையினைத்தவே. (கஉ)

தேசனுயர்நெறிமுறைதிறம்பவின்றியே
பாணிகள்பணிசெயப்பழுதில்பண்ணிடை
வீணையினரம்பிடைவிளைத்தகேதமறை
வாணியிறுரதன்செவியின் வார்க்கவே. (கங)

வேறு.

மேகமென்முருத்திகொண்டுவிண்ணவர்தருவும்விஞ்சை
நாகமுஞ்சுரர்ததீந்தேம்புனலொடுமொவிநவ்விந்
தோகையர்துகிலிற்றோயுமென்பதோர்துணுக்கத்தோடும்
சீகரமகரவேலைக்காவலன்சிந்தமன்றோ. (கச)

நறைமலர்த்தாதுந்தேனுநளிர்நெடுமகுடகோடி
முறைமுறையறையச்சிந்திமுரிந்துகுமணியுமுத்தும்
தறையிடையுகாதமுன்னந்தாங்கினன்றழுவிவாங்கித்
துறைதொறுந்தொடர்ந்துநின்றுசமீரணன்றுடைப்பமன்றோ. ()

15. சமீரணன் - சஞ்சரிப்பவன்; வாயுதேவன்.

வே று.

மின்னுடைவேத்திரக்கையர்மெய்புகத்
துன்னெடுங்கஞ்சுகத்துகிலர்சோர்விலர்
பொன்ளுெடுவெள்ளியும்புரந்தராதியர்க்
கின்னியன்முறைமுறையிருக்கையீயவே. (கசு)

சூலமேமுதலியதுறந்துசுற்றிய
சேலையாற்சிறியவாய்புதைத்துச்செங்கையின்
தோளுடைநெடும்பணைதுவைக்குந்தோறெலாம்
காலன்வந்திசைக்குநாட்கடிகைகூரவே. (கஎ)

நயங்கிளர்ஞானநெய்யளாவிநந்தலில்
வியங்கருப்பூரமென்பஞ்சின்மீக்கொளீஇக்
கயங்களின்மரைமலர்க்காடுபூத்தென
வயங்கெரிக்கடவுளும்விளக்கமாட்டவே. (கஅ)

அதிசயமளிப்பதற்கருளறிந்துநற்
புதிதலர்கற்பகத்தருவும்பொய்யிலாக்
கதிர்நெடுமணிகளுங்கறவையான்களும்
நிதிகளுமுறைமுறைநின்றுநீட்டவே. (ககூ)

குண்டலமுதலியகுலங்கொள்பேரணி
மண்டியபேரொளிவயங்கவீசலால்
உண்டுகொலிரவினியுலகமேழினும்
எண்டிசைமருங்கினுமிருளின்றென்னவே. (உ0)

கங்கையேமுதலியதீர்த்தகன்னியர்
கொங்கைகள்சுமந்திடைகொடியிளெல்கிடச்
செங்கையினரிசியுமலருஞ்சிந்தினர்
மங்கலமுறைமுறைகூறிவாழ்த்தவே. (உக)

ஊருவிற்றோன்றியவுயிர்பெய்யோவியம்
காரினிற்செருக்கியகலாபமஞ்ஞைபோல்
வார்விசிக்கருவியோர்வகுத்தபாணியின்
நாரியருநடநடிப்பநோக்கியே. (உஉ)

இருந்தனனுலகங்களிரண்டுமொன்றுந்தன்
அருந்தவமுடைமையினளவிலாற்றலின்
பொருந்தியவிராவணன்புருவக்கார்முகக்
கருந்தடங்கண்ணியர்கண்ணின்வெள்ளத்தே. (உங)

தங்கையுமவ்வழித்தலையிற்றூங்கிய
செங்கையள்சோரியின்றாரைசேர்ந்திழி
கொங்கையண்மூக்கினள்குழையில்காதினள்
மங்குலினொலிபடத்திறந்தவாயினள். (உ௪)

முடிமிடைவாயிலின்முறையிட்டார்கலிக்
கடையுகக்கடலொலிகாட்டக்காந்துவாள்
குடதிசைச்செக்கரிற்சேர்ந்தகூந்தலாள்
வடதிசைவாயிலின்வந்துதோன்றினாள். (உ௫)

தோன்றலுந்தொன்னகரரக்கர்தோகையர்
என்றெதிர்வயிறலைத்திரங்கியேங்கினார்
மூன்றுலகுடையவன்றங்கைமூக்கினள்
தான்றனியவள்வரத்தரிக்கவல்லரோ. (உ௬)

பொருக்கெனநோக்கினர்புகல்வதோர்கிலர்
அரக்கருமிரைத்தனரசனியாமெனக்
கரத்தொடுகரங்களைப்புடைத்துக்கண்களை
நெருப்பெழவிழித்துவாய்மடிந்துநிற்கின்றார். (உ௭)

இந்திரன்மேலதோவுலகமீன்றபேர்
அந்தணன்மேலதோவாழியானதோ
சந்திரமௌலிபாற்றங்குமேகொலோ
அந்தரமென்றுநின்றழல்கின்றார்சிலர். (உ௮)

செப்புறற்குரியவர்தெவ்வர்யாருளார்
முப்புறத்துலகமுமடங்கமூடிய
இப்புறத்தண்டத்தோர்க்கியைவதன்றிது
அப்புறத்தண்டத்தோராமென்றார்சிலர். (உ௯)

என்னையேவிராவணன்றங்கையென்றபின்
அன்னையேயென்றடிவணங்கலன்றியே
உன்னவேயொண்ணுமோவொருவராலிவள்
தன்னையேயரிந்தனடாரெனென்றார்சிலர். (௩௦)

போரிலான்புரந்தரனேவல்பூண்டனன்
ஆருலாநேமியானுற்றதேற்றுப்போய்

25. முடிமிடைவாயிலின் பல அரசர்களுடைய கிரீடங்கள் நெருங்கிய இராவணனது அரண்மனைவாயிலில், சிகரங்கள்நெருங்கிய கோபுரவாயிலின் என்றும் பொருள்படும்.

29. அப்புறத்தண்டம் - பகிரண்டம், வெளியண்டம்,

நீரினுநெருப்பினுன்பொருப்பினுனினி
ஆர்கொலாமீதெனவறைகின்றார்சிலர். (௩௧)

சொற்பிறந்தார்க்கிது துணியவொண்ணுமே
இற்பிறந்தார்தமக்கியைவசெய்திலள்
கற்பிறந்தாளெனக்கரன்கொலாமிவள்
பொற்பிறந்தாக்கினன்புகன்றென்றார்சிலர். (௩௨)

தத்துருசிந்தையர்தளருந்தேவரில்
பித்துறவல்லரேபிழைப்பில்சூழ்ச்சியார்
முந்திரத்துலகையுமுடிக்கவெண்ணுவார்
இத்திரம்புணர்த்தனரென்கின்றார்சிலர். (௩௩)

இனியொருகற்பமுண்டென்னினன்றியே
வனைகழல்வயங்குவார்வீரர்வல்லரோ
பணிவருங்கானிடைப்பழிப்பிறோன்புடை
முனிவர்வெகுளியின்முடிபென்றார்சிலர். (௩௪)

கரையறுதிருநகர்க்கருங்கணங்கைமார்
நிறைவளைத்தளிர்க்கைகணெரித்துநோக்கினர்
பிறையுறுபாலெனநிலையிற்பின்றிய
உரையினரொருவர்முன்னொருவரோடினார். (௩௫)

முழவினில்வீணையின்முரளியாழினில்
தழுவியகுழலினிற்சங்கிற்றாரையில்
எழுகுரலின்றியேயென்றுமில்லதோர்
அழுகுரல்பிறந்ததவ்விலங்கைக்கன்றரோ. (௩௬)

கள்ளுடைவள்ளமுங்களித்ததும்பியும்
உள்ளமுமொருவழிக்கிடக்கவோடினார்
வெள்ளமுநாணுறவிரிந்தகண்ணினார்
தள்ளுறுமருங்கினர்தழீஇக்கொண்டேகினார். (௩௭)

நாந்தகவுழவரைநாட்டுந்தண்டத்தர்
காந்தியமனத்தினர்புலவிகைம்மிகச்
சேந்தகணதிகமுஞ்சிவந்துநீருக
வேந்தனுக்கிளையவடாளின்வீழ்ந்தனர். (௩௮)

---

32. கற்பு - பதிவிரதாதருமம். பொற்பு - பொலிவு.

34. கற்பம் - காலத்தின் ஒருபேரெல்லை.

38. கைம்மிக - மிகவும் - அதிகப்பட, எல்லைமிக.

பொற்றலைமரகதப்பூகநேர்வுறச்
சுற்றியமணிவடந் தூங்கவூசலின்
முற்றியவாடலின் முனிவுற்றேங்கினார்
சிற்றிடையலமரத்தெருவுசேர்கின்றார். (௩௯)

எழுவெனமலையெனவெழுந்ததோள்களைத்
தழுவியவளைத்தளிர்நெகிழத்தாமரை
முழுமுகத்திருகயன் முத்திணலிகள்
பொழிதரச்சிலருளர்பொருமிவிம்முவார். (௪௦)

வேறு.

நெய்ந்நிலையவேலரசனோருநவையில்லான்
இந்நிலையுணர்ந்தபொழுதெந்நிலையனென்று
மைந்நிலைநெடுங்கண்மழைவானிலையதாகப்
பொய்ந்நிலமருங்கினர்புலம்பினர்புரண்டார். (௪௧)

மனந்தலைவருங்கணவரின்சுவைமறந்தார்
கனந்தலைவருங்குழலொசிந்துகலைசோர
நனந்தலையகொங்கைகடதும்பிடநடந்தார்
அனந்தரிளமங்கையமழுங்கியயர்கின்றார். (௪௨)

அங்கையினரன்கயிலைகொண்டதிறலையன்
தங்கைநிலையிங்கிதுகொலென்றுதளர்கின்றார்
கொங்கையிணைசெங்கையின்மலைந்துகுலைகோதை
மங்கையர்கணங்கையெதிர்வந்துவிழுகின்றார். (௪௩)

இலங்கையில்விலங்குமிவையெய்தலிலவென்றும்
வலங்கையிலிலங்குமயின்மன்னனுளனென்ன
நலங்கையிலகன்றதுகொனம்மினெனநைந்தார்
கலங்கலினிலங்கணிணைவாரிகலுழ்கின்றார். (௪௪)

சூர்ப்பணகை இராவணனடியில் விழுந்துபுரளுதல்.

என்றினையவன்றுயரிலங்கைககரெய்த
நின்றவரிருந்தவரொடோடுநெறிநேடக்
குன்றினடிவந்துபடிகொண்டலெனமன்னன்
பொன்றிணிகருங்கழல்விழுந்தனள்புரண்டாள். (௪௫)

மூடினதிருட்படலமூவுலகுமுற்றச்
சேடனும்வெருக்கொடுசிரக்குவைநெளித்தான்

44. மன் - பெருமை, அதனையுடையவன், மன்னன்.

ஆடின குலக்கிரியருக்கனுமயிர்த்தான்
ஓடின திசைக்கரிகளும்பருமொளித்தார். (சசு)

விரிந்தவலயங்கண்மிடைதோள்படரநீதிட்
டெரிந்தநயனங்களெயிறின்புறமெரிப்ப
நெரிந்தபுருவங்களிடைநெற்றியினைமுற்றத்
திரிந்தபுவனங்கள்வினைதேவருமயிர்த்தார். (சஎ)

தென்றிசைநமன்றனொடுதேவர்குலமெல்லாம்
இன்றிறுதிவந்ததுநமக்கெனவிருந்த
நின்றுயிர்நடுங்கியுடல்விம்மிநிலைநில்லார்
ஒன்றுமுரையாடலிலரும்பரிணெடிம்பர். (சஅ)

மடித்தபிலவாய்கடொறும்வந்துபுகைமுந்தத்
துடித்ததொடர்மீசைகள்சுறுக்கொளவுயிர்ப்பக்
கடித்தகதிர்வாளெயிறுமின்கனலமேகத்
திடித்தவுருமொத்துரறியாவர்செயலென்றான். (சகூ)

கானிடையடைந்துபுவிகாவல்புரிகின்றார்
மீனுடைநெடுங்கொடியினோனனையர்மேல்கீழ்
ஊனுடையுடம்புடைமையோருவமையொவ்வா
மானுடர்தடிந்தனர்கள்வாளுருவியென்றாள். (ருo)

செய்தனர்கண்மானுடரெனத்திசையனைத்தும்
வய்தநகைவந்ததெரிசிந்தினகணெல்லாம்
நொய்தவர்வலித்தொழினுவன்றமொழியொன்றோ
பொய்தவிர்பயத்தைபொழிபுக்கபுகலென்றான். (ருக)

மன்மதனையொப்பர்மணிமேனிவடமேருத்
தன்னெழிலழிப்பர்திரடோளின்வலிதன்னால்
என்னதனையிப்பொழுதிசைப்பதுலகேழின்
நன்மதனழிப்பரொரிமைப்பிணனிவில்லான். (ருஉ)

வந்தனைமுனித்தலைவர்பாலுடையர்வானத்
திந்துவின்முகத்தரெறிநீரிலெழுநாளக்
கந்தமலரைப்பொருவுகண்ணர்கழல்கையர்
அந்தமிறவத்தொழிலராரவரையொப்பார். (ருங)

46. குலகிரிகள் - கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏம கூடம், நீலம், கந்தமாதநம் என்பன.

52. நனி - விசேடித்த உரிச்சொல்.

வற்கலையர்வார்கழலர்மார்பினணிநூலர்
விற்கலையர்வேதமுறைநாவர்நனிமெய்யர்
உற்கலையருன்னையொர்துகட்டனைபுமுன்னூர்
சொற்கலையெனத்தொலைவிறாணிகள்சுமந்தார். (ருச)

ஆறுபுனலஞ்சினமரக்கரையெனச்சென்
றேறுநெறியந்தணரியம்பவுலகெல்லாம்
வேறுமெனுநுங்கள்குலம்வேரொடுமடங்கக்
கோறுமெனமுந்தையொருசூளுறவுகொண்டார். (ருரு)

மாருருளரேயிருவரோருலகின்வாழ்வார்
வீருருளரேயவரின்வில்லதனின்வல்லார்
ஆரொருவரன்னவரையொப்பவர்களையா
ஓரொருவரேயிறைவர்மூவரையுமொப்பார். (ருசு)

தாரவலயநேமிபுழவன்றயரதப்பேர்ப்
பாரவருநலத்தொருவன்மைந்தர்பழியில்லார்
வீரவருவனத்தவன்விளம்பவுறைகின்றார்
இராமனுமிலக்குவனுமென்பர்பெயரென்றான். (ருஎ)

இதுமுதல் நான்குகவிகள் இராவணன் தன்னைவெறுத்தல்.

மருந்தனையதங்கைமணிநாசிவடிவாளால்
அரிந்தவருமானுடரறிந்துமுயிர்வாழ்வார்
விருந்தனையவாளொடும்விழித்திறையும்வெள்கா
திருந்தனனிராவணனின்னுயிர்கொடின்னும். (ருஅ)

கொற்றமதுமுற்றிவலியாலரசுகொண்டேன்
உற்றபயன்மற்றிதுவொல்காவுரையிறந்தேன்
முற்றவுலகத்துமுதல்வீரர்முடியெல்லாம்
அற்றபொழுதத்திதுபொருந்துமெனலாமே. (ருகூ)

மூளுமுளநாயபழியென்வயின்முடித்தோர்
ஆளுமுளவாமவரதாருயிருமுண்டாம்

55. ஆறுபுலன் 'மக்கள்தாமேயாறறிவுயிரே' என்றதொல்காப்பியத்தால் மக்களெனப்படுவார் ஐம்பொறி யுணர்வேயன்றி மனமென்பதோ ரறிவுமுடையாராதலுணர்க.

57. மைந்து - இளமை, வலிமை, அழகு, அதனை யுடையவர், மைந்தர்.

58. அறிந்து முயிர்வாழ்வாரென்றும் பாடம்.

வாளுமுளதோ தவிடமுண்டவன்வழங்கும்
நாளுமுளதோ நாளுமுளநானுமுளெனன்றே. (கூ0)

புத்துறவுறப்பழிபுகுந்ததெனநாணித்
தத்துறுவதென்னைமனனேதளரலம்மா
எத்துயருனக்குளதினிப்பழிசுமக்கப்
பத்துளதலைப்பகுதிதோள்கள்பலவன்றே. (கூக)

என்றுரைசெயாநகைசெயாவெரிவிழிப்பான்
வன்றுணையிலாவிருவர்மானுடரைவாளால்
கொன்றிலர்களாநெடியகுன்றுடையகானில்
நின்றகரனேமுதலினோர்நிருதரென்றான். (கூஉ)

வேறு.

அறறவனுரைத்தலோடுமழுதிழியருவிக்கண்ணள்
எற்றியவயிற்றள்பாரினிடைவிழுந்தேங்குகின்றாள்
சுற்றமுந்தொலைந்ததையநொய்தெனச்சுமந்தகையள்
உற்றதுதெரியும்வண்ணமொருவகையுரைக்கலுற்றாள். (கூங)

சொல்லென்றன்வாயிற்கேட்டார்தொடர்ந்தெழுசேனையோடும்
கல்லென்றவொலியிற்சென்றார்கரன்முதற்காளைவீரர்
மல்லொன்றுகமலச்செங்கணிராமனென்றிசைத்தவேந்தல்
வில்லொன்றிற்கடிகைமூன்றிலேறினர்விண்ணிலென்றாள். (கூச)

தாருடைத்தானையோடுந்தம்பியர்தமியன்செய்த
போரிடைமடிந்தாரென்றவுரைசெவிபுகாதமுன்னம்
காரிடையுருமின்மாரிகனலொடுபிறக்குமாபோல்
நீரொடுநெருப்புக்கான்றநிறைநெடுங்கண்களெல்லாம். (கூரு)

ஆயிடையெழுந்தசீற்றத்தழுந்தியதுன்பமாழித்
தீயிடையுகுக்குநெய்யிற்சீற்றத்திற்கூற்றஞ்செய்ய
நீயிடையிழைத்தகுற்றமென்னைகொனின்னையின்னே
வாயிடையிதழுமூக்கும்வலிந்தவர்கொய்யவென்றான். (கூசு)

என்வயினுற்றகுற்றம்யாவர்க்குமெழுதொணாத
தன்மையினிராமனோடுந்தாமரைதவிசப்போநதாள் [ள்
மின்வயின்மருங்குல்கொண்டாள்வேய்வயின்மென்றோள்கொண்டா
பொன்வயின்மேனிகொண்டாள்பொருட்டினாற்புகுந்ததென்றாள். ()

61. புதுமை - உறவு, பத்துறபு; இனி புத்துற - புதுமையாக. உற - மிகவும், பழிபுகுந்தது என்றலுமொன்று. தத்துறுவது - அலைவது.

ஆரவனென்னலோடுமரக்கியுமையவாழ்ந்து
தேரவடிரண்டகொங்கைவெம்பொன்செய்குலிகச்செப்பு
பாரவள்பாதந்தீண்டப்பாக்கியம்படைத்ததம்மா
பேரவள்சீதையென்றுவடிவெலாம்பேசலுற்றாள். (சூஅ)

காமரமுரலும்பாடல்கள்ளெனக்கனிந்தவின்சொற்
றேமலர்நிறைந்தகூந்தற்றேவர்க்குமணங்காமென்னத்
தாமரையிருந்ததையல்சேடியாந்தரமுமல்லள்
யாமுரைவழங்குமென்பதேழைமைப்பாலதன்றே. (சூகூ)

மஞ்சொக்குமளகவோதிமழைபொக்கும்வடித்தகூந்தல்
பஞ்சொக்குமடிகள்செய்யபவளத்தின்விரல்களைய
அஞ்சொற்களமுதிலள்ளிக்கொண்டவள்வதனமைதீர்
கஞ்சத்தினளவிற்றேனுங்கடலினும்பெரியகண்கள். (எ0)

ஈசனார்கண்ணின்வெந்தீயென்னுமீதிழுதைச்சொல்லிவ்
வாசநாறோதியாளைக்கண்டனன்வல்லவாற்றால்
பேசலாந்தகைமைத்தல்லாப்பெரும்பிணிபிணிப்பநீண்ட
ஆசையாலழிந்துதேய்ந்தானநங்கனவ்வுருவமம்மா. (எக)

தெவ்வுலகத்துங்காண்டிசிரத்தினிற்பணத்தினோர்கள்
அவ்வுலகத்துங்காண்டியலைகடலுலகிற்காண்டி
வெவ்விலையுற்றவேலைவாளினைவென்றகண்ணாள்
இவ்வுலகத்தாரங்கம்யாவர்க்குமெழுதொணாதாள். (எஉ)

தோளையேசொல்லுகேனோசுடர்முகத்துலவுகின்ற
வாளையேசொல்லுகேனோவல்லவைவழுத்துகேனோ
மீளவுந்திகைப்பதல்லாற்றனித்தனிவிளம்பலாற்றேன்
நாளையேகாண்டியன்றேநானுனக்குரைப்பதென்னோ. (எங)

வில்லொக்குநுதலென்றாலும்வேலொக்கும்விழியென்றாலும்
பல்லொக்குமுத்தென்றாலும்பவளத்தையிதழென்றாலும்
சொல்லொக்கும்பொருளோவ்வாவாற்சொல்லலாமுவமையுண்டோ
நெல்லொக்கும்புல்லென்றாலுநேருரைத்தாகவற்றே. (எச)

இந்திரன்சசியைப்பெற்றானிருமூன்றுவதனத்தோன்றன்
தந்தையுமுமையைப்பெற்றான்றாமரைச்செங்கணானும்
செந்திருமகளைப்பெற்றான்சீதையைப்பெற்றாய்நீயும்
அந்தரம்பார்க்கினன்மையவர்க்கில்லையுனக்கேயையா. (எரு)

69. தையல்-அழகு. (பண்பாகுபெயர்.)

பாகத்திலொருவன்வைத்தான்பங்கயத்திருந்தபொன்னை
ஆகத்திலொருவன்வைத்தானந்தணனாவில்வைத்தான்
மேகத்தின்மின்னைமுன்னேவென்றநுண்ணிடையைநீயும்
மாகத்தோள்வீரபெற்றாலெங்கனம்வைத்துவாழ்தி. (எசு)

பிள்ளைபோல்பேச்சினாளைப்பெற்றபின்பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோகின்றசெல்வமவளுக்கேகொடுத்தியைய
வள்ளலேயுனக்குநல்லேன்மற்றுநின்மனையில்வாழும்
கிள்ளைபோன்மொழியார்க்கெல்லாங்கேடுசூழ்கின்றேனன்றே. (எஎ)

தேர்தந்தவல்குற்சீதைதேவர்தமுலகினிம்பர்
வார்தந்தகொங்கையார்தம்வயிறுதந்தாளுமல்லள்
தார்தந்தகமலத்தாளைத்தருக்கினர்கடையச்சங்க
நீர்தந்ததனைவெல்வானிலந்தந்துநிரம்பிற்றன்றே. (எஅ)

மீன்கொண்டூடாடும்வேலைமேகலையுலகமேத்தத்
தேன்கொண்டூடாடுங்கூந்தற்சிற்றிடைச்சீதையென்னும்
மான்கொண்டூடாடுநீயுன்வாள்வலியுலகங்காண
யான்கொண்டூடாடும்வண்ணமிராமனைத்தருதியென்பால். (எகூ)

தருவதுவிதியேயென்றாற்றவம்பெரிதுடையரேனும்
வருவதுவருநாளன்றிவந்துகைகூடவற்றோ
ஒருபதுமுகமுமார்புமுருவமுங்கண்ணுந்தோள்கள்
இருபதும்படைத்தசெல்வமெய்துவதினிநீயெந்தாய். (அ0)

சூர்ப்பணகை இவளையெடுக்கையிலிது செய்யப்பட்டேன் என்றல்.

இன்னவடன்னையுன்பாலுய்ப்பலென்றெடுக்கலுற்ற
என்னையவ்விராமன்றம்பியிடைபுகுந்திலங்குவாளால்
முன்னைமூக்கரிந்துவிட்டான்முடிந்ததென்வாழ்வுமுன்னின்
சொன்னபின்னுயிரைநீப்பான்றுணிந்தனெனென்னச்சொன்னாள். ()

கோபமுமறனுமானக்கொதிப்புமென்றினையவெல்லாம்
பாபநின்றிடத்துநில்லாப்பெற்றிபோற்பற்றுவிட்ட
தீபமொன்றொன்றையுற்றாலென்னலாஞ்செயலிற்புக்க
தாபமுங்காமநோயுமாருயிர்கலந்தவன்றே. (அ௨)

கரனையுமறந்தான்றங்கைமூக்கினைக்கடிந்துநின்றான்
உரனையுமறந்தானுற்றபழியையுமறந்தான்வெற்றி
அரனையுங்கொண்டகாமனம்பினான்முன்னைப்பெற்ற
வரனையுமறந்தான்கேட்டமங்கையைமறந்திலாதான். (அ௩)

சிற்றிடைச்சீதையென்னுநாமமுஞ்சிந்தைதானும்
உற்றிரண்டொன்றாய்நின்றலொன்றொழிந்தொன்றையுன்ன
மற்றொருமனமுமுண்டோமறக்கலாம்வழிமற்றியாதோ
கற்றனர்ஞானமின்றேற்காமத்தைக்கடக்கலாமோ. (அச)

மயிலுடைச்சாயலாளைவஞ்சியாமுன்னநீண்ட
எயிலுடையிலங்கைநாதனிதயமாஞ்சிறையில்வைத்தான்
அயிலுடையரக்கனுள்ளமவ்வழிமெல்லமெல்ல
வெயிலுடைநாளிலுற்றவெண்ணெய்போல்வெதும்பிற்றன்றே. ()

விதியதுவலியினாலுமேலுளவினைவினாலும்
பதியுறுகேடுவந்துகுறுகியபயத்தினாலும்
கதியுறுபொறியின்வெய்யகாமனோய்கல்விநோக்கா
மதியிலிமறையச்செய்ததீமைபோல்வளர்ந்ததன்றே. (அரு)

பொன்மயமானநங்கைமனம்புகப்புன்மைபூண்ட
தன்மையோவரக்கன்றன்னையயர்த்ததோர்தகைமையாலோ
மன்மதன்வாளிதூவிநலிவதோர்வலத்தனானான்
வன்மையைமாற்றுமாற்றல்காமத்தேதவதிந்ததன்றே. (அஎ)

எழுந்தனனிருக்கைநின்றுண்டேழுலகத்துளோரும்
மொழிந்தனராசியோசைமுழங்கினசங்கமெங்கும்
பொழிந்தனபூவின்மாரிபோயினர்புறத்தோரெல்லாம்
அழிந்தொழிசிந்தையோடுமாடகக்கோயில்புக்கான். (அஅ)

பூவினால்வேய்ந்துசெய்தபொங்குபேரமளிகொங்கைத்
தேவிமார்குழுவுநீங்கச்சேர்ந்தனன்சேர்தலோடும்
நாவிநாறுதிநவ்விநயனமுங்குபமும்புக்குப்
பாவியாக்கொடுத்தவெம்மைபயப்பயப்பரந்ததன்றே. (அகூ)

வேறு.

தூக்கலாகலாதகாதனூறுநூறுகோடியாப்
பூக்கவாசவாடைவீசுசீதநீர்பொதிந்தமென்
சேக்கைவீகரிந்துதிக்கயங்களெட்டைவென்றதோள்
ஆக்கைதீயவுள்ளதையவாவிவேவதாயினான். (கூ0)

தாதுகொண்டசீதமேவுசந்துசந்தமென்றளிர்
போதுகொண்டடித்தபோதுபொங்குதீமருந்தினால்

84. ஞானமானது - முத்திநிலையையும் மற்றைப் பிரபஞ்சநிலைகளையும் சந்தேக விபரீதங்களின்றி உள்ளபடியறிதல்.

வேதுகொண்டதென்னமேனிவெந்துவெந்துவிம்முதீ
ஊதுவன்றுருத்திபோலுயிர்த்துயிர்த்துயங்கினான். (கூக)

தாவியாதுதீதெனுதுதைதயலாளைமெய்யுறப்
பாவியாதபோதிலாதபாவிமாழைபானல்வேல்
காவியானகண்ணிமேனிகாணமூளுமாசையால்
ஆவிசாலநொந்துநொந்தழுங்குவானுமாயினான். (கூ௨)

பரங்கிடந்தமாதிரம்பரித்தபாழியானையின்
கரங்கிடந்தகொம்பொடிந்திரங்கவென்றகாவலன்
மரங்குடைந்ததும்பிபோலநங்கன்வாளிவந்துவந்
துரங்குடைந்துநொந்துநொந்துளைந்துளைந்தொதுங்கினான். (கூ௩)

கொன்றைதுன்றுகோதையோடோர்கொம்புவந்தெனெஞ்சிடை
நின்றதுண்டுகண்டதென்றழிந்தழுங்குநீர்மையான்
மன்றறங்கலங்கன்மாரன்வாளிபோலமல்லிகைத்
தென்றல்வந்தெதிர்ந்தபோதுசீறுவானுமாயினான். (கூ௪)

அன்னகாலையங்குநின்றெழுந்தழுங்குசிந்தையான்
இன்னவாறுசெய்வெனென்றெண்ணிலாணிரங்குவான்
பன்னுகோடிதீபமாலைபாலையாழ்ப்பழித்தசொற்
பொன்னனாரெடுக்கவங்கோர்சோலையூடுபோயினான். (கூ௫)

வேறு.

மாணிக்கம்பனசம்வாழைமரகதம்வயிரந்தேமா
ஆணிப்பொன்வேங்கைகோங்கமரவிந்தராகம்பூகம்
சேணுயக்குநீலஞ்சாலங்குருவிந்தந்தென்னம்வெள்ளி
பாணித்தென்பளிங்குநாகம்பாடலம்பவளமன்றே. (கூ௬)

வானுறநிவந்தசெங்கேழ்மணிமரந்துவன்றிவான
மீனெனுமலர்கடம்மில்வேற்றுமைதெரிதற்றேற்றாத்
தேனுகுசோலைநாப்பட்செய்பொன்மண்டபத்துளாங்கோர்
பானிறவமளிசேர்ந்தான்பையுளுற்றுயங்கினைவான். (கூ௭)

கனிகளின்மலரின்வந்தகள்ளுண்டுகளிகளன்ன
வணிதையர்மழலையின்சொற்கிள்ளையுங்குயிலும்வண்டும்
இனியனமிழற்றுகின்றவியாவையுமிலங்கைவேந்தன்
முனியுமென்றவிந்தவாயமூங்கையர்போன்றவன்றே. (கூ௮)

பருவத்தால்வாடைவந்தபசும்பனியநங்கபாணம்
உருவிப்புக்கொளித்தபுண்ணிற்குளித்தனுமுளைந்துவிம்மி

இருதத்தான்யா தடாவென்றியம்பினனியம்பலோடும்
வெருவிப்போயச்சிசிர நீங்கிவேனில்வந்திறுத்ததன்றே. (௯௯)

வன்பனைமரமூந்தியமலைகளுங்குளிரவாமும்
மென்பனியெரிந்ததென்றல்வேனிலைவிளம்பலாமோ
அன்பெனும்விடமுண்டாரையாற்றலாமருந்துமுண்டோ
இன்பமுந்துன்பந்தானுமுள்ளத்தேதாடியைந்தவன்றே. (௧௦௦)

மாதிரத்திறுதிகாறுந்தன்மனத்தெழுந்தமையல்
வேதனைவெப்பஞ்செய்யவேனிலும்வெதுப்புங்காலை
யாதிதிங்கிதனின்முன்னைச்சிசிரநன்றிதனைநீக்கிக்
கூதிராம்பருவந்தன்னைக்கொணருதிர்விரைவினென்றான். (௧௦௧)

கூதிர்வந்தடைந்தகாலைகொதித்தனகுவவுத்திண்டோள்
சீதமுஞ்சுடுமோமுன்னைச்சிசிரமேகாணிதென்றான்
ஆதியாயஞ்சுமன்றேயருளலதியற்றவென்ன
யாதுமிங்கிருதுவாகாதியாவையுமகற்றுமென்றான். (௧௦௨)

என்னலுமிருதுவெல்லாமேகினயாவுந்தத்தம்
பன்னரும்பருவஞ்செய்யாயோகிபோற்பற்றுநீத்த
பின்னருமுலகமெல்லாம்பிணிமுதற்பாசம்வீசித்
துன்னருந்துவத்தினெய்துந்துறக்கம்போற்றோனறிற்றன்றே. ()

கூலத்தாருலகமெல்லாங்குளிப்பொடுவெதுப்புநீங்க
நீலத்தாரரக்கன்மேனிநெய்யின்றியெறிந்ததன்றே
காலத்தால்வருவதொன்றோகாமத்தாற்கனலும்வெந்தீச்
சீலத்தாலவிவதன்றிச்செய்யத்தாலுவதுண்டோ. (௧௦௪)

நாரமுண்டெமுந்தமேகந்தாமரைவளையநாளு
சாரமுண்டிருந்தசீதசந்தனந்தளிர்மென்றாதோ
டாரமுண்டிருந்துஞ்சிந்தையயர்கின்றனயனின்றாரை
ஈரமுண்டென்பரோடிப்பிந்துவைக்கொணர்மினென்றான். (௧௦௫)

வெஞ்சினத்தரக்கனண்டவியனகர்மீதுபோதும்
நெஞ்சிலதொதுங்குகின்றநிறைமதியோனைநோக்கி
அஞ்சலைவருதிநின்னையழைத்தனனரசனென்னச்
சஞ்சலத்துறந்துதானச்சந்திரனுதிக்கலுற்றான். (௧௦௬)

---

101. மையல் வேதனைமோகத்துன்பம்.

103. துறக்கம் - உயிர்களுக்கு. சுவர்க்கம்.

அயிருறக்கலந்தநன்னீராழிநின்றுழிநீத்துச்
செயிருறக்கலந்ததாண்டோரதேய்வுவந்துற்றபோது
வயிரமுற்றுடைந்துசென்றோர்வலியவற்செல்லுமாபோல்
உயிர்தெறக்காலனென்பானொத்தனனுதயஞ்செய்தான். (கO௭)

பராவருங்கதிர்களெங்கும்பரப்பிமீப்படர்ந்துவானில்
தராதலத்தெவரும்பேணுவவனேயேசலிக்குநீரால்
அராவணைதுயிலுமண்ணல்காலமோர்ந்தற்றநோக்கி
இராவணனுயிர்மேலுய்த்ததிகிரியுமென்னலானான். (கOஅ)

அருகுருபாலின்வேலையமுதெலாமளைந்துவாரிப்
பருகினன்பரந்துபாய்ந்தநிலாச்சுடர்ப்பனிமென்கற்றை
நெறியுறுபுருவச்செங்கணரக்கற்குநெருப்பினுப்பண்
உருகியவெள்ளியள்ளிவீசினுலொத்ததன்றே. (கOகூ)

மின்னிலந்திரிந்ததன்னவிழுநிலாமிதிலைசூழ்ந்த
செந்நெலங்கழனிநாடன்றிருமகள்செவ்விகேளா
நன்னலந்தொலைந்துசோருமரக்கனைநாளுந்தோலாத்
துன்னலனொருவன்பெற்றபுகழெனச்சுட்டதன்றே. (ககO)

கருங்கழற்காலனஞ்சுங்காவலன்கருத்துநோக்கித்
தருங்கதிர்ச்சீதயாக்கைச்சந்திரற்றருதிரென்ன
முருங்கியதணலின்மூரிவிடத்தினைமுகக்குஞ்சீற்றத்
தருங்கதிருக்கன்றன்னையாரழைத்தீர்களென்றான். (கககᅠ)

அவ்வழிச்சிலதரஞ்சியாதியாயருளில்லாரை
இவ்வழித்தருதுமென்பதியம்பலாமியல்பிற்றன்றால்
செவ்வழிக்கதிரோனென்றுந்தேரின்மேலன்றிவாரான்
வெவ்வழித்தெனினுந்திங்கள்விமானத்தின்மேலதென்றார். (கக௨)

வேறு.

பணந்தாழல்குற்பனிமொழியார்க்கன்புபட்டார்படுங்காமக்
குணந்தான்முன்னமரியாதான்கொதியாநின்றான்மதியாலே
தணந்தாமரையின்றனிப்பகைஞனென்னுந்தன்மையொருதானே
உணர்ந்தானுணர்வுற்றவன்மேலிட்டுயிர்தந்துய்க்கவுரைசெய்வான்.

தேயாநின்றாய்மெய்வெளுத்தாயுள்ளங்கறுத்தாய்நிலைதிரிந்து
காயாநின்றாயொருநீயுங்கண்டார்சொல்லக்கேட்டாயோ

107. காலன்காலத்தை அறுதியிடுபவன்.
110. துன்னலன் - சேராதவன்.

பாயாநின்றமலர்வாளிபறியாநின்றாரின்மையால்
ஓயாநின்றேனுயிர்காத்தற்குரியார்யாவருடுபதியே. (௧௧௪)

ஆற்றாராகிற்றம்மைக்கொண்டடங்காரோவென்னுருயிர்க்குக்
கூற்றாய்நின்றகுலச்சனகிகுவளைமலர்ந்ததாமரைக்குத் [ய்
தோற்றுயதனுனகங்கரிந்தாய்மெலிந்தாய்வெதும்பத்தொடங்கிறு
மாற்றார்செல்வங்கண்டழிந்தால்வெற்றியாகவற்றுமோ. (௧௧௫)

என்னப்பன்னியிடருழவாவிரவோடிவனைக்கொண்டகற்றி
முன்னைப்பகலும்பகலோனும்வருகவென்றான்மொழியாமுன்
உன்னற்கரியவுடுபதியுமிரவுமொழிந்தவொருநொடியில்
பன்னற்கரியபகலவனும்பகலும்வந்துபரந்தவால். (௧௧௬)

இருக்கின்மொழியாரெரிமுகத்தினீந்தநெய்யினவிர்செம்பொன்
உருக்கியனையகதிர்பாயவனல்போல்விரிந்ததுயர்கமலம்
அருக்கனெய்தவமைந்தடங்கிவாழாவடாதபொருளெய்திச்
செருக்கியிடையேதிருவிழந்தசிறியோர்போன்றசேதாம்பல். ()

நாணிநின்றவொளிமழுங்கிநடுங்காநின்றவுடம்பினனுய்ச்
சேணினின்றுபுறஞ்சாய்ந்துகங்குற்றாரம்பின்செல்லப்
பூணின்வெய்யோனொருதிசையேபுகுதப்போவான்புகழ்வேந்தர்
ஆணைசெல்லநிலையழிந்தவரசர்போன்றனல்லாண்டான். (௧௧அ)

வேறு.

மணந்தபேரன்பரைமலரின்சேக்கையுள்
புணர்ந்தவரிடையொருவெகுளிபொங்கலாற்
கணங்குழைமகளிர்கள்கங்குனீங்கிட
உணர்ந்திலர்கனவினுமூடறீர்ந்திலர். (௧௧௯)

தள்ளுறுமுயிரினர்தலைவர்நீங்கலால்
நள்ளிரவிடையுறுநடுக்கநீங்கலர்
கொள்ளையினலர்தருகுவளைநாண்மலர்
கள்ளுகுவனவெனக்கலுழுங்கண்ணினர். (௧௨௦)

அணைமலர்ச்சேக்கையுளாடறீர்ந்தனர்
பணைகளைத்தழுவியபவளவல்லிபோல்
இணைமலர்க்கைகளினிறுகவின்னுயிர்த்
துணைவரைத்தழுவினர்துயில்கின்றார்சிலர். (௧௨௧)

115. வற்று - வல்லது; பண்படிக்குறிப்புமுற்று.
119. கணம் - கூட்டம்.
121. உயிர்த்துணைவர் - உயிர்போன்ற துணைவரென உவமத்தொகை.

அளியினங்கடந்தொறுமார்ப்பவாய்கதிர்
ஒளிபடவுணர்ந்திலவுறங்குகின்றன
தெளிவிலவின்றுயில்விளையுஞ்சேக்கையுள்
களிகளைநிகர்த்தனகளிநல்யானையே. (௧௨௨)

விரிந்துறைதுறைதொறும்விளக்கம்யாவையும்
எரிந்தெழுதழ்கலவொளியிழந்தன
அருந்துறைநிரம்பியவுயிரினன்பரைப்
பிரிந்துறைதருங்குலப்பேதைமாரினே. (௧௨௩)

புனைந்திதழுரிஞ்சுறுபொழுதுபுல்லியும்
வனைந்திலவைகறைமலருமாமலர்
நனந்தலைபமளியிற்றுயிலுநங்கைமார்
அனந்தரினெடுங்கணோடொத்தவாமரோ. (௧௨௪)

இச்சையிற்றுயில்வதற்கியாவர்கண்களும்
நிச்சயம்பகலுந்தமிமைகணீக்கலர்
பிச்சையுமிடுதுமென்றுணர்வுபேணலர்
வச்சையர்நெடுமனைவாயிலானவே. (௧௨௫)

நஞ்சுறுபிரிவினைநாளினீளமோர்
தஞ்சுரவிடுவதோர்தயாவுதாங்கலால்
வெஞ்சிறைநீங்கியவினையினாரென
நெஞ்சுறக்களித்தனநேமிப்புள்ளெலாம். (௧௨௬)

நாண்மதிக்கல்லதுநடுவணெய்திய
ஆணையினீக்கலாவலரிற்பாய்வன
மாண்வினைபயன்படாமாந்தர்வாயில்சேர்
பாணரிற்றளர்ந்தனபாடற்றும்பியே. (௧௨௭)

அருமணிச்சாளரமதனினூடுபுக்
கெரிகதிரின்றுயிலெழுப்பியேற்றவும்
மருளொடுதெருளுறுநிலையர்மங்கையர்
தெருளுறமெய்ப்பொருடெரிந்திலாரினே. (௧௨௮)

ஏவலின்வன்மையையெண்ணறேற்றலர்
நாவலரியற்றியநானினுமைநால்

---

124. புனைதல் - அழகுசெய்தல்.

127. மாண்வினை-பாடலின் தன்மையுணர்ந்துகேட்டுமகிழ்தலும் பாணர்க்கு வேண்டியபடி கொடுத்துப் பெருமையையடைதலுமாகிய செயல்களாம்.

காவலினினிதுணர்கணிதமாக்களும்
கூவுறுகோழியுந்துயில்வுகொண்டவே. (கஉகூ)

இனையனவுலகினினிகழுமெல்லையில்
கனைகழலரழக்கனுங்கண்ணிநோக்கினான்
நினைவுறுமனத்தையுநெருப்பிற்றீக்குமால்
அனையவத்திங்களேயாகுமாலென்றான். (கநூo)

திங்களோவன்றிதுசெல்வசெங்கதிர்
பொங்குளைப்பச்சையம்புரவித்தேரதால்
வெங்கதிர்சுடுவதேயன்றிமெய்யுறத்
தங்குதண்கதிர்சுடத்தகாதென்றார்சிலர். (கநூக)

வேறு.

இராவணன் இளம்பிறையைக் கோணர்க என்றல்.

நீலச்சிகரக்கிரியன்னவனின்றவெய்யோன்
ஆலத்தினும்வெய்யனைகற்றியரற்றுகின்ற
வேலைக்குரலைத்தவிர்கென்றுவிலக்கிமேலை
மாலைப்பிறைப்பிள்ளையைக்கூவுதிர்வல்லையென்றான். (கநூஉ)

சொன்னானிருந்தர்க்கிறையம்மொழிசொல்லலோடும்
அந்நாளினிரம்பியவம்மதியாண்டொர்வேலை
முந்நாளினிளம்பிறையாகிமுளைத்ததென்றால்
எந்நாளுமருந்தவமன்றியியற்றலாமோ. (கநூநூ)

இராவணன் பிறையைப் பழித்தல்.

குடபாலின்முளைத்ததுகண்டகுணங்கடியோன்
வடவாவனலன்றெனின்மண்பிடர்வைத்தபாம்பின்
விடவாளெயிறன்றெனினென்னைவெகுண்டமாலை
அடவாளுருவிக்கொடுதோன்றியதாகுமன்றே. (கநூச)

தாதுண்சடிலத்தலைவைத்ததுதண்டரங்கம்
மோதுங்கடலிற்கிடைமுநதுபிறந்தபோதே
ஓதுங்கடுவைத்தன்மிடற்றினொளித்ததக்கோன்
ஈதுங்கடுவாமெனவெண்ணியவெண்ணமன்றே. (கநூரு)

உருமொக்கவுலைந்துயிர்நுங்கியதிங்களோடித்
திருமிச்சிறுமின்பிறைதீமைகுறைந்ததில்லை

133, ஒருவேலை - ஒருபுறத்தில், எல்லை.

கருமைக்கறைநெஞ்சினினஞ்சுகலந்தபாம்பின்
பெருமைச்சிறுமைக்கொருபெற்றிகுறைந்ததுண்டோ. (கநூ)

இராவணன் இருளைத் தருக என்றல்.

கன்னக்கனியும்மிருடன்னையுங்காண்டுமென்றே
முன்னைக்கதிர்நன்றிதகற்றுதிர்முன்புசான்ற
என்னைச்சுடுமென்னினிவ்வேழுலகத்தும்வாழ்வோர்
பின்னைச்சிலருய்வரென்றங்கொருபேச்சுமுண்டோ. (கநஎ)

அந்தகாரவருணனை.

ஆண்டப்பிறைநீங்கலுமெய்தியதந்தகாரம்
தீண்டற்கெளிதாய்ப்பலதேய்ப்பனதேய்க்கலாகி
வேண்டிற்கரப்பத்திரத்திர்த்துவிழுத்தலாகிக்
காண்டற்கினிதாய்ப்பலகந்துதிரட்டலாகி. (கநஅ)

முருடேர்ந்துருட்டற்கெளிதெதன்பதென்முற்றுமுற்றிப்
பொருடங்கில்கேள்விச்சுடர்புக்குவழங்கலின்றிக்
குருடங்கிதென்னக்குறிக்கொண்டுகண்ணோட்டங்குன்றி
அருடேர்ந்தநெஞ்சிற்கரிதேதன்பதவந்தகாரம். (கநகூ)

விள்ளாதுசெறிந்திடைமேலுறவோங்கிபெங்கும்
நள்ளாதிருளந்தகன்ஞாலம்விழுங்கலோடும்
எள்ளாதுலகியாவையும்யாவரும்வீயுமென்ப
துள்ளாதுமிழ்ந்தான்விடமுண்டவொருத்தனென்றான். (க௪0)

வேலைத்தலைவந்தொருவன்வலியால்விழுங்கும்
ஆலத்தினடங்குவதன்றிதறிந்துணர்ந்தேன்
ஞாலத்தொடுவிண்முதல்யாவையுநாவினக்கும்
காலக்கனல்கார்விடமுண்டுகறுத்ததன்றே. (க௪க)

அம்பும்மனனுநுழையாக்கனவந்தகாரத்
தும்பர்மழைகொண்டயலொப்பரிதாயதுப்பின்
கொம்பர்குரும்பைக்குலங்கொண்டதுதிங்கடாங்கி
வெம்புந்தமியேன்முன்விளக்கெனத்தோன்றுமன்றே. (க௪உ)

மருளொடுவெந்தமயக்கோமதிமற்றுமுண்டோ
தெருளாதிதென்னேதிணிமையிழைத்தாலுமொவ்வா

137. அங்கு - அனை.

140. எங்கும் நள்ளாது-யாதோரிடத்தையும் விட்டிடாமல்,

இருளோடிருகுண்டலங்கொண்டிருண்டநீலச்
சுருளோடும்வந்தோர்சுடர்மாமதிதோன்றுமன்றே. (கசங)

புடைகொண்டெழுகொங்கையுமல்குலும்புல்கிநிற்கும்
இடைகண்டிலமல்லதெல்லாவுருவுந்தெரிந்தாம்
விடநுங்கியகண்ணுடையாரிவர்மெல்லமெல்ல
மடமங்கையராயென்மனத்தவராயினாரே. (கசச)

பண்டேயுலகேழினுமுள்ளபடைக்கணாரைக்
கண்டேனிவர்போல்வதொர்பெண்ணுருக்கண்டிலேனால்
உண்டேயெனின்வேறினியெங்கையுணர்த்திநின்ற
வண்டேறுகோதைமடவாரிவராகுமன்றே. (கசரு)

பூண்டிப்பிணியானுறுகின்றதுதான்பொருதாள்
தேண்டிக்கொடுவந்தனள்செய்வதொர்மாறுமுண்டோ
காண்டற்கினியாளுருக்கண்டவட்கேட்குமாற்றால்
ஈண்டிப்பொழுதேவிரைந்தெங்கையைக்கூவுகென்றான். (கசசு)

என்றானனலுங்கடிதேகினர்கூவுமெல்லை
வன்றாணிருதக்குலம்வேரறமாய்த்தல்செய்வாள்
ஒன்றாதகாமக்கனலூட்டெறலோடுநாசி
பொன்றாழ்குழைதன்னொடும்போக்கினள்போய்ப்புகுந்தாள். (கசஎ)

இராவணன் அவளைநோக்கி இவள் சீதைதானா எனவினவல்.

பொய்ந்நின்றநெஞ்சிற்கொடியாள்புகுந்தாளைநோக்கி
நெய்ந்நின்றகூர்வாளவனேருறநோக்குநங்காய்
மைந்நின்றவாட்கண்மயிினின்றெனவந்தென்முன்னர்
இந்நின்றவளாங்கொலியம்பியசீதையென்றான். (கசஅ)

செந்தாமரைக்கண்ணொடுஞ்செங்கனிவாயினோடும்
சந்தார்தடந்தோளொடுந்தாழ்தடக்கைகளோடும்
அந்தாரகலத்தொடுமஞ்சனக்குன்றமென்ன
வந்தானிவனாகுமவ்வல்விலிராமனென்றாள். (கசகூ)

பெண்பாலுருநானிதுகண்டதுபேதைநீயீண்
டெண்பாலுமிலாததொராணுருவென்றியென்னே

144. புடை - பக்கம், திரட்சியுமாம்.
146. ஆறு - வழி.
147. வேரறமாய்த்தல்-நிர்மூலமாக்குதல், சந்ததியுமறத்தொலைத்தல்.

கண்பாலுறுமாயைகவற்றுதல்கற்றநம்மை
மண்பாலவரேகொல்விளைப்பவர்மாயையென்றான். (கருO)

ஊன்றுமுணர்வப்புறமொன்றினுமோடலின்றி
ஆன்றுமுளதாநெடிதாசைகனற்றநின்றாய்க்
கேன்றுனதிரேவிழிநோக்குமிடங்கடோறும்
தோன்றுமனையாளிதுதொன்னெறித்தாகுமென்றாள். (கருக)

அன்னாளதுகூறவரக்கனுமன்னதாக
நின்னாலவ்விராமனைக்காண்குறுநீரனென்றான்
எந்நாளவனென்னையித்தீர்வருமின்னல்செய்தான்
அந்நாண்முதல்யானுமயர்த்திலனாகுமென்றாள். (கருஉ)

ஆமாமதடுக்குமெனாக்கையொடாவிநைய
வேமால்வினையேற்கினியென்விடிவாகுமென்னக்
கோமானுலகுக்கொருநீகுறைகின்றதென்னே
பூமாண்குழலாடனைவௌவுதிபோதியென்றாள். (கருங)

என்றாளகன்றாளவரக்கனுமீடழிந்தான்
ஒன்றானுமுணர்ந்திலனாவியுலைந்துசோர்ந்தான்
நின்றானுநடுங்கினர்நின்றுளநாளினாலே
பொன்றாதுளனாயினனத்துணைபோனுமன்றே. (கருச)

இறந்தார்பிறந்தாரெனவின்னுயிர்பெற்றமன்னன்
மறந்தானுணர்ந்தானவண்மாடுநின்றாரைநோக்கிக்
கறந்தாலெனநீர்தருசந்திரகாந்தத்தாலே
சிறந்தார்மணிமண்டபஞ்செய்கெனச்செப்புகென்றான். (கருரு)

வந்தானெடுவானுறைதச்சன்மனத்துணர்ந்தான்
சிந்தாவினையன்றியுஞ்செய்வினையானுஞ்செய்தான்
அந்தாமநெடுந்தறியாயிரத்தாலமைத்த
சந்தார்மணிமண்டபந்தாமரையோனுநாண. (கருசா)

காந்தமமுதின்றுளிகால்வனகாலமீனின்
வேந்தனொளியன்றியுமேலொடுகீழ்விரித்தான்
பூந்தென்றல்புகுந்துறைசாளரமும்புனைந்தான்
ஏந்துமணிக்கற்பகச்சீதளக்காவிழைத்தான். (கருஎ)

---

153. மால்வினையேற்கு - வேட்கைச்செயலையுடையஎனக்கு, பெரியதீவினையையுடைய எனக்கு.

156. சிந்தாவினை - மாநஸ்கர்மம்; மனத்தால் நினைத்தவளவில் நிருமித்தல்; குறைவற்றவேலை.

ஆணிக்கமைபொற்கைம்மணிச்சுடரார்விளக்கம்
சேணுற்றிருள்சீப்பவத்தெய்வமடந்தைமார்கள்
பூணிற்பொலிவார்புடையேந்திடப்பொங்குதோளான்
மாணிக்கமானத்திடைமண்டபங்காணவந்தான். (௧௫௮)

இராவணனதுபரிசாரகப் பெண்களின் முகவொளி.

அல்லாயிரகோடியடுக்கியதொத்ததேனும்
நல்லார்முகமாநளிர்வானிலவீன்றநாமப்
பல்லாயிரகோடிபணிச்சுடரீன்றதிங்கள்
எல்லாமுடனுயிருளோடியிரிந்ததன்றே. (௧௫௯)

பொற்புற்றனமாமணியொன்பதும்பூவினின்ற
கற்பகத்தருவின்கதிர்நாணிழற்கற்றைநாற
அற்பற்றழியப்பகலாக்கியதாலருக்கன்
நிற்பத்தெளிகின்றதுநீள்சுடர்மேன்மையன்றே. (௧௬௦)

ஊறேறுமைசமுதற்பொறியாவையுமொன்றிறென்று
தேறாநிலையுற்றதொர்சிந்தையன்செய்கையோரான்
வேறாயபிறப்பிடைவேட்கைவிசித்ததீர்ப்ப
மாறேருடனுற்றெனமண்டபம்வந்துபுக்கான். (௧௬௧)

வேறு.

தண்டலிறவஞ்செய்வோர்தாம்வேண்டியதாவேநல்கும்
மண்டலமகரவேலையமுதொடுவந்ததென்னப்
பண்டருசுரும்புசேரும்பசுமரமுயிர்த்தபைம்பொற்
றண்டளிர்மலரிற்செய்தசிதனச்சேக்கைசார்ந்தான். (௧௬௨)

நேரிழைமகளிர்கூந்தனிறைநறைமொசநீந்தி
வேரியஞ்சரளச்சோலைவேனிலான்விருந்துசெய்ய
ஆர்கலிமுயவந்தந்தமருந்தெனவொருவராவி
தீரினுமுதவற்கொத்ததென்றல்வந்திறுத்ததன்றே. (௧௬௩)

சாளரத்தூடுவந்துநவழ்தலுந்தரித்தறேற்றான்
நீளரத்தங்கள்சிந்திநெருப்புகநோக்குநீரான்
வாழ்மனைபுகுந்ததாண்டோர்மாசுணம்வரக்கண்டன்ன
கோளுறக்கொதித்துவிம்மியுழையரைக்கூவிச்சொன்னான். (௧௬௪)

கூவலினுயிர்த்தசின்னீருலகினைக்குப்புற்றென்னத்
தேவரின்றொருவனென்னையின்னலுஞ்செய்யத்தக்கான்

---

163. அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

ஏவினன்றிவந்திங்கிவ்வழியெய்திற்றென்னக்
காவலினுழையர்தம்மைக்கொணருதிர்கடிதினென்ருன். (கசுரு)

வாயில்காவலனொருவன் இராவணனுக்குச் சமாதானங்கூறல்.

அவ்வழியுழையரோடியாண்டவற்கொணர்தலோடும்
வெவ்வழியமைந்தசெங்கண்வெருவுறநோக்கிவெய்யோன்
செவ்வழிதென்றலோற்குத்திருத்தினைநீகொலென்ன
இவ்வழியிருந்தகாலைத்தடையவற்கில்லையென்ருன். (கசுசு)

[இங்கே ஒருசெய்யுள் விடுபட்டுப்போனதென்று தெரிகிறது, அது இவ வார்த்தையைக் கேட்டவுடன் இராவணன் பரிசனங்களை நோக்கி தேவர்கள் தம்தம் இச்சைப்படி வந்து தந்தமக்கு வேண்டியபடி செய்வதானுல் எனது கட்டளையும் வலிமையும் என்னபயனுடையன ? பலதிசைகளிலுமுள்ள காற் றுக்களையெல்லாம் நீங்கள் இக்கணமே ஒடிப்பிடித்து வந்து சிறையிடுங்கள் என்று கட்டளையிட்டான் என்னுங் கருத்துடையது.]

இராவணன் ஏவலரைநோக்கி மந்திரிகளை யழைக்க வென்றல்.

காற்றினோன்றன்னைவாளாமுனிதலிற்கண்டதில்லை
கூற்றுவந்தென்னையின்னேகுறுகுமாற்குறித்தவாற்ருல்
வேற்றருங்கருங்கட்சீதைமெய்யருளபுனையேனென்ருல்
ஆற்றலாலடுத்ததெண்ணுமமைச்சரைக்கொணர்திரென்ருன். ()

ஏவலர் அமைக்க அமைச்சர் விரைந்து வருதல்.

ஏவினசிலதரோடியேயெனுந்துணையினெங்கும்
கூவினர்கூவலோடுங்குறுகினர்கொடித்திண்டேரர்
மாவினர்சிவிகைமேலர்மும்மதக்களிற்றர்வையத்
தேவரும்வானந்தன்னிற்றேவரும்சிந்தைசிந்த. (கசுஅ)

மந்திரிகளுடன் ஆலோசித்து இராவணன் மாரீசனுடன் செல்லுதல்.

வந்தமந்திரியரோடுமாசறமனத்தினெண்ணிச்
சிந்தையினினைந்துசெய்யுஞ்செய்கையன்றெளிவினெஞ்சன்
அந்தரஞ்செல்வதாண்டேர்விமானத்திலாருமின்றி
இந்தியமடக்கிநின்றமாரீசனிருக்கைசேர்ந்தான். (கசுக)

மாரீசன் இராவணனை எதிர்கொண்டுபசரித்தல்.

இருந்தமாரீசனந்தவிராவணனெய்தலோடும்
பொருந்தியபயத்தன்சிந்தைபொருமுற்றுவெருவுகின்ருன்

169. மந்திரி ஆலோசனையுடையன் மந்திரம் - ஆலோசனை.

கருந்தடமலையன்னானையெதிர்கொண்டுகடன்கள்யாவும்
திருந்தியசெய்துசெவ்வித்திருமுகநோக்கிச்செப்பும். (௧௭0)

வேறு.

சந்தமலர்த்தண்கற்பகநீழற்றலைவற்கும்
அந்தகனுக்குமஞ்சவடுக்குமரசாள்வாய்
இந்தவனத்தெதன்னினலிருக்கைக்கெளியோரின்
வந்தகருத்தெதன்சொல்லுதியென்றான்மருள்கின்றான். (௧௭௧)

ஆனதனைத்துமாவிதரித்தேனயர்கின்றேன்
போனதுபொற்புமேன்மையுமற்றென்புகழோடும்
யாதுனக்கின்றெறங்கனுரைக்கேனினிதென்னா
வானவருக்குநாணதடுக்கும்வசைமன்னோ. (௧௭௨)

வன்மைதரித்தோர்மானுடர்மற்றங்கவர்வாளால்
நின்மருகிக்குநாசியிழக்குநிலைநேர்ந்தார்
என்மரபுக்குநின்மரபுக்குமிதன்மேலோர்
புன்மைதெரிப்பின்வேறினியெற்றேபுகல்வேலோய். (௧௭௩)

திருகுசினத்தார்முதிரமலைந்தார்சிறியோர்நாள்
பருகினரென்றால்வென்றநலத்தின்பழியன்றோ
இருகைசுமந்தாயினிதிருந்தாயிகல்வேலுன்
மருகருலந்தாரொருவன்மலைந்தான்வரிவில்லால். (௧௭௪)

வெப்பழியாதென்னெஞ்சுமுலந்தேன்விளிகின்றேன்
ஒப்பழிவென்றேபோர்செயலொல்லேனுடன்வாழும்
துப்பழிசெவ்வாய்வஞ்சியைவௌவத்துணைகொண்டிட்
டிப்பழிநின்னாற்றீரியவந்தேனிவணென்றான். (௧௭௫)

இச்சொலனைத்துஞ்சொல்லியரக்கனெரிகின்ற
கிச்சினுருக்கிட்டுய்த்தனனென்னக்கிளராமுன்
சிச்சியெனத்தன்மெய்ச்செவிபொத்தித்தெருயந்தான்
அச்சமகற்றிச்செற்றமனத்தோடறைகின்றான். (௧௭௬)

மன்னாநீநின்வாழ்வைமுடித்தாய்மதியற்றாய்
உன்னானன்றீதூழ்வினையென்றேயுணர்கின்றேன்
இன்னநெஞ்சனேனுமுரைப்பனிதமென்னாச்
சொன்னானன்றேயன்னவனுக்குத்துணிவெல்லாம். (௧௭௭)

---

174. நாள்பருகுதல் - ஆயுளையொழித்தல்.

176. கிச்சி - நெருப்பு.

அற்றகரத்தோடென்றலைதீயெயனன்முன்றில்
பற்றினையுய்த்தாய்பற்பலகாலம்பசிகூர
உற்றுயிருள்ளோடுதயவலந்தாயுமையன்றோ
பெற்றனைசெல்வம்பின்னதிகழ்ந்தாற்பெறலாமோ. (௧௭௮)

திறத்திறனாலோசெய்தவமுற்றித்திருவுற்றாய்
மறத்திறனாலோசொல்லுதிசொல்லாய்மறைவல்லோய்
அறத்திறனாலேயெய்தினையன்றேவதுநீயும்
புறத்திறனாலேபின்னுமிழக்கப்புகுவாயோ. (௧௭௯)

நாரங்கொண்டார்நாடுகவர்ந்தார்நடையல்லா
வாரங்கொண்டார்மற்றொருவர்க்காய்மனைவாழும்
தாரங்கொண்டாரென்றிவர்தம்மைத்தருமந்தான்
ஈருங்கண்டாய்கண்டகருய்ந்தாரெவரையா. (௧௮௦)

அந்தரமுற்றானகலிகைபொற்பாலழிவுற்றான்
இந்திரனொப்பாரெத்தனையோர்தாமிழிபுற்றார்
செந்திருவொப்பாரெத்தனையோர்நின்றிருவுண்பார்
மந்திரமற்றாருற்றதுரைத்தாய்மதியற்றாய். (௧௮௧)

செய்தாயேனுந்தீவினையோடும்பழியல்லால்
எய்தாதெய்தாதெய்தினிராமனுலகின்றான்
வைதாலன்னவாளிகள்கொண்டும்வழியோடும்
கொய்தானன்றேகொற்றமுடித்துன்குழுவெல்லாம். (௧௮௨)

என்றாலென்னேயெண்ணலையேநீகரனென்பான்
நின்றானக்குமேலுளனென்னுநிலையம்மா
தன்றானைக்குற்றாரொடுமாளத்தனுவொன்றால்
கொன்றான்முற்றுங்கொல்லமனத்திற்குறிகொண்டான். (௧௮௩)

வெய்யோர்யாரேவீரவிராதன்றுணைவெய்யோர்
ஐயோபோனானம்பொடுமும்பர்க்கவனென்றால்
உய்வார்யாரேநம்பியினைக்கொண்டுணர்தோறும்
நையாநின்றேனீயிதுரைத்துநலிவாயோ. (௧௮௪)

மாண்டார்மாண்டார்நீயினிமாள்வார்தொழில்செய்ய
வேண்டாவேண்டாசெய்கெனினுய்வான்விதியுண்டோ

---

180. நாரம் - அன்பு. கண்டகர் - முட்போன்றவர்; பிறர்க்கு உபத்திரவஞ் செய்பவரென்றபடி.

181. அகலிகை - அஹல்யா என்னும் வடமொழியின் திரிபு; இச்சொல்லுக்கு அழகில்லாமையில்லாதவளென்று பொருள், மிக்க அழகுடையவளென்று கருத்து; ஹல்யம் - அழகின்மை.

ஆண்டாராண்டாரெத்தனையென்கோவறநோனார்
ஈண்டாரீண்டார்நின்றவரெல்லாமிலரன்றோ. (க அ௫)

எம்பிக்குமென்னன்னை தனக்குமிறுதிக்கோர்
அம்புய்க்கும்போர்வில்லி தனக்குமயனிற்கும்
தம்பிக்குந்நம்மாண்மை தவிர்ந்தேசயநிற்கும்
கம்பிக்குமென்னெஞ்சவனென்றேகவல்கின்றேன். (க அசு)

நின்றுஞ்சென்றும்வாழ்வனயாவுநிலையாவால்
பொன்றும்மென்றும்மெய்ம்மையுணர்ந்தாம்புலையாடற்
கொன்றும்முன்னுயென்னுரைகொள்ளாயுயர்செல்வத்
தென்றும்மென்றும்வைகுதியையாவினியென்றான், (க அஎ)

வேறு.

கங்கைசடைவைத்தவனொடுங்கயிலைவெற்போர்
அங்கையினெடுத்தவென தாடெழின்மணித்தோள்
இங்கொர்மனிதற்கெளியவென்றனையெனத்தன்
வெங்கணெரியப்புருவமீதுறவிடைத்தான். (க அஅ)

நிகழ்ந்ததைநினைத்திலையெனெஞ்சினிலையஞ்சா
திகழ்ந்தனையெனக்கிளைநங்கைமுகமெங்கும்
அகழ்ந்தனையதொப்புறவமைத்தவரையையா
புகழ்ந்தனைதனிப்பிழைபொறுத்தனெனிதென்றான். (க அகூ)

தன்னைமுனிவுற்றதறுகட்டகவிலோனைப்
பின்னைமுனிவுற்றிடுமெனத்தவிர்தல்பேணு
துன்னைமுனிவுற்றனகுலத்தைமுனிவுற்றாய்
என்னைமுனிவுற்றிலையிதென்னெனவிசைத்தான். (க கூO)

எடுத்தமலையேநினையினீசனிகல்வில்லாய்
வடித்தமலையேயிதுவலித்திடெனவாரிப்
பிடித்தமலைநாணிடைபிடித்தொருவன்மேரூள்
ஒடித்தமலையும்பர்முகடுற்றமலையன்றோ. (க கூக)

யாதுமறியாயுரைகொளாயிகலிராமன்
கோதைபுனையாமுனுயிர்கொள்ளைபடுமென்றே

---

186. ஆண்மை - பௌருஷம்.

189. தனி பிழை - ஒருகுற்றம்; ஒப்பற்ற (பெரும்) பிழையென்றும் பொருள் கொள்ளலாம்.

பேதைமதியாலிஃதொர்பெண்ணுருவமென்றாய்
சீதையுருவோநிருதர்தீவினையதன்றோ. (கசுஉ)

உஞ்சுபிழையாயுறவினோடுமெனவுன்னு
நெஞ்சுபறைபோதுமதுநீநினையகில்லாய்
அஞ்சுமெனதாருயிரறிந்தருகுநின்றார்
நஞ்சுநுகர்வாரையிதுநன்றெனலுநன்றோ. (கசுங)

ஈசன்முதன்மற்றுமிமையோருலகுமற்றைத்
தேசமுதன்முற்றுமொரிமைப்பினுயிர்தின்ப
கோசிகனமைத்தகடவுட்படைகொதிப்போ
டாசிலகணிப்பிலவிராமனருணிற்ப. (கசுச)

ஆயிரமடற்கையுடையானைமழுவாளால்
ஏயெனுமிமைப்பினுயிர்செற்றவெதிரில்லோன்
மேயவிறன்முற்றுவரிவெஞ்சிலையினோடும்
தாயகன்வலித்தகைமையாமுறுதகைத்தோ. (கசுரு)

வேதனைசெய்காமவிடமேலிடமெலிந்தாய்
நீதுரைசெய்தாயினையசெய்கைசிதைவன்றோ
மாதுலனுமாப்பரபின்முந்தையுறவந்தேன்
ஈதுரைசெய்தேனதனையெந்தைதவிர்கென்றான். (கசுசு)

இராவணன் மாரீசனைச்சினந்து கூறல்.

என்னவுரையத்தனையுமெத்தனையுமெண்ணாச்
சொன்னவனையேசினவரக்கர்பதிசொன்னான்
அன்னையுயிர்செற்றவனையஞ்சியுறைகின்றாய்
உன்னையொருவற்கொருவனென்றுணர்கைநன்றோ. (கசுஎ)

திக்கயமொளிப்பநிலைதேவர்கெடவானம்
புக்கவரிருக்கைபுகைவித்துலகம்யாவும்
சக்கரநடத்துமெனையோதயரதன்றன்
மக்கணலிகிற்பரிதுநன்றுவலியன்றோ. (கசுஅ)

மூவுலகினுக்குமொருநாயகமுடித்தேன்
மேவலர்கிடைக்கினிதன்மேலினியதுண்டோ

194. கோசிகன் - கௌசிகனென்ற வடசொல்லின் விகாரம்; குசிகனது குலத்திற் பிறந்தவனென்று பொருள்படும்; குசனே குசிகனெனவும் வழங்கப் படுவன்.
198. ஆஜ்ஞையைச் சக்கரமென்றல் கவிசமையம்.
199. ஒருநாயகம் - ஏகாதிபத்தியம்.

ஏவல்செயகிற்றியென தானைவழியெண்ணிக்
காவல்செயமைச்சர்கடனீகடவதுண்டோ. (கசுசு)

மறுத்தனையெனப்பெறினுநின்னைவடிவாளால்
ஒறுத்தெனமனக்குறைமுடிப்பதொழிகல்லேன்
வெறுப்பனகிளத்தலுறுமித்தொழிலைவிட்டென்
குறிப்பின்வழிநிற்றியுயிர்கொண்டுழலிலென்றான். (உ௦௦)

வேறு.

அரக்கனஃதுரைத்தலோடுமறிந்தனனடங்கிநெஞ்சம்
தருக்கினர்கெடுவரன்றேதத்துவநிலையிற்றன்றோ
செருக்கினிற்றீர்துமென்பார்தம்மினுர்செருக்கரென்று
உருக்கியசெம்பினுற்றநீரெனவுரைக்கலுற்றான். (உ௦க)

மரீசன் இராவணனுக்கு இணங்கிக்கூறும் வார்த்தை.

உன்வயினுறுதிநோக்கியுண்மையினுணர்த்தினேன்மற்
றென்வயினுறுதிநோக்கியச்சத்தாலிசைத்தேனல்லேன்
நன்மையுந்தீமையன்றேநாசம்வந்துற்றபோது
புன்மையினுற்றநீராய்செய்வதுபுகறியென்றான். (உ௦உ)

என்றலுமெழுந்துபுல்லியேறியவெகுளிநீங்கிக்
குன்றெனக்குவிந்ததோளாய்மாரவேள்கொதிக்குமம்பால்
பொன்றலின்ராமனற்பாற்பொன்றலேபுகழுண்டன்றோ
தென்றலைப்பகையைச்செய்தசீதையைத்தருதியென்றான். (உ௦௩)

ஆண்டையானனையகூறவரக்கரோரிருவரோடும்
பூண்டவென்மானந்தீரத்தவவனம்புக்கபோழ்தில்
தூண்டியசரங்கள்பாயத்துணைவர்பட்டுருளவஞ்சி
மீண்டயான்சென்றுசெய்யும்வினையென்கொல்விளம்புகென்றான். ()

ஆயதாங்கனையகூறவரக்கர்கோனையநோய்துன்
தாயையாருயிருண்டானையான்கொலச்சமைந்துநின்றேன்
போயையாபுணர்ப்பதென்னேயென்பதுபொருந்திற்றன்றோ
மாயையால்வஞ்சித்தன்றோவௌவுதலவளையென்றான். (உ௦ரு)

புறத்தினியுரைப்பதென்னேபுரவலன்றேவிதன்னைத்
திறத்தாழியன்றிவஞ்சித்தெய்துதல்சிறுமைத்தாகும்

206. புரவலன்-அரசர்குலத்தான், சக்கரவர்த்திகுமாரன், காத்தற்றொழிற் கடவுளாகிய திருமாலின் அம்சமானவன்.

அறத்துளதொக்குமன்றேயமர்த்தலைவென்றுகொண்டுன்
மறத்துறைவளர்த்திமன்னவென்னமாரீசன்சொன்னான். (௨0௬)

ஆனவனுரைக்கநக்கவரக்கர்கோனவரைவெல்லத்
தானையும்வேண்டுமோவென்றடக்கைவாடக்கதன்றோ
ஏனையரிறக்கிற்றானுந்தமியளாயிறக்குமன்றே
மானவளாதலாலேமாயையின்வலித்துமென்றான். (௨0௭)

தேவியைத்தீண்டாமுன்னமிவன்றலைசரத்திற்சிந்திப்
போம்வகைபுணர்ப்பனென்றுபுந்தியாற்புகல்கின்றேற்கும்
ஆம்வகையாயிற்றில்லைபார்வதிவிளைவையோர்வார்
ஏவதுசெய்வதல்லாலில்லைவேறொன்றென்றெண்ணா. (௨0௮)

என்னமாமாயம்பர்ன்மற்றியற்றுவதியம்புகென்றான்
பொன்னின்மானாகிப்புக்குப்பொன்னைமால்புணர்த்துகென்ன
அன்னதுசெய்வேனென்னாமாரீசனறைந்துபோனான்
மின்னும்வேலரக்கர்கோனும்வேறொருநெறியிற்போனான். (௨0௯)

வேறு.

மேனாளவன்வில்வலிகண்டமையால்
தானாகவமைந்துசமைந்திலனால்
மானாகுதியென்றவன்வாய்மொழியால்
போனான்மனமுந்செயலும்புகல்வாம். (௨௧0)

வெஞ்சுற்றநினைந்துகும்வீரரைவே
றஞ்சுற்றுமறக்குறுமாழ்குழிநீர்
நஞ்சுற்றுறுமீனினடுக்குறுமால்
நெஞ்சுற்றதொர்பெற்றிநினைப்பரிதால். (௨௧௧)

அக்காலமும்வேள்வியினன்றிவனோ
டெக்காலுநலிந்துமொரீறுபெறான்
முக்காலின்முடிந்திடுவான்முயல்வான்
புக்கானவ்விராகவன்வைகுபுனம். (௨௧௨)

தன்மானமிலாததயங்கொளிசால்
மின்வானமுமண்ணும்விளங்குவதோர்
பொன்மானுருவங்கொடுபோயினனால்
நன்மானனையாடனைநாடுறுவான். (௨௧௩)

---

209. பொன்னிறமானவள் - பொன்போல் அருமையானவள்; திருமகளின் அம்சமானவள்.

213. நாடுறு, உறு - துணைவினை.

கலைமான்முதலாயினகண்டவெலாம்
அலைமானுறுமாசையின்வந்தனவால்
நிலையாமனவஞ்சனைநேயமிலா
விலைமாதர்கண்யாரும்விழுந்தெனவே. (உ௧௪)

பொய்யாமெனவேயாதுபுறஞ்சொலினால்
நையாவிடைநோவநடந்தனளால்
வைதேகிதன்வால்வளைமென்கையெனும்
கொய்யாமலரான்மலர்கொய்துறுவாள். (உ௧௫)

உண்டாகியகேடுடையார்துயில்வாய்
எண்டாளுமியைந்தியையாவுருவம்
கண்டாரெனலாம்வகைகண்டனளால்
பண்டாருமுருவிடர்பாடுறுவாள். (உ௧௬)

காணாவிதுகைதவமென்றுணராள்
பேணாதநலங்கொடுபேணினளால்
வாணாளையிராவணன்மாளுதலால்
வீணாளினறம்புவிமேவுதலால். (உ௧௭)

நெற்றிப்பிறையாண்முனநின்றிடலும்
முற்றிப்பொழிகாதலின்முந்துறுவாள்
பற்றித்தருகென்பெனணப்பதையா
வெற்றிச்சிலைவீரனைமேவினளால். (உ௧௮)

ஆணிப்பொனிளுகியதாய்கதிரால்
சேணிற்சுடர்கின்றதுதிண்செவிகால்
மாணிக்கமயத்தொருமானுளதால்
காணத்தகுமென்றனள்கைதொழுவாள். (உ௧௯)

இம்மானிநிலத்தினில்லைபெரு
வம்மானிதெனச்சிறிதெண்ணல்செயான்

214. விலைமாதர் - தமது மெய்யினைபத்தைப் பொருட்கு விலைப்படுத்தும் மகளிர்.

215. வால் - வெண்மையும் ஒண்மையுமாம்.

217. பேணாதநலம் - விரும்பத்தகாத அழகு: பாராட்டத்தகாத ஆசை என்றும் பொருள்கொள்ளலாம்.

218. வெற்றிச்சிலை - விசயகோதண்டம்.

219. திண்செவி - நெறித்தகாது.

செம்மானவள்சொற்கொடுத்தமலரோன்
அம்மானுமருந்தியனுயினனுல். (உஉo)

ஆண்டங்கிளையோனுரையாடினனுல்
வேண்டும்மெனலால்விளைவன்றிதனுன்
பூண்டுஞ்சுபொலங்கொடியோயதுநாம்
காண்டும்மெனும்வள்ளல்கருத்துணர்வான். (உஉக)

காயங்கனகம்மணிகால்செவிவால்
பாயும்முருவோடிதுபண்பெனலால்
மாயம்மெனலன்றிமனக்கொளவே
ஏயும்மிறையையுறவென்றளவே. (உஉஉ)

நில்லாவுலகின்னிலைநேர்மையினுல்
வல்லாருமுணர்ந்திலர்மன்னுயிர்தாம்
பல்லாயிரகோடிபரந்துளவால்
இல்லாதனவில்லைவிளங்குமரா. (உஉஙூ)

என்னென்றுநினைத்ததிழைத்துளநம்
கன்னங்களின்வேறுளகாணுதுமால்
பொன்னின்னொளிமேனிபொருந்தியவேழ்
அன்னங்கள்பிறந்ததறிந்திலையோ. (உஉச)

முறையும்முடிவும்மிலமொய்புயிரென்
றிறைவன்னிளையாநெடியம்பினனுல்
பறையுந்துணையன்னதுபன்னெறிபோய்
மறையும்மெனவேழைவருந்தினளால். (உஉரு)

வேறு.

அனையவள்கருத்தைமுன்னுவஞ்சனக்குன்றமன்னுன்
புனையிழைகாட்டதென்றுபோயினன்பொறுநசிந்தைக்
கனைகழற்றம்பிபின்புசென்றனன்கடக்கவொண்ணு
வினையெனவந்துநின்றமானெதிர்விழித்ததன்றே. (உஉசு)

நோக்கியமானைநோக்கிநுதியிழைமதியினென்றும்
தூக்கினலனன்றிதென்றுனதன்பொருள்சொல்லலாகும்
சேக்கையினரவுநீங்கிப்பிறந்ததுதேவர்செய்த
பாக்கியமுடைமையன்றேவன்னதுபழுதுபோமோ. (உஉஎ)

227. நுதி - நுட்பம் கூர்மை. சேக்கையினரவு - படுக்கையாகிய ஆதிசேஷன்.

என்னொக்குமென்னலாகுமிளையவவிதனைநோக்காய்
தன்னொக்குமுவமையல்லாற்றனையொக்குமுவமையுண்டோ
பன்னக்கதரளமொக்கும்பசும்புன்மேற்படருமென்னா
மின்னொக்குஞ்செம்பொன்மேனிவெள்ளியின்விளங்கும்புள்ளி. ()

வரிசிலைமறைவலோனேமானிதன்வடிவையுற்ற
அரிவையர்மைந்தர்யாரேயாதரங்கூர்கிலாதார்
உருகியமனத்தவாகியூர்வனபறப்பயாவும்
விரிசுடர்விளக்கங்கண்டவிட்டில்போல்வீழ்வகாணாய். (உஉ௯)

ஆரியனனையகூறவன்னதுதன்னைநோக்கிச்
சீரியதன்றிதென்றுசிந்தையிற்றெளிந்ததம்பி
காரியமென்னையீண்டுக்கண்டதுகனகமானால்
வேரியந்தெரியல்வீரமீள்வதேமேன்மையென்றான். (உ௩0)

அற்றவன்பகராமுன்னமநகனையழகியாளும்
கொற்றவன்மைந்தமற்றைக்குழைவுடையுழையைவல்லை
பற்றினைதருதியாயிற்பதியிடையவதியெய்தப்
பெற்றுழியினிதுண்டாடப்பெறற்கருந்தகைமைத்தென்றாள். ()

ஐயநுண்மருங்குனங்கையஃதுரைசெய்யவையன்
செய்வெனென்றமையநோக்கித்தெளிவுடைச்செம்மல்செப்பும்
வெய்யவல்லரக்கர்வஞ்சம்விரும்பினார்வினையிற்செய்த
கைதவமானென்றண்ணல்காணுதிகடையினென்றான். (உ௩உ)

மாயமேன்மடிவாமன்றேவாளியின்மடிந்தபோது
காய்சினத்தவரைக்கொன்றுகடன்கழித்தோமுமாதும்
துயதேற்பற்றிக்கோடுஞ்சொல்லியவிரண்டினொன்றும்
தீயதேயுரைத்தியென்றான்றேவரையிடுக்கண்டீர்ப்பான். (உ௩௩)

பின்னின்றானினையரென்றுமுணர்கிலம்பிடித்தமாயம்
என்னென்றுந்தெளிதறேற்றாம்யாவதிதென்றுமோராம்
முன்னின்றார்முறையினின்றார்முனிந்துளவேட்டமுற்றல்
பொன்னின்றவயிரத்தோளாய்புகழுடைத்தாமன்றென்றான். ()

பகையுடையரக்கரென்றும்பலரென்றும்பயிலுமாயம்
மிகையுடைத்தென்றும்பூண்டவிரதத்தைவிடுதுமென்றல்
நகையுடைத்தாகுமன்றேயாதலினன்றிதென்னாத்
தகையுடைத்தம்பிக்கந்நாட்சதுமுகன்றாதைசொன்னான். (உ௩௫)

---

230. சீரியதன்று - நன்மை விளைப்பதன்று.
235. தகை - யோக்கியதை, தக்க நற்குண நற்செய்கைகளை யுடைமை.

அடுத்தவுமெண்ணிச்செய்தலண்ணலேயமைதியன்றே
விடுத்திதன்பின்னின்றூர்கள்பலருளரெனினும்வில்லால்
தொடுத்தவெம்பகழிதூவித்தொடர்ந்தனென்விரைந்துசென்று
படுக்குவெனதுவன்றுயிற்பற்றினென்கொணர்வெனென்றான். ()

ஆயிடையன்னமன்னாளமுதுகுத்தனையசெய்ய
வாயிடைமழலையின்சொற்கிளியினிற்குழறிமாழ்கி
நாயகநீயேபற்றிநல்கலைபோலுமென்னாச்
சேயரிக்குவளைமுத்தஞ்சிந்துபுசிதறிப்போனாள். (உ௩௭)

போனவள்புலவிநோக்கிப்புரவலன்பொலன்கொடாராய்
மானிதுநானேபற்றிவல்லையின்வருவெனன்றே
கானியன்மயிலன்னாளைக்காத்தனையிருத்தியென்னா
வேனகுசரமும்வில்லும்வாங்கினன்விரையலுற்றான். (உ௩௮)

முன்னமுமகவாய்வந்தமூவரினொருவன்போனான்
அன்னமாரீசனென்றேயயிர்த்தனெனிதனையைய
இன்னமுங்காண்டிவாழியேயெனவிருகைகூப்பிப்
பொன்னனாள்புக்கசாலைகாத்தனன்புறத்துநின்றே. (உ௩௯)

மந்திரத்திளையோன்சொன்னவாய்மொழிமனத்துக்கொள்ளான்
சந்திரற்குவமைசான்றவதனத்தாள்சலத்தைநோக்கிச்
சிந்துரப்பவளச்செவ்வாய்முறுவலன்சிகரச்செவ்விச்
சுந்தரத்தோளினனம்மானினைத்தொடரலுற்றான். (உ௪0)

மிதித்ததுமெல்லமெல்லவெறித்ததுவெருவிமீதிற்
குதித்ததுசெவியைநீட்டிக்குரபதமுரத்தைக்கூட்டி
உதிதெழுமூதையுள்ளமென்றிவைபுருவச்செல்லும்
கதிக்கொருசுல்விவேறேகாட்டியதொத்ததன்றே. (உ௪௧)

நீட்டினனுலகமூன்றுநின்றெடுத்தளந்தபாதம்
மீட்டுநாமுரைத்தற்கம்மாவேறுமோரண்டமுண்டோ
ஓட்டினான்றொடர்ந்ததன்னைபொழிவறநிறைந்ததன்மை
காட்டினனன்றியன்றக்கடுமையார்கணிக்கற்பாலார். (உ௪௨)

குன்றிடையிவருமேகக்குழுவிடைக்குதிக்குங்கூடச்
சென்றிடினகலுந்தாழிற்றீண்டலாந்தகைமைத்தாகும்

---

237. மழலை - நிரம்பாமென் சொல்.

241. வாயுவேக மனோவேகங்களைக் காட்டிலும் வேகமாய் ஓடிற்று அந்த மான் என்பது கருத்து.

நின்றதேபோலநீங்குநிதிவழிநேயநீட்டும்
மன்றலங்கோதைமாதர்மனமெனப்போயிற்றம்மா. (உசங)

காயம்வேருகிச்செய்புங்கருமம்வேருகிற்றன்றே
ஏயுமேயென்னின்முன்னமெண்ணமேயிளவற்குண்டே
ஆயுமேலுறுதல்செல்லாமரக்கராவர்கள்செய்த
மாயமேயாயதேநான்வருந்தியதென்றான்வள்ளல். (உசச)

வேறு.

பற்றுவானினியல்லன்பகழியால்
செற்றுவானிற்செலுத்தலுற்றனென
மற்றமாயவரக்கன்மனக்கொளா
உற்றவேகத்தினும்பரிதேறங்கினன். (உசரு)

அக்கணத்தினிலையனும்வெய்யதன்
சக்கரத்திற்றகைவரிதாபதோர்
செக்கர்மேனிப்பகழிசெலுத்தினன்
புக்கதேயம்புக்கினுயிர்போக்கென. (உசசு)

நெட்டிலைச்சரம்வஞ்சனைநெஞ்சுறப்
பட்டதப்பொழுதேபகுவாயினல்
அட்டதிக்கினுமப்புறமும்புக
விட்டழைத்தொருகுன்றெனவீழ்ந்தனன். (உசஎ)

வெய்யவன்றனுருவொடுவீழ்தலும்
செய்யதன்றெனச்செப்பியதம்பியை
ஐயன்வல்லனென்றருயிர்வல்லனன்
உய்யவந்தவன்வல்லனென்றுன்னினன். (உசஅ)

ஆசைநீளத்தரற்றினன்வீழ்ந்தவந்
நீசன்மேனியைநின்றுடநோக்கினன்
மாசின்மாதவன்வேள்வியின்வந்தமா
ரீசனேயிவனென்பதுந்தேறினன். (உசகூ)

உழைத்தவாளியுரம்புகப்புல்லியோன்
இழைத்தமாயையினென்குரலாலிசைத்
தழைத்ததுண்டதுகேட்டயர்வெய்துமால்
மழைக்கணேழையென்றுள்ளம்வருந்தினன். (உருO)

243. நின்றதேபோல நீங்கும் என்றது வரையில் தன்மை நவிற்சியணி.

மாற்றமின்னதுமாயமாரீசனென்
றேற்றமுன்னுணர்ந்தானெனினென்னுடை
ஆற்றறேருமறிவினனாதலான்
தேற்றுமாவிளையோனெனத்தேறினான். (உருக)

மாள்வதேதபொருளாகவந்தானலன்
சூழ்வதோர்பொருளுண்டிவன்சொல்லினால்
மூள்வதேதமதுமுடியாமுனம்
மீள்வதேநலனென்றவன்மீண்டனன். (உருஉ)

ஆ திருவிருத்தம் - அகக.

---

## அ-வது, சடாயுவுயிர்நீத்தபடலம்.

---

சங்கடுத்ததனிக்கடன்மேனியாற்
கங்கடுத்தநிலமையறைந்தனம்
கொங்கடுத்தமலர்க்குழற்கொம்பனாட்
கிங்கடுத்ததகைமையியம்புவாம். (க)

எயிறலைத்துமுழைதிறந்தேங்கிய
செயிர்தலைக்கொண்டசொற்செவிசேர்தலும்
குயிறலைத்திடையுற்றதோர்கொள்கையால்
வயிறலைத்துவிழுந்துமயங்கினாள். (உ)

பிடித்துநல்கிவ்வுழையெனப்பேதையேன்
முடித்தனென்முதல்வாழ்வெனமொய்குழல்
கொடிப்படிந்ததெனநெடுங்கோளரா
இடிக்குடைந்ததெனப்புரண்டேங்கினாள். (ந)

குற்றம்வீந்தகுணத்தினெங்கோமகன்
மற்றைவாளரக்கன்புரிமாயையால்
இற்றுவீழ்ந்தனனென்னவுமென்னயல்
நிற்றியோவிளையோயொருநீயென்றாள். (ச)

---

3. கொழுநனோடுகூடி வாழும் வாழ்க்கையினும் சிறப்புடையவாழ்வுவேறு குலமகளிர்க்கு இன்றாதலால் அத்தலைமை விளங்க 'முதல்வாழ்வு' எனப் பட்டது.

வேறு.

எண்மையாருலகினினிராமற்கேற்றமோர்
திண்மையாருளரெனல்செப்பற்பாலதோ
பெண்மையாலுரைசெயப்பெறுதிராலென
உண்மையானனையவட்குணரக்கூறினன். (ரு)

ஏழுமேகீடலுலகேழுமேழுமே
சூழுமேழ்மலையவைதொடர்ந்தசூழல்வாய்
வாழுமேழையர்சிறுவலிக்குவாளமர்
தாழுமேயிராகவன்றனிமைதையலீர். (சு)

பாரெனக்கனலெனப்புனலெனப்பகர்
பேரெனத்திசையெனமுனியிற்பேருமால்
காரெனக்கரியவக்கமலக்கண்ணனை
யாரெனக்கருதியிவ்விடரினுழ்கின்றீர். (எ)

இடைந்துபோய்நிசிசரற்கிராமனெவ்வம்வந்
தடைந்தபோதழைக்குமேயழைக்குமாமெனின்
மிடைந்தபேரண்டங்கண்மேல்கீழன
உடைந்துபோமயன்முதலுயிருந்தீயுமால். (அ)

மாற்றமென்பகர்வதுமண்ணும்வானமும்
போற்றவன்றிரிபுரமெரித்தபுங்கவன்
ஏற்றிநின்றெய்தவில்லிற்றதெம்பிரான்
ஆற்றலினமைவதோராற்றலுண்மையோ. (கூ)

காவலனீண்டுநீர்கருதிற்றெப்துமேல்
மூவகையுலகமுமுடியுமுந்துள
தேவருமுனிவருமுதலசெவ்வியோர்
ஏவரும்வீந்துளாரறமுமெஞ்சுமால். (கo)

பரக்கவென்பகர்வதுபகழிபண்ணவன்
துரக்கவங்கதுபடத்தொலைந்துசேர்கின்ற

5. உண்மையான் - நியாயவாதி.

7. பகரப்பேர் - என்றது இடைவிடாமல் சஞ்சரிப்பது என்றபொருளை த்தந்து' வாயுவுக்கு ஒருகாரணக்குறியாம்; ஸதாகதி, ஸமீரணன், பகவநன் என் றவாயுவின் வடமொழிப்பெயர்கள் இப்பொருள்படுவன வாதலால், பகரப்பேர் என்பது அவற்றின்மொழிப்பெயர்ப்பாய்வந்ததொரு பெயரெனக்கொள்க. ப கர பகாமல் ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம், பெயர் என்ற வினை, பேர் எனமருவிற்று. பகர்பேர்' எனறுபாடமோதி மற்றுஞ் சொல்லப்படுகிறபேர், அதாவது இங்குக் கூறப்படாத காற்று என்பாரு முளர்,

அரக்கனவ்வுரையெடுத்தரற்றினானதற்
கிரக்கமுற்றயங்கலிருத்தியீண்டென்றான். (கக)

என்றவனியம்பலுமெடுத்தசீற்றத்தள்
கொன்றனவின்னலள்கொதிக்குமுள்ளத்தள்
நின்றனணின்னிலையிதுநெறியிற்றன்றெனா
வன்றறுகண்ணினள்வயிர்த்துக்கூறுவாள். (கஉ)

ஒருபகல்பழகினுருயிரையீவரால்
பெருமகனுலைவுறப்பெற்றிகேட்டுநீ
வெருவலைநின்றனைவேறென்பாணினி
எரியிடைவீழ்ந்துயிரிறப்பலீண்டெனு. (கங)

தாமரைவனத்திடைத்தாழுமன்னம்போல்
தூமவெங்காட்டெரிதொடர்கின்றாடனைச்
சேமவிற்குமரனும்விலக்கிச்சீறடிப்
பூமகநெடுநிலம்புல்லிச்சொல்லுவான். (க௪)

துஞ்சுவதென்னைநீர்சொற்றசொல்லையான்
அஞ்சவென்னாறுக்கிலெனவலந்தீர்ந்தினி
இஞ்சிநமடியனேனெருகின்றனென்
வெஞ்சினவிதியினைவெல்லவல்லமோ. (கரு)

போகின்றேனடியனேன்பொருந்திவந்துகே
டாகின்றதாசன்றனுனைநீர்மறுத்
தேகென்றீரிருக்கின்றீர்தனியிரென்றபின்
வேகின்றசிந்தையான்விடைகொண்டேகினான். (கசு)

இருப்பனேலெரியிடையிறப்பராலிவர்
பொருப்பினையானிடைப்போவனேயெனின்
அருப்பமில்கேடுவந்தடையுமாருயிர்
விருப்பனேனென்செயலென்றுவிம்மினான். (கஎ)

அறந்தனைழிவிலதாகினுக்கலாம்
இறந்துபாடிவர்க்குறுமிதனினிவ்வழி
துறந்துபோமிதனையேதுணிவென்றால்வினைப்
பிறந்துபோந்திதுபடும்பேதையேனென. (கஅ)

15. இங்கு என்பது 'துஞ்சு எனத்திரிந்தது' எதுகைநோக்கியதோர்போலிவழக்கு. 17. அருப்பம் - அரண்.

போவதுபுரிவல்யான்புகுந்ததுண்டெனின்
காவல்செயெருமையின்றலைவன்கண்ணுறும்
ஆவதுகாக்குமென்றறிவித்தவ்வழித்
தேவர்செய்தவத்தினாற்செம்மலேகினான். (௧௯)

இளையவனேகவுமிறவுபார்க்கின்ற
வளையெயிற்றிராவணன்வஞ்சமுற்றுவான்
முளையரித்தண்டொருமூன்றுமுப்பகைத்
தளையரிதவத்தவர்வடிவந்தாங்கினான். (௨௰)

ஊணிலனெனவுலர்ந்தமேனியன்
சேணெறிவந்தனோர்வருந்தச்செய்கையன்
பாணியினடத்திடைப்படிக்கின்றானென
வீணையினிசைபடவேதம்பாடுவான். (௨௧)

பூப்பொதியவிழ்ந்தனநடையன்பூதலம்
தீப்பொதிந்தாமெனமிதிக்குஞ்செய்கையன்
காப்பருநடுக்குறுங்காலன்கையினன்
மூப்பெனும்பருவமுமுனியமுற்றினான். (௨௨)

தாமரைக்கண்ணொடேர்தவந்தின்மாலையன்
ஆமையினிருக்கையன்வளைந்தயாக்கையன்
நாமநான்மார்பினனணுகினானரோ
தூமனத்தருந்ததியிருந்தசூழல்வாய். (௨௩)

நோமறுசாலையின்வாயிலுன்னினான்
நாமுதற்குழறிடநடுங்குசொல்லினான்
யாவிரிவ்விருக்கையுளிருந்துளீரென்றான்
தேவருமருள்கொளத்தெரிந்தமேனியான். (௨௪)

தோகையுமிவ்வழித்தோமில்சிந்தனை
சேகறுநோன்பினரென்றுஞ்சிந்தையாள்
பாகியல்கிளவியாள்பவளக்கொம்பர்போன்
றேகுமினீண்டெனவெதிர்வந்தெய்தினாள். (௨௫)

வெற்பிடைமதமெனவியர்க்குமேனியன்
அற்பினற்றிரைபுரளாசைவேலையன்

20. தண்டொருமூன்று - அரசு, புரசு, மூங்கில் என்னும் மூன்றுவகைக் கோல்களையும் ஒன்றாகமுறுக்கிச் சேர்த்தது திரிதண்டமாம்.

பொற்பினுக்கணியினைப்புகழின்சேக்கையைக்
கற்பினுக்கரசியைக்கண்ணிளுேக்கிஞன். (உசு)

தூங்கலிஞருவினைச்சொல்லிஞம்பரும்
ஓங்கியவழகிஞளுருவங்காண்டலும்
ஏங்கினன்மனநிலையாதென்றுன்ஞவாம்
வீங்கினமெலிந்தனவீரத்தோள்களே. (உள)

புனமயிற்சாயலினெழிலிற்பூநறைச்
சுனைமடுத்துண்டிசைமுரலுந்தும்பியின்
இனமெனக்களித்துளதென்பதென்னவன்
மனமெனக்களித்ததுகண்ணின்மாலையே. (உஅ)

சேயிதழ்த்தாமரைச்சேக்கைநீர்ந்திவண்
மேயவண்மணிநிறமேனிகாணுதற்
கேயுமேயிருபதிங்கிமைப்பிஞட்டங்கள்
ஆயிரமில்லையென்றல்லலெய்திஞன். (உகூ)

அரைகடையிட்டமுக்கோடியாயுவும்
புரைதபுதவத்தின்யான்படைத்தபோதுமே
நிரைவளைமுன்கையிந்நின்றநங்கையின்
கரையறுநன்னலக்கடற்கென்றுன்னிஞன். (௩௦)

தேவருமவுணருந்தேவிமாரொடும்
கூவல்செய்தொழிலினர்குடிமைசெய்திட
மூவுலகமுமிவர்முறையிஞளயான்
ஏவல்செய்துய்குவெனினியென்றுன்னிஞன். (௩க)

உளைவுறுதுயர்முகத்தொளியிதாமெனின்
முளையெயிறிலங்கிடுமுறுவலென்படும்
தளையவிழ்குழலிவட்கண்டுதந்தவென்
இளையவட்களிப்பெனென்னரசென்றெண்ணிஞன். (௩௨)

ஆண்டையானனையனவுன்னியாசைமேல்
மூண்டெழுசிந்தனைமுறையிலோன்றனைக்

---

28. கண்களிருபதாதலின். கண்ணின்மாலை எனப்பட்டது.

30. அரைகடையிட்டமுக்கோடி - அரையென்னும் எண்ணைக்கடையில் எழுதப்பட்ட மூன்றுகோடி என்க.

31. குடிமை - பரம்பரையாய்ச் செய்யுமடிமை.

33. ஆண்டையான் - அவ்விடத்தான்.

காண்டலுங்கண்ணினீர் துடைத்தகற்பினாள்
ஈண்டெழுந் தருளுமென் றினையகூறினாள். (௩௩)

சீதைதந்த ஆசனத்தில் அம்முனிவன் வீற்றிருத்தல்.

ஏத்தினளெய்தலுமிருத்திரீண்டென
வேத்திரத்தாசனம்விதியினல்கினாள்
மாத்திரிதண்டயல்வைத்தவஞ்சனும்
பூத்தொடர்சாலையினிருந்தபோழ்தினே. (௩௪)

நடுங்கினமலைகளுமரனுநாவவிந்
தடங்கினபறவையும்விலங்குமஞ்சின
படங்குறைந்தொதுங்கினபாம்புமபாதகக்
கடுந்தொழிலரக்கனைக்காணுங்கண்ணினே. (௩௫)

இருந்தவன்யாவதிவ்விருக்கையிங்குறை
அருந்தவன்யாவனீர்யாரையென்றலும்
விருந்தினரிவ்வழிவிரகிலாரெனப்
பெருந்தடங்கண்ணவள்பேசன்மேயினாள். (௩௬)

தயரதன்றொல்குலத்தலைவன்றம்பியோ
டுயர்குலத்தன்னைசொலுச்சியேந்தினான்
அயர்விலதிவ்வழியுறையுமன்னவன்
பெயரினைத்தெரிகுதிர்பெருமையீரென்றாள். (௩௭)

கேட்டனென்கண்டிலென்கெழுவுகங்கைநீர்
நாட்டிடையொருமுறைநண்ணினேன்மலர்
வாட்டடங்கண்ணினீர்யாவன்மாமகள்
காட்டிடையரும்பகல்கழிக்கின்றீரென்றான். (௩௮)

அனகமாநெறிபடரடிகளும்மலால்
நினைவதோர்தெய்வம்வேறிலாதநெஞ்சினான்
சனகன்மாமகள்பெயர்சனகிகாகுத்தன்
மனைவியானென்றனண்மறுவில்கற்பினாள். (௩௯)

அவ்வழியனையனவுரைத்தவாயிழை
வெவ்வழிவருந்தினிர்விளாந்தமூப்பினிர்

36. விரகிலார்—தம்மை இத்தன்மையாரென்று அறிந்தில்லாதவர். விரகு—அறிவு "விரகறியாளர்" (புறப்பாட்டு—௨௬௬.)

இவ்வழியிருவினைகடக்கவெண்ணினீர்
எவ்வழிநின்றுமிங்கெய்தினீரென்றாள். (௪௰)

அதற்கவன் கூறும்விடை.

இந்திரற்கிந்திரனெழுதலாகலாச்
சுந்தரமுன்முகன்மரபிற்றோன்றினான்
அந்தரத்தோடுமெவ்வுலகுமாள்கின்றான்
மந்திரத்தருமறைவைகுநாவினான். (௪௧)

ஈசனாண்டிருந்தபேரிலங்குமால்வரை
ஊசிவேரொடும்பறித்தெடுக்குமூற்றத்தான்
ஆசைகள்சுமந்தபேரளவில்யானைகள்
பூசல்செய்மருப்பினைப்பொடிசெய்தோளினான். (௪௨)

நிற்பவர்கடைத்தலைநிறைந்துதேவரே
சொற்பகுமற்றவன்பெருமைசொல்லுங்கால்
கற்பகமுதலியநிதியங்கையன
பொற்பகமானநீரிலங்கைப்பொன்னகர். (௪௩)

மேனகைதிலோத்தமைமுதலவேழையர்
வானகந்துறந்துவந்தவன்றன்மாட்சியால்
ஊனமிலடைப்பைகால்வருடலொண்செருப்
பானவைமுதற்றொழிலவரதாகுமே. (௪௪)

சந்திரனிரவியென்பவர்கடாமவன்
சிந்தனைவழிநிலைதிரிவர்தேசுடை
இந்திரன்முதலியவமரரீண்டவன்
கந்தடுகோயிலின்காவலாளரே. (௪௫)

பொன்னகரத்தினும்பொலங்கொளாகர்தம்
தொன்னகரத்தினுந்தொடர்ந்தமாநிலந்
தென்னகரத்தினுமினியவீண்டவன்
நன்னகரத்தனநவையிலாதன. (௪௬)

தாளுடைமலருளான்றந்தவந்தமில்
நாளுடைவாழ்க்கையனரிபாகத்தன்
வாளுடைத்தடக்கையன்வாரிவைத்தவெங்
கோளுடைச்சிறையினன்குணங்கண்மேன்மையான். (௪௭)

---

42. ஆசைகள் - திக்குகள். பேரளவில்யானை - மிகப்பெரியயானை.

வெம்மைதீரொழுக்கினன்விரிந்தகேள்வியன்
செம்மையோன்மன்மதன் றிகைக்குஞ்செவ்வியன்
எம்மையோரனைவருமிறைவரென்றெணும்
மும்மையோர்பெருமையுமுற்றும்பெற்றியான். (௪௮)

அனைத்துலகினுமழகமைந்தநங்கையர்
எனைப்பலரவன்றனதருளினிச்சையோர்
நினைத்தவருருகவுமுதவநேர்கிலன்
மனக்கினியாளொருமாதர்நாடுவான். (௪௯)

ஆண்டையானரசுவீற்றிருந்தவந்நகர்
வேண்டியான்சில்பகலுறையவேண்டினேன்
நீண்டனெனிருந்தவற்பிரிந்தநெஞ்சினேன்
மீண்டனெனென்றனன்வினையமுன்னுவான். (௫௦)

வேதமும்வேதியருளும்வெஃகலாச்
சேதனைமன்னுயிர்தின்னுந்தீவினைப்
பாதகவரக்கர்தம்பதியின்வைகுதற்
கேதுவென்னுடலமுமிகையென்றெண்ணுவீர். (௫௧)

வனத்திடைமாதவர்மருங்குறைவைகலிர்
புனத்திருநாட்டிடைப்புனிதரூர்புக
நினைத்திலிரறநெறிநினைக்கிலாதவர்
இனத்திடைவைகினிரென்செய்தீரென்றான். (௫௨)

வேறு.

மங்கையஃதுரைத்தல்கேட்டவரம்பிலான்மறுவீற்றீர்ந்தார்
வெங்கண்வாளரக்கரென்னவெருவலமெய்ம்மைநோக்கின்
திங்கள்வாண்முகத்தியத்தேவரிற்றீயரல்லர்
எங்கள்போலியர்க்குநல்லார்நிருதரேபோலுமென்றான். (௫௩)

சேயிழையன்னசொல்லத்தீயவர்ச்சேர்தல்செய்தார்
தூயவரல்லர்சொல்விற்றுன்னெறிதொடர்ந்தோரென்றாள்
மாயவல்லரக்கர்வல்லர்வேண்டுருவரிக்கவென்ப
தாயவளறிதறேற்றாளாகவினயலொன்றெண்ணாள். (௫௪)

அயிர்த்தனளாகுமென்றோருரையுறவகத்துக்கொண்டான்
பெயர்த்ததுதுடைக்கவெண்ணிப்பிறிதுறப்பேசலுற்றான்
மயக்கறுமுலகமூன்றின்வாழ்பவர்க்கனையவல்லோர்
இயற்கையிற்றிரியினல்லாலியற்றலாநெறியென்னென்றான். (௫௫)

---

48. செம்மை - நடுவுநிலைமை.

திறந்தெரிவஞ்சனச்சொற்செப்பலுஞ்செப்பமிக்காள்
அறந்தருவள்ளலீண்டிங்கருந்தவமுயலுநாளுள்
மறந்தலைதிரிந்தவாழ்க்கையரக்கர்தம்வருக்கத்தோடும்
இறந்தனர்முடிவர்பின்னரிடரிலையுலகமென்றாள். (ருசு)

மானவனுரைத்தலோடுமானுடரரக்கர்தம்மை
மீனெனமிளிருங்கண்ணாய்வேரறவெல்வரென்னின்
யானையினினத்தையெல்லாமிளமுயல்கொல்லும்பின்னும்
கூனுகிர்மடங்கலேற்றைக்குருளைமான்கொல்லுமென்றான். (ருஎ)

மின்றிரண்டனையபங்கிவிராதனும்வெகுளிபொங்கக்
கன்றியமனத்துவென்றிக்கரன்முதற்கணக்கிலோரும்
பொன்றியபூசலோன்றுங்கேட்டிலிர்போலுமென்றாள்
அன்றவர்க்கடுத்ததுன்னிமழைக்கணீரருவிசோர்வாள். (ருஅ)

வாளரிவள்ளறன்னாலிலங்கைமாநிருதரெல்லாம்
கேளொடுமறியுமாறும்வானவர்கிளருமாறும்
நாளையேகாண்டிரன்றேநவையிலிருணர்கிலீரோ
மீளருந்தருமந்தன்னைவெல்லுமோபாவமென்றாள். (ருகூ)

தேனிடையமுதளாயவன்னமென்சிலசொன்மாலை
தானுடைச்செவிகளூடுதவழுறத்தளிர்த்துவீங்கும்
ஊனுடையுடம்பினானுமுருகெழுமானமூன்ற
மானுடர்வலியரென்றமாற்றத்தாற்சீற்றம்வைத்தான். (சு௦)

சிறினனுரைசெய்வானச்சிலைவலிப்புல்லியோர்கட்
கீறொருமனிதன்செய்தாளென்றெடுத்தியம்பினாயேல்
தேறுதிநாளையேயவ்விருபதுதிண்டோள்வாடை
வீறியபொழுதுபூளைவீயெனவீவனன்றே. (சுக)

மேருவைப்பறிக்கவேண்டின்விண்ணினையிடிக்கவேண்டின்
நீரினைக்கலக்கவேண்டினெருப்பினையவிக்கவேண்டின்
பாரினையெடுக்கவேண்டிற்பலவினைசிலசொல்லேழாய்
யாரெனக்கருதிச்சொன்னாயிராவணற்கரிதென்னென்றான். (சுஉ)

அரண்டருதிரடோள்சாலவுளவெனினாற்றலுண்டோ
கரண்டநீரிலங்கைவேந்தர்சிறைவைத்தகழற்கால்வீரன்

58. பங்கி - ஆண்மயிர்.

61. பூளை - ஓர்செடி; இலவம்பஞ்சுமாம்.

திரண்டதோள்வனத்தையெல்லாஞ்சிறியதோர்பருவந்தன்னில்
இரண்டுதோளொருவனன்றேமழுவினுலெறிந்தானென்றாள். (கூங)

என்றிவளுரைத்தலோடுமெரிந்தனநயனந்திக்கிற்
சென்றனதிரடோள்வானந்தீண்டினமகுடந்திண்கை
ஒன்றொடொன்றடித்தமேகத்துருமெனவெயிற்றிளெளி
மென்றனவெகுளிபொங்கவிட்டதுமாயவேடம். (கூச)

இருவினைதுறந்தமேலோரல்லன்கொலிவனென்றெண்ணி
அரிவையுமையமெய்தாவாரிவன்றுனென்றென்றும்
தெரிவருநிலையளாகத்தீவிடத்தரவந்தானே
உருகெழுசீற்றம்பொங்கிப்பணம்விரித்துயர்ந்ததொத்தான். (கூரு)

ஆற்றவெந்துயரத்தன்னுளாண்டுற்றவலக்கணுக்கின்
ஏற்றமென்னினைக்கலாகுமெதிரெடுத்தியம்பலாகும்
மாற்றமொன்றில்லைசெய்யும்வினையில்லைவரிக்கலாகாக்
கூற்றம்வந்துற்றகாலத்துயிரெனக்குலைவுகொண்டாள். (கூசு)

விண்ணவரேவல்செய்யவென்றவென்வீரம்பாராய்
மண்ணிடைப்புழுவின்வாழுமானுடர்வலியரென்றாய்
பெண்ணெனப்பிழைத்தாயன்றேலுன்னையான்பிசைந்துதின்ன
எண்ணுவெனெண்ணிற்பின்னையென்னுயிரிழப்பெனென்றான். (கூஎ)

குலைவுறலன்னமுன்னம்யாரையுங்கும்பிடாவென்
தலைமிசைமகுடமென்னத்தனித்தனியினிதுதாங்கி
அலகில்பூணரம்பைமாதரடிமுறைமேவல்செய்ய
உலகமீரேழுமாளுஞ்செல்வத்துறுதிநேதியென்றான். (கூஅ)

செவிகளைத்தளிர்க்கையாலேசிக்குரச்சேமஞ்செய்தாள்
கவினும்வெஞ்சிலைக்கைவென்றிக்காகுத்தன்கற்பினேனைப்
புவியிடையொழுக்கநோக்காப்பொங்கெரிப்புனிதரீயும்
அவியைநாய்வேட்டதென்னவென்சொனுயரக்கவென்னு. (கூகூ)

புன்னுனைநீரினெய்தாய்ப்போதலேபுரிந்துநின்ற
இன்னுயிரிழத்தலஞ்சியிற்பிறப்பழிதலுண்டே
மின்னுயிர்த்துருமிற்சீறும்வெங்கணைவிரவாமுன்னம்
உன்னுயிர்க்குறுதிநோக்கிநெளித்தியாலோடியென்றாள். (எ௦)

63. தோள்வனம் - தோளின்தொகுதி.

69. அவி - ஹவிஸ் என்றவட சொல்லின் சிதைவு மந்திரபூர்வமாக அக்கினியில் ஓமஞ்செய்யப்படும் நெய்முதலிய தேவருணவு.

என்றவளுரைக்கநின்றவிரக்கமிலரக்கனெய்த
உன்றுணைக்கணவனம்பவ்வுயர்திசைசுமந்தவோங்கல்
வன்றிறன்மருப்பினூற்றன்மடித்தவென்மார்பின்வந்தால்
குன்றிடைதொடுத்துவிட்டபூங்கணைகொல்லதென்றான். (எக)

அணங்கினுக்கணங்கனாய்நின்னாசைநோயகத்துப்பொங்க
உணங்கியவுடம்பினேனுக்குயிரினையுதவியும்பர்க்
கணங்குழைமகளிர்க்கெல்லாம்பெரும்பதங்கைக்கொளென்று
வணங்கினனுலகந்தாங்குமலையினும்வலியதோளான். (எ௨)

வேறு.

தறைவாயவன்வந்தடிதாழுதலும்
கறைவாள்படவாவிகலங்கினள்போல்
இறைவாவிளையோயெனவேங்கினளால்
பொறைதானுயிர்போவதுபோற்புகல்வாள். (எ௩)

ஆண்டாயிடைதீயவனாயிழையைத்
தீண்டாலெனுமேலுரைசிந்தைசெயாத்
தூண்டானெனலாமுயர்தோள்வலியாற்
கீண்டானிலம்யோசனைகீழொடுமேல். (எ௪)

கொண்டானுயர்தேர்மிசைகோல்வளையாள்
கண்டாடனதாருயிர்கண்டிலளால்
மண்டானுறுமின்னின்மயங்கினளால்
விண்டான்வழியாவெழுவான்விரைவான். (எ௫)

விடுதேரெனவெங்கனல்வெந்தழியும்
கொடிபோல்புரள்வாள்குலைவாளயர்வாள்
துடியாவிழுவாடயராவெழுவாள்
கடிதாவறனேயிதுகாவெனுமால். (எ௬)

மலையேமரனேமயிலேகுயிலே
கலையேபிணையேகளிறேபிடியே
நிலையாவுயிரேனிலைதேறினர்போய்
உலையாவலியாருழைநீருரையீர். (எஎ)

---

72. உம்பர்கணங்குழை மகளிர்க்கெல்லாம் பெரும்பதம் என்றது எல்லாத் தேவர்களையும் வென்று திரிலோகாதிபத்தியத்தைக் கைக்கொண்ட தனக்கு உரியவளாதலை.

74. ஆயிழை-தேர்ந்தெடுத் தணிந்த சிறந்த ஆபரணங்களையுடையவள்.

செஞ்சேவகனார்நிலைநீர்தெரிவீர்
மஞ்சேபொழிலேவனதேவதைகாள்
அஞ்சேலெனநல்குதிரேலடியேன்
உஞ்சாலதுதானிழிபோவுரையீர். (எஅ)

நிருதாதியர்வேரறநீண்முகில்போல்
சரதாரைகள்வீசினிர்சார்கிலிரோ
வரதாவிளையோய்மறுவேதுமிலாப்
பரதாவிளையோய்பழிபூணுதிரோ. (எகூ)

கோதாவிரியேகுளிர்வாய்குழைவாய்
மாதாவனையாய்மனனேதெளிவாய்
ஓதாதுணர்வாருழையோடினைபோய்
நீதான்வினையேனிலைசொல்லலையோ. (அ0)

முந்துஞ்சுனைகாண்முழைவாளரிகாள்
இந்தந்நிலனேடுமெடுத்தகைநா
லைந்துந்தலைபத்துமலைந்துலையச்
சிந்தும்படிகண்டுசிரித்திடுவீர். (அக)

வேறு.

என்றின்னபலவும்பன்னியிரியலுற்றரற்றுவாளைப் [ளைக்
பொன்றுன்னுபுணர்மென்கொங்கைப்பொலங்குழாய்போரிலென்
கொன்றுன்னைமீட்பர்கொல்லம்மானுடர்கொள்கவென்று
வன்றிண்கையெறிந்துநக்கான்வாழ்க்கைநாள்வறிதுவீழ்வான்(அஉ)

வாக்கினலன்றுன்சொல்லமாயையால்வஞ்சமானென்
றாக்கினையாக்கியுன்னையாருயிருண்ணுங்கூற்றைப்
போக்கினைப்புகுந்துகொண்டுபோகின்றாய்பொருதுநின்னைக்
காக்குமாகாண்டியாயிற்கடவுளுன்றேரையென்றாள். (அங)

மீட்டுமொன்றுரைசெய்வாணீவீரனேல்விரைவின்மற்றுன்
கூட்டராமரக்கர்தம்மைக்கொன்றுங்கைகொங்கைமூக்கும்
வாட்டினார்வனத்திலுள்ளார்மானுடரென்றவார்த்தை
கேட்டுமிம்மாயஞ்செய்ததச்சத்தின்கிளர்ச்சியன்றோ. (அச)

மொழிதருமளவினங்கைகேளிதுமுரணில்யாக்கை
இழிதருமனிதரோடேயான்செருவேற்பலென்றால்
விழிதருநெற்றியான்றன்வெள்ளிவெற்பெடுத்ததோட்குப்
பழிதருமதனிற்சாலப்பயன்றரும்வஞ்சமென்றான். (அரு)

பாவையுமதனைக்கேளாத்தங்குலப்பகைஞர்தம்பால்
போவதுகுற்றம்வாளிற்பொருவதுநாணம்போலாம்
ஆவதுகற்பினாரைவஞ்சிக்குமாற்றலேயாம்
ஏவமென்பழிதானென்னையிரக்கமிலரக்கர்க்கென்றாள். (அ௬)

என்னுமவ்வேலையின்கணெங்கடாபோவதென்னா
நின்னிலென்றிடித்தசொல்லனெருப்பிடைப்பரப்புங்கண்ணன்
மின்னெனவிளங்கும்வீரத்துண்டத்தன்மேருவென்னும்
பொன்னெடுங்குன்றம்வானின்வருவதேபோலுமெய்யான். (அஎ)

பாழிவன்கிரிகளெல்லாம்பறித்தெழுந்தொன்றோடொன்று
பூழியினுதிரவிண்ணிற்புடையுறக்கிளர்ந்துபொங்கி
ஆழியுமுலகுமொன்றாயழிதரமுழுதும்வீசும்
ஊழிவெங்காற்றிதென்னவிருசிறையூதைமோத. (அஅ)

வேறு.

சாகைவன்றலையொடுமரமுந்தாழமேல்
மேகமும்விண்ணின்மீச்செல்லமீமிசை
மாகவெங்கலுழனும்வருகின்றானென
நாகமும்படமொளித்தொதுங்கிநையவே. (அகூ)

யானையும்யாளியுமுதலயாவையும்
கானெடுமரத்தொடுதூறுகல்லிவை
மேனிறைந்திருசிறைவீச்சினேறலால்
வானமுங்கானமுமாறுகொள்ளவே. (கூ0)

உத்தமன்றேவியையுலகொடோங்குதேர்
வைத்தனையேகுவதெங்குவானினோ
டித்தனைதிசையையுமறைப்பெனீண்டெனாப்
பத்திரச்சிறைகளைவிரிக்கும்பண்பினான். (கூக)

வந்தனனெருவையின்மன்னன்மாண்பிலான்
எந்திரத்தேர்செலவொழிக்குமெண்ணினான்
சித்துரக்கால்சிரஞ்செக்கர்சூடிய
கந்தரக்கைலையைநிகர்க்குங்காட்சியான். (கூஉ)

வேறு.

ஆண்டுற்றவணங்கினையஞ்சலெனாத்
தீண்டுற்றிலனென்றுணர்சிந்தையினான்

---

91. உத்தமன் - புருஷோத்தமன்.

மூண்டுற்றெழுவெங்கதமுற்றிலனால்
மீண்டுற்றுரையாடலுமேயினனால். (கூ௩)

கெட்டாய்கிளையோடுநின்வாழ்வையெலாம்
சுட்டாயிதுவென்னதொடங்கினைநீ
பட்டாயெனவேகொடுபத்தினியை
விட்டேகுதியால்விளிகின்றிலையால். (கூ௪)

பேதாய்பிழைசெய்தனைபேருலகின்
மாதாவனையாளைமனக்கொடுநீ
யாதாகநினைத்தனையெண்ணமிலாய்
ஆதாரநினக்கினியாருளரோ. (கூ௫)

உய்யாமன்மலைந்துமராருயிரை
மெய்யாகவிராமன்விருந்திடவே
கையாரமுகந்துகொடந்தகனூர்
ஐயாபுதிதுண்டதறிந்திலையோ. (கூ௬)

கொடுவெங்கரிகொல்லியவந்ததன்மேல்
விடுமுண்டைகடாவவிரும்பினையே
அடுமென்பதுணர்ந்திலையாயினும்வன்
கடுவுண்டுயிரின்னிலைகாணுதியோ. (கூ௭)

எல்லாவுலகங்களுமிந்திரனும்
அல்லாதவர்மூவருமந்தகனும்
புல்வாய்புலிகண்டதுபோல்வரலால்
வில்லாளரைவெல்லுமிடுக்குளரோ. (கூ௮)

இம்மைக்குறவோடுமிறந்தழியும்
வெம்மைத்தொழிலிங்கிதன்மேலிலையால்
அம்மைக்கருமாநரகந்தருமால்
எம்மைக்கிதமாகவிதெண்ணினைநீ. (கூ௯)

முத்தேவரின்மூலமுதற்பொருளாம்
அத்தேவரிம்மானிடராதலினால்
எத்தேவரொடெண்ணுவதெண்ணமிலாப்
பித்தேறினையாதல்பிழைத்தனையால். (க௦௦)

புரம்பற்றியபோர்விடையோனருளால்
வரம்பெற்றவுமற்றுளவிஞ்சைகளும்

95. உலகின் மாதா - லோகமாதா.

உரம்பெற்றனவாவனவுண்மையினேன்
சரம்பற்றியசாபம்விடுந்தனையே. (கOக)

வானுள்பவன்மைந்தன்வளைத்தவிலான்
தானேவரினின்றுதடுப்பரிதால்
நானேயவனுய்ப்பெனிந்நன்னுதலைப்
போநீகடிதென்றுபுகன்றிடலும். (கO௨.)

இராவணன் மறுத்துக்கூறும் வார்த்தைகள்.

கேட்டானிருதர்க்கிறைகேழ்கிளர்தன்
வாட்டாரைநெருப்புகவாய்மடியா
ஓட்டாயினிநீயுரைசெய்குநரைக்
காட்டாய்கடிதென்றுகனன்றுரையா. (கOங)

வரும்புண்டரம்வாளியின்மார்புருவிப்
பெரும்புண்டிறவாவகைபேருதிநீ
இரும்புண்டநீர்மீள்கினுமென்னுழையிற்
கரும்புண்டசொன்மீள்கிலள்காணுதியால். (கOச)

வேறு.

என்னும்மளவிற்பயமுன்னினிரட்டியெய்த
அன்னம்மயர்கின்றதுநோக்கியரக்கன்யாக்கை
சின்னம்முறுமிப்பொழுதேசிலையேந்திநங்கள்
மன்னன்மகன்வந்திலனென்றுவருந்தலன்னை. (கO௫)

முத்துக்கனபோன்முகத்தாலிமுலைக்கண்வீழத்
தத்துற்றயரேறலைதாலபலத்தினேனும்
கொத்தொப்பனகொண்டிவன்கொண்டனவென்றவாசை
பத்திற்குமின்றேபலியீவதுபார்த்தியென்றான். (கO௬)

இடிப்பொத்தமுழக்கினிருஞ்சிறைவீசியெற்றி
முடிப்பத்திகளைப்படியிட்டுமுழங்குதுண்டம்
கடிப்பக்கடிதுற்றவன்காண்டகுநீண்டவீணைக்
கொடிப்பற்றியொடித்துயர்வானவராசிகொண்டான். (கOஎ)

அக்காலையரக்கனரக்குருக்கன்னகண்ணன்
எக்காலமுமின்னதொரீடழிவுற்றிலாதான்
நக்கானுலகேழுநடுங்கிடநாகமன்ன
கைக்கார்முகத்தோடுகடைப்புருவங்குனித்தான். (கO௮)

106. பலி - தேவர்க்கு இடும்உணவு.

சண்டப்பிறைவாளெயிற்றன்சரதாரைமாரி
மண்டச்சிறகாலடித்தான்சிலவள்ளுகிரால்
கண்டப்படுத்தான்சிலகாலனுங்காணவுட்கும்
துண்டப்படையாற்சிலதுண்டதுண்டங்கள்கண்டான். (க0சு)

மீட்டும்மனுகாநெடுவெங்கணைனந்தநாகம்
வாட்டுங்கழலுழனெனவன்றலைபத்தின்மீதும்
நீட்டுந்நெடுமூக்கெனுநேமியன்சேமவிற்கால்
கோட்டும்மளவின்மணிக்குண்டலங்கொண்டெழுந்தான். (கக0)

எழுந்தான்றடமார்பினிலேழிஞெடேழுவாளி
அழுந்தாதுகழன்றிடப்பெய்தெடுத்தார்த்தரக்கன்
பொழிந்தான்புகர்வாளிகண்மீளவும்போர்ச்சடாயு
விழுந்தானெனவஞ்சினர்விண்ணவர்வெய்துயிர்த்தார். (கக்க)

புண்ணிற்புதுநீர்பொலியப்பொழிபுள்ளின்வேந்தன்
மண்ணிற்கரனேமுதலோருதிரத்தின்வாரி
கண்ணிற்கடலென்று நுகர்ந்ததுகான்றுமீள
விண்ணிற்பொலிகின்றதெதார்வெண்ணிறமேகமென்ன. (ககஉ)

ஒத்தானுடனேயுயிர்தானுருத்தானவன்றேள்
பத்தோடுபத்தினெடும்பத்தியிற்றத்திமூக்கால்
கொத்தாநகத்தாற்குடையாச்சிறையாற்புடையா
முத்தாரமார்பிற்கவசத்தையுமூட்டறுத்தான். (ககந)

அறுத்தானையரக்கனுமைம்பதொடைம்பதம்பு
செறித்தான்றடமார்பிற்செறித்தலுந்தேவரஞ்சி
வெறித்தார்வெறியாமுனிராவணன்வில்லைப்பல்லால்
பறித்தான்பறவைக்கிறைவிண்ணவர்பண்ணையார்ப்ப. (ககச)

எல்விட்டவெள்ளிக்கயிலைப்பொருப்பீசனோடு
மல்விட்டதோளாலெடுத்தான்சிலைவாயின்வாங்கி
வில்விட்டுயர்ந்தநீடுமேகமெனப்பொலிந்தான்
சொல்விட்டவன்றோள்வலியாருளர்சொல்லவல்லார். (ககரு)

மீளாநிறத்தாயிரங்கண்ணவன்விண்ணினோடை
வாளாலொறுத்தான்சிலவாயிடைநின்றுவாங்கித்

113. கவசத்தையு மூட்டறுத்தான் - கவசத்தின் பூட்டுகளைத்துணித்தான்.

தாளாவிருத்தான்றழல்வண்ணன்றடக்கைவில்லைத்
தோளாவிருத்தான்றுணைத்தாதைதனன்பிற்றோழன். (ககரு)

ஞாலம்மெடுப்பான்றனதாற்றலுக்கேற்றநல்வில்
மூலம்மொடிப்புண்டதுகண்டுமுனிந்தநெஞ்சன்
ஆலம்மிடற்றான்புரமட்டதொரம்புபோலும்
சூலம்மெடுத்தானெறிந்தான்மறந்தோற்றிலாதான். (ககஎ)

ஆற்றானிவனென்றுணராதெனதாற்றல்காணென்
றேற்றானொருவைக்கிறைமுத்தலையெஃமார்பின்
மேற்றானிதுசெய்பவர்யாரெனவிண்ணுளோர்கள்
தோற்றாதுநின்றார்தமதோள்புடைகொட்டியார்த்தார். (ககஅ)

பொன்னோக்கியர்தம்புலனோக்கியபுன்கணோரும்
இன்னோக்கியரில்வழியெய்தியநல்லிருந்தும்
தன்னோக்கியநெஞ்சுடையோகியர்தம்மைசார்ந்த
மென்னோக்கியர்நோக்கமுமாமெனநீண்டதவ்வேல். (ககசு)

வேகம்முடன்வேலிழந்தான்படைவேறெடாமுன்
மாகம்மறையும்படிநீண்டவயங்குமான்றேர்ப்
பாகன்றலையைப்பறித்துப்படர்ந்தகற்பினாள்பால்
மோகம்படைத்தானுளைவெய்தமுகத்தெறிந்தான். (கஉ0)

எறிந்தானதுநோக்கியிராவணனெஞ்சினுற்றல்
அறிந்தான்முனிந்தாண்டதொராடகத்தண்டுவாங்கிப்
பொறிந்தாங்கெரியின்சிகைபொங்கியெழப்புடைத்தான்
மறிந்தானொருவைக்கிறைமால்வரைபோலமண்மேல். (கஉக)

மண்மேல்விழுந்தான்விழலோடும்வயங்குமான்றேர்க்
கண்மேலொளியுந்தொடராவகைதான்கடாவி
விண்மேலெழுந்தானெழுமேல்வியலாளும்வெந்தீப்
புண்மேனுழையத்துடிக்கின்றனள்போற்புரண்டாள். (கஉஉ)

கொழுந்தேயனையாள்குழைந்தேங்கியகொள்கைகண்டான்
அழுந்தேதலவலத்திடையஞ்சலையன்னையென்று
எழுந்தானுயிர்த்தானடவெங்கினிப்போவதென்று
விழுந்தானவன்றேர்மிசைவிண்ணவர்பண்ணையார்ப்ப. (கஉங)

119. புன்கண் - வாடியகண் பொருளின்மை துன்பத்துள் துன்பமாதலால் வறுயவர் புன்காணோர் எனப்பட்டனர்.

பாய்ந்தானவன்மணித்தண்டுபறித்தெறிந்தான்
ஏய்ந்தார்கதித்தேர்ப்பரியெட்டினொடெட்டுமெஞ்சித்
தீய்ந்தாசறவீசியத்திண்டிறற்றுண்டவாளால்
காய்ந்தான்கவர்ந்தானுயிர்காலனுங்கைவிதிர்த்தான். (கஉச)

திண்டோரழித்தாங்கவன்றிண்புறஞ்சேர்ந்ததூணி
விண்டானமறைப்பச்செறிகின்றனவில்லிலாமை
மண்டாரமர்தான்வழங்காமையின்வச்சைமாக்கள்
பண்டாரமொக்கின்றனவள்ளுகிராற்பறித்தான். (கஉரு)

மாச்சிச்சிரம்பாய்ந்தவன்மார்பினுந்தோள்கண்மேலும்
ஓச்சிச்சிறகாற்புடைத்தான்கடித்தானுலையா
மூச்சிற்றவிராவணனும்முடிசாய்ந்திருந்தான்
போச்சித்தனைபோலுநின்றாற்றலெனப்புகன்றான். (கஉ௬)

அவ்வேலையினைமுனிந்தான்முனிந்தாற்றலன்ன
வெவ்வேலரக்கன்விடலாம்படைவேறுகாணான்
இவ்வேலையினேயிவனின்னுயிருண்பலென்னாச்
செவ்வேபிழையாநெடுவாளுறைநீர்த்தெறித்தான். (கஉஎ)

வலியின்றலைதோற்றிலன்மாற்றருந்தெய்வவாளால்
நலியுந்தலையென்றறிந்தன்றியும்வாழ்க்கைநாளும்
மெலியுங்கடைசென்றுளதாகலின்விண்ணின்வேந்தன்
குலிசம்மெறியச்சிறையற்றதொர்குன்றின்வீழ்ந்தான். (கஉஅ)

விரிந்தார்சிறைகீழுறவீழ்ந்தனன்மண்ணின்விண்ணோர்
இரிந்தாரிழந்தாடுணையென்னமுனிக்கணங்கள்
பரிந்தார்படர்விண்டுவினாட்டவர்பைம்பொன்மாரி
சொரிந்தாரதுநோக்கியசீதைதுளக்கமுற்றாள். (கஉ௯)

வெள்கும்மரக்கன்னெடுவிண்புகவார்த்துமிக்கான்
தொள்கின்றலையெய்தியமானெனச்சோர்ந்துநைவாள்
உள்கும்முயிர்க்கும்முயங்கும்மொருசார்வுகாணாள்
கொள்கொம்பொடியக்கொடிவீழ்ந்ததுபோற்குலைந்தாள். (கங௦)

---

126. மாச்சிச்சிரம் - மிக்கவிநோதம், மகாசித்ரம், பெரிய சிச்சிலிக்குருவி என்று பொருள் கூறுதலும் ஈண்டுபொருந்தும் பெருங்கழுகு என்பதும் பொருந்தும் சிச்சிரமென்பது கழுகென்னும் பொருளதாதற்கு மேற்கோள் கிடைத்திலது.

129. விண்டுவினாட்டவர் - நித்தியசூரிகள்,

### வேறு.

வன்றுணையுளனெனவந்தமன்னனும்
பொன்றினனெனக்கினிப்புகலெனென்கின்றாள்
இன்றுணைபிரிந்திரிந்தின்னலெய்திய
அன்றிலம்பெடையெனவரற்றினாளரோ. (க௩க)

பின்னவனுரையினைமறுத்துப்பேதையேன்
அன்னவன்றனைக்கடிதகற்றினேன்பொரு
மன்னவன்சிறையறமயங்கினேன்விதி
இன்னமுமெவ்வினையியற்றுமோவெனா. (க௩உ)

அல்லலுற்றேனைவந்தஞ்சலென்றவிந்
நல்லவன்றோற்பதேநரகன்வெல்வதே
வெல்வதும்பாவமோவேதம்பொய்க்குமோ
இல்லையோவறமெனவிரங்கியேங்கினாள். (க௩௩)

நாணிலேனுரைகொடுநடந்தநம்பிமீர்
நீணிலையறநெறிநின்றுளோர்க்கெலாம்
ஆணியையுந்தையர்க்கமைந்தவன்பனைக்
காணியவம்மெனக்கலங்கிவிம்மினாள். (க௩ச)

கற்பழியாமையென்கடமையாயினும்
பொற்பழியாவலம்பொருந்தும்போர்வலான்
விற்பழியுண்டதுவினையினேன்வந்த
இற்பழியுண்டதென்றிரங்கியேங்கினாள். (க௩ரு)

எல்லையில்விசும்பிடையிருந்தநேமியாய்
சொல்லியலாய்நெறிதொடர்ந்ததோழமை
நல்லியலருங்கடன்கழித்தநம்பியைப்
புல்லுதியோவெனப்பொருமிப்பொங்கினாள். (க௩சு)

ஏங்குவாடன்மையுமிறகிழந்தவன்
ஆங்குறுதன்மையுமரக்கனோக்கினான்
வாங்கினன்றேரிடைவைத்தமண்ணொடும்
வீங்குதோண்மீக்கொடுவிண்ணினேகினான். (க௩எ)

---

134. நாணுவது - செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல்; இலச்சை. தகாதகாரியத்தில் முயலும்படி இராமனைத் தான் தூண்டியதுமன்றி இலக்குமணனையும் தன்னைப்பிரிந்து செல்லும்படி தகுதியில்லாது ஏவியதனால், 'நாணிலேன்' என்று தன்னைத்தானே பழித்துக்கொண்டாள்.

விண்ணிடைவெய்யவனேகும்வேகத்தால்
கண்ணொடுமனவைசுழன்றகற்பினாள்
உண்ணிறையுணர்வழிந்தொன்றுமோர்ந்திலள்
மண்ணிடைத்தன்னையுமறந்துசாம்பினாள். (கஙஅ)

ஏகினனரக்கனுமெருவைவேந்தனும்
மோகவெந்துயர்சிறிதாறிமூர்ச்சிபா
மாகமேனோக்கினன்வஞ்சன்வல்லையில்
போகுதல்கண்டகம்புலர்ந்துசொல்லுவான். (கஙகூ)

வந்திலர்மைந்தர்நம்மருகிக்கெய்திய
வெந்துயர்துடைத்தனரென்னுமெய்ப்புகழ்
தந்திலர்விதியினார்தருமவேலியைச்
சிந்தினர்மேலினிச்செயலென்னாங்கொலோ. (கசo)

வெற்றியருளரெனின்மின்னினுண்ணிடைப்
பொற்றொடிக்கிந்நிலைபுகுதற்பாலதோ
உற்றதையின்னதென்றுணரகிற்றிலேன்
சிற்றவைவஞ்சனைமுடியச்செய்ததோ. (சசக)

பஞ்சணைபாம்பணையாகப்பள்ளிசேர்
அஞ்சனவண்ணனேயிராமனாதலால்
வெஞ்சினவரக்கனால்வெல்லற்பாலனோ
வஞ்சனையிழைத்தனன்கள்ளமாயையால். (சசஉ)

வேரறவரக்கரைவென்றுவெம்பழி
தீருமென்சிறுவனுந்தீண்டவஞ்சுமால்
ஆரியன்றேவியையரக்கனன்மலர்ப்
பேருலகளித்தவன்பிழைப்பில்சாபத்தால். (கசங)

பருஞ்சிறையின்னனபன்னியுன்னுவான்
அருஞ்சிறையுற்றனளாமெனுமனம்
பொருஞ்சிறையிற்றதேற்பூவைகற்பெனும்
இருஞ்சிறையிறுமெனவிடருநீங்கினான். (கசச)

அருஞ்சிறைகுருதியாலழிந்துசோர்வுற
வஞ்சியைமீட்கிலேனென்னுமானமும்
செஞ்செவேமக்கள்பாற்சென்றகாதலும்
நெஞ்சுறத்துயின்றனனுணர்வுநீங்கலான். (கசரு)

---

145. உணர்வு நீங்கலான் என்றது எப்பொழுதும் நிலைகுலையாத நல்லறிவுடையானென்ற இயல்பை விளக்குவதோடு இப்பொழுது உயிரொழிந்திலனென்ற செய்தியையும் விளக்கும்

வஞ்சியையரக்கனும்வல்லைகொண்டுபோய்ச்
செஞ்செவேதிருவுருத்தீண்டவஞ்சுவான்
நஞ்சியலரக்கியர்நடுவணுறையிடைச்
சிஞ்சுபவனத்திடைச்சிறைவைத்தானரோ. (கசகூ)

இந்நிலையினையவன்செயலியம்பினும்
பொன்னிலைமானின்பின்றொடர்ந்துபோகிய
மன்னிலையறிகெனமங்கையேவிய
பின்னிளையவனிலைபேசுவாமரோ. (கசஎ)

ஒருமகடனிமையைபுன்னியுள்ளுறும்
பருவரன்மீதிடப்பதைக்குநெஞ்சினன்
பெருமகன்றனைத்தனிபிரிந்துபேதுறும்
திருநகர்திருமப்பரதன்செய்கையான். (கசஅ)

தெண்டிரைக்கலமெனவிரைவிற்செல்கின்றான்
புண்டரிகத்தடங்காடுபூத்தொரு
கொண்டல்வந்திழிந்தெனக்கோலத்தாள்றனைக்
கண்டனன்மனமெனக்களிக்குக்கண்ணினான். (கசகூ)

தண்ணுமவ்வுதைதொடரத்தோகையும்
பெண்ணுமபேதைமையயக்கப்பேதினால்
உண்ணிறைசோருமென்றுசலாடுமக்
கண்ணனுமிளவலைக்கண்ணுற்றனரோ. (கரு௦)

வேறு.

புன்சொற்கடந்த பருவாயரக்க னுரைபொய் யெனுந்துணிகல்வாள், வன்சொற்கடந்து மடமங்கையேவ நிலைதேரவந்தமருளே, தன்சொற்கடந்து தளர்கின்றநெஞ்ச முடையேன்மருங்குதனியே,என்சொற்கடந்து மனமுந்தளர்ந்த விளவீரன்வந்தவியல்பே. (கருக)

என்றுன்னியென்னை விதியார்முடிப்ப தெனவெண்ணிநின்றவிறையைப், பொன்றுன்னுவிற்கை வயவீரன்வந்து புனைதாளிறைஞ்சுபொழுதில், மின்றுன்னுநூலின் மணிமார்பழுந்த வினையேவொடுபுல்லியுருகா, நின்றுன்னிவந்த நிலையென்கொலென்று நெடியோன்விளம்பநொடிவான். (கருஉ)

152. நெடியோன் - மூத்தவன், இனி திருக்கலியாண குணகணங்களாற் பெரியவனும், திரிவிக்கிரமாவதாரத்தில் நீண்டு வளர்ந்தவனும் நெடிய விசுவரூபமுடையவனுமாம்.

இல்லாநிலத்தி னிசையாதவெஞ்சொ லெழவஞ்சியேவமுறை
யால், வல்வாயரக்கனுரையாகுமென்ன மதியாண்மறுக்கமுறுவாள்,
நில்லாதுமற்றி தறிபோதியென்ன நெடியோய் புயத்தின்வலியென்,
சொல்லான்மனத்தி னடையாள்சினத்தின் முனிவோடுநின்று துவ
ள்வாள். (௧௫௩)

ஏகாதுநிற்றி யெனின்யானெருப்பி னிடைவீழ்வெனென்றுமு
டுகா, மாகானகத்தி னிடைபோடலோடு மனமஞ்சி வஞ்சவினையே
ன், போகாதிருத்தி னிறவாதிருக்கை புணராவெனக்கொ டுணரா,
ஆகாதிறக்கை யறனன்றெனக்கொ டிவன்வந்ததென்னவமலன். ()

சாவாதிருத்த லிலளானதுற்ற தஃதோ தடுக்கமுடியா, ஆவா
வலக்கணுறுவாளுரைத்த பொருளோவகத்தினடையாக், காவாநில
த்தின் வருமேதமற்ற தொழியா துகைக்கொடகலப், போவார்பிரி
க்க முயல்வார்புணர்த்த பொருளாமி·தென்றுதெருளா. (௧௫௫)

வந்தாய்திறத்தி னுளதன்றுகுற்ற மடவாண் மறுக்கமுறுவா
ள், சிந்தாகுலத்தொ டுரைசெய்தசெய்கை யுதுதீருமென்று தெளி
வாய், முந்தேதடுக்க வொழியாதெடுத்த வினையேன்முடித்த முடி
வால், அந்தோகெடுத்த தெனவுன்னியுன்னி யழியாதவுள்ள மழி
வான். (௧௫௬)

பாணிக்கநின்று பயனுவகைதன்னை பயில்பூவை யன்னகுயிலைக்,
காணிற்கரந்த துயர்நீருமன்றி யயலில்லையென்றுகடுகிச், சேணுற்ற
கன்ற நெறியூடுசென்று சிலைவாளியன்ன விசைபோய், ஆணிப்பசும்
பொனனையாளிருந்த வவிர்சோலை யல்லையணுகா. (௧௫௭)

வேறு.

ஓடிவந்தனன்சாலையின்சோலையினுதவும்
தோடிவர்ந்தபூஞ்சுரிகுழலாடனைக்காணான்
கூடுதன்னுடையதுபிரிந்தாருயிர்குறியா
நேடிவந்ததுகண்டிலதாமெனநின்றான். (௧௫௮)

கைத்தசிந்தையன்கனங்குழையணங்கினைக்காணு
துய்த்துவாழ்தரவேவொருபொருளிலானுதவ
வைத்தமாநிதிமண்ணொடுமறைந்தனவாங்கிப்
பொய்த்துளோர்கொளத்திகைத்துநின்றானையும்போன்றான். (௧௫௯)

மண்சுழன்றதுமால்வரைசுழன்றதுமதியோர்
எண்சுழன்றதுசுழன்றதவ்வெறிகடலேழும்

விண்சுழன்றதுவேதமுஞ்சுழன்றதுவிரிஞ்சன்
கண்சுழன்றதுசுழன்றதுகதிரொடுமதியும். (௧௯௦)

அறத்தைச்சீறுங்கொலருளையேசீறுங்கொலமரர்
திறத்தைச்சீறுங்கொன்முனிவரைச்சீறுங்கொறீயோர்
மறத்தைச்சீறுங்கொலென்கொலோமுடிவென்றுமறையின்
நிறத்தைச்சீறுங்கொனெடுந்தகையோனெனநடுங்கா. (௧௯௧)

நீலமேனிநன்னெடியவன்மனநிலைதிரிய
மூலகாரணத்தவனொடுமுடிவுறமுற்றும்
காலமாமெனக்கடையிடுகணிக்கரும்பொருள்கள்
மேலகீழுறக்கீழனமேலுறும்வேலை. (௧௯௨)

தேரினாழியுந்தெரிந்தனந்தீண்டுதலஞ்சிப்
பாரினோடுகொண்டகழ்ந்ததும்பார்த்தனம்பயனின்
றேருந்தன்மையிதென்னென்பதுரனிலாதவர்போல்
தூரம்போதன்முன்றொடர்துமென்றிளையவன்றொழலும். (௧௯௩)

ஆமதேயினியமைவதென்றமலனுமெய்யில்
தாமவார்கணைப்புட்டிலுமுதலியதாங்கி
வாமமால்வரைமரனிவைமடிதரவயவர்
பூமிமேலவன்றேர்சென்றநெடுநெறிபோனார். (௧௯௪)

மண்ணின்மேலவன்றேர்சென்றசுவடெலாமாய்ந்து
விண்ணினோங்கியதேருநிலைமெய்யுறவெந்த
புண்ணினூடுறுவேலெனமனமிகப்புழுங்கி
எண்ணிநாமினிச்செய்வதென்னிளவலேயென்றான். (௧௯௫)

தெற்குநோக்கியதெனும்பொருடெரிந்தகத்திண்டோர்
மற்குநோக்கியதிரள்புயத்தண்ணலேவானம்
விற்குநோக்கியபகழியினெடிதன்றுவிம்மி
நிற்குநோக்கிதென்பயத்ததென்றிளையவனேர்ந்தான். (௧௯௬)

ஆகுமன்னதேகருமமென்றத்திசைநோக்கி
ஏகியோசனைபலண்டுசென்றாரிடையெதிர்ந்தார்
மாகமால்வரைகால்பொரமறிந்ததுமானப்
பாகவீணையின்கொடியொன்றுகிடந்ததுபார்மேல். (௧௯௭)

கண்டுகண்டகரோடுமக்காரிகைபொருட்டால்
அண்டராதியர்க்காரமர்விளைந்ததென்றயிர்த்தார்

துண்டவாளினிற்சுடர்க்கொடிதுணிந்தெனத்தன்றுணைராப்
புண்டரீகக்கண்புனல்வரப்புரவலன்புகல்வான். (கசஅ)

நோக்கினுலையநொய்திவணெய்தியநுந்தை
மூக்கினுலிதுமுறிந்தமைமுடிந்ததான்மொய்ம்பின்
தாக்கினனடுவெடுத்ததுதெரிகிலந்தமியன்
யாக்கைதம்பிடுமெண்ணரும்பருவங்களிறந்தான். (கசசு)

நன்றுசாலவுநடுக்கருமிடுக்கினனுமும்
சென்றுகூடலாம்பொழுதெலாந்தடுப்பதுதிடனுல்
வென்றுமீட்கினுமீட்குமால்வேறுறவெண்ணி
நின்றுதாழ்ந்தொருபயனிலையென்றனுநெடியோன். (கஎ0)

தொடர்வதேநலமாமெனப்படிமிசைச்சுற்றி
படருங்காலெனக்கறங்கெனச்செல்லுவார்பார்த்தார்
மிடல்கொள்வெஞ்சிலைவிண்ணிடுவின்முறிந்தென்னக்
கடலின்மாபெயர்திரையெனக்கிடந்ததுகண்டார். (கஎக)

சிலைகிடந்ததாவிலக்குவதேவர்நீர்கடைந்த
மலைகிடந்தெனவலியதேவடிவினுன்மதியின்
கலைகிடந்தெனக்காட்சியனிதுகடிக்தொடித்தான்
நிலைகிடந்தவாநோக்கெனநோக்கினனின்றுன். (கஎ௨)

நின்றுபின்னருநெடுநெறிகடந்துறநிமிரச்
சென்றுநோக்கினர்திரிசிகைத்திருநெடுஞ்சூலம்
ஒன்றுபல்கணைமழையுறாபுட்டிலோரிரண்டு
குன்றுபோலவட்கிடந்தனகுறுகினருற்றார். (கஎ௩)

மறித்துஞ்சென்றனர்வானிடைவயங்குறவழங்கி
எறிக்குஞ்சோதிகள்யாவையுந்தொக்கனவெனலாம்
நெறிக்கொள்கானகமறைதரநிருதர்கோனெஞ்சின்
பறித்துவீசியகவசமுங்கிடந்ததுபார்த்தார். (கஎச)

கான்கிடந்ததுமறைதரக்கால்வயக்கலிமாத்
தான்கிடந்துழிசாரதிகிடந்துழிசார்ந்தார்
ஊன்கிடந்ததோளுநிரமுங்கிடந்துளதுலகின்
வான்கிடந்ததுபோல்பவன்கிடந்துழிவந்தார். (கஎ௫)

---

172. கலை - சந்திரன், பங்கு.

அவர்கள் குண்டலங்களையும் மற்றும்பல அணிகளையுங் காணுதல்.

கண்டலங்குதங்கைத்தலம்விதிர்த்தனர்கவிஞர்
விண்டலந்துறந்திறுதியின்விரிகதிர்வெய்யோன்
மண்டலம்பலமண்ணிடைக்கிடந்தனமணியின்
குண்டலம்பலகுலமணிப்பூண்களின்குவியல். (கஎ௬)

தோளணிக்குலம்பலவுளகுண்டலத்தொகுதி
வாளிமைப்பனபலவுளமணிமுடிபலவால்
நாளனைத்தையுங்கடந்தனன்றமியனந்தாதை
யாளிபோல்பவர்பலருளர்பொருதனரிளையோய். (கஎஎ)

திருவினையகனுரைசெயச்சுமித்திரைசிங்கம்
தருவினீளியதோள்பலதலைபலவென்றால்
பொருதுதாதையையித்தனைநெறிக்கொடுபோனான்
ஒருவனேயவனிராவணனுமெனவுரைத்தான். (கஎஅ)

மடலுடைட்டியதாரிளையோன்றனைமதியா
மிடலுடைட்டங்கடையுகநோக்கினன்விரைவான்
உடலுடைட்டியகுருதியம்பரவையினும்பர்க்
கடலுடைட்டியவரையெனத்தாதையைக்கண்டான். (கஎகூ)

துள்ளிபோங்குசெந்தாமரைநயனங்கள்சொரியத்
தள்ளியோங்கியவமலன்றன்றாளியுயிர்த்தந்தை
வள்ளியோன்றிருமேனியிற்றழுனிறவண்ணன்
வெள்ளியோங்கலிலஞ்சனமலையெனவீழ்ந்தான். (கஅ௦)

உயிர்த்திலன்னொருநாழிகையுணர்விலன்கொல்லென்
றயிர்த்ததம்பிபுக்கங்கையினெடுத்தனனருவிப்
புயற்கலந்தநீர்தெளித்தலும்புண்டரீகக்கண்
வியர்த்துப்பைப்பையவயர்வுதீர்ந்தினையனவிளம்பும். (கஅக)

வேறு.

தந்தாதையரைத்தனயர்கொலைநேர்ந்தார்
முந்தாரேயுள்ளார்முடிந்தான்முனையொருவன்

---

176. குலமணி - உயர்ந்தசாதியிரத்தினம்.

177. நாளனைத்தையுங் கடந்தனன் என்றது மிகமுதிர்ந்த மூப்புடையவனென்றவாறு.

178. சுமித்திரை - நல்லதோழன் போன்றவனென்று பொருள்,

எந்தாயோவெற்காகநீயுமிறந்தனையோ
அந்தோவினையேனருங்கூற்றமானேனே. (கஅ௨)

பின்னுறுவதோராதேபேதுறுவேன்பெண்பாலாள்
தன்னுருவநீர்ப்பான்றனியுறுவதோராதே
உன்னுறவுநீதீர்த்தாயோருறவுமில்லாதேன்
என்னுறுவான்வேண்டியிடருறுவேனென்றேயே. (கஅங)

மாண்டேனயன்றேமறையோர்குறைமுடிப்பான்
பூண்டேன்விரதமதனுனுயிர்பொறுப்பேன்
நீண்டேன்மரம்போலநின்றொழிந்தபுன்றொழிலேன்
வேண்டேனிம்மாமாயப்புன்பிறவிவேண்டேனே. (கஅச)

என்றாரம்பற்றுண்ணவேன்றாயைச்சான்றோயைக்
கொன்றானுநின்றான்கொலைபுண்டுநீகிடந்தாய்
வன்றாட்சிலையேந்திவாளிக்கடல்சுமந்து
நின்றேனுநின்றேனெடுமரம்போனின்றேனே. (கஅரு)

சொல்லுடையாரென்போலினியுளரோதொல்வினையேன்
இல்லுடையாள்காணவிறகுடையாயெண்ணிலாப்
பல்லுடையாயுன்னைப்படையுடையான்கொன்றகல
வில்லுடையேனின்றேன்விறலுடையேனல்லேனே. (கஅசு)

அன்னபலபலவும்பன்னியழுமயங்கும்
தன்னேரிலாதானுந்தம்பியுமத்தன்மையனாய்
உன்னவுணர்வுசிறிதுண்முளைப்பப்புள்ளரசும்
இன்னவுயிர்ப்பாணிருவரையுநோக்கினான். (கஅ௭)

உற்றதுணராதுயிருலையவெய்துயிர்ப்பான்
கொற்றவனைக்கண்டான்றனுள்ளங்குளிர்ப்புற்றான்
இற்றவிருசிறகுமின்னுயிருமேழுலகும்
பெற்றனனேயொத்தான்பெயர்த்தேதன்பழியென்றான். (கஅஅ)

பாக்கியத்தாலின்றென்பயனில்பழியாக்கை
போக்குகின்றேன்கண்ணுற்றேன்புண்ணியரேவம்மினென்று
தாக்கியரக்கன்மகுடத்தலைதுமித்த
மூக்கினுலுச்சிமுறைமுறையேமோக்கின்றான். (கஅகூ)

வஞ்சனையால்வந்தவரவென்பதென்னுடைய
நெஞ்சகமேமுன்னேநினைவித்ததானலும்

அஞ்சொன்மயிலையருந்ததியைநீங்கினிரோ
எஞ்சலிலாவாற்றலிருவிருமென்றுரைத்தான். (கசுO)

வேறு.

என்றவனியம்பலுமிளையகோமகன்
ஒன்றுமாண்டுறுபொருளொழிவுறுவகை
வன்றிறன்மாயமான்வந்ததாதியா
நின்றதுநிகழ்ந்ததுநிரப்பினனரோ. (கசுக)

ஆற்றலோனவ்வுரையறையவாணையால்
ஏற்றுணர்ந்தெண்ணியவ்வெருவைவேந்தனும்
மாற்றருந்துயரவர்மனக்கொளாவகை
தேற்றுதனன்றெனவினையசெப்புவான். (கசுஉ)

சடாயுதேறுதல்கூறல்.

அதிசயமொருவராலமைக்கலாகுமோ
துதியறுபிறவியினின்பதுன்பந்தான்
விதியெமென்பதைமேற்கொளாவிடின்
மதிவலியான்விதிவெல்லவல்லமோ. (கசுங)

தெரிவுறுதுன்பம்வந்தான்றச்சிந்தையை
இரிவுசெய்தொழியுமதிமுதைநீரதால்
பிரிவுசெய்துலகெலாம்பெறுவிப்பான்றலை
அரிவுசெய்விதியினார்க்கரிதுண்டாகுமோ. (கசுச)

அலக்கணுமின்பமுமணுகுநாளிவை
விலக்குவமென்பதுமெய்யிற்றுகுமோ
இலக்கமுப்புரங்களையெய்தவில்லியார்
தலைக்கலத்திரந்ததுதவத்தின்பாலதோ. (கசுரு)

பொங்குவெங்கோளராவிசும்புபூத்தன
வெங்கதிர்ச்செல்வனைவிழுங்கிநீங்குமால்
அங்கண்மாஞாலத்தைவிளக்குமாய்கதிர்த்
திங்களுமொருமுறைவளருந்தேயுமால். (கசுசு)

அந்தரம்வருதலுமனையதீர்தலும்
சுந்தரத்தோளினீர்தொன்மைநீரவால்

192. ஆற்றல் - வல்லமை, புத்திபலமுமாம்.
193. அதிசயம் - புதுமை, அதிகமுமாம்.

மந்திரவிமையவர்குருவின்வாய்மொழி
இந்திரனுற்றனவெண்ணவொண்ணுமோ. (கசுஎ)

தடைக்கரும்பெருவலிச்சம்பரப்பெயர்க்
கடைத்தொழிலவுணனுற்குலிசக்கையினுன்
படைத்தனன்பழியதுபகழிவில்வலாய்
துடைத்தனனுந்தைதன்குவவுத்தோளினுல். (கசுஅ)

வேறு.

பிள்ளைச்சொற்கிளியனுளைப்பிரிவுறலுற்றபெற்றி
தன்னுற்றவறமுந்தேவர்துயரமுந்தந்ததேயால்
கள்ளப்போரரக்கரென்னுங்களையினைக்களைந்துவாழ்தி
புள்ளிற்கும்புலனில்பேய்க்குந்தாயன்னபுலவுவேலோய். (கசுகூ)

வடிக்கண்வார்கூந்தலாளையிராவணன்மண்ணினோடும்
எடுத்தனனேகுவானையெதிர்ந்தெனதாற்றல்கொண்டு
தடுத்தனனவனுவதெல்லாந்தவத்தரன்றந்தவாளால்
படுத்தனனிங்குவீழ்ந்தேனிதுவின்றுபட்டதென்றான். (உ00)

கூறினமாற்றஞ்சென்றுசெவித்தொளைகுறுகாமுன்னம்
ஊறினவுதிரஞ்செங்கணுயிர்த்தனவுயிர்ப்புச்செந்தீ
ஏறினபுருவமேன்மேலிரிந்தனசுடர்களெங்கும்
கீறினதண்டகோளங்கிழிந்தனகிரிகளெல்லாம். (உ0க)

மண்ணகந்திரியநின்றமால்வரைதிரியமற்றைக்
கண்ணகன்புனலுங்காலுங்கதிரொடுந்திரியக்காவல்
விண்ணகந்திரியமேலைவிரிஞ்சனுந்திரியவீரன்
எண்ணரும்பொருள்களெல்லாமென்பதுதெரிந்ததன்றே. (உ0உ)

குறித்தவெங்கோபம்யார்மேற்கொள்ளுறுங்கொல்லென்றஞ்சி
வெறித்துநின்றுலகமெல்லாம்விம்முறுகின்றவேலைப்
பொறிப்பிதிர்படலைச்செந்தீப்புகையொடுபொடிப்பப்பொம்மென்
றெறிப்பதோர்முறுவறோன்றவிராமனுமியம்பலுற்றான். (உ0௩)

பெண்டணியொருத்திதன்னைப்பேதைவாளரக்கன்பற்றிக்
கொண்டனனேகநீயிக்கோளுறக்குலுங்கல்செல்லா

201. மேலிழிந்தனவென்றும்பாடம்.

202. அப்பொழுது மண்கந்திரிதல் முதலியவற்றின் அநுமானத்தால் ஸர்வர் விஷ்ணுமயம் ஜகத் என்றபடி உலகமுழுவதும் எம்பெருமானது சொரூபமாகவேயிருக்கு மியல்பு அறியப்பட்டதென்க.

எண்டிசையிறுதியானவுலகங்களிவற்றையின்னே
கண்டவானவர்களோடிங்களையுமாறின்றுகாண்டி. (உ0௪)

தாரகையுதிருமாறுந்தனிக்கதிர்பிதிருமாறும்
பேரகல்வானமெங்கும்பிறங்கெரிபிறக்குமாறும்
நீரொடுநிலனுங்காலுநின்றவுங்கிடந்தயாவும்
வேரொடுமெழியுமாறும்விண்ணவர்விளியுமாறும். (உ0௫)

இக்கணமொன்றினின்றவேழினேடேழுசான்ற
மிக்கனபோன்றுதோன்றுமுலகங்கள்விளியுமாறும்
திக்குடையண்டகோளப்புறத்தவுந்தீந்துநீரின்
மொக்குளினுடையுமாறுங்காணெனமுனியும்வேலை. (உ0௬)

வெஞ்சுடர்க்கடவுண்மீண்டுமேருவின்மறையலுற்றான்
எஞ்சலிறிசையினின்றயானையுமிரியல்போய
துஞ்சினவுலகமெல்லாமென்பதென்றுணிந்தநெஞ்சின்
அஞ்சினனிளையகோவுமயலுளோர்க்கவதியுண்டோ. (உ0௭)

இவ்வழிநிகழும்வேலையெருவைகட்கிறைவன்யாரும்
செவ்வியோய்முனியல்வாழிதேவருமுனிவர்தாமும்
வெவ்வலிவீரநின்னால்வெல்லுமென்றேமுற்றாய்வார்
எவ்வலிகொண்டுவெல்வாரிராவணன்செயலையென்றான். (உ0௮)

நாட்செய்தகமலத்தண்ணனல்கினநவையிலாற்றல்
தோட்செய்தவீரமென்னிற்கண்டனைசொல்லுமுண்டோ
தாட்செய்தகமலத்தானேமுதலினர்தலைபத்துள்ளாற்
காட்செய்கின்றார்களன்றியறஞ்செய்கின்றார்கள்யாரே. (உ0௯)

தெண்டிரையுலகந்தன்னிற்செறுநர்மாட்டேவல்செய்து
பெண்டிரின்வாழ்வரன்றேயிதுவன்றோதேவர்பெற்றி
பண்டுலகளந்தோனல்கப்பாற்கடலமுதமந்நாள்
உண்டிலராயினிந்நாளன்னவர்க்குய்தலுண்டோ. (உ௧0)

வம்பிழைகொங்கைவஞ்சிவனத்திடைத்தமியள்வைகக்
கொம்பிழைமானின்பின்போய்க்குலப்பழிகூட்டிக்கொண்டீர்
அம்பிழைவரிவிற்செங்கையயன்மீராயுங்காலை
உம்பிழையென்பதல்லாலுலகஞ்செய்பிழையுமுண்டோ. (உ௧௧)

ஆதலான்முனிவாயல்லையருந்ததியனையகற்பிற்
காதலாடுயரநீக்கித்தேவர்தங்கருத்துமுற்றி

வேதநூன்முறையின்யாவும் விதியுளிநிறுவிவேறும்
தீதுளதுடைத்தியென்றான்சேவடிக்கமலஞ்சேர்வான். (உகஉ)

புயனிறவண்ணனுண்டப்புண்ணியன்புகன்றசொல்லைத்
தயரதன்பணியிதென்னச்சிந்தையிற்றழுவிநின்றான்
அயலினிமுனிவதென்னையரக்கரைவருக்கந்தீர்க்கும்
செயலினிச்செயலென்றெண்ணிக்கண்ணியசீற்றந்தீர்ந்தான். (உகங)

ஆயபின்னமலன்றானுமையநீயமைதியென்ன
வாயிடைமொழிந்ததன்றிமற்றொருசெயலுமுண்டோ
போயதவ்வரக்கனெங்கேபுகலெனப்புள்ளின்வேந்தன்
ஓய்வினனுணர்வுந்தேயவுரைத்திலனுயிருந்தீர்ந்தான். (உகச)

சீதங்கொண்மலருளோனுந்தேவருமென்பதென்னே
வேதங்கள்காண்கிலாமைவெளிநின்றேமறையும்வீரன்
பாதங்கள்கண்ணிற்பார்த்தான்படிவங்கொணடியபஞ்ச
பூதங்கள்விளியுநாளும்போக்கிலாவுலகம்புக்கான். (உகரு)

வீடவனெய்தும்வேலைவிரிஞ்சனேமுதலமேலோர்
ஆடவர்க்கரசனோடுதம்பியுமழுதுசோரக்
காடமர்மரமுமாவுங்கற்களுங்கரைந்துசாய்ந்த
சேடரும்பாரினோர்க்குங்காஞ்சிரஞ்சேர்ந்தவன்றே. (உகசு)

அறந்தலைநின்றிலாதவரக்கனாண்மைதீர்ந்தேன்
துறந்தனனென்றவஞ்செய்கேனோதுறப்பெனோவுயிரைச்சொல்லாய்
பிறந்தனென்பெற்றுநின்றபெற்றியார்பெற்றதாதை
இறந்தனனிருந்துளேன்யானென்செய்கேனிளவலென்றான். (உகஎ)

என்றலுமிளையகோவவ்விறையினையிறைஞ்சியாண்டும்
வென்றியாய்விதியின்றன்மைபழியிலவிளைந்ததொன்றோ
நின்றினிநினைவதென்னைநெருங்கியவரக்கர்தம்மைக்
கொன்றபினன்றோவெய்யகொடுந்துயர்குளிப்பதென்றான். (உகஅ)

எந்தைநீயியம்பிற்றென்னையெண்மையனாகியேனேழைச்
சந்தவார்குழலினாளைத்துறந்தனைதணிதியேனும்
உந்தையையுயிர்கொண்டானையுயிருண்ணுமூற்றமில்லாச்
சிந்தையையாகிநின்றுசெய்தவஞ்செய்கையென்றான். (உககூ)

---

212. யாவும் என்றது உலகாளுதல் வேள்விசெய்தல் முதலியவைற்றைக் குறிக்கும். 213. கண்ணுதல் - கருதுதல். 219. செய்தவம் - சிறந்த தவம், செய்தற்குரியதவம். அன்றிசெவ்வியதவமுமாம்.

அவ்வழியிளவல்கூறவறிவறிவனுமயர்வுநீங்கி
இவ்வழியினையவெண்ணிமேனைமைப்பாலாதென்று
வெவ்வழிபொழியுங்கண்ணீர்விலக்கினன்விளிந்ததாதை
செவ்வழியுரிமையாவுந்திருத்துவஞ்சிறுவவென்றான். (௨௨௦)

இந்தனமெனையவென்னக்காரகிலீட்டத்தோடும்
சந்தனங்குவித்துவேண்டுந்தருப்பையுந்திருத்திப்பூவும்
சிந்தினன்மணலின்வேதிதீர்தரவியற்றித்தெண்ணீர்
தந்தனன்றாதைதன்னைத்தடக்கையாலெடுத்துச்சார்வான். (௨௨௧)

ஏந்தினனிருகைதன்னாலேற்றினனீமந்தன்மேல்
சாந்தொடுமலருநீருஞ்சொரிந்தனன்றலையின்சாரல்
காந்தெரிகனல்மூட்டிக்கடன்முறைகடவாவண்ணம்
நேர்ந்தனனிரம்புநன்னூன்மந்திரநெறியின்வல்லான். (௨௨௨)

கிளித்தனகளித்தமேனிதாமரைக்கெழுவுசெம்பூத்
துளித்தனவனையவென்னத்துள்ளிசோர்வெள்ளக்கண்ணன்
குளித்தனன்கொண்டலாற்றுக்குளித்தபின்கொண்டநன்னீர்
அளித்தனனரக்கர்ச்செற்றசீற்றத்தானவலந்தீர்ந்தான். (௨௨௩)

மீட்டினியுரைப்பதென்னேவிரிஞ்சனேமுதலமேல்கீழ்
காட்டியவுயிர்களெல்லாமருந்தினகளித்தபோலாம்
பூட்டியகைகளாலப்புள்ளினுக்கரசைக்கொள்கென்
றூட்டியநன்னீரையனுண்டநீரொத்ததன்றே. (௨௨௪)

பல்வகைத்துறையும்வேதப்பலிக்கடன்பலவுமுற்றி
வெல்வகைக்குமரனின்றவேலையின்வேலைசார்ந்தான்
தொல்வகைக்குலத்தின்வந்தான்றன்பத்தாற்புனலுந்தோய்ந்து
செல்வகைக்குரியவெல்லாஞ்செய்குவானென்னவெய்யோன். ()

ஆ திருவிருத்தம் - கoஉக.

---

224. பூட்டியகைகள் - சேரவைத்த கைகள், சேரங்கை.

# கூ-வது அயோமுகிப்படலம்.

அந்திவந்தணுகும்வேலையவ்வழியவருநீங்கிச்
சிந்துரச்சென்னித்தாண்டோர்மைவரைச்சேக்கைகொண்டார்
இந்திரற்கடங்கல்செல்லாவிராக்கதரெழுந்ததென்ன
வெந்துயர்க்கூற்றமாயவிரியிருள்வீங்கிற்றன்றே. (௧)

தேனுகவருவிசிந்தித்தெருமரலுறுவபோலக்
கானமுமலையுமெல்லாங்கண்ணினீருகுக்குங்கங்குல்
மானமுஞ்சினமுந்தாதைமரணமுமைந்தர்சிந்தை
ஞானமுந்துயருந்தம்முண்மலைவெனநலிந்தவன்றே. (௨)

மெய்யுறவுணர்வுசெல்லாவறிவினைவினையினாக்கும்
பொய்யுறுபிறவிபோலப்போக்கரும்பொங்குகங்குல்
நெய்யுறுநெருப்பின்வீங்கிநிமிர்தரவுயிர்ப்புநீளக்
கையறவுறுகின்றாராற்காணலாங்கரையிற்றன்றே. (௩)

## இராமபிரான் அவ்விரவுமுழுவதுஞ் சிறிதுந்துயில்கோள்ளாமை.

யாமதுதெரிதறேற்றுமின்னகைச்சனகியென்னும்
காமருதிருவைநீத்தோமுகமதிகாண்கிலாதோ
தேமருதெரியல்வீரன்கண்ணெனத்தெரிந்ததெய்ய
தாமரைகங்குற்போதுங்குவியலாத்தன்மையென்றோ. (௪)

பெண்ணியற்றீபமன்னபேரெழிலாட்டிமாட்டு
நண்ணியபிரிவுசெய்தநவையிலாநவையினுள்ளத்
தெண்ணியதறிதறேற்றுமிமைத்திலவிராமனென்னும்
புண்ணியன்கண்ணும்வன்றோட்டம்பிகண்போன்றவன்றே. (௫)

வண்டுளர்கோதைச்சீதைவாண்முகம்பொலியவானிற்
கண்டனெனென்றுவீரற்காங்கொருகாதல்காட்டத்
தண்டமிழ்த்தென்றலென்னுங்கோளராத்தவழுஞ்சாரல்
விண்டலம்விளங்குஞ்செவ்விவெண்மதிவிரிந்ததன்றே. (௬)

களியுடையநங்கக்கள்வன்கரந்துறைகங்குற்காலம்
வெளிபடுத்துலகமெங்கும்விளக்கியநிலவின்வெள்ளம்

---

5. நவையெனறது சீதையைப் பிரிந்தவருத்தம்தான் காப்பாற்றவேண்டிய தருமபத்தினியைப் பிரிந்ததனால் வருந்துவது நியாயமே யென்பதை விளக்க நவையிலாவென்ற அடைமொழி அதற்குக்கொடுக்கப்பட்டது.

நளியிருட்பிழம்பொன்றீண்டுநெஞ்சொடுகலந்தநாகத்
தொளையெயிற்றான்றனுற்றதாமெனச்சுட்டதென்றே. (எ)

இடம்படுமானத்துன்பமிருடாரவெண்ணிற்றீர்ந்தான்
விடம்பரந்தனையதாயவெண்ணிலாவெதுப்பவீரன்
படம்பரந்தனையவல்குற்பால்பரந்தனையவின்சொற்
றடம்படுகண்ணினுடன்றனிமையைநினையலுற்றான். (அ)

வேறு.

மடித்தவாயன்வயங்குமுயிர்ப்பினன்
துடித்துவீங்கியொடுங்குறுதோளினன்
பொடித்ததண்டளிர்ப்பூவொடுமால்கரி
ஒடித்தகொம்பனையாடிறத்துன்னுவான். (௯)

வாங்கும்வில்லன்வரும்வருமென்றிரு
பாங்குநீணெறிபார்த்தனளோவெனும்
வீங்கும்வேலைவிரிதிரையாமென
ஓங்கியோங்கியொடுங்குமுயிர்ப்பினன். (௧௦)

தன்னினைந்திலளென்பதுசாலுமோ
மின்னினைந்தவிலங்குமெயிற்றினன்
நின்னிலென்றுநெருங்கியபோதவள்
என்னினைந்தனளோவெனவெண்ணுமால். (௧௧)

நஞ்சுகாலுநகைநெடுநாகத்தின்
வஞ்சவாயின்மதியெனமட்குவாள்
வெஞ்சினஞ்செயரக்கர்தம்வெம்மையை
அஞ்சினன்கொலென்றையுறுமாலென்பான். (௧௨)

பூண்டமானமும்போக்கருங்காதலும்
தூண்டநின்றிடைதோமுறுமாருயிர்
மீண்டுமீண்டுவெதுப்பவெதும்பினன்
வேண்டுமோவெனக்கின்னமும்வில்லென்பான். (௧௩)

வில்லைநோக்கிநகுமிகவீங்குதோட்
கல்லைநோக்கிநகுங்கடைக்கால்வரும்
சொல்லைநோக்கித்துணுக்கெனுந்தொன்மறை
எல்லைநோக்கினர்யாவருநோக்குவான். (௧௪)

10. வரும் வரும் என்ற அடுக்கு - தன்னை மீட்பதற்கு இராமன்வருவது நிச்சயமென்ற கருத்தை விளக்கிற்று,

கூதிர்வாடைவெங்கூற்றினைநோக்கினன்
வேதவேள்விவிதிமுறைமேவிய
சீதையென்வயிற்றீர்ந்தனளோவெனும்
போதகம்மெனப்பொம்மெனுயிர்ப்பினன். (௧௫)

நின்றுபல்லுயிர்காத்தற்குநேர்ந்தயான்
என்றுணைக்குலமங்கையொரேந்திழை
தன்றுயர்க்குத்தகவிலெனாயினேன்
நன்றுநன்றென்வலியெனநாணுமால். (௧௬)

சாயுந்தம்பிதிருத்தியதண்டளிர்
தீயுமங்கவைதீர்கெனுஞ்செவ்விருந்
தாயுமாவிபுழுங்கவழுங்குமால்
வாயுநெஞ்சுபுலரமயங்குவான். (௧௭)

பிரிந்ததேவதுகொல்பேரவிமானங்கொல்
தெரிந்ததில்லைதிருமலர்க்கண்ணிமை
பொருந்தவாயிரங்கற்பங்கள்போக்குவான்
இருந்துகண்டிலன்கங்குலினீறரோ. (௧௮)

வென்றிவேற்கையிளவலைமேலெலாம்
ஒன்றுபோலவுலப்பிலநாள்கடாம்
நின்றுகாண்டியன்றேறநெடுங்கங்குறான்
இன்றுநீள்வதற்கேதுவெனென்னுமால். (௧௯)

நீண்டமாலைமதியினைநித்தமும்
மீண்டுமீண்டுமெலிந்தனைவெள்குவாய்
பூண்டபூணவள்வாண்முகம்போதர
ஈண்டுசாலவிளங்கினையென்னுமால். (௨௦)

நீணிலாவினிசைநிறைதன்குலத்
தாணியாயபழிவரவன்னது
நாணிநாடுகடந்தனனுங்கொலோ
சேணுலாந்தனித்தேரவனென்னுமால். (௨௧)

---

15. போதகம் - யானைக்கன்று; பருவப்பெயராகாமல் யானையென்ற மாத்திரமாய் நின்றது.

17. விருந்து - புதுமை.

18. கற்பம் - பிரமனாயுள்.

சுட்டகங்குனெடிதெனச்சோர்கின்றான்
முட்டமைந்தநெடுமுடக்கோனொடு
கட்டிவாளரக்கன்கதிரோனையும்
இட்டனன்கொலிருஞ்சிறையென்னுமால். (உஉ)

துடியினேரிடைதோன்றலளாமெனின்
கடியகாரிருட்கங்குலின்கற்பம்போய்
முடியுமாகின்முடியுமிம்மூரிநீர்
நெடியமானிலமென்னநினைக்குமால். (உங)

திறத்தினுதனசெய்தவத்தோருற
ஒறுத்துஞாலத்துயிர்தமையுண்டுழல்
மறத்தினூர்கள்வலிந்தனர்வாழ்வரேல்
அறத்தினுலினியாவதெனென்னுமால். (உச)

தேனின்றெய்வத்திருநெடுநாட்சிலை
பூநின்றெய்யும்பொருகணைவீரனும்
மேனின்றெய்யவிமலனைநோக்கினன்
தானுந்தேர்கிலனுய்த்தடுமாறுவான். (உரு)

உழந்தயோகத்தொருமுதல்கோபத்தால்
இழந்தமேனியுமெண்ணியிரங்கினன்
கெழுந்தகைக்கொருவன்மைகிடைக்குமேல்
பழந்துயர்க்குப்பரிவுறும்பான்மையால். (உசு)

நீலமாய்நிறத்தனிலைப்பிடைச்
சூலமாகத்தொலைவுறுமெல்லையின்
மூலமாமலர்முன்னவன்முற்றுறும்
காலமாமெனக்கங்குல்கழிந்ததே. (உஎ)

வேறு.

வெள்ளஞ்சிலம்புபாற்கடலின்விரும்புந்துயிலைவெறுத்தளிய
கள்ளுஞ்சிலம்பும்பூங்கோதைகற்பின்கடலிற்படிவாற்குப்

---

22. சூரியன் சாரதியான அருணன் துடையில்லாதவனுதலால் முடக்கோன் எனப்பட்டான். இதுபற்றி இவனுக்குவடமொழியில் அநூரு என்று ஒருபெயர். இவன் கருடனது தமையன்.

24. திறத்தினுயினமென்றும் பாடம்.

27. மலர்முன்னவன் முற்றுறுங்காலம் - பிரமகற்பம். இது இங்கு மிக்க நீட்சிக்கு உவமைகூறப்பட்டது.

புள்ளுஞ்சிலம்பும்பொழில்சிலம்பும்புனலுஞ்சிலம்பும்புனைகோலம்
உள்ளுஞ்சிலம்புஞ்சிலம்பாவாலுயிருண்டாகும்வகையுண்டோ. ()

மயிலும்பெடையுமுடன்றிரியமானுங்கலையுமருவிவரப்
பயிலும்பிடியுங்கடகரியும்வருவதிரிவபார்க்கின்றான்
குயிலுங்கரும்புஞ்செழுந்தேனுங்குழலும்யாழுங்கொழும்பாகும்
அயிலுமமுதுஞ்சுவைதீத்தமொழியைப்பிரிந்தாலழியானோ. (உகூ)

முடிநாட்டியகோட்டுதயத்துமுற்றவுற்றான்முதுகங்குல்
விடிநாட்கண்டுங்கிளிமிழற்றுமென்சொற்கேளாவீரற்காண்
டடிநாட்செந்தாமரையொதுங்குமன்னமிலளால்யானடைத்த [ன்.
கடிநாட்கமலத்தெனவவிழ்த்துக்காட்டுவான்போற்கதிர்வெய்யோ

பொழிலைநோக்கும்பொழிலுறையும்புள்ளைநோக்கும்பூங்கொம்பின்
எழிலைநோக்குமிளமயிலினியல்பைநோக்குமியல்பாளுள்
குழலைநோக்கிக்கொங்கையிணைக்குவட்டைநோக்கியக்குவட்டின்
தொழிலைநோக்கித்தன்னுடையதோளைநோக்கிநாள்கழிப்பான். ()

அன்னகாலையிளவீரனடியின்வணங்கிநெடியோயப்
பொன்னைநாடாதீண்டிருத்தல்பொருளோவென்னப்புகழோனும்
சொன்னவரக்கனிருக்குமிடந்துருவியறிதுந்தொடர்ந்தென்ன
மின்னுஞ்சிலையார்மலைதொடர்ந்தவெயில்வெங்கானம்போயினராம்.

வேறு.

ஆசைசுமந்தநெடுங்கிரியன்னார்
பாசிலைதுன்றுவனம்பலபின்னாக்
காசறுகுன்றினொடாறுகடந்தார்
யோசனையொன்பதொடொன்பதுசென்றார். (௩௩)

மட்படிசெய்ததவத்தினின்வந்த
கட்படிகோதையைநாடினர்காணார்
உட்படிகோபமுயிர்ப்பொடுபொங்கப்
புட்படியுங்குளிர்கார்ப்பொழில்புக்கார். (௩௪)

ஆரியர்சிந்தையலக்கணறிந்தான்
நாரியையெங்கணுநாடினனாடிப்

---

29. கடகரி - மதம்பிடித்தயானை; கடம் - கன்னம், அதிலுண்டாகும் மதத்துக்கு இலக்கனை.

33. பாசிலை - பசுமையிலை.

34. கார்பொழில் - பெரியதொருசோலை, கருமை - பெருமை.

பேருலகெங்குமுழன்றனன்பின்னு
மேருவைவெங்கதிர்மீளமறைந்தான். (௩௫)

அரண்டருகுஞ்செறியஞ்சனபுஞ்சம்
முரண்டனபோலிருளெங்கணுமுந்தத்
தெருண்டறிவில்லவர்சிந்தையின்முந்தி
இருண்டனமாதிரமெட்டுமிரண்டும். (௩௬)

இளிக்கறையின்சொலியைந்தனபூவை
கிளிக்கறையும்பொழில்கிஞ்சுகவேலி
ஒளிக்கறைமண்டிலமொத்துளதாங்கோர்
பளிக்கறைகண்டதில்வைகல்பயின்றார். (௩௭)

அவ்விடையெய்தியவண்ணலிராமன்
வெவ்விடைபோலிளவீரனைவீர
இவ்விடைநாடினைநீர்கொணர்கென்றான்
தெவ்விடைவில்லவனுந்தனிசென்றான். (௩௮)

எங்கணுநாடினனீரிடைகாணான்
சிங்கமெனத்தமியன்றிரிவானை
அங்கவனத்துளயோமுகியான
வெங்கணரக்கிவிரும்பினள்கண்டாள். (௩௯)

நன்மதியோர்புகன்மந்திரநாமச்
சொன்மதியாவரவிற்றொடர்கிற்பாள்
தன்மதனோடுதன்வெம்மைதணிந்தாள்
மன்மதனுமிவனென்னுமனத்தாள். (௪0)

அழுந்தியசிந்தையரக்கியலக்கண்
எழுந்துயர்காதலின்வந்தெதிர்நின்றாள்
புழுங்குமென்னோவொடுபுல்லுவெனன்றி
விழுங்குவெனோவெனவிம்மலுழன்றாள். (௪க)

இரந்தனெனெய்தியபோதிசையாது
கரந்தனனேனனிகொண்டுகடந்தென்

37. இளி - ஏழிசைகளிலொன்று.

39. அயோமுகீஎன்ற வடமொழிப்பெயர் இரும்பினுலாகியது போன்ற முகமுடையளென்றுபொருள்படும் முழைஞ்சு என்பது முரஞ்சு என எதுகை நோக்கித் திரிந்தது. முரஞ்சு - குகை.

முரஞ்சினின்மேவிமுயங்குவேனென்று
விரைந்தெதிர்வந்தனடையினும்வெய்யாள். (௪௨)

உயிர்ப்பினெருப்புமிழ்கின்றனவொன்ற
மயிற்றின்மலைக்குலமென்றினிதுண்ணும்
வயிற்றுவயக்கொடுமாசுணம்வீசு
கயிற்றினிசைத்தமுலைக்குழிகண்ணாள். (௪௩)

பற்றியகோளரியாளிபணிக்கண்
டெற்றியபாதசிலம்புசிலம்ப
இற்றுகயாவையுமீநுறுமந்நாள்
முற்றியஞாயிறுபோலுமுகத்தாள். (௪௪)

ஆழிவறக்கமுகக்கவமைந்த
மூழையெனப்பொலிமொய்பிலவாயாள்
கூழைபுரத்துவிரிந்ததொர்கொட்பால்
ஊழிநெருப்பினுருத்தனையொப்பாள். (௪௫)

தடிதடவத்தலைபலதழுவத்தாள்
நெடிதடையக்குடர்கெழுமுநிணத்தூண்
படிதடவப்பலபாவமிசைக்கும்
கடிதடவத்தினளுருமுகறிப்பாள். (௪௬)

இவையிறையொப்பனவென்னவிழிப்பாள்
அவைகுளிரக்கடிதழலுமெயிற்றாள்
குவைகுலையக்கடல்குவியவளைப்பாள்
நவையில்புவித்திருநாணநடப்பாள். (௪௭)

நீளரவச்சரிதாழ்கைநிரைத்தாள்
ஆளரவப்புலியாரமணைத்தாள்
யாளியினைப்பலதாலியிசைத்தாள்
கோளரியைக்கொடுதாழ்குழையிட்டாள். (௪௮)

நின்றனளாசையினீர்கலுழுங்கண்
குன்றிநிகர்ப்பகுளிர்ப்பவொளிப்பாள்
மின்றிரிகின்றவெயிற்றின்விளக்கால்
கன்றிருளிற்றிரிகோளரிகண்டான். (௪௯)

44. பாதசிலம்பு தரித்தாள் என்றும் பாடம்.

45. மூழை முழை என்பதன் நீட்டல் மூழையென்றே கொண்டு அகப்பை யென்று கூறினுமாம் மூழை முகவையுமாம்.

பண்டையினுசியிழந்துபதைக்கும்
திண்டிறலாளொடுதாடகைசீராள்
கண்டகராபவரக்கர்கணத்தோர்
ஒண்டொடியாமிவளென்பதுணர்ந்தான். (ருo)

பாவியராமிவர்பண்பிலர்நம்பால்
மேவியகாரணம்வேறிலையென்பான்
மாவியல்கானின்வயங்கிருள்வந்தாய்
யாவளடையுரைசெய்கடிதென்றான். (ருக)

பேசினனங்கவள்பேச்றநாணாள்
ஊசலுழன்றழிசிந்தையளுந்தான்
நேசமிலன்பினளாயினுநின்பால்
ஆசையின்வந்தவயோமுகியென்றாள். (ருஉ)

பின்னுமுரைப்பவள்பேரெழில்வீரா
முன்னமொருத்தர்தொடாமுலையோடும்
பொன்னின்மணித்தடமார்புபுணர்ந்தென்
இன்னுயிரைக்கடிதீகுதியென்றாள். (ருங)

ஆறியசிந்தையளஃதுரைசெய்யச்
சீறியகோளரிகண்கள்சிவந்தான்
மாறிலவார்கணையிவ்வுரைவாயில்
கூறிடினின்னுடல்கூறிடுமென்றான். (ருச)

மற்றவனவ்வுரைசெப்பமனத்தால்
செற்றிலள்கைத்துணைசென்னியின்வைத்தாள்
கொற்றவநீயெனைவந்துயிர்கொள்ளப்
பெற்றிடினின்றுபிறந்தனெனென்றாள். (ருரு)

வெங்கதமில்லவள்பின்னருமேலோய்
இங்குநறும்புனலூடுதியேலுன்
அங்கையினாலெனையஞ்சலையென்றால்
கங்கையினீர்கொணர்வெங்கடிதென்றாள். (ருசு)

---

55. பிறந்து வெகுநாளாயும் : பிறப்பெடுத்தற்குப் பயனாக இலக்குமணனைக்கூடாது: காலம் வீணேகழித்தமையாற் கீழ்சென்ற காலங்களைப் பிறவாத நாளாகவேவைத்து அவனைக்கூடப்பெறும் அந்த நாளையேதான் புதிதாகப் பிறந்த நாளாகக்கருதி 'இன்றுபிறந்தனென், என்றாள். இனிகாமநோயால் இறந்ததுபோன்றுள்ள தனது உயிரை இவ்வீரனுடைய சேர்க்கையாலேயே பெறுவதாக இவள் நினைத்தமையால் பிழைத்தது 'பிழைத்தது புநர்ஜன்மம், என்றபடி 'இன்று பிறந்தனென், என்றாளுமாம்.

சுமித்திரைசேயவள்சொன்னசொலன்ன
கமித்திலனின்னிருகாதொடுநாசி
துமிப்பதன்முன்பகலென்பதுசொல்ல
இமைத்திலனின்றனளின்னநினைந்தாள். (௫௭)

எடுத்தனெனேகினேனென்முழைதன்னுள்
அடைத்திவன்வெம்மையகற்றியபின்னை
உடற்படுமாலுடனேயுறுநன்மை
திடத்திதுவேநலனென்றயல்சென்றாள். (௫௮)

மோகனையென்பதுமுந்திமுயன்றாள்
மாகநெடுங்கிரிபோலியைவௌவா
ஏகினளும்பரினிந்துவொடேகும்
மேகமெனும்படிநொய்தினின்வெய்யாள். (௫௯)

மந்தரம்வேலையில்வந்ததும்வானத்
திந்திரனார்பிடியென்னலுமானாள்
வெந்திறல்வேல்கொடுசூரடும்வீரச்
சுந்தரனார்தருதோகையுமொத்தாள். (௬௦)

ஆங்கவண்மார்பொடுகையினடங்கிப்
பூங்கழல்வார்சிலைமீளிபொலிந்தான்
வீங்கியவெஞ்சினவீழ்மதவெம்போர்
ஓங்கலுரிக்குமுருத்திரனொத்தான். (௬௧)

இப்படியேகினளன்னவளிப்பால்
அப்பிடைதேடிநடந்தவெனாவித்
துப்புடைமால்வரைதோன்றலனென்னா
வெப்புடைமெய்யுடைவீரன்விரைந்தான். (௬௨)

வேறு.

வெய்தாகியகானிடைமேவருநீர்
ஐதாதலினோவயலொன்றுளதோ
நொய்தாய்வரவேகமுநொய்திலனால்
எய்தாதொழியானிதுவென்னைகொலாம். (௬௩)

நீர்கண்டனையிவ்வழிநேடினைபோய்ச்
சார்கொண்டெலாவித்துணைசார்கிலனால்

62. வெப்பு - விரகதாபமும், தாகதாபமும், தம்பியைக் காணாமையாலான தாபமும்.

வார்கொண்டணிகொங்கையைவெளவினர்பால்
போர்கொண்டனனேபொருதுண்டிதனே. (கூச)

அஞ்சொற்கிளியன்னவணங்கினைமுன்
வஞ்சித்தவிராவணன்வெளவினனே
நஞ்சிற்கொடியானடலைத்தொழிலால்
துஞ்சுற்றனனேவிதியின்றுணிவால். (கூரு)

வரிவிற்கையெனுருயிர்வந்திலனல்
தருசொற்கருதேதனைருதையலையான்
பிரிவுற்றனெனன்படுதார்பிழைபெருந்
தெரிவுற்றிடவாவியிழந்தனனே. (கூகூ)

உண்டாகியகாரிருளோடொருவென்
கண்டானயல்வேறொருகண்ணிலனல்
புண்டானுறுநெஞ்சுபுழுங்குறுவென்
எண்டாணிலெனெங்ஙனநாடுகேனே. (கூஎ)

தள்ளாவினையேன்றனியாருயிராய்
உள்ளாயொருநீயுமொளித்தனையோ
பிள்ளாய்பெரியாய்பிழைசெய்தனையால்
கொள்ளாவுலகுன்னையிதோகொடிதே. (கூஅ)

பேராவிடர்வந்தனபேர்க்கவலாய்
தீராவிடர்தந்தனைதெவ்வர்தொழும்
வீராவெனையிங்ஙன்வெறுத்தனையோ
வாராய்புறமித்துணைவைகுதியோ. (கூகூ)

என்னைத்தருமெந்தையையென்னையரைப்
பொன்னைப்பொருகின்றபொலங்குழையாள்
தன்னைப்பிரிவேனுளனாவதுதான்
உன்னைப்பிரியாதவுயிர்ப்பலவோ. (எ0)

பொற்றேடிவர்கின்றபொலங்குழையாள்
தற்றேடிவருந்துதவம்புரிவேன்
நிற்றேடிவருந்தகிரப்பினையோ
வெற்றேடினைவந்தவிளங்களிறே. (எக)

இன்றேயிறவாதொழியேனமரோ
பொன்றாதொழியார்புகல்வாருளரோ

ஒன்றாகியவுன்கிளையோரையெலாம்
கொன்றாய்கொடியாயிதுவுங்குணமோ. (௭௨)

மாந்தாமுதன்மன்னவர்தம்வழியில்
வேந்தாகைதுறந்தபின்மெய்யுறவோர்
தந்தாமொழியத்தமியேனுடனே
போந்தாயெனைவிட்டனைபோயினையோ. (௭௩)

என்றாவுரையாவெழும்வீழுமிருந்
தொன்றாவுணர்வோய்வுறுமொன்றலவால்
மின்றாதிடியாதிருள்வாய்விளைவீ
தென்றாவெனுமென்றனிநாயகனே. (௭௪)

நாடும்பலசூழல்கடோறுநடந்
தோடும்பெயர்சொல்லியுளைந்துயிர்போய்
வாடும்வகைசோருமயங்குறுமால்
ஆடுங்களிமாமதயானையனான். (௭௫)

கமைபாலொடுமென்னுயிர்காவலினின்
றிமைபாதவனித்துணைதாழ்வுறுமோ
சுமையாவுலகூடுழறொல்வினையேன்
அமையாதுகொல்வாழ்வறியேனெனுமால். (௭௬)

அறப்பாலுளதேதலவன்முன்னவனாய்ப்
பிறப்பானுறின்வந்துபிறக்கவெனா
மறப்பால்வடிவாள்கொடுமென்னுயிரைத்
துறப்பானுறுகின்றதொடர்ச்சியின்வாய். (௭௭)

பேர்ந்தானெடுமாயையினிற்பிரியா
ஈர்ந்தானவனாசிபிடித்திளையோன்
சேர்ந்தாளிடுபூசல்செவித்தொளையில்
சேர்ந்தார்தனுமேதிருமாறருளா. (௭௮)

வேறு.

பாற்றருகானகத்தரக்கர்பல்கழல்
முரற்றருவெஞ்சமமுரல்கின்றாரெதிர்
உரற்றியவோசையன்றெருத்தியூறுபட்
டரற்றியகுரலவளரக்கியேகொலாம். (௭௯)

73. 'மெய்யுறவோர் என்றது தந்தைதாய்முதலிய உள்ளன்புடைய சுற்றத்தாரை' தேகபந்துக்களென்ற பொருளில் மெய்யுறவோர் என்றாருமாம்.

## இராமன் ஆக்கினே யாஸ்திரத்தையெடுத்து விடமுயலுதல்.

அங்கியினெடும்படைவாங்கியங்கது
செங்கையிற்கரியவன்றிரிக்குமெல்லையில்
பொங்கிருளப்புறத்துலகம்புக்கது
கங்குலும்பகலெனப்பொலிந்துகாட்டிற்றே. (அ௦)

நெடுவரைபொடிபடநிவந்தமாமரம்
ஒடிவுறநிலமகளுலையவூங்கெலாம்
சடசடவெனுமொலிதழைப்பத்தாக்குமா
முடுகினனிராமன்வெங்காலின்மும்மையான். (அ௧)

ஒருங்குயர்ந்துலகின்மேலூழிப்பேர்ச்சியுள்
கருங்கடல்வருவதேயனைகாட்சித்தன்
பெருந்துணைத்தம்முனைநோக்கிப்பின்னவன்
வருந்தலைவருந்தலைவள்ளியோயெனா. (அ௨)

வந்தனெனடியனென்வருந்தல்வாழிநின்
அந்தமிலுள்ளமென்றறியக்கூறுவான்
சந்தமென்றளிர்புரைசரணஞ்சார்ந்தனன்
சிந்தினநயனம்வந்தனையசெய்கையான். (அ௩)

ஊற்றுறுகண்ணினீரொழுகநின்றவன்
ஏற்றிளங்கன்றினைப்பிரிவுற்றெறங்கணாம்
ஆற்றலினாற்றவதரிதினெய்திய
பாற்றிளம்பான்முலையாவின்பான்மையான். (அ௪)

தழுவினன்பன்முறைதாரைக்கண்ணினீர்
கழுவினனாண்டவன்கனகமேனியை
வழுவினையாமெனமனக்கொடேங்கினோன்
எழுவெனமலையெனவியைந்ததோளினாய். (அ௫)

என்னையங்கெய்தியதியம்புவாயென
அன்னவனஃதெலாமறியக்கூறலும்
இன்னலுமுவகையுமிரண்டுமெய்தினான்
தன்னலாதொருபொருடனக்குமேலிலான். (அ௬)

ஆய்வுறுபெருங்கடலகத்துளேயவன்
பாய்திரைவருதொறும்பரிதற்பாலனாம்

---

83. அந்தமில் உள்ளம்-மயக்கமற்ற மனம், அழிவற்றமனமெனினுமாம்,
85. கனகமேனி - பொன்வண்ணன்,

தீவினைப்பிறவிவெஞ்சிறையிற்பட்டயாம்
நோயுறுதுயரெனநுடங்கனோன்மையோ. (அ௭)

மூவகையமரருமுலகமும்மையும்
மேவரும்பகையெனக்காகமேல்வரின்
ஏவரேகடப்பவரெம்பிநீயுளை
ஆவதேவலியினியாரணும்வேண்டுமோ. (அஅ)

பிரிபவர்யாவரும்பிரிகபேரிடர்
வருவனயாவையும்வருகவார்கழற்
செருவலிவீரநிற்றீருமல்லது
பருவரலென்வயிற்பயிலற்பாலதோ. (அகூ)

வன்றொழில்வீரபோர்வலியரக்கியை
வென்றுபோர்நீண்டனெனெனவிளம்பினாய்
புன்றொழிலனையவள்புகன்றசீற்றத்தால்
கொன்றிலைபோனுமாற்கூறுவாயென்றான். (கூ௦)

தொளைபடுமூக்கொடுசெவிதுமித்துகத்
தளைவயினகிலொடுதடிந்துநீக்கிய
அளவையிற்பூசலிட்டரற்றினாளென
இளையவன்விளம்பினின்றிருகைகூப்பினான். (கூக)

தொல்லிருடனைக்கொலத்தொடர்கின்றளையும்
கொல்லலைநாசியைக்கொய்துநீக்கினாய்
வல்லலைநீமனுமுதன்மரபினோயெனப்
புல்லினனுவகையிற்பொருமிவிம்முவான். (கூஉ)

பேரருந்துயரறப்போர்ந்துளோரென
வீரனுந்தம்பியும்விடிவுநோக்குவார்
வாருணநினைந்தனர்வானநீரினால்
தாரணித்தங்கொருகிரியிற்றங்கினார். (கூ௩)

கல்லகல்வெள்ளிடைக்கானகத்துள
பல்லவமலர்கொடுபடுத்தபாயலின்

---

92. மனு - சூரியனது மகன்; இவனே இச்சூரியகுலத்து அரசர்க்கெல்லாம் முதல்வன்; வைவசுவதமநுவெனப் பிரசித்திபெற்றவன்.

93. தாரணித்தல் - உடம்புதரித்தல்.

94. வெள்ளிடை - வெறுந்தலை.

எல்லையிறுயரினோடிருந்துசாய்ந்தனன்
மெல்லடியிளையவன்வருடவீரனே. (கூச)

மயிலியல்பிரிந்தபின்மானநோயினல்
அயில்விலனொருபொருளவலமெய்தலால்
துயில்விலனென்பதுசொல்லற்பாலதோ
உயிர்நெடிதுயிர்ப்பிடையூசலாடுவான். (கூரு)

மானவண்மெய்யிரைமறக்கலாமையின்
ஆனதோவன்றெனினரக்கர்மாயமோ
கானகமுழுவதுங்கண்ணினோக்குங்கால்
சானகிவுருவெனத்தோன்றுந்தன்மையே. (கூசு)

கருங்குழற்சேயரிக்கண்ணிற்கற்பினோர்க்
கருங்கலமருங்குவந்திருப்பவாசையால்
ஒருங்குறத்தழுவுவானொன்றுங்காண்கிலேன்
மருங்குல்போலானதோவடிவுமெல்லவே. (கூஎ)

புண்டரிகப்புதுமலரிற்றேன்பொதி
தொண்டையஞ்சேயொளித்துவர்த்தவாயமு
துண்டனனீண்டவளுழையளல்லளால்
கண்டுயிலன்றியுங்கனவுண்டாகுமோ. (கூஅ)

மண்ணினும்வானினும்மற்றைமூன்றினும்
எண்ணினும்பெரியதோவிடர்வந்தெய்தினல்
தண்ணறுங்கருங்குழற்சனகன்மாமகள்
கண்ணினுநெடியதோகொடியகங்குலே. (கூகூ)

அப்புடையலங்குமீனமருமார்கலி
உப்புடையிந்துவென்றுதித்தவூழித்தீ
வெப்புடைவிரிகதிர்விரிப்பமெய்யெலாம்
கொப்புளம்பொடித்ததோகொதிக்கும்வானமே. (க00)

இன்னனவின்னனபன்னியீடழி
மன்னவர்மன்னவன்மதிமயங்கினன்
அன்னதுகண்டனனல்கினனெனத்
துன்னியசெங்கதிர்ச்செல்வன்றோன்றினன். (க0க)

ஆ திருவிருத்தம் - கக௲எ.

---

98. வாயமுது உண்ணல் - அதரபானம் பருகல்.

100. உப்பு - அழகு. ஊழித்தீ - பிரளயகாலத்தில் கடலினின்று வெளிக்கிளம்பி உலகத்தையழிக்கும் வடவாமுகாக்கினி.

## ௧௦-வது கவந்தப்படலம்.

நிலம்பொறையிலதெனநிமிர்ந்தகற்பினாள்
நலம்பொறைகூர்தருமயிலைநாடிய
அலம்புறுபறவையுமழுவவாமெனப்
புலம்புறுவிடியலிற்கடிதுபோயினார். (௧)

வேறு.

ஐயைந்தடுத்தயோசனையினிரட்டியடவிபுடைபடுத்த
வையந்திரிந்தார்கதிரவனும்வானினுப்பண்வந்துற்றான்
எய்யுஞ்சிலக்கையிருவருஞ்சென்றிருந்தேநீட்டியெவ்வுயிரும்
கையின்வளைத்துவயிற்றடக்குங்கவந்தன்வனத்தின்கண்ணுற்றார்.

வேறு.

எறுப்பினங்கடையுறயானையேமுதல்
உறுப்புடையுயிரெலாமுலைந்துசாய்ந்தன
வெறிப்புறுநோக்கினவெருவுகின்றன
புறிப்பருவலையிடைப்பட்டபான்மைய. (௨)

மரபுளிநிறுத்திலன்புரக்குமாண்பிலன்
உரனிலாவொருவனாட்டுயிர்கள்போல்வன
வெருவுவசிந்துவகுவிவவிம்மலோ
டிரிவனமயங்குவவியல்புநோக்கினார். (௩)

மால்வரையுருண்டனவருவமாமரம்
கால்பறிந்திடுவனகானயாறுகள்
மேலுளதிசையொடுவெளிகரப்பன
சூன்முதிர்மேகங்கள்சுருண்டுவீழ்வன. (௪)

நாற்றிசைப்பரவையும்மிறுதிநாளுறக்
காற்றிசைத்தெழுவெழுந்துலகைக்கால்பரந்
தேற்றிசைதுரந்துவந்திடுங்குகின்றன
போற்றிசைசுற்றியகரத்துப்புக்குளார். (௫)

தேமொழிதிறந்தினாலரக்கர்சேனைவந்
தேமுறவளைந்ததென்றுவகையெய்தினார்
நேமிமால்வரவரைநெருக்குகின்றதே
ஆமெனலாயகைம்மதிட்குளாயினார். (௬)

1. கற்பு - கணவனையே தெய்வமென்றுணர்தல்.
இக்குறியிட்ட மேன் மூன்றுகவிகளும் ஒரு தொடர்.

இளவலைநோக்கினனிராமனேழையை
உளைவுசெயிராவணனுறையுமூருமிவ்
வளைவைய தாகுதலறிதியையநம்
கிளர்பெருந்துயரமுங்கிண்டதாமென. (அ)

முற்றியவரக்கர்தமுழுங்குதானையேல்
எற்றியமுரசொலியேங்குஞ்சங்கிசை
பெற்றிலதாகலிற்பிறிதொன்றாமெனச்
சொற்றனனிளையவன்றொழுதுமுன்னினான். (௯)

தெள்ளியவமுதெழத்தேவர்வாங்கிய
வெள்ளெயிற்றரவந்தான்வேறோர்நாகந்தான்
தள்ளருவாலொடுதலையினல்வளைத்
துள்ளுறக்கவர்வதேயொக்குமூழியாய். (௧௦)

என்றிவைவிளம்பிடவிளவல்வாசகம்
நன்றெனநினைந்தனன்நடந்தநாயகன்
ஒன்றிரண்டியோசனையுள்புக்கோங்கரு
னின்றெனவிருந்தவக்கவந்தனேர்சென்றார். (௧௧)

வெயிற்சுடரிரண்டினைமேருமால்வரை
குயிற்றியவாமெனக்கொதிக்குங்கண்ணினன்
எயிற்றிடைக்கிடையிருகாதமீட்டிய
வயிற்றிடைவாயெனுமகரவேலையான். (௧௨)

ஈண்டியபுலவரோடவுணரிந்துவைத்
தீண்டியநெறிவரைத்தெய்வமத்தினைப்
பூண்டுயர்வடமிருபுடையும்வாங்கலின்
நீண்டெனக்கிடந்தனநிமிர்ந்தகையினான். (௧௩)

தொகைக்கனற்கருமகன்றுருத்தித்தூம்பெனப்
புகைக்கொடிகனலொடுபொடிக்குமூக்கினான்
பகைத்தகைநெடுங்கடற்பருகும்பாவகன்
சிகைக்கொழுந்திதுவெனத்திருகுநாவினான். (௧௪)

11. வயிற்றுக்குள் தலையடங்கியமைபற்றி கவந்தம்போலத் தோற்றமுடையவனாயிருந்ததனால் இவனுக்குக் கவந்தனென்று பெயர். கவந்தம் என்ற வடசொல்லின் திரிபு, இதற்கு - தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடல் என்று பொருள்.

13. இந்துவைத்தீண்டிய நெடுவரை - சந்திரனை அடைதூறுக்கொண்ட பெரியமலை; உயச்சியாற் சந்திரமண்டலத்தை யளாவிய மலையென்றலும் ஒன்று.

புரண்டுபோம்பிடைவரவெருவிப்புக்குறை
அரண்டனைநாடியோரருவிமால்வரை
முரண்டொகுமுழைநுழைமுழுவெண்டிங்களை
இரண்டுகூறிட்டெனவிலங்கெயிற்றினான். (கரு)

ஓதநீர்மண்ணிவைமுதலவோதிய
பூதமோரைந்தினிற்பொருந்திற்றன்றியே
வேதநான்வரன்முறைவிதிக்குமப்பெரும்
பாதகந்திரண்டுயிர்படைத்தபண்பினான். (கசு)

வெய்யவெங்கதிர்களைவிழுங்குவெவ்வராச்
செய்தொழிலிலதுயில்செவியின்றொள்ளையான்
பொய்கிளர்வன்மையிற்புரியும்புன்மையோர்
வைகுறுநரகையுநகும்வயிற்றினான். (கள)

முற்றியவுயிரெலாமுருங்கவாரித்தான்
பற்றியகரத்தினன்பணைத்தபண்ணையில்
துற்றியபுகுதருந்தோற்றத்தால்யமன்
கொற்றவாய்தற்செயல்குறித்தவாயினான். (கஅ)

ஓலமார்கடலெனமுழங்குமோதையான்
ஆலமேயெனவிருண்டமூன்றவாக்கையான்
நீலமாமேனியிற்றலையைநீக்கிய
காலநேமியிற்பெருங்கவந்தக்காட்சியான். (கக)

தாக்கியதணப்பில்காலெறியத்தன்னுடை
மேக்குயர்கொடுமுடியிழந்தமேருநேர்
ஆக்கையினிருந்தவன்றன்னையவ்வழி
நோக்கினரிருவருநுணங்குகேள்வியார். (உ0)

நீர்புகுநெடுங்கடலடங்குநேமிசூழ்
பார்புகுநெடும்பகுவாயைப்பார்த்தனர்
சூர்புகலரியதோரரக்கர்தொன்மதில்
ஊர்புகுவாயிலோவிதுவென்றுன்னினார். (உக)

அவ்வழியிளையவனயர்ந்துநோக்கிய
வெவ்வியதொருபெரும்பூதம்வில்வலாய்
வவ்வியதன்கையின்வளைத்துவாய்ப்பெயும்
செய்வதெனிவணெனச்செம்மல்சொல்லுவான். (உஉ)

17. தொள்ளை - தொளை.: தொளை - துளை.

பாரிடமேயிதுபரவைசுற்றுறும்
பாரிடமரிதெனப்பரந்தமெய்யது
பாரிடம்வலம்வரப்பரந்தகையது
பாரிடந்தெடுத்தமாவனையபாழியாய். (உ௩)

தோகையும்பிரிந்தனளெந்தைதுஞ்சினன்
வேகவெம்பழிசுமந்துழலவேண்டலேன்
ஆதலின்யானினியிதனுக்காமிட
மேகுதியீண்டுநின்றிளவலேயென்றான். (உச)

ஈன்றவரிடர்படவெம்பிதுன்புறச்
சான்றவர்துயருறப்பழிக்குஞ்சார்வுமாய்த்
தோன்றலினென்னுயிர்துறந்தபோதலால்
ஊன்றியபெரும்பழிதுடைக்கவொண்ணுமோ (உரு)

இல்லியல்புடையநீரளித்தவின்சொலாம்
வல்லியவ்வரக்கர்தம்மனையுளாளெனச்
சொல்லிநன்மலையெனச்சுமந்ததூணியென்
வில்லினென்செல்வெனோயிதிலைவேந்தன்பால். (உசா)

தளையவிழ்கோதையைத்தாங்கலாற்றலென்
இளையுரிந்தளித்தன்மேலிவர்ந்தகாதலென்
உளனெனவுரைத்தலினும்பரானென
விளைதனன்றாதலின்விளிதனன்றென்றான். (உஎ)

வேறு.

ஆண்டானின்னனபன்னிடவையற்கிளைவீரன்
ஈண்டியானுன்பின்னேகியபின்னிவ்விடர்வந்து
மூண்டான்முன்னேயாருயிரோடுமுடியாதே
மீண்டேபோதற்காமெனினன்றென்வினையென்றான். (உஅ)

என்றானென்னுப்பின்னுமிசைப்பானிடர்தன்னை
வென்றாரன்றேவீரர்களாவார்விரவாரின்
தன்றாய்தந்தைதம்முனொனுந்தன்மையர்முன்னே
பொன்றானென்றானீங்குவதன்றேபுகழும்மா. (உகூ)

மானேயன்னாடன்னொடுதம்முன்வரையாரும்
கானேவைகக்கண்டுயில்கொள்ளாதயல்காத்தற்

23. பாரிடம் - பூதம். பாரிடம் என்பது பரு இடம் என்று பிரிந்து அக
லிடம் என்றுபொருள்படும். பாரிடம் பூமி.
29. விரவார் - தன்னோடு கவ்வாதவர்; எனவே பகைவர்.

காணுனென்னேயென்றவர்முன்னோரவரின்றித்
தானேவந்தானென்றலின்வேறோர்தவறுண்டோ. (௩௦)

என்றாயுன்முன்னேவியயாவுமிசையின்னல்
பின்றாதெய்திப்பேரிசையாளற்கழிவுண்டேல்
பொன்றாமுன்னம்பொன்றுதியென்றானுரைபொய்யா
நின்றாலன்றோநிற்பதுவாய்மைநிலையம்மா. (௩௧)

எற்பெற்றானும்யானுமெனைத்தோர்வகையானு
நிற்பெற்றாட்குநிற்குநினைப்புப்பிழையாமல்
நற்பொற்றோளாய்நல்லவர்பேணநனிநிற்குஞ்
சொற்பெற்றால்மற்றாருயிர்பேணித்துறவேமால். (௩௨)

ஓதுங்காலப்பல்பொருண்முற்றுற்றொருவாத
வேதஞ்சொல்லுந்தேவரும்வீயுங்கடைவீயாய்
மாதங்கந்தின்றுய்ந்திவ்வனத்தின்றலைவாழும்
பூதங்கொல்லப்பொன்றுதிபோலும்பொருளுண்டோ. (௩௩)

கேட்டார்கொள்ளார்கண்டவர்பேணார்கிளர்போரில்
தோட்டார்கோதைச்சோர்குழறன்னைத்துவளாமல்
மீட்டானென்னும்பேரிசைகொள்ளான்செருவெல்ல
மாட்டான்மாண்டானென்றபின்மேலும்வசையுண்டோ. (௩௪)

தணிக்குந்தன்மைத்தன்றெனினன்றித்தகைவாளால்
கணிக்குந்தன்மைத்தல்லவிடத்திற்கனல்பூதம்
பிணிக்குங்கையும்பெய்பிலவாயும்பிழையாமல்
துணிக்கும்வண்ணங்காணுதிதுன்பந்துறவென்றான். (௩௫)

என்றாமுன்னேசொல்லுமிளங்கோவிறையோற்கு
முன்னேசெல்லமுன்னவனண்ணினுமுந்தத்
தன்னேரில்லாத்தம்பிதடுப்பான்பிறரில்லை
அன்னோகண்டாரும்பருவெய்துற்றழுதாரால். (௩௬)

---

33. மாதங்கம்-யானை. மதங்கமுனிவரிடத்தினின்று உண்டானதென்று பொருள்.

36. இறையோன் கடவுள் இதற்கு (யாவர் மனத்திலுந்) தங்குகிறவனென்று பொருள். இறுத்தல் - தங்குதல் இறைமையுடையோனென்றுமாம். இறைமை - தலைமை.

வேறு.

இனையராகியவிருவருமுகத்திருகண்போற்
கனையும்வார்கழல்வீரர்சென்றணுகலுங்கவந்தன்
வினையினெய்தியவீரர்நீர்யாவர்கொலென்ன
நினையுநெஞ்சினரிமைத்திலருருத்தனர்நின்றார். (௩௭)

அழிந்துளாரலரிகழ்ந்தனரென்னையென்றழன்றான்
பொழிந்தகோபத்தன்புதுப்பொறிமயிர்ப்புறம்பொடிப்ப
விழுங்குவேனெனவீங்கலும்விண்ணுறவீரர்
எழுந்ததோள்களைவாள்களாலரிந்தனரிட்டார். (௩௮)

கைகளற்றுக்குருதியாறொழுகியகவந்தன்
மெய்யின்மேற்கொடுகிழக்குறப்பெருநதிவிரவும்
சையமாநெடுந்தாழ்வரைத்தனிவரைதன்னோ
டையம்நீங்கியபேரெழிலுவமையனானான். (௩௯)

ஆளுநாயகனங்கையிற்றீண்டியவதனால்
மூளுஞ்சாபத்தின்மூந்தியதீவினைமுடித்தான்
றோளும்வாங்கியதோமுடையாக்கையைத்துறவா
நீளநீங்கியபறவையின்விண்ணுறநிமிர்ந்தான். (௪௰)

விண்ணினின்றவன்விரிஞ்சனேமுதலினர்யார்க்கும்
கண்ணினின்றவனிவனெனக்கருத்துறவுணர்வான்
எண்ணிலன்னவன்குணங்களைவாய்திறந்திசைத்தான்
புண்ணியம்பயக்கின்றுழியரியதெப்பொருளே. (௪௧)

வேறு.

ஈன்றவனோடுவெப்பொருளுமெல்லைதீர்நல்லறத்தின்
சான்றவனோதேவர்தவத்தின்றனிப்பயனோ
மூன்றுகவடாய்முளைத்தெழுந்தமூலமோ
தோன்றியிருவினையேன்சாபத்திடர்தொடைத்தாய். (௪௨)

மூலமேயில்லாமுதல்வனேநீமுயலும்
கோலமேயார்க்குந்தெரிவரியகொள்கைத்தால்

---

41. விரிஞ்சன் பூதங்களைப் படைக்கிறவனென்றும் (அன்னப்) பறவையால் தாங்கப்படுகிறவனென்றும் அவையவப்பொருள்.
புண்ணியமாவது பகவானுடைய அநுக்கிரகம்.

43. மூலமேயில்லா முதல்வனே யாவும்உன்னிடத்தினின்று தோன்றின வேயன்றி நீ ஒன்றினறுந்தோன்றாதவன் என்பது கருத்து.

ஆலமோவாலினடையோவடைகிடந்த
பாலனேவாதிப்பரனேபகராயே. (௪௩)

காண்பார்க்குங்காணப்படுபொருட்குங்கண்ணுகிப்
பூண்பாய்போல்நிற்றியால்யாதொன்றும்பூணுதாய்
மாண்பாலுலகைவயிற்றொளித்துவாங்குதியால்
ஆண்பாலோபெண்பாலோவப்பாலோவெப்பாலோ. (௪௪)

ஆதிப்பிரமனுநீயாதிப்பரமனுநீ
ஓதியுறுபொருளுக்கப்பாலுண்டாயினுநீ
சோதிச்சுடர்ப்பிழம்புநீயென்றுசொல்லுகின்ற
வேதமுறைசெய்தால்வெள்காரோவேறுள்ளார். (௪௫)

எண்டிசையுந்திண்சுவராவேழேழ்நிலைவகுத்த
அண்டப்பெருங்கோயிற்கெல்லாமழகுடைய
மண்டலங்கண்மூன்றின்மேலென்றுமலராத
புண்டரிகமொட்டின்பொருட்டேபுரையம்மா. (௪௬)

மண்பாலமரர்வரம்பாருங்காணுத
எண்பாலுயர்ந்தவெரிபோங்குநல்வேள்வி
உண்பாய்நீயூட்டுவாய்நீயிரண்டுமொக்கின்ற
பண்பாரறிவார்பகராய்பரமேட்டி. (௪௭)

நிற்குநெடுநீத்தநீரின்முளைத்தெழுந்த
மொக்குளேபோலமுரணிற்றவண்டங்கள்
ஒக்கவுயர்ந்துன்னுள்ளேதோன்றியொளிக்கின்ற
பக்கமறிதற்கெளிதோபரம்பரனே. (௪௮)

நின்செய்கைகண்டுநினைநதனவோநீண்மறைகள்
உன்செய்கையன்னவைதான்சொன்னவொழுக்கினவோ
என்செய்தேன்முன்னமறஞ்செய்கையெய்தினார்
பின்செல்வதில்லாப்பெருஞ்செல்வநீதந்தாய். (௪௯)

மாயப்பிறவிமயனீக்கிமாசிலாக்
காயத்தைநல்கித்துயரின்கரையேற்றிப்

---

46. என்று மலராத - எப்பொழுதும் மலராத, சூரியனுல் மலராததுமாம், என்று - சூரியன்: பெயர்ச்சொல்.

47. பரமேஷ்டி - பரமே எல்லாவுலகத்தினுஞ் சிறந்ததாகிய பரமபதத்தில், ஸ்தி - இருப்பவனென்பது பொருள்.

பேயொத்தேதன்பேதைப்பிணக்கறுத்தவெம்பெருமான்
நாயொத்தேனென்னநலனிழைத்தேனென்றான். (௫௦)

என்றாங்கினிதியம்பியின்றறியக்கூறுவேனெனல்
ஒன்றாதுதேவருறுதிக்கெனவுன்னாத்
தன்றாயைக்கண்ணுற்றகன்றனையதன்மையனாய்
நின்றானைக்கண்டானெறிநின்றார்நேர்நின்றான். (௫௧)

பாராயினையவனேபட்டவிவன்வேறேயோர்
பேராளன்றானொளியோங்கும்பெற்றியனாய்
நேராகாயத்தின்மிசைநிற்கின்றானீயிவனை
ஆராயெனவவனுமார்கொலோநீயென்றான். (௫௨)

வேறு.

சந்தப்பூணலங்கல்வீரதனுவெனுநாமத்தேனோர்
கந்தர்ப்பன்சாபத்தாலிக்கடைப்படுபிறவிகண்டேன்
வந்துற்றீர்மலர்க்கைதீண்டமுன்னுடைவடிவம்பெற்றேன்
எந்தைக்குமெந்தைநீரேயிசைப்பதுகேண்மினென்றான். (௫௩)

கனையுலாஞ்சிலையினீரைக்காக்குநரின்மையேனும்
இனையிலாடன்னைநாடற்கேயனசெய்தற்கேற்கும்
புனையிலாதவர்க்குவேலைபோக்கரிதன்னதேபோல்
துணையிலாதவர்க்குமின்னுபகைப்புலந்தொலைத்துநீக்கல். (௫௪)

பழிப்பறுநிலைமையாண்மைபகர்வதென்பதுமபேடத்
தழிப்பெருந்தகைமைசான்றவந்தணனுயிர்த்தவெல்லாம்
அழிப்பதற்கொருவனனவண்ணலுமறிதிரன்றே
ஒழிப்பருந்திறற்பல்பூதகணத்தொடுமுறையுமுண்மை. (௫௫)

ஆயதுசெய்கையென்பதறத்துறைநெறியினெண்ணித்
தீயவர்ச்சேர்க்கிலாதுசெவ்வியோர்ச்சேர்த்துச்செய்தல்
தாயினுமுயிர்க்குநல்குஞ்சவரியைத்தலைப்பட்டன்றா
ளேயதோர்நெறியினெய்தியிரலையின்குன்றமேறி. (௫௬)

56. இரலையின் குன்றம் - ருசியமுக பருவதம். ருசியமுகம் என்னும் வடமொழிபெயர்க்கு - கலைமான்கள் ஒலியாமல் வாழப்பெறும் மலையென்று பொருள். அப்பெயர்க்கு ஞாபகமாக அதில் ருசியம் என்னும் முதல்மொழியின் பொருளை மாத்திரம் எடுத்துக்கொண்டு அம்மலையை இரலையின்குன்றம் என்று குறித்தார் இதுநாமை கதேசே நாமக்கிரகணத்தின் பாற்படும் - இரலை-கலைமான்.

கதிரவன்சிறுவனுயகனகவாணிறத்திறனை
எதிரெதிர் தழுவிநட்பினினிதமர்ந்தவனினீண்ட
வெதிர்பொருந்தோளினுளைநாடுதவ்விழுமிதென்றுன்
அதிர்கழல்வீரர் தாமுமன்னதேயமைவதானர். (௫எ)

ஆனவன்றெழுதுவாழ்த்தியந்தரமெழுந்துபோனுன்
மானவக்குமரர் தாமுமத்திசைவழிக்கொண்டேகிக்
கானமுமலையுநீங்கிக்கங்குல்வந்திறுத்தகாலை
யானையினிரட்டையென்னமதங்கனதிருக்கைசேர்ந்தார். (௫அ)

ஆ திருவிருத்தம் - கககூச.

## கக-வது, சவரிபிறப்பு நீங்குபடலம்.

கண்ணிய தருதற்கொத்தகற்பகத்தருவுமென்ன
உண்ணியநல்குஞ்செல்வமுறுநறுஞ்சோலைஞாலம்
எண்ணியவின்பமன்றித்துன்பங்களில்லையான
புண்ணியம்புரிந்தோர்வைகுந்துறக்கமேபோன்றதன்றே. (க)

அன்ன தாமிருக்கைநண்ணியாண்டுநின்றளவில்காலந்
தன்னையேநினைந்துநோற்குஞ்சவரியைத்தலைப்பட்டன்னுட்
கின்னுரையருளித்தீதின்றிருந்தனைபோலுமென்றுன்
முன்னிவற்கிதுவென்னலாவதோர்மூலமில்லான். (உ)

ஆண்டவளன்பினேத்தியழுதிழியருவிக்கண்ணள்
மாண்டதென்மாயப்பாசம்வந்ததுவரம்பில்காலம்
பூண்டமாதவத்தின்செல்வம்போயதுபிறவியென்பாள்
வேண்டியகொணர்ந்துநல்கவிருந்துசெய்திருந்தவேலை. (௩)

ஈசனுங்கமலத்தோனுமிமையவர்யாருமெந்தை
வாசவன்றானுமீண்டுவந்தனர்மகிழ்ந்துநோக்கி
ஆசறுதவத்திற்கெல்லையணுகியதிராமற்காய
பூசனைவிரும்பியெம்பாற்போதுதியென்றுபோனுர். (௪)

2. சவரி - இவள்மதங்காது சிஷ்யர்களுக்கு உபசாரஞ்செய்துகொண்டு அவ்வாச்சிரமத்திலேயே வசித்து வந்த துறவறம் பூண்ட ஓர் தவப்பெண்.

### சவரி இராமனைப்புகழ இராமன் அவனைநோக்கிமுகமன்கூறல்.

இருந்தனனெந்தைநீயீண்டெய்துதியெனுந்தன்மை
பொருந்திடவின்றுதானென்புண்ணியம்பூத்ததென்ன
அருந்தவத்தரசிதன்னையன்புறநோக்கிநங்கள்
வருந்துறுதுயரந்திர்த்தாயம்மனைவாழியென்றார். (௫)

### சவரி அவர்களுக்குச் சுக்கிரீவனுள்ள விடத்துச் செல்லும் வழியைக் கூறுதல்.

அனகனுமிளையகோவுமன்றவணுறைந்தபின்றை
வினையறுநோன்பினாளுமெய்ம்மையினோக்கிவெய்ய
துணைபரித்தேரோன்மைந்தனிருந்தவத்துளக்கில்குன்ற
நினைவரிதாயற்கொத்தநெறியெலாநினைந்துசொன்னாள். (௬)

### சவரி கூறினவற்றை இராமன் கேட்டல்.

வீட்டினுக்கமைவதானமெய்ந்நெறிவெளியிற்றாகக்
காட்டுறுமறிஞரென்னவன்னவள்கழறிற்றெல்லாங்
கேட்டனனென்பமன்னோகேள்வியாள்செவிகண்முற்றுந்
தோட்டவருணர்வினுண்ணுமமுதத்தின்சுவையாய்நின்றான். (௭)

### சவரிமுத்தியடைய இராமலக்ஷ்மணர் அப்பாற்செல்லுதல்.

பின்னவளுழன்றுபெற்றயோகத்தின்பெற்றியாலே
தன்னுடலுறந்துதானத்தனிமையினினிதுசார்ந்தாள்
அன்னதுகண்டவீரரதிசயமளவின்றெய்திப்
பொன்னடிக்கழல்களார்ப்பப்புகன்றமாநெறியிற்போனார். (௮)

### இராமலக்ஷ்மணர் பம்பைப் போய்கையை யடைதல்.

தண்ணெடுங்கானுங்குன்றுந்திசைகளுந்தவிரப்போனார்
மண்ணிடைவைகறோறும்வரம்பிலாமாக்களாடக்
கண்ணியவினைகளென்னுங்கட்டழல்கதுவலாலே
புண்ணியமுருகிற்றன்னபம்பையாம்பொய்கைபுக்கார். (௯)

ஆக திருவிருத்தம் - ௧௨௦௯.

## ஆரணியகாண்டம்

முற்றுப்பெற்றது.

---

9. பொய்கை - மானிடராக்காத நீர் நிலை.

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

ஸ்ரீமத்கம்பராமாயணம்.

நான்காவது

# கிட்கிந்தாகாண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926,

# கிட்கிந்தாகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## நான்காவது,

# கிட்கிந்தாகாண்டம்.

## முதலாவது: பம்பைப்படலம்.

### தனியன்.

தாலாற்றுங்கவிச்சக்கரவர்த்திசெய்யுடாறேழுடைமைநோக்கி
வாலாற்றுமுறையின்மும்மைத்தமிழுணர்ந்தமுதியோருமற்றுளோரும்
மூலாற்றுங்கடற்பாரிற்கம்பசூத்திரமுதுசொன்மொழிபவன்றேற்
கொலாற்றுமால்சங்கமொக்குமெனின்யாம்வேறெருப்பியம்பலாமால்.

காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதல்
தோன்றுருவெவையுமம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவுமிடையினின்றவும்
சான்றுருவுணர்வினுக்குவந்ததாயினன். (௧)

நூல்.

தேன்படிமலரதுசெங்கண்வேங்கைமாத்
தான்படிகின்றதுதெளிவுசான்றது
மீன்படிமேகமும்படிந்துவேலைநீர்
வான்படிந்துலகிடைக்கிடந்தமாண்பது. (௨)

---

வாலாற்று முறையாவது அகத்தியன் வழிவந்த அருந்தமிழ்க் கலைகளை முதுமொழிப் பெரும்புலவர் மாட்டுப் புலமை நிரம்புங்காறும் பயிறல்.

ஈர்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்தபித்திகை
சேர்ந்துழிச்சேர்ந்துழிநிறத்தைச்சேர்தலான்
ஓர்ந்துணர்வில்லவருள்ளமொப்பது. (௩)

குவான்மணித்தடந்தொறும்பவளக்காலிவர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டலில்
தவாநெடுகானகந்தயங்குமீன்றொடும்
உவாமதியுலப்பிலவுதித்ததொப்பது. (௪)

ஓதநீருலகமுமுயிர்கள்யாவையும்
வேதபாரகரையும்விதிப்பவேட்டநாள்
சீதநீங்குவரியைச்செகுக்குமாறொரு
காதிகாதலன்றருகடலினன்னது. (௫)

எற்பொருநாகர்தமிருக்கையீதெனக்
கிற்பமேதார்காட்சியதெனினுங்கீழுறக்
கற்பகமனையவக்கவிஞர்நாட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது. (௬)

களனவிலன்னமேமுதலகண்ணகன்
தளமலர்ப்புள்ளொடுதயங்கவின்னதோர்
கிளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாதலான்
வளநகர்க்கூலமேபோலுமாண்பது. (௭)

அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்கிலாமையாம்
திருமுகநோக்கலமிறந்துதீர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது. (௮)

காசடைவிளக்கியகாட்சித்தாயினும்
மாசடைபேதைமையிடைமயக்கலான்
ஆசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றொறும்பரந்தபண்பது. (௯)

களிப்படாமனத்தவன்காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள்விழியின்கேளெனத்

3. பித்திகை - கரை.
5. உவரி - கடல். 7. கூலம் - கடைவீதி.

துளிப்படாநயனங்கடுளிப்பச்சோருமென்
றொளிப்படாதாயிடையொளிக்குமீனது. (௧௦)

கழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதரளமுமணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீரருவிபெய்தலான்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது. (௧௧)

பொங்குவெங்கடகரிபொதுவினுடலின்
கங்குலினெதிர்பொருகலவிப்பூசலில்
அங்கநொந்தலசியவிலையினுப்வளை
மங்கையர்வடிவெனவருந்துமெய்யது. (௧௨)

விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலான்
உண்டவர்பெருங்களியுறலினேதியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது. (௧௩)

ஆரியமுதலியபதினெண்பாடையிற்
பூரியரொருவழிபுகுந்தபோன்றன
ஓர்கிலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவன்றுகின்றது. (௧௪)

தானுயிருறத்தனிதழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச்செவியினேற்பது. (௧௫)

ஈறிடலரியமால்வரைநின்றீர்த்திழி
ஆறிடுவிரையகிலாரமாதியா
ஊறிடவொண்ணகருரைத்தவெண்டளச்
சேறிடுபாணியிற்றிகழுநேரது. (௧௬)

வேறு.

நவ்விநோக்கியரிதழ்நிகர்குமுதத்துநறுந்தேன்
வவ்வுமாந்தரிற்களிமயக்குறுவனமகரம்

---

10. ஒளிப்படாது - விளங்காமல்.
14. பூரியர் - இழிஞர். மிக்கோருமாம்.
16. பாணி - நீர்.
17. மகரம் - ஓர்மீன். கரண்டம் - நீர்க்காகம்.

எவ்வநீங்கியபிறப்பினோடிறப்பிவையென்னக்
கவ்வுமீனொடுமுழுகுவவெழுவனகரண்டம். (கஎ)

கவளயானையன்னாற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளேயிகிலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம். (கஅ)

பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வைகலும்புனல்குடைபவர்வானரமகளிர்
செய்கையன்னங்களேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிய. (கசு)

ஏலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துளவாமெனப்பொங்கி
ஆலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிக்
கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம். (உ0)

அங்கொர்பாகத்தினஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபரப்பக்
கங்குலும்பகலுமெனப்பொலிவெய்துகரைய
மங்கைமார்தடமுலையெனப்பொலிவனவாளம். (உக)

வலிநடத்தியவாளெனவாளைகள்பாய
நிலைநடத்தியதிரைதொறுமுருள்வனநீர்நாய்
கலிநடக்கழைக்கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும். (உஉ)

அன்னதாகியவகன்புனற்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங்கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கியதளிரியற்குருகினன்றளர்வான்
உன்னுநல்லுணர்வொடுங்கிடப்புலம்பிடலுற்றான். (உ௩)

வேறு.

வரியார்மணிக்கால்வாளமேமடவன்னங்காளைநீங்கத்
தரியாணடந்தாளில்லளேற்றளர்ந்தபோதுந்தகவேயோ

---

19. செய்கையன்னம் - அன்னப்பாவை.
20. கூலம் - கரை.
21. வாளம் - சக்ரவாளப்பறவை.
22. கழை - மூங்கில்,

எரியாநின் றவாருயிருக்கிரங்கிஞலீ திசையன்ரே
பிரியா திருந்தேற்கொருமாற்றம்பேசிற்பூசல்பெரிதாமோ. (௨௪)

வண்ண நறுந்தாமரைமலரும்வரீசக்குவளை நாண்மலரும்
புண்ணினெரியுமொருநெஞ்சம்பொதியுமருந்திற்றரும்பொய்காய்
கண்ணுமுகமுங்காட்டுவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
ஒண்ணுமென்னினஃதுதவாதுலோவிஞருமுயர்ந்தாரோ. (௨௫)

விரிந்தகுவளைசேதாம்பல்விரைமென்கமலங்கொடிவள்ளை
தரங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினையாளவயங்களவைநிற்கண்டேன்வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோவாவாவிபுரைத்தியாமன்றே. (௨௬)

ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றநீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்ருயாயிரங்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ. (௨௭)

அடையீரென்னுமொருமாற்றமறிந்ததுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோபிழையாதாற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரேநடுவிலாதார்நணியவரோ
உடையீர்பகைதானுமைநோக்கியுவக்கின்றேனைமுனிவீரோ. (௨அ)

பொன்பால்பொருவும்விரையல்லிபுல்லிப்பொலிந்தபொலந்தாது
தன்பாற்றழுவுங்குழல்வண்டுதமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரையே
என்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய
உன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ. (௨௯)

ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளோடுங்கும்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே [ய்
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்வீழிச்செவ்விக்கொழுங்கனிவா
தருவாயவ்வாயின்னமிழ்துந்தண்ணென்மொழியுந்தாராயோ. (௩௦)

அலக்கணுற்றேற்குற்றுதவற்கடைவுண்டொன்றேகொடிவள்ளாய்
மலர்க்கொம்பனையமடச்சீதைகாதேமற்றென்றில்லையால்

24. பூசல் - இரைசல்.
25. உடலோவிஞர் - உலோபகுணமுடையார்.
28. அடையீரென்னும் - கடைகாத்திருப்பவராயினும்.
29. தமிழ்ப்பாட்டு - இனிமையானபாட்டு, தமிழ் - இனிமை.

பொலக்குண்டலமுங்கொடுங்குழையும்புனைதாழ்முத்தின்பொற்
விலக்கிவந்தாய்விளம்பாதேயின்னும்பூசல்விரும்புதியோ. [றோடும்

பஞ்சுபூத்தவிரற்பதுமப்பவளம்பூத்தவடிவாளென்
நெஞ்சுபூத்ததாமரையினிலயம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலர்பூத்தகுழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்னநகுவாயென்னைநலிவாயோ. (௩௨)

வேறு.

என்றயாவுயிர்க்கின்றவனேடவிழ்
கொன்றையாவிப்புறத்திவைகூறியான்
பொன்றயாதும்புகல்கிலேபோனுமால்
வன்றயாவிலியென்னவருந்தினான். (௩௩)

வாரளித்தழைமாப்பிடிவாயிடைக்
காரளிக்கவுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினான். (௩௪)

ஆண்டவள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்ததால்
ஈண்டரும்புனறோய்ந்துன்னிசையென
நீண்டவன்கழறூழ்நெடியோயென்றான். (௩௫)

அரசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுஞ்செய்தவமுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடலைமேயினான். (௩௬)

நீத்தநீரினெடியவன்மூழ்கலும்
தீத்தகாமத்தெறுகதிர்த்தீயினால்
காய்த்திரும்பைக்கருமகக்கம்மியன்
தோய்த்ததண்புனலொத்ததத்தோயமே. (௩௭)

வேறு.

ஆடினானன்னமாயருமறைகள்பாடினான்
நீடுநீர்முன்னைநூனெறிமுறையினேமிதாள்

37. காய்த்து - காய்ச்சு, எதுகைநயநோக்கிச்சகரந்தகரமாயின்றதென்ப.
38. நேமி - ஈண்டு சந்தியாகாலத்தையுடைய சூரியனென்று பொருள்.

சூடினான்முனிவர்தந்தொகுதிசேர்சோலைவாய்
மாடுதான்வைகினானெறிகதிரும்வைகினான். (௩௮)

அந்தியாள்வந்துதானணுகவங்கணுகுறாச்
சந்தவார்கொங்கையாடனிமைதணிநாயகன்
சிந்தியாநொந்துதேய்பொழுதுதெறுசீதநீர்
இந்துவானுந்துவானெறிகதிரினானென. (௩௯)

வேறு.

பூவொடுங்கினவிரவுபுள்ளொடுங்கினபொழில்கள்
மாவொடுங்கினமரனுமிலையொடுங்கினகிளிகள்
நாவொடுங்கினமயில்கணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறுகுரலொடுங்கினகளிறு. (௪௦)

மண்டுயின்றனநிலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றனகழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடியகடறுயின்றனகளிறு. (௪௧)

பொங்குமுற்றியவுணர்வுபுணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமலமுகமெடுத்ததுகடலின்
வெங்கதிர்க்கடவுளெழவிமலன்வெந்துயரினெழ. (௪௨)

காலையேகடிதுவரவேகினார்கடல்கவினு
சோலையேமலைதழுவுகானநீணெறிதொலைய
ஆலையேய்துழனியகனாடரார்கலியமிழ்து
போலவேவுரைசெய்புனமாணைநாடுதல்புரினார். (௪௩)

ஆக திருவிருத்தம் - ௪௩.

---

## ௨-வது, மராமரப்படலம்.

எய்தினார்சவரிநெடிதேயமால்வரையெளிதின்
நொய்தினேறினரதனிலேனான்மைசேர்கவியரசு
செய்வதோர்கிலனிவர்கடெவ்வராமெனவெருவி
உய்துநாமெனவிரைவினோடினான்மலைமுழையின். (௧)

41. கழுது - பேய். 42. விமலன் - மலமில்லாதவன் இராமன்.
1. கவியரசு - சுக்ரீவன்.

காலின்மாமதலையிவர்காண்மினோகருவுடைய
வாலியேயவலின்வரவினார்கடாம்வரிசிலைபர்
நீலமால்வரையனையர்நீதியாய்நினைதியென
மூலமோர்கிலர்மறுகியோடினார்முழையதனின். (உ)

தாரனீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையைநிகர்
பாரமாமலையினொருபாகமோடுதல்புரிய
ஆரமார்பருமதனினுகுமாறுறல்கருதி. (௩)

மானைநாடுதல்புரிஞர்வாலியேயவலின்வருதல்
ஆனவாறெனமறுகியாவிசோர்நிலையர்தொடர்
ஏனைவானரர்சிலருமேகிமாமுழையின்முழு
ஞானநாதரையறிவினுடிமாருதிமொழியும். (௪)

அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமருகுதேவர்தானவர்வெருவல்
தவ்விடத்தனிதருணர்தாழ்சடைக்கடவுளென
இவ்விடத்தினிதிருமினஞ்சலென்றிடையுதவி. (௫)

அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொருமாணவப்படிவமொடு
வெஞ்சினத்தொழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையநின்றுகற்பினினினையும். (௬)

தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்கரிவரை
யாவரொப்பவருலகின்யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்பெருமைதேர்வதெக்கிழமைகொடு. (௭)

சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமரலின்
நொந்தயர்த்தனரனையர்நோவுறச்சிறியரலர்
அந்தரத்தமரரலர்மானுடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொருடேடுதற்குறுநிலையர். (௮)

---

2. மூலம் - காரணம்.

5. தவ்விடத்து - கொண்டவிடத்து.

6. மாணவப்படிவம் - பிரமசாரியுருவம்.

7. தேவர்க்கொரு தலைவராகியமுதற்றேவராவார் - அயனரியனென்பார்.

தருமமுந் தகவுமிவர் தனமெனுந் தகையரிவர்
கருமமும்பிறிதோர்பொருள்கருதியன் றதுகருதின்
அருமருந் தனைய திடையழிவுவந்துள ததனை
இருமருங்கினுநெடிது துருவுகின்றனரிவர்கள். (௯)

கதமெனும்பொருண்மையிலர்கருணையின்கடலனையர்
இதமெனும்பொருளலதோரியல்புணர்ந்திலரிவர்கள்
சதமனஞ்சுறுநிலையர் தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர்மறலியஞ்சுறுவிறலர். (௧௦)

வேறு.

என்பனபலவுமெண்ணியிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்றவுள்ளத்தனூர்வத்தோரை
முன்பிரிந்தனையர் தம்மைமுன்னினனென்னநின்றான்
தன்பெருங்குணத்தாற்றன்னிற்றனலதொப்பிலாதான். (௧௧)

தன்கன்றுகண்டவன்ன தன்மையதறுகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றுக்கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேழ்கணித்திரங்குகின்ற
என்கன்றுகின்றவெண்ணிற்பற்பலவிவரையம்மா. (௧௨)

மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிமீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வகுத்தெய்துகின்றவினமுகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர். (௧௩)

காயெரிகனலுங்கற்கள்கள்ளுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமரனொடுபுல்லுமெல்லாம்
சாய்வுறுந்தொழுவபோலிங்கிவர்களோதருமமாவார். (௧௪)

துன்பினைத்துடைத்துமாயத்தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளாநெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகுகின்றதிவர்கின்றதளவில்காதல்
அன்பினுக்கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன். (௧௫)

10. சதமன் - இந்திரன், சதமன்யு என்பது சதமனெனநின்றது.
12. கோண்மாவேங்கை - கொலையினையுடையபெரிய வேங்கை.
15. அவதி - எல்லை.

இவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனும்
எவ்வழிநீங்கியோய்நீயாரெனவியம்பலுற்றான். (கசு)

மஞ்செனத்திரண்டகோலமேனியமகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணயான்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றில்வந்தேனுமநுமனென்பேன். (கஎ)

இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையானேவவினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான். (கஅ)

மாற்றமஃதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசின்மைந்தன்
தேற்றமுற்றிவனினூங்குச்செவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறைவுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான். (கசு)

இல்லாதவுலகத்தெங்குமிங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங்காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றேபார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவல்லானோ. (உO)

மாணியாம்படிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
ஆணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற
சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன். (உக)

மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றைச்சுருதியின்றுருதியாவும்
முற்றறிதருமிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும்பேராற்றலரிதுமன்றோ. (உஉ)

எவ்வழியிருந்தான்சொன்னகவிக்குலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணுமருத்தியாலணுகவந்தேம்

---

17. காற்றின்வேந்தன் - வாயுதேவன்.
18. பரிதிச்செல்வன் செம்மல் - சூரிய குமாரனை·சுக்கிரீவன்.
20. காட்சி - அற்புதம்.
21. மாணி - பிரமசாரி. 23. அருத்தி - விருப்பம்.

இவ்வழிநின்னையுற்றவெமக்குநீயின்சொலன்ன
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான். (௨௩)

மாதிரப்பொருப்பைப்போலோங்கிவரம்பிலாவுலகின்மற்றிப்
பூதரப்புயத்துவீரர்நும்மொக்கும்புனிதர்யாரே
ஆதரித்தவனைக்காண்டற்கணுகினிரென்னினன்றன்
தீதவித்தமையச்செய்தசெய்தவச்செல்வநன்றே. (௨௪)

இரவிதன்புதல்வன்றன்னையிந்திரன்புதல்வனென்னும்
பரிவிலன்சீறப்போந்துபருவரற்கொருவனாகி
அருவியங்குன்றினென்றேயிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர்வரையினும்வளர்ந்ததோளீர். (௨௫)

ஒடுங்கலியுலகம்பாவுமுவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறந்துணிவரன்றேல்
கொடுங்குலப்பகைஞனாகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்குமதனினுநல்லதுண்டோ. (௨௬)

எம்மையேகாத்திரென்றற்கெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைந்தவாற்றல்
மும்மையேழுலகுங்காக்குமுதல்வர்நீர்முருகற்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக்கிதின்வருமுறுதியுண்டோ. (௨௭)

யாரெனவிளம்புகேனெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான்மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மாருதிவாய்மையாதும்
சோர்விலனிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான். (௨௮)

சூரியன்மரபிற்றோன்றிற்சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகியசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்னகண்ணனக்கவிகைமன்னன். (௨௯)

புயறருமதத்திண்கோட்டுப்புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணர்யாருமடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன்மனுமுதல்யாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன். (௩௰)

---

24. பூதரம் - மலை.
25. இந்திரன்புதல்வன் - வாலி. பரிவு - அன்பு.
27. இதின் - இதனினும்.

அன்னவன்சிறுவனுமிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுகானஞ்சேர்ந்தானெம்முனிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியன்யானே. (௩௧)

என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான். (௩௨)

தாழ்தலுந்தகாதசெய்ததென்னைநீதருமமன்றால்
கேள்விநான்மறைவலாளவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியேன்றானுமரிக்குலத்தொருவனென்றான். (௩௩)

மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குமுவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான் (௩௪)

கண்டிலனுலகமூன்றுங்காலினாற்கடந்துகொண்ட
புண்டரீகக்கணாழிப்புரவலன்பொலன்கொள்சோதி
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தன்றால்
பண்டைநூற்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா. (௩௫)

தாட்படாக்கமலமன்னதடங்கணான்றம்பிக்கம்மா
கீட்படாநின்றநீக்கிக்கிளர்படாதாகியென்றும்
நாட்படாமறைகளானுநவைபடாஞானத்தானும்
கோட்படாப்பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான். (௩௬)

நல்லனநிமித்தம்பெற்றேனம்பியைப்பெற்றேனம்பால்
இல்லையேதுன்பமானதின்பமுமெய்திற்றின்னும்
வில்லினாயிவனைப்போலாங்கவிகுலக்குரிசில்வீரன்
சொல்லினாலேவல்செய்வானவனிலைசொல்லற்பாற்றோ. (௩௭)

என்றகமுவந்துகோலமுகமலர்ந்தினிதினின்ற
குன்றுறழ்தோளினானைநோக்கியகுரக்குச்சீயம்

---

33. அரி - குரங்கு.
36. பதம் - பதத்திலுள்ளபொருள்.

சென்றவனறன்னையின்னே கொணர்கின்றேன் சிறிதுபோது
வென்றியிரிருத்தியென்றுவிடைபெற்றுவிரைவிற்போனான். (௩௮)

வேறு.

போனமந்தரமணிப்புயநெடும்புகழினான்
ஆனதன்பொருசினத்தரசன்மாடணுகினான்
யானுமுன்குலமுமிவ்வுலகுமுய்ந்தனமெனா
மானவன்குணமெலாநினையுமாமதியினான். (௩௯)

மேலவன்றிருமகற்குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலாவலியினானுயிர்செகுத்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனா
ஆலமுண்டவனினின்றருநடம்புரிகுவான். (௪0)

மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளார்
எண்ணுளார்திசையுளாரியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமிழ்தமேபோலுளார். (௪௧)

சூழிமால்யானையார்தொழுகழற்றயரதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படவாழ்
ஆழியான்மைந்தர்போரறிஞராகினார்
ஊழியாரெளிதினிற்கரசுதந்துதவுவார். (௪௨)

நீதியார்கருணையின்னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையாரெவரினும்பெருமையார்
போதியாதளவிலாவுணர்வினார்புகழினார்
காதிசேய்தருகடற்கடவுள்வெம்படையினார். (௪௩)

வேலிகற்சினவுதாடகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வரைக்கொன்றுதன்
காலியற்பொடியினானெடியகற்படிவமாம்
ஆலிகைக்கரியபேருருவளித்தருளினான். (௪௪)

நல்லுறுப்பமையுநம்பியரின்முன்பவனயந்
தெல்லுறுப்பரியபேரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக்கமைதிரியம்பகமெனும்
வில்லிறுத்தருளினான்மிதிலைபுக்கனையநாள். (௪௫)

---

44. சூழி - முகபடாம்.
44. ஆலிகை - அகலிகை.

உளைவயப்புரவியானுதவவுற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற்றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவிபித்தலையெழுந்தருளினான். (௪௬)

தெவ்விராவகைநெடுஞ்சிகைவிராமழுவினான்
அவ்விராமனையுமாவலிதொலைத்தருளினான்
இவ்விராகவன்வெகுண்டெழுமிராவணனையும்
வெவ்விராதனையிராவகைதுடைத்தருளினான். (௪௭)

கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடும்
சிரமுகச்சிலைகுனித்துதவுவார்திசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவார்பரமராம்
அரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினார். (௪௮)

ஆயமாநாகர்தாழாழியானையலால்
காயமானாயினான்யாவனேகாவலா
நேயமாநேர்தியானிருதமாரீசனார்
மாயமானாயினான்மாயமானாயினான். (௪௯)

உக்கவந்தமுமுடற்பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக்குரைசெயும்புரையவோ
திக்கவந்தரநெடுந்திரள்கரஞ்சினவுதோள்
அக்கவந்தனுநினைந்தமரர்தாழ்சவரிபோல். (௫௦)

முனைவரும்பிறருமேன்முடிவரும்பகலெலாம்
இனையர்வந்துறுவரென்றியறவம்புரிகுவார்
வினையெனுஞ்சிறைதுறந்துயர்பதம்விரவினார்
எனையரென்றுரைசெய்கேனிரவிதன்சிறுவனே. (௫௧)

மாயையான்மதியிலாநிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்தனனவட்டேடுவார்
நீயையாதவமிழைத்துடைமையானெடுமனம்
தூயையாவுடையையாலுறவினைத்துணிகுவார். (௫௨)

தந்திருந்தனரருட்டகைநெடும்பகைஞனும்
இந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புந்தியின்பெருமையாய்போதரென்றுரைசெய்தான்
மந்திரங்கெழுமுநூன்மரபுணர்ந்துதவுவான். (௫௩)

---

46. உளை - புறமயிர். 47. தெவ் - பகை. 49. மான் - மகான்.

அன்னவாமுறையெலாமறிவினாலுணர்குவான்
உன்னையேயுடையவெற்கரியதெப்பொருளரோ
பொன்னையேபொருவுவாய்போதெனப்போதுவான்
தன்னையேயனையவன்சரணம்வந்தணுகினான். (௫௪)

## வேறு.

கண்டனனென்பமன்னோகதிரவன்சிறுவன்காமர்
குண்டலந்துறந்தகோலவதனமுங்குளிர்க்குங்கண்ணும்
புண்டரிகங்கள்பூத்துப்புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்தமரகதக்கிரியனானை. (௫௫)

நோக்கினானெடிதுநின்றானெடிவருங்கமலத்தண்ணல்
ஆக்கியவுலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாங்குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்ததென்பான். (௫௬)

தேறினனமரர்க்கெல்லாந்தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானுடராகிமன்னோ
ஆறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானுடம்வென்றதன்றே. (௫௭)

எனநினைந்தினையவெண்ணியிவர்கின்றகாதலோதக்
கனைகடற்கரைநின்றேறக்கண்ணிணைகளிப்பநோக்கி
அனகனைக்குறுகினானவ்வண்ணலுமருத்திகூரப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப்போந்தினிதிருத்தியென்றான். (௫௮)

தவாவலியரக்கரென்னுந்தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தையநகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடுமுடுபதியிரவியொத்தார். (௫௯)

கூட்டமொத்திருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னாள்
ஈட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்தொத்தார்
வீட்டும்வாளரக்கரென்னுந்தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார். (௬௦)

---

56. குவிந்து - ஒன்றாகி.
57. தேவராந்தேவர் - தலைவராகிய பரமபதநாதர்.
59. தகா - தகுதியற்ற.

ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீவினைதீயநோற்றோரெண்ணின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலமிக்கோயை
மேயினன்விதியேநல்கின்மேவலாகாதென்னென்றான். (சுக)

மையறுதவத்தின்வந்தசவரியிம்மலையினீவந்
தெய்தினையிருந்ததன்மையியம்பினள்யாங்களுற்ற
கையறுதுயரநின்றாற்கடப்பதுகருதிவந்தோம்
ஐயநிற்றேருமென்னவரிகுலத்தரசன்சொல்வான். (சுஉ)

முரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
இருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடரவிக்குன்
றரணுடைத்தாகியுய்ந்தேனுருயிர்துறக்கலாற்றேன்
சரணுனைப்புகுந்தேனென்னைத்தாங்குதறருமமென்றான். (சுங)

என்றவக்குரக்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோக்கிமேல்வந்துறுவனதீர்ப்பலன்ன
நின்றனவெனக்குநிற்குநேரெனமொழியுநேரா. (சுச)

மற்றினியுரைப்பதென்னேவானிடைமண்ணினின்னைச்
செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீபேயின்னுயிர்த்துணைவனென்றான். (சுரு)

ஆர்த்ததுகுரக்குச்சேனையஞ்சனைச்சிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தனவனகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்குமறையினுமெய்யென்றான்னா. ()

ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைச்சிங்கம்வாழி
தூண்டிரட்டடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
ஈண்டுநுங்கோயிலெய்தியினிதினிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான். (சுஎ)

---

62. கையறுதுயரம் - பிரிதற்றுன்பம்.
63. சரண் - அடைக்கலம்.
64. நேரென - சமானமென்று.
65. செற்றவர் - சீறினோர்கொன்றோருமாம்.
66. அநகன் - பாவமில்லாதவன்.

ஏகினனிரவிசேயுமிருவருமரிகளேறும்
ஊகவெஞ்சேனைசூழவறநெறிதொடர்ந்துவந்துவாழ்க்கை
நாகமுநரந்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார். (சு௮)

ஆரமுமகிலுந்துன்றியவிர்பளிக்கறையளாவி
நாரநின்றனபோற்றோன்றிநவமலர்த்தடங்களும்
பாரமுமருங்குங்கெய்வத்தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரரமகளிருசறுவன்றியசும்மைத்தன்றே. (சுகூ)

வேறு.

அயர்வில்கேள்விசாலறிஞர்வேலைமுன்
பயில்வில்கல்வியார்பொலிவில்பான்மைபோல்
குயிலுமாமணிக்குழுவுசோதியால்
வெயிலும்வெள்ளிவெண்மதியுமேம்படா. (எ0)

ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைந்தருங்கவியின்வேந்தனும்
தூயபூவணைபொலிந்துதோன்றினார்
ஆயவன்பினோடளவளாவுவார். (எக)

கனியுங்கந்தமுங்காயுந்தூயநன்
இனியயாவையுங்கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிந்தபின்
இனிதிருந்துநல்விருந்துமாயினான். (எ௨)

விருந்துமாகியம்மெய்ம்மையன்பினோ
டிருந்துநோக்கிநின்றிறைவன்சிந்தியாப்
பொருந்துநன்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான். (எங.)

என்றவேலையினெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினான்
நின்றநீதியாய்நெடிதுகேட்டியால்
ஒன்றுநானுனக்குரைப்பதுண்டென்றே. (எச)

நாலுவேதமாநவையிலார்கவி
வேலியன்னதோர்மலையின்மேலுளான்

69. அறை - பாறை. 72. இனிதருந்தி - என்றும்பாடம்.

சூலி தன்னருட்டுறையின் முற்றினான்
வாலியென்றுளான் வரம்பிலாற்றலான். (எரு)

கழறு தேவரோ டவுணர் கண்ணினின்
றுழலு மந்தரத் துருவு தேயமுன்
அழலுங் கோளரா வகடு தேய்விடச்
சுழலும் வேலையைக் கடையுந் தோளினான். (எசு)

நிலனு நீருமாய் நெருப்புங் காற்றுமென்
றுலைவில் பூதநான் குடைய வாற்றலான்
அலையின் வேலைசூழ் கிடந்த வாழிமா
மலையினின் றுமிம் மலையின் வாவுவான். (எஎ)

கிட்டினார் பொரக் கிடைக்கி னன்னவர்
பட்ட நல்வரம் பாக மெய்துவான்
எட்டு மாதிரத் திறுதி நாளுமுற்
றட்ட மூர்த்தி தாள் பணியு மாற்றலான். (எஅ)

கால்செலாதவன் முன்னர்க் கந்தவேள்
வேல்செலாதவன் மார்பின் வென்றியான்
வால்செலாதவா யலதி ராவணன்
கோல்செலாதவன் குடை செலாதரோ. (எகூ)

மேருவே முதற் கிரிகள் வேரொடும்
பேருமேயவன் பெருமேனெடும்
காரும் வானமுங் கதிருநாகமும்
தூருமேயவன் பெரிய தோள்களால். (அ0)

பார்கிடந்த வெம்பன்றி பண்டைநாள்
நீர்கடைந்த பேராமை நேருளான்
மார்பிடந்த மாவெனினு மற்றவன்
தார்கிடந்த தோடகைய வல்லவோ. (அக)

படர்ந்த நீணெடுந் தலைபரப்பி மீ
தடர்ந்து பாரம் வந்துறவ நந்தனுங்
கிடந்து தாங்குமிக் கிரியை மேயினான்
நடந்து தாங்குமிப் புவன நாளெலாம். (அஉ)

75. சூலி - சிவபெருமான். 78. பாகம் - பாதி.
80. பேருமேல் - அசைவானால்.
81. மார்பிடந்த - இரணியன் மார்பைப்பிளந்த. மா - சிங்கம்,

கடலுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதும்
தொடரமற்றவன்சுளியினேற்றலான்
அடலின்வெற்றியாயயலினுபவோ. (அ௩)

வெள்ளமேழுபத்துளதுமேருவைத்
தள்ளலானதோளரிகடாணையான்
உள்ளமின்றியவ்வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன்வாழ்வாழுமால். (அ௪)

மழையிடிப்புறுவயவெஞ்சீயமா
முழையிடிப்புறுமுரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறுச்சார்வுறுதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால். (அ௫)

மெய்க்கொள்வாலினுன்மிடலிராவணன்
தொக்கதோளுறத்தொடர்படுத்தநாள்
புக்கிலாதவெம்பொழியரத்தநீர்
உக்கிலாதவேறுலகம்யாவதோ. (அ௬)

இந்திரன்றனிப்புதல்வனின்னளிச்
சந்திரன்றழைத்தனைய தன்மையான்
அந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவனின்மொய்ம்பினுப். (அ௭)

அன்னவன்னெனமக்கரசனுகவே
றின்னவன்னிளம்பதமியற்றுநாள்
முன்னவன்குலப்பகைஞன்முட்டினுன்
மின்னெயிற்றுவாளவுணன்மேன்மையான். (அ௮)

முட்டிநின்றவன்முரணுமத்தினோர்
ஓட்டவஞ்சிநெஞ்சுலையவோடினுன்
வட்டமண்டலத்தரிதுவாழ்வெனு
எட்டரும்பெரும்பிலனுளெய்தினுன். (அ௯)

எய்துகாலையப்பிலனுளெய்தியான்
நொய்தினங்கவற்கொணர்வெனென்மையாய்

88. இளம்பதம் - இளவரசு.
89. பிலம் - பாதாளம்.

செய்திகாவனீசிறிதுபோழ்தெனா
வெய்தினெய்தினான்வெகுளிமேயினான். (௯௦)

ஏகிவாலியுமிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்பின்வைகிடச்
சோகமெய்தினன்றுணைதுளங்கினான். (௯௧)

அழுதழுங்குறுமிவனையன்பினில்
தொழுதிரந்துநின்றொழ்லிதாதலால்
எழுதுவென்றியாயரசுசெய்கெனாப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சினான். (௯௨)

என்றுதானுமவ்வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற்றேடுவேனவந்
கொன்றுளான்றனைக்கொலவொணாதெனிற்
பொன்றுவேனெனாப்புகுதன்மேயினான். (௯௩)

தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோய்
எடுத்தவேலையோரியைவினாவியைந்
தடுத்தகாவலுமரிகளாணையால்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம். (௯௪)

அன்னநாளின்மாயாவிபப்பிலத்
தின்னவாயினூடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலாமுடனடுக்கினோம். (௯௫)

சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்தியாம்
மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவாய்
ஆவியுண்டனனவனையன்னவன். (௯௬)

ஒளித்தவன்னுயிர்க்கள்ளையுண்டுளம்
களித்தவாலியுங்கடிதினெய்தினான்
விளித்துநின்றுவேறுரைபெறானிருந்
தளித்தவாறுநன்றிளவலாவெனா. (௯௭)

---

91. இருதுவேழொடேழ் - இரண்டேகால்வருடம்.
94. அரிகளாணையால் - வானரங்களின் கட்டளையால்.
96. அவனை - அம்மாயாவியை.

மால்விசைத்துவான்வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதினெற்றலும்
நீல்நிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம். (௯௮)

ஏறினானவனெவருமஞ்சுறச்
சீறினானெடுஞ்சிகரமெய்தினான்
வேறிலாதவன்புதல்வன்மெய்ம்மைபாய்
ஆறினானும்வந்தடிவணங்கினான். (௯௯)

வணங்கியண்ணனின்வரவிலாமையான்
உணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
கிணங்கரின்மைபாலிறைவநும்முடைக்
கணங்கள்காவலுளகடன்மையென்றனர். (௧௦௦)

ஆணையஞ்சியிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநல்குவாய்
பூணுலாவுதோளிணைபொருவெனக்
கோணினானெடுங்கொடுமைகூறினான். (௧௦௧)

அடல்கடந்ததோளவனையஞ்சிவெங்
குடல்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங்கரதலங்களால்
உடல்கடைந்தனனிவனுலந்தனன். (௧௦௨)

இவனுலந்துலந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தயிலடைந்தனன்
கவனமொன்றிலான்கால்கடாவென
அவனிவேலையேழரியின்வாவினான். (௧௦௩)

என்றுகான்மகனியம்பவீசனும்
நன்றுநன்றெனாநனிதொடர்ந்துபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மருன்
அன்றுவாவுதற்கறிந்தனன்கொலாம். (௧௦௪)

---

98. எற்றலும் - அடித்தலும்.
100. இணங்கர் - சகாயிகள்.
101. கோணினான் - வணங்கினான் கோபித்தானென்றுமாம்.
104. ஈசனும் - இராமனும்.

இனையவாவியந்திளவறன்றெடும்
வனையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையான்புகறன்மேயினன். (கoரு)

நக்கரக்கடற்புறத்துநண்ணுநாள்
செக்கர்மெய்த்தனிச்சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினன். (கoசு)

பற்றியஞ்சலன்பழியின்வெஞ்சினம்
முற்றிநின்றதன்முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
தற்றமொன்றுபெற்றிவனகன்றனன். (கoஎ)

எந்தைமற்றவனையிறதுக்குமேல்
அந்தகற்குமோராரணுமில்லையால்
இந்தவெற்பின்வந்திவணிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால். (கoஅ)

உருமையென்றிவற்குரியதாரமாம்
அருமருந்தையுமவன்விரும்பினன்
இருமையுந்துறந்திவணிருந்தனன்
கருமமிங்கிதேகடவுளென்றனன். (கoகூ)

வேறு.

பொய்யிலாதவன்வரன்முறையிம்மொழிபுகல
ஐயனுயிரம்பெயருடையமலர்க்குமமலன்
வையநுங்கியவாயிதழ்துடித்ததுமலர்க்கண்
செய்யதாமரையாம்பலம்போறெனச்சிவந்த. (கக0)

திறத்துமாமறையயனுடைம்முகன்பிறர்தேடிப்
புறத்தகத்துணரரியதன்பொலனடிக்கமலம்
உறச்சிவப்பவித்தரைமிசையுறலறமாக்கல்
மறத்தைவீட்டுதலன்றியேபிறிதுமற்றுண்டோ. (ககக)

ஈரீங்கியசிற்றவைசொற்றனனென்ன
ஆரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமைப்

107. அற்றம் - மறைவு.
111. ஐம்முகன் - உருத்திரன்.

பாரமீந்தவன்பரிவிலனொருவன்றனிளையோன்
தாரம்வௌவினனென்றசொற்றரிக்குமாறுளதோ. (கக௨)

உலகமேழினோடேழும்வந்தவனுயிர்க்குதவி
விலகுமென்னினும்வில்லுடைவாளியின்வீட்டித்
தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான். (கக௩)

எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையிரைப்ப
அழுந்துதுன்பத்துக்கக்கரைகண்டனனனையான்
விழுந்ததேதயினிவாலிதன்வலியெனவிரும்பா
மொழிந்தவிரற்கிபாடெண்ணுவதுண்டெனமொழிந்தான். (கக௪)

அனையவாண்டுரைத்தனுமனேமுதலியவமைச்சர்
நினைவுங்கல்வியுநீதியுஞ்சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவரோடும்வேறிருந்தனனிரவி
தனையனவ்வழிச்சமீரணன்மகனுரைதருவான். (கக௫)

உன்னினெனினதுள்ளத்திலுள்ளத்தைபுரவோய்
அன்னவாலியைக்காலனுக்களிப்பதோராற்றல்
இன்னவீரர்பாலில்லையென்றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவைகடைப்பிடிப்பாயெனச்சொன்னான். (கக௬)

சங்குசக்கரக்குறியுளதடக்கையிற்றாளில்
எங்குமித்தனையிலக்கணம்யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத்திராமனத்திருநெடுமாலே
இங்குதித்தனனீண்டறநிறுத்துதற்கின்னும். (கக௭)

செறுக்கும்வன்றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன்றன்காலமுங்காலால்
அறுக்கும்புங்கவனுண்டபேராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ. (கக௮)

என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கடிமைசெய்தவமஃதையா

---

112. பரிவிலன் - துன்பமிலன்.
113. தலைமையோடு - அரசுரிமையுடன்.
116. ஆற்றல் - வன்மை.
118. காலம் - ஆயுள்.

உன்னையின்றவற்குறுபதமுளதெனவுரைத்தான்
இன்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய். (௧௧௯)

துன்புதோன்றியபொழுதுடன்றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவெனென்றியம்ப
அன்புசான்றெனவுரைத்தனனையவென்யாக்கை
என்புதோன்றலவுருகினவெனிற்பிறிதெவனோ. (௧௨0)

பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய்
அறிதியென்னிலுண்டோயமுமலிதருமரங்கள்
நெறியினின்றனவேழிலொன்றுருவவின்நெடியோன்
பொறிகொள்வெஞ்சரம்போவதுகாணெனப்புகன்றான். (௧௨௧)

நன்றுநன்றெனநன்னெடுங்குன்றமுநாணும்
தன்றுணைத்தனிமாருதித்தோளிணைதழுவிச்
சென்றுசெம்மலைக்குறுகியான்செப்புவதுளதால்
ஒன்றுனக்கெனவிராமனுமுரைத்தியலிதென்றான். (௧௨௨)

ஏகவேண்டுமிந்நெறியெனவினிதுகொண்டேகி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்கள்
ஆகவைந்திலொடிரண்டிலொன்றுருவநின்னம்பு
போகவேயென்றன்மனத்திடர்போமெனப்புகன்றான். (௧௨௩)

மறுவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியைபுன்னி
எறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
அறிவிலலளப்பரியவற்றருகுசென்றணைந்தான். (௧௨௪)

ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூழ்
ஆழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென்றொருவழிநின்றெனவியைந்த. (௧௨௫)

கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானும்
தலைகண்டோடுதற்கருந்தவந்தொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும். (௧௨௬)

---

121. பொறிகொள் - பெயரெழுதப்பெற்றது.
122. செம்மல் - இராமன்.

ஒக்கநாளெலாமுழல்வனவுலைவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ்செறிந்தவத்தருநிழற்சிதம்
புக்குநீங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி. (கஉஎ)

நீடுநாள்களுங்கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலரெனப்பொலிகின்றவனப்ப
ஓடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்கத்ற்றுமென்னகுறிய. (கஉஅ)

தீதரும்பெருஞ்சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தகுவனவிசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன்பளித்தவனுலகினங்கவனூர்
ஓதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ. (கஉகூ)

நாற்றமல்குபோதடைகனிகாய்முதனுறு
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டும்
காற்றலம்பினுங்கவிநெடுவானிடைக்கலந்த
ஆற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப. (கங௦)

அடியநான்மறையந்தணனண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பழைய. (கஙக)

வள்ளலிந்திரன்மைந்தற்குந்தம்பிக்கும்வயிர்த்த
உள்ளமேயெனவொன்றினொன்றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக்கிடந்தபார்சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துகீழ்போகியவேர. (கஙஉ)

சென்றுதிக்கினையளந்தனபணைகளிற்றேவர்
என்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியும்
குன்றினுக்குயர்ந்தகன்றனவொன்றினுங்குறுகா
ஒன்றினுக்கொன்றினிடைநெடிதியோசனையுடைய. (கஙங)

ஆயமாமரமனைத்தையுநோக்கினின்றமலன்
தூயவார்கணைதுரப்பதோராதரந்தோன்றச்

129. சாகை - கிளை.
130. அலம்பினும் - வீசினும்.
132. இந்திரன்மைந்தன் - வாலி. தம்பி - சுக்ரீவன்,

சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கேய்விலாதவேதோர்பயம்வரச்சிலையைநாணெறிந்தான். (கஙச)

ஒக்கநின்றதெவ்வுலகமுமங்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கினதிசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருவில். (கஙரு)

அரிந்தமன்சிலைநாணொடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கற்பத்தினிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியேயாங்குநின்றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவர்ப்புணரும். (கஙசு)

எய்தல்காண்டுங்கொலின்னமென்றரிதின்வந்தெய்திப்
பொய்யின்மாருதிமுதலினோர்புகழ்வுறும்பொழுதில்
மொய்கொள்வார்சிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாருடைவில்லியும்விட்டான். (கஙஎ)

ஏழுமாமரமுருவிக்கீழுலகமென்றிசைக்கும்
ஏழுமூடுபுக்குருவிப்பின்னுடனடுத்தியன்ற
ஏழிலாமையான்மீண்டதவ்விராகவன்பகழி
ஏழுகண்டபினுருவுமாலொழிவதன்றின்னும். (கஙஅ)

ஏழுவேலையுமுலகமேலுயர்ந்தனவேழும்
ஏழுகுன்றமுமிருடிகளெழுவரும்புரவி
ஏழுமங்கையரெழுவருநடுங்கினவென்ப
ஏழுபெற்றதோவிக்கணைக்கிலக்கமென்றெண்ணி. (கஉகூ)

அன்னதாயினுமறந்தினுக்காருயிர்த்துணைவன்
என்னுந்தன்மையைநோக்கினரியாவருமெவையும்
பொன்னின்வார்கழற்புதுநிறத்தாமரைபூண்டு
சென்னிமேற்கொளுஉவருக்கன்சேயிவையிவைசெப்பும். (கச0)

வேறு.

வையநீவானுநீமற்றுநீமலரின்மேல்
ஐயனீயாழிநீயாழிவாழமலனீ
செய்யதீவினைதெறுந்தேவுநீநாயினேன்
உய்யவந்துதவினாயுலகமுண்டுதவினாய். (கசக)

136. அரிந்தமன் - நாராயணன்.
141. ஆழி - கடல்.

என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத்துதவினார்விதியினார்
அன்னையொப்புடையவுன்னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசவென்றுரைசெய்தான்வசையிலான். (கசஉ)

ஆடினார்பாடினாரங்குமிங்குங்கலந்
தோடினாருவகையின்னறவையுண்டுணர்கிலார்
நேடினும்வாலிகாலனையெனாநெடிதுநாள்
வாடினார்தோளெலாம்வளரமற்றவரெலாம். (கசங)

அண்டமும்மகிலமும்மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும்பசைவறந்திடினும்வான்
மண்டலந்தொடுவதம்மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனானுடலரோ. (கசச)

தென்புலக்கிழவனூர்மகிடமோதிசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரமீன்
என்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவெனா
அன்புலப்பரியநீயுரைசெயாயெனவவன். (கசரு)

ஆக திருவிருத்தம் - கசரு.

---

## ங.-வது, துந்துபிப்படலம்.

துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்மீ
திந்துவைத்தொடநிமிர்ந்தநெடுமருப்பிணையினான்
மந்தரக்கிரியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருநிறத்தரியினைத்தேடுவான். (க)

அங்குவந்தரியெதிர்ந்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனக்கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான். (உ)

கடிதுசென்றவனுமக்கடலுடன்கைலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்

---

143. மற்றவர் - ஏனையவானரவீரர்.

145. தென்புலக்கிழவன் - யமன். மகிடம் - எருமைக்கடா.

1. மருப்பிணையினான் - இரண்டுகொம்புடையவன்.

நொடிதிநின்குறையெனென்றலுநுவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கெனா. (௩)

மூலமேவீரமேமூடினாயோடுபோர்
ஏலுமேதேவர்பாலேகெனாவேவினான்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாரல்போர்
வாலிபாலேகென்றுவானுமோர்வானுளான். (௪)

அன்னவன்விடவுவந்தவனும்வந்தரிகடம்
மன்னவன்வருகபோர்செய்கெனாமலையினைச்
சின்னபின்னப்படுத்தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந்தனையவன்முனைதலும். (௫)

இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரால்
மருவருந்தகையர்தானவர்கள்வானவர்கடாம். (௬)

தீயெழுந்ததுவிசும்புறநெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயநன்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளும்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால். (௭)

புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூழ்
அயலும்வீழ்தூளியாலறிவருந்தகையவாம்
மயனின்மாமகனும்வாலியுமறத்துடலினார்
இயலுமாமதியமீராறும்வந்தெய்தவே. (௮)

அற்றதாகியசெருப்புரிவுறும்மளவினிற்
கொற்றவாலியுமவன்குவவுதோள்வலியொடும்
பற்றியாசையினெடும்பணைமருப்பிணைபறித்
தெற்றினானவனும்வானிடியினின்றுரறினான். (௯)

தலையினமேலடிபடக்கடிதுசாய்நெடிதுதாள்
உலையவாய்முழைதிறந்துதிரவாறொழுகமா
மலையின்மேலுருமிடித்தென்னவான்மண்ணொடும்
குலையமாதிசைகளுஞ்செவிடுறக்குத்தினான். (௧௦)

---

5. அரிகடம்மன்னவன் - வானர அரசன்.

9. ஆசை - திக்கு.

கவரியிங்கிதுவெனக்கர தலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறும்
துவரணிந்தனவெளப்பொசிதுதைந்தனதுணைப்
பவர்நெடும்பணைமதப்பகையின்வன்கரிகளே. (௧௧)

புயல்கடந்திரவிதன்புகல்கடந்தயலுளோர்
இயலுமண்டிலமிகந்தெனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத்தவன்வலித்தெறியவன்
றுயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ. (௧௨)

முட்டிவான்முகடுசென்றனவியிம்முடையுடற்
கட்டிமால்வரையைவந்துறுதலுங்கருணையான்
இட்டசாபமுமெனக்குதவுமிவ்வியல்பினிற்
பட்டவாமுழுவதும்பரிவினுலுரைசெய்தான். (௧௩)

வேறு.

கேட்டனனமலனுங்கிளந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலேயிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல்விரலினுந்தினுன்
மீட்டதுவிரிஞ்சனுடற்றுமீண்டதே. (௧௪)

ஆக திருவிருத்தம்-௨௦௫.

---

## ௪-வது, கலன்காண்படலம்.

---

ஆயிடையரிக்குலமசனியஞ்சுற
வாய்திறந்தார்த்ததுவள்ளலோங்கிய
தூயநற்சோலையிலிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவதுண்டுநாளெனு. (௧)

இவ்வழியாமினையிருந்ததோரிடை
வெவ்வழியிராவணன்கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கிநின்றேவியேகொலாம்
கவ்வையினரற்றினள்கழிந்தசேணுளாள். (௨)

---

11. கவரி - எருமைக்கடா.
12. புகல் - இருப்பிடம்.
2. கவ்வை - ஓசை.

உழையரினுணர்த்துவதுளதென்றுன்னியோ
குழைபொருகண்ணினுள்குறித்ததோர்ந்திலம்
மழைபொருகண்ணிணைவாரியோடுதன்
இழைபொதிந்திட்டனள்யாங்களேற்றனம். (௬)

வைத்தனமிவ்வழிவள்ளநின்வயின்
உய்த்தனதந்தபோதுணர்தியாலெனுக்
கைத்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டினன்
நெய்த்தலைப்பால்கலந்தனையநேயத்தான். (௭)

தெரிவுறநோக்கினன்தெரிவைமெய்யணி
எரிகனலெய்தியமெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கிலமுயிருக்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம். (௮)

நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
அல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே. (௯)

விட்டபேருணர்வினைவிளித்தவென்கெனோ
அட்டனவுயிரையவ்வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக்குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோயாதுசொல்லுகேன். (௰)

மோந்திடநறுமலரானமொய்ம்பினின்
ஏந்திடவுத்தரியத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலால்
பூந்துகிலாயவப்பூவைபூண்களே. (௧௧)

ஈர்த்தனசெங்கணீர்வெள்ளம்யாவையும்
போர்த்தனமயிர்ப்புறம்புளகம்பொங்குதோள்
வேர்த்தனவென்கெனோவெதும்பினனென்கோ
தீர்த்தனையவ்வழியாதுசெப்புகேன். (௧௨)

விடங்கரந்தனையதோர்வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்வினோடுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத்தாங்கினன்றன
துடம்பினிற்செறிமயிர்சுறுக்கென்றேறவே. (௧௩)

3. குழை - காதணி.

தாங்கினனிருந்தியத்துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சினனிரங்கிவிம்முவான்
வீங்கியதோளினாய்வினையினேனுயிர்
வாங்கினெனிவ்வணிவருவித்தேனென. (கக)

அயனுடையண்டத்தினப்புறத்தையும்
மயர்வறநாடியென்வலியுங்காட்டியுன்
உயர்புகழ்த்தேவியையுதவற்பாலனால்
துயருழன்றயர்தியோசுருதிநூல்வலாய். (கஉ)

திருமகளனையவத்தெய்வக்கற்பினாள்
வெருவரச்செய்தவவெய்யவன்புயம்
இருபதுமீரைந்துதலையுமேவினுன்
ஒருகணைக்காற்றுமோவுலகமேழுமே. (கங)

ஈண்டுநீயிருந்தருளேழொடேழனைப்
பூண்டபேருலகங்கள்வலியிற்புக்கிடை
தேண்டியவ்வரக்கனைத்திருகித்தேவியைக்
காண்டியானிவ்வழிக்கொணருங்கைப்பணி. (கச)

ஏவல்செய்துணைவரேம்யாங்களீங்கிவன்
தாவரும்பெருவலித்தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற்சிறுகநோக்கியென்
மூவகையுலகுநின்மொழியின்முந்துமோ. (கரு)

பெருமையோராயினும்பெருமைபேசிலார்
கருமமேயல்லதுபிறிதென்கண்டது
தருமநீயல்லதுதனித்துவேறுண்டோ
அருமையேதுனக்குநின்றவலங்கூர்தியோ. (கசு)

முளரிமேல்வைகுவான்முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான்றடக்கையாழியான்
அளவியொன்றுவரேயன்றியையமில்
கிளவியர்தனித்தனிக்கிடைப்பரோதுணை. (கஎ)

என்னுடைச்சிறுகுறைமுடித்தலீண்டொரீஇப்
பின்னுடைத்தாயினுமாகப்பேதுறு

11. வினையினேன் - பாவியாகிய யான்.
15. தாவரும் - கெடுதலற்ற.
17. துணை - உனக்கொப்பு.

மின்னிடைச்சனகியைமீட்டுமீடுமால்
பொன்னுடைச்சிலையினாய்விரைந்துபோயென்றான். (கஅ)

எரிகதிர்க்காதலனினையகூறலும்
அருவியங்கண்டிறந்தன்பினோக்கினான்
திருவுறைமார்பனுந்தெளிவுதோன்றிட
ஒருவகையுணர்வுவந்துரைப்பதாயினான். (ககூ)

விலங்கெழிற்றோளினாய்வினையினேனுமிவ்
விலங்குவிற்கரத்தினுமிருக்கவேயவள்
கலன்கழித்தனளிதுகற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர்புரிந்துளோர்கள்யார். (உ0)

வாணெடுங்கன்னியென்வரவுநோக்கயான்
தாணெடுங்கிரியொடுந்தடங்கடம்மொடும்
பூணொடும்புலம்பியிப்பொழுதுபோக்கினேன்
நாணெடுஞ்சிலைசுமந்துழலநாணிலேன். (உக)

ஆறுடன்செல்பவரஞ்சொன்மாதரை
வேறுளார்துயர்செயில்விலக்கிவெஞ்சமத்
தூறுறத்தம்முயிருகுப்பரென்பதும்
தேறினன்றுயரநான்றீர்க்ககிற்றிலேன். (உஉ)

கருங்கடற்றொட்டனர்கங்கைதந்தனர்
பொரும்புலிமானொடும்புனலுமூட்டினர்
பெருந்தகையென்குலத்தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான்றீர்க்கநோற்றிலேன். (உங)

இந்திரற்குரியதோரிடுக்கண்டீர்த்திகல்
அந்தகற்கரியபோரவுணற்றேய்த்தனன்
எந்தைமற்றவனின்வந்துதித்தயானுளேன்
வெந்துயர்க்கொடும்பழிவில்லிற்றாங்கினேன். (உச)

விரும்பெழிலெந்தையார்மெய்ம்மைவீயுமேல்
வரும்பழியென்றலான்மகுடஞ்சூடலேன்
கரும்பழிசொல்லியைப்பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன்பிழைத்ததென்னரோ. (உரு)

---

19. எரிகதிர் - சூரியன். காதலன் - மகன்.
20. இலங்குவிற்கரத்தனும் என்றும் பாடம்.
22. தேறி - உணர்ந்து.
24. போரவுணன் - போர்புரிந்த சம்பராசுரன்.
25. கரும்பழி - கரும்பினை இனிமையில்லாததாகச் செய்கின்ற.

என்னநொந்தின்னனபன்னியீடழிந்
துன்னருந்துயரத்துச்சோர்கின்ருன்றனைப்
பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினுன். (உ௫)

ஐயநீயாற்றலினுற்றினேனல
துய்வனேயெனக்கிதினுறுதிவேறுண்டோ
வையகத்திப்பழிதீரமாய்வது
செய்வனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன். (உ௬)

என்றனனிராகவனினையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினுனெடுங்
குன்றிவர்தோளிஞய்கூறவேண்டுவ
தொன்றுளததனைநீயுணர்ந்துகேளெனு. (உ௭)

கொடுந்தொழில்வாலியைக்கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டிலினுலன்றிநேடரி
தடும்படையரக்கர்தமிருக்கையாணையாய். (உ௮)

வானதோமண்ணதோமாறுவெற்பதோ
ஏனைமாநாகர்தமிருக்கைப்பாலதோ
தேனுளதெரியலாய்தெரிவதன்றவர்
ஊர்நமக்குற்றுழியுறுதலுண்மையால். (உ௯)

எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுரைவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தெனவருவர்மீள்வரால்
அவ்வவருறைவிடமறியற்பாலவோ. (௩0)

ஒருமுறையேபரந்துலகம்யாவையும்
திருமகளுறைவிடந்தேரவேண்டுமால்
வரன்முறைநாடிடவரம்பின்றுலல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால். (௩௧)

ஏழுபத்தாகியவெள்ளத்தெம்படை
ஊழியிற்கடலெனவுலகம்போர்க்குமால்
ஆழியைக்குடிப்பினுமயன்செயண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால். (௩௨)

25. ஈடழிந்து - நிலைகெட்டு.

ஆதலாலன்னதேயமைவதாமெனா
நீதியாய்நினைந்தனெனென்னநிகழ்த்தினான்
சாதுவாமென்றவத்தனுவின்செல்வனும்
போதுநாம்வாலிபாலென்னப்போயினார். (௩௩)

வேறு.

வெங்கணாளியேறுமீளிமாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந்திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார்தமாலமேலமாலைபோல்
பொங்குநாகமுந்துவன்றசாரலூடுபோயினார். (௩௪)

உழைபுலாநெடுங்கண்மாதரூசலாசலல்லவேல்
தழைபுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவேல்
மழைபுலாவுமுன்றிலல்லமன்றலுறுசண்பகக்
குழைபுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே. (௩௫)

அறங்கணாறுமேனியாரரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோசையால்
கறங்குவார்கழற்கலன்கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே. (௩௬)

நீடுநாகமூடுமேகமோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமானயானையோடவாளிபோம்
மாடுநாகநீடுசாரல்வாளையோடும்வாவியூ
டோடுநாகமோடவேங்கையோடும்யூகமோடவே. (௩௭)

மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவவல்லமால்
தெருண்டிலாமதத்தயானைசீறிநின்றுசிந்தலால்
இருண்டகாழகிற்றடத்தொடிற்றுலர்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததேனொழுக்குபேரிழுக்கினே. (௩௮)

மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துமண்குலாய்
அனல்பரப்பவொப்பமீதிமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவொப்பிருந்தபொன்பரப்புமென்பரால்
இனையவிற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே. (௩௯)

---

35. ஊசலல்லவேல் - ஊசல், ஊசலல்லாதன.
37. யூகம் - கருங்குரங்கு.
38. இழுக்கு - வழுக்கல்.
39. மினன்மணி - ஒளிவிடுமணி.

மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றினொன்றினைபாயுமேனலிற்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம். (௪0)

தேனிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்லநாள்
மீனிழுக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பரால்
வானிழுக்குமேலவாசமன்றனாறுகுன்றமே. (௪௧)

அன்னதாயகுன்றினாறுசென்றவீரரைந்தொடைந்
துன்னலாயயோசனைக்கும்பரேறியிம்பரில்
பொன்னினாடிழிந்ததன்னவாலிவாழ்பொருப்பிடம்
துன்னினார்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார். (௪௨)

ஆ திருவிருத்தம் - ௨௯௫.

---

## ௫-வது, வாலிவதைப்படலம்.

அவ்விடத்திராமனீயழைத்துவாலியானதோர்
வெவ்விடத்தின்வந்துபோர்விளைக்குமேல்வைவேறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்ததென்கருத்திதென்றனன்
தெவ்வடக்கும்வென்றியானுநன்றிதென்றுசிந்தியா. (௧)

வார்த்தையன்னதாகவானிபங்குகதிரோன்மகன்
நீர்த்தரங்கவேலையஞ்சநீலமேகநாணநேர்
வேர்த்துமண்ணுளோரிரிந்துவிண்ணுளோர்கள்விம்மமேல்
ஆர்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே. (௨)

இடித்துரப்பிவந்துபோரெதிர்த்தியேலடர்ப்பனென்
றடித்தலங்கள்கொட்டிவாய்மடித்தடுத்தலங்குதோள்
புடைத்துநின்றுளைத்தபூசல்புக்கதென்பமிக்கிடந்
துடிப்பவங்குறங்குவாலிதிண்செவித்தொளைக்கணே. (௩)

41. நாள்மீன் - நட்சத்திரம்.

42. பொன்னினாடிழிந்ததன்ன - சுவர்க்கமேவந்திருந்தாற்போன்ற.

1. ஏவிடஎன்பது - எவ்விடவென்றாயது. எல்லை - சமையம். தெவ் - பகை.

## வேறு.

மாற்பெருங்கடகரிமுழக்கம்வாளரி
ஏற்பதுசெவித்தலத்தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டனனமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததேயனையபான்மையான். (௪)

உருத்தனன்பொரவெதிர்ந்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினான்மனத்தினெண்ணினான்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
திரித்ததவ்வுலகமோரேழொடேழையே. (௫)

எழுந்தனன்வல்லிரைந்திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையான்
அழுந்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே. (௬)

போய்ப்பொடித்தனமயிர்ப்புறத்தவெம்பொறி
காய்ப்பொடுற்றெழுவடகனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினும்
மீப்பொடித்தனபுகையுயிர்ப்புவீங்கவே. (௭)

கைக்கொடுகைத்தலம்புடைப்பக்காவலின்
திக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
உக்கனவுருமினமுலைந்தவும்பரும்
நெக்கனநெரிந்தனநின்றகுன்றமே. (௮)

வந்தனென்வந்தனனென்றவாசகம்
இந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன
சந்திரன்முதலியதாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிசிகரந்தீண்டவே. (௯)

வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றனவண்டப்பித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன்குலைந்ததும்பரே. (௧௦)

---

4. மால் - மயக்கம்.
5. இரித்தது - அசைந்து விலக்கச்செய்தது.
9. இந்திரி - கிழக்கு.

கடித்தவாயெயிறுகுகனல்கள்கார்விசும்
பிடித்தவாயுருமுகுமினத்திற்சிந்தின
தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின்வயங்குகாசரோ. (௧௧)

ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரும்
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றான்கடை
ஆலமுமொத்தனனெனவருமஞ்சவே. (௧௨)

ஆயிடைத்தாரையென்றமிழ்திற்றோன்றிய
வேயிடைத்தோளினாளிடைவிலக்கினாள்
வாயிடைப்புகைவரவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (௧௩)

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டென
உலக்கவின்னுயிர்குடித்தொல்லைமீள்குவல்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (௧௪)

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றையனல்லனீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (௧௫)

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றவைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (௧௬)

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரன்றுணெதிர்தருக்கின்வாங்குநர்
இந்திரன்முதலியவமரரேனையோர். (௧௭)

பெயர்வுறவலிக்கவுமிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றதைநோக்கியானது

---

11. தடித்து - மின்னல். 15. ஈடுண்டேகுவான் - தோற்றோடுபவன்.
17. வாங்குநர் - கடைவோர். 18. மிடுக்கு - சாமர்த்தியம்.

தயிரெனக்கடைந்தவர்க்கமுதந்தந்ததும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (௧௮)

ஆற்றினெனமரருமவுணர்யாவரும்
தோற்றனரெனைபவர்சொல்லற்பாலதோ
கூற்றுமென்பெயர்சொலக்குலையுமாரினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர். (௧௯)

பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
ஊதியவரங்களுமுரமுமுள்ளதிற்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினான். (௨௰)

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவன்
உன்னுயிர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினாரென்றாள். (௨௧)

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கிலா
தழைத்தயருலகினுக்கறத்தினாறெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான். (௨௨)

இருமையுநோக்குறுமியல்பினாற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்குமாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (௨௩)

ஏற்றபேருலகெலாமெய்தியீன்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (௨௪)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனோ. (௨௫)

---

22. அறத்தினாறெலாம் இழைத்தவற்கு - தருமமார்க்கமனைத்துஞ்செய்த இராமற்கு.
23. ஆறுடை - வழியினையுடைய.

தம்பியரல்லது தனக்குவேறுயிர்
இம்பரினிலதெனவெண்ணியேய்ந்தவன்
எம்பியும்யானுமுற்றெதிர்ந்தபோரிடை
அம்பிடைதொடுக்குமோவருளினாழியான். (உ௬)

இருத்திநீயிறையிவணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடித்துடன்வந்தாரையும்
கருத்தழித்தெய்துவென்கலங்கலென்றனன்
விரைக்குழல்பின்னுரைவிளம்பவஞ்சினாள். (உ௭)

வேறு.

ஒல்லைச்செருவேட்டுயர்வல்புயவோங்கலும்பர்
எல்லைக்குமப்பாலிவர்கின்றவிபண்டிநேடும்
மல்லற்கிரியின்றலைவந்தனன்வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின்றலைதோற்றியஞாயிறென்ன. (உ௮)

நின்றானெதிர்யாவருநெஞ்சுநடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற்றகைமால்வரைசாலும்வாலி
குன்றாடுவந்துற்றனன்கோளவுணன்குறித்த
வன்றூணிடைத்தோன்றியமாநரசிங்கமென்ன. (உ௯)

ஆர்க்கின்றபின்னோன்றனைநோக்கினன்றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத்துருமேறுவெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லாவுலகும்பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னானிலந்தாவியகாலினன்ன. (௩0)

அவ்வேலையிராமனுமன்புடைத்தம்பிக்கைய
செவ்வேசெலநோக்குதிதானவர்தேவர்நிற்க
எவ்வேலையெம்மேகமெக்காலொடெக்காலவெந்தீ
வெவ்வேறுலகத்திவர்மேனியைமானுமென்றான். (௩௧)

வள்ளற்கிளையான்பகர்வானிவன்றம்முன்வாணாள்
கொள்ளக்கொடுங்கூற்றுவனைக்கொணர்ந்தான்குரங்கின்
எள்ளற்கருபோரைதிசைகலனென்னுமின்னல்
உள்ளத்தினூன்றவுணர்வுற்றிலதென்றுமென்றான். (௩௨)

ஆற்றாதுபின்னும்பகர்வானறத்தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார்களைத்தேறுதல்செவ்விதன்றால்

29. கோளவுணன் - கொலைத்தொழிலினையுடைய இரணியன்.

மாற்றானெனத்தம்முனைக்கொல்லியவந்துநின்றான்
வேற்றார்கடிறத்திவன்றஞ்சமென்வீரவென்றான். (௩௩)

அத்தாவிதுகேளெனவாரியன்கூறுவானிப்
பித்தாயவிலங்கினொழுக்கினைப்பேசலாமோ
எத்தாயர்வயிற்றினும்பின்பிறந்தார்களெல்லாம்
ஒத்தாற்பரதன்பெரிதுத்தமனாதலுண்டோ. (௩௪)

விற்றாங்குவெற்பன்னவிலங்கெழிற்றோளமெய்ம்மை
உற்றார்சிலரல்லவரேபலரென்பதுண்மை
பெற்றாருழைப்பெற்றபயன்பெறும்பெற்றியல்லால்
அற்றார்நவையென்றலுக்காகுநரார்கொலென்றான். (௩௫)

வீரத்திறலோரிவையின்னவிளம்பும்வேலை
தேரிற்றிரிவான்மகனிந்திரன்செம்மலென்றிப்
பாரிற்றிரியும்பனிமால்வரையன்னபண்பார்
மூரித்திசையானையிரண்டெனமுட்டினாரே. (௩௬)

குன்றோடுகுன்றொத்தனர்கோளரிக்கொற்றவல்லே
றொன்றோடுசென்றொன்றெதிருற்றனவேயுமொத்தார்
நின்றார்திரிந்தார்நெடுஞ்சாரிநிலந்திரிந்த
வன்றோட்குயவன்றிணிமட்கலத்தாழியென்ன. (௩௭)

தோளோடுதோடேய்த்தலிற்றொன்னிலந்தாங்கலாற்றாத்
தாளோடுதாடேய்த்தலிற்றந்தழற்பிறங்கல்
வாளோடுமின்னோடுவெபோனெடுவானினோடும்
கோளோடுகோளுற்றனவொத்தடர்ந்தார்கொதித்தார். (௩௮)

தந்தோள்வலிமிக்கவர்தம்மொருதாய்வயிற்றின்
வந்தோர்மடமங்கைபொருட்டுமலைக்கலுற்றார்
சிந்தோடரியொண்கட்டிலோத்தமைகாதல்செற்ற
சுந்தோபசுந்தப்பெயர்த்தொல்லையினோருமொத்தார். (௩௯)

கடலொன்றினொடொன்றுமலைக்கவுங்காவன்மேருத்
திடலொன்றினொடொன்றமர்செய்யவுஞ்சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகியுடற்றவுங்கண்டிலேநேர்
மிடலிங்கவர்வெந்தொழிற்கொப்புரைவேறுகாணேம். (௪௦)

---

38. பிறங்கல் - மலை.

39. சிந்தோடு - கடலும்பின்னிடுகின்ற.

ஊகங்களினாயகர்வெங்கணுமிழ்ந்ததீயான்
மேகங்களெரிந்தனவெற்புமெரிந்ததிக்கின்
நாகங்கணடுங்கினநானிலமுங்குலைந்த
மாகங்களைநண்ணியவிண்ணவர்போய்மறைந்தார். (௪௧)

விண்மேலினரோநெடுவெற்பின்முகட்டினாரோ
மண்மேலினரோபுறமாதிரவீதியாரோ
கண்மேலினரோவெனயாவருங்காணநின்றார்
புண்மேலிரத்தம்பொடிப்பக்கடிப்பார்புடைப்பார். (௪௨)

ஏழொத்துடனாந்திசையெட்டொடிரண்டுமுட்டும்
ஆழிக்கிளரார்கலிக்கைம்மடங்கார்ப்பினோசை
பாழித்தடந்தோளினுமார்பினுங்கைகள்பாய
ஊழிக்கிளர்காரிடியொத்ததுகுத்துமோதை. (௪௩)

வெவ்வாயெயிற்றான்மிடல்வீரர்கடிப்பமேச்சென்
றவ்வாயெழுசோரியதாரைகடோறும்வீச
எவ்வாயுமெழுந்தகொழுஞ்சுடர்மீன்கள்யாவும்
செவ்வாயைநிகர்த்தனசெக்கரையொத்தமேகம். (௪௪)

வேறு.

வெந்தவல்லிரும்பிடைநெடுங்கூடங்கள்வீழ்ப்பச்
சிந்தியெங்கணாஞ்சிதறுவபோற்பொறிதெறிப்ப
இந்திரன்மகன்புயங்களுமிரவிசேயுரனும்
சந்தவன்னெடுந்தடக்கைகடாக்கலிற்றகர்வ. (௪௫)

உரத்தினான்மடுத்துந்துவர்பாதமிட்டுதைப்பர்
கரத்தினால்விசைத்தெற்றுவர்கடிப்பர்நின்றிடிப்பர்
மரத்தினாலடித்துரப்புவர்பொருப்பினம்வாங்கிச்
சிரத்தின்மேலெறிந்துறுக்குவர்தெழிப்பர்தீவிழிப்பர். (௪௬)

எடுப்பர்பற்றியுற்றொருவரையொருவர்விட்டெறிவர்
கொடுப்பர்வந்துரங்குத்துவர்கைத்தலங்குளிப்பக்
கடுப்பினிற்பெருங்கறங்கெனச்சாரிகைபிறங்கத்
தடுப்பர்பின்றுவரொன்றுவர்தழுவுவர்விழுவர். (௪௭)

வாலினாலுரம்வரிந்தனர்நெறிந்துகவலிப்பர்
காலினானெடுங்கால்பிடித்துடற்றுவர்கழல்வர்

43. ஐம்மடங்கு - ஐந்துபங்கு.
45. கூடங்கள் - சம்மட்டிகள்.

வேலினாலறவெறிந்தனவிறல்வலியுகிரால்
தோளினாலுடனெடுவரைமுழையெனத்தொளைப்பர். (௪௮)

மண்ணகத்தனமலைகளுமரங்களுமற்றும்
கண்ணகத்தினிற்றோன்றியயாவையுங்கையால்
எண்ணகப்பறித்தெறிதலினெற்றலினிற்ற
விண்ணகத்தினைமறைத்தனமறிகடல்வீழ்ந்த. (௪௯)

வெருவிச்சாய்ந்தனர்விண்ணவர்வேறென்னைவிளம்பின்
ஒருவர்க்காண்டமரொருவருந்தோற்றிலநடன்று
செருவிற்றுப்பத்தலிற்செங்கனல்வெண்மயிர்செல்ல
முரிபுற்கானிடையெரிபரந்தனவெனமுனைவார். (௫௦)

அன்னதன்மைபற்றலினமர்புரிபொழுதின்
வன்னெடுந்தடந்திரள்புயத்தடுதிறல்வாலி
சொன்னதம்பியைத்தும்பியையரிதொலைத்தென்ன
கொன்னகங்களிற்கரங்களிற்குலைந்துகமலைந்தான். (௫௧)

மலைந்தபோதினைந்திரவிசேயையன்மாடணுகி
உலைந்தசிந்தைபோனிணங்கினன்வணங்கிடவுள்ளம்
குலைந்திடேலுமைவேற்றுமைதெரிந்திலங்கொப்பூ
மிலைந்துசெல்கெனவிடுத்தனனெதிர்த்தனன்மீட்டும். (௫௨)

தயங்குதாரகைநிரைதொடுத்தணிந்தனபோல
வயங்குசென்னியன்வயப்புலியானவல்லேற்றோ
டியங்குமார்பினைநெல்லைவக்கடுதிறல்வாலி
பயங்கொளப்புடைத்தெற்றினன்குத்தினன்பலகால். (௫௩)

அயிர்த்தசிந்தையனந்தகன்குலைகுலைந்தஞ்சச்
செயிர்த்துநோக்கினன்சினத்தொடுசிறுநகைசெய்யா
வயிர்த்தகையினுங்காலினுங்கதிர்மகன்மயங்க
உயிர்த்தலந்தொறும்புடைத்தனனடித்தனனுதைத்தான். (௫௪)

கக்கினானிருயிர்ப்பொடுஞ்செவிகளிற்கண்ணின்
உக்கதாங்கெரிப்படலையோடுதிரத்தினொழுக்கம்
திக்குநோக்கினன்செங்கதிரோன்மகன்செருக்கிப்
புக்குமீக்கொடுநெருக்கினனிந்திரன்புதல்வன். (௫௫)

48. உகிரால் - நகத்தால்.
51. தும்பியை - யானையை.
52. இனைந்து - வருந்தி. 54. அயிர்த்த - சந்தேகித்த.

எடுத்துப்பாரிடையெற்றுவாம்பற்றியென்றிளவல்
கடித்தலத்தினுங்கழுத்தினுந்தன்னிருகரங்கள்
மடுத்துமீக்கொண்டவாலிமேற்கோலொன்றுவாங்கித்
தொடுத்துநாணொடுதோளிறுத்திராகவன்றுரந்தான். (ருசு)

காரும்வார்சுவைக்கதலியின்கனியினைக்கழியச்
சேருஞ்சூசியிற்சென்றதுநின்றதென்செப்பின்
நீருநீர்தருநெருப்பும்வன்காற்றுங்கீழ்நிமிர்ந்த
பாருஞ்சார்வலிபடைத்தவனுரத்தையப்பகழி. (ருஎ)

அலங்குதோள்வலியழிந்தனன்றம்பியையருளான்
வலங்கொள்பாரிடையெற்றுவானுற்றபோர்வாலி
கலங்கிவல்விசைக்கால்கிளர்ந்தெறிவுறக்கடைக்கால்
விலங்கன்மேருவும்வேர்பறிந்தாமெனவீழ்ந்தான். (ருஅ)

சையம்வேரொடுமுருமுறச்சாய்ந்தெனச்சாய்ந்தான்
வையமீதிடைக்கிடந்தபோதுந்திறல்வாலி
வெய்யவன்றருமதலையைமிடல்கொடுகவரும்
கைநெகிழ்ந்தனனெகிழ்ந்திலன்கடுங்கணைகவர்தல். (ருகூ)

வெற்றிவீரனதடுகணையவன்மிடலுரத்தூ
டுற்றதப்புறத்துருவமுனுறுவலிக்கரத்தால்
பற்றிவாலினுங்காலினும்பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடுமறலியுஞ்சிரதலங்குலைந்தான். (சுo)

எழுந்துவான்முகடிடித்துகப்படுப்பலென்றிவரும்
உழுந்துபேர்வுறிஇத்திசைதிரிந்திடுப்பலென்றுறுக்கும்
விழுந்துபாரினைவேரொடும்பறிப்பலென்றேரும்
அழுந்துமிச்சரமெய்தவனார்கொலென்றயிர்க்கும். (சுக)

மற்றுங்கையினிலத்தொடுமெரிப்பொறிபறப்பச்
சுற்றுநோக்குறுஞ்சுடுசரத்தைத்துணைக்கரத்தால்
பற்றிவாலினுங்காலினும்வலியுறப்பறிப்பான்
உற்றுறாமையினுலைவுறுமலையெனவுருதேம். (சுஉ)

தேவரோவெனவயிர்க்குமத்தேவரிச்செயலுக்
காவரோவவர்க்காற்றலுண்டோவெனுமயலோர்

56. கடித்தலம் - இடுப்பினிடம். 60. மறலி - யமன்.
58. அருளான் - காவானாய். 62. உற்றுறாமையின்-முயன்றுமுடியாமையின்.

யாவரோவெனநகைசெயுமொருவனையிறைவர்
மூவரோடுமொப்பான்செயலாமெனமொழியும். (௬௩)

நேமிதான்கொலோநீலகண்டன்னெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோவன்றெனிற்குன்றுருவயிலும்
நாமவிந்திரன்வச்சிரப்படையுமென்னடுவெட்
போமெனுந்துணைபோதுமோயாதெனப்புழுங்கும். (௬௪)

வில்லினாற்றுரப்பரிதிவ்வெஞ்சரமெனவியக்கும்
சொல்லினானெடுமுனிவரோதாண்டினானென்னும்
பல்லினாற்கடிப்புறும்பலகாலுந்தன்னுரத்தைக்
கல்லியார்ப்பொடுபறிக்குமப்பகழியைக்கண்டான். (௬௫)

சரமெனும்படிதெரிந்ததுபலபடச்சலித்தென்
உரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்றைக்
கரமிரண்டினும்வாலினுங்காலினுங்கழற்றிப்
பரமனின்னவன்பெயரறிகுவெனெனப்பறிப்பான். (௬௬)

ஓங்கருங்பெருந்திறலுடைமனத்தனுள்ளத்தன்
வாங்கினான்மற்றவ்வாளியையாளிபோல்வாலி
ஆங்குநோக்கினரமரருமவுணரும்பிறரும்
வீங்கினார்கடோள்வீரரையார்வியவாதார். (௬௭)

மோடுதெண்டிரைமுரிதருகடலெனமுழங்கி
ஈடுபேருலகிறந்துளதாமெனற்கெளிதோ
காடுமாநெடுவிலங்கல்கள்கடந்ததக்கடலின்
ஊடுபோதலுற்றதனையொத்துயர்ந்துளதுதிரம். (௬௮)

வாசத்தாரவன்மார்பெனுமலைவழங்கருவி
ஓசைச்சோரியைநோக்கினனுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப்புண்டவத்தம்பியும்பசுங்கண்
நேசத்தாரைகள்சொரிதரநெடுநிலஞ்சேர்ந்தான். (௬௯)

பறித்தவாளியைப்பரூஉவலித்தடக்கையாற்பற்றி
இறுப்பனென்றுகொண்டெழுந்தனன்மேருவையிறுப்போன்
முறிப்பனென்னினுமுறிவதன்றாமெனமொழியாப்
பொறித்தநாமத்தையறிகுவானோக்கினன்புகழோன். (௭௦)

---

64. துணைபோதுமோ - கூர்போதுமானதோ.

வேறு.

மும்மைசா லுலகுக்கெல்லாமூலமந்திரத்தைமுற்றும்
தம்மையே தமக்குநல்குந் தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேயெழுமைநோய்க்குமருந்தினையிராமனென்னும்
செம்மைசேர்நாமந்தன்னைக்கண்களிற்றெரியக்கண்டான். (எக)

இல்லறந்துறந்தநம்பியெம்மனோர்க்காகத்தங்கள்
வில்லறந்துறந்தவீரன்றோன்றலால்வேதநூலிற்
சொல்லறந்துறந்திலாதசூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னாநகைவரநாணுட்கொண்டான். (எஉ)

வெள்கிடமகுடஞ்சாய்க்கும்வெடிபடச்சிரிக்குமீட்டும்
உள்கிடுமிதுவுந்தானோரோங்கமோவென்றுன்னும்
முள்கிடுங்குழியிற்புக்கமூரிவெங்களிநல்யானை
தோள்கொடுங்கிடந்ததென்னத்துயருழன்றழிந்துசோர்வான். ()

இறைதிறம்பினனேலென்னேயிழிந்துளோரியற்கையென்னின்
முறைதிறம்பினனேலென்றுமொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மைமன்னர்க்குமுன்னஞ்சொல்லும்
துறைதிறம்பாமற்காக்கத்தோன்றினான்வந்துதோன்ற. (எச)

கண்ணுற்றான்வாலிநீலக்கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்திவருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரிப்பொறியொடும்பொடிப்பநோக்கி
எண்ணுற்றாயென்செய்தாயென்றேசுவானியம்பலுற்றான். (எரு)

வாய்மையுமரபுங்காத்துமன்னுயிர்துறந்தவள்ளல்
தூயவன்மைந்தனேநீபரதன்முன்றோன்றினாயே
தீமைதான்பிறரைக்காத்துத்தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந்தருமமுந்தழுவிநின்றாய். (எசு)

குலமிதுகல்வியீதுகொற்றமீதுற்றுநின்ற
நலமிதுபுவனமூன்றுநாயகமுன்னதன்றோ
வலமிதிவ்வுலகந்தாங்கும்வண்மையீதென்றாற்றிண்மை
அலமரச்செய்யலாமோவறிந்திருந்தயர்ந்துளார்போல். (எஎ)

---

71. மூலமந்திரம் - தாரகமந்திரம்.
74. முறை - நீதி.
77. அயர்ந்துளார் - மறந்தார்,

கோவியற்றருமமுங்கள்குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச்சனகன்பெற்றவன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத்திகைத்தனைபோலுஞ்செய்கை. (எஅ)

அரக்கரோரழிவுசெய்துகழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்லமனுநெறிகூறிற்றுண்டோ
இரக்கமெங்குகுத்தாயென்பாலெப்பிழைகண்டாயப்பா
பரக்கழியிதுநீபூண்டாற்புகழையார்பரிக்கற்பாலார். (எகூ)

ஒலிகடலுலகந்தன்னிலூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்துபரந்ததோகருணைவள்ளால்
மெலியவர்பாலதேயோவொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவர்மெலிவுசெய்தாற்புகழன்றிவசையுமுண்டோ. (அ0)

கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றவபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கேதம்பிக்குக்கொடுத்துபோந்து
நாட்டொருகருமஞ்செய்தாயெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய்கருமந்தானிதின்மேலுண்டோ. (அக)

அறைகழலலங்கல்வீரராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றேதொன்மையினன்றாற்கெல்லாம்
இறைவனீயென்னைச்செய்ததீதெனிலிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்றுமுனிதியோமுனிவிலாதாய். (அஉ)

இருவர்போரெதிருங்காலையிருவருநல்லுற்றாரே
ஒருவர்மேற்கருணைதூண்டியொருவர்மேலொளிந்துநின்று
வரிசிலைகுழையவாங்கிவாயம்புமருமத்தெய்தல்
தருமமோபிறிதொன்றாமோதருகிலதென்னும்பக்கம். (அங)

வேறு.

வீரமன்றுவிதியன்றுமெய்ம்மையின்
வாரமன்றுநின்மண்ணினுக்கென்னுடல்
பாரமன்றுபகையன்றுபண்பொழிந்
தீரமன்றிதுவென்செய்தவாறுநீ. (அச)

இருமைநோக்கிநின்றியாவர்க்குமொக்கின்ற
அருமையாற்றலன்றோவறங்காக்கின்ற

79. பரக்கழி - நிந்தை. இது திசைச்சொல்.
81. கருமம் - பாவம்.
84. விதி - நியாயம்.

பெருமையென்பதிதென்பிழைபேணல்விட்
டொருமைநோக்கியொருவற்குதவலோ. (அரு)

செயலைச்செற்றபகைதெறுவான்றெரிந்
தயலைப்பற்றித்துணையமைந்தாயெனின்
புயலைப்பற்றுமப்பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவதென்னமுயற்சியோ. (அசு)

காரியந்தகளங்கநிறத்தொன்மை
ஊரியன்றமதிக்குளதாமெனச்
சூரியன்மரபுக்குமோர்தொன்மறு
ஆரியன்பிறந்தாக்கினையாமரோ. (அஎ)

மற்றொருத்தன்வலிந்தறைகூவுநத்
துற்றவெவ்வனையோளித்துயிருண்டநீ
இற்றையிற்பிறர்க்கும்பிகலேறெனை
நிற்றிபோலுங்கிடந்தநிலத்தரோ. (அஅ)

நாலியற்கையு நங்குலத்துங்கையர்
போலியற்கையுஞ்சீலமும்போற்றலை
வாலியைப்படுத்தாயலைமன்னறவ
வேலியைப்படுத்தாய்விறல்வீரனே. (அகூ)

தாரமற்றொருவன்கொளத்தன்கையிற்
பாரவெஞ்சிலைவீரம்பழிப்பதே
நேருமன்றுமறைந்துநிராயுதன்
மார்பினெய்யவோவில்லிகல்வல்லதே. (கூ0)

என்றுதானுமெயிறுபொடிபடத்
தின்றுகான்றுவிழிவழித்தீயுக
அன்றவாலியனையனகூறினன்
நின்றவீரனிவையநிகழ்த்தினன். (கூக)

பிலம்புக்காய்நெடுநாள்பெயராயெனப்
புலம்புற்றுன்வழிபோதலுற்றான்றனைக்
குலம்புக்கான்றமுதியர்குறிக்கொணீ
அலம்புபொற்றரவனேயாசென்றலும். (கூஉ)

87. ஆரியன் - அழகனுகியநீ.
88. இற்றையில் - இன்றுமுதல்.
89. மன்னறவேலி - இராசநீதியாகியவேலி.

வானமாளவென்றம்முனைவைத்தவன்
தானுமாளக்கிளையினிறத்தடிந்
தியானுமாள்வெனிருந்தரசாள்கிலென்
ஊனமானவுரைபகர்ந்தீரென. (கூங)

பற்றியான்றபடைத்தலைவீரரும்
முற்றுணர்ந்தமுதியருமுன்பரும்
எற்று நம்மரசெய்துவையாமெனக்
கொற்றநன்முடிகொண்டதக்கோதிலான் (கூச)

வந்தவுன்னைவணங்கிமகிழ்ந்தனன்
எந்தையென்கணினத்தவராற்றலின்
தந்தவுன்னரசென்று தருக்கிலான்
முந்தையுற்றதுசொற்றமுனிந்துநீ. (கூரு)

கொல்லலுற்றனையும்பியைக்கோதவற்
றில்லையென்பதுணர்ந்துமிரங்கலை
அல்லல்செய்யேலுனக்கபயம்பிழை
புல்லலெனவும்புல்லலைபொங்கினாய். (கூசா)

ஊற்றமுற்றுடையானுனக்காரமர்
தோற்றுமென்றுதொழுதுயர்கையனைக்
கூற்றமுண்ணக்கொடுப்பெனென்றெண்ணினாய்
நாற்றிசைக்கும்புறத்தையுநண்ணினான். (கூஎ)

அன்னதன்மையறிந்துமருளலை
பின்னவனிவனென்பதும்பேணலை
வன்னிதானிடுசாபவரம்புடைப்
பொன்மலைக்கவனண்ணலிற்போகலை. (கூஅ)

ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவன்புணர்
தாரமாவதைதாங்குந்தருக்கதோ. (கூகூ)

மறந்திறம்பல்வலியமெனுமனம்
புறந்திறம்பலெளியவர்ப்பொங்குதல்

---

95. சொற்ற - உரைத்தன.
96. கோது - குற்றம்.
99. ஈரம் - இரக்கம். 100. பொங்குதல் - சீறுதல்.

அறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறம்பறெளிவுடையோர்க்கெலாம். (௧௦௦)

தருமமின்னதெனுந்தகைத்தன்மையும்
இருமையுந்தெரிந்தெண்ணலையெண்ணினல்
அருமையும்பிதன்னருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினையெய்தப்பெறுதியோ. (௧௦௧)

ஆதலானுமவனெனக்காருயிர்க்
காதலானெனலானுநிற்கட்டனென்
ஏதிலாருமெளியரென்றுரையும்
தீதுதீர்ப்பதென்சிந்தைக்கருத்தரோ. (௧௦௨)

பிழைத்ததன்மையிதுவெனப்பேரெழில்
தழைத்தவீரனுரைசெயத்தக்கிலா
திழைத்தவாலியியல்பலவித்துணை
விழைத்திறத்தொழிலென்னவிளம்புவான். (௧௦௩)

ஐயநுங்களருங்குலக்கற்பினப்
பொய்யின்மங்கையர்க்கேய்ந்தபுணர்ச்சிபோல்
செய்திலன்னெமைத்தேமலர்மேலவன்
எய்தினெய்தியதாகவியற்றினன். (௧௦௪)

மணமுமில்லைமறைநெறிவந்தன
குணமுமில்லைக்குலமுதற்கொத்தன
உணர்வுசென்றுழிச்செல்லுமொழுக்கலால்
நிணமுநெய்யுமிணங்கியநேமியாய். (௧௦௫)

பெற்றிமற்றிதுபெற்றதொர்பெற்றியிற்
குற்றமுற்றிலெனீயதுகோடியால்
வெற்றியுற்றதொர்வெற்றியினையெனச்
சொற்றசொற்றகைக்குற்றதுசொல்லுவான். (௧௦௬)

நலங்கொடேவரிற்றேன்றிநவையறக்
கலங்கலாவறநன்னெறிகாண்டலின்
விலங்கலாமைவிளங்கியதாதலான்
அலங்கலார்க்கிதடுப்பதன்றுமரோ. (௧௦௭)

101. உம்பி - உன்தம்பி. 102. ஏதிலார் - பகைவர்.
107. அலங்கலார் - இரக்கமுடையார்.

பொறியின்யாக்கையதோபுலனேக்கிய
அறிவின்மேலதன்றோவறத்தாறுதான்
நெறியினேன்மையைநேர்நின்றுணர்ந்தநீ
பெறுதியோபிழையுற்றுறுபெற்றிதான். (க0அ)

மாடுபற்றியிடங்கர்வலித்திடக்
கோடுபற்றியகொற்றவற்கூயதோர்
பாடுபெற்றவுணர்வின்பயத்தினல்
வீடுபெற்றவிலங்கும்விலங்கரோ. (க0கூ)

சிந்தைநல்லறத்தின்வழிச்சேர்தலால்
பைந்தொடித்திருவின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல்வீடுபெற்றெய்திய
எந்தையும்மெருவைக்கரசல்லனே. (கக0)

நன்றுதீதென்றியநெறிநல்லறி
வின்றிவாழ்வதன்றோவிலங்கின்னிடை
நின்றநன்னெறிநீயறியாநெறி
ஒன்றுமின்மையுன்வாய்மையுணர்த்துமால். (ககக)

தக்கவின்னதகாதனவின்னவென்
றொக்கவுன்னலராயினுயர்ந்துள
மக்களும்விலங்கேமனுவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே. (ககஉ)

காலனுற்றல்கடிந்தகணிச்சியான்
பாலினுற்றியபத்திபயத்தலான்
மாலினுற்றருவன்பெரும்பூதங்கள்
நாலினுற்றனுமாற்றுழிநண்ணினுய். (ககந)

மேவருந்தருமத்துறைமேவினர்
ஏவரும்பவத்தாலிழிந்தோர்களும்
தாவருந்தவரும்பலதன்மைசால்
தேவரும்முளர்தீமைதிருந்தினர். (ககச)

---

108. நோன்மை - தவத்திறம்.
109. கோடு - சங்கு.
110. எந்தையும் - எனது சிறியதந்தையும். எருவை - கழுகு.
111. வாய்மை - சொல்.

இனைய தாதலினெக்குலத்தியாவர்க்கும்
வினையினால்வருமேன்மையுங்கீழ்மையும்
அனையதன்மையறிந்துமழித்தனை
மனையின்மாட்சியென்றான்மனுநீதியான். (ககரு)

வேறு.

அவ்வுரையமயக்கேட்டவரிகுலத்தரசுமாண்ட
செவ்வியோயனையதாகச்செருக்களத்துற்றதேப்தாதே
வெவ்வியபுளிஞரென்னவிலங்கியேமறைந்துவில்லால்
எவ்வியதென்னையென்றானிலக்குவனியம்பலுற்றான். (ககசு)

முன்புநின்றம்பிவந்துசரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பனென்றுசெப்பினன்செருவினீயும்
அன்பினையுயிருக்காகியடைக்கலமியானுமென்றி
என்பதுகருதியண்ணன்மறைந்துநின்றெய்தனென்றான். (ககஎ)

கவிகுலத்தரசுமன்னன்கட்டுரைமனத்திற்கொண்டான்
அவியுறுமனத்தனாகியறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலென்பதெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறுகேள்விச்செல்வன்சென்னியையிறைஞ்சிச்சொன்னான். ()

தாயெனவுயிர்க்குநல்கித்தருமமுந்தகவுஞ்சால்பும்
நீயெனநின்றநம்பிநெறியினினோக்குநேர்மை
நாயெனநின்றவெம்பானவையறவுணரலாமே
தீயனபொறுத்தியென்றான்சிறியனசிந்தியாதான். (ககஅ)

இரந்தனன்பின்னுமெந்தையாவருமெண்ணதேற்றாக்
குரங்கெனக்கருதிநாயேன்கூறியமனத்துக்கொள்ளேல்
அரந்தைநவெம்பிறவியென்னோய்க்கருமருந்தனையவையா
வரந்தருவள்ளாலொன்றுகேளெனமறித்துஞ்சொல்வான். (கஉ0)

வேறு.

ஏவுகூர்வாளியாலெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேலைவாயறிவுதந்தருளினாய்
மூவர்நீமுதல்வனீமுற்றுநீமற்றுநீ
பாவநீதருமநீபகையுநீயுறவுநீ. (கஉக)

---

115. மனையின்மாட்சி—இல்லறதருமம்.
116. புளிஞர் - வேடர்.
120. தேற்றா - தெளிவிலாத.

புரமெலாமெரிசெய்தோன் முதலினோர்பொருவிலா
வரமெலாமுருவியென்வசையிலாவலிமைசால்
உரமெலாமுருவியென்னுயிரெலாநுகருநின்
சரமலாற்பிறிதுவேறுளதரோதருமமே. (கஉஉ)

மாவலச்சூலியார்வாழ்த்துநர்க்குயர்வரம்
ஓவலற்றுதவலின்ஜொருதனிப்பெயரியம்
பாவலிப்புடைமையாலாகுமப்பொருளையாம்
தேவநிற்கண்டவெற்கரிதெதனோதெரினே. (கஉங)

யாவருமெவையுமாயிருதுவும்பயனுமாய்ப்
பூவுநல்வெறியுமொத்தொருவரும்பொதுமையாய்
ஆவனீயாவதென்றறிவினோரருளினோர்
தாவரும்பதமெனக்கருடையோதனிமையோ. (கஉச)

உண்டெனுந்தருமமேயுருவமாயுடையநிற்
கண்டுகொண்டேனினிக்காணவென்கடவதோ
பண்டொடின்றளவுமேயென்பெரும்பழவினைத்
தண்டமேயடியனேற்குறுபதந்தருவதே. (கஉரு)

வேறு.

மற்றினியுதவியுண்டோவானினுமுயர்ந்தமானக்
கொற்றவநின்னையென்னைக்கொல்லியகொணர்ந்துதொல்லைச்
சிற்றினக்குரங்கினோடுந்தெரிவுறச்செய்தசெய்கை
வெற்றரசெய்தியெம்பிவீட்டரசெனக்குவிட்டான். (கஉசு)

ஓவியவுருவநாயேனுளதொன்றுபெறுவதுன்பால்
பூவியனறவமாந்திப்புந்திவேறுற்றபோது
தீவினையியற்றுமேனுமெம்பிமேற்சிறியென்மேல்
ஏவியபகழியென்னுங்கூற்றினையேவலென்றான். (கஉஎ)

இன்னமொன்றிரப்பதுண்டாலெம்பியையும்பிமார்கள்
தன்முனைக்கொல்வித்தானென்றிகழ்வரேற்றடுத்திதக்கோய்
முன்முனேமொழிந்தாயன்றேயிவன்குறைமுடிப்பதையா
பின்னவன்வினையின்செய்கையதனையும்பிழைக்கலாமோ. (கஉஅ)

122. பொருவிலா - ஒப்பற்ற.
123. இப்பாடல் சிலவேடுகளின் மாத்திரங் காணப்படுகின்றது.
124. வெறி - மணம்.
126. வீட்டரசு - முத்தித்தானங்களுயர்ந்த பரமபதம்.
127. நறவமாந்தி - கட்குடித்து.

மற்றிலேனெனினுமாயவரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டந்துராக்கியற்றொழிலுங்காட்டப்
பெற்றிலேன்கடந்தசொல்லிற்பயனிலைபிறிதொன்றேனும்
உற்றதுசெய்கென்றாலுமுரியனிவ்வனுமனென்றான். (கஉகூ)

அனுமனென்பவனையாழியையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென்றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்றோரனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிக்கோடிவானினுமுயர்ந்ததோளாய். (க௩௦)

என்றவர்க்கியம்பிப்பின்னரிருந்தனனிளவறன்னை
வன்றுணைத்தடக்கைநீட்டிவாங்கினன்றழுவிமைந்த
ஒன்றுனக்குரைப்பதுண்டாலுறுதியஃதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய்வருந்தலையென்றுகூறும். (க௩க)

மறைகளுமுனிவர்யாருமலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந்துணிபொருடுணிவிற்றூக்கி
அறைகழலிராமனாகியவறநெறிநிறுத்தவந்த
இறைபொருசங்கையின்றியெண்ணுதியெண்ணமிக்கோய். (க௩உ)

நிற்கின்றசெல்வம்வேண்டிநெறிநின்றபொருள்களெல்லாம்
கற்கின்றவிவன்றனாமங்கருதுவவிவனைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய்பொதுநின்றதலைமைநோக்கின்
மற்கொன்றவலியேசாலுமிதற்கொன்றுமேதுவேண்டா. (க௩௩)

கைதவமியற்றியாண்டுங்கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரும்வானுயர்நிலையைவள்ளல்
எய்தவர்பெறுவரென்றாலிணையடியிறைஞ்சியேவல்
செய்தவர்பெறுவதையாசெப்பலாஞ்சீர்மைத்தாமோ. (க௩ச)

அருமையென்விதியினாரேயுதவுவானமைந்தகாலை
இருமையுமெய்தினாய்மற்றினிச்செயற்பாலதெண்ணின்
திருமறுமார்பனேவல்சென்னியிற்சேர்த்திச்சிந்தை
ஒருமையினிறுவிமும்மையுலகினுமுயர்தியன்றே. (க௩ரு)

மதவியல்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ளல்
உதவியையுன்னியாவியுற்றிடத்துதவுகிற்றி

---

132. தூணிவிலெனற்பாலது - துணிவிலென்றாயது.
133. நிற்கின்றசெல்வம் - இடையிலழியாத பரமபதச்செல்வம்.
134. வானுயர்நிலை - வானத்திலுயர்ந்தவிடம்.

பதவியையெவர்க்குநல்கும்பண்ணவன்பணித்தயாவும்
சிதைவிலசெய்துநொய்திற்றீர்வரும்பிறவிதீர்த்தி. (௧௩௬)

அரசியற்பாரம்பூரித்தயர்ந்தனையிகழாதையன்
மரைமலர்ப்பாதநீங்காவாழுதிமன்னரென்பார்
எரியெனறகுரியாரென்றேயெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம்பொறுப்பரென்றெண்ணவேண்டா. (௧௩௭)

என்னவித்தகையவாயவுறுதிகள்யாவுமெங்கும்
பின்னவற்கியம்பிநின்றபேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்தமற்றிவன்சுற்றத்தோடும்
உன்னடைக்கலமென்றுந்தியுயர்கரமுச்சிவைத்தான். (௧௩௮)

வைத்தபின்னுரிமைத்தம்பிமாமுகநோக்கிவல்லே
உய்த்தனைகொணர்தியுன்றனோங்கருமகனையென்ன
அத்தலையவனையேவியழைத்தலினணைந்தானென்ப
கைத்தலத்துவரிநீரைக்கலக்கினான்பயந்தகாளை. (௧௩௯)

சுடருடைமதியமென்னத்தோன்றினன்றோன்றியாண்டும்
இடருடையுள்ளத்தோரையெண்ணினுமுணர்ந்திலாதான்
மடருடைநறுமென்சேக்கைமலையன்றியுதிரவாரிக்
கடரிடைக்கிடந்தகாதற்றாதையைக்கண்ணிற்கண்டான். (௧௪௦)

கண்டனன்கலுழிநீருங்குருதியுங்காலமாலைக்
குண்டலமலம்புகின்றகுவவுத்தோட்குரிசிறிங்கள்
மண்டலமுலகில்வந்துகிடந்ததம்மதியின்மீதா
விண்டலந்தன்னினின்றோர்மீன்விழுந்தென்னவீழ்ந்தான். (௧௪௧)

எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றம்
வந்ததேயன்றோவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார். (௧௪௨)

தறையடித்ததுபோற்றீராத்தகையவித்திசைகடாங்கும்
கறையடிக்கழிவுசெய்தகண்டகனெஞ்சமுன்றன்
நிறையடிக்கோலவாலினிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றவந்தப்பயமறப்பறந்ததன்றே. (௧௪௩)

---

136. சிதைவில் - சிதைவிலவாக.
141. மீன் - நட்சத்திரம். 143. கண்டகன் - கண்டிராவணன்.

குலவரைநேமிக்குன்றமென்றுவானுயர்ந்தகோட்டின்
தலைகளுநின்பொற்றோளிற்றழும்பினிற்றவிர்ந்தவன்றே
மலைகொளுமரவுமற்றுமதியமும்பலவுந்தாங்கி
அலைகடல்கடையவேண்டிஞரினிக்கடைவரையா. (கசச)

பஞ்சின்மெல்லடியாள்பாகன்பாதுகமல்லயாவும்
அஞ்சலித்தறியாச்செங்கையானையாயமரர்யாரும்
எஞ்சலரிருந்தாருன்னாலின்னமுநீந்தநீயோ
துஞ்சினைவள்ளியோர்கணின்னின்யார்சொல்லற்பாலார். (கசரு)

ஆயனபலவும்பன்னியழுங்கினன்புழுங்கிநோக்கித்
தீயுறுமெழுகிற்சிந்தைதயலம்வருஞ்செங்கண்வாலி
நீயினியயர்வாயல்லையென்றுதன்னெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்தநல்வினைப்பயனிதென்றான். (கசசு)

தோன்றலுமிறத்தலுந்துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்தினோர்க்குமூலத்தேமுடிந்தவன்றே
யான்றவமுடைமையாலிவ்விறுதிவந்திசைந்ததியார்க்கும்
சான்றெனநின்றவீரன்றான்வந்துவீடுதந்தான். (கசஎ)

பாலமைதவிர்நீயென்சொற்பற்றுதியென்னினைய
மேலொருபொருளுமில்லாமெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்றுகட்புலக்குற்றதம்மா
மால்தரும்பிறவிநோய்க்குமருந்தெனவணங்குமைந்த. (கசஅ)

என்னுயிர்க்கிறுதிசெய்தானென்பனைதயிறையுமெண்ணு
துன்னுயிர்க்குறுதிசெய்தியிவற்கமருற்றதுண்டேல்
பொன்னுயிர்த்தொளிரும்பூணுய்போதுநிலைமைநோக்கி
மன்னுயிர்க்குறுதிசெய்வான்மலரடிசுமந்துவாழ்தி. (கசகூ)

என்றனனினையவாயவுறுதிகள்யாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாரத்தனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட்குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றிணிவயிரப்பைம்பூட்புரவலன்றன்னைநோக்கி. (கருo)

நெய்யடைநெடுவேற்றானைநீணிறநிருதரென்னும்
துய்யடைக்கனலியன்னதோளினன்றொழிலுந்தூயன்

---

145. வள்ளியோர் - கொடையாளர்.

149. இறையும் - சிறிதும்.

பொய்யடையுள்ளத்தார்க்குப்புலப்படாப்புலவமற்றுன்
கையடையாகுமென்றவ்விராமற்குக்காட்டுங்காலை. (கருக)

தன்னடிதாழ்தலோடுந்தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டிநீயிதுபொறுத்தியென்றான்
என்னலுமுலகமேழுமேத்தினவிறந்துவாலி
அந்நிலைதுறந்துவானுக்கப்புறத்துலகனானான். (கருஉ)

கையவணெகிழ்தலோடுங்கடுங்கணைகாலவாலி
வெய்யமார்பகத்துட்டங்காதுருவிமேக்குயரப்போய்த்
துய்யநீர்க்கடலுட்டோய்ந்துதூய்மலரமரர்சூட்ட
ஐயன்வெவ்விடாதகொற்றத்தாவம்வந்தடைந்ததன்றே. (கருங)

ஆ-திருவிருத்தம் ருகக.

## சா-வது, அரசியற்படலம்.

வாலியுமேகினான்விண்வரம்பிலாவாற்றலோடும்
பாலியாமுன்னர்நின்றபரிதிச்சேய்செங்கைபற்றி
ஆலிலைப்பள்ளியானும்மங்கதனோடும்போனான்
வேல்விழித்தாரைகேட்டாள்வந்தவன்மேலின்வீழ்ந்தாள். (க)

குங்குமங்கொட்டியன்னகுவிமுலைக்குவட்டிற்கொக்கப்
பொங்குவெங்குருதிபோர்ப்பப்புரிகுழல்சிவப்பப்பொற்றோள்
அங்கவனலங்கன்மார்பிற்புரண்டனளகன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன்றுமின்னெனத்திகழுமெய்யாள். (உ)

வேய்ங்குழல்விழிகொணல்யாழ்வீணையென்றிணையநாண
ஏங்கினளிரங்கிவிம்மியுருகினளிருகைகூப்பித்
தாங்கினடலையிற்சோர்ந்துசரிந்துதாழ்குழல்கடள்ளி
ஓங்கியகுரலாற்பன்னியிணையனவுரைக்கலுற்றாள். (ங)

வேறு.

வரைசேர்தோளிடைநாளும்வைகுவேன்
கரைசேராவிடர்வேலைகாண்கலேன்
உரைசேராருயிரேயென்னுள்ளமே
அரைசேயானிதுகாணவஞ்சினேன். (ச)

151. கையடை - அடைக்கலம்.
153. ஆவம் - அம்புக்கூடு. 2. குவடு - மலை.
3. கூப்பி - சேர்த்து. 4. இடர்வேலை - துக்கசமுத்திரம்.

துயராலே தொலையாதவென்னையும்
பயிராயோபகையாதபண்பினாய்
செயிர்தீராய்விதியானதெய்வமே
உயிர்போனாலுடலாருமுய்வரோ. (௫)

நறிதாநல்லமிர்துண்ணநல்கலின்
பிறியாவின்னுயிர்பெற்றபெற்றிதாம்
அறியாரோநமனாரதன்றெனின்
சிறியாரோவுபகாரஞ்சிந்தியார். (௬)

அணங்கார்பாகனையாசைதோறுமுற்
றுணங்காவொண்மலர்கொண்டுளன்பொடும்
இணங்காக்காலமிரண்டொடொன்றினும்
வணங்காதித்துணைவைகவல்லையோ. (௭)

வளையார்தோள்பொடியாடவைகுவாய்
தரைமேலாயுறுதன்மையீதெனக்
கரையாதேனிடுபூசல்கண்டுமோன்
றுரையாயென்வயினாணம்யாவதோ. (௮)

நையாநின்றனெனானிருந்திங்ஙன்
மெய்வானோர்திருநாடுமேவினாய்
ஐயாநீயெனதாவியென்பது
பொய்யோபொய்யுரையாதபுண்ணியா. (௯)

செருவார்தோளநின்சிந்தைதப்பொனெனின்
மருவார்வெஞ்சரமென்னையும்வௌவுமால்
ஒருவேனுள்ளுனேயாகினுய்தியால்
இருவேமுள்ளிருவேமிருந்திலேம். (௧௦)

எந்தாய்நீயமிழ்தீயயாமெலாம்
உய்ந்தேமென்றுபகாரமுன்னுவார்
நந்தாநாண்மலர்சிந்திநண்பொடு
வந்தாரோவெதிர்வானுளோரெலாம். (௧௧)

ஓயாவாளியொளித்துநின்றெய்வான்
எயாவந்தவிராமனென்றுளான்

5. பயிராயோ - அழையாயோ.
10. மருவார் - பகைவர்.

வாயாலேயினனென்னின்வாழ்வெலாம்
ஈயாயோவமிழ்தேயுமீகுவாய். (கஉ)

சொற்றேன்முந்துறவன்னசொற்கொளாய்
அற்றானன்னதுசெய்கலானென
உற்றாயும்பியையூழிகாணுநீ
இற்றாய்நானுனையென்றுகாண்கேனோ. (கங)

நீறாமேருவுநீசெருக்கினல்
மாறோர்வாளியுன்மார்பையீர்வதோ
தேறேன்யானிதுதேவர்மாயமோ
வேறோர்வாலிகொலாம்விளிந்துளான். (கச)

தகைநேர்வண்புகழ்நின்று தம்பியார்
பகைநேர்வாருளரானபண்பினல்
உகநேர்சிந்தியுலந்தழிந்ததால்
மகனேகண்டிலையோநம்வாழ்வெலாம். (கரு)

அருமந்தற்றமகற்றும்வில்லியார்
ஒருமைந்தற்குமடாததுன்னினர்
தருமம்பற்றியதக்கவர்க்கெலாம்
கருமங்கட்டளையென்றல்கட்டதோ. (கசு)

என்றாளின்னனபன்னியின்னலோ
டொன்றாளுணர்வேதுமுற்றிலாள்
நின்றாளந்நிலைநோக்கிநீதிசால்
வன்றாண்மால்வரையன்னமாருதி. (கஎ)

மடவாராலமடந்தைமுன்னர்வாழ்
இடமேவும்படியேவிவாலிபால்
கடன்யாவுங்கடைகண்டுகண்ணனோ
டுடனுவுற்றவெலாமுணர்த்தலும். (கஅ)

அகம்வேறற்றுகவீசருக்கனர்
புகமேலைக்கிரிபுக்கபோழ்தினின்
நகமேயொத்தகுரக்குநாயகன்
முகமேயொத்ததுமூரிமண்டிலம். (கசு)

---

13. ஊழி - அழிவு.
16, கட்டதோ - பொய்யோ.

மறைந்தான்மாலையருக்கன்வள்ளியோன்
உறைந்தான்மங்கைதிறத்தைநயுன்னுவான்
குறைந்தானெஞ்சுகுறைந்தழுங்குவான்
நிறைந்தார்கங்குலின்வேலைநீங்கினான். (உ0)

புதல்வன்பொன்மகுடம்பொறுக்கலான்
முதல்வன்பேருவகைக்குமுந்துவான்
உதவும்பூமகள்சேரவொண்மலர்க்
கதவஞ்செய்யகரத்தினீக்கினான். (உக)

அதுகாலத்தவருட்குநாயகன்
மதிசாறம்பியைவல்லையேவினான்
கதிரோன்மைந்தனையைபகைகளால்
விதியான்மௌலிமிலேச்சுவாயென்றான். (உஉ)

அப்போதேயருணின்றவண்ணனும்
மெய்ப்போர்மாருதிதன்னைவீரநீ
இப்போதேகொணரின்னசெய்வினைக்
கொப்பாம்யாவையுமென்றுணர்த்தலும். (உ௩)

மண்ணுந்நீர்முதன்மங்கலங்களும்
எண்ணும்பொன்முடியாதியாவையும்
நண்ணும்வேலையினம்பிதம்பியும்
திண்ணஞ்செய்வனசெய்துசெம்மலே. (உ௪)

மறையோராசிவழங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர்தூவநல்நெறிக்
கிறையோன்றன்னிளையோனவ்வேந்தலைத்
துறையோர்நூன்முறைமௌலிசூட்டினான். (உரு)

பொன்மாமௌலிபுனைந்துபொய்யிலான்
தன்மானக்கழுறூழ்ம்வேலையின்
நன்மார்பிற்றழுவுற்றநாயகன்
சொன்னான்முற்றியசொல்லினெல்லையான். (உசு)

வேறு.

ஈண்டுநின்றேகிநீநின்னியல்பமைபிருக்கையெய்தி
வேண்டுவமரபினெண்ணிவிதிமுறையியற்றிவீர

21. பொறுக்கலான - தரித்தலால்.
24. மண்ணும் - அபிடேகிக்கின்ற 26. மௌலி - மகுடம்.

பூண்டபேரரசுக்கேற்றயானைவையும்புரிந்துபோரில்
மாண்டவன்மைந்தனோடும்வாழ்திநற்றிருவின்வைகி. (உ௭)

வாய்மைசாலறிவின்வாய்த்தமந்திரமாந்தரோடும்
தீமைதீரொழுக்கின்வந்ததிறத்தொழின்மறவரோடும்
தூய்மைசால்புணர்ச்சிபேணித்துகளறுதொழிலையாகிச்
செய்மையோடணிமையின்றித்தேவரிற்றெரியநிற்றி. (உ௮)

புகையுடைத்தென்னினுண்டுபொங்கனலங்கென்றுன்னும்
மிகையுடைத்துலகநூலோர்வினையமும்வேண்டற்பாற்றே
பகையுடைச்சிந்தையார்க்கும்பயனுறுபண்பிற்றீரா
நகையுடைமுகத்தையாகியின்னுரைநல்குநாவால். (உ௯)

தேவருமருடற்கொத்தசெயிரறுசெல்வமஃதுன்
காவலுக்குரியதென்றாலன்னதுகருதிக்காண்டி
ஏவருமினியநண்பரயலவர்விரவாரென்றிம்
மூவகையியல்பிற்றாருமுனைவர்க்குமுலகமூன்றின். (௩௰)

செய்வனசெய்தல்யாண்டுந்தீயனசிந்தியாமல்
வைவனவந்துபோதும்வசையிலவினியகூறல்
மெய்யனவழங்கல்யாவுமேவினவெஃகலின்மை
உய்வனவாக்கித்தம்மோடுயர்வனவுயர்ந்ததோளாய். (௩௧)

சிறியரென்றிகழ்ந்துநோய்வுசெய்வனசெய்யன்மற்றிந்
நெறியிகழ்ந்தியானோர்தீமையிழைத்தலாலுணர்ச்சிநீண்டு
குறியதாமேனியாயகூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்திவெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன். (௩௨)

மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்தினானேயல்லலும்பழியுமாதல்
எங்களிற்காண்டியன்றேயிதற்குவேறேதியாதோ. (௩௩)

நாயகனல்லனம்மைநணிபயந்தெடுத்துநல்கும்
தாயெனவினிதுபேணத்தாங்குதிதாங்குவாரை
ஆயதுதன்மையேனுமறவரம்பிகவாவண்ணம்
தீயனவந்தபோதுசுடுதியாற்றீமையோரை. (௩௪)

---

28. புணர்ச்சிபேணி - கலந்தாலோசித்து.
32. நொய்வு - இகழ்வு. 34. சுடுதி - தண்டித்தி.

இறத்தலும்பிறத்தலுமென்பனவிரண்டும்யாண்டும்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னைபூவின்மேற்புனிதற்கேனும்
அறத்தினதிறுதிவாழ்நாட்கிறுதியஃதுறுதியென்ப. (கரு)

ஆக்கமுங்கேடுந்தாஞ்செயறத்தொடுபாவமாய
நோக்கிவேறுண்மைதேரார்பொருவரும்புலமைநாலோர்
தாக்கினவொன்றொடொன்றுதருக்குறுஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமின்றிமற்றும்பாவத்தைப்பற்றலாமோ. (கசு)

இன்னவைதகைமையென்பவியல்புளிமரபினெண்ணி
மன்னரசியற்றியென்கண்வருவழிமாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன்பெருங்கடற்சேனையோடும்
துன்னுதிபோதியென்றான்சுந்தரனவனுஞ்சொல்வான். (கஎ)

குரங்குறைபிருக்கையென்னுங்குற்றமேகுற்றமல்லால்
அரங்கெழுதுறக்கநாட்டுக்கரசெனலாமதன்றே
மரங்கிளரருவிக்குன்றம்வள்ளலீமனத்தினெம்மை
இரங்கியபணியாஞ்செய்யவிருத்தியாற்சிலநாளெம்பால். (கஅ)

அரிந்தமநின்னையண்மியருளுக்குமுரியேமாகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம்வெறுமையிற்பிறிதன்றுமால்
கருந்தடங்கண்ணினாளைநாடலாங்காலங்காறும்
இருந்தருடருதியெம்மோடென்றடியிணையின்வீழ்ந்தான். (கசு)

ஏந்தலுமிதனைக்கேளாவின்னிளமுறுவனாற
வேந்தமைபிருக்கையெம்போல்விரதியர்விழைதற்கொவ்வா
போந்தவணிருப்பினெம்மைப்போற்றவேபொழுதுபோமால்
சேர்ந்தனைநிற்கமுன்பவ்வரசியற்றருமந்தீர்தி. (சo)

ஏழிரண்டாண்டியான்போங்தெரிவனத்திருக்கவேண்டேன்
வாழியாயரசர்வைகும்வளநகர்வைகலொல்லேன்
பாழியந்தடந்தோள்வீரபார்த்திலைபோலுமன்றே
யாழிசைமொழியோடன்றியானுறைபின்பமென்னே. (சக)

37. துன்னுதி - அடைவாய்.
38. குன்றம் - குன்றத்தில்.
39. அரிந்தம - நாராயணனே.
40. நாற - தோன்ற.
41. ஒல்லேன் - கூடாதவனாக இருக்கின்றேன்.

தேவிவேறரக்கன்வைத்தசேமத்துளிருப்பத்தான்றன்
ஆவிபோற்றுணைவரோடுமௌவிடற்கரியவின்பம்
மேவினானிராமனென்றாலையவிவ்வெய்யமாற்றம்
மூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றோ. (௪௨)

இல்லறந்துறந்திலாதோரியற்கையையிழந்துபோரின்
வில்லறந்துறந்துவாழ்வேற்கின்னனமேன்மையில்லாச்
சில்லறம்புரிந்துநின்றதீமைகடீருமாறு
நல்லறந்துறந்தநோன்பினவையறநோற்பலென்றான். (௪௩)

அரசியற்குரியயாவுமாற்றுழியாற்றியான்று
திரைசெயற்குரியசேனைக்கடலொடுந்திங்கணான்கின்
விரைசுகவென்பானின்னைவேண்டினனவ்வீரவென்றான்
உரைசெயற்கெளிதுமாகியரிதுமாமொழுக்கினின்றான். (௪௪)

மறித்தொருமாற்றங்கூறான்வானுயர்கொற்றத்தன்னான்
குறிப்பறிந்தொழுகன்மாதோகோதிலாதவென்னா
நெறிப்படர்கண்கள்பொங்கிநீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்னாக்கவிக்குலத்தரசன்போனான். (௪௫)

வாலிகாதலனுமாண்டுமலரடிவணங்கினானை
நீலமாமேகமன்னநெடியவனருளினோக்கிச்
சீலநீயுடையையாதலிவன்சிறுதாதையென்னா
மூலமேதந்தநுந்தையாமெனமுறையினிற்றி. (௪௬)

என்னமற்றினையகூறியேகவற்றொடரவென்றான்
பொன்னடிவணங்கிமற்றைப்புகழுடைக்குரிசில்போனான்
பின்னர்மாருதியைநோக்கிப்பேரெழில்வீரநீயும்
அன்னவனரசுக்கேற்றதாற்றுதியறிவினென்றான். (௪௭)

பொய்த்தலிலுள்ளத்தன்புபொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநாயேனேயினவெனக்குத்தக்க
கைத்தொழில்செய்வனென்றுகழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின்றவீரனிவ்வுரைவிளம்பிவிட்டான். (௪௮)

நிரம்பினானொருவன்காத்தநிறையரசிறுதிநின்ற
வரம்பிலாததனைமற்றோர்தலைமகன்வலிதிற்கொண்டால்

42. தேவி - சானகி.
44. திங்கள் - மாதம். விரைசுக - நெருங்குக.

அரும்புவநலனுங்கீங்குமாகலிளையநின்போற்
பெரும்பொறையறிவினேரானிலையினைப்பெறுவதம்மா. (சகூ)

ஆன்றவற்குரியதாயவரசினைநிறுவியப்பால்
என்றெனக்குரியதாயகருமமுமியற்றற்கொத்த
சான்றவர்நின்னினில்லையாதலாற்றருமந்தானே
போன்றநீயானேவேண்டவத்தலைபோதியென்றான். (ருo)

ஆழியானனையகூறவாணையிதாகினஃதே
வாழியாய்புரிவனென்றுவணங்கிமாருதியும்போனான்
சூழிமால்யானையன்னதம்பியுந்தானுந்தொல்லை
ஊழிநாயகனும்வேறோருயர்தடங்குன்றமுற்றார். (ருக)

ஆரியனருளிற்போயவ்வகன்மலைபகத்தனான
சூரியன்மகனுமானத்துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்னுடாயெனத்தந்தைமுந்தைச்
சீரியன்சொல்லேயென்னச்செவ்விதினரசுசெய்தான். (ருஉ)

வளவரசெய்திடற்கைறவானரவீரர்யாரும்
கிளைஞரினுதவவாணைகிளர்திசையளப்பக்கேளோ
டளவிலவாற்றலாண்மையங்கதன்றங்கள்செல்வத்
திளவரசியற்றவேவியினிதினினிருந்தானிப்பால். (ருந)

வள்ளலுமவணின்றேகிமதங்கனதிருக்கையான
வெள்ளவான்குடுமிக்குன்றத்தொருசிறைமேவிமெய்ம்மை
அள்ளுநறுகாதற்றம்பியன்பினுலமைக்கப்பட்ட
எள்ளலில்சாலையெய்தியினிதினினிருந்தகாலை. (ருச)

ஆ திருவிருத்தம் - சரு௲.

---

49. அரும்புவ - தோன்றுவ.
50. ஆன்றவர் - உயர்ந்தோர்.
54. வள்ளல் - வரையாது கொடுப்போன்.

## எ-வது, கார்காலப்படலம்.

மாவியல்வடதிசைநின்றுவானவன்
ஓவியமேயெனவொளிக்கவின்குலாம்
தேவியைநாடியமுந்தித்தென்றிசைக்
கேவியதூதெனவிரவியேகினன். (க)

பையணைப்பஃறலைப்பாந்தளேந்திய
மொய்நிலத்தகளியின்முழங்குநீர்நெயின்
வெய்யவன்விளக்கமாமேருப்பொன்றிரி
மைமெடுத்தொத்ததுமழைத்தவானமே. (உ)

நண்ணுதலருங்கடனஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்தனதழைத்தமேகமே. (ங)

நஞ்சினினளிர்நெடுங்கடலினங்கையர்
அஞ்சனநயனத்தினவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம்வடிவிற்செய்கையின்
நெஞ்சினினிருண்டதுநீலவானமே. (ச)

நாட்களினளிர்கடனுரைநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ
வாட்கைகண்மயங்கியசெருவின்வார்மதப்
பூட்கைகணிறைந்தபுண்டிறப்பபோன்றவே. (ரு)

நீனிறப்பெருங்கரிநிறைத்தநீர்த்தெனச்
சூனிறமுகிற்குலந்துவன்றிச்சூழ்திரை
மானிறநெடுங்கடல்வாரிமூரிவான்
மேனிரைத்துளதெனமுழக்கமிக்கதே. (சு)

அரிப்பெரும்பெயரவன்முதலினோரணி
விரிப்பவுமொத்தனவெற்புமீதுதீ
எரிப்பவுமொத்தனவேசிலாசைகள்
சிரிப்பவுமொத்தனதெரிந்தமின்னெலாம். (எ)

---

2. பையணை - விடப்பையினையுடையபாம்பாகிய அணை இஃதாகுபெயர்.
3. நண்ணுதலரும் - அருகிலடைதற்கரிய.
5. பூட்கை - யானை. 6. மூரி - பெரிய.

மாதிரக்கருமகன்மாரிக்கார்மழை
யாதினுமிருண்டவிண்ணிருந்தைக்குப்பையின்
கூதிர்வெங்கானெடுந்துருத்திக்கோளமைத்
தூதுவெங்கனலுமிழுலையுமொத்ததே. (௮)

பிரிந்துறைமகளிரும்பிலத்தபாந்தளும்
எரிந்துயிர்நடுங்கிடவிரவியின்கதிர்
அரிந்தனவாமெனவசனிநாவென
விரிந்தனதிசைதொறுமிசையின்மின்னெலாம். (௯)

சூடினமணிமுடிக்துகளில்விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களும்
ஆடவர்பெயர்தொறுமாசையானையின்
ஓடைகள்வொளிபிறழ்வனவுமொத்தவே. (௧௦)

எண்வகைநாகங்கடிசைகளெட்டையும்
நண்ணினநாவளைத்தளையமின்னகக்
கண்ணன்மெய்வடிவெனக்கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பெனவூதைபொங்கவே. (௧௧)

தலைமையுங்கீழ்மையுந்தவிர்தலின்றியே
மலையினுமரத்தினுமற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழியிலங்கும்வேசையர்
உலைவுறுமனமெனவுலாயதூதையே. (௧௨)

அழுங்குறுமகளிர்தமன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்க்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடைவீங்கிற்றே. (௧௩)

ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழுங்கோட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண்டழங்குதாவினும்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே. (௧௪)

இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேல்
மன்மதன்மலர்க்கணைவழங்கினானெனப்

---

8. கருமகன் - தொழிலாளி, அவன் கொல்லன்.

11. கண்ணுதன்மிடறெனக்கருகி என்றும் பாடம். ஊதை - ஒருவகைக் காற்று. 13. அன்பர் - நாயகர்.

பொன்னெடுங்குன்றின்மேற்பொழிந்ததாரைகள்
மின்னெடுந்துவன்றினமேகராசியே. (கரு)

கல்லிடைப்படுந்துளித்திவலைகாரிடு
வில்லிடைச்சரமெனவிசையின்வீழ்ந்தன
செல்லிடைப்பிறந்தசெங்கனலிற்சிந்தின
எல்லிடைமணிசிதர்ந்தழலியற்றல்போல். (கசு)

மள்ளர்கண்மறுபடைமானயானைமேல்
வெள்ளிவேலெறிவனபோன்றமேகங்கள்
தள்ளருந்துளிபடத்தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரிபுரள்வபோன்றவே. (கஎ)

வானிடுதனுநெடுங்கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன்பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணைபிரிந்ததன்மையர்
ஊனுடையுடம்பெலாமுழ்கலொத்தவே. (கஅ)

தீர்த்தனுங்கவிகளுஞ்செறிந்துநம்பகை
பேர்த்தனரினியெனப்பேசிவானவர்
ஆர்த்தெனவார்த்தனமேகமாய்மலர்
தூர்த்தனவொத்தனதுள்ளிவெள்ளமே. (ககூ)

வண்ணவிற்கரதலத்தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண்டோடும்வேலையில்
பெண்ணினிற்கருங்கலமனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்ததுகாலமாரியே. (உ௦)

சிரஞ்சுடர்மதிபுனைதேவன்விண்டொடர்
புரஞ்சுடவிடுசரம்புரையுமின்னினம்
அரஞ்சுடப்பொறிசிமிரயிலினுடைவர்
உரஞ்சுடவளைந்தனபிரிந்துளோர்க்கெலாம். (உக)

பொருடரப்போயினர்ப்பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசையுயிர்கொண்டுய்த்தலான்
மருடருபிரிவினோய்மாசுணங்கெடக்
கருடனைப்பொருவினகாலமாரியே. (உஉ)

---

16. செல் - மேகம். 17. மள்ளர் - போர்வீரர்.

19. தீர்த்தன் - தூயவன். ஈண் டிராமன்மேற்று.

21. அயில் - வேலாயுதம். 22. மாசுணம் - பாம்பு.

முழங்கினமுறைமுறைமூரிமேகநீர்
வழங்கினமிடைவனமானயானைகள்
தழங்கினபொழிமதத்திவலைதாழ்தரப்
புழுங்கினவெதிரெதிர்பொருவபோன்றவே. (உ௩)

விசைகொடுமாருதமறித்துவீசலால்
அசைவுறுசிறுதுளியப்புமாரியின்
இசைவுறவெய்வனவிசைவவாயிருந்
திசையொடுதிசைசெருச்செய்தலொத்தவே. (உச)

விழைவுறுபொருடரப்பிரிந்தவேந்தர்வந்
துழையுறவுயிருறவுயிர்க்குமாதரின்
மழையுறமாமுகமலர்ந்துதோன்றின
குழையுறப்பொலிந்தனவுலவைக்கொம்பெலாம். (உரு)

வேறு.

பாடலம்வறுமைகூரப்பகலவன்பசுமைகூரக்
கோடல்கள்பெருமைகூரக்குவலயஞ்சிறுமைகூர
ஆடினமயில்கள்பேசாதடங்கினகுயில்களன்பர்த்
தேடுறத்தளர்ந்தார்போன்றுந்திருவுறக்கிளர்ந்தார்போன்றும். ()

நாணிறச்சுரும்பும்வண்டுநன்மணியணியுஞ்சாரல்
தேனுகமலர்ந்துசாய்ந்தசேயிதழ்க்காந்தட்செம்பூ
வேணிலைவென்றதம்மாகாரெனவியந்துநோக்கி
மாணிலக்கிழத்திகைகண்மறித்தனபோன்றமன்னோ. (உஎ)

வாளெயிற்றரவம்போலவன்றலைகான்றமானத்
தாளுடைக்கோடறம்மைத்தழீஇயனகாதறங்க
மீளலவவையுமன்னவிழைவனவுணர்வுமீந்த
கோளரவென்னப்பின்னியவற்றொடுங்குழைந்துசாய்ந்த. (உஅ)

எள்ளிடவிடனுமின்றியெழுந்தனவிலங்குகோபம்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ. (உகூ)

நீங்கனிநாவலோங்குஞ்சேணுயர்குன்றிற்செம்பொன்
வாங்கினகொண்டுபாரின்மண்டுமால்யாறுமான

25. உலவைக்கொம்பு - பட்டமரக்கிளை.
29. கோபம் - இந்திரகோபம், பட்டுப்பூச்சியென்ப.

வேங்கையின்மலருங்கொன்றைவிரிந்தனவீயுமீர்த்துத்
தாங்கினகலுழிசென்றுதலைமயக்குறுவதம்மில். (௩௦)

நன்னெடுகொந்தட்போதினைறவிரிகடுக்கைமென்பூத்
துன்னியகோபத்தோடுந்தோன்றியதோற்றந்தும்பி
இன்னிசைமுரல்வநோக்கியிருநிலமலர்க்கையேந்திப்
பொன்னொடுங்காசையீட்டிக்கொடுப்பதேபோன்றதன்றே. (௩௧)

கிளைத்துணைமழலைவண்டுகின்னரநிகர்த்தமின்னும்
துளிக்குரன்மேகம்வள்வார்தூரியந்துவைப்பபோன்ற
வளைக்கையர்போன்றமஞ்ஞைதோன்றிகளரங்கின்மாடே
விளக்கினமொத்தகாண்போர்விழியொத்தவிளையின்மென்பூ. (௩௨)

பேடையுஞிமிறும்பாயப்பெயர்வுழிப்பிறக்குமோசை
ஊடுறத்தாக்குந்தோறுமொல்லொலிபிறப்பநல்லார்
ஆடியற்பாணிக்கொக்குமாரியவமிழ்தப்பாடற்
கோடியதாளங்கொட்டன்மலர்ந்தகூதாளமொத்த. (௩௩)

வழைதுறுகானயாறுமாநிலக்கிழத்திமக்கட்
குழைதுறுமலைமாக்கொங்கைசுரந்தபாலொழுக்கையொத்த
விழைவுறுவேட்கைநாளும்வேண்டினர்க்குதவவேண்டிக்
குழைதொறுங்கனகந்தூங்குகற்பகநிகர்த்தகொன்றை. (௩௪)

பூவியல்புறவமெங்கும்பொறிவரிவண்டுபோர்ப்பத்
தீவியகளியவாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஓவியமரன்கடோறுமுறைத்தறவுரிஞ்சிபொண்கேழ்
நாவியசெவ்விநாறக்கலையொடும்புலந்தநவ்வி. (௩௫)

வேறு.

தேரினன்னெடுந்திசைசெலச்செருக்கழிந்தொடுங்கும்
கூரயிற்றருங்கண்ணெனக்குவிந்தனகுவளை
மாரனன்னவர்வரவுகண்டுவக்கின்றமகளிர்
மூரன்மென்குறுமுறுவலொத்தரும்பினமுல்லை. (௩௬)

களிக்குமஞ்ஞையைக்கண்ணுளரினமெனக்கண்ணுற்
றளிக்குமன்னரிற்பொன்மழைவழங்கினவருவி
வெளிக்கண்வந்தகார்விருந்தெனவிருந்துகண்டுள்ளம்
களிக்குமங்கையர்முகமெனப்பொலிந்தனகமலம். (௩௭)

---

33. ஞிமிறு - ஆண்வண்டு.
34. மூரல் - நகையினையுடைய. முறுவல் - பற்கள்.

சரதநாண்மலரியாவையுங்குடைந்தன தடவிச்
சுரதநூறெரிவிடரெனத்தேன்கொண்டுதொகுப்ப
பரதநூன்முறைநாடகம்பயனுறப்பகுப்பான்
இரதநீட்டுறுங்கவிஞரைப்பொருவினதேனீ. (௩௮)

நோக்கினானமைநோக்கழிகண்டநுண்மருங்குல்
தாக்கணங்கநஞ்சீதைக்குத்தாக்கருந்துன்பம்
ஆக்கினானமதுருவினென்றரும்பெறலுவகை
வாக்கினானுரையாமெனக்களித்தனமான்கள். (௩௯)

நீடுநெஞ்சுறுநேயத்தானெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறுகாதலின்மயங்கிக்
கூடுநன்னதித்தடந்தொறுங்குடைந்தனபடிவுற்
றூடுகின்றனகொழுநரைப்பொருவினவன்னம். (௪௦)

காரெனும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தனவளக்கருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தினருகுறநிறைத்துக்
கூரும்வெண்ணிறத்திறத்தனபறப்பனகுரண்டம். (௪௧)

மருவிநீங்கல்செல்லாநெடுமாலைபவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினாயகனிவனெனத்தேமறைதெரிக்கும்
ஒருவன்மார்பினினுத்தரீயத்தையுமொத்த. (௪௨)

உறவெதுப்புறுங்கொடுந்தொழில்வேனிலானொழியத்
திறநினைப்பருங்காரெனுஞ்செவ்வியோன்சேர
நிறமனத்துறுகுளிர்ப்பினினெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தனபோன்றனபசும்புல். (௪௩)

தேனவாமலர்த்திசைமுகன்முதலினர்தெளிந்தோர்
ஞானநாயகனவையுறநோக்கினர்நல்கக்
கானம்யாவையும்பரப்பியகண்ணொனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பனபோன்றனமஞ்ஞை. (௪௪)

செஞ்செவேலவர்செறிசிலைக்குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புதுநிறங்கொடுக்கும்

---

41. குரண்டம் - வெண்கொக்கு.

44. மஞ்ஞை - மயில்.

பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கென நுடங்கின வல்லி. (சரு)

நீயிரன்னவர்குதலையராதலினேடிப்
போயதையலைத்தருதிரென்றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தனபோந்திடைத்தேடிக்
கூயவாய்க்குரல்குறைந்தபோற்குறைந்தனகுயில்கள். (சசா)

பொழிந்தமாநிலம்புற்றரக்குமட்டிடபுனிற்று
எழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையினைப்பொருவினபிடவம். (சஎ)

வேங்கைநாறினகொடிச்சியர்வடிக்குழல்விரைவண்
டேங்கநாகமுநாறினநுளைச்சியரைம்பால்
ஆங்குநாண்முல்லைநாறினவாய்ச்சியரோதி
ஞாங்கருற்பலமுழத்தியர்பித்திகைநாற. (சஅ)

தேரைக்கொண்டபேரல்குலாடிருமுகங்காணான்
ஆரைக்கண்டுயிராற்றுவானல்லுணர்வழிந்தான்
மாரற்கெண்ணில்பல்லாயிரமலர்க்கணைவகுத்த
காரைக்கண்டனன்வெந்துயர்க்கொருகரைகாணான். (சகூ)

அளவில்காரெனுமப்பெரும்பருவம்வந்தணைந்தால்
தளர்வரென்பதுதவம்புரிவோருக்குந்தகுமால்
இளவிதேனினுமமிழ்தினுங்கிளைத்தவெள்வளைதோள்
வளவியுண்டவன்வருந்துமென்றுலதுவருத்தோ. (ருo)

காவியுங்கருங்குவளையுநெய்தலுங்காயாம்
பூவையும்பொருவானவன்புலம்பினன்றளர்வான்
ஆவியுஞ்சிறிதுண்டுகொலாமெனவயிர்த்தான்
தூவியன்னமன்னுடிறத்திவையிவைசொல்லும். (ருக)

வேறு.

வாரேர்முலையாளமறைக்குநர்வாழ்
ஊரேயறியேனுயிரோடுழல்வேன்
நீரேயுடையாயருணின்னிலையோ
காரேயெனதாவிகலக்குதியோ. (ருஉ)

46. கூய - அழைத்த.
47. பிடவம் - ஒருமலர். 48. பித்திகை - கூந்தல்.

வெப்பார்நெடுமின்னினெயிற்றைவெகுண்
டெப்பாலும்விசும்பினிருண்டெழுவாய்
அப்பாதகவஞ்சவரக்கரையே
ஒப்பாயுயிர்கொண்டலதோவலையோ. (ருங)

அயிலேவிழியார்விளையாரமிழ்தின்
குயிலேமொழியார்க்கொணராய்கொடியாய்
துயிலேனொருவேனுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீவலியாடுதியோ. (ருச)

மழைவாடையொடாடிவலிந்துயிர்மேல்
நுழைவாய்மலர்வாய்நொடியாய்கொடியே
இழைவாணுதலாளிடைபோலிடையே
குழைவாயெனதாவிகுழைக்குதியோ. (ருரு)

விழையேன்விழைவானவைமேன்மையினின்
றிழையேனுணர்வேனவையின்மையினால்
பிழையேனுயிரோடுபிரிந்தனரால்
உழையேயவரெவ்வுழையாருரையாய். (ருசு)

பயில்பாடகமெல்லடிபஞ்சனையார்
செயிரேதுமிலாரொடுசேருதியோ
அயிராதுடனேயகல்வாயலையோ
உயிரேகெடுவாயுறவோர்கிலையோ. (ருஎ)

ஒன்றைப்பகராய்குழலுடைக்குடையாய்
வன்றைப்புறுநீள்வயிரத்தினையே
கொன்றைக்கொடியாய்கொணர்கின்றிலையே
என்றைக்குறவாகவிருந்தனையே. (ருஅ)

வேறு.

குராவரும்பனையகூர்வாளெயிற்றுவெங்குருளைநாகம்
விராவுவெங்கடுவிற்கொல்லுமெல்லிணர்முல்லைவெய்தின்
உராவருந்துயரமூட்டியோய்வறமலைவதொன்றோ
இராவணகோபநிற்கவிந்திரகோபமென்றோ. (ருகூ)

---

53. ஓவலையோ - ஒழியாயோ.

55. நொடியாய் - பேசுவாயாக.

59. இணர் - கொத்து.

ஓடைவானுதலினாளையொளிக்கலாமுபாயமுன்னி
நாடிமாரீசனோராடகநவ்வியானான்
வாடையாய்க்கூற்றினூருமுருவினைமாற்றிவந்தார்
கேடுசூழ்வார்க்குவேண்டுமுருக்கொளக்கிடைத்தவன்றே. (சுO)

அருவினையரக்கரென்னவந்தரமதனில்யாரும்
வெருவரமுழங்குகின்றமேகமேமின்னுகின்றாய்
தருவலென்றிரங்கினேயோதாமரைமறந்தகையல்
உருவினைக்காட்டிக்காட்டியொளிக்கின்றியொளிக்கின்றாயால். (சுக)

உண்ணிறைந்துயிர்க்கும்வெம்மையுயிர்சுடவுடலைபுள்ளம்
புண்ணுறவாளிதூர்த்தல்பழுதினிப்போதிமாரா
எண்ணுறுகல்வியுள்ளத்திளையவனின்னேயுன்னைக்
கண்ணுறுமாயிற்பின்னைபாரவன்சிற்றங்காப்பார். (சுஉ)

வில்லும்வெங்கணையும்வீரர்வெஞ்சமத்தஞ்சினார்மேல்
புல்லுவவல்லவாற்றல்போற்றலர்குறித்தல்போலாம்
அல்லுநன்பகலுநீங்காவனங்கநீயருளிற்றீர்ந்தாய்
செல்லுமென்றெனிவந்தோமேற்செலுத்தலுந்நேர்மைத்தாமோ. ()

என்னவித்தகைபன்னியிடழிந்திரங்குகின்ற
தன்னையொப்பானைநோக்கித்தகையழிந்தயர்ந்ததம்பி
நின்னையித்தகைமையாகநினைந்தனைநெடியோயென்னா
சென்னியிற்சுமந்தகைபன்றேற்றுவானின்செப்பலுற்றான். (சுச)

வேறு.

காலநீளிதுகாருமாரியும்வந்ததென்றகவார்ந்திபோ
நிலமேனியரக்கர்வீரநினைந்தழுங்கியநேர்மைபோ
வாலிசேனைமடந்தைதவைகிடநாடவாரலதானைபோ
சாலுநல்லுணர்கேள்விவீரதளர்ந்ததென்னைதவத்தினாய். (சுரு)

மறைதுளங்கினுமதிதுளங்கினும்வானுமாழ்கடல்வையமும்
நிறைதுளங்கினுநிலைதுளங்குறுநிலைமைநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவவனையபேரெயிறுடையபேதையர்பெருமைநின்
இறைதுளங்குறுபுருவபொன்சிலையிடைதுளங்குறவிசையுமோ. (சுசு)

அனுமனென்பவனளவறிந்தனமறிஞவங்கதனதியோர்
எனையரென்பதெதாரிறுதிகண்டிலமெழுபதென்றொறனுமியல்பினோர்

64. தகையழிந்து - நிலைமைகெட்டு.
66. பேதையர் - அறிவிலிகளான அசுரர்.

வினையின்வெந்துயர்விரவு திங்களும்விரைவுசென்றனவெளி தினின்
தனுவெனுந்திருநுதலிவந்தனள்சரதம்வன்றுயர்தவிர்தியே. (௬எ)

மறையறிந்தவர்வரவுகண்டுமைவலியும்வஞ்சகர்வழியொடும்
குறையவென்றிடர்களைவெனென்றனைகுறைமுடிந்ததுவிதியினல்
இறைவவங்கவரிறுதிகண்டினிதிசைபுனைந்திமையவர்கடாம்
உறையுமும்பருமுதவிநின்றருளுணர்வழிந்திட லுறுதியோ. (௬அ)

காதுகொற்றநினக்கலாமைபிறர்க்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரதையன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டுதோர்பொருளன்றியின்றுபுணர்த்தியேல்
யாதுனக்கியலாதகெதந்தைவருந்தலென்னவியம்பினன். (௬௯)

சொற்றதம்பியுரைக்குணர்ந்துயிர்சோர்வொடுங்கியதொல்லையோன்
இற்றவின்னலியக்கமெய்திடவைகல்பற்பலவேகமேல்
உற்றுநின்றவினைக்கொடும்பிணியொன்றின்மேலுடனொன்றுராய்
மற்றும்வெம்பிணிபற்றினுலெனவந்தெதிர்ந்ததுமாரியே. (எ௦)

வேறு.

நிறைந்தனநெடுங்குளநெருங்கினதரங்கம்
குறைந்தனகருங்குயில்குளிர்ந்தவுயர்குன்றம்
மறைந்தனகடந்திசைவருந்திறைபிரிந்தார்
உறைந்தனவகன்றிலுடனன்றிலுயிரொன்றி. (எ௧)

பாசிழைமடந்தைபர்பழிப்பிலகலல்குற்
றாககொட நசனனிவெம்மைதொடர்வுற்றே
வீசியதுவாடையெரிவெந்தவிர்புள்வீழ்
ஆசிலயில்வாளியெனவானரபுரிவார்மேல். (எ௨)

வேலைநிறையுற்றனவெயிற்கதிர்வெதும்பும்
சீலமழிவுற்றபுனலுற்றுருகுசெப்பின்
காலமறிவுற்றுணர்தல்கன்னலளவல்லால்
மாலைபகலுற்றதெனவோர்வரிதுமாதோ. (எ௩)

நெற்கிழியநெற்பொதிதிரம்பினபிரம்பாச்
சொற்கிழியநற்கிளிகடோகையவர்தாய்மின்

---

67. சரதம் - உண்மை.

70. வைகல் - நாள்.

71. அகன்றில் - ஒருசாதிப்பறவை. அன்றில் - ஒருசாதிப்புள்.

73. கன்னல் - நாழிகைவட்டில்.

பற்கிழிமணிப்படர்திரைப்பரதர்முன்றில்
பொற்கிழிவிரித்தனசினைப்பொதுள்வபுன்னை. (௭௪)

நிறங்கருகுகங்குல்பகனின்றநிலைநீங்கா
அறங்கருதுசிந்தைமுனியந்தணரினாலிப்
பிறங்கருநெடுந்துளிபடப்பெயர்வில்குன்றின்
உறங்கலில்விலங்கலிலநின்றவுயர்வேழம். (௭௫)

சந்தினடையிற்படலைவேதிகைநடந்தோ
றந்தியிடகிற்புகைநுழைந்தகுளிரன்னம்
மந்திதுயிலுற்றமுழைவன்கடுவனங்கத்
திந்தியமவித்ததனியோகரினிருந்த. (௭௬)

ஆசில்சுனைவாலருவியாயிழைபரம்பால்
வாசமணநாறலிலவானமணிவன்கால்
ஊசல்வறிதானவிதழொண்மணிகள்விண்மேல்
வீசலிலவானினெடுமாரிதுளிவீச. (௭௭)

கருந்தகையதண்சினையகைதமடல்காதல்
தருந்தகையபோதுகிளையிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறையொடுங்கியுடல்போரா
திருந்தகுருகின்பெடைபிரிந்தவர்களொன்ன. (௭௮)

பதங்கமுழவொத்தவிசைபன்முறைமிறுபன்ன
விதங்களினடித்திடுவிகற்பவழிமேவும்
மதங்கியரையொத்தமயில்வைகுமரமூலத்
தொதுங்கினவுழைக்குலமழைக்குலமுழக்க. (௭௯)

விளக்கொளியகிற்புகைவிழுங்கமளிமென்கொம்
பிளைக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தகுமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
றொளைத்துயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி. (௮௦)

தாமரைமலர்த்தவிசிகந்துதகையன்னம்
மாமரநிரைத்தொகுபொதும்பருழைவைகத்
தேமரனடுக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தாமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார். (௮௧)

---

76. அங்கத்திந்தியமவித்த - உடலிலுள்ள பஞ்சேந்திரியங்களை ஒடுக்கிய.
79. பதங்கம் - விட்டுவிட்டொலிக்குமொருவகைப்பறவை, சிள்வீடுமாம், ஒத்த - அடிக்க.

வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரங்கோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரிதெனளித்துழனெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசிமூழ்கிடவிருந்த. (அ௨)

சரம்பயினெடுந்துளிநிமிர்ந்தபுயல்சார
உரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுங்கா
வரம்பகனெடும்பிரசம்வைகல்பலவைகும்
முரம்பினிணிரம்பலமுழைஞ்சிடைநுழைந்த. (அ௩)

இத்தகையமாரியிடைதுன்னியிருளெய்த
மைத்தகுமணிக்குறுநகைச்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வத்தினனெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனைமுன்னினன்விளம்பும். (அ௪)

வேறு.

மழைக்கருமின்னெயிற்றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையுமெதிர்வுற்றின்னலின்
உழைத்தனளேலந்துயிருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமிதென்னபெற்றியோ. (அ௫)

தூநிறச்சுடுசரந்தூணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத்தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமிங்கிலை
வேனிறத்துற்றதொத்துழியும்வீகிலேன். (அ௬)

தெரிகணைமலரொடுந்திறந்தநெஞ்சொடும்
அரியவன்றுயரொடும்யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணிவிளக்கினின்றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்வகூட்டினுள். (அ௭)

வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவேனெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான்முடித்தகாரியம்
மேனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமால். (அ௮)

மறந்திருந்துய்கலேன்மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வதுசாதமிப்பழி

89. சாதம் - உண்மை.

பிறந்துபின் றீர்வலோபின்னரன்னது
துறந்துசென்றுறுவலோ துயரின் வைகுவேன். (அகூ)

ஈண்டுநின் றரக்கர் தமிருக்கையாமினிக்
காண்டலிற் பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவ தன்றிது வீரநோய்தெற
மாண்டனெனென் றதுமாட்சிப்பாலதால். (கூ0)

செப்புருக்கனையவிம்மாரிச்சீகரம்
வெப்புறப்புருஞ்சுடவெந்துவீவதோ
அப்புருக்கொண்டவாணெடுங்கணாயிழை
துப்புருக்குமுதவாய் நுகர்ந்துதுய்த்தயான். (கூக)

நெய்யடைதீயெதிர்நிறுவிநிற்கவன்
கையடையென்றவச்சனகன்கட்டுரை
பொய்யடையாக்கியபொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ. (கூஉ)

தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
றூற்றுவேனுனுளனுகவாய்வளை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ. (கூ௩)

விட்டபோர்வாளிகள்விரிஞ்சன்விண்ணையும்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்டுமோ. (கூச)

தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
தெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டருமையின்வீந்தனரென் னுமஃதலால்
உருமெனவொலிபடுமுரவிலோயென்றான். (கூ௫)

இளவலுமுரைசெய்வானெண் ணுநாளினும்
உளவல கூதிருமிறுதியுற்றதால்
களவுசெய்தவருறைகாணுங்காலமீ
தளவியதயர்வதெனுணையாழியாய். (கூ௬)

91. செப்புருக்கனைய - செம்புருகினாற்போன்ற.
92. பொறி - அறிவு.
95. உரவிலோய் - வலியவில்லினையுடையாய்.
96. உறை - இருப்பிடம்.

திரைசெயத் திண்கடலமிழ்தந்தசெங்கணான்
உரைசெயத் தரினுமத்தொழி லுவந்திலன்
வரைமுதற்கலப் பைகண்மாடுநாட்டித்தன்
குரைமலர்த் தடக்கையாற்கடைந்துகொண்டனன். (கூ௭)

மனத்தினி னுலகெலாம்வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனாயினுநேமியானொடு
மெனைப்பலபடைக்கலமேந்தியாவையும்
வினைப்பெருஞ்சூட்சியிற்பொருதுவெல்லுமால். (கூஅ)

கண்ணுடைநுதலினன்கணிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியுமீட்டிக்கொண்டவும்
அண்ணலேயொருவராலறியற்பாலவோ. (கூகூ)

ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடையெய்தியெண்ணுவ
சேகறப்பன்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ. (க00)

அறத்துறைதிறம்பினரரக்கராற்றலர்
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனின்
புறத்தினியார்திறம்புகழும்வாகையும். (க0க)

பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவாய்
அந்தணர்க்காகுநாமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான். (க0உ)

உறுதியஃதேயெனவுணர்ந்தவூழியான்
இறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழந்தனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப்பருவமாண்டுபோய். (க0ங)

மள்கலில்பெருங்கொடைமருவிமண்ணுளோர்
உள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க்கீவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே. (க0ச)

---

99. கணிச்சி - மழு.

தீவினை நல்வினையென்னத் தோற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்யுணர்வணுகவாசுறு
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள். (க0ரு)

மூளமர்தொலைவுறமுரசவிந்தபோல்
கோளமைக்கொண்முகில்குமுறலோவின
நீளடிகணையெனத்துளியுநீங்கின
வாளுறைபுற்றெனமறைந்தமின்னெலாம். (க0சு)

தடித்ததாணெடுந்தடங்கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
எடுத்தநூலுத்தரியத்தொடெய்திநின்
றுடுத்தவானிறத்துகிலொழிந்தபோலுமே. (க0எ)

மேகமாமலைகளின்புறத்துவீதலால்
மாகயாறியாவையும்வாரியற்றன
வாகையாற்றகவுமுந்தழிவினன்பொருள்
போகவாறுழுகலான்செல்வம்போன்றவே. (கஅ)

கடந்திறந்தெழுகளிறனையகார்முகில்
இடந்திறந்தேதகவிற்பொலிந்ததிந்துவும்
நடந்திறனவில்வுறுநங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற்பொலியும்பான்மைபோல். (கஅசு)

பாசிழைமடந்தையர்பகட்டுவெம்முலை
பூசியசாந்தொடுபுழுகுகுங்குமம்
மூசினமுயங்குசேறுழியமொண்டுற
வீசியநறுமலர்விண்டுவாடையே. (கக0)

மன்னவன்றலைமகன்வருத்தமாற்றுவான்
அந்நெறிப்பருவம்வந்தணுகிற்றுகலால்
பொன்னினைநாடியபோதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசையகன்றவிண்ணின்வாய். (ககக)

தஞ்சிறையொடுக்கினதழுவுமின்னல
நெஞ்சுறுபயனிலநினைப்புநீண்டன

108. மாகயாறு - ஆகாயவழி.

110. பகட்டு - தோற்றம். 109. கடம் - மததாரை.

மஞ்சுழுநெடுமழைபிரிந்தமாமயில்
அஞ்சினமிதிலைநாட்டன்னமன்னவாய். (ககஉ)

வஞ்சனைதீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீரநீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன். (ககங)

வாடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன
சேடுறுநறுமுகைவிரிந்தசெங்கிடை. (ககச)

கல்வியிற்றிகழ்கணக்காயர்கம்பலை
பல்விதச்சிறாஅரெனப்பகர்வபல்லரி
செல்விடத்தல்லதோன்றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தநாவெலாம். (ககரு)

செறிபுனற்பூந்துகிறிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத்தொத்தவோதநீர்
எறுழ்வலிக்கணவனைமெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றனபோன்றமுத்தெலாம். (ககசு)

சொன்னிறைகேள்வியிற்றொடர்ந்தமாந்தரின்
இன்னிறப்பசலையுற்றிருந்தமாதரின்
தந்நிறம்பயப்பயநீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம். (ககஎ)

பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவண்
இயன்றனவிளவெயிலேய்ந்தமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத்தடங்கடோறுமே. (ககஅ)

கொஞ்சுறுங்கிளிநெடுங்குதலைகூடின
அஞ்சிறையறுபதமளகவோளிய
எஞ்சலில்குழையனவிடைநுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தனமகளிர்மாலைபோல். (ககசு)

115. கணக்காயர் - உபாத்தியாயர்.

117. பசலை - மகளீர்மாட்டுக்காமங்கைமிக்க காலத்துக்காணுமொருவகை நிறம்.

அளித்தனமுத்தினந்தோற்பமானனூர்
வெளித்தெதிர்விழிக்கவும்வெள்கிமேன்மையால்
ஒளித்தனவாமெனவொடுங்குகண்ணன
குளித்தனமண்ணிடைக்கூனனந்தெலாம். (கஉ௦)

மழைபடப்பொதுளியமருதத்தாமரை
தழைபடப்பேரிலைப்புரையிற்றங்குவ
இழைபடப்பெடையொடுமெள்ளினள்ளிகள்
புழையடைத்தொடுங்கினவச்சைமாக்கள்போல். (கஉக)

ஆ திருவிருத்தம் - ருஎச.

## அ-வது, கிட்கிந்தைப்படலம்.

அன்னகாலமகலுமளவினில்
முன்னவீரனிளவலைமொய்ம்பினோய்
சொன்னவெல்லையினூங்குமத்தூங்கிய
மன்னன்வந்திலனென்செய்தவாறரோ. (க)

பெறலருந்திருப்பெற்றுதவிப்பெருந்
திறனினைந்திலன்சீர்மையிற்றீர்ந்தனன்
அறமறந்தனனன்புகிடக்கநம்
மறனறிந்திலன்வாழ்வின்மயங்கினான். (உ)

நன்றிகொன்றருநட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மைசிதைத்துரைபொய்த்துளார்க்
கொன்றுநீக்குதல்குற்றத்தினீங்குமால்
சென்றுமற்றவன்சிந்தையைத்தேர்குவாய். (ங)

வெம்புகண்டகர்விண்புகவேரறுத்
திம்பர்நல்லறஞ்செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங்கூற்றமுமுண்டுங்கள்
அம்புமுண்டென்றுசொல்லுநம்மாணையே. (ச)

நஞ்சமன்னவரைநலிந்தாலது
வஞ்சமன்றுமனுவழக்காதலான்

---

120. இளிங்கெதிர் விழிக்கலமென்று வெள்கியே. என்றும்பாடம்.
121. நள்ளிகள் - நண்டுகள். வச்சைமாக்கள் - உலோபிகள்.
1. தூங்கிய - தாமதஞ்செய்த. 3. நீங்கும் - கழியும்.

அஞ்சிலம்பதிலொன்றறியாதவன்
நெஞ்சினின்றுநிலாவநிறுத்துவாய். (ரு)

ஊருமாளுமரசுமுஞ்சுற்றமும்
நீருமாளுதிரென்பதுநேர்ந்தநாள்
வாரும்வாரலிராமெனின்வானரப்
பேருமாளுமெனும்பொருள்பேசுவாய். (சு)

இன்னாநாடுதுமிங்கிவர்க்கும்வலி
துன்னினாரையெனத்துணிந்தாரெனின்
உன்னைவெல்லவுலகொருமூன்றினும்
நின்னலாற்பிறரின்மைநிகழ்த்துவாய். (எ)

நீதியாதிநிகழ்த்தினைநின்றது
வேதியாதபொழுதுவெகுண்டவண்
சாதியாதவர்சொற்றரத்தக்கனை
போதியாதியென்றான்புகழ்ப்பூணினான். (அ)

ஆணைசூடியடிதொழுதாண்டிறை
பாணியாதுபடர்வெரின்பாழ்படாத்
தூணிபூட்டித்தொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினன்சிந்தையுநீங்கலான். (கூ)

மாறுநின்றமரனுமலைகளும்
நீறுசென்றுநெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன்மென்மையனாயினும்
ஆறுசென்றிலனாணையினேகுவான். (க௦)

விண்ணுறத்தொடர்மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக்கழுந்தினமாதிரம்
கண்ணுறத்தெரிவுற்றதுகட்செவி
உண்ணிறக்கழற்சேவடியூன்றலால். (கக)

வெம்புகானிடைப்போகின்றவேகத்தால்
உம்பர்தோயுமராமரத்தூடுசெல்

---

5. அஞ்சியல்ல தொன்றாறிவார் என்றும், அஞ்சிலம்பதில் என்றும் பாடம்.

7. உன்னை-என்றதிலக்குமணனை. பாணியாது-காலதாமதஞ்செய்யாமல்.

10. ஆறு - வழி.

அம்பிற்சென்றனனன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலுமானவன்றம்பியே. (கஉ)

மாடுவென்றியொர்மாதிரயாளையின்
சேடுசென்றுகெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநண்ணியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனாயினான். (கங)

உருக்கொளொண்கிரியொன்றினின்றொன்றினைப்
பொருக்கவெய்தினன்பொன்றொளிர்மேனியான்
அருக்கன்மாவுதயத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினையெய்தியபண்பினால். (கச)

தன்றுணைத்தமையன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச்சீயமும்போன்றனன். (கரு)

கண்டவானரங்காலனைக்கண்டபோல்
மண்டியோடினவாலிமகற்கையா
கொண்டசீற்றத்திளையோன்குறுகினான்
சண்டவேகத்தினாலென்றுசாற்றலும். (கசு)

அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
இன்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற்றுணைதாயிற்போயினான். (கஎ)

நளினியற்றியநாயகக்கோயிலுள்
தளமலர்த்தகப்பள்ளியிற்றுழ்குழல்
இளமுலைச்சியரேந்தடிதைவர
விளைதுயிற்குவிருந்துவிரும்புவான். (கஅ)

தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாம்
கள்ளினாலதிகங்களித்தான்கதிர்ப்
புள்ளிமாநெடுப்பொன்வரைபுக்கதோர்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான். (ககூ)

---

12. மானவன் - போர்வீரன்.
13. மாதிரம் - திக்கு.
14. பொருக்க - விரைவாக.
15. சீயம் - சிங்கம்.

சிந்துவாரத் தருநறை றதேக்கலில்
சந்தமாமயிற் சாயலர் தாழ்குழற்
கந்தமாமலர்க்காடு கடாவிய
மந்தமாருதம் வந்துறவைகுவான். (உ0)

தித்தியா நின்ற செங்கிடைவாய்ச்சியர்
முத்தவாண்முகை முள்ளெயிற் றூறுதேன்
பித்துமா லும்பிறவும் பெருக்கலான்
மத்தவாரண மென்ன மயங்கினான். (உக)

மகுடகுண்டல மேமுதன் மண்டலத்
துகுநெடுஞ்சுடர்க் கற்றை யுலாவலால்
பகலவன்சுடர் பாய்பனிமால்வரைத்
தகமலர்ந்து பொலிந்து தயங்குவான். (உஉ)

கிடந்தனன் கிடந்தானைக் கிடைத்திரு
தடங்கைகூப்பினன் றுரைமுன் னாட்டந்த
மடங்கல்வீரன மம்மாற்றம் விளம்புவான்
றொடங்கினானவனைத் துயினீக்குவான். (உங)

எந்தை கேளவ்விராமற் கிளையவன்
சிந்தையுண் ணெடுஞ்சீற்றந் திருமுகம்
தந்தளிப்பத் தடுப்பரும் வேகத்தன்
வந்தனனுன் மனக்கருத் தியாதென்றான். (உச)

இனையமாற்ற மிசைத்தனனென்பதோர்
நினைவிலா நெடுஞ்செல்வ நெருக்கவும்
நனைநறுந்துளி நஞ்சுமயக்கவும்
தனையுணர்ந்திலன் மெல்லனை தங்கினான். (உரு)

ஆதலோடு மரசிளங் கோளரி
யாதுமுன்னின் றியற்றுவதின்மையால்
கோதில்சிந்தைய நுமனைக்கூவுவான்
போதன் மேயினன் போதக மேயனான். (உசு)

மந்திரத் தனிமாருதி தன்னொடும்
வெந்திறற்படை வீரர் விராய்வர

---

20. சிந்துவாரத்தருநறை - அரும்நறை சிந்து ஆரத்து என்று கொண்டு கூட்டுக.

23. கிடைத்து - அடைந்து. 26. போத - போக.

அந்தரத்தின்வந்தன்னை தன்கோயிலை
இந்திரற்குமகன்மகனெய்தினான். (௨௭)

எய்திமேற்செயத்தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்திலன்னவைநீக்கவுநோக்குதிர்
உய்திர்போலுமுதவிகொன்றீரெனா. (௨௮)

மீட்டுமொன்றுவிளம்புகின்றாள்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவன்கூறிய
நாட்டிறம்பினுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிலீரினிக்காண்டிர்கிடைத்திரால். (௨௯)

வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினோர்க்கெலாம். (௩0)

தேவிநீங்கவத்தேவரிற்சீரியன்
ஆவிநீங்கினன்போலயர்வானது
பாவியாதுபருகுதிர்போலுநும்
காவிநாண்மலர்க்கண்ணியர்காதனீர். (௩௧)

திறம்பினீர்மெய்சிதைத்திருதவியை
நிறம்பொலீஇருங்கடிவினைநேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின்மாளுதிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெனென்கின்றபோதின்வாய். (௩௨)

கோளுறுத்தற்கரியகுரக்கினம்
நீளெழுத்தொடருநெடுவாயிலைத்
தாளுறுத்தித்தடவரைதந்தன
மூளுறுத்தியடுக்கினமொய்ம்பினால். (௩௩)

சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்ததுவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன. (௩௪)

---

27. இந்திரற்குமகன் மகன் - அங்கதன்.
29. நுந்நாள் - உமது வாழ்நாள்.
31. பாவியாது - கருதாது.

காக்கவோகருத்தெதன்முகத்தினால்
பூக்கமூரற்புவலர்புங்கவன்
தாக்கணங்குறைநாமமைத்தாளினால்
நூக்கினனக்கதவினைநொப்தினின். (௩௫)

காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேயும்வாயிலடுக்கியவெற்பொடும்
தேவுசேவடிதீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால். (௩௬)

நொய்தினோன்கதவும்முதுவாயிலும்
செய்தகன்மதிலுந்திசையோசனை
ஐயிரண்டினளவடியற்றுக
வெய்துநின்றகுரக்கும்வெருக்கொள. (௩௭)

பரியமாமதிலும்படர்வாயிலும்
சரியவீழ்ந்ததடித்தின்முடித்தலை
நெரியநெஞ்சுபிளக்கநெடுந்திசை
இரியலுற்றனவிற்றிலவின்னுயிர். (௩௮)

பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலான்
சிகரமால்வரைசென்றுதிரிந்துழி இ
மகரவேலையையொத்ததுமாநகர். (௩௯)

வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானெருங்குபடரவக்கார்வரை
மீனெருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே. (௪௦)

அன்னகாலையினண்டகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவதெய்தினனென்றனர். (௪௧)

அனையனுள்ளமுமாய்வளையாயலாம்
மனையின்வாயில்வழியினைமாற்றினால்

35. தாக்கணங்கு - வீரலட்சுமி.

39. சிகரமால்வரை - கொடுமுடிகளையுடைய பெரியமலை.

நிலையும்வீரனந்நீணெறிநோக்கலன்
வினையமீதென்றநுமன்விளம்பினான். (௪௨)

நீரெலாமயனீங்குமினோர்ந்தியான்
வீரனுள்ளம்விளங்குவலென்றலும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாரைசென்றனடார்குழலாரொடும். (௪௩)

உரைசெய்வானரவீரருவந்துறை
அரைசர்வீதிகடந்தகன்கோயிலைப்
புரசையானையன்றான்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற்றாரைவிலக்கினாள். (௪௪)

விலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
இலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கடோகைமகளிர்குழாத்தினால்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினாள். (௪௫)

வில்லும்வாளுமணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன்மேகலையார்த்தெழப்
பல்வகைப்புருவக்கொடிபம்பிட
வல்லியாயம்வலத்தினில்வந்ததே. (௪௬)

வேறு.

ஆர்க்குநூபுரங்கள்பேரியல்குலாந்தடந்தேரொத்த
வேற்கண்வெம்புருவம்போர்வின்மெல்லியர்வளைந்தபோது
பேர்க்கருஞ்சீற்றம்பேரமுகம்பெயர்ந்தொதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினானப்பனையினுமுயர்ந்ததோளான். (௪௭)

தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தாளெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனார்தம்பொதுவிடைப்புகுந்துபொற்றோள்
தூமனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னாள். (௪௮)

அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினோராலெய்தலாமியல்பிற்றன்றே
மைந்தநின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறினினுங்குண்டோ. (௪௯)

---

46. வல்லியாயம் - மடவார்கூட்டம்.

வெய்தினீவருதமேற்கிவெருவுறுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்றாள்
ஐயநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்றாளிசையினுமினியசொல்லாள். (ருo)

ஆர்கொலோவுரைசெய்தாரென்றருள்வரச்சிற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலும்
ஏர்குலாமுகத்தினாளையிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன்றாயரைநினைந்துநைந்தான். (ருக)

மங்கலவணியைநீக்கிமணிபணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கொட்டாப்
பொங்குவெம்முலைகள்பூகக்கபூத்தொடுமறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ளனயனங்கள்பனிப்பநின்றான். (ருஉ)

இனையராமென்னையீன்றவிருவருமென்னவந்த
நினைவினனயர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்றான்
வினவினட்கெதிரோர்மாற்றம்விளம்பவும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகல்வதானான். (ருஙு)

சேனையும்யானுந்தேடித்தேவியைத்தருவலென்று
மானவற்குரைத்தமாற்றமறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லையறியெனவருளின்வந்தேன்
மேனிலையனையான்செய்கைவிளைந்தவாவிளம்புகென்றான். (ருச)

சீறுவாயல்லையைசிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீயலான்மற்றாருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
ஊறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ. (ருரு)

ஆயிரகோடிதூதரரிக்கணமழைப்பவாணை
போயினர்புகுதுநாளும்புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுநல்லநீரேதணிதிராற்றருமமஃதால்
தீயனசெய்யாராயின்யாவரேசெறுநராவார். (ருசு)

அடைந்தவர்க்கபயநீவிரருளியவளவில்செல்வம்
தொடர்ந்துநும்பணியிற்றீர்ந்தாலதுவுறுந்தொழிலேயன்றே

50. வெய்தில் - விரைவாக.
52. மங்கலவணி - மங்கலசூத்திரம்.
55. சீறுவாயல்லை - கோபங்கொள்ளாதே.

மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா. (ருஎ)

செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வரென்னினெளிமையாயொழிவதொன்றோ
இம்மையேவறுமையெய்தியிருமையுமிழப்பரன்றே. (ருஅ)

ஆண்டுபோர்வாலியாற்றன்மாற்றியதம்பொன்றாயின்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார்நுங்கழல்புகுந்துளோரும். (ருகூ)

என்றவனுரைத்தமாற்றம்யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரநாணுட்கொண்டான்
நின்றனனிற்றலோடுநீத்தனன்முனிவென்றான்றோ
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்கின்வந்தான். (சூ0)

வந்தடிவணங்கிநின்றமாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயுமயர்த்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றான்முனிவினுமுளைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென்றுவியம்பினனியம்பவல்லான். (சூக)

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
உதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ. (சூஉ)

ஐயநும்மோடுமெங்களரிக்குலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாகமேலைநாள்விளைவதாய
செய்கையென்செய்கையன்றோவன்னதுசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோவுணர்வுமாசுண்டதன்றோ. (சூங)

தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத்திறமுமற்றும்
யாவருநீரேயென்பதெனவயிற்கிடந்ததெந்தாய்
ஆவதுநிற்கச்சேருமரணுண்டோவருளுண்டன்றேல்
மூவகையுலகங்காக்குமொய்ம்பினீர்முனிவுண்டானல். (சூச)

---

60. மாற்றம் - சொல்.
62. வதைபுரிகுநர் - கொலைபுரிவோர்.
63. மாசுண்டது - அழுக்கடைந்தது. 64. அரண்-காவல்.

மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பாரைத்
திறந்திறமேவியன்னான்செம்மையிற்சிறியனானான்
அறந்துணைநுமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலேனன்றேயொன்றோநரகமும்பிழைப்பதன்றால். (௬௫)

உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதவானையனையமைந்தமற்றுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்னான்முன்சென்றுசெறுநர்மார்பின்
உதையானேனுதையுண்டாவியுலையானேனுலகின்மன்னோ. (௬௬)

ஈண்டினிநிற்றலென்பதினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங்கேண்மைதீர்வினையிற்றாமால்
ஆண்டகையாளிமொய்ம்பினையநீரளித்தசெல்வம்
காண்டியானுன்முன்வந்தகவிக்குலக்கோனொடென்றான். (௬௭)

மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றுநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தாரல்லர்வந்தடுத்தசெல்வம்
பேரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி. (௬௮)

அனையதுகருதிப்பின்னரரிக்குலத்தவனைநோக்கி
நினையொருமாற்றமின்னேநிகழ்த்துவதுளதுநின்பால்
இனையனவுரைத்தற்கேற்றவெண்ணுநியிவைநீயென்னா
வனைகழல்வயிரத்திண்டோண்மன்னிளங்குமரன்சொல்வான். (௬௯)

தேவியைக்குறித்துச்செய்தசீற்றமுமானத்தீயும்
ஆவியைக்குறித்துநின்றதையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற்றசெய்கைகருதுவல்பழியும்பாரேன். (௭௦)

ஆயினுமென்னையானேயாற்றிநின்றாவியுற்று
நாயகன்றனையுந்தேற்றநாள்பலகழிந்தவன்றேல்
தீயுமிவ்வுலகமூன்றுந்தேவரும்வீவரொன்றோ
வீயுநல்லறமும்போகாவிதியையார்விலக்கற்பாலார். (௭௧)

உன்னைக்கண்டுங்கோன்றன்னையுற்றிடத்துதவும்பெற்றி
என்னைக்கண்டன்னதோர்ந்திந்நாளிடைநெடிதுவைகித்

---

66. உதவாமல் - தானொன்றுஞ் செய்யாமல்.
67. யாளி - சிங்கம். யானையாளியாவுமாம்.

தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தானன்றெனிற்றனுவொன்றாலே
மின்னைக்கண்டனையாடன்னைநாடுதல்விலக்கற்பாற்றோ. (௭௨)

ஒன்றுமோவானமின்றியுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழுமலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளேயெனினதுநெடியதொன்றோ
அன்றுநீர்சொன்னமாற்றந்தாழ்வித்தறருமமன்றால். (௭௩)

தாழ்வித்தீரல்லீர்பன்னாடுருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தீயாளர்துன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானைமுனிவித்தீர்முடிதிரென்றான். (௭௪)

தோன்றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
ஆன்றநூலறிஞருபோயபொருண்மனத்தடைப்பாயல்லை
என்றதுமுடியேமென்னினிறத்துமித்திறத்துக்கெல்லாம்
சான்றினியறனேபோந்துன்றம்முனைச்சார்தியென்றான். (௭௫)

முன்னுநீசொல்லிற்றன்றோமுயன்றதுமுயற்சிதானும்
இன்னுநீயிசைத்தசெய்வானினையந்தனமென்றுகூறி
அன்னதோரமைதியான்றனருள்சிறிதறிவானோக்கிப்
பொன்னின்வார்சிலையினானுமாருதியோடும்போனான். (௭௬)

அயில்விழிக்குமுதச்செவ்வாய்ச்சிலைநுதலன்னப்போக்கின்
மயிலியற்கொடித்தேரல்குன்மணிநகைத்திணிவேய்மென்றோட்
குயின்மொழிக்கலசக்கொங்கைமின்னிடைக்குமிழேர்மூக்கின்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள். (௭௭)

வல்லமந்திரியரோடுவாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரைவினென்வரவுவீர
சொல்லுதிநங்கைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான். (௭௮)

போனபின்றாதைகோயில்புக்கவன்பொலங்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுந்தவந்ததடக்கைவீரன்
மானவற்கிளையோன்வந்துவாசலின்புறத்தான்சீற்றம்
மீனுயர்வேலைமேலும்பெரிதிதுவிளைந்ததென்றான். (௭௯)

---

73. மாற்றம் - சொல்.
75. அடைப்பாயல்லை - வையாதே.
77. போக்கு - நடை.

அறிவுற்றுமகளிர்வெள்ளமனைவருமவனைப்பற்றிப்
பிறிவற்றமயக்கத்தான்முந்துற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னோகாரணங்கண்டதென்றான். (அ௦)

இயைந்தநாளெல்லைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசீற்றமற்றதுற்றதுசெய்யத்தீர்ந்து
நயந்தெரியனுமன்வேண்டநல்கினனம்மையின்னும். (அக)

வருகின்றவேகநோக்கிவானரர்வீரவானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம்வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீபொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார். ()

ஆண்டகையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளில்
தீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குத்தெய்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிரைத்தகுன்றும்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே. (அ௩)

அந்நிலைகண்டதிண்டோளரிக்குலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேன்யாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கிநின்றாள். (அச)

மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்த
பொங்கியசீற்றம்பற்றிப்புகுந்திலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறிநாயகநடந்ததென்னோ
எங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான். (அரு)

அதுபெரிதறிந்தவன்னையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூதர்கல்லதர்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றாளிதுவிங்குப்புகுந்ததென்றான். (அசு)

சொற்றனுமருக்கன்றோன்றல்சொல்லுவான்விண்ணின்மண்ணின்
நிற்குறியார்கள்யாவரனையவர்சினத்தினேர்ந்தால்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விரைவினெய்தி
எற்குரையாதுநீரியற்றியதென்கொலென்றான். (அஎ)

82. வாங்கினர் - எடுத்து.

உணர்த்தினேன் முன்னர் நீ யஃதுணர்ந்திலை யுணர்விற் றீர்ந்தாய்
புணர்ப்பதொன் றின்மை நோக்கி மாருதிக் குரைப்பான் போனேன்
இணர்த்தொகை யின்றபொற்றா றொழுவலி ந் தடந்தோளெந்தாய்
கணத்திடை யவனை நீயுங் காணுத லருமமென்றான். (அஅ)

உறவுண்ட சிந்தை யானு முறைசெய்வா ரொருவர்க் கின்னம்
பெறலுண்டே யவரா லீண்டி யான் பெற்ற பேருதவியுற்ற
திறலுண்டோ வென்னிற் றீர்வா னிறந்த பேரிடரை யெல்லாம்
நறவுண்டு மறந்தே னென்கா ணநாணு வன்மைந் தவென்றான். (அகூ)

ஏயினவிது வலான் மற்றே றமைமைப் பால தென்னோ
தாயிவண் மனைவி யென்னுந் தெளிவன்றே றற்றருமமென்னும்
தீவினையைந் தினொன்று மன்றியுந் திருக்குறீங்கா
மாயையின் மயங்குகின்றா மயக்கின்மேன் மயக்கும் வைத்தாம். (கூ0)

தெளிந்து தீவினையைத் தீர்ந்தோர் பிறவியைத் தீர்வரென்னு
விளிந்திலா வுணர்வினோரும் வேதமும் விளம்ப வேயும்
நெளிந்துறை புழுவை நீக்கி நறவுண்டு நிறைகின் றேனால்
அளிந்தகத் தெரியுந் தீயை நெய்யினா லவிக்கின்றாரில். (கூக)

தன்னைத் தானுணரத் தீருந் தகையறு பிறவி யென்ப
தென்னத்தான் மறையு மற்றைத் துறைகளு முரைத்த வெல்லாம்
முன்னைத்தா னன்னை யோரா முழுப்பிணி யழுக்கின் மேலே
பின்னைத்தான் பெறுவதம்மா நறவுண்டு திகைக்கும் பித்தோ. (கூ௨)

அளித்தவ ரஞ்சு நெஞ்சினடைந்தவ ரறிவு சூழ்கிக்
குளித்தவ ரின்ப துன்பங் குடைந்தவர் குடைந்த வேரி
ஒளித்தவருண்டு நீண்டி வ்வுலகெலா முணரவோடிக்
களித்தவரெய் தினின்ற கதியொன்று கண்டதுண்டோ. (கூ௩)

செற்றதும் பகைஞர் நட்டார் செய்த பேருதவி தானும்
கற்றதுங் கண்கூடாகக் கண்டதுங் கலைவலாளர்
சொற்றது மானம் வந்து தொடர்ந்த தும் படர்ந்த துன்பம்
உற்றது முணரா ராயி னுறுதிவே றிதனி னுண்டோ. (கூ௪)

---

88. இணர்த்தொகை - கொத்தின்கூட்டம்.
89. நறவுண்டு - கட்குடித்து.
91. அளிந்து - கனிந்து.
94. இறுதி - அழிவு.

வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில்கொட்பும்
தஞ்சமென்றோரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினாரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே. (௯௫)

கேட்டனனறவாற்கேடுவருமெனக்கிடைத்தநயச்சொல்
காட்டியதனுமனீதிக்கல்வியாற்கடந்ததல்லால்
மீட்டினியுரைப்பதென்னேவிரைவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுன்முடிவதற்கையமுண்டோ. (௯௬)

ஐயநானஞ்சினேனிந்நறவினினறியகேடு
கையினாலன்றியேயுங்கருதுதல்கருமமன்றால்
வெய்யதாமதுவையின்னும்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றான். (௯௭)

என்றுகொண்டியம்பியண்ணற்கெதிர்கொளற்கியைந்தவெல்லாம்
நன்றுகொண்டின்னுநீயேநணுகெனவவனையேவித்
தன்றுணைத்தேவிமாருந்தமரொடுந்தழுவத்தானும்
நின்றனனெடியவாயிற்கடைத்தலைநிறைந்தசீரான். (௯௮)

உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீபசாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடுதொங்கலும்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம். (௯௯)

தூயதிண்பளிங்கிற்செய்தசுவர்களிற்றலத்திற்சுற்றில்
நாயகமணியிற்செய்தநனிநெடுந்தூணினப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடும்
ஆயிரமைந்தர்வந்தாருளரெனப்பொலிந்ததவ்வூர். (௧௦௦)

அங்கதன்பெயர்த்தும்வந்தாண்டடியிணைதொழுதைய
எங்கிருந்தானுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி
மங்குறோய்கோயிற்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான். (௧௦௧)

சுண்ணமுந்தூசும்வீசிச்சூடகத்தொடிக்கைமாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக்காலுறக்கலைவெண்டிங்கள்

---

95. கொட்பு - சுழற்சி, அது - தலைச்சுற்று.
97. வெய்யதாம் - கொடிதாகிய.

விண்ணுறவளர்ந்தவென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க்கவிகுலத்தரசன்வந்தான். (௧0௨)

அருக்கியமுதலவாயவருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்தமுரசினமுகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வநோக்கித்தேவருமருளச்சென்றான். (௧0௩)

வெம்முலைமகளிர்வெள்ளநீரெனவிளங்கவிண்ணிற்
சும்மைவான்மதியங்குன்றிற்றோன்றியதெனவுந்தோன்றிச்
செம்மலையெதிர்கோளெண்ணித்திருவொடுமலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்ததாதையுமனையனானான். (௧0௪)

வேறு.

தோற்றியவரிகுலத்தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கினனெழுந்ததவ்வழி
சீற்றமங்கதுதனைத்தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தினமைதியுன்னுவான். (௧0௫)

எழுவினுமலையினுமெழுந்ததோள்களால்
தழுவினரிருவருந்தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்திறனொடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினார். (௧0௬)

அரியணையமைந்ததுகாட்டியையவீண்
டிருவெனக்கவிகுலத்தரசனேவலும்
திருமகடலைமகன்புல்லிற்சேரவெற்
குரியதோவிஃதெனமனத்திலுன்னுவான். (௧0௭)

கல்லணைமனத்தினையுடைக்கைகேசியால்
எல்லணைமணிமுடிதுறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூத்தொடர்
மெல்லணைவைகவும்வேண்டுமோவென்றான். (௧0௮)

என்றவனுரைத்தலுமிரவிகாதலன்
நின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்
குன்றெனவுயர்ந்தவக்கோயிற்குட்டிம
வன்றலத்திருந்தனன்மனுவின்கோமகன். (௧0௯)

---

104. தாதை - சூரியன்.
107. புல்லில் - தருப்பாசனத்தில்,
109. குட்டிமவன்றலம் - கற்படுத்ததரை.

மைந்தருமுதியருமகளிர்வெள்ளமும்
அந்தமினோக்கினரழுதகண்ணினர்
இந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலர். (௧௧௦)

மஞ்சனவிதிமுறைமரபினாடினை
எஞ்சலிலின்னமிழ்தருந்தின்யாமெலாம்
உஞ்சனமினியெனவரசுரைத்தலும்
அஞ்சனவண்ணனுக்கனுசன்கூறுவான். (௧௧௧)

வருத்தமும்பழியுமேவாபிறாமீக்கொள
அருத்துமென்றாலெமக்கினியதியாவதோர்
அருத்தியுண்டாயினுமவலந்தான்றழீஇக்
கருத்துவேறுற்றபினமிழ்துங்கைக்குமால். (௧௧௨)

மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினமைக்கடலினாமிழ்
தூட்டினையாற்பிறிதுயிருமில்லையால். (௧௧௩)

பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
மிச்சிலைநுகர்வதுவேறுதானொன்று
நச்சிலேனச்சினேனாயினுமுண்ட
எச்சிலேயதுவிதற்கையமில்லையால். (௧௧௪)

அன்றியுமொன்றுளதையயானினிச்
சென்றனென்கொணர்ந்தடைதிருத்தினாலது
நுன்றுணைக்கோமகனுகர்வதாதலான்
இன்றிறைதாழ்த்தலுமினிதன்றாமென்றான். (௧௧௫)

வானரவேந்தனுமினிதின்வைகுதல்
மானவர்தலைமகனிடரின்வைகவே
ஆனதுகுரக்கினத்தெமர்கட்காமெனா
மேனிலையழிந்துயிர்விம்மினானரோ. (௧௧௬)

எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன்வெறுத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தையனநுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரன்முறைபோதன்முன்னுவான். (௧௧௭)

---

114. மிச்சில் - உண்டமிகுதி, - எச்சிலென்ப.

போயினதூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
ஏயினனநுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான். (௧௧அ)

அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றமுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன். (௧௧௯)

ஒன்பதிறுயிரகோடியூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினுன்செல்லும்வேலையில். (௧௨0)

கொடிவனமிடைந்தனகுமுறுபேரியின்
இடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
பொடியெழுந்தனபடிவானம்போர்த்ததே. (௧௨௧)

பொன்னினின்முத்தினிற்புனைமென்றுசினின்
மின்னினின்மணியினிற்பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின. (௧௨௨)

வீரனுக்கிளையவன்விளங்குஞ்சேவடி
பாரினிற்சேறலிற்பரிதிமைந்தனும்
தாரினிற்பொலங்கழறழங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன்சிவிகைபின்செல. (௧௨௩)

எய்தினன்மானவனிருந்தமால்வரை
நொய்தினிற்சேனைபின்பொழியநோன்கழல்
ஐயவிற்குமரனுந்தானுமங்கதன்
கைதொடர்ந்தயல்செலக்காதன்முன்செல. (௧௨௪)

கண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினல்

120. யூகம் - குரங்கு. வேலை - சமயம்.

121. குமுறும் - இரைகின்ற.

123. கழறழங்க - கழல் முழங்க. 124. மால்வரை - பெருமலை.

நண்ணியகவிக்குலத்தரசனாடொறும்
புண்ணியற்றொழுகழற்பரதன்போன்றனன். (கஉரு)

பிறிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றானெனவிருந்தவேந்தனை
அறைமணித்தாரினோடாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடிமுடியிற்றீண்டினான். (கஉசா)

தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையானெடிதுபுல்லினான்
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதந்திருக்கையேவியே. (கஉஎ)

அயலினிதிருத்தினின்னரசுமாணையும்
இயல்பினினியைந்தவேயினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலதேகுடையெனவிளம்பினான். (கஉஅ)

பொருளுடையவ்வுரைகேட்டபோழ்துவான்
உருளுடைத்தேரினான்புதல்வனூழியின்
இருளுடையுலகினுக்கிரவியன்னநின்
அருளுடையேற்கவையரியவோவென்றான். (கஉகூ)

பின்னரும்விளம்புவான்பெருமையோய்நின
தின்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவநின்பணிமறுத்துவைகியென்
புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான். (கங0)

பெருந்திசையனைத்தையும்பிசைந்துநேடினேன்
தருந்தகையமைந்துமத்தன்மைசெய்திலேன்
திருந்திழைதிறத்தினாற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருப்பயான்வாழ்வின்வைகினேன். (கஙக)

இனையனயானுடையியல்புமெண்ணமும்
நினைவுமென்றாலினிநின்றியான்செயும்
வினையுநல்லாண்மையும்விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசிலைவள்ளியோவென்றான். (கஙஉ)

---

129. அருள் - தயவு.
130. புன்னிலை - இழிந்தசெயல்,

திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன்னுரிமையோருரை
தருவினைத்தாகையிற்றுழ்விற்றுகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ. (கநங)

ஆரியன்பின்னருமமைந்துநன்குணர்
மாருதியெவ்வழிமருவினுனெனச்
சூரியன்காண்முனேதோன்றுமாலவன்
நீரரும்பரவையினெடிதுசேனையான். (கநச)

கோடியோராயிரங்குறித்தகோதிறா
தோடினநெடும்படைகொணரலுற்றவால்
நாடரக்குறித்ததுமின்றுநாளையவ்
வாடலந்தானையோடவனுமெய்துமால். (கநரு)

ஒன்பதினுயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையந்நெடியசேனைக்கு
நன்பெயரவதிநாளுளைநண்ணிய
பின்செயத்தக்கதுபேசற்பாற்றென்றான். (கநசு)

விரும்பியவிராமனும்வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோவண்மைதிநன்றெனப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துதியெனவவன்றெழுதுபோயினான். (கநஎ)

அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுந்தையோடென்றுதாமரைச்
செங்கணன்றம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழியன்றுவைகினான். (கநஅ)

சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பாற்
போயதுமவ்வயிற்புகுந்தயாவையும்
ஓய்வுறுதுணர்த்தெனவுணர்த்தினனரோ
வாய்மையாவுணர்வுறுவலியமொய்ம்பினேன். (கநகூ)

அன்றவணிறுத்தனனலரிகீட்டிசைப்
பொன்றிணிநெடுவரைபொலிவுறுதமுன்
வன்றிறற்றாதுவர்கூவவானரக்
குன்றுழ்நெடும்படையடைந்தகூறுவாம். (கசo)

ஆ திருவிருத்தம் - எகச.

---

135. ஆடல் - வெற்றி அல்லதுபோர். 140. அலரி - சூரியன்.

## கூ-வது, தானைகாண்படலம்.

ஆனையாயிரமாயிரத்தெறுழ்வலிக்கமைந்த
வானராதிபராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங்கையிரண்டாயிரகோடித்
தானையோடுமச்சதவலியென்பவன்சார்ந்தான். (க)

ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறுவானரச்சேனை
ஆன்றபத்துநூறாயிரகோடியோடமையத்
தோன்றினன்வந்துசுசேடணனெனும்பெயர்த்தோன்றல். (உ)

ஈறில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரச்சேனை
ஆறெணாயிரகோடிபதுடன்வரவமிழ்தம்
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான். (ங)

ஐம்பதாயநூறாயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
இம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான். (ச)

மண்கொள்வாளெயிற்றேனத்தின்வலியெனவயிரத்
திண்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண்டெறுழ்வலியிடும்பன்வந்திறுத்தான். (ரு)

முனியுமாமெனினருக்கனைமுரணறமுருக்கும்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்குமைக்கும்
குனியுமாக்குரங்கீண்டியதாயிரகோடி
அனிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான். (சு)

தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலத்தால்
நினையுநெஞ்சிறவுருமெனவுறக்குறுநிலையன்
பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொடுபுகுந்தான். (எ)

---

1. எறுழ்வலி - மிக்கவலி.
2. ஆன்ற - மிகுந்த. நம்பனை - அநுமானை.

இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
முடிவில்பேருறுக்குடையனவிசையனமுரண
கொடியகூற்றையுமொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுந்தனனீலன். (௮)

மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயிலனமலையின்
ஆகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுந்ததிமுகனென்பவன்சார்ந்தான். (௯)

இளைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதினாயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத்தரியினம்வெருவுறவிரிந்த
அளக்கரோடுமக்கயனெனும்பெயரன்வந்தடைந்தான். (௧0)

ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபரவையிற்றிரையில்
தாயுருத்துடனேவரத்தடநெடுவரையை
ஏயுருப்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான். (௧௧)

வகுத்ததாமரைமலரயனிசிசரர்வாணாள்
உகுத்திநீயெனப்பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறாயிரப்பத்தியினிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகன்றொடர்ந்தான். ()

கோடிகோடிநூறாயிரவெண்ணெனக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க
மூடுமும்பருமிம்பரும்பூமியின்மூழ்கத்
தோடிவர்ந்ததார்க்கிரிபுரைதுமிந்தனுந்தொடர்ந்தான். (௧௩)

இயைந்தபத்துநூறாயிரப்பத்தெனுங்கோடி
உயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கசன்காமுகன்றன்னொடும்வந்தான். (௧௪)

கறங்குபோல்வனகாற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ

---

9. ஆகரம் - உருவம்.
15. கறங்கு - காற்றாடி.

மறங்கொள்வானரமொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான். (கரு)

ஏழினேழுநாறுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந்தோள்கிளர்படைகொண்டுபரவை
ஊழிபேரினுமுலைவிலவுலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப்பதுமுகனென்பவன்போந்தான். (கசு)

ஏழுமேழுமென்றுரைக்கின்றவுலகங்களைவையும்
தாழுங்காலத்துந்தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்தவலிசொடோள்ளாயிரகோடிப்
பாழிவெம்புயத்தரியொடுமிடபனும்படர்ந்தான். (கஎ)

தீர்க்கபாதனும்வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
மாற்கருங்கடற்குயர்ந்துளமைம்முகத்தனீகம்
ஆர்க்குமெண்ணருங்கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின்மறைதரமுறையினிற்புகுந்தார். (கஅ)

கையஞ்சாயுதமுடையவக்கடவுளைக்கண்டு
மெய்யஞ்சாதவன்மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வையஞ்சாய்தரத்திரிதருவானரச்சேனை
ஐயஞ்சாயிரகோடிகொண்டநுமன்வந்தடைந்தான். (கசு)

நொய்திற்கூடியசேனைநாறுயிரகோடி
எய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மையற்சிந்தையாலந்தகன்மறுக்குற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன்சேர்ந்தான். (உ0)

கும்பனுங்குலச்சங்கனுமுதலினர்குரங்கின்
தம்பெரும்படைத்தலைவர்கடரவந்ததானை
இம்பர்நின்றவர்க்கெண்ணரிதிராகவனுமத்
தம்பெனுந்துணைக்குரியமற்றுரைப்பரிதளவே. (உக)

தோழியினுழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டலமெள்ளிடவிடமின்றியிரியும்
காயின்வெங்கனற்கடவுநேமிரவியுங்கரியும். (உஉ)

எண்ணினுன்முகரெழுபதினுயிரர்க்கியலா
உண்ணினண்டங்களோர்பிடியுண்ணவுமுதவா

20. நொய்தில் - விரைவில்.

கண்ணினோக்குறிற்கண்ணுதலானுக்குங்கதுவா
மண்ணின்மேல்வந்தவானரச்சேனையின்வரம்பே. (௨௩)

ஒடிக்குமேல்வடமேருவைவேரொடுமுடிக்கும்
இடிக்குமேனெடுவானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கடலேழையுங்குடங்கையிற்குடிக்கும். (௨௪)

ஆறுபத்தெழுகோடியர்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனிணைத்தனமுடிக்குறும்வலியர்
ஊறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதின்வந்துற்றார். (௨௫)

ஏழுமாகடற்பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
சூழும்வானரப்படையொடவ்வீரருந்துவன்றி
ஆழிமாபரித்தேரவன்காதலனடிகள்
வாழிவாழியென்றுரைத்தலர்தூவினர்வணங்கி. (௨௬)

அனையதாகியசேனைவந்திறுத்தலுமருக்கன்
தனையனேய்தினிற்றயரதன்புதல்வனைச்சார்ந்தான்
நினைபுமுன்னம்வந்தடைந்தது நின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவகண்டருணீயெனவிளம்ப. (௨௭)

ஐயனும்முவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தையலாள்வரக்கண்டனனுமெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கொர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான். (௨௮)

அஞ்சொடையிரண்டியோசனையகலத்ததாகிச்
செஞ்செவேவடதிசைநின்றுந்தென்றிசைசெல்ல
எஞ்சவில்பெருஞ்சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான். (௨௯)

மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரிவுறக்காட்டி
ஆண்டிருந்தனனூர்த்துளைத்தெழுந்ததையன்றே
ஈண்டுசேனைபாலெறிகடனெறிபடர்ந்தென்ன. (௩0)

---

26. துவன்றி - நெருங்கி.
29. செஞ்சவே - நேரே.

எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்டவிண்ணையுமறிகடலனைத்தையுமறையைத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியிற்சூழி
அட்டிச்செம்பியனிறைகுடமொத்ததவ்வண்டம். (௩க)

அத்தியொப்பெனினன்னவைபுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினுநடுவுகண்டிலர்முடிவென்றோ. (௩௨)

விண்ணிற்றீம்புனலுலகத்திறுகரின்வெற்றி
எண்ணிற்றன்னலதொப்பிலனென்றவிராமன்
கண்ணிற்சிந்தையிற்கல்வியின்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானான். (௩௩)

அடல்கொண்டோங்கியசேனைக்குநாமுநம்மறிவான்
உடல்கண்டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கியலங்கலாய்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பர்யாவரேமுடிவுறக்கண்டார். (௩௪)

ஈசன்மேனியையீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையையைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும்பிணக்கை
வாசமாலையாயாவரேமுடிவெண்ணவல்லார். (௩௫)

இன்னசேனையைமுடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேனுள்பலபெயரும்
முன்னைச்செய்கைமேலொருப்படலுறுவதேயுறுதி
என்னவீரனைக்கைதொழுதிளையவன்விளம்பும். (௩௬)

யாவதெவ்வுலகத்தினினீங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவதேவியைத்தேடுவதென்பதுசிறிதால்
பாவந்தோற்றதுதருமமேவென்றதிப்படையால். (௩௭)

தரங்கநீரெழுதாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருலகத்தினின்மற்றைமன்னுயிர்கள்

---

31. விண் - சுவர்க்கம்.
35. ஈசன் - கடவுள். பிணக்கு - விரோதம்.
37. தேவ - தேவனே. 38. தரங்கம் - அலை.

உரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்குங்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்லாம். (நஅ)

ஈண்டுதாழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்கும்
தேண்டுவார்களைவல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும். (நகூ)

ஆக திருவிருத்தம் - ருளஈ.

## கo-வது, நாடவிட்டபடலம்.

வகையுமானமுமாறெதிர்ந்தாற்றுறு
பகையுமின்றிநிரைந்துபரந்தெழு
தகையில்சேனைக்கமைதிசமைந்ததோ
தொகையுமுண்டுகொலோவெனச்சொல்லினான். (க)

ஏற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றூற்றலாளரறிவினமைந்ததோ
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்னிதற்கெண்ணிமுன்சொல்வரோ. (உ)

ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடுநீலனென்றோதினான். (ந)

என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கையிராமன்விருப்பினான்
நின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான். (௪)

அவனுமண்ணலநுமனையையநீ
புவனமூன்றுநின்றாதையிற்புக்குழல்
தவனவேகத்தையோர்கிலைதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காட்டியோ. (ரு)

---

39. தேண்டுவார் - தேடுவோர்.
5. அண்ணல் - பெருமை.

ஏகியேந்திழை தன்னையிருந்துழீ இ
நாகநாடுகநானிலனுடுக
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால். (௬)

தென்றிசைக்கணிராவணன்சேணகர்
என்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ. (எ)

வள்ளறேறவியையவஞ்சித்துவெளவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக்குண்டெனவுன்னுவாய். (அ)

தாரைமைந்தனுஞ்சாம்பனுந்தாமுதல்
வீரர்யாவருமேம்படுமேன்மையார்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால். (௯)

குடதிசைக்கட்சுசேடணன்குபேரன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவன்
இடதிசைக்கண்வினதன்விறற்றரு
படைபொடுற்றுப்படர்கெனப்பன்னினான். (கO)

வெற்றிவானரவெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித்துருவியொருமதி
முற்றுறாதமுன்முற்றுதிரிவ்விடை
கொற்றவாகையினீரெனக்கூறினான். (கக)

ஈண்டுநின்றிறந்தீரைந்துநூறெழில்
தூண்டுசோதிக்கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டும்விந்தமலையினைமேவுவீர். (க௨)

தேடியவ்வழிதீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்றதறுபதமைந்திணை

11. துருவி - தேடி.
12. இறந்து - கடந்து.

பாடுகின்றதுபன்மணிபாயிருள்
நாடுகின்றநருமதைநாடுவீர். (கங)

வாமமேகலைவானரமங்கையர்
காமப்பூசற்களியிசைக்கள்ளினல்
தூமமேனியசுணந்துயில்வுறும்
ஏமகூடமெனுமலையெய்துவீர். (கச)

நொய்தினம்மலைநீங்கிநுமரொடும்
பொய்கையின்கரைபிற்படப்போதிரால்
செய்யபெண்ணுக்கரியபெண்ணைச்சில
வைகறேடிக்கடிதுவழிக்கொள்வீர். (கரு)

தாங்குவாரிற்றருவளர்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமுமெல்லென
நீங்குநாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால். (கசு)

பண்டகத்தியன்வைகியதாப்பகர்
தண்டகத்ததுதாபதர்தம்மையுட்
கண்டகத்துயர்தீர்வதுகாண்டிரால்
முண்டகத்துறையென்றெருமொய்ம்பொழில். (கஎ)

ஞாலநல்லறத்தோருன்னுநம்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால். (கஅ)

நயனநன்கிமையார்துயிலார்நனி
அயனமில்லையருக்கனுக்கவ்வழி
சயனமாதர்கலவித்தலைதரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால். (கக)

ஆண்டிறந்துபின்னந்தரத்திந்துவைத்
தீண்டுகின்றதுசெங்கதிர்ச்செல்வனும்
ஈண்டுறைந்தலதேகலனென்பது
பாண்டுவின்மலையென்னும்பருப்பதம். (உo)

---

14. வாமம் - அழகு.

வேறு.

முத்தீர்த்துப்பொன்றிரட்டிமணியுருட்டிமுதுநீத்தமுன்றிலாயர்
மத்தீர்த்துமரனீர்த்துமலேயீர்த்துமானீர்த்துவருவதியார்க்கும்
புத்தீர்த்திட்டலையாமற்புலவர்நாடுதவுவதுபுனிதமான
அத்தீர்த்தமகன்கோதாவிரியென்பரம்மலேயினருகிற்றம்மா. (உக)

அவ்வாறுகடந்தப் பாலறத்தாறேயெனத் தெளிந்தவருளினு றும், வெவ்வாறுமெனக்குளிர்ந்து வெயிலியங்காவகையியங்கும்விரி பூஞ்சோலே, எவ்வாறுமுறத்துவன்றி யிருளோடமணியிமைப்பதி மையோர்வேண்டத், தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்த சுவ ணத்தைச்சேர்திர்மாதோ. (உஉ)

சுவணத்தைக்கடந்தப்பாற் சூரியகாந்தகமென்னத் தோன்றி மாதர், கவணுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ் சந்திரகாந்தக முங்காண்பீர், அவணவைநீத்தேகியபின்னகளுடுபல கடந்தாலனந் தனென்பான், உவணபதிக்கொளித்துறையுங் கொங்கணமுங்குலிந் தமுஞ்சென்றுறுதிர்மாதோ. (உங)

அரனதிகனுலகளந்த வரியதிகனென்றுரைக்கு மறிவிலோர்க் குப், பரகதிசென்றடைவரியபரிசேபோற் புகலரியபண்பிற்றுமால், சுரநதியினயலதுவான்றேய்ப் குடுமிச்சுடர்த்தொகையதொழுதோர் க்கெல்லாம், வரனதிகந்தருந்தகைய வருந்தியாநெடுமலேயை வண ங்கியப்பால். (உச)

அஞ்சுவரும்வெஞ்சுரனுமாறுமகன்பெருஞ்சுனேயுமகிலோங்கார
மஞ்சிவருநெடுங்கிரியும்வளநாடும்பிற்படப்போய்வழிமேற்சென்ருல்
நஞ்சுவருமிடற்றரவுக்கமிழ்துநனிகொடுத்தாயைக்கலுழனண்ணும்
எஞ்சின்மரகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சாரவேகிர்மாதோ

வடசொற்குந் தென்சொற்கும் வரம்பாகிநான்மறையுமற்றை நூலும், இடைசொற்றபொருட்கெல்லா மெல்லேயதாய்நல்லறத்துக் கீறுய்வேறு, புடைசுற்றுந்துணேயின்றிப் புகழ்பொதிந்த மெய்யே போற்பூத்துநின்ற, உடைசுற்றுந்தண்சாரலோங்கியவேங்கடத்திற் சென்றுறுதிர்மாதோ. (உசூ)

இருவினேயுமிடைவிடாவெவ்வினேயுமியற்றுதேயிமையோரேத் தும், திருவினேயுமிடுபதந்தேர்சிறுமையையுமுறைபொப்பத்தெளிந்

---

21. புத்து - ஒருநரகம். 24. பரிசேபோல் - தன்மைபோல.

துநோக்கிக், கருவினையதிப்பிறவிக் கென்றுணர்ந்தங்கதுகளையுங் கடையின்ஞானத், தருவினையின் பெரும்பகைஞராண்டுளரீண் டிருந்துமடிவணங்கற்பாலார். (உஎ)

## வேங்கடத்தின் தன்மை.

சூதகற்றுந்திருமறையோர் துரையாடுநிறையாறுஞ் சுருதித்தொன்னூல், மாதவத்தோருறை விடனுமழையுறங்குமணித் தடனும்வானமாதர், கீதமொத்தகின்னரங்களின் னரம்புவருடுதொறுங் கிளக்குமோதை, போதகத்தின்மழக்கன்றம் புலிப்பறழுமுறங்கிடனும்பொருந்திற்றம்மா. (உஅ)

## தொண்டைநாட்டின்வழி காவிரி இங்கும் எய்திதுதிரேனல்.

கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரேலுந்நெடியகொடுமைநீங்கி
வீடுறுதிராதலான்விலங்குதிரப்புறத்துணீர்மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனைநாடியதற்பின்னையவைநளிர்நீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய்வத்திருநதியினிருகரையுஞ்சேர்திர்மாதோ.

## சோணுடு மலைநாடுதமிழ்நாடுகளிற் புகுதிரேனல்.

துறக்கமுற்றார்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடந்தாற்செரு
மறக்கமுற்றாதனயலேமறைந்துறைவரவ்வழிநீர்வல்லையேகி [ல்லை
உறக்கமுற்றார்கனவுற்றாரெனுமுணர்வினோடுமொதுங்கிமணியாரோ
பிறக்கமுற்றமலைநாடுநாடியகன்றமிழ்நாட்டிற்பெயர்திர்மாதோ [ங்கற்

## மயேந்திரமுங் கடலுங்காண்டிரேன்றல்.

தென்றமிழ்நாட்டகன்பொதியிற்றிருமுனிவன்றமிழ்ச்சங்கஞ் சேர்கிற்றிரேல், என்றுமவனுறைவிடமாமாதலானம்மலையையிடத்திட்டேகிப், பொன்றிணிந்தபுனல்பெருகும்பொருநையெனுந்திருநதிபின்பொழியநாகக், கன்றுவளர்தடஞ்சாரன் மகேந்திரமாநெடுவரையுங்கடலுங்காண்டிர். (ஙக)

## அநுமானை இராமன் தனியேயழைத்துச் சீதை இலக்கணம் உரைத்தல்.

ஆண்டுகடந்தப்புறத்துமெப்புறத்துமொருதிங்களவதியாகத் [லே
தேண்டியிவண்வந்தடைதிர்விடைகோடிர் கடிதென்னச்செப்பும்வே
நீண்டவனுமாருதியைநிறையருளாலுறநோக்கிநீ திவல்லோய்
காண்டியெனிற்குறிகேட்டியெனவேறுகொண்டிருந்துகழறலுற்றான்.

29. கோடு - சிகரம்.

வேறு.

பாற்கடற்பிறந்தசெய்யபவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டிவிளங்குறநிறைத்தமெய்ய
காற்றகைவிரல்களையகமலமும்பிறவுங்கண்ட
ஏற்பிலவென்பதன்றியிணையடிக்குவமையென்றோ. (௩௩)

நீமெயாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாலுவமையாகமதியறிபுலவர்வைத்த
ஆமையாமென்றபோதுமல்லனசொல்லினாலும்
யாமயாழ்மழலைபாடன்புறவடிக்கிழுக்கமன்றே. (௩௪)

வினைவரார்லரியகோதைபேதைமென்கணைக்கான்மெய்ய
நினைவராலரியவின்னநேர்படப்புலவர்போற்றும்
சினைவரால்பகழியாவநெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டயானுரைத்தின்பமென்றே. (௩௫)

அரம்பையென்றளகமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோதுமற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறுநறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய். (௩௬)

வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
தாராழிக்கலைசாரல்குறடங்கடற்குவமைதக்கோய்
பாராழிப்பிடரிற்றங்கும்பாந்தளும்பணிவென்றோங்கும்
ஓராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்றே. (௩௭)

சட்டகந்தன்னைநோக்கியாரையுஞ்சமைக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மையியம்பக்கேட்டுணர்தியென்னின்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாகையில்
தொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை. (௩௮)

ஆலிலைபடிவந்தீட்டுமையநுண்பலகைநொய்ய
பால்நிறத்தட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும்புனைந்துரைபொதுமைபார்க்கின்
ஏலுமென்றிசைக்கினேலாவிதுயிவற்றியற்கையின்னும். (௩௯)

சிங்கலில்சிறுகூதாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றொளையென்றாலும்புல்லிதுபொதுமைத்தாமால்

36. அரம்பை-வாழை. 38. சட்டகம்-வடிவம். 40. கூதாளி-ஒருவகைத்தாளி.

அங்கவளுந் தியொக்குஞ்சுழியெனற்கணித்ததுண்டால்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றேய். (சം)

மயிரொழுக்கெனவொன்றுண்டால்வல்லிசேர்வயிற்றின்மற்றென்
உயிரொழுக்கதற்குமாண்டமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநுடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொள்கொம்பென்றுணர்ந்துகோடி. (சக)

அல்லியூன்றிடுமென்றஞ்சியரவிந்தந்துறந்தாட்கம்பொன்
வல்லிமூன்றுளவாற்கோலவயிற்றின்மற்றவையுமார
வில்லிமூன்றுலகின்வர்மூமா தருந்தோற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றிவரையெனத்தோன்றுமன்றே. (சஉ)

செப்பென்பென்கலசமென்பேன்செவ்விளநீருந்தேர்வென்
துப்பொன்றுதிரள்சூதென்பென்சொல்லுவென்றும்பிக்கொம்பைத்
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பென்
ஒப்பொன்றுமுலகிற்காணேன்பலநினைந்துலேவெணின்னும். (சந)

கரும்புகண்டாலும்மாலைக்காம்புகண்டாலுமாவி
அரும்புகண்டாரைசோரவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதைதோணினைந்துவமைசொல்ல
இரும்புகண்டனையநெஞ்சமெனக்கிலையிசைப்பதென்னே. (சச)

முன்கையேயொப்பதொன்றுமுண்டுமூன்றுலகத்துள்ளும்
என்கையேயிழுக்காமன்றேயியம்பினுங்காந்தளொன்றல்
வன்கையாழ்மணிக்கையென்றன்மற்றென்னையுணர்த்தலன்றி
நன்கையாடடக்கையாமோநலத்தின்மேனலமுண்டாமோ. (சரு)

ஏலக்கொண்டென்றபிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்
காலைக்கற்பகத்தின்காமர்குழைபடுங்கமலமென்பூ
நூலொக்குமருங்குலாடணூபுரம்புலம்புங்கோலக்
காலுக்குத்தொலைபுமென்றுற்கைக்கொப்புவைக்கலாமோ. (சசு)

வெள்ளியமுறுவற்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
வள்ளுகிர்க்குவமைநம்மான்மயர்வறவகுக்கலாமோ
எள்ளுதிர்நீரேமூக்கையென்றுகொண்டிவறிப்பின்னும்
கிள்ளைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமஃதழிக்கலாமோ. (சஎ)

---

42. அல்லி - அகவிதழ். 46. பிண்டி - அசோகு.
43. துப்பு - தூய்மை. 47. வள்ளுகிர் - கூரியநகம்.

அங்கையுமடியுங்கண்டாலரவிந்தநிணையுமாபோல்
செங்களிசிதறிநீலஞ்செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கிவளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயினவையென்றுதுணிதிதக்கோய். (சஅ)

பவளமுங்கிடையுங்கோவ்வைப்பழனும்பைங்குமுதப்போதும்
துவளிலவங்கங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்முறுரைக்கும்வண்ணஞ்சிவந்தேதென்றதும்புமாகின்
குவளையுண்கண்ணிவண்ணவாயதுகுறியுமஃதே. (சகூ)

சிவந்ததேதாமிழ்தமில்லைத்தேனில்லையுளவென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ளநினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாறுதவிறுடன்பவளவாய்க்குவமைபாவித்
துவந்தபோதுவந்தவண்ணமுரைத்தபோதுரைத்ததாமோ. (ருo)

முல்லையுமுருந்துமுத்துமுறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிழ்தும்பாலுந்தேனுமென்றுரைக்கத்தோன்றும்
அல்லதோன்றுவதில்லையமிழ்திற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடிமாறிலாவாறுசான்றோய். (ருக)

ஓதியுமெள்ளுங்கொள்ளைக்குமிழுமூக்கொக்குமேற்ற
சோதிசெம்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்று
ஏதுவுமில்லைவல்லாரெழுதுவார்க்கெழுதவொண்ணு
நீதியைநோக்கிநீயேநினைநியாவெனடிதுகாண்பாய். (ருஉ)

வள்ளைகத்தரிகைவாமமயிர்வினைக்கருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்
வெள்ளைவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
உள்ளுதியுலகுக்கெல்லாமுவமைக்குமுவமையுண்டோ. (ருந)

பெரியவாய்ப்பரவையொவ்வாபிறிதொன்றுநினைந்துபேச
உரியவாயொருவருள்ளத்தடங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்காணுக்கிற்றேவர்க்குந்தெய்வமென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டடங்கண்களம்மா. (ருச)

கேளொக்குமன்றியொன்றுகிளத்திறுற்கீழ்மைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொக்கக்கூறிற்றன்றால்

---

53. வள்ளை - ஒருகொடி.

வாளொக்கும்வடிக்கண்ணாடன்புருவத்துக்குவமைவைக்கின்
தாளொக்கவளைந்துநிற்பவிரண்டில்லையனங்கசாபம். (ருரு)

நன்னாளுநளினநாணுமுகத்தினணுதலைநாடிப்
பன்னாளும்பன்னியாற்றுமதியெனும்பண்பதாகி
முன்னாளின்முளைவெண்டிங்கண்முறைநாளுங்குறைவேயாகி
என்னாளும்வளர்ந்ததென்னினிறையொக்குமியல்பிற்றாமே. (ருசு)

வனைபவரில்லையன்றேவனத்துறைம்வந்தபின்னை
அனையனவெனினுந்தாந்தமழகுக்கோர்பழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லரிதிசெயவிளைந்தநீலம்
புனைமணியளகமென்றாம்புதுமையாமுவமைபூணா. (ருஎ)

கொண்டலின்குழவியாய்ப்பல்குனிசிலையன்னகொற்றக்
கெண்டையொண்டாளமென்றிக்கேண்மையகிடந்ததிங்கண்
மண்டிலவதனமென்றுவைத்தனன்விதியேநீயப்
புண்டரிகத்தையுற்றுப்பொழுதுபொருந்தித்தேர்வாய். (ருஅ)

காரினைக்கழித்துக்கட்டிக்கள்ளிறொடாவிகாட்டிப்
பேரிருட்பிழம்புதோய்ந்துநெறிவுற்றிப்பிறங்கநாற்றைச்
சோர்குழற்கொருகுதிச்சூழல்சார்மைசெய்தனையதம்மா
நேர்மையைப்பருமைசெய்தநிறைநறுங்கூந்தனீத்தம். (ருகூ)

புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பின்
எல்லைநீர்மதிக்குமுண்டாங்களங்கமென்றுரைக்குமேதம்
அல்லவுஞ்சிறிதுகுற்றமகன்றிலவன்னமன்ன
நல்லியலாளுக்கெல்லாநலனன்றிப்பிறிதுண்டாமோ. (சுo)

மங்கையர்க்கோதிவைத்தவிலக்கணம்வண்ணவாசப்
பங்கயத்தவட்குமையாதிரம்பலபற்றிநோக்கின்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்தேவரும்வணங்குந்தெய்வக்
கொங்கையைக்குயிலுக்கொன்றுங்குறைவிலதறியுமஃதே. (சுக)

குழல்படைத்தியாழைச்செய்துகுயிலொடுகிளியுங்கூட்டி
மழலையும்பிறவுந்தந்துவையத்தகைம்மலரின்மேலான்
இழைபொருமுலையினாடனின்சொற்களியையச்செய்தான்
பிழையிலனுவமைகாட்டப்பெற்றிலன்பெறுங்கொலின்னும். (சுஉ)

55. வளர்ந்தே என்றும் பாடம்.
60. புல்லிதழ் - புறவிதழ்.

வானின்றவுலகமூன்றும்வரம்பின்றிவளர்ந்தவேனும்
நாநின்றசுவைமற்றொன்றேயமிழ்தன்றிநல்லதில்லை
மீனின்றகண்ணினுடன்மென்மொழிக்குவமைவேண்டின்
தேனென்றேயமிழ்தமொன்றேயவைசெவிக்கின்பஞ்செய்யா. (சுங)

பூவருமழலைபன்னம்புணைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்கசெலவினவெனவுந்தேரேன்
பாவருங்கிழமைத்தொன்மைப்பருணிதர்தொடுத்தபத்தி
நாவரும்பிளவிச்செல்விநடைவருநடையனல்லோய். (சுச)

என்னிற முறைக்கேன்மாவினிளநிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கறுக்குமென்றான்மணிநிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாதொளிக்கும்வேண்டின்
தன்னிறந்தானேயொக்குமலர்நிறஞ்சமழ்க்குமன்றே. (சுரு)

மங்கைபரவளையொப்பார்மற்றுளரில்லையென்னும்
சங்கையிலுள்ளந்தானேசான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லாமளந்தறிந்தநுகுசார்ந்து
திங்கள்வாண்முகத்தினாட்குச்செப்பெனப்பின்னுஞ்செப்பும். (சுசு)

வேறு.

முன்னநான்முனியொடும்முதியநீர்மிதிலைவாய்ச்
சென்னிநீண்மாலையான்வேள்விகாணியசெல
அன்னமாடுந்துறைக்கருகுநின்றாளையக்
கன்னிமாடத்திடைக்கண்டதுங்கழறுவாய். (சுஎ)

சூழிமால்யானையின்றுணைமருப்பிணையெனக்
கேழிலாவனமுலைக்கிரிமருங்கிடைவகோர்
வாழிவான்மின்னிளங்கொடியின்வந்தாளையன்
றூழியானரசவைக்கண்டதும்மறைகுவாய். (சுஅ)

வரைசெய்தாள்வில்லிறுத்தவனமாமுனியொடும்
விரசினல்லனேல்விடுவல்யானுயிரெனக்
கரைசெயாவேலையிற்பெரியகற்பினடெரிக்
துரைசெய்தாமஃதெலாமுணர்நீயுரைசெய்வாய். (சுகூ)

முன்புநானறிகிலாமுனிநெடுங்கானிலே
என்பினேபோதுவாய்நினைதியோவைமநீ

66. சங்கையில் - சந்தேகமற்ற. 68. சூழி - முகபடாம்.

இன்பமாயாருயிர்க்கினியையாயினையினித்
துன்பமாய்முடிகியோவென்றதுஞ்சொல்லுவாய். (எ0)

ஆனபோரசிழந்தடவிசேர்வாயுனக்
கியானலாதனவெலாமினியவோவினியெனு
மீனுலாநெடுமலர்க்கண்கணீர்விழவிழுந்
தூனிலாவுயிரின்வெந்தயர்வதும்முரைசெய்வாய். (எக)

மல்லன்மாநகர்துரந்தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்முன்
எல்லைதீர்வரியவெங்கானம்யாதோவெனுச்
சொல்லினாளஃதெலாமுணரநீசொல்லுவாய். (எஉ)

இனையவாறுரைசெயாவினிதினேகுதியெனு
வனையுமாமணிநன்மோதிரமளித்தறிஞநின்
வினையெலாமுடிகெனுவிடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினனருளொடும்போயினன். (எ௩)

அங்கதக்குரிசிலோடடுசினத்துழவராம்
வெங்கதத்தலைவரும்விரிகடற்படையொடும்
பொங்குவிற்றலைவரைத்தொழுதுமுன்போயினர்
செங்கதிர்ச்செல்வனைப்பணிவுறுஞ்சென்னியார். (எசு)

ஆ. திருவிருத்தம் - அஉஎ.

## கக-வது, பிலநீங்குபடலம்.

போயினர்போயபின்புறநெடுந்திசைகடோ
றேயினுனிரவிகாதலனுமேயினபொருட்
காயினுரவருமங்கன்னநாளவதியிற்
றுயினருலகினைத்தகைநெடுந்தானையார். (க)

குன்றிசைத்தனவெனக்குலவுதோள்வலியினர்
மின்றிசைத்திடுமிடைக்கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமாறுழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம். (உ)

சிந்துராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலானரவிமே

72. மல்லல் - வளம்.

டிந்தியாறெய்தலானிறைவன்மாமௌலிபோல்
விந்தைநாகத்தின்மாடெய்தினார்வெய்தினால். (௩)

அந்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புரைகளும்புடைகளும்
நன்னெடுந்தாழ்வரைநாடினார்நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை. (௪)

மல்லன்மாஞாலமோர்மறுவுறுவகையினச்
சில்லலோதியையிருந்துறைவிடந்தேடுவார்
புல்லினுருலகினைப்பொதுவிலாவகையினால்
எல்லைமாக்கடல்களேயாகுமாறெய்தினார். (௫)

விண்டுபோயிழிவர்மேனிமிர்வர்விண்படர்வர்வேர்
உண்டமாமரனினமலையின்வாயுறையுநீர்
மண்டுபாரதனின்வாழுயிர்களம்மதியினார்
கண்டிலாதனவயன்கண்டிலாதனகொலாம். (௬)

வேறு.

ஏகினார்யோசனையேழொடேழுபார்
சேகரத்தெதன்றிசைக்கடிதுசெல்கின்றார்
மேகமாலையினெடும்விரவிமேதியின்
நாகுசேர்நருமதையாறுநண்ணினார். (௭)

அன்னமாடிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந்துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ்சுரும்புமுரசுந்தேன்
பன்னியாடிடங்களும்பரந்துசுற்றினார். (௮)

பெறலருந்தெரிவையைநாடும்பெற்றியார்
அறனறுங்கூந்தலுமளகவண்டுசூழ்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார். (௯)

செருமதயாக்கையர்திருக்கில்சிந்தையர்
தருமதயாவினைதழுவுந்தன்மையர்

---

4. நவையிலார் - குற்றமிலாதார்.
5. சில்லலோதி - தகட்டணி நீத்தகூந்தல்.
8. சுரும்புமுரசும் - வண்டுகள்மொய்க்கும்.
9. தெரிவை - சனகி.

பொருமதயானையும்பிடியும்புக்குழல்
நருமதையாமெனுநதியைநீங்கினார். (௧0)

தாமகூடத்திரைத்தீர்த்தசங்கமும்
நாமகூடப்பெருந்திசையைநல்கிய
வாமகூடச்சுடர்மணிவயங்குறும்
ஏமகூடத்தடங்கிரியையெய்தினார். (௧௧)

மாடுறுகிரிகளுமரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப்பொலிந்துதோன்றுறப்
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது. (௧௨)

பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனகநுண்பூழியொட்டலான்
நிறைநெடுமேருவைச்சேர்ந்தநீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பது. (௧௩)

பரவியகனகநுண்பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
அருவியுநதிகளுமலங்குதியிடை
உருகுபொன்பாய்வபோன்றொழுகுகின்றது. (௧௪)

விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினாராடற்பாணியும்
குஞ்சரமுழக்கமுங்குமுறுபேரியின்
மஞ்சினமுற்றலும்வயங்குமாண்பது. (௧௫)

அனையதுநோக்கினாரமிர்தமாமயில்
இனையவேலிராவணனிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துசெங்கணார். (௧௬)

இம்மலைகாணுதுமேழைமானையச்
செம்மலைநீக்குதுஞ்சிந்தைத்தீதென
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்தார்
அம்மலையேறினாரச்சநீங்கினார். (௧௭)

இரிந்தனகரிகளும்யாளியீட்டமும்
விரிந்தகோளரிகளும்வெருவிநீங்கின

---

14. பராகம் - பொடி.  18. கோளரி - சிங்கம்.

திரிந்தனரெங்கணுந் திருவைக்காண்கிலார்
பரிந்தனசிந்தனைபரிகின்றுமென. (கஅ)

ஐம்பதிற்றிரட்டிகாவதத்திநூலகன்
றம்பரைத்தொடுவதொத்துயர்விளங்கிய
செம்பொனற்கிரியையோர்பகலிற்சேறினர்
கொம்பினைக்கண்டிலர்குப்புற்றேகினர். (கக)

வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையந்
தெள்ளுநீருலகெலாந்தெரிந்துதேடிநீர்
எள்ளருமகேந்திரத்தெம்மிற்கூடுமென்
றுள்ளினருயர்நெடுமோங்கனீங்கினர். (உ0)

மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரேகுழுமிப்போகின்றார்
நீரெனும்பெயருமங்நெறியினீங்கலால்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினர். (உக)

புள்ளடையாவிலங்கரிதுபுல்லொடும்
கள்ளடைமரனிலகல்லுந்தீந்தக
வுள்ளிடையரவநுண்பொடியொடொட்டலின்
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம். (உஉ)

நன்புலனடக்குறவுணர்வுநாமறப்
பொன்பொலியாக்கைகள்புழுங்கிப்பொங்குவார்
தென்புலந்தங்கெரிநரகிற்சிந்திய
என்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினர். (உ௩)

நீட்டியநாவினர்நிலத்திற்றீண்டுதோ
ராட்டியவெம்மையாலுலையுங்காலினர்
காட்டினுங்காய்ந்ததங்காயந்தீதலால்
சூட்டகன்மேலெழுபொரியிற்றுள்ளினர். (உச)

ஓதுங்கலாநிழலினைக்காண்கிலாதுயிர்
பிதுங்கலாமுடலினர்முடிவில்பீழையார்
பதங்கமப்பருகிடப்பதைக்கின்றார்பல
விதங்களாலெனும்பிலவழியின்மேவினர். (உரு)

23. என்பில்பல்லுயிர்-எலும்பற்றபலவகைக்கிடமாதியவுயிர். கீடம்-புழு.
35. பீழையார் - துன்பத்தினர்.

நீர்செலவரிதினிவிளியினல்லது
நிச்செலவொழியவுந்தடுக்குந்திண்மல
வாய்ச்செலனன்றெனமனத்தினென்னினூர்
போய்ச்சிலவறிதுமென்றதனிற்போயினூர். (உ௬)

அக்கணத்திப்பிலத்தந்தமெய்தினூர்
திக்கினெறிலைகுறச்சென்றிந்தகேதங்கிருள்
எக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புரைபுக்கெய்தினூர். (உ௭)

எழுகிலர்காலெடுத்தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனுமுணர்வுமாற்றினூர்
இழுகியநெய்யெனுமிருளினேகத்துள்
முழுகியமெய்யெனவுயிர்ப்புமுட்டினூர். (உ௮)

நின்றனர்செய்வதோர்நிலைமைநோக்கலர்
பொன்றினராமெனப்பொருமும்புந்தியர்
வன்றிறன்மாருதிவல்லையோவெமை
இன்றிதுகாக்கவென்றிரந்துகூறினூர். (உ௯)

உய்வுறுத்துவென்மனமுலையிருழின்வால்
மெய்யுறப்பற்றுதிர்விடுகிலீரென
ஐயனக்கணத்தினின்றகலுநீனெறி
கையினிற்றடவிவெங்காலினேகினூன். (௩0)

பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனையகுண்டலங்கள்வில்லிடத்
துன்னிருடொலைந்திடத்துருவியேகினூன்
பொன்னெடுங்கிரிநிகர்பொலிந்ததோளினூன். (௩௧)

கண்டனர்கடிநகர்கமலத்தொண்கதிர்
மண்டலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரிகத்தவள்வதனம்போன்றது. (௩௨)

கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப்புரிசைபுக்கது

---

28. உயிர்ப்பு - சுவாசம்.
31. துருவி - ஆராய்ந்து.  32. கடி - ஒளி.
33. புரிசை - மதில்.

அற்புதவுமாருமெய்தலாவது
சிற்பமுமயன்மனம்வருந்திச்செய்தது. (௩௩)

இந்திரநகரமுநிகரிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினின்
அந்தரத்திழிசுடரவையின்றாயினும்
உந்தநமிருடிரந்தொளிரகிற்பது. (௩௪)

புவிபுகழ்சென்னிபேரமலன்றேள்புகழ்
கவிகடமனையெனக்கனகராசியும்
சவியுடைத்தூசுமென்சாந்துமாலையும்
அவிரிழைக்குப்பையுமளவிலாதது. (௩௫)

பயில்குரற்கிண்கிணிப்பதத்தபாவையர்
இயல்புடைமைந்தரென்றியக்கிலாமையால்
துயிலவுநோக்கவுந்துணையதன்றியும்
உயிரிலாவோவியமென்னவொப்பது. (௩௬)

அமிழ்துலையயினியையடுத்தவுண்டியும்
தமிழ்நிகர்நறவமுந்தனிதண்டேறலும்
இமிழ்கனிப்பிறக்கமும்பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றியகணக்கில்கொட்பது. (௩௭)

வேறு.

கன்னிநெடுமாநகரமன்னதெதிர்கண்டார்
இந்நகரமாமிகவிராவணனதாரென்
றுன்னியுரையாடினருவந்தனர்வியந்தார்
பொன்னினெடுவாயிலதனூடுநனிபுக்கார். (௩௮)

புக்கநகரத்தினிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலைவானுலகின்வையத்
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியினுள்ளவுமெதிர்ந்திலர்திரிந்தார். (௩௯)

வாவியுளபொய்கையுளவாசமணநாறும்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுமிளமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமிவையுள்ளசுவடில்லை. (௪0)

---

36. இயக்கிலாமையால் - சஞ்சாரமின்மையால்.

ஆயநகரத்தினியல்புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனக்கருதிமற்றுநினைவுற்றார்
தீயபிலனுட்பிறவிசென்றவிவையொன்றோ
தூயதுதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றார். (சக)

இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
மறந்திலமயிர்ப்பினொடுமைப்புளமயக்கம்
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றால்
திறந்தருவதென்னெனவிசைத்தனர்திகைத்தார். (சஉ)

சாம்பனவனின்றுரைசெய்வானெழுசலத்தால்
காம்பனையதோளியையொளித்தபடுகள்வன்
நாம்புகவமைத்தபொறிநன்றுமுடிவின்றால்
ஏம்பலினிமேலைவிதியான்முடியுமென்றான். (சங)

இன்றுபிலனீதிடையினேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிகமாகிநனிசேறும்
அன்றதெனின்வஞ்சனைபரக்களையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான். (சச)

மற்றவருமற்றதுமனக்கொளவலித்தார்
உற்றனர்புரத்திடையவ்வொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணரியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையினளொடெதிர்கண்டார். (சரு)

மருங்கலசவற்கலைவரிந்துவரிவாளாள்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசிப்
பெருங்கலைமதித்திருமுகத்தள்பிறழ்செங்கேள்
கருங்கயல்களைப்பொருவுமூக்கினுதிகண்ணாள். (சசு)

தேரனையவல்குல்செறிதிண்கதலிசெப்பும்
ஊருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கும்
நேரிடைசலிப்பறநிறுத்திநிமிர்கொங்கைப்
பாரமுனொடுக்குறவுயிர்ப்பிடைபரிப்ப. (சஎ)

தாமரைமலர்க்குவமைசால்புறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறிகுறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபகைகாறளரவாசை
நாமமுயப்புலனுநல்லறிவுபுல்க. (சஅ)

42. அயிர்ப்பினொடு - சந்தேகத்துடன்.

46. மருங்கு - இடை. அலசவருந்த. வற்கலை - மரவுரி. வரிந்து - கட்டி.

நெறிந்துமிர்கற்றைநிறைமேயாதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றதுதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க. (சகூ)

இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகையசீதையவளாகப்
பரிந்தனர்பதைத்தனர்பணித்தகுறிபண்பில்
தெரிந்துணர்திமற்றிவள்கொறேவியெனலோடும். (ருo)

எக்குறியொடெக்குணமெடுத்திவணுரைக்கேன்
இக்குறியுடைக்கொடியிராமன்மனையாளோ
அக்குவடம்முத்தமணியாரமதினோர்நின்
றொக்குமெனினொக்குமெனமாருதியுரைத்தான். (ருக)

அன்னமொழிதின்கணவணங்குமறிவுற்றாள்
முன்னவனையர்சேறன்முறையன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரியின்னுறைவிரல்லீர்
என்னவரவியாதுரைசெய்ம்மெனவிசைத்தாள். (ருஉ)

வேதனையரக்கரொருமாதபணிவிளித்தார்
சீதையையொளித்தனர்மறைத்தபுரைதேர்வுற்
றேதமிலறத்துறைநிறுத்தியவிராமன்
தூதருலகிற்றிரிதுமென்னுமுரைசொன்னார். (ருங)

என்றலுமிருந்தவளழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயதொருபேருவகைகொண்டாள்
நன்றுவரவாகநடனம்புரிவலென்று
நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள. (ருச)

எவ்வுழையிருந்தனனிராமனெனயாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள்செப்பிடுதலோடும்
அவ்வுழைநிகழ்ந்ததனையாதியினொடைந்தம்
வெவ்விழைவில்சிந்தைநெடுமாருதிவிரித்தான். (ருரு)

கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே
காட்டியதுவீடெனவிரும்பிநனிகானீர்

51. அக்கின்மணி - சங்குமணி. கவடியுமாம்.
53. புரை - வீடு, இடமுமாம். 55. யாணர் - அழகிய.

ஆட்டியமிழ்தன்னசுவையின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள். (௫௬)

மாருதியுமற்றவண்மலச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவர்யாதுநினியற்பேர்
பார்புகழ்தவத்தினைபணித்தருளுகென்றான்
சேர்குழலுமற்றையவனுற்றபடிசொன்னாள். (௫௭)

நான்முகநுனித்தநெறிநாறுவரநொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா
மான்முகமுகத்தவன்மயன்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதிமாநகரநல்லோய். (௫௮)

அன்னதிதுதானவனரம்பையருளாங்கோர்
நன்னுதலினுண்முலைநயந்தனனநல்லாள்
என்னுயிரனையவளையானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்த்தேன். (௫௯)

புணர்ந்தவளுமன்னவனுமன்றில்லிழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிம்மாநகருறைந்தார்
கணங்குழையினுளொடுயர்காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடையேனுடனிருந்தேன். (௬௦)

இருந்துபலநாள்கழியுமெல்லையினின்வல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசீறிப்
பெருந்திறலினானையுயிருண்டுபிழையென்றம்
முருந்துநிகர்மூரனகையாளையுமுனிந்தான். (௬௧)

முனிந்தவளையுற்றமுறைமுற்றுமொழிகென்னக்
கனிந்ததுவர்வாயவளுமென்னையிவள்கண்ணால்
இநிந்தைமுடிவுற்றதெனவண்ணலுமிதெல்லாம்
நினைந்திவணிருத்திநகர்காவணினனென்றான். (௬௨)

என்றனனிருத்தியிருளாகநெறியென்ன
ஒன்றுரையெனக்குமுடிவென்றுரைசெயாமுன்
வன்றிறலவ்வானரமிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிடரென்றவனகன்றான். (௬௩)

57. இயற்பெயர் - நாமகரணகாலத்து இட்டு வழங்கும் பெயர், அல்லது வழங்கும் பெயருமாம்.

58. மான்முகத்தவன் - மானின் முகம்போலும் உடையவன்.

62. கண்ணால் - நினைவால்,

உண்ணவுளபூசவுளசூடவுளவொன்றோ
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றேன்
அண்ணலவைவிட்டுமையடைந்திடுதல்வேண்டி
எண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேதன். (௬௪)

ஐயிருபதோசனையமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலகம்வேறுநெறிகூறு
உய்யுநெறியுண்டுதவவீரெனிலுபாயம்
செய்யும்வகையுண்டெனினினைத்திர்சிறிதென்றாள். (௬௫)

அன்னதுகுறித்தரிவைகூறவனுமானும்
மன்னுபுலன்வென்றுவருமாதவண்மலர்த்தாள்
சென்னியின்வணங்கிநனிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான். (௬௬)

முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவேமைப்
பிழைத்துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
இழைத்திசெயலாயவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான். (௬௭)

நடுங்கன்மினெனச்சொலைநவின்றுநகைநாற
மடங்கலினெழூஉநுமழைபோறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலைதிறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்சுமந்துநெடுவானுறநிமிர்ந்தான். (௬௮)

எருத்துறுதிடர்ப்புயமிரண்டுமொயிரென்ன
மருத்துமகனிப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்துநிமிர்கண்ணினெதிர்கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்தகருமாவினையுமொத்தான் (௬௯)

மாவடிவுடைக்கமலநான்முகன்வகுக்கும்
தூவடிவுடைச்சுடர்கொள்விண்டலைதொலைக்கும்
மூவடிகுறித்துமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுரைந்தான். (௭௰)

66. அன்னது - சுயம்பிரபைகூற என்றும்பாடம்.
67. உயிருர்க்க - உயிருண்டாக.
69. இப்படியிடந்துற - இப்பூமியிளக்க. கருமா - பன்றிப்பொதுப்பெயர்.
71. ஊழுற - நேராக.

எழிருபதோசனையிடந்துபடியின்மேல்
ஊழுறவெழுந்ததனையும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனுளின்றுபடர்மேல்பால்
ஆழியினெறிந்தனுமனேகமெனவார்த்தான். (௭௧)

இன்றுமுளமேல்கடலியக்கில்பிலநிவா
நின்றுநிலைபெற்றுளதுநீணுதலியோடும்
குன்றுபுரைதோளவரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனாள். (௭௨)

மேருவரைமாமுலையண்மென்சொலினள்விஞ்சு
மாருதியினைப்பலவுவந்துமகிழ்வுற்றே
ஏருறுசுயம்பிரபையேமைநெறியெய்தத்
தாருவளர்பொற்றலனிடைக்கடிதுசார்ந்தாள். (௭௩)

மாருதிவலித்தகைமைபேசிமறவோரும்
பாரிடைநடந்துபகலெல்லைபடரப்போய்
நீருடையபொய்கையெனுநேமியிடைநின்றார்
தேருடைநெடுந்தகையுமேலைமலைசென்றான். (௭௪)

ஆக திருவிருத்தம் - ௯௰௧.

---

## ௧௨-வது, ஆறுசெல்படலம்.

கண்டார்பொய்கைக்கண்ணகனன்னீர்க்கரைகாமுற்
றுண்டார்தேனுமொண்கனிகாயுமொருசூழல்
கொண்டாரன்றேவின்றுயில்குன்றிற்குறியெய்தித்
தண்டார்வென்றித்தானவன்வந்தான்றகைவில்லான். (௧)

மலையேபோல்வான்மால்கடலொப்பான்மறமுற்றக்
கொலையேயொப்பான்கூற்றைநிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மையிலாதானிமிர்திங்கட்
கலையேபோலுங்காலவெயிற்றான்கனல்கண்ணான். (௨)

வேறு.

கருவிமாமழைகைகடாவிமீ
துருவமேனிசென்றுலவியொற்றலால்

---

73. இந்த 73 - வது பாடல்பல பிரதிகளிற்காணப்படவில்லை.
74. மறவோர் - வானரவீரர்.
3. கருவிமாமழை - உலகபாலனத்திற்கு உபகாரணமாகவுள்ள சிறந்தமேகம்.

பொருவின்மாரிமேலொழுகுபொற்பினால்
அருவிபாய்கருங்குன்றமேயனான். (௩)

வானவர்க்குமற்றவர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையான்
ஆனபுட்கலனவனோடாடவே
ஏனவர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ. (௪)

பிறங்குபங்கியான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன் மனன்பினையுங்கையினான்
அறங்கொள்சிந்தையார்நெறிசெலாய்வினால்
உறங்குவாரைவந்தொல்லையெய்தினான். (௫)

பொய்கையென்னதென்றுணர்ந்தும்புல்லியோர்
எய்தினார்கள்யாரிதுவெனாவெனா
ஐயனங்கதனலங்கன்மார்பினிற்
கையின்மோதினான்காலனேயனான். (௬)

மற்றிமைந்தனுமுறக்கமாறினான்
இற்றிவன்கொலாமிலங்கைவேந்தனா
எற்றினானைநேரெற்றினானவன்
முற்றினானிகற்காதிமூர்த்தியான். (௭)

இடியுண்டாங்கணோரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலும்
தொடியின்றோள்விசைத்தெழுந்துசுற்றினார்
பிடியுண்டாரெனத்துயிலும்பெற்றியார். (௮)

யார்கொலாமிவனிகழ்ந்ததென்னெனாத்
தாரைசேயினைத்தனிவினாயினான்
மாருதேயன்மற்றவனும்வாய்மைசால்
ஆரியாதெரிந்தறிகிலேனென்றான். (௯)

யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
றானிவந்தவேற்றுமிரனென்னும்பே
ரானிவ்வாழ்புனற்பொய்கையாளுமோர்
தானவன்னெனச்சாம்பன்சாற்றினான். (௧௦)

---

9. மாருதேயன் - வாயுகுமாரன்.

வேறுமெய்துவாருளர்கொலாமெனத்
தேறியின்றுயிற்செலவுதீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
நாறுநாண்மலர்ப்பெண்ணைநாடுவார். (கக)

புண்ணைவெம்முலைப்புளினமேய்தடத்
துண்ணவாம்பலின்னமிழ்தமூறுவாய்
வண்ணவெண்ணகைத்தரளவாண்முகப்
பெண்ணைநண்ணினார்பெண்ணைநாடுவார். (கஉ)

துறையுந்தோகைநின்றாடுசூழலும்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந்தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினாறிவின்கோடியார். (கங)

அணிகொழித்துவந்தெவருமாடினார்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழித்திடுந்துறையின்வைகினார். (கச)

ஆடுபெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துளார்
வீடுநண்ணினாரென்னவீசுநீர்
நாடுநண்ணினார்நாடுநண்ணினார். (கரு)

தசநவப்பெயர்த்தாலசண்பகத்
தசநவப்பிரத்தகனநாடொரீஇ
உசநவப்பெயர்க்கவிபுதித்தபேர்
இசைவிதர்ப்பநாடெளிதினெய்தினார். (கசு)

வைதருப்பமண்டலனில்வந்துபுக்
கெய்தருப்பமத்தனையுமெய்தினார்
மெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினார். (கஎ)

---

11. நாறு நாள் - உதிக்குங்காலத்தில்.

12. புண்ணை - ஒப்பின்மையால் சக்கரவாகப்புள் வருந்துகின்ற.

15. பெண்ணை - உத்தரபினாகி. நீர்நாடு - தசநவம்என்னும் நாடு. நாடுநண்ணினார் - தேடுதலுக்காக வந்தவர்கள்.

16. தாலசண்பகம் - வரிசையாகிய சண்பகமரங்களுடன்.

அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ்திருநன்னாடொரீஇத்
தன்னையெண்ணுமத்தகைபுகுந்துளார்
துன்றுதண்டகங்கடிதுதுன்னினார். (கஅ)

உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினார்
தண்டகத்தையுந்தடவியேகினார்
முண்டகத்துறைகடிதுமுற்றினார். (ககூ)

அவ்வநீரெலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோணதயிற்
கள்ளுநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுமீனுமாலவுதீர்தலால். (உ0)

குஞ்சரங்குடைந்தொழுகுகொட்பதால்
விந்தைமன்னர்பால்விரகமங்கைமார்
நஞ்சுவீணையினடத்துபாடலான்
அஞ்சுவார்கணீரருவியாறரோ. (உக)

கமுகவார்நெடுங்கனகவூசலிற்
குமுதவாயினார்குயிலையேசுவார்
சமுகவாளியுந்தனுவும்வாண்முகத்
தமுதபாடலார்மருவியாடுவார். (உஉ)

இளையவாயவொண்டுறையையெய்தினார்
நினையும்வேலைவாய்நெடிதுதேடுவார்
விளையவார்குழற்றிருவைமேவலார்
புனையுநோயினார்கடிதுபோயினார். (உங)

நீண்டமேனியானெடியதாளினின்
றீண்டுகங்கைவந்திழிவதென்னலாய்ப்
பாண்டுவம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதண்சிகரமெய்தினார். (உச)

இருணறுத்துமீதெழுந்துதெண்ணிலா
மருணறுத்துவண்சுடர்வழங்கலால்

---

17. வைதருப்பம் - விதர்ப்ப சம்பந்தம்.

19. முண்டகத்துறை - ஒருதீர்த்தம். சிலர் கடற்றுறை என்ப.

அருளுறுத்திலாவடலரக்கன்மேல்
உருளுறுத்ததிண்கயிலையெடுத்ததால். (உ௫)

வேறு.

விண்ணுறநிவந்தசோதிவெள்ளியங்குன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார்களியுறக்கனிந்தகாமர்ப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப்பவையுறநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணாரிடருறுமனத்தரெய்த்தார். (உ௬)

ஊதைபோல்விசையின்வெங்கணுழைவைபோல்வயவரோங்கல்
ஆதியையகன்றுசெல்வாரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வயிரிவந்தாபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தசோதாவிரியினைக்குறுகிச்சென்றார். (உ௭)

எழுகின்றகிரியிற்றாகியிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வெள்விதொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கினாலம்
அழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே, (உ௮)

ஆசில்பேருலகிற்காண்போரளவைநாலெனலுமாகிற்
காசொடுகனகந்தூவிக்கவினுறக்கிடந்தகான்யா
றேசில்போரரக்கன்மார்பினிடைபறித்தெருவைவெந்தன்
வீசியவடகநீக்கோரெனவிளங்கிற்றன்றே. (உ௯)

அந்நதிமுழுதுநாடியாய்வளமயிலையாண்டும்
சந்நிதியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்றார்
இன்னதீதிலாதகீதென்றியாவையுமெண்ணுங்கோளார்
சொன்னதீவினைகமர்க்குந்தவணகத்துறையிற்புக்கார். (௩௦)

சுரும்பொடுதேனும்வண்டுமென்னமுந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன்மருதஞ்சூழ்ந்தகிடக்கையின்கிடக்கச்சென்றார்
குரும்பைநீருராஞ்சுஞ்சோலைக்குலிந்தமும்புறத்துக்கொண்டார். ()

கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தறண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகரானார். (௩உ)

---

29. அளவைநால் - ஏற்றநால், அளக்கு நாலுமாம்.
30. சந்நிதி - சமுகம்.

அருந்ததிக்கருகுசென்றுண்டழகினுக்கழகுசெய்தாள்
இருந்ததிக்குணர்ந்திலாதாரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமரகதப்பெருங்குன்றெய்தி
இருந்ததிற்றீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தகாலை. (௩௩)

முனிவருமறைவலோருமுந்தைநாட்சிந்தைதழேண்ட
வினைவருநெறியைமாற்றுமெய்புணர்வோரும்விண்ணோர்
எனைவருமமரர்மாதர்யாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர்நாளும்வந்தாடுகின்றார். (௩௪)

வேறு.

பெய்தவைம்பொறியும்பெருங்காமமும்
வைதவெஞ்சொலின்மங்கையர்வாட்கணின்
எய்தவைம்பெருவாளியினெண்ணறச்
செய்தவம்பலசெய்குநர்தேவரால். (௩௫)

வலங்கொணேமிமழைநிறவானவன்
அலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ. (௩௬)

ஆயகுன்றினையெய்தியருந்தவம்
மேயசெல்வரைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார். (௩௭)

சூடியாண்டச்சுரிகுழற்றோகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தண்டக
நாடுநண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வேண்டுருமேவுவார். (௩௮)

குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்தகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்புமருங்கெலாம். (௩௯)

சூலடிப்பலவின்சுளைதூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரோர்ச்

33. அழகினுக்கழகுசெய்தாள் - சீதை.
36. நேமி - சக்கரத்தினையுடைய.

சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னநதுவைப்பன. (சo)

செருகுறுங்கணிற்றேங்குவளைக்குலம்
அருகுறங்கும்வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்குபிறங்கியவாழையிற்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால். (சக)

தெருவினூர்ப்புறம்பல்லியந்தேர்மயில்
கருவிமாமழையென்றுகளிப்புறூஉ
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகிலா
மருவினூர்க்குமயக்கமுண்டாங்கொலோ. (சஉ)

தேரைவன்றலைத்தெங்கினம்பாளையை
நாரையென்றிளங்கொண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச்
சேரையென்றுபுலம்புவதேரையே. (சங)

நள்ளிவாங்குகடையிளநங்கியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைசினைபொரியாதவண்
றுள்ளியாமைமுதுகினுடைப்பரால். (சச)

சேட்டிளங்கடுவன்சிறுபுன்கையிற்
கோட்டுதேம்பலவின்கனிக்கூன்சுளை
தோட்டமைந்தபொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென்றீயினமொய்ப்பன. (சரு)

செல்வரென்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரென்றுஞ்சுளிபடக்
கொல்வரென்றுங்கொடுப்பனரென்றுமவ்
வில்வரம்பிலிறைவனையேத்துவார். (சசு)

அன்னதண்டகநாடுகடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினார்
செந்நெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார். (சஎ)

---

43. தேரைவன்றலை - முற்றி அழகிய வலியதலையை உடைய.

46. விலவரம்பினர்க்கிதேனு மீட்டதே எனவும் பாடம்.

கொடிறு தாங்கியவாய்க்குழுநாரைவாழ்
தடறு தாங்கியகூனிளந்தாழையின்
மிடறு தாங்கும்விருப்புடைத்தீங்கனி
இடறுவார்நறுந்தேனினிழுக்குவார். (சஅ)

குழுவுமீன்வளர்க்குட்டமெனக்கொளா
எழுவுபாடலிமிழ்கருப்பேந்திரத்
தொழுகுசாறகன்கூனையிற்றாழ்புறை
முழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே. (சகூ)

பூநெருங்கியபுள்ளுறுஞ்சோலைகள்
தேனொருங்குசொரிதலிற்றேர்வில
மீனெருங்குறும்வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களின்வைகுமால். (ருo)

தாறுநாறுவதாழைகடாமையின்
சோறுநாறுவதூம்பிழிமாங்கனி
நாறுநாறுவநாறுவளர்க்குறும்
சேறுநாறுவசெங்கழுநீரரோ. (ருக)

அனையபொன்னியகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினார்
இனையதென்றமிழ்நாடுசென்றெய்தினார். (ருஉ)

அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றுவமையொக்குமோ
எத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்துமுற்றுமோ. (ருங)

என்றதென்றமிழ்நாட்டினையெங்கணும்
சென்றுநாடித்திரிந்துதிருந்தினார்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினார்
துன்றமேலாதியைக்கண்டிலர்துன்பினார். (ருச)

வன்றிசைக்கபிறன்னமகேந்திரக்
குன்றிசைத்ததுவல்லையிற்கூடினார்
தென்றிசைக்கடற்கரமாருதம்
நின்றிசைக்கிநெடுநெறிநீங்கினார். (ருரு)

ஆ திருவிருத்தம் கூருக.

---

49. குட்டமெனக்கொளா - குளமென்று நினைத்து. கருப்பேந்திரம் - கரும்பாலை.

## ௧௩-வது, சம்பாதிப்படலம்.

மழைத்தவிண்ணகமெனமுழங்கிவானுற
விழைத்தவெண்டிரைக்கரமெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென்றுரைத்திட்டுழின்வந்
தழைப்பதேகடுக்குமவ்வாழிநோக்கினர். (௧)

விரிந்துநீரெண்டிசைமேவிமேன்மையால்
பொருந்துதிர்மகேந்திரதடத்தன்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளாமளவில்சேனையும்
பெருந்திரைக்கடலெனப்பெரிதுகூடிற்றே. (௨)

யாவருமவ்வயினெளிதினெய்தினர்
பூவருபொலங்குழற்பொருவில்கற்புடைத்
தேவியைக்காண்கிலார்செய்வதோர்கிலார்
நாவியல்குழறிடநவில்கின்றாரரோ. (௩)

அற்றதுநாள்வரையவதியாட்சியும்
உற்றிலமிராகவனுயிரும்பொன்றுமால்
கொற்றவனுணையுங்குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செயலினியென்றெண்ணினர். (௪)

அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்
மருந்தருநெடுங்கடுவுண்டுமாய்துமோ
திருந்தியதியாததுசெய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார். (௫)

கரைபொருகனைகடல்கனகமால்வரை
நிரைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுளதெனவுணர்த்தினன்
அரைசிளங்கோளரியருஞ்சிந்தையான். (௬)

நாடிநாங்கொணருதுநளினத்தாளைவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
றுடவர்திலகனுக்கன்பினுரெனப்
பாடவம்விளம்பினம்பழியின்மூழ்குவான். (௭)

---

1. ஆழிநோக்கினர் - கடல்கண்டார்.
5. மருந்தரும் - பிரதிவிஷமான மருந்தற்ற. நெடுங்கடு - கொடியவிஷம்.
7. பாடவம் - சாமர்த்தியம்.

செய்துமென்றமைந்ததுசெய்துதீர்ந்திலம்
நொய்துசென்றுற்றதுநுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்பதோரிறையுங்கண்டிலம்
உய்துமென்றாலிதோருரிமைத்தாகுமோ. (அ)

எந்தையுமுனியுமெம்மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குறேன்
நுந்துவெனுயிரினைநுணங்குகேள்வியீர்
புந்தியினன்னதுபுகல்பிராவென்றான். (கூ)

விழுமியதுரைத்தனைவிசயமவீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினான். (க௦)

நீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநலமெனவலித்தனம்
ஆண்டகையரசிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமால். (கக)

என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்திதனவயார்குவவுத்தோளினீர்
பொன்றிநீர்மடியயான்போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ. (கஉ)

சான்றவர்பழியுரைக்கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப்போந்துளானென
ஆன்றபேருலகுளோரறைதன்முன்னம்யான்
வான்றொடர்குவெனெனமறித்துங்கூறுவான். (கங)

வேறு.

எல்லைநம்மிறுதியாய்க்குமெந்தைக்கும்யாவரேனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற்றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமிளையகோவும்வீவதுதிண்ணமச்சொல்
மல்லனீரயோத்திபுக்கால்வாழ்வரோபரதன்மற்றோர். (கச)

பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூரும்
சரதமேமுடிவர்கெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்

---

8. இறையும் - சிறிதும். 9. நுந்துவென் - விடுகின்றேன்.

விரதமாதவத்தின்மிக்கவிளக்கிளுலகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான். (கரு)

பொருப்புறழ்வயிரத்திண்டோட்பொருசினத்தாளிபோல்வான்
தரிப்பிலாதுரைத்தமாற்றந்தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையேவிளைத்தபோலநெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பிளுலவனைநோக்கிவிளம்பினனெண்கின்வேந்தன். (க௬)

வேறு.

நீயுநின்றுணைதயுநீங்கநின்குலத்
தாயம்வந்தவரொடுந்தயரில்லையால்
ஆயதுகருதினமன்னதன்றெனின்
நாயகரிறுதியும்நவிலற்பாலதோ. (கள)

ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழித்
தோகையைக்கண்டிலாவகையுஞ்சொல்லியென்
சாகையுமுணர்த்துதிதவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன்வயம்பிலாற்றலான். (க௮)

அவனவையுரைத்தபின்னனுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலம்
தவனமாண்டவரெனத்தருக்கிலாரெனக்
கவனவேகத்துநீர்கழிதிரோவென்றான். (க௯)

பின்னருங்கூறுவான்பிலத்தில்வானத்தில்
பொன்வரைக்குடுமியிற்புறத்துளண்டத்தில்
நன்னுதற்றேவியைக்காண்டுநாமெனிற்
சொன்னநாளவதியையிறைவன்சொல்லுமோ. (உ0)

நாடுதலேநலமின்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லதுபழியிற்றுமென்றான். (உக)

என்றலுங்கேட்டனனெருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொற்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான். (உஉ)

16. தரிப்பிலாது - சகிக்கமாட்டாமல்.
18. சாகையும் - மரணத்தையும்.
21. பழியிற்றும் - இதுபழியாகும்.

முறையுடையெம்பியார்முடிந்தவாறெனப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனியன்
இறையுடைக்குலிசவேலெறிகலாதமுன்
சிறையுடைமலையெனச்செல்லுஞ்செய்கையான். (உ௩)

மிடலுடையெம்பியைவீட்டுவெஞ்சினப்
படையுளராயினார்பாரில்யாரெனா
உடலினைவழிந்துபோயுவரிநீருகக்
கடலினைப்புரையுறுமருவிக்கண்ணினான். (உ௪)

உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினான்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானழுங்கினான்புடவிமீதினில்
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான். (உ௫)

வள்ளியுமரங்களுமலையுமண்ணுறத்
தெள்ளுநுண்பொடிபடக்கடிதுசெல்கின்றான்
தள்ளுவன்கால்பொரத்தரையிற்றவழ்
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான். (உ௬)

எய்தினனிருந்தவரிரியல்போயினார்
ஐயனம்மாருதியழலுங்கண்ணினான்
கைதவநிசிசரக்கள்வவேடத்தை
உய்திகொலினியெனவுருத்துமுன்னின்றான். (உ௭)

வெங்கதம்வீசியமனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினான்
சங்கையிற்சழக்கிலனென்னுந்தன்மையை
இங்கிதவகையினாலெய்தநோக்கினான். (உ௮)

நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்
வாக்கினாலொருமொழிவழங்கலாதமுன்
தாக்கருஞ்சடாயுவைத்தருக்கினாலுயிர்
நீங்கினரியாரதுநிரப்புவீரென்றார் (உ௯)

உன்னைநீயுள்ளவாறுரைப்பினுற்றதைப்
பின்னையானிரப்புதல்பிழைப்பின்றாகுமால்

---

27. வேடத்தை - வேடத்தினையுடையாம்.

28. சழக்குகை - தவமாகிய வஞ்சனை.

30. நிரப்புதல் - தெரிவித்தல்.

என்னமாருதியெதிரெருவைவேந்தனும்
தன்னையாந்தன்மையைச்சாற்றன்மேயினான். (௩௦)

மின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினாய்
என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினான். (௩௧)

கூறியவாசகங்கேட்டுக்கோதிலான்
ஊறியதுன்பத்தினுவரியுட்புகா
ஏறினனுணர்த்தினனிகலிராவணன்
வீறியவாளிடைவிளிந்ததாமென்றான். (௩௨)

அவ்வுரைகேட்டலுமசனியேற்றினால்
தவ்வியகிரியெனத்தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுயிராவுயிர்பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரையெடுத்தியம்பினான். (௩௩)

வேறு.

இளையாநீள்சிறகின்றிவெந்துகத்
தளையானேனுயிர்போதறக்கதோ
வளையாநேமியன்வன்மைசால்வலிக்
கிளையானேயிதுவென்னமாயமோ. (௩௪)

மலரோனின்றுளன்மண்ணும்விண்ணுமுண்
டிலையாநீடறமின்னுமுண்டரோ
நிலையார்கற்பமுநின்றநின்றுநீ
இலையானாயிதுவென்னதன்மையோ. (௩௫)

உடனேயண்டமிரண்டுமுந்துயிர்த்
திடநாள்வந்திருவோருமெய்தினோம்
விடநீயேதனிச்சென்றவீரமும்
கடனேவெங்கலுழற்குமேன்மையோய். (௩௬)

ஒன்றுமூன்றுலகத்துளோரையும்
வென்றானென்னினுய்வீரநிற்குநேர்
நின்றானையவ்வரக்கனின்னையும்
கொன்றானேயிதுவென்னகொள்கையோ. (௩௭)

33. தவ்விய - மோதிய.

என்றென்றேங்கியிரங்கியின்னலாற்
பொன்றுந்தன்மைபுகுந்தபோதவற்
கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிநல்கினன்
வன்றிண்டோள்வரையன்னமாருதி. (கூஅ)

தேற்றத்தேறியிருந்தசெங்கணன்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனோ
டேற்றுப்போர்செய்தவென்னிமித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால். (கூகூ)

எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்
வெங்கோல்வஞ்சன்விளைத்தமாயைபால்
தங்கோனைப்பிரிவுற்றதன்மையாள். (சo)

கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனாத்
திண்டோராலெதிர்சிந்தைதீறினான். (சக)

ஏறித்தீயவனேறுதேரையும்
கீறித்தோள்கள்கிழித்தழித்தபின்
தேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
வீறப்பொன்றினன்மெய்ம்மையோவென்றான். (சஉ)

விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தகுதீர்த்தம்மாட்டுயிர்
அளித்தானேயதுநன்றுநன்றெனாக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினான். (சஙு)

பைந்தாரெங்களிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன்
மைந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ
டுய்ந்தானல்லதுலந்ததுண்மையோ. (சச)

அறமன்னனுடனெம்பியன்பினோ
டுறவுன்னுவுயிரொன்றவோவினான்

---

38. அவற்கொன்றுஞ் சொல்கொண்டு - அச் சம்பாதிக்கேற்ற வசனத்தினால்.
39. என்னிமித்தென - யாதுகாரணத் தாலென.
45. ஓவினான் - நீங்கினான்.

பெறவொண்ணாதவேதார்பெற்றிபெற்றவற்
கிறவென்னுமிதினின்பமியாவதோ. (சரு)

என்றென்றேங்கியிரங்கியின்புனற்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
துன்றுந்தாரவர்க்கின்னசொல்லினான். (சசா)

வாழ்வித்தீரெனைமைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரலீர் துன்பவாழிவாய்
கேள்வித்தீவினைகிறினீரிருள்
போழ்வித்தீருரைபொய்யினீங்கினீர். (சஎ)

எல்லீரும்மவ்விராமநாமமே
சொல்லீரென்சிறைதோன்றுஞ்சோர்விலா
நல்லீரப்பயனண்ணாநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்குமாண்பினீர். (சஅ)

என்றானன்னதுகாண்டும்யாமெனா
நின்றார்நின்றுழிநீலமேனியான்
நன்றாநாமநவின்றுநல்கினார்
வன்றோளான்சிறைவானந்தாயவே. (சகூ)

சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலகெங்கும்மூடினான்
நிறைபெற்றாவிநெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாலெனலாமுறுப்பினான். (ருo)

தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்வந்
துருண்டானுற்றபயத்தையுன்னினார்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினார்
வெருண்டார்சிந்தைவியந்துவிம்முவார். (ருக)

அன்னானைக்கடிதஞ்சலித்துநீ
முன்னானுற்றதுமுற்றுமோதெனச்
சொன்னார்சொற்றதுசிந்தைதோய்வுறத்
தன்னானுற்றதுதான்விளம்புவான். (ருஉ)

வேறு.

தாயெனத்தகையநண்பீர்சம்பாதிசடாயுவென்பேஞ்
சேயொளிச்சிறையவேகக்கழுகினுக்கரசுசெய்வேம்

---

46. இன்புனல் சென்றங் காடுதல்செய்து - சகோதரனது மரணசூச மொழிய இனியநீரிற்குளித்து.

பாய்திரைப்பரவைஞாலம்படரிருள்பருகும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரூரருணனுக்கமைந்தமைந்தர். (௫௩)

ஆயுயரும்பர்நாடுகொண்டுமென்றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
தீயையுந்தீக்குந்தெப்பச்செங்கதிர்ச்செல்வன்சீறி. (௫௪)

முந்தியவெம்பிமேனிமுருங்கழன்முடுகும்வேலை
எந்தைநீகாத்தியென்றான்யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைத்தலோடுமற்றவன்மறையப்போனான்
வெந்துமெய்யிறகுதிர்ந்துவிழுந்தனன்விளிகிலாதேன். (௫௫)

மண்ணிடைவிழுந்தவென்னைவானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையாற்சனகன்காதற்
பெண்ணிடையிட்டின்வந்தவானரரிராமன்பேரை
எண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுதியென்றான். (௫௬)

தாழ்ந்தமாதவத்துலோகசாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனன்சிறைகரியவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமென்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனனாழ்ந்தவென்னையருந்தவனெதிர்ந்துதேற்றி. (௫௭)

கற்றிலார்போலவுள்ளக்களிப்பினாலமரர்காப்பூ
டுற்றிடக்கருதிமீப்போயாதபத்துனதுமேனி
முற்றழன்முருங்கமண்ணைமுயங்கினையினியென்சின்னாள்
மற்றுநின்னுயிரையோம்பாதிருத்தநாராலேத்தன்றால். (௫௮)

களித்தவர்கெடுதறிண்ணஞ்சனகியைக்கடன்வெளவி
ஒளித்தவாய்துருவியுற்றவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும்வெவ்வுயிர்த்தயரலென்றன்
றளித்தனனதனாலியாற்றினேனுற்றன்மொய்ம்பீர். (௫௯)

அன்றியுமலருள்வைகுமயனைநேர்முனிவன்வாய்மை
நன்றிகொளீசற்காண்பானணுகலும்வினையேனுற்ற
தொன்றொழிவுறுமற்கேட்டதியோகத்தினுணர்ச்சிபேணிப்
பொன்றுதலொழிமின்யானேபுகல்வதுகேண்மினென்றான். (௬௦)

தசரதராமன்றேவர்தவத்தினாற்றாய்சொற்றாங்கிக்
கசரததுரகமின்றிக்கானிடையிருத்தகாலை

---

57. லோகசாரங்கன் - ஒருதவசியின்பெயர்.

வசைதருமிலங்கைவேந்தன்வெளவியதிருவைநாடித்
திசைதிரிகவிகளுற்றாற்சிறகுபெற்றெழுதியென்ன. (௯௧)

எம்பியுமிடரின்வீழ்வானையதுமறக்கவஞ்சி
அம்பரத்தியங்குமானக்கழுகினுக்கரசனானான்
நம்பியீரீதென்றன்மைநீரிவணடந்தவார்த்தை
உம்பருமுவக்கத்தக்கீருணர்த்துமினுணரவென்றான். (௯௨)

என்றலுமிராமன்றன்னையேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றத்தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித்தேடிநாம்வந்துமென்றார்
நன்றுநீர்வருந்தல்வேண்டாநானிதுநவில்வலென்றான். (௯௩)

பாகொன்றுகுதலையாளைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுகண்டேன்புக்கனனிலங்கைபுக்கு
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையகத்துவைத்தான்
ஏகொன்றிற்காண்டிரந்திலிருந்தனளிறைவியின்னும். (௯௪)

யோசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துக்கூற்றுங்கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேறலெப்பரிசியைவதென்றான். (௯௫)

நால்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகனிற்க
பால்முகப்பரவைப்பள்ளிப்பரம்பரன்பணியென்றாலும்
காலனுக்கேயுஞ்சேறலரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச்செல்லுமின்விளிவிலாதீர். (௯௬)

எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகிமறைந்தவணுழுகிவாய்மை
சொல்லீரேதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீடிர்
அல்லீரேலென்சொற்றேறியுணர்த்துமினழகற்கம்மா. (௯௭)

காக்குநரின்மையாலக்கழுக்கினமுழுதுங்கன்றிச்
சேக்கைகவிட்டிரியல்போகித்திரிதருமகனைத்தீர்ப்பான்
போக்கெனக்கடுத்தநண்பீர்நல்லதுபுரிமினென்னு
மேக்குறவிசையிற்சென்றான்சிறையினால்விசும்புபோர்ப்பான். (௯௮)

ஆக திருவிருத்தம் - ௧௦௨௪.

# கச-வது, மகேந்திரப்படலம்.

பொய்யுரைசெய்யான்புள்ளரசென்றேபுகலுற்றார்
கையுறைபெறலித்தன்மையினெல்லாங்கரைகண்டாம்
உய்யுரைபெற்றாநல்லவையெல்லாமுறவெண்ணிச்
செய்யுமினென்றேசெப்பவகைநொய்திற்செயவல்லீர். (க)

சூரியன்வெற்றிக்காதலனேறுநெடுஞ்சுடர்விற்கை
ஆரியனைச்சென்றேதொழுதுற்றதுரைகிற்பீர்
சீரிதின்முற்றுந்தேருதல்கொற்றச்செயலம்மா
வாரிகடப்போர்யாவரெனத்தம்வலிசொல்வார். (உ)

மாளவலித்தேதமென்றுமிமாளாவசைசேபோடி
மீளவுமுற்றேறமன்னவைதீரும்வெளிப்பெற்றேம்
காளதிறத்தோடொப்பனவிந்நேர்கடலுறவுற்
றாளுநலத்திராளுமினெம்மாருயிரம்மா. (ந)

நீலன்முதற்பேர்போர்கெழுகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளமிடுக்கின்றெனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான். (ச)

வேதமனைத்துந்தேர்தரவொட்டாவொருமெய்யன்
பூதலமுற்றுமீரடிவைத்துப்பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைத்தேதவரமேரு
மோதவிளைத்தேதாளுலைவிற்றேன்விறல்மொய்ம்பீர். (ரு)

ஆதலினிப்போரார்கலிகுப்புற்றகழிஞ்சி
மீதுகடத்தித்தீயவருட்கும்வினையோடும்
சீதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றேன்
றோதியிறுத்தானாலுமுகத்தானுதவுற்றான். (சா)

யாமினியிப்போதாரிடர்துய்த்திங்கிரியாவைப்
போமெனவைப்பேமென்பதுபுன்மைப்புகழன்றே
கோமுதல்வர்க்கேறாகியகொற்றக்குமரநம்
நாமநிறுத்திப்பேரிசைதக்குநவையில்லோன் (எ)

1. புள்ளரசு - கழுகு அரசு.

6. நாலுமுகத்தானுதவுற்றான் - சாம்பவன்.

ஆரியன்முன்னர்ப்போதுறவுற்றவதனானும்
காரியமெண்ணிச்சோர்வறமுற்றுங்கடனாலும்
மாருதியொப்பார்வேறிலையென்னாவயன்மைந்தன்
சீரியன்மற்றோராண்மைதெரிப்பானிவைசெப்பும். (௮)

மேலைவிரிஞ்சன்வீயினும்வீயாமிகைநாளீர்
நூலைநயந்துநுண்ணறிதுணைநீர்நுவறக்கீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பீர்கடனின்றீர்
ஆலநுகர்ந்தானன்னவயப்போராடர்கிற்றீர். (௯)

வெப்புறுசெந்தீநீர்வளியாலும்விளியாதீர்
செப்புறுதெய்வப்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புறினொப்பார்நும்மலதில்லீரொருகாலை
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர். (௧௦)

நல்லவுமோன்றோதியவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநீரேதுணிவுற்றீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர்மிடலுண்டேல்
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர். (௧௧)

மேருகிரிக்குந்தூறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரையிடிக்கும்வரவல்லீர்
பாரையெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றொண்கையகத்துந்தொடவல்லீர். (௧௨)

அறிந்துதிறத்தாறெண்ணியறந்தாரழியாமை
மறிந்துருளப்போர்வாலியைவெல்லுமதிவல்லீர்
பொறிந்திமையாக்கோன்வச்சிரபாணம்புகழேழ்க
எறிந்துழிமற்றோர்புன்மயிரேனுமிழவாதீர். (௧௩)

போர்முனைதீர்ந்தான்மூவுலகேனும்பொருளாகா
ஓர்வில்வலங்கொண்டோல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்நீக்கும்பகலோன்முன்
தேர்முடனந்தேயாரியநூலுந்தெரிவுற்றீர். (௧௪)

நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவானும்
மாதர்நலம்பேணாதுவளர்ந்தீர்மறையெல்லாம்

---

9. மிகைநாளீர் - அதிகமானநாளுடையீர்.
11. மிடலுண்டேல் - எதிரிகள் போர்வன்மை யுடையவர்களானால்.
12. இடிக்கும் - சந்திலும்.
13. மதி - புத்திசாலித்தனம்.
14. ஆரியநூலும் - தேவபாடைநூல்களும்.

ஓதியுணர்ந்தீரூழிகடந்தீருலகினும்
ஆதியயன்றனேயெனயாதுமறைகின்றீர். (கரு)

அண்ணலமைந்தற்கன்புசிறந்தீரதனானே
கண்ணியுணர்ந்தீர்கருமநுமக்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றால்
புண்ணியமொன்றேயென்றுநிலைக்கும்பொருள்கொண்டீர். (கசு)

அடங்கவும்வல்லீர்காலமதன்றேலமர்வந்தால்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மதிநாடித்
தொடங்கியதொன்றேமுற்றுமுடிக்குந்தொழிலல்லால்
இடங்கெடவெவ்வாயுறுகிடைத்தாலிடையாதீர். (கஎ)

ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதல்யாரும்
பூண்டுநடக்குநன்னெறிசாபப்பொறைபானும்
பாண்டிகர்தீரேயமைதினியுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டியதுய்க்கும்வினைவல்லீர் (கஅ)

எருமினேகியெம்முயிர்நல்கியிசைகொள்ளீர்
ஓகைகொணர்ந்தும்மனையுமின்னற்குறையில்லாச்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடறாவும்
வேகமமைந்தீரென்றுவிரிஞ்சன்மகன்விட்டான். (ககூ)

சாம்பணியப்புத்தாழ்வதனத்தாமரைநாப்பண்
ஆம்பல்விரிந்தாலன்னசிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்கைக்கமலத்தன்குலமெல்லாம்
எம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான். (உ0)

வேறு.

இலங்கையையிடந்துவேரொடிவ்வயிற்றருகென்றாலும்
விலங்கினர்தம்மையெல்லாம்வேரொடும்விளியநூறிப்
பொலன்குழைமயிலைக்கொண்டுபோதெனப்புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவல்கடிதுகாண்டீர். (உக)

யோசனையொன்றுநூறுமுள்ளடியுள்ளதாக
ஈசன்மண்ணளந்ததேகப்பவிருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்துமலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லாநூறிநினைத்ததுமுடிப்பலின்னும். (உஉ)

---

19. விட்டான் - சொல்லிமுடித்தான்.
20. எம்பல்வர - இன்பமுடையனவாக.
21. விலங்கினர் - பகைவர்.

நீயிரேநினையின்முன்னைநெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்துமென்றுந்தையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்றுபுலமைதீர்புன்மைகாண்டற்
கேயினியென்னிலென்னிற்பிறந்தவர்யாவரின்னும். (௨௩)

முற்றுநீருலகமுற்றும்விழுங்குவான்முழங்கிமுந்நீர்
உற்றதேதெனினுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனும்
இற்றைநம்மருளுமெங்கோனேவலுமிரண்டுபாலும்
கற்றைவார்சிறைகளாகக்கலுழனிற்கடப்பல்காண்டீர். (௨௪)

ஈண்டினிதுறைமின்யானேபெருங்கடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும்விடைதம்மின்விரைவினென்று
ஆண்டவருவந்துவாழ்த்தலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயத்தெய்வமகேந்திரத்தும்பர்ச்சென்றான். (௨௫)

பொருவருவேலைதாவும்புந்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன்மேக்குறப்பெயர்ந்ததாள்போல்
உருவறிவடிவினும்பரோங்கினனுவமைபாலும்
திருவடியென்னுந்தன்மையாவர்க்குந்தெரியநின்றான். (௨௬)

பார்நிழல்பரப்பும்பொற்றோளெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்நிழல்பரப்புமேலோர்புகழெனவுலகம்புக்குத்
தார்நிழல்பரப்புந்தோளான்றடங்கடறாவாமுன்னம்
நீர்நிழலுவரிதாவியிலங்கைமேற்செல்லநின்றான். (௨௭)

பருவாயமடங்கல்வைகும்படர்வரைமுழுதுமூழ்க
உருவாயவிடங்கொணாகத்தொக்கவால்சுற்றியூழின்
நெருவாயசிகரகோடிநெரிவனதெரியநின்றான்
மகவானைமுதுகிற்றோன்றுமந்தரமெனலுமானான். (௨௮)

மின்னெடுங்கொண்டலுளின்வீக்கியகழலினார்ப்பத்
தன்னெடுந்தோற்றம்வானோர்கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடிமகேந்திரமண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாதச்சிலையெனப்பொலிந்துநின்றான். (௨௯)

ஆக திருவிருத்தம் - ௧௦௫௯.

## கிட்கிந்தாகாண்டம்

முற்றிற்று.

---

ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



**பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்**

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

# சுந்தரகாண்டம்.



## படலங்களின் அட்டவணை.



ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை,

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.

## முதலாவது - கடறாவுபடலம்.

காப்பு.

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவிலேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார். (௧)

நூல்.

ஆண்டகையாண்டவ்வானோர்துறக்கநாடருகர்கண்டான்
ஈண்டிதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவிண்ணாடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுதோகையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான். (௨)

---

1. விகாரப்பாட்டின் வேறுபாடு—அறுவகை விகாரப்படுதலுடைய தேவ மனுஷ்ய திரியக்ஸ்தாவர வேறுபாடு. அவையாவன, ஊறுபடவொன்றிலே பிறத்தல், பிறந்துளவாதல், வேறுபட வளர்தல், வளர்ந்தயலொன்றாய் விளைந்தமைதல், மாறுபடத் தேய்தல், அறமாய்தல்.

2. ஆண்டகை - ஆண்மையிற் சிறந்தவரான ஸ்ரீ ஆஞ்சநேயர். இப்பாட்டால் தேவருலகளவு உயரமும் அவ்வுலகுமுழுதும்பார்க்கும் பார்வையுமுடையரானார் அனுமானென்க.

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகாஞ்சிற்
மண்டிலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லாம்
அண்டமுந்திசைகளெட்டுநடுங்கத்தோள்கொட்டியார்த்தான். (௩)

வன்றந்தவரிகொளுகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்தமுழைகடோறும்புறத்தூராய்ப்புரண்டுபோவ
நின்றந்தமில்லாவூன்றநெறிந்துகீழழுந்திநீலக்
குன்றந்தன்வயிறுகிழிப்பிதுங்கினகுடர்கண்மான. (௪)

புகலருமுழைபுட்டுஞ்சும்பொங்குளைச்சியம்பொன்றி
உகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தவூழின்
அகலிரும்பரவைநாணவாற்றுறுகுரலவாகிப்
பகலொளிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம். (௫)

மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைகாறள்ள
மையுறுவிசும்பினூடுதிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇபமெல்லெண்பிடியொடும்வெருவலோடும்
கையுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளிநல்யானை. (௬)

பொன்பிறழ்சிமயக்கோடுபொடியுறப்பொறிபுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை
புன்புறமயிரும்பூவாக்கட்புலம்புறத்துநாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லியமிரிந்தமாதோ. (௭)

தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
தூக்குறுதோளர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றம்
தாக்குறுசெருவினோரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாரென்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர். (௮)

தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபடர்நெடும்பனிமாக்குன்றம்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழிபொங்க
ஆர்கலியழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே. (௯)

தாதுகுநறுமென்சந்தங்குங்குமங்குவிகந்தண்ணென்
போதுகுபொலன்றூநெதன்றித்தொடக்கத்தயாவும்பூசி

---

3. தோள்கொட்டியார்த்தான் என்றது தான் தேடிவந்த வூரை கண்டதனுலென்க. 4. முழைகள் - பிலத்துவாரங்கள். 6. இரிதல் - ஓடல்.

9. பனிமாக்குன்றம் - இமயமலை.

மீதுறுசுனைநீராடியருவியோடுலகின்வீழ்வ
ஓதியகுன்றங்கீண்டுகுருதிநீர்சொரிந்தாலொத்த. (௧௦)

கடலுறுமத்திதென்னக்கருவரைதிரியுங்காலை
மிடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்றார்
திடலுறுகிரியிற்றாந்தஞ்செய்வினைமுற்றிமுற்றா
துடலுறுபாசம்வீசாதும்பர்செல்வாருமொத்தார். (௧௧)

வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்தி
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோர்
அயிலெயிற்றரக்கனள்ளத்திரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனிக்கடுத்தல்செய்தார். (௧௨)

ஊறியநறவுமுற்றகுற்றமுமுணர்வையுண்ணச்
சீறியமனத்தர்தெய்வமடந்தையரூடறீர்வுற்
றாறினரஞ்சுகின்றாரன்பரைத்தழுவியும்பர்
ஏறினரிட்டுநீத்தபைங்கிளிக்கிரங்குகின்றார். (௧௩)

இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
தொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசேறியென்றார்வீரனும்விரைவதானான். (௧௪)

குறுமுனிகுடித்தவேலைகுப்புறுங்கொள்கைத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்றோளலங்கல்வீர
சிறுவிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்னா [ன்.
உறுவலித்துணைவர்சொன்னாரொருப்பட்டான்பொருப்பையொப்பா

இலங்கையினளவிற்றன்றாலிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென்றுவிண்ணவர்வியந்துநோக்க
அலங்கறாழ்மார்பன்முன்றாழ்ந்தடித்துணையழுத்தலோடும்
பொலங்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ. (௧௬)

வால்விசைத்தெடுத்துவன்றாண்மடக்கிமார்பொடுக்கிமானத்
தோல்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டும்
கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலங்கதுவாவண்ணம்
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சனாடுரிஞ்சவீரன். (௧௭)

---

12. அயிலெயிற்றரக்கனள் - இராவணன்.

15. குறுமுனி - அகஸ்தியர்.

17. மானத்தோள் என்னும் பாடம்.

ஆயவனெழுதலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயர்குன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லாம்
நாயகன்பணியிதென்றுநளிர்கடலிலங்கைதாமும்
பாய்வனவென்னவானம்படர்ந்தனவெழுவமான. (கஅ)

இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றும்
பசையுடைமரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த. (ககூ)

மாவொடுமரனுங்கல்லும்வல்லியுமியாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினாற்புணரிபொங்கத்
தூவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீருமுன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ. (உ௦)

கீண்டதுவேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்படமணிகண்மின்ன
ஆண்டகையதனைநோக்கியரவினுக்கரசர்வாழ்வும்
காண்டகுதவத்தனேனியானெனக்கருத்துட்கொண்டான். (உக)

வெய்தின்வான்சிறையினானீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினாமுதங்கொண்டநோன்மையேநுவலுநாகர்
உய்துநாமென்பதென்னேயுறுவலிக்கலுழனூழின்
எய்தினனென்றஞ்சிமறுக்கமுற்றிரியல்போனார். (உஉ)

துள்ளியமகரமீன்கடிடிப்பறச்சுறவுதூங்க
ஒள்ளியபனைமீன்றுஞ்சுந்திவலையவூழிக்காலின்
வள்ளுகிர்வீரன்செல்லும்விசைபொருமறுகிவாரி
தள்ளியதிரைகண்முந்துற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ. (உங)

இடுக்குறுபொருள்களென்னுமெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றாதனுகம்
எடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவந்நாள்
முடுக்குறக்கடலிற்செல்லுமுத்தலைக்கிரியுமொத்தான். (உச)

கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தாற்கும்
கட்புலங்கதுவலாகாவேகத்தாற்கடலுமண்ணும்
உட்பதங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த. (உரு)

---

24. முத்தலைக்கிரி - திரிகூடபருவதம்.

விண்ணவரேத்தவேதமுனிவரர்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செல்லுமாருதிமறமுட்கூர
அண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவாமின்னமென்னாக்
கண்ணுதலொழியச்செல்லுங்கைலையங்கிரியுமொத்தான். (௨௬)

மாணியாம்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர்
ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாடூர்ந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிரைவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான். (௨௭)

மழைகிழித்துதிரநீர்கண்மறிகடல்பாயவானம்
குழைவுறத்திசைகள்கீறமேருவுங்குலுங்கக்கோட்டின்
முழையுடைக்கிரிகண்முற்றமுடுக்குவான்முடிவுகாலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தாதையுமனையனானான். (௨௮)

தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றன்னை
அடக்கியைம்புலன்கள்வென்றதவப்பயனறுதலோடும்
கெடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான். (௨௯)

புறந்துறலஞ்சிவேறோரரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தகையிராமனென்னுஞ்சேவகற்பற்றிச்செல்லும்
அறத்தகையரசன்றிண்போராழியுமனையனானான். (௩௦)

கேழுலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளான்
ஆழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணும்
ஊழிநாள்வடபாற்றோன்றுமுவாமுழுமதியுமொத்தான். (௩௧)

அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனாற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனானான். (௩௨)

நாவினாலுலகமூன்றுநடுக்குறவடுக்குநாகர்
மேலின்மேனின்றகாறுஞ்சென்றகூலத்தன்விண்டு .
காலினாலளந்தவானமுகட்டையுங்கடக்கக்கால
வாலினாலளந்தானென்றுவானவர்மருளச்சென்றான். (௩௩)

---

27. மாணி - பிரமசாரி. 32. கலுழன் - கருடன்.

விளித்துப்பின்வேலைதாவும்வீரன்வால்வேதமெய்க்கும்
அளித்துப்பினநுமனென்னுமறந்துணைபெற்றதாயும்
களித்துப்புன்றொழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவராமென்
றொளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே. (௩௪)

மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகம்
கார்நிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை
சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததப்பிறங்குபேர்வால். (௩௫)

குன்றொடுகுணிக்குங்கொற்றக்குவவுத்தோட்குரக்குச்சீயம்
சென்றுறுவேகத்தின்காலெறிதரத்தேவர்வைகும்
மின்றொடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மின்
ஒன்றொடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ. (௩௬)

வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடும்
கலங்குவதேகுவான்றன்கருத்தென்கொலென்னுங்கற்பான்
விலங்கயிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோன்
இலங்கையினளவன்றென்னவிம்பர்நாடிரிந்ததிப்பால். (௩௭)

ஓசனையுலப்பிலாதவுடம்பமைந்துடையவென்னத்
தேசமுநாலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடும்
ஆசையையுற்றவேலைகலங்கவன்றண்ணல்யாக்கை
வீசியகாலின்வீந்துமிதந்தனமீன்களெல்லாம். (௩௮)

பொருவருமுருவத்தன்னான்போகின்றபொழுதுவேகம்
தருவனதடக்கைதள்ளாநிமிர்ச்சியதம்முளொப்ப
ஒருவருங்குணத்துவள்ளலோருயிர்த்தம்பியோடும்
இருவருமுன்னர்ச்சென்றலொத்தவவ்விரண்டுபாலும். (௩௯)

வேறு.

இந்நாகமன்னனெறிகாலெனவோங்கும்வேலை
திந்நாகமாவிற்செறிகிட்டிசைக்காவல்செய்யும்
கைந்நாகமந்நாள்கடல்வந்ததொர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவாறுறவந்ததன்றே. (௪௦)

மீயோங்குசெம்பொன்முடியாயிரமின்னிமைப்ப
ஓயாவருவித்திரளுத்தரியத்தையொப்ப

40. திக்குநாகம் திந்நாகமெனக் கடைக்குறையாய் மரீஇயது. தொகுத்த லெனவுமாம்.

தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
மாயோன்மகரக்கடணின்றெழுமாண்பதாகி. (௪௧)

நாலேந்துகேள்விநுகராப்புலநோக்கலுற்றார்
போலேந்திநின்றதனியாண்மெய்பொருதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழீஇக்கச்சமாகி
மாலேந்தவோங்குநெடுமந்தரமேயுமான. (௪௨)

தள்ளற்கருநற்சிறைமாடுதழைப்பொடோங்க
எள்ளற்கருநன்னிறமெல்லையிலாதபுல்ல
வள்ளற்கடலைக்கெடநீக்கிமருந்துவெள்ளி
உள்ளுற்றெழுமோருவணத்தரசேயுமொத்த. (௪௩)

ஆன்றுநெடுநீரிடையாதியொடந்தமாகித்
தோன்றுதுநின்றானருட்டோன்றிடமுந்துதோன்று
மூன்றுமுலகத்திடைமுற்றுயிராயமற்றும்
ஈன்றனையீன்றசுவணத்தனியண்டமென்ன. (௪௪)

இந்நீரினென்னைத்தருமெந்தையையெய்தியன்றிச்
செந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தின்
அந்நீரில்வந்துமுதலந்தணனுதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல். (௪௫)

பூவாலிடையூறுபுகுந்தபொருதநெஞ்சின்
கோவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லாம்
மூவாமுதனாயகன்மீளமுயன்றவந்நாள்
தேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன. (௪௬)

நிறங்குங்குமமொப்பனநீணிறம்வாய்த்தநீரின்
இறக்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படர்முன்றிறொறும்பிணாவோ
டுறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ. (௪௭)

கூன்றூன்முதிரிப்பிகுரைக்கநிறைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபளிங்குமுன்றி
றூன்சூலநாளிற்றகைமுத்தமுயிர்த்தசங்கம்
மீன்சூழ்வருமம்முழுவெண்மதியீறுகிற. (௪௮)

41. மாயோன் - ஆச்சரியகுண சேஷ்டிதனான எம்பெருமான்,

48. பாசியே மேகமாகவும், பளிங்குப்பாறையே நிலாப்பரவின ஆகாயமாகவும், முத்துக்களே நட்சத்திரங்களாகவும், சங்கே பூரணச்சந்திரனாகவும், சுக்கில பட்சத் தாகாயம்போல் மலைவந்த தென்க.

பல்லாயிரமாயிரங்காசினம்பாடிமைக்கும்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியிட்டமுகந்தெழுகின்றதென்ன. (௪௯)

மலையிற்பொலிமாகநெடுங்கொடிமாலையெய்ப்ப
விலையிற்றிரள்வெள்ளருவித்திரணீங்கிவீழ
நிலைவிற்கடலாடெழுநீலொடுபுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைநின்றிமிலோடுதொடர்ந்துதுள்ள. (௫0)

கொடுநாலொடிரண்டுகுலப்பகைகுற்றமூன்றும்
சுடுஞானம்வெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல்
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறையுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப. (௫௧)

எழுந்தோங்கிவிண்ணொடுமண்ணொக்கவிலங்குமாடி
உழுந்தோடுகாலத்திடையும்பரினிம்பரெங்கும்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
அழுங்காமனத்தண்ணலிதென்கொலெனாவயிர்த்தான். (௫௨)

நீர்மேற்படராநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படராதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோர்
ஊர்மேற்படரக்கடிதும்பரினின்றுபார்ந்தான். (௫௩)

உந்தாமுனுலைந்துபர்வேலையொளித்தகுன்றம்
சிந்தாகுலமுற்றதுபின்னருந்தீர்விலன்பால்
வந்தோங்கியாண்டோர்சிறுமானுடவேடமாகி
எந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே. (௫௪)

வேற்றுப்புலத்தோனெனலைபவிலங்கலெல்லாம்
மாற்றுச்சிறையென்றரிவச்சிரமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனனன்புகாக்க. (௫௫)

அன்னானருங்காதலனாதலினன்புதூண்ட
என்னாலுனக்கீண்டுசெயற்கரிதாயதின்மை

---

49. காசினம் - இரத்தினவகை.
51. பகை - ஈண்டு காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களை.
51. குற்றமூன்று - ஐயம், திரிபு, அறியாமை.
54. தீர்வில் - விடுதலில்லாத. 55. காற்றுக்கிறை - வாயுதேவன்.

பொன்றோர்சிகரத்திறையாறிணைபோதிபேனும்
உன்றாலுயர்ந்தேனுயர்விற்குமுயர்ந்ததோளாய். (௫௬)

கார்மேகவண்ணன்பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதையைத்தேவருப்பயப்
பேர்வானயல்சேறியிதிற்பெரும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்ததுநீதிநின்றாய். (௫௭)

நற்றாயினுநல்லனெனக்கிவனென்றுநாடி
இற்றேறாயிறையெய்திணையேய்ந்ததுகோடியென்றால்
பொற்றாரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
உற்றார்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான். (௫௮)

உரைத்தானுரையாலிவனாறிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகம்விட்டுவிளங்குவீரன்
சிரித்தானளவேசிரித்துத்திசைசெல்லநோக்க
வரைத்தாணெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான். (௫௯)

வருந்தேனதுவென்றுணைவானவன்வைத்தகாதல்
அருந்தேனினியாதுமென்றாசைநிரப்பினல்லால்
பெருந்தேன்பொழிசாரனின்னன்புபிலித்தபோதே
இருந்தேனுகர்ந்தேகனிதின்றுங்கினியிவதுண்டோ (௬௦)

முன்பிற்சிறந்தாரிடையுள்ளவர்காதன்முற்றப்
பின்பிற்சிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்
கென்பிற்சிறந்தாயதொநற்றமுண்டென்னலாமே
அன்பிற்சிறந்தாயதொர்பூசனையார்கணுண்டே. (௬௧)

ஈண்டியான்கடிதேகியிலங்கைவிலங்கலெய்தி
ஆண்டானடிமைத்தொழிலாற்றலினாற்றலுண்டேல்
மீண்டியானுகர்வென்னல்விருந்தெனவேண்டிமெய்ம்மை
பூண்டானவன்கட்புலம்பிற்படமுந்துபோனான். (௬௨)

செவ்வான்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகும்
வெவ்வேறுவிமானமுநீணெடுமேகமற்றும்
எவ்வாயுலகத்தவுநீண்டிருந்ததம்பின்
ஒவ்வாதனவொத்திடவூழிவெங்காலுமொத்தான். (௬௩)

58. இறை - கொஞ்சம். கோடி - கொள்தி.
60. மொழிசாரனின் - என்றும்பாடம்.
61. முதல்வள்ளல்கள் - இல்லையென்றுமற்கொடுப்பவர், இடைவள்ளல்கள் - வேண்டக்கொடுப்பவர். கடைவள்ளல்கள் - புகழக்கொடுப்பவர்,

நீர்மாக்கடன்மேனிமிர்கின்றநிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பதத்தே
தேர்மேற்குதிகொண்டவணித்திறன்சிந்தைசெய்தான்
ஆர்மேற்கொலென்றெண்ணியருக்கனுமையமுற்றான். (௬௪)

வாளொத்தொளிர்வாலெயிறாழின்மருங்கிமைப்ப
நீளொத்துயர்வாலின்விசும்புநிரம்புமெய்யின்
கோளொத்தவன்மேனிவிசும்பிருகூறுசெய்த
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம். (௬௫)

மூன்றுற்றதலத்திடையுற்றியதுன்பம்வீப்பான்
ஏன்றுற்றுவந்தான்வலிமெய்ம்மைபுணர்த்துநீயென்
றான்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள். (௬௬)

பேழ்வாயொரரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோள்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றுமுட்க
வாழ்வாயெனக்காமிடமாய்வருவாய்கொலென்று
நீள்வாய்விசும்பின்றனதுச்சிநெருங்கிநின்றாள். (௬௭)

தீயேயெனலாயபசிப்பிணிதீர்த்தல்செய்வாய்
ஆயேவிரைவுற்றெனையண்மினைவண்மையாள
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவானியென்றாள். (௬௮)

பெண்பாலொருநீபசிப்பீழையொறுக்கநொந்தாய்
உண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்
விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டால்
நண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான். (௬௯)

காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
ஆய்ந்தேபசிதீர்வெனின்றனையென்றனள்சொன்னாள்
ஓர்ந்தானுமிகழ்ந்தொருவேனினதூழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான். (௭௦)

அக்காலையரக்கியுமண்டமநந்தமாகப்
புக்கானிறையாதபுழைப்பெருவாய்திறந்து

---

64. நீர் - ஈண்டு ஊற்றுநீர், ஆற்றுநீர், மேகநீர் ஆக. மூந்நீரென்க.
67. பேழ்வாய் - பிளப்புடையவாய்.
67. நீள் - நீழ், என்பதினவெதுகை.

விக்காதுவிழுங்கநின்றுளதுநோக்கிவீரன்
திக்கீரவள்வாய்சிறிதாம்வகைசேணினீண்டான். (எக)

நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றின்
ஊண்டானெனவுற்றெருருயிர்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
ஆண்டான்வலனென்றலர்தூஉய்நெடிதாசிசொன்னார். (எஉ)

மின்மேற்படர்நோன்மையனுபுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
என்மேன்முடியாதனவென்றினிதேத்திநின்றாள்
பொன்மேனியனுநெடுதாசிபுணர்ந்துபோனான். (எங)

கீதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த. (எச)

மந்தாரமுந்நமகரந்தமணவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்நாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளும்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநுங்க. (எரு)

வேறு.

வெங்கார்நிறப்புணரிவேறேயுமொன்றைப்
பொங்கார்கலிப்புனறரப்பொலிவதேபோல்
இங்கார்கடத்திரெணையென்னவெழுந்தாள்
அங்காரதாரைபெரிதாலாலமன்னாள். (எசு)

காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணாள்
பாதச்சிலம்பினொலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனாள்
ஓதத்தின்மேவுமதுகைடவரையொத்தாள். (எஎ)

துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்றாள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா

---

77. காதவழி தூரத்திலுள்ள எப்பொருளாயினும் அப்பொருளினிழலை யிழுக்கும் அளவுமுடிவுள்ள கண்ணாளென்பதனாலே சாயாக்கிராஹி-நிழலை யிழுக்கிறவள், என்றும் அவளுக்கொருபெயர். வெர்-வியர்வை-

78. கைகம்மா-யானை.

முண்டத்துரித்தவுரியாண்முளரிவந்தான்
அண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள். (எஅ)

நின்றாணிமிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவௌவ
அன்றாய்திறத்தவனறத்தையருளோடும்
தின்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான். (எகூ)

பேழ்வாயகத்தலதுபேருலகமூடும்
நீள்வானகத்தினிடையேகுநெறிநேரா
ஆழ்வானனுக்கனவளாழ்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான். (அ0)

சாயாவரந்தழுவினுய்தழியபின்னும்
ஓயாதுவந்தவிசைகண்டுணரகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான். (அக)

பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்விடுறுதன்மெய்யே
கண்பாலடுத்தவுயிர்காலன்வருமேனும்
உண்பானருத்தியதொழிப்பரியதென்றாள். (அஉ)

திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்றான்
அறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொடொரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரியகோளரிபெயர்ந்தான். (அ௩)

கள்வாயரக்கிகதறக்குடர்கணத்தில்
கொள்வார்தடக்கையின்விசும்பைமிசைகொண்டான்
முள்வாழ்பொருப்பின்முழைபெய்திமிகநொய்தின்
உள்வாழரக்கொடெழுதிண்கலுழனொத்தான். (அ௪)

சாகாவரத்தலைவரிற்றிலகமன்னான்
ஏகாவரக்கிகுடர்கொண்டுடனெழுந்தான்
மாகாலசைப்பவடமண்ணினுறவாலோ
டாகாயமுற்றகதலிக்குவமையானான். (அ௫)

84. கள்வாய்-கள்ளை ஒழுகவிடுகிறவாய் எனஉருபும் முடிக்குஞ்சொல்லுந் தொக்கதொகை, கள்வாய்-சுராபானம் செய்யும்வாய்.

ஆர்த்தனர்கள்வானவர்கடானவராழுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளம்
தூர்த்தனனகன்கைலையிற்றலைவிலோனும்
பார்த்தனன்முனித்தலைவராசிகள்பகர்ந்தார். (அசு)

மாண்டாளரக்கியவள்வாய்வயிறுகாறும்
கீண்டானிமைப்பினிடைமேருகிரிகிழா
நீண்டான்வயக்கதிரினைப்பினெடிதென்னுப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோனான். (அஎ)

சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றே
முற்றாமுடிந்தநெடுவானினிடைமுந்நீர்
இற்றாவியெற்றெனினும்யானினியிலங்கை
உற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான். (அஅ)

ஊறாகுடிதூறுவனவாறிலறமுன்னுத்
தேறிலியரக்கர்புரிதீமையவைதீர
ஏறுவகையாண்டையவிராமனெனவெல்லாம்
மாறுமதின்மாறுபிறிதில்லெனவலித்தான். (அகூ)

வேறு.

தசும்புடைக்கனகநாஞ்சிற்கடிமதிறரித்துநோக்கான்
அசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பிடைச்செல்லும்வீரன்விலங்கிவேறிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான். ()

மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நூக்குறுத்தங்குமிங்குந்தள்ளுறநுடங்குநோன்மை
போக்கினுக்கிடையூறாகப்புயலொடும்பொதிந்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தக்கதன்றே. (கூக)

மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
எண்ணடியுற்றகுன்றத்தலத்துநின்றெப்தநோக்கி
விண்ணிடைப்புலகமென்னுமெல்லியன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான். (கூஉ)

நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமென்பதுபுல்லிதம்மா

91. கலம்-கப்பல்.

அந்நகரி தனினன்றே பண்டத்தை முழுதுமாள்வான்
இந்நகரிருந்து வாழ்வானிது வதற்கேதுவென்றான். (கூரு)

மாண்டதோர் நலத்திற்றென்றுணர்த்து தல்வாய்மைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்தி வெறுப்பின்றி விழைந்ததுய்க்கும்
ஈண்டரும் போகவின்பமீறில தியாண்டுக்கண்டாம்
ஆண்டது துறக்கமன்றே யருமறைத் துணிவுமம்மா. (கூச)

உட்புலனெழுநூறென்பர் யோசனை யுலகமூன்றில்
தெட்புறுபொருள்களெல்லாமிதனுழைச் செறிந்தவென்றால்
நுட்பலனுணங்குகேள்வி நுழைவிலரெனினுநோக்கும்
கட்புலன் வரம்பிற்றேகாட்சியுங் கரையிற்றே. (கூரு)

ஆக திருவிருத்தம்-கூரு.

---

## உ-வது ஊர்தேடுபடலம்.

---

பொன்கொண்டிழைத்து மணியைக்கொடுபொதிந்த
மின்கொண்டமைத்த வெயிலைக்கொடுசமைத்த
என்கொண்டியற்றியவெனத் தெரிகிலாத
வன்கொண்டல் விட்டுமதிமுட்டுவன மாடம். (க)

நாகாலயங்களொடு நாகருலகுந்தம்
பாகார்மருங்குதுயில் வென்னவுயர்பண்ப
ஆகாயமஞ்சவகன் மேருவையனுக்கும்
மாகால்வழங்குசிறு தென்றல்வரநின்ற. (உ)

மாகாரின்மின் கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள் விளக்கி
ஆகாயகங்கையினையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர் வீசுபடிகாரம். (௩)

வேறு.

பஞ்சியூட்டியபாட்டிசைக்கிண்கிணிப்பதுமச்
செஞ்செவிச்செழும்பவளத்தின்கொழுஞ்சுடர்சிதறி
மஞ்சினஞ்சனநிறமறைத் தரக்கியர்வடித்த
அஞ்சலோதியோடுவமையவவர்க்குறுமுவமை. (ச)

---

94. மாண்டது-பெருமையிற் சிறந்தது. ஈண்டரும்-கிடைக்கவரிதான.

நானநாண்மலர்க்கற்பகநறுவிரைநாறப்
பானம்வாயுறவெறுத்ததாளாறுடைப்பறவை
தேனவாவிரைச்செழுங்கழுநீர்த்துயில்செய்ய
வானயாறுதம்மரமியத்தலந்தொறுமடுத்த. (௫)

குழலும்வீணையும்யாழுமென்றிணையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமகளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்றும்
நிழலுந்தம்மையுமெய்ம்மைநின்றறிவருநிலைய. (௬)

இணையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சியவென்னினச்சொல்லுமாசுண்ணும்
அனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும். (௭)

மணிகளொத்துணைபெரியவுமாறிருமார்பின்
அணியுங்காசினுக்ககன்றனவுளவெனலரிதால்
திணியுநன்னகர்த்திருமனைதெய்வமாத்தச்சன்
துணிவின்வந்தனன்றொட்டழகிழைத்தவத்தொழில்கள். (௮)

மரமடங்கலுங்கற்பகமனையெலாங்கனகம்
அரமடந்தையர்சிலதியராரக்கியர்க்கமரர்
உரமடங்கிவந்துழையராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிதுதவஞ்செய்ததவமால். (௯)

வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
ஊழிநாயகன்றிருவயிறொத்துளதிவ்வூர்
ஆழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
ஏழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம். (௰)

போரியைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன்றிசைதொறுநின்றமாநிற்க
ஆரியன்றனியைங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத. (௧௧)

தேவரென்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரேயெண்வகையுருவின்

8. தெய்வதச்சன் - விசுவகர்மா.

11. ஐங்கரக்களிறு - ஐந்துகரயானை.

மூவர் தம்மினு மதிகனென் றூலவன் முயலும்
தாவின்மா தவமல்லது பிறிதொன் றுமுருமே. (கஉ)

தழங்குபேரியினூர்கலிதகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர் முழக்கொடுமுழங்கும்
கொழுங்குழற்புதுக்குதலையர் நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந்துழனிகள்வயின்றொறுமறையும். (கந)

மரகதத்தினுமற்றுளமணியினும்வளைந்த
குரகதத்தடந்தேரினமவைபயில்கொட்டில்
இரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கையவென்றால்
நரகமொக்குமானன்னெடுந்துறக்கமிந்நகர்க்கு. (கச)

திருகுறுஞ்சினத்தரக்கருங்கருநிறந்தீர்ந்தார்
அருகுபோகின்றதிங்களுமறுவற்றதழைகைப்
பருகுமிந்நகர்த்துன்னொளிபாய்தலிற்பசும்பொன்
உருகுகின்றதுபோன்றுளதுலகுசூழ்வரி. (கரு)

அண்டமுற்றவும்வீங்கிருளகற்றுநின்றலரி
கண்டவாற்றினிக்கடிநர்நெடுமனைக்கதிர்கள்
உண்டவாற்றினென்றுரைப்பரிதொப்பிடிற்றன்முன்
விண்டவாய்ச்சிறுமினியென்னவும்விளங்கா. (கசு)

தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரியுநீரொடுமெடுத்தலிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலை. (கஎ)

தெய்வத்தச்சனைப்புகழ்துமோசெங்கண்வாளரக்கன்
மெய்யொத்தாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்சன்
ஐயப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
தொய்யற்சிந்தையாம்யாவரைப்பாதென்றுதுதிப்பாம். (கஅ)

வேறு.

வானுந்நிலனும்பெறுமாறினிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினுலும்
ஏனம்மணியாலுமியற்றியவேனும்யாவும்
தேனும்மலருங்கனியுந்தரச்செய்தசெய்கை. (கசு)

14. கொட்டில் - சாலைகள்.

வேறு.

நீரும்வையமுநெருப்புமேணிமிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தன்வளர்ச்சி
ஊரினிந்நெடுங்கோபுரத்துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்கி. (உ௦)

முன்னம்யாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொன்னின்மாநகர்நீச்செலான்கதிரெனப்புகல்வார்
கன்னியாரையிவெளியினிற்கண்வழுக்குறுதல்
உன்னிநாடொறும்விலங்கினன்போதலையுணரா. (உக)

தீயசெய்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வரம்பமைக்குவமெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தையுங்கடக்க
ஏயுநன்மதிலிட்டனன்கைலையையெடுத்தான். (உஉ)

கறங்குகால்புகாகதிரவனொளிபுகாமறலி
மறம்புகாதினிவானவர்புகாரென்கைவம்பே
திறம்புகாலத்துள்யாவைபுஞ்சிதையினுஞ்சிதையா
அறம்புகாதிருதவனிமதிட்கிடக்கைநின்றகத்தின். (உங)

கொண்டல்வான்றிரைக்குரைகடலிடையதாய்க்குடுமி
எண்டவாவிசும்பெட்டநின்றிமைக்கின்றவெழிலால்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
அண்டமேயுமொத்திருந்ததிவ்வகனகரமைதி. (உச)

பாடுவர்பலரென்னின்மற்றவரினும்பலரால்
ஆடுவார்கண்மற்றவரினும்பலருளரமைதி
கூடுவாரிடைபின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகாண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார். (உரு)

வானமாதரோடிகலுவர்விஞ்சையர்மகளிர்
ஆனமாதரோடாடுவரியக்கியரவரைச்
சோனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தால்
ஏனைநாடியபருநடக்கிரியையாய்ந்திருப்பார். (உசு)

21. நாகணைப்பள்ளி - சர்பசயனம். திறம்புகாலம் - அழியுங்காலம்.

25. அமைதிகூடுதலாவது - கல்யாணம். உற்சவங்கள் முதலானவை நடக்கிற இடங்களில் ஒருசேரக்கூடுதல்.

இழையுமாலையுமாடையுஞ்சாந்தமுமேந்தி
உழையரென்னநின்றுதவுவநிதியங்களொருவர்
விழையும்போகமேயிங்கிதுவாய்கொடுவிளம்பின்
குழையுநெஞ்சினானினையினுமாசென்றுகொள்ளும். (௨௭)

பொன்னின்மால்வரைமேன்மணிபொழிந்தனன்பொருத்தி
உன்னுநான்முகத்தொருவனின்றாழ்முறையுரைக்கப்
பன்னிநாள்பலபணியுழன்றரிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனுமிந்நகர்துதிப்பான். (௨௮)

மகரவீணையின்மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினார்கலிதிசைமுகன்றடவும்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
அகருதூபத்தினழுந்தினமுகிற்குலமனைத்தும். (௨௯)

பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
துளிக்குங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறும்
அளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாரலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன். (௩0)

தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வாய்
ஊறன்மாந்தினரின்னுரைமாந்தினருடல்
கூறன்மாந்தினரனையவர்த்தொழுதெழுகோபத்
தாறன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர். (௩௧)

எறித்தகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
கறுத்தமேனியிற்பொலிந்தனவுடலிற்கனன்று
மறுத்துநோக்கியர்மலரடிமஞ்சளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி. (௩௨)

விளரிச்சொல்லியர்வாயினான்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்ததுபடைநெடுங்கண்ணால்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
முளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை. (௩௩)

வேறு.

எழுந்தனர்திரிந்துவைகுமிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னுமிதனையேகிளப்பதல்லால்

27. இழை - ஆபரணம்.
33. விளரி - விளரிப்பண்.

அழுந்தி நின்றுவத்தன்னையலருளொருதியாக
ஒழிந்தபெருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா. (௩௪)

காயத்தாற்பெரியர்வீரங்கணக்கிலருலகங்கல்லும்
ஆயத்தார்வரத்தின்றன்மையளவற்றாரறிதறேற்றும்
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறறெருவிலார்தெருவின்சேறல். (௩௫)

கழலிலாக்காலுங்காலவயிலிலாக்கையுங்காந்தும்
அழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னார்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்று
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ. (௩௬)

கள்ளூறக்கனிந்தபங்கியரக்கரைக்கடுத்தகாதல்
புள்ளூறத்தொடர்வமேனிபுலானுறக்கடிதுபோவ
வெள்ளூறுப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
உள்ளூறக்கரித்தகுன்றினுயர்ச்சியவோடையானை. (௩௭)

வள்ளிநுண்மருங்குலன்னவன்னவர்மகளிருள்ளம்
தள்ளூறப்பாணிதள்ளாநடம்புரிதடங்கண்மாதர்
வெள்ளிவெண்முறுவறோன்றமடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரக்கர்மாதர்களியிடுகுபவைகாண்பார். (௩௮)

ஒறுத்தலோதிற்கமற்றெம்புயர்படைக்கொருங்கிவ்வூர்வந்
திறுத்தனுமெளிதாமற்றும்யாவர்க்குமியக்கமுண்டே
கறுத்தவாளரக்கிமாருமரக்கருங்கழித்துவீசி
வெறுத்தபூண்வெறுக்கையாலேதூருமிவ்வீதியெல்லாம். (௩௯)

மடங்களுங்குழையும்பூணுமாலையுஞ்சாந்தும்யானைக்
கடங்களுங்கலினமாவிலாழியுங்கணக்கிலாத
இடங்களுமிடங்கடோறும்யாற்றெடுமெடுத்தவெல்லாம்
அடங்கியதென்னிலென்னையாழியினுழ்ந்ததுண்டோ. (௪௦)

விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
கற்பணந்தண்டுபிண்டிபாலமென்றினையகாந்தும்
நற்படையுடைத்தென்கோயானுயகற்குரைக்குநாளில். (௪௧)

---

37. பங்கி - உரோமம்.

38. பாணி - இசைப்பாட்டு. மடந்தையர் - மூடத்தன்மையுள்ளவர், மடம் - அறியாமை. 40. விலாழி - வாய் நுரை.

என்றனனிலங்கைநோக்கிவினையனபலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வரென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கியச்சரளச்சாரற்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குரைகடல்குளிப்பதானான். (௪௨)

வேறு.

ஏய்வினையிறுதியிற்செல்வமெய்தினான்
ஆய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
வீவினைநினைக்கிலானொருவன்மெய்யிலான்
தீவினையெனவிருள்செறிந்ததெங்குமே. (௪௩)

கரித்தழூன்றெயிலுடைக்கணிச்சிவானவன்
எரித்தலையந்தணரிழைத்தயானையை
உரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனுமெனப்பொலியும்பொற்பதே. (௪௪)

அணங்கரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விடம்
உணங்கலிலுலகெலாமுறையினுண்டுவந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே. (௪௫)

வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
பெண்மைநீங்காதகற்புடையபேதையைத்
திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே. (௪௬)

அவ்வழியவ்விருள்பரந்தவாயிடை
எவ்வழிமருங்கினுமரக்கரேகினார்
செவ்வழிமந்திரத்திசையராயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார். (௪௭)

இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறையுளையணுகுவாரியல்
வெந்தொழிலரக்கனதேவன்மேயினார். (௪௮)

பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்

43. இறுதி - கெடுதி.

முன்னினபணிமுறைமாறமுந்துவார்
மின்னினமிடைந்தெனவிசும்பின்மீச்செல்வார். (சகூ)

தேவருமவுணருஞ்செங்கணுகரும்
மேவருமியக்கரும்விஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினர்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார். (ருo)

சித்திரப்பத்தியிற்றேவர்சென்றனர்
இத்துணைதாழ்ந்தனமுனியுமென்றுதம்
முத்திரங்களுமுடியின்மாலையும்
உத்தரீயங்களுமிரியவோடுவார். (ருக)

தீண்டருந்தீவினைதீக்கத்தீந்துபோய்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெயர்
ஆண்டகைமாரிவந்தளிக்கவாயிடை
ஈண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே. (ருஉ)

வந்தனனிராகவன்றாதன்வாழ்ந்தனன்
எந்தையேயிந்திரனுமென்றேமுரு
அந்தமில்கிட்டிசையளகவாணுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே. (ருந)

கற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றிநின்றலமரப்பொலிந்துதோன்றிற்றால்
இற்றதெம்பகையெனவெழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே. (ருச)

தெரிந்தொளிர்திங்கள்வெண்குடத்தினுற்றிரை
முறிந்துயர்பாற்கடன்முகந்துமூரிவான்
சொரிந்ததேயாமெனத்துள்ளிநீணெடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே. (ருரு)

அருந்தவன்சுரபியேயாதிவானமா
விரிந்தபேருதயமேமடிவெண்டிங்களா
வருந்தலின்முலைகதிர்வழங்குதாரையாச்
சொரிந்தபாலொத்ததுநிலவின்றோற்றமே. (ருசா)

---

51. கண்ணிமையாமையால் சித்திரப்பத்தி என்றார்.

53. ஏமுரு - சந்தோஷமாகி. 56. அருந்தவன் - ஈண்டுவசிட்டர்.

எண்ணுடையனுமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
அண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம். (ருஎ)

எல்லியினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்லியநிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம். (ருஅ)

வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
ஆசறவெங்கணுநுழைந்தளாயது
காசுறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே. (ருகூ)

இகழ்வரும்பெருங்குணத்திராமனெய்தசோர்
பகழியின்செலவெனவநுமன்பற்றினால்
அகழ்புகுந்தரண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே. (சூ௦)

அவ்வழியநுமனுமணுகலாம்வகை
எவ்வழியென்பதையுணர்வினெண்ணினன்
செவ்வழியொழுக்கினன்றேவரேத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினன். (சூக)

வேறு.

ஆழியகழாகவரிதாயமரர்வாழும்
ஏழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழுரியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தாழிதிரிநாளுமுலையாமதிலையுற்றான். (சூஉ)

கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
அலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்றால்
இலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனவிரைந்தெனவியந்தான். (சூங)

தெவ்வளவிலாதவிறைசேறலுளதென்றால்
அவ்வளவதன்றநணமண்டமிடையாக

---

59. காசு - ரத்னங்கள்.

எவ்வளவி லுண்டுவெளிபீறுமதுவென்று
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான். (௬௪)

மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூர்
அடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான். (௬௫)

மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோர்
ஊர்புகவமைத்தபடிகால்கொலுலகேழும்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதூணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான். (௬௬)

ஏழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தால்
ஊழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தால்
ஆழியுளவேழினதிவன்றுபகையென்றான். (௬௭)

வெள்ளமொருநாலுநொடொருநாறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையும்
முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்றார்
எள்ளரியகாவலினையண்ணலுமெதிர்ந்தான். (௬௮)

சூலமழுவாளொடயிலேமுரமுலக்கை
காலவரிவிற்பகழிகற்பணமுசண்டி
கோலகணைநேமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார். (௬௯)

அங்குசநெடுங்கவணயிற்சிலைவழங்கும்
வெங்குசையபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர்பலாசவனமொப்பார். (௭௦)

அளக்கவரிதாகியகணக்கொடயணிற்கும்
விளக்கினமிருட்டனைவிழுங்கிவெளிகால
உளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
இளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான். (௭௧)

எவ்வமரெவ்வவுணரெவ்வருளரென்னே
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார்

70.பலாசவனம் - செம்முருக்கவனம். 72.எவர் - எவ்வரெனவிரித்தல்விகாரம்.

தெவ்வரிவர்சேமமிதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கிடினெனுய்விளையுமென்றான். (எ௨)

கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரின்
அருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கின்
நெருங்கமர்கிடக்குநெடுநாளெனநினைந்தான். (எ௩)

வாயில்வழிசேரலரிதன்றியும்வலத்தோர்
ஆயிலவர்வைத்தவழியேகலழகன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிதுதாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றொரயல்போனான். (எ௪)

வேறு.

நாளுநாந்தானல்கியகாவனனிமூதூர்
வாளுளநாள்போவதின்மேலேவழிநின்றாள்
தூணுமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணுவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள். (எரு)

எட்டுத்தோளாளுனுமுகத்தாளுலகேழும்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தாள்சுழல்கண்ணாள்
முட்டிப்பேரின்மூவுலகத்தைமுதலோடும்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள்கமையில்லாள். (எசு)

பாராநின்றாளெண்டிசைதோறும்பலரப்பால்
வாராநின்றாரோவெனமாரிமழையேபோல்
ஆராநின்றானூபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிமைக்குமிளிர்பூணாள். (எஎ)

வேல்வாள்சூலம்வெங்கதைபாசம்விளிசங்கம்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கட்போழினெயிற்றாள்புகைவாயில்
கால்வாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள். (எஅ)

அஞ்சுவணத்தினுடையுடுத்தாளரவெல்லாம்
அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்

---

75. வாழ்நாள் அந்நாள்போவதின்மேலே - தனது வாழ்நாள் அன்றுமுடியப்போவதினாலே.

76. கமை - பொறுமை. 78. விளி - ஒலிக்கின்ற.

79. அஞ்சுவண்ணத்தின் - பஞ்சவர் வர்ணங்களுள்ள. அஞ்சு உவணத்தின் - பயப்படும்படியான கருடனைப்போல.

அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலையாரும்
அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள். (எகூ)

சிந்தாரத்தின்செச்சையணிந்தாடெளிநூல்யாழ்
அந்தாரத்தினோர்வருசொல்லாளறைதும்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூறும்
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள். (அ௦)

எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறையொக்குநயனத்தாள்
நில்லாய்நில்லாயென்றுரைநேர்வாணிலையாமுன்
வல்லேசென்றாண்மாருதிகண்டான்வருகென்றான் (அக)

ஆகாசெப்தாயஞ்சலைபோலுமறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வார்பாற்சலமென்னும்
பாகாரிஞ்சிப்பொன்மதிருவிப்பதையாதே
போகாயென்றாள்பொங்கனலென்னப்புகைகண்ணாள். (அஉ)

களியாவுள்ளத்தண்ணன்மனத்திற்கதமூழ்க
விளியாநின்றேநீநிலத்தின்வினையோர்வான்
அளியாலிவ்வூர்காணுநலத்தினணைகின்றேன்
எளியேனுற்றால்யாவதுனக்கிங்கிழுவென்றான். (அங)

என்னுமுன்னமேகெனவேகாதெதிர்மாற்றம்
சொன்னாயேநீயாவனடாதொல்புரமட்டான்
அன்னாரேனுமஞ்சுவரெய்தற்களியுற்றால்
உன்னாலெய்துமூர்கொலிவ்வூரென்றுநக்காள். (அச)

நக்காளைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டான்
நக்காய்நீயார்யார்சொலவந்தாயுனதாவி
உக்காலேதாமோடலையென்றாளினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான். (அரு)

வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருகாலன்
துஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலைப்போனகுகின்றான்
நெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள். (அசு)

---

79. அம்சுவணத்தின் - அழகான சுவர்ணத்தாலான, அம்சுவள்நத்தின் - நீரிலுள்ள நல்ல பிரகாசமுடைய சங்கிலுண்டான,

கொல்வாமன்றேறற்கோளுறுமிவ்வூரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேல்வென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்னுமுழுவிலைவேலைச்செலவிட்டாள். (அஎ)

தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தானுகம்விண்ணின்முரிக்குங்கருளன்போல்
ஒடித்தான்கையாலும்பருவப்பவுயர்காலம்
பிடித்தாணெஞ்சந்துண்ணெனவெண்ணம்பிழையாதாள். (அஅ)

இற்றுச்சூலநீறேழுகாலத்தெறியொப்பாள்
மற்றுத்தெய்வபல்படைகொண்டுமலைவாண்மேல்
உற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமல்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான். (அகூ)

வழங்குந்தெய்வப்பல்படைகாணுமலைவான்மேல்
முழங்கும்மேகமென்னவுரப்பிமுதிர்கின்றாள்
கழங்கும்பந்துங்குன்றுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தாடகவில்லாள். (கூ0)

அடியாமுன்னமங்கையனைத்துமொருகையால்
பிடியாவென்னேபெண்ணிவள்கொல்விற்பிழையென்று
ஒடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடும்
இடியேறுண்டநாகமெனப்பாரிடைவீழ்ந்தாள். (கூக)

விழுந்தாளெழுந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றாளுண்முகனூர்தம்மருளேன்றி
எழுந்தாள்யாரும்யாவையுமெல்லாவுலகத்தும்
தொழுந்தாள்வீரன்றூதுவன்முன்னின்றிவைசொன்னாள். (கூஉ)

வேறு.

ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
எய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்
செய்தொழிலிழுக்கியுள்ளந்திகைத்திந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்றளித்தியாயினுணர்த்துவலுண்மையென்றாள். (கூங)

எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று
முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரக்கொன்றுன்னைக்

---

90. தகவில்லாள்-புத்தியில்லாதவள். 91. நாகம்-மலை.
94. முத்தனை - பிரமனை.

கைத்தலமதனுற்றீண்டிக்காய்ந்தவன்றென்னைக்காண்டி
யிந்திரநகரம்பின்னைச்சிதைவது திண்ணமென்றான். (௯௪)

அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கும்
என்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றுன்னால்
உன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்றதுண்டோ
பொன்னகர்புகுதியென்னாப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனாள். (௯௫)

வீரனும்விரும்பிநோக்கிமெய்ம்மையேவினையுமஃதென்
றாரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டட்
பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதிருவிப்புக்கான்
சீரியபாலின்வேலைசிறுபிரைதெறித்ததன்னான். (௯௬)

வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
ஆன்றபேரிருளைச்சீத்துப்பகல்செய்தவெழுகைநோக்கி
ஊன்றியவுதயத்துச்சியொற்றைவானுருளைத்தேரோன்
றோன்றினன்கொல்லோவென்னாவறிவனுந்துணுக்கங்கொண்டான்

மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயுணரினுமிகையெனவிலங்கிப்போனான்
இம்மதிலிலங்கைநாப்பணெய்துமேற்றன்பாலெய்து
மிம்மினியல்லனோவவ்வெயிற்கதிர்வேந்தனென்றான். (௯௮)

பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதினடுவட்டூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினலமைந்தமாடத்
தசைவிலவிலங்கைமூதூராரிருளின்மையாலே
நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம். (௯௯)

மன்றனளியம்பிவீதியேகுதலிழுக்கமென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கிமாளிகையின்சாரல்
சென்றனனென்பமன்னோதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன்புகழெனக்குவவுத்தோளான். (௧௦௦)

ஆத்துறுசாலைதோறுமானையின்கூடந்தோறும்
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறும்
காத்துறுகடைகடோறுங்கருங்கடல்கடந்தகாலால்
பூத்தொறுமவாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான். (௧௦௧)

---

97. வான்தொடர் - விண்ணையளாவிய (மாடம்)

98. மிம்மினி - மின்மினிப்பூச்சி.

99. நிசிசரர் - இராக்காலத்திலும் சஞ்சரிக்கிறவர்கள்.

பெரியநாளொளிகொளாளவிதமணிப்பித்திப்பத்தி
சொரியுமாநிழல்களாங்குச்சுற்றலாற்காலின்றோன்றல்
கரியனாய்வெளியனாகிச்செய்யனாய்க்காட்டுங்காண்டற்
கரியனையெளியனாய்த்தன்னகத்துறையழகனைபோல். (௧௦௨)

கானகமயில்களென்னக்களிமடவன்னமென்ன
ஆனனகமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசரளச்சோலைதெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை. (௧௦௩)

ஈட்டுவார்தவமலான்மற்றீட்டினாலியைவதின்மை
காட்டினார்விதியாரஃதுகாண்கிற்பார்க்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொருதபொய்யிடைநையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர். (௧௦௪)

இலக்கணமரபிற்கேற்றவெழுவகைநரம்பினல்யாழ்
அலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென்றுசேடியர்கன்னிமார்கள்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழையின்வாய்பொத்துவாரை. (௧௦௫)

சந்தப்பூம்பந்தர்வேய்ந்ததமணியவரங்கிற்றத்தம்
சிந்தித்ததுவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்பிதநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை. (௧௦௬)

திருத்தியபளிக்குவேதித்தெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
அருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை. (௧௦௭)

கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்கணாட்டங்கொள்ளத்
தூதுளங்கனியைவென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை. (௧௦௮)

விற்படர்பவளப்பாதத்தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
அற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை. (௧௦௯)

103. தெய்வநீர் - தெய்வத்தன்மை. 105. இலக்கணமரபு - இலக்ஷணகிரமம்.
109. விற்படர் - ஒளிபரவுவதான.

புலியடுமதுகைமைந்தர்புதுப்பிழையுயிரைப்புக்கு
நலிவிடவமுதவாயானச்சுயிர்த்தயிற்கணல்லார்
மெலிவுடைமருங்குன்மின்னினலமரச்சிலம்புவிம்மி
ஒலிபடவுதைக்குந்தோறுமயிர்புளகுதிக்கின்றாரை. (கக௦)

உள்ளுடைமயக்காலுண்கண்சிவந்துவாய்வெண்மைபூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தூய
வெள்ளிடைமருங்குலார்நம்மதிமுகம்வேறென்றாகிக்
கள்ளிடைத்தோன்றநோக்கிக்கணவரைக்கவல்கின்றாரை. (ககக)

ஆலையின்மலையின்சாரன்முழையினிலமுதவாரிச்
சோலையிற்றுவசரில்லிற்சோனகர்மனையிற்றூய
வேலையிற்கொளவொண்ணதவேற்கணார்குமுதச்செவ்வாய்
வாலெயிற்றூறுதீந்தேன்மாந்தினர்மயங்குவாரை. (ககஉ)

நலனுறுகணவர்தம்மைநவையுறப்பிரிந்துநல்கு
முலைபுறுகலவைதீயமுள்ளிலாமுளரிச்செங்கேழ்
மலர்மிசைமலர்பூத்தென்னமலர்க்கையால்வதனந்தாங்கி
உலவருமுயிரினோடுநெடிதிருந்துயிர்க்கின்றாரை. (ககங)

வதியங்கொழுநர்தம்பாலெய்தியசலத்தர்வைகும்
தாதியங்கமளிச்சேக்கைபுயிரிலாவுடலிற்சார்வார்
மாதுயர்க்காதறாண்டவழியினமேல்வைத்தகண்ணார்
தூதியர்முறுவனோக்கியுயிர்வந்துதுடிக்கின்றாரை. (ககச)

சங்கொடுசிலம்புநூலும்பாதசாலகமுந்தாழப்
பொங்குபன்முரசமார்ப்பவில்லுறைதெய்வம்பேணிக்
கொங்கலர்கூந்தற்செவ்வாயரம்பையர்பாணிகொட்டி
மங்கலகீதம்பாடமலர்ப்பலிவகுக்கின்றாரை. (ககரு)

இழைதொடர்வில்லும்வாளுமிருளொடுமலையயாணர்க்
குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
முழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையென்னவிழாவொடுவருகின்றாரை. (ககசு)

பள்ளியின்மைந்தரோடுமூடியபண்புநீங்கி
ஒள்ளியகலவிப்பூசலுடற்றுதற்குருத்தநெஞ்சர்

112. துவசர் - சாணார்.

115. பாதசாலகம் - பாதசரம்.

116. குழை - குண்டலமணிந்தகாதென்க.

மெள்ளவேயிமைமைபீக்கியஞ்சனவிழுதுவேய்ந்த
கள்ளவாணெடுங்கணென்னும்வாளுறைநகழிக்கின்றரை. (கக௭)

ஓவியமனையமாதருடினருணர்வோடுள்ளம்
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்ந்
தூவியம்பேடையென்னமின்னெனத்துவளவேகி
ஆவியுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றரை. (கக௮)

கின்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தரளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமனைபுகுகின்றரை. (ககக)

கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப்
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவரனநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றரை. (க௨0)

இயக்கியரரக்கிமார்களுகியரெஞ்சில்விஞ்சை
முயற்கறைமலராத்திங்கண்முகத்தியர்முதலினேரை
மயக்கறநாடியேகுமாருதிமலையின்வைகும்
கயக்கமிறுயிற்சிக்கும்பகருணனைக்கண்ணிற்கண்டான். (க௨க)

வேறு.

ஓசனையேழகன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டபம்
ஏசறவிளங்கியதிருளைவெண்வகை
ஆசையினிலைகெடவலைக்கலான்றது. (க௨௨)

அன்னதனடுவணோரமளிமிசைப்
பன்னகவரசெனப்பரவைதானெனத்
துன்னிருளொருவழித்தொக்கதாமென
உன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே. (க௨௩)

முன்னியகனைகடன்முழுகிமூவகைத்
தன்னியல்கதியொடுதழுவித்தாதுகு

119. கின்னரமிதுனம் - இரட்டைக்கின்னரம்.

122. ஆசையினிலைகெட - திக்குகளிலும் நிலையில்லாமற்போக.

124. மூவகைத்தன்னியல் - குளிர்ச்சி, நறுமணம், மெத்தென்று வீசுதல் - இவற்றை வடநூலார் சைத்யம், ஸௌரப்யம், மாந்த்யம் என்பது.

மன்னெடுங்கற்பகவனத்துள்வைகிய
இன்னிளந்தென்றல்வந்திழுகியேகவே. (கஉச)

வானவர்மகளிர்கால்வருடமாமதி
ஆனனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்
கானகுகாந்தமீக்கான்றகாமர்நீர்
தூனிறநறுந்தளிமுகத்திற்றேற்றவே. (கஉரு)

மூசியவுயிர்ப்பெனுமுடுகுவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையான்
நாசியினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குதித்தனன்விதிர்த்தகையினான். (கஉசா)

பூழியின்றிரைகவிசும்பனைவப்போய்ப்புகும்
கேழில்வெங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழியவுலகெலாந்துடைக்குமாருதம்
ஊழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே. (கஉஎ)

பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடித்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநாறவே. (கஉஅ)

தடைபுகுமந்திரந்தகைந்தநாகம்போல்
இடைபுகலரியதோருறக்கமெய்தினான்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயல்
புடைபெயராநெடுங்கடலும்போலவே. (கஉகா)

வேறு.

ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோவெனுநின்றகுணமிலியிவனெனக்கொண்டான்
காவலுட்டங்கர்பொறியுகக்கனலெனக்கனன்றான்
ஏவனோவிவன்மூவரினொருவனோமீட்டான். (கநூ0)

குறுகிநோக்கிமற்றவன்றலையொருபதுங்குறித்த
இறுகுதிண்புயமிருபதிங்கிவனிலனென்னா
மறுகியேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
அறிவெனும்பெரும்பரவையம்புனலினாலவித்தான். (கநூக)

அவித்துநின்றவனுயினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சிலபகலென்பதுகருதாச்

செவிக்குத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்தும்
கவிக்குநாயகனனையவனுறையுளைக்கடந்தான். (௧௩௨)

மாடகூடங்கண்மாளிகையோளிகைமகளிர்
ஆடரங்குகளம்பலந்தேவராலயங்கள்
பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவும்
நாடியேகினனிராகவன்புகழெனுநலத்தான். (௧௩௩)

மணிகொள்வாயிலுட்சாளரத்தாள்களின்மலரில்
கணிகொளுத்திற்காலினும்புகையினுங்கலக்கும்
நுணுகும்வீங்குமற்றவனியாவரேநுவல்வார்
அணுவின்மேருவினுழியானெனச்செலுமநுமன். (௧௩௪)

ஏந்தலிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர்யாரையுங்காண்பான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான். (௧௩௫)

பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
துளிக்குங்கற்பகப்பந்தரிற்கருநிறத்தோரை
வெளித்துவைகுவதிதெனவவருருமேவி
ஒளித்துவாழ்கின்றதருமமன்னன்றனையுற்றான். (௧௩௬)

உற்றுநின்றவனுணர்வைத்தன்னுணர்வினுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனெருசிறைசென்றான்
பொற்றைமாடங்கள்கோடியோர்கொடியிடைப்புக்கான். (௧௩௭)

முந்தரம்பையர்முதலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரம்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மனத்தின்முன்செல்வான்
இந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான். (௧௩௮)

ஏதியேந்தியதடக்கையர்பிறைறயெயிறிலங்க
மூதுரைப்பெருங்கதைகளும்பிதிர்களுமொழிவார்
ஓதிலாயிரமாயிரமுணர்வியரக்கர்
காதுவெஞ்சினக்களிறினர்காவலைக்கடந்தான். (௧௩௯)

---

133. அம்பலம் - பொதுச்சாவடி.

136. கருநிறத்தோரை ஒளித்ததனக்கூட்டி கருநிறத்தோருக்குப்பயந்து மறைந்துவைகியதருமம் எனக்கொள்க, 139. பிதிர் - விடுகதை.

முக்கணோக்கினன்முதன்மகனறுவகைமுகனும்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரந்தனையான்
ஒக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்றானைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலும்புகுவான். (௧௪௦)

வளையும்வாளெயிற்றரக்கனோகணிச்சியான்மகனோ
அளையில்வாளரியனையவன்யாவனோவறியேன்
இளையவீரனுமேந்தலுமிருவரும்பலநாள்
உளையவுள்ளபோரிவனொடுமுளதெனவுணர்ந்தான். (௧௪௧)

இவனையின்றுணையுடையபோரிராவணனென்னே
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்
சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலாம்
அவனையல்லவர்நிகர்ப்பவரென்பதுமறிவோ. (௧௪௨)

என்றுகைம்மறித்திடைநின்றுகாலத்தையிகப்ப
தன்றுபோவதென்றுயிரமாயிரத்தடங்காத்
துன்றுமாளிகையோளிகடுரிசறத்துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தினைத்தீர்ந்தான். (௧௪௩)

அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
தொக்ககோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்மனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலெனப்புகழோன். (௧௪௪)

இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியும்புக்கான்
கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்பான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான். (௧௪௫)

தனிக்கடக்களிறெனவொருதுணையிலான்றுய
பனிக்கடற்பெருங்கடவுடன்பரிபவந்துடைப்பான்
இனிக்கடப்பதன்றேழ்கடல்கிடந்ததென்றிசைத்தான்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான். (௧௪௬)

பாழிநன்னெடுங்கிடங்கெனப்பகர்வரேற்பல்லோர்
ஊழிகாலநின்றுலகெலாங்கல்லினுமுலவா
ஆழிவெஞ்சினத்தரக்கனையஞ்சியாழ்கடல்கள்
ஏழுமிந்நகர்சுலாயதுகொலாமெனவிசைத்தான். (௧௪௭)

---

145. கன்னி-அழியாத. 150. பரியாழி பரியின் விலாழி.∴ ஆழி, கடைக்குறை.

ஆயதாகியவகன்புனலகழியையடைந்தான்
தாயவேலையினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்றான்
நாயகன்புகழ்நடந்தபேருலகெலாநடந்தான். (௧௪௮)

வேறு.

மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கினாலன்னதோயத்ததாய்த்துயர்
ஆக்கினான்படையன்னவகழியை
வாக்கினாலுரைவைக்கலுமாகுமோ. (௧௪௯)

ஆனைமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியும்
நானமாதர்நறைக்குழலாவியும்
தேனுமாரமுந்தேய்வையுநாறுமால். (௧௫௦)

உன்னநாரைமகன்றில்புதாவுளில்
அன்னங்கோழிவண்டானங்களாழிப்புள்
கின்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குறைலஞ்சிலம்புமே. (௧௫௧)

நலத்தமாதர்நறைபகினாவியும்
அலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
இலக்கணக்கரிபோயுமென்னடைக்
குலப்பிடிக்குமோநடல்கொடுக்குமால். (௧௫௨)

நறவுநாறியநாணாறுந்தாமரை
துறைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்
சிறையினெய்தியசெல்விமுகத்தினோ
டுறவுதாமுடையாரொடுங்கார்களோ. (௧௫௩)

பளிங்குசெற்றிக்குயிற்றியபாயொளி
விளிம்பும்வெள்ளமுமெய்தெரியாதுமேல்
தெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ. (௧௫௪)

நீலமேழுதனன்மணிநித்திலம்
மேலகீழபல்வெருளிவீசலால்

பாலின்வேலைமுதற்பலவேலையும்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே. (௧௫௫)

அன்னவேலையகழியையார்கலி
என்னவேகடந்திஞ்சியும்பிற்படத்
துன்னருங்கடிமாநகர்துன்னினான்
பின்னரெய்தியதன்மையும்பேசுவாம். (௧௫௬)

கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
யொருவனேயொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநாலுயிரந்தேடினான். (௧௫௭)

வேறு.

வேரியுமடங்கினநெடுங்கடல்விளம்பும்
பாரியுமடங்கினதடங்கியதுபாடல்
காரியமடங்கினர்கள்கம்மியர்கண்முந்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம். (௧௫௮)

இறங்கினநிறங்கொள்பரிமேமுறவெங்கும்
கறங்கினமறங்கொளொளிபில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலரன்பர்பிரியாதோர்
உறங்கினர்பிணங்கியெதிருடினவரல்லார். (௧௫௯)

படர்ந்தருதடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களிந்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம். (௧௬௦)

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்றிறநுகர்ந்தனர்களித்தார்
பூமணநறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறைபயின்றிலர்துயின்றார். (௧௬௧)

பண்ணிளிமைபடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிளிமையடைத்தனவிளைந்ததிருள்வீணைத்
தண்ணிளிமைபடைத்தனதழங்கிலைரவழங்கும்
கண்ணிளிமைபடைத்தனவடைத்தனகபாடம். (௧௬௨)

157. ஒரு - ஒப்பற்று. 158. பாரித்தல்-பரவுதல் - பாரிமுதனிலைத்தொழிற்பெயர்.

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
துரிஞ்சவருதென்றலுயிரின்புடையுலாவச்
சொரிந்தனகருங்கலைவருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதளிநெஞ்சம். (௧௬௩)

இளக்கிரமுதெஞ்சவிபூமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பகைசோரவுயர்வோரின்
அளக்கரொடளக்கரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம். (௧௬௪)

நித்தநியமத்தொழிலராய்நிறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர்துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்னும். (௧௬௫)

ஆடபொழுதம்மதிலகத்தரசர்வைகும்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன்வினைப்பகையைவென்றான். (௧௬௬)

வேறு.

போரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்
தாரகைக்குழுவிற்றழுவித்தொடர்
நாரியர்க்குறைவாமிடநண்ணினான். (௧௬௭)

முயற்கருங்கறைநீங்கியமொய்ம்மதி
அயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவர்
இயக்கர்மங்கையர்யாவருநீண்டினார்
நயக்குமாளிகைவீதியைநண்ணினான். (௧௬௮)

தழைந்தமொய்யொளிபெய்மணித்தாழ்தொறும்
இழைந்தநூலினுமின்னிளங்காலினும்
நுழைந்துநொய்தினின்மெய்யுறநோக்கினான்
விழைந்தவெவ்வினைவேரறவீசினான். (௧௬௯)

அத்திரம்புனையானையரக்கன்மேல்
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்

166. வினைப்பகை - தீவினைச்செய்கைகளான, காமக்குரோதங்கள்.
169. தாழ்தொறும் - தாழ்க்கோல் "திறவுகோல்" செல்லுமிடங்களெல்லாம்.

பத்திரம்புரைநாட்டம்பனைப்பறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர். (கஎ0)

வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேதனையின்பயன்வேண்டியோ
கள்ளமென்கொலறிந்திலங்கண்முகிழ்ந்
துள்ளலின்றியுறங்குகின்றார்சிலர். (கஎக)

பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
உழுதகொங்கையனூருயிர்ப்பினர்
அழுதுசெய்வதென்னையாக்கலா
எழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர். (கஎஉ)

ஆவதொன்றருளாயெனதாவியைக்
கூவுகின்றிலைகூறலைசென்றெனப்
பாவைபேசுவபோற்கண்பனிப்புறப்
பூவைபோடும்புலம்புகின்றார்சிலர். (கஎ௩)

ஈரத்தென்றலிழிபுகமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரக்கோள்களின்வீக்கநினைந்துயிர்
சோரச்சோரத்துளங்குகின்றார்சிலர். (கஎ௪)

நக்கசெம்மணிநாறியநாளிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பகல்
ஒக்கவாரையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களைநோக்கினார்சிலர். (கஎ௫)

வாளினுற்றெறிகற்பகவல்லியர்
தோளினுற்றுயதுங்கமளித்துயில்
நாளினுற்செவியிற்புகுநாமமாழ்த்
தேளினுற்றிகைப்பெய்துகின்றார்சிலர். (கஎ௬)

கவ்வுநீக்கலைமேருவைக்கால்வளைக்
கெவ்வினன்மலையேந்தியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவௌவிய
செவ்விகண்டுருகாவுகின்றார்சிலர். (கஎஎ)

கூடிநான்குயர்வேலையுங்கோக்கதின்
முடிஞான்புகழுங்கைநரம்பினால்

173. பூவை - நாகணவாய்ப்புள்.

நாடிநாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினான்பெயர்பாடுகின்றார்சிலர். (கஎஅ)

இனையதன்மையியக்கியரெய்திய
மனையொராயிரமாயிரகோடியாம்
அனையவன்குலத்தாயிழையாரிடம்
நினைவினெய்தினன் நீங்கினெய்தினான். (கஎ௯)

வேறு.

எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகிநாளும்விளக்கின்றிவிளங்குமாடத்
தரிவையர்குழுவுநீங்கவாசையுந்தாமுமேயாய்
ஒருசிறையிருந்துபோனவுள்ளத்தோடுவாரும். (கஅ௦)

நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோதி
புகையெனத்தும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவேகியான்றபளிங்குடைச்சிதப்பள்ளி
மிகையொடுங்காதகாமவிம்மலின்வெதும்புவாரும். (கஅக)

சவிபடுதலைகசால்வானந்தானொருமேனியாகக்
குவியுமீனுரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்க்கற்றைபோதியாமழையுண்கண்ணா
அவிர்மதிநெற்றியாகவந்திவானொக்கின்றாரும். (கஅ௨)

பானலுங்கண்ணும்வண்ணப்படிமுறைமாறப்பண்ணைச்
சோனைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலா முன்றினண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும். (கஅ௩)

உழையுழைபரந்தவானயாற்றுநின்றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயந்தந்தபுனல்குளிர்ப்பிலவென்றாடி
இழைதொடுத்திலங்குமாடமிடைதடமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான்மஞ்சனமாடுவாரும். (கஅ௪)

பன்னகவரசர்செங்கேழ்ப்பணமணிவலிதிற்பற்றி
இன்னுயிர்க்கணவனீந்தானுமெனவிருந்திவிஞ்சை
மன்னவர்முடியும்பூணுமாரமும்பணையமாகப்
பொன்னணிபலகைசூதுதுயில்கிலர்பொருகின்றாரும். (கஅ௫)

---

181. காமவிம்மல் - காமமிகுதி.
182. சவி - ஒளி.
182. கவிர் - முள்முருக்கு.

தென்னகுருடமுட்பாடல்சித்தியரிசைப்பத்தீஞ்சொற்
பன்னகமகளிர்வள்வார்த்தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தாளப்பந்தர்கற்பகப்பொதும்பர்பொற்றோள்
இன்னகையரம்பைமாரையாடல்கண்டிருக்கின்றாரும். (கஅசு)

ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவியுண்கண்
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுந்தீர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும். (கஅஎ)

தண்டலைவாழையன்னகுறங்கிடையல்குற்றட்டில்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுஞ்சோரக்கூர்ங்கள்
உண்டலமந்தகண்ணோர்செலிட்டுலாவுகின்ற
குண்டலந்திருவில்வீசக்குரவையிற்குழற்றுவாரும். (கஅஅ)

நச்செனக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபம்பீறிக்
குச்சரித்திறத்தினோசைகளங்கொளக்குழக்கொண்மண்டிச்
சச்சரிப்பாணிகொட்டிநிறைதடுமாறுவாரும். (கஅகூ)

தயிர்திறத்துழுகளுள்ளந்தள்ளுறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமென்மேற்படிந்ததுபார்மினென்று
உயிருயிர்த்திரண்டுகையுமுக்கிமேலுயரநீட்டி
மயிர்சிலிர்த்துடலுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும். (ககூ0)

இத்திறத்தரக்கிமார்களிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னுகச்சென்றான்
உத்திசைவிஞ்சைமாதருறையுளோமுறையினுற்றான். (ககூக)

வேறு.

வளர்ந்தகாதலர்மகரிகைநெடுமுடியரக்கனைவரக்காணார்
தளர்ந்தசிந்தைதம்மிடையினுநடுங்கிடவுயிரொடுதடுமாறிக்
களந்தவாநெடுங்கருவியிற்கைகளிற்செயிரியர்கலைக்கண்ணால்
அளந்தபாடல்வெவ்வாயுதஞ்செவிபுகவலமாலுறுகின்றார். (ககூஉ)

புரியுநன்னெறிமுனிவரும்புலவரும்புகலிலாப்பொறைகூர
எரியும்வெஞ்சினத்திகலிடுகொடுந்திறலிராவணற்கெஞ்ஞான்றும்

---

186. தண்ணுமைபாணிபேணல் - மத்தளங்களை கைகளாலே, முழக்கல்.
188. கூர்ங்கள் - மிகவும் மயக்கமுள்ளமது.
191. உத்திசை - அப்புறமான திக்கு. 192. செயிரியர் - பாடகர்கள்.

பரியுநெஞ்சினரிவரெனவயிர்த்ததோர்பகைகொடுபனித்திங்கள் [ர்.
சொரியும்வெங்கதிர்துணைமுலைக்குவைசுடக்கொடிகளிற்றுடிக்கின்று

சிறுகாலங்களூழிகளாம்வகைதிரிந்துசிந்தனைசிந்த
முறுகுகாதலின்வேதனையுழப்பவர்முயங்கினர்முலைமுன்றில்
இறுகுசாந்தமுமெழுதுநற்குறிகளுமின்னுயிர்ப்பொறையீர
மறுகுவாட்கண்கள்சிவப்புறநோக்கினர்வயிர்த்தனருயிர்க்கின்றார்.()

ஆயவிஞ்சையர்மடந்தையருறைவிடமாறிரண்டமைகோடி [ற்கும்
தூயமாளிகைநெடுந்தெருத்துருவிப்போய்த்தொலைவின்மூன்றுலகி
நாயகன்பெருங்கோயிலைநண்ணுவான்கண்டனனளிர்திங்கள்
மாயநந்தியவாண்முகத்தொருதனிமயன்மகளுறைமாடம். (௧௯௫)

கண்டுகண்ணொடுகருத்தொடுகடாவினன்காரணங்கடைநின்ற
துண்டுவேறொருசிறப்பெங்கணும்பகற்குயிரினுமுரியாளைக் [ல்லாம்
கொண்டுபோந்தவன்வைத்ததோருறையுள்கொல்குலமணிமனைக்கெ
விண்டுவின்றடமார்பினின்மணியொத்ததிதுவெனவியப்புற்றான். ()

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியாதியர்மலர்க்காமன்
சரம்பெய்தூணிபோற்றளிரடிதாங்கொடாச்சாமரைபணிமாறக்
கரும்பையுஞ்சவைகைப்பித்தசொல்லியர்காமரங்கனியாழின்
நரம்பினின்னிசைசெவிபுகநாசியிற்கற்பகவிரைநாற. (௧௯௭)

விழைவுநீங்கியமேன்மையோராயினுங்கீழ்மையோர்வெகுளூற்றால்
பிழைகொனன்மைகொல்பெறுவதென்றையுறாழையாற்பெருந்தெ
உழையர்கூவப்புக்கேதெனப்பெயர்வதோருசலினுளதாகும் [ன்றல்
பழையம்யாமெனப்பண்பிலசெய்வரோபருதர்பயனோர்வார். (௧௯௮)

இன்னதன்மையினெரிமணிவிளக்கங்களெழில்கெடப்பொலிகின்ற
தன்னதின்னொளிதழைப்புறத்துயிலுறுதையலைத்தகைவில்லான்
அன்னளாகியசானகியிவளெனவயிர்த்தகத்தெழுவெந்தீத்
துன்னுமாருயிருடலொடுசுடுவதோர்துயருழந்திவைசொன்னான். ()

எற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பயனிகந்தனெனிதுநிற்க
அற்புவான்றளையிற்பிறப்பதனொடுமிகழ்ந்துதன்னருந்தெய்வக்
கற்புநீங்கியகனங்குழையிவளெனிற்காகுத்தன்புகழோடும்
பொற்பும்யானுமிவ்விலங்கையுமரக்கரும்பொன்றுதுமின்றென்றான்

200. அன்பு-அற்பெனத்திரிந்தது.

மானுயர்த்திருவடிவினளவளிவண்மாறுகொண்டனள்கூறின்
தானியக்கியோதானவர்தையலோவையுறுந்தகையாளுள்
கானுயிர்த்ததாரிராமன்மேனோக்கியகாதல்காரிகையார்க்கு
மீனுயர்த்தவன்மருங்குதான்மீளுமோநினைந்துமிகையென்றான். ()

இலக்கணங்களுஞ்சிலவுளவென்னினுமெல்லைசென்றிறுக்கில்லா
அலக்கணெய்துவதணியதுண்டென்றெடுத்தறைகுவதிவள்யாக்கை
மலர்க்கருங்குழல்சோர்ந்துவாய்வெரீஇச்சிலமாற்றங்கள்பறைகின்றா
உலக்குமிங்கிவள்கணவனுமழிவுமிவ்வியனகர்க்குளதென்றான். [ள்

என்றுணர்ந்துநின்றேமுறுமிந்நிலைநிற்கவித்திறனென்னாப்
பின்றுசிந்தையன்பெயர்ந்தனனெடுமனைபிற்படப்பெருமேருக்
குன்றுகுன்றியதகையுறவோங்கியகோற்றமாளிகைதன்னில்
சென்றுபுக்கனனிராவணற்கெடுப்பருங்கிரியெனத்திரடோளான். ()

நிலந்துடித்தனநெடுவரைபொடித்தனநிருதர்தங்குலமாதர்
பொலந்துடிக்கமைமருங்குல்போற்கண்களும்புருவமும்பொற்றோளு
வலந்துடித்தனமாதிரந்துடித்தனதடித்தின்றிமதிவானம் [ம்
கலந்திடித்தனவெடித்தனபூரணமங்கலகலசங்கள். (உ0சு)

புக்குநின்றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ளம்
நெக்குநின்றனனீங்குமங்கேதாவிந்தநெடுநகர்த்திருவென்னா
எக்குலங்களின்யாவரேயாயினுமிருவினையெல்லோர்க்கும்
ஒக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்றான். ()

நூற்பெருங்கடனுணங்கியகேள்வியனோக்கினனியனென்றாள்
வேற்பெருங்கடல்புடைபரந்தீண்டியவெள்ளிடைவியன்கோயில்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப்பரப்புடைப்படர்வேலை
மாற்பெருங்கடல்வதிந்ததேயனையதோர்வனப்பினன்றுயில்வானை.

குழவிஞாயிறுகுன்றிவர்ந்தனையனகுருமணிநெடுமோலி
இழைகளோடுநின்றிளவெயிலெறித்திடவிரவெனும்பொருள்வீய
முழைகொண்மேருவின்முகட்டிடைக்கனகனைமுருக்கியமுரட்சீயம்
தழைகொடோளொடுதலைபலபரப்பிமுன்றுயில்வதோர்தகையானை.

ஆயபொற்கலத்தாய்வளையரம்பையராயிரரணிநின்று
தூயபொற்கவரித்திரளியக்கிடச்சுழிபடுபசுங்காற்றின்
வீயகற்பகத்தேன்றுளிவிராயனவீழ்தொறநெடுமேனி
தீயநற்றெடிச்சீதையைநினைதொறுமுயிர்த்துயிர்தேய்வானை. ()

201. மானுயர் - மானிடர், மனிதர். 204. மாதிரம் - திசை.

குழந்தைவெண்மதிக்குடுமியநெடுவரைகுலுக்கியகுலத்தோளைக்
கழிந்துபுக்கிடைகரந்தனஅநங்கன்வெங்கடுங்கணைபலபாய
உழந்தவெஞ்சமத்துயர்திசையானையின்னொளிமருப்புற்றிற்ற
பழந்தழும்பினுக்கிடையிடையேசிலபசும்புண்களசும்பூற. (௨௦௯)

சாந்தளாவியகலவைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்றல்
ஏந்துகாமவெங்கனலினுக்குமிழதட்டுருத்தியினுயிர்ப்பேறக்
காந்தண்மென்விரற்சனகிமேன்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
பாந்தணீங்கியமுழையெனக்குழைவுறுநெஞ்சுபாழ்பட்டானை. ()

வேறு.

கொண்டபேருக்கமுளத்திசைதொறுங்குறித்துமேருள்
மண்டியசெருவின்வீரத்தோள்களால்வாரிவாரி
உண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகடோறொழுகிப்பாயும்
அண்டர்தம்புகழிற்றோன்றும்வெள்ளெயிற்றமைதியானை. (௨௧௧)

வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழவெதும்புமேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவேர்கொதித்துப்பொங்க
கள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப [க்
ஒள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானை. (௨௧௨)

தேவியனேமியானிற்சிந்தைமெய்த்திருவினேகப்
பூவியலமளிமேலாப்பொய்யுறக்குறங்குவானைக்
காவியங்கண்ணிதன்பாற்கண்ணியகாதனீரின்
ஆவியையுயிர்ப்பென்றோதுமம்மியிட்டரைக்கின்றானை. (௨௧௩)

மிகுந்தகைநினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
நகுந்தகைமுகத்தன்காதனடுக்குறுமெய்யன்வார்தேன்
உகுந்தகைமொழியாண்முன்னமொருவகையுறையுளுள்ளே
புகுந்தனளென்றோவென்றுமயிர்புறம்பொடிக்கின்றானை. (௨௧௪)

மென்றொழிற்கலாபமஞ்ஞைவேட்கைமீக்கூறுமேனும்
குன்றொழித்தொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்றொழிற்கொற்றப்பொற்றோண்மணந்திடுமயிலேயன்னார்
ஒன்றொழித்தொன்றினேகவரியதோரொழுக்கினானை. (௨௧௫)

வேறு.

தழுவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
எழுவானென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்

---

209. அநங்கன் - தேகமில்லாதவன், மன்மதன்.

முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்குமுதற்றேவர்
மழுவாணேமிகுலிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானே. (உகசு)

வேறு.

தோடுமுதண்டார்வண்டுந்திசை யானைமதந்துதைந்தவண்டுஞ்சுற்றி
மாடுமுதநறுங்கலவைவயக்களிற்றின்சிந்துரத்தைதமாறுகொள்ளக்
கோடுமுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுத்தழும்பிருந்தசரணத்தானே. ()

வேறு.

கொண்டதோருருவமாயன்குறளினுங்குறுகநின்றான்
திண்டலைத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்காண்டலோடுங்கருத்தின்முன்காலச்செந்தீ
விண்டனகண்கள்கீண்டுவெடித்தனகீழுமேலும். (உகஅ)

வேறு.

தோளாற்றலென்னுருமேனிற்குஞ்சொல்லென்னும்
வாளாற்றகண்ணாளைவஞ்சித்தான்மணிமுடியென்
தாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்றன்
ஆளாற்றல்காட்டேனுலடியேனாய்முடியேனே. (உககூ)

நடித்துவாழ்தகைமையதோவடிமைதானன்னுதலைப்
பிடித்தவாளரக்கனூர்யான்கண்டும்பிழைப்பரோ
ஒடித்துவான்றோளைத்துந்தலைபத்துமுதைத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவதெலாமுடிந்தொழிக. (உஉ0)

என்றாக்கியெயிறுகடித்திருகரமும்பிசைந்தெழுந்து
நின்றாக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்றால்
ஒன்றாக்கியொன்றிழைத்தலுணர்வுடைமைக்குரித்தன்றால்
பின்றாக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான். (உஉக)

ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளரெனினும்
சீலம்பார்க்குரியோர்களெண்ணுதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றுவிக்குமுறைதெரினும்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான். (உஉஉ)

இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்னோடுமுடிந்திடுக
கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை

---

216. முதற்றேவரென்றது ஈண்டு உருத்திரன், விஷ்ணு, இந்திரனை என்க.

218. கீழ்கீண்டு - மேல்வெடித்தன எனக்கூட்டுக.

முற்றப்போர்முடித்தபொதாருகுரங்கென்றன்முனைவீரன் [ன்.
கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தா

அந்நிலையான்பெயர்ந்துரைப்பானுய்வளைக்கைபணியிழையார்
இந்நிலையானுடன்றுயில்வாருளரல்லரிவணிலையுங்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபூவை
நன்னிலையினுளளொன்னுநலனெனக்குநல்குமால். (உஉச)

என்றெண்ணியீண்டினியோர்பயனில்லையெனநினையாக்
குன்றன்னதோளவன்றன்கோமனைபிற்படப்பெயர்ந்தான்
நின்றெண்ணியுன்னுவானந்தோவிந்நெடுநகரம்
பொன்றுன்னுமணிப்பூணுரிலரென்னப்பொருமுவான். (உஉரு)

கொன்றானைகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
தின்றானைவப்புறத்தேசெறித்தானைச்சிறையறியேன்
ஒன்றானுமுணரகிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால். (உஉசு)

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிகுலக்கோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ. (உஉள)

கண்ணியநாள்கழிந்துளவாற்கண்டிலெனுற்கனங்குழையை
விண்ணடைதுமென்றுரையாண்டிருத்திவிரைந்தயான்
எண்ணியதுமுடிக்ககிலேன்யான்முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளொன்னுமைழநின்றும்போயதால். ()

ஏழுநூறேசனைசூழ்ந்தெயில்கிடந்ததிவ்விலங்கை
வாழுமாமன்னுயிர்யான்காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ. (உஉகூ)

வல்லரக்கன்றனைப்பற்றியவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ

225. பொருமுவான் - துக்கிக்கலானுர்.
227. புண்டரிகநயனத்தான் - தாமரைக்கண்ணன்.
227. விண்டவர் - விட்டவர்.
228. கண்ணியநாள் - கெடுவு செய்தனுப்பின காலவளவு.

எல்லரக்குமயினுதிவேவிராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருக்கியுகவெந்தழலால்வேய்கேனே. (உகூ௦)

வானவரேமுதலோரைவினவுவெனேல்வல்லரக்கன்
றானொருவனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குரைப்பாரெவ்வண்ணந்தெரிகேனே
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்விலேன். (உகூக)

எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றனவனுரையுஞ்சிதைந்ததால்
கருவைக்குநெடுநகரைக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்வேனே. (உகூஉ)

வடித்தாய்பூங்குழலாளைவானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதால்
எடுத்தழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதன்முறைமன்றவென்றுணர்வான். (உகூகூ)

எள்ளுறையுமொழியாமல்யாண்டையுளுமுளனாய்த்தன்
உள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவினான்
புள்ளுறையுய்யானத்தையுறநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான். (உகூச)

ஆக திருவிருத்தம்-கூகூ௦.

## கூ-வது காட்சிப்படலம்.

### பிராட்டியைக் கண்டது.

மாடுநின்றவமணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிகாண்பெனேற்றீருமென்சிறுமை
ஊடுகண்டிலெனினிற்பின்னருரியதொன்றில்லை
வீடுவேன்மற்றிவ்விலங்கன்மேலிலங்கையைவீட்டி. (க)

என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூதன்
ஒன்றிவானவர்பூமழைசொரிந்தனருவந்தார்
அன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுவான்றுணிந்தாம். (உ)

232. கரு - தெய்வக் கம்மாளன்.
234. உய்யானம் - தோப்பு, சோலை.

வன்மருங்குல்வாளரக்கியர்நெருக்கவங்கிருந்தாள்
கன்மருங்கெழுந்தென்றுமோர்துளிவரக்காணு
நன்மருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுளவங்கமுமெலிந்தாள். (க)

துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
அயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னாள். (உ)

விழுதல்விம்முதன்மெய்புறவெதும்புதல்வெருவல்
எழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதறுளங்குதறுயருழந்துயிர்த்தல்
அழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள். (ங)

தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவால்
இழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள். (ச)

அரியமஞ்சிறுேடஞ்சனமுதலிவையதிகம்
கரியகாண்டலுங்கண்ணினீர்கடல்புகக்கலுழ்வாள்
உரியகாதலினொருவரோடொருவரையுலகில்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள். (ரு)

துப்பினற்செய்தகைகொடுகால்பெற்றதுளிமஞ்
சொப்பினன்றனைநினைதொறுநெடுங்கண்களுகுத்த
அப்பினனைந்தருந்துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினற்புலர்ந்தொருநிலையுறுதமென்றுகிலாள். (சா)

அரிதுபோகவோவிதிவலிகடத்தலென்றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச்
சுருதிநாயகன்வரும்வருமென்பதோர்துணிவால்
கருதிமாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணள். (எ)

கமையினுடிருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றைநிலத்திடைக்கிடந்ததூமதியை

3. நெருக்க - நெருங்கிசசூழ்ந்து.

9. அரிது - விதிவலிகடத்தல் தானே செல்லமாட்டாமையாற்போகஅறி தென்றும் தன்னாலொன்றுஞ் செய்யக்கூடாமையால் விதிவலிகடப்பதென் றுங்கூறினுள் என்க. 9. மாதிரம் - திக்கு.

அமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள். (க0)

ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யாள்
தேவுதெண்கடலமிழ்துகொண்டநங்கவேள்செய்த
ஓவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள். (கக)

கண்டிலன்கொலாமிளவலுங்கனைகடனடுவண்
உண்டிலங்கையென்றுணர்ந்திலருலகெலாமொறுப்பான்
கொண்டிருந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததிவொரிநுழைந்தாலெனப்புகைவாள். (கஉ)

மாண்டுபோயினனெருவைகட்கரசனுமற்றோர்
யாண்டையென்னிலையறிவுறுப்பார்களிப்பிறப்பில்
காண்டலோவரிதென்றென்றுவிம்முறுங்கலங்கும்
மீண்டுமீண்டுபுக்கெரிநுழைந்தாலெனமெலிவாள். (கங)

என்னைநாயகனிளவலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலளெனத்துறந்தானோ
முன்னையூழ்வினைமுடிந்ததோவென்றென்றுமுறையால்
பன்னவாய்புலர்ந்துணர்வுதேய்ந்தாருயிர்பதைப்பாள் (கச)

அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கும்
இருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள். (கரு)

வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
தின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தானோ
தன்குலப்பொறைதன்பொறையெனத்தணிந்தானோ
என்கொலெண்ணுவேனென்னுமங்கிராப்பகலில்லாள். (கசு)

பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்

---

12. கொண்டிறந்தமை என்றும் பாடம்.

13. எருவைகட்கரசன் - சடாயு.

16. தன்குலப்பொறை - தணிந்தானோ - உலகையாளுகிறது தன்குலப் பொறை ஆதலால் இப்போ தாள்வோரில்லாமையைப்பற்றித் தனது சுமையென் றுபோயினனோவென்பது கருத்து.

சொற்றவாண்டெலாமுறைந்தன்றியந்நகர்துன்ஞன்
உற்றதுண்டெனுப்படருழந்துரு தநோயுறுவாள். (கஎ)

முரனெனத்தகுமொய்ம்பினேர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரனெதிர்ந்ததுகண்டனளாமெனக்கவல்வாள். (கஅ)

வேறு.

தெம்மடங்கியசேணிலங்கேகயர்
தம்மடந்தையுன்றம்பியதாமெனு
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலேயுன்னிவெதும்புவாள். (சகூ)

மெய்த்திருப்பதமேவென்றபோதினும்
இத்திருத்துறந்தேகென்றபோதினும்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
ஒத்திருந்தமுகத்தினேயுன்னுவாள். (உ0)

தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணுன்
வாங்குகோலவடவரைவார்சிலே
ஏங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளேநினைந்துமெலிந்துளாள். (உக)

இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பதிஞலாயிரம்படை
கன்னன்மூன்றிற்களப்படக்கால்வளே
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள். (உஉ)

ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
ஏழைவேடனுக்கெம்பிநின்றம்பிநீ
தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன
வாழிநண்பினேயுன்னிமயங்குவாள். (உங)

மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களேக்கைகளினீக்கிவே
றுய்த்தபோதுதருப்பையிலொண்பதம்
வைத்தவேதிகைச்செய்திமனக்கொள்வாள். (உச)

---

21. ஏங்குமாத்திரத்து - தூக்கிக்குமளவில்.

24. தருப்பையில் என்பது அசம்ஹியப்படாமல் பரிசுத்தமுள்ளதை யெடுக்கிறதுபோல் எடுத்து அம்மிமேல்வைத்த குணத்தைமனக்கொள்வாளென்க.

உரங்கொடேமலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடி தம்பிவனைந்திலன்
திரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்கியேங்குவதெண்ணியிரங்குவாள். (௨௫)

பரித்தசெல்வமொழியப்படருநாள்
அருத்திவேதியர்க்கான்குலமீந்தவர்
கருத்தினைசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைந்தழுஞ்செய்கையாள். (௨௬)

மழுவின்வாளினன்மன்னரைமூவெழு
பொழுதினூறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினான்றவமொய்ம்பொடுமூரிவில்
தழுவுமேன்மைநினைந்துயிர்சாம்புவாள். (௨௭)

ஏகவாளியவ்விந்திரன்காதன்மேல்
போகவேவியதுகண்பொடித்தநாள்
காகமுற்றுமோர்கண்ணிலவாகிய
வேகமென்றினைத்தன்றலைமேற்கொள்வாள். (௨௮)

வெவ்விராதனைமேல்வருந்தீவினை
வவ்விமாற்றருஞ்சாபமுமாற்றிய
அவ்விராமனையுன்னித்தன்னுருயிர்
செவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள். (௨௯)

வேறு.

இருந்தனடிரிசடையென்னுமின்சொலில்
திருந்தினுளொழியமற்றிருந்ததீவினை
அருந்திறலரக்கியரல்லுநள்ளுறப்
பொருந்தலுந்துயினறைக்களிபொருந்தினர். (௩௦)

ஆயிடைத்திரிசடையென்னுமன்பினுள்
தாயினுமினியவடன்னைநோக்கினுள்
தூயைநீகேட்டியென்றுணைவியாமெனு
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினுள். (௩௧)

நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ

27. மூஎழுபொதின் - இருபத்தொரு வம்சத்தளவும்.
29. தீவினைஈண்டு - ஆகாமிய கர்மங்களைத்தும்.

பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன். (௩௨)

முனியொடுமிதிலையின்முதல்வன்முந்துநாள்
துனியறுபுருவமுந்தோளுநாட்டமும்
இனியனதுடித்தனவீண்டுமாண்டெனா
நனிதுடிக்கின்றனவாய்ந்துநல்குவாய். (௩௩)

மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியால்
அறந்தருசிந்தையென்னாவிநாயகன்
பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகான்புகுந்தநாள்வலந்துடித்ததே. (௩௪)

நஞ்சனையான்வனத்திழைக்குநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையால்
எஞ்சலவீண்டுதாமிடந்துடித்தலால்
அஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்றாள். (௩௫)

என்றலுந்திரிசடையியைந்தசோபனம்
நன்றிதுநன்றெனநயந்தசிந்தையாள்
உன்றுணைக்கணவனையுறுதலுண்மையால்
அன்றியுங்கேட்டியன்றறைதன்மேயினாள். (௩௬)

உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
இன்னிறத்தேனிசையினியநண்பினால்
மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால். (௩௭)

ஆயதுதேரினுன்னாவிநாயகன்
ஏயதூதுவந்தெதிர்தலுண்மையால்
தீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமறித்துங்கூறுவாள். (௩௮)

துயிலிலவாதலிற்கனவுதோன்றல
அயில்விழியொருகனவமைந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதின்றாடெனா
வெயிலினுவெய்யனவுரைத்தன்மேயினாள். (௩௯)

---

34. வலந்துடித்தல் பெண்களுக்கு கெடுதியையும் புருஷர்களுக்கு நன்மையும் பயக்குங்குறி.

36. அன்றியுமென்றது தனக்குத் தோற்றினகுறிகளை.

எண்ணெய்பொன்முடிதொறுமிழுகவீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மேல்
அண்ணலவ்விராவணனரத்தவாடையன்
நண்ணினன்றென்புலனவையில்கற்பினாய். (௪௰)

மக்களுஞ்சுற்றமுமற்றுளோர்களும்
புக்கனரப்புலம்போந்ததில்லையால்
சிக்கறநோக்கினென்றீயவின்னமும்
மிக்கனகேட்டெனவிளம்பன்மேயினாள். (௪௧)

ஆண்டகையிராவணன்வளர்க்குமவ்வனம்
ஈண்டனவிறந்தவாலினங்கொள்செஞ்சிகைத்
தூண்டருமணிவிளக்கழலுந்தொன்மனை
கீண்டதால்வானவேறெறியக்கீழைநாள். (௪௨)

பிடமதம்பிறந்தனபிறங்குபேரியும்
இடியெனமுழங்குமாவிரட்டலின்றியே
தடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வான்
வெடிபடவதிருமாலுதிருமீனெலாம். (௪௩)

விற்பகலின்றியேயிரவுவிண்டற
எற்பகவெரிந்துளதென்னத்தோன்றுமால்
மற்பகமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால். (௪௪)

திரியுமாலிலங்கையுமதிலுந்திக்கெலாம்
எரியுமாற்கந்தர்ப்பநகரமெங்கணும்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின
விரியுமால்விளக்கினைவிழுங்குமாலிருள். (௪௫)

தோரணமுறிந்தனதுணியச்சூழிமால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பாரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால். (௪௬)

விண்டொடர்மதியினைப்பிளந்துமீனெழும்
புண்டொடர்குருதியிற்பொழியும்போர்மழை
தண்டொடுதிகிரிவாடனுவென்றின்னன
மண்டமர்புரியுமாலாழிமாறுற. (௪௭)

---

43. தடி - மின்னல்.

47. மீன் எழும் எனில் கடலிலுள்ள மீன்கள் துள்ளுமென ஆம் மின்னெழும் எனப்பாடமாயின் மின்னல் விளங்குமென பொருள்கொள்க.

மங்கையர்மங்கலத்தாலிமற்றையோர்
அங்கையின்வாங்கினரெவருமன்றியே
கொங்கையின்வீழ்ந்தனகுறித்தவாற்றினல்
இங்கிதனற்புதமின்னுங்கேட்டியால். (சஅ)

மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும்பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுறுக்கொண்டேறின
இன்னலுண்டெனுமிதற்கேதுவீதெனு. (சகூ)

என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியால்
இன்றிவணிப்பொழுதியைந்ததோர்கனு
வன்றுணைக்கோளரியிரண்டுமாறிலாக்
குன்றிடையுழுவையங்குழுக்கொண்டீண்டியே. (ரு०)

வரம்பிலாமதகரியுறையுமவ்வனம்
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணம்படக்கொன்றமாறிலாக்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால். (ருக)

ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச்செய்யவள்
நாயகன்றிருமனைநின்றுநண்ணுதல்
மேயினள்வீடணன்கோயின்மென்சொலாய். (ரு௨)

பொன்மனைபுக்கவப்பொருவில்போதினில்
என்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லென
அன்னையேயதன்குறைகாணென்றுயிழை
இன்னமுந்துயில்கெனவிருகைகூப்பினள். (ருங)

இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனும்
அவ்விடையெய்தினனரிதினேக்குவான்
நொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினன். (ருச)

---

49. பிறங்கி-சுழன்று. 52. செய்யவள்-ராஜலட்சுமி.

52. மென்சொலாய்-மிதுருபாஷி.

54. இவ்விடை யென்பதற்கு பிராட்டியும், திரிசடையும் பேசிக்கொண்டிருக்கிற இத்தருணத்திலென்று கொள்க.

அவ்வயினரக்கியரறிவுற்றம்மவோர்
செவ்வையிறுயினமைச்செருத்தநீதெனு
எவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினர்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார். (௫௫)

வயிற்றிடைவாயினர்வளைந்தநெற்றியில்
குயிற்றியவிழியினர்கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடையாளையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத்தொட்டவாயினர். (௫௬)

ஒருபதுகையினரொற்றைச்சென்னியர்
இருபதுதலையினரிரண்டுகையினர்
வெருவருதோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர். (௫௭)

சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரம்
காலவேல்கற்பணங்கற்றகையினர்
ஆலமேயுருவுகொண்டனையமேனியர்
வாலமேதரித்தவன்வெருவும்வண்மையர். (௫௮)

கரிபரிவேங்கைமாக்கரடியாளிபேய்
அரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர். (௫௯)

எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர். (௬௦)

ஆயிடையுரையழிந்தழகன்றேவியும்
தீயனையவர்முகநோக்கித்தேம்பினுள்
நாயகன்றா தனும்விரைவினண்ணினுன்
ஓய்விலதுயர்மரப்பணையினும்பரான். (௬௧)

அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கினர்
இருக்குநர்பலரிதற்கேதுவென்னெனுப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினுன். (௬௨)

58. வால்அம் - சுத்தஜலம். வாலமேதரித்தவன் - பரமசிவன்.

விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
உருநிறத்தொருதனிக்கொண்டவூழியான்
இருநிறத்துற்றவெற்கிளையந்தகாந்தத்தை. (௬௩)

கடக்கருமரக்கியர்காவல்சுற்றுளாள்
மடக்கொடிச்சீதையாமாதரேகொலாம்
கடற்றுணைநெடியதன்கண்ணினீர்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள். (௬௪)

வீடினதன்றறன்யானும்வீகலேன்
தேடினென்கண்டனென்றேவியேயெனு
ஆடினன்பாடினனண்டுமீண்டும்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான். (௬௫)

எள்ளருமுருவினல்லிலக்கணங்களும்
வள்ளறன்னுரையொடுமாறுகொண்டில
கள்ளவாளரக்கனற்கமலக்கண்ணனார்
உள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா. (௬௬)

மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பிதால்
ஆவதேதையையமிலரவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே. (௬௭)

மாசுண்டமணியனுள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளாள்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
ஏசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ. (௬௮)

புனைகழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்பையோ
வனைகழலரசரின்வண்மைமீக்கிடும்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன். (௬௯)

தேவரும்பிழைத்திலர்தெய்வவேதியர்
எவரும்பிழைத்திலரறமுமீறின்றால்
யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றுமன்றே. (௭௦)

கேழிலாணிறை யிறைகண்ட தாமெனின்
ஆழியான் முனிவெனுமாழி மீக்கொள
ஊழியினிறு திவந்துறுமென் றுன்னினேன்
வாழியவ்வுலகினிவரம்பிறுளெலாம். (எக)

வெங்கனன் முழுகியும்புலன்கள் வீக்கியும்
நுங்குவவருந்துவ நீக்கிநோற்றவர்
எங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர்மனத் தவநவிலற்பாலதே. (எஉ)

பேணநோற்றது மனைப்பிறவிபெண்மைபோல்
நாணநோற்றுயர்ந்தது நங்கைதோன்றலால்
மாணநோற்றீண்டிவளிருந்தவாறெலாம்
காணநோற்றிலனவன்கமலக்கண்களால். (எங)

முனிபவராக்கியர் முறையினீங்கினுர்
இனியவடானலாதியாருமில்லையால்
தனிமையும்பெண்மையுந் தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம். (எச)

தருமமேகாத்ததே தாசமுக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததே தாகற்பின்காவலோ
அருமையேயருமையேயாரிதாற்றுவார்
ஒருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதோ. (எரு)

செல்வமோவதுவவர் தீமையோவிது
அல்லினும்பகலினுமமரராட்செய்வார்
ஒல்லுமோவொருவர்க்கிதுறுகண்யாதினி
வெல்லுமோ தீவினையறத்தைமெய்ம்மையால். (எசு)

என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவண்
நின்றனனவ்வழிநிகழ்ந்ததென்னெனின்
துன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினுன். (எஎ)

ஆக திருவிருத்தம் - ௬௦எ.

---

71. கேழ் இலாள் - ஒப்பில்லாதவள்.

# ௪-வது நிந்தனைப்படலம்.

சிகரவண்குடுமிநெடுவரையெவையுமொருவழிதிரண்டனசிவண
மகரிகைவயிரகுண்டலமலம்புந்திண்டிற்றோள்புடைவயங்கச்
சகரவேலையினீர்தழுவியகதிரிற்றலைதொறுந்தலைதொறுந்தயங்கும்
வகையபன்மகுடமிளவெயிலெறிப்பக்கங்குலும்பகல்படவந்தான்.()

உருப்பசியுடைவாளெடுத்தனடொடர மேனகைவெள்ளடையுதவச், செருப்பினைத்தாங்கித் திலோத்தமைசெல்ல வரம்பையர்குழாம்புடைசுற்றக், கருப்புரஞ்சாந்துங் கலவையுமலருங் கலந்துமிழ் பரிமளகந்தம், மருப்புடைப்பொருப்போர் மாதிரக்களிற்றின் வரிக்கைவாண்முகக்கிடைமடுப்ப. (௨)

நானநெய்விளக்கநாலிருகோடிநங்கையரங்கையிலெடுப்ப
மேனிவந்தெழுந்தமணியுடையணியின்விரிகதிருளெலாம்விழுங்கக்
கான்முதற்றொடர்ந்தநூபுரஞ்சிலம்பக்கிண்கிணிகலையொடுங்கலிப்ப
பானிறத்தன்னக்குழாம்படர்ந்தென்னப்பற்பலமழலையும்பகர. [ப்

அந்தரம்புகுந்ததுண்டென முனிவுற்றருந்து யினீங்கினனுண்டைச், சந்திரவதனத்தருந்ததியிருந்ததண்ணறுஞ்சோலையின்றனையோ, மந்திரம்யாதோயாரொடும்போமோவென்றுமாமனமறுக்குறலால், இந்திரன்முதலோரிமைப் பிலாநாட்ட முகிழ்த்தனருயிர்ப்பவிந்திருப்ப. (௪)

நீணிறக்குன்றினெடிதினிற்றாழ்ந்தநீத்தவெள்ளருவியினிமிர்ந்த
பானிறப்பட்டின்மாலையுத்தரியம்பண்புறப்பசும்பொனூரத்தின்
மாணிறப்புடவியுடையுறப்பரந்தவளர்கதிரிளவெயில்பொருவச்
சூணிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்குமின்னெனமார்பினூறுளங்க.

தோடொறுந்தொடர்ந்தமகரிகைவயிரக்கிம்புரிவலயமாச்சுடர்கள், நாடொறுஞ்சுடருங்கலி கெழுவிசும்பினுளொடு கோளினைநக்கத் தாடொறுந்தொடர்ந்தகழங்குபொற்கழலின்றகையொளிநெடுநிலந்தடவக், கேடொறுந்தொடர்ந்தமுறுவல்வெண்ணிலவின்முகமலரிரவினுங்கிளர. (௬)

தன்னிறத்தோடுமாறுதந்திமைக்குநீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்தூசுகருவரைமருங்கிற்றழுவியபுதுவெயில்பொருவ

2. ஊர்வசி - ஊரு - தொடை. தொடையிற்பிறந்தவள்.

மின்னிறக்கதிரிற்சுற்றியபசும்பொன்விரற்றலையவிரொளிக்காசின்
கன்னிறக்கற்றைறநெடுநிழல்பூத்தகற்பகமுழுவனங்கவின. (எ)

சன்னவீரத்தகோவை வெண்டாளமுழியினிறுதியிற்றணித்த பொன்னெடுவரையிற்றேற்றியகோளுநாளுமொத்திடையிடைபொலிய, மின்னொளிமௌலியுதயமால்வரையின்மீப்படர்வெங்கதிர்ச்செல்வர், பன்னிருவரினுமிருவரைத்தவிர்வுற்றுதித்ததோர்படிபொளிபரப்ப. (அ)

பயிலெயிற்றிரட்டைப்பணைமருப் பொடியப்படியினிற்பரிபவஞ்சுமந்த, மயிலடித்தொழுக்கினனையமாமதத்தமாதிரக்காவன்மால்யானை, கயிலையிற்றிரண்டமுரண்டொடர்தடந் தோட்கனகனதுயர்வரங்கடந்த, அயிலெயிற்றரியின்சுவடுதன்கரத்தாலனந்தமாக்கரியினின்றஞ்ச. (கூ)

அங்கயற்கருங்கணியக்கியர்தியக்கிலரம்பையர்விஞ்சையர்க்கமைந்த
மங்கையர்நாகமடந்தையர்சித்தர்நாரியரரக்கியர்முதலாக் [குதலை
குங்குமக்கொங்கைக்குவிமுலைக் கனிவாய்க்கோகிலந்துயர்ந்த மென்
மங்கையர்ட்டமால்வரைதழீஇயமஞ்ஞையங்குழுவெனமயங்க. (கய)

தொளையுறுபுழைவேய்த்தூக்கிசைக்கானந்துயலுமுவொருநிலைபடர
இளையவர்மிடறுமிந்நிலையிசைப்பக்கிந்நரர்முறைநிறுத்தெடுத்த
கிளையுறுபாடல்சில்லரிப்பாண்டிறழுவியமுழவொடுகெழுமி
அளையுறுமரவுமமுதுவாயுகுப்பவண்டமும்வையமுமளப்ப. (கக)

அன்னபூஞ்சதுக்கஞ் சாமரையுக்க மாதியாம்வரிசையிற்கமைந்த, உன்னரும்பொன்னின்மணியினிற்புனைந்தவிழைக்குலமுறைக்குலமனைய, மின்னிடைச்செவ்வாய்க்குவிமுலைப்பணைத்தோள்வீங்குதேரல்குலார்தாங்கி, நன்னிறக்காரின்வரவுகண்டுவக்குநாடகமயிலெனநடப்ப. (கஉ)

தந்திரிநெரியிற்முக்குறுகருவிதூக்கினரெழுவிதச்சதியின் ன்]
முந்துறுகுணிலோடியைவுறுகுறட்டிற்சில்லரிப்பாண்டிலின்முறையி
மந்திரகீதத்திசைப்பதந்தொடரவகையுறுகட்டளைவழாமல்
அந்தரவானத்தரம்பையர்கரும்பிற்பாடலாரருகுவந்தகவ. (கங)

8. சன்னவீரம் - கழுத்திலணிகிற ஒருவகைமாலை.
9. பரிபவம் - துன்பம். 10. கொங்கு - வாசனை.
11. சில்லரி - நாகசுரம். பாண்டில் - பிரமதாளம்.
12. உக்கம் - விசிறி.
13. சதி - தாளவொற்று. சுருசி,

அந்திவேளநங்கனழல்படத்துரந்தவயின்முகப்பகழிவாயறுத்த
வெந்துறுபுண்ணின்வேனுழைந்தாங்குவெண்மதிப்பசுங்கதிர்விரவ
மந்தமாருதம்போய்மலர்தொறும்வாரிவயங்குநீர்மம்மரின்வருதேன்
சிந்துநுண்டுளியின்சீகரத்திவலையுருக்கியசெம்பெனத்தெறிப்ப. ()

இழைபுரைமருங்குலிறுமிறுமெனவுமிறுகலாவனமுலையிரட்டை
உழைபுகுசெப்பினெளிதரமறைத்தவுத்தரீயத்தினரொல்கிக் [ர்
குழைபுகுகமலங்கோட்டினர்நோக்குங்குறுநகைக்குமுதவாய்மகளி
மழைபுரைதடங்கட்செங்கடையீட்டமார்பினுந்தோளினுமலைய. ()

மாலையுஞ்சாந்தும் கலவையும்பூணும் வயங்குநுண்டூசொடுகாசு
ம், சோலையின்றொழுதிக்கற்பகத்தருவுநிதிகளுங்கொண்டுபின்றொ
டரப், பாலின்வெண்பரவைத்திரைகருங்கிரிமேற்பரந்தெனச்சாம
ரைபதைப்ப, வேலைநின்றுயருமுயலில்வெண்மதியின்வெண்குடை
மீதுறவிளங்க. (கசு)

ஆர்தருமகழியருவரையிலங்கையடிபெயர்ந்திடுதொறுமழுந்தி,
நேர்தரும்பரவைப் பிறழ்திரைதவழ்ந்து நெடுந்தடந்திசைதொறு
நிமிரச், சார்தருங்கடுவினையிறுடைப்பகுவாயநந்தனுந்தலைதடுமா
ற, மூரிநீராடையிருநிலமடந்தைதமுதுகுளுக்குற்றனண்முரல.(கஎ)

கேடகத்தோடுமழுவெழுச்சூலமங்குசங்கற்பணங்கிடுகோ
டாடகச்சுடர்வாளயில்சிலைகுலிசமுதலியவாயுதமனைத்தும்[றுக்கும்
தாடகைக்கிரட்டியெறும்வலிக்கமைந்த தகைமையர்தடவரைபொ
சூடகத்தடக்கைச்சுடுசினத்தடுபோரரக்கியர்தலைதொறுஞ்சுமப்ப.

விரிதளிர்முகைபூக்கொம்படைமுதல்வேரிவையெலாமணிபொ
ருல்விரிந்த, தருவுயர்சோலைதிசைதொறுங்கரியத்தழலுமிழுயிர்ப்
புமுன்றவழத், திருமகளிருந்ததிசையறிந்திருந்துதிகைப்புறுசிந்
தையன்கெடுத்த, தொருமணிநேடும்பற்பஃறலையரவினுழைதொறு
முழைதொறுமுலாவ. (கசு)

இனையதோர்தன்மையெறும்வலியரக்கரேந்தல்வந்தெய்துகின்
றனை, அனையதோர்தன்மையஞ்சனைச்சிறுவன்கண்டனனமைவுற
நோக்கி, வினையமுஞ்செயலுமேல்விளைபொருளுமிவ்வழிவிளங்கு
மென்றெண்ணி, வனைகழலிராமன்பெரும்பெயரோதியிருந்தனன்வ
ந்தயன்மறைந்தே. (உ0)

14. அநங்கன் - உருவமில்லாதவன், மன்மதன்.
15. உழை - ஏழனுருபு கச்சினிடத்தே என்க.

ஆயிடையரக்கனரம்பையர்குழுவுமல்லவும்வேறபலகல [வெருவிப்
பேயினன்பெண்ணின் விளக்கெனுந்தகையா ளிருந்துழியாண்டவள்
போயினவுயிரளாமெனநடுங்கிப்பொறிவரியெறும்வலிப்புகைக்கண்
காய்சினவுழுவை தின்னியவந்தகலேயிளம்பிணையெனக்கரைந்தாள்.()

வேறு.

கூசியாவிகுலையுறுவாளையும்
ஆசையாலுயிராசழிவாளையும்
காசில்கண்ணிணைசான்றெனக்கண்டனன்
ஊசலாடியுளையுமுளத்தினான். (உஉ)

வாழிசானகிவாழியிராகவன்
வாழிநான்மறைவாழியரந்தணர்
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினான்
ஊழிதோறும்புதிதுறுங்கீர்த்தியான். (உ௩)

அவ்விடத்தருகெய்தியரக்கன்றான்
எவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான். (உச)

ஈசற்காயினுமீடழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினான்
ஆசைப்பாடுமெங்நாணுமடர்த்திடக்
கூசிக்கூசியிணையனகூறினன். (உரு)

இன்றிறந்தனநாளையிறந்தன
என்றிறந்தருந்தன்மையிதாலெனைக்
கொன்றிறந்தபின் கூடுதியோகுழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய். (உசா)

உலகமொன்றொடிரண்டொருங்கோம்புமென்
அலகில்செல்வத்தரசியலாணையில்
திலகமேயுன்றிறத்தநங்கன்றரு
கலகமல்லலெதளிமையுங்காண்டியோ. (உஎ)

பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுகழ்
ஏந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்

25. வாசிப்பாடு - இயல்பானகுணம்.

காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானுடர்வாழ்வன்றோ. (உ அ)

நோற்கின்றார்களுநுண்பொருணுண்ணிதின்
பார்க்கின்றாரும்பெறும்பயன்பார்த்தியேல்
வார்க்குன்றாமுலையென்சொல்மௌலியால்
ஏற்கின்றாரொடேனுறையின்பமால். (உ கூ)

பொருளும்யாழின்விளரியும்பூவையும்
மருளநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்ததுன்சிந்தையின்
அருளுமின்மருங்கும்மரிதாக்கியோ. (௩0)

ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிதுறுமாலைய
வேண்டுநாள்வெறிதேவிளிந்தாலினி
யாண்டுவாழ்வதிடருழன்றாழ்தியோ. (௩க)

இழவெனக்குயிர்க்கெய்தினுமெய்துக
குழைமுகத்துநின்சிந்தனைகோடினால்
பழகநிற்புறும்பண்பிவைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரே. (௩உ)

பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாய்க்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்சனகரின்மாண்டவா. (௩௩)

வீட்டுங்காலத்தலறியமெய்க்குரல்
கேட்டுங்காண்டங்கிருத்திகொல்கிள்ளைநீ
நாட்டுங்காநெடுநல்லறத்தின்பயன்
ஊட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ. (௩௪)

தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருத்திநீ
புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழிகோடியோ. (௩௫)

---

30. பொருள்-பிள்ளை. 33. பெண்ணுக்குள்ள நற்குணங்களெல்லா முன்னிடத்திலே யிருந்தும் தாக்ஷண்ணியமும் ஈகையுமில்லை யென்றது தனக்கு உயிர்ப்பலி தரவேணுமென்று இரந்தவாறும்.

34. மாரீசன்-இராமன் குரலால் ஆலட்சுமணா யென்றது மெய்க்குரல்.
35. கோடி - கொள்தி.

தேவர்தேவியர்சேவடிகைதொழும்
தாவின்மூவுலகின்றனிநாயகம்
மேவுகின்றது நுன்கண்விலக்கினை
யாவரேமையர்நின்னினிலங்கிழாய். (௩௬)

குடிமைமூன்றுலகுஞ்செயுங்கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலெனு
முடியின்மீதுமுகிழ்த்துயர்கையினன்
படியின்மேல்விழுந்தான்பழிபார்க்கலான். (௩௭)

வேறு.

காய்ந்தனசலாகையன்னவுரைவந்துகதுவாமுன்னம்
தீய்ந்தனசெவிகளுள்ளந்திரிந்ததுசிவந்தசோரி
பாய்ந்தனகண்களொன்றும்பரிந்திலளுயிர்க்கும்பெண்மைக்
கேய்ந்தனவல்லாவெய்யமாற்றங்களினையசொன்னாள். (௩௮)

மல்லடுதிரடோள்வஞ்சன்மனம்பிறிதாகும்வண்ணம்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சங்கற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கேய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டிதுரும்பெனக்கனன்றுசொன்னாள். (௩௯)

மேருவைவுருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
நீரெழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ. (௪௦)

அஞ்சினையாதலானன்றாரியனற்றநோக்கி
வஞ்சனைமானொன்றேவிமாயையான்மறைத்துவந்தாய்
உய்ஞ்சனைபோதியாயின்விடுதியுன்குலத்துக்கெல்லாம்
நஞ்சினையெதிர்ந்தபோதுநோக்குமேநினதுநாட்டம். (௪௧)

பத்துளதலையுந்தோளும்பலபலபகழிதூவி
வித்தகவில்லினாற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவிலேற்கும்
சத்தியைபோலுமேனுள்சடாயுவாற்றரையின்வீழ்ந்தாய். (௪௨)

தோற்றனைப்பறவைக்கன்றுதுள்ளுநீர்வெள்ளஞ்சென்னி
ஏற்றவன்வாளால்வென்றாயன்றெனினிறத்தியன்றே

---

40. ஆரியன் - ஸ்ரீராமன்.

38. பரிந்திலள் என்றது - அவள் பேசுகிறது பெண்மகள்போலன்று ஆண்கள்போல் பேசுகிறாளென்க. தன்னுயிர்க்குப் பரிந்திலளெனவுமாம்.

நோற்றநோன்புடையவாழ்நாள் வரமிவைநுனித்தவெல்லாம்
கூற்றினுக்கன்றேவீரன் சரத்திற்குங்குறித்ததுண்டோ (௪௩)

பெற்றுடைவரனுநாளும்பிறந்துடையுரனும்பின்னும்
மற்றுடையெவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொழுடையிராமன்கோத்துவிடுதனும்விலக்குண்டெல்லாம்
இற்றிடைந்திறுதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ. ()

குன்றுநீயெடுத்தநாடன்சேவடிக்கொழுந்தாலுன்னை
வென்றவன்புரங்கள்வேவத்தனிச்சரந்துரந்தமேரு
என்றுணைக்கணவனுற்றற்குரனிலா திற்றுவீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்தவோசைகேட்டிலைபோலுமம்மா. (௪௫)

### வேறு.

மலையெடுத்தெண்டிசைகாக்குமாக்களை
நிலைகெடுத்தேதனெனுமாற்றநேருநீ
சிலையெடுத்திளையவனிற்கச்சேர்ந்திலை
தலையெடுத்தின்னமும்மகளிர்த்தாழ்தியோ. (௪௬)

ஏழைநின்றெளித்துறைபின்னதாமென
வாழியெங்கோமகனறியவந்தநாள்
ஆழியுமிலங்கையுமழியத்தாழுமோ
ஊழியுந்தீயுமுன்னியிரொடோயுமே. (௪௭)

வெஞ்சினவரக்கரைவிளித்துவீயுமோ
வஞ்சனைநீசெயவள்ளல்சீற்றத்தால்
எஞ்சலிலுலகெலாமெஞ்சுமெஞ்சுமென்
றஞ்சகின்றேனிதற்கறனுஞ்சான்றரோ. (௪௮)

அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணுய்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மானுன்முகன்சிவனென்றேகொலோ
எங்கணுயகனையுநினைந்ததேதைழநீ. (௪௯)

மானுயரிவரெனமனக்கொண்டாயெனின்
கானுயர்வரைநிகர்கார்த்தவீரியன்
தானொருமனிதனாற்றளர்ந்துளானெனின்
தேனுயர்தெரியலான்றன்மைதேர்தியால். (௫௰)

---

47. ஏழை, ஈண்டு, அறிவில்லாதவன். 50. கானுயர் - கார்த்தவீரியன் - விருக்ஷங்கள் கைகளும் மலைகார்த்தவீரியனுமாகக் கொள்க,

இருவரென்றிகழ்ந்தனையென்னின்யாண்டெல்லை
ஒருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையென்மெய்ம்மைதேர்தியால்
பொருவருந்திருவிழந்தநாயம்பொன்றுவாய். (ருக)

பொற்கணன்றம்பியென்றினையபோர்த்தொழில்
விற்கொணும்பொருவுதோளவுணர்வேறுளார்
நற்கணார்நல்லறந்துறந்தநாளினும்
இற்கணைவிறந்திலரிறந்துநீங்கினர். (ருஉ)

வேறு.

பூவிலோனுதியாகப்புலன்களோபோநெறியிற்போகாத்
தேவரோவவுணர்தாமோநிலைநின்றுவினையிற்றீர்ந்தார்
ஏவலெவ்வுலகஞ்செய்யச்செல்வதிற்கிசைந்ததென்றால்
பாவமோமுன்னீசெய்ததருமமோதெரியப்பாராய் (ருங)

இப்பெருஞ்செல்வநின்கணீந்தபேரீசன்யாண்டும்
அப்பெருஞ்செல்வந்துய்ப்பானின்றுமாதவத்தினன்றே
ஒப்பருந்திருவுநீங்கியுறவொடுமுலக்கவுன்னித்
தப்புதியறத்தையேழாய்தருமத்தைக்காமியாதே (ருச)

மறந்திறம்பாதேதாலாவலியினையெனினுமாண்டார்
அறந்திறம்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே
பிறந்திருந்துழலும்பாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார்
துறந்தரும்பகைகண்மூன்றுந்துடைத்தவர்பிறர்யார்சொல்லாய். ()

தென்றமிழுரைத்தோன்முன்னுத்தீதுதீர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றேநோற்கிலம்புகுந்தபோதே
கொன்றருணின்னுலன்னார்குறைவதுசரதங்கோவே
என்றனர்யானேகேட்டேனீயிதற்கியைவசெய்தாய் (ருசு)

உன்னையுங்கேட்டுமற்றுன்னூற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப்பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளும்
சின்னபின்னங்கள்செய்தவதனைநீசிந்தியாயே. (ருஎ)

---

53. பூ இலோன் - பூவைவீடாகயுடைய பிரமன்.

54. இப்பெருஞ் செல்வநின்கணீந்ததோரீசன் யாண்டுமப்பெருஞ் செல்வந்துய்ப்பானினது மாதவத்தினன்றே எனப்பாடபேதமும் உண்டு.

56- சரதம் - சத்தியம்.

ஆயிரந்தடக்கையானின் னைநான்குகரமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரத்தோள்கடுணித்தவன்றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேகுநெறியறிந்திலாதநீசா. (ருஅ)

கடிக்கும்வல்லரவுங்கேட்குமந்திரங்களிக்கின்றேயை
அடிக்குமீதடாதென்றுன்றவேதுவோடறிவுகாட்டி
இடிக்குநரில்லையுள்ளாரெண்ணியதெண்ணியுன்னை
முடிக்குநரென்றபோதுமுடிவன்றிமுடிவதுண்டோ. (ருகூ)

வேறு.

என்றறத்துரைகேட்டலுமிருபதுநயனம்
மின்றிறப்பனவொத்தனவெயில்விடுபகுவாய்
குன்றிறத்தெழித்துரப்பினன்குறிப்பதென்காமன்
தன்றிறத்தையுங்கடந்ததுசீற்றத்தின்றகைமை. (கூ0)

வளர்ந்தநாணினன்மாதிரமனைத்தையுமறைவித்
தளர்ந்ததோளினனனல்சொரிகண்ணினனிவனைப்
பிளந்துதின்பெனென்றுடன்றனன்பெயர்ந்தனன்பெயரான்
கிளர்ந்தசீற்றமுங்காதலுமெதிரெதிர்கிடைப்ப. (கூக)

அன்னகாலையினநுமனுமருந்ததிக்கற்பின்
என்னையாளுடையநாயகன்றேவியையென்முன்
சொன்னநீசன்கைதொடுவதன்முன்றுகைத்துழக்கிப்
பின்னைநின்றதுசெய்குவெனென்பதுபிடித்தான். (கூஉ)

தனியினின்றனன்றலைபத்துங்கடிதுகத்தாக்கிப்
பணியின்வேலையிலிலங்கையைக்கீழுறப்பாய்ச்சிப்
புனிதமாதவத்தணங்கினைச்சுமந்தனன்போவென்
இனிதினென்பதுநினைந்தனன்கரம்பிசைந்திருந்தான். (கூ௩)

ஆண்டவாளரக்கன்கனன்றண்டத்தையழிப்பான்
மூண்டகாலவெந்தீயெனமுற்றியசீற்றம்
நீண்டகாதனீர்நீத்தத்தின்வீவுறுநிலையின்
மீண்டுநின்றெருதன்மையாலிவையிவைவிளம்பும். (கூச)

வேறு.

கொல்வெனென்றுடன்றேனுன்னைக்கொல்கிலன்குறித்துச்சொன்
சொல்லுளவவற்றுக்கெல்லாங்காரணந்தெரியச்சொல்லின் [ன

60. தெழிந்து - அதட்டி. 63. உக - உதிர.

கண்டலமறிவொடுகடந்தகாட்சியன்
விண்டலமிருபுடைவிளங்குமெய்ம்மையக்
குண்டலமிரண்டுமக்கோளின்மாச்சுடர்
மண்டலமிரண்டொடுமாறுகொண்டவே. (கoஉ)

ஏணிலவொருகுரங்கீதென்றெண்ணலா
ஆணியையநுமனையமையநோக்குவாள்
சேணுயர்பெருமையோர்திறத்ததன்றெனு
நாணுறுமுலகெலாமளந்தநாயகன். (கoங)

எண்டிசைமருங்கினுமுலகம்யாவினும்
தண்டலிலுயிரெலாந்தன்னைநோக்கின
அண்டமென்றதினுறையமரர்யாரையும்
கண்டனன்ருனுந்தன்கமலக்கண்களால். (கoச)

எழுந்துயர்நெடுந்தகையிரண்டுபாதமும்
அழுந்துறவழுத்தலினிலங்கையாழ்கடல்
விழுந்ததுநிலமிசைவிரிந்தவெண்டிரை
தழைந்தனபுரண்டனமீனந்தாமெலாம். (கoரு)

வஞ்சியம்மருங்குலம்மறுவில்கற்பினள்
கஞ்சமும்புரைவனகழலுங்கண்டிலாள்
துஞ்சினரரக்கரென்றுவக்குஞ்சூழ்ச்சியாள்
அஞ்சினெனிவ்வுருவடங்குவாயென்ருள். (கoசு)

முழுவதுமிவ்வுருக்காணமுற்றிய
குழுவிலதுலகினிக்குறுகுவாயென்ருள்
எழுவினுமெழிலிலங்கிராமன்ருேள்களைத்
தழுவினளாமெனத்தளிர்க்குந்தன்மையாள். (கoஎ)

ஆண்டகையநுமனுமருளதாமெனு
மீண்டனன்விசும்பெனும்பதத்தைமீச்செல்வான்
காண்டலுக்குரியதோருருவங்காட்டினன்
தூண்டருவிளக்கனையினையசொல்லினள். (கoஅ)

வேறு.

இடந்தாயுலகைமலையோடுமெடுத்தாய்விசும்பையிவைசுமக்கும்
படந்தாழரவையொருகரத்தாற்பறித்தாயெனினும்பயனின்ருல்

102. சுடர் மண்டலம் - சூரிய மண்டலம், சந்திர மண்டலம்.

நடந்தாயிடையேயென்றாலுநானுநினக்குநளிர்கடலைக்
கடந்தாயென்றாலென்னுருங்காற்றாமன்னகடுமையாய். (கoசு)

ஆழிநெடுங்கையாண்டகைதன்னருளும்புகழுமழிவின்றி
ஊழிபலவுநிலைநிறுத்தற்கொருவனீயேயுளையானுய்
பாழிநெடுந்தோள்வீரநின்பெருமைக்கேற்பப்பகையிலங்கை
ஏழுகடற்கும்ப்புறத்ததாகாதிருந்ததிழிபன்றோ. (கக0)

அறிவுமீதேயுருவீதேயாற்றலீதேயரும்புலத்தின்
செறிவுமீதேசெயலீதேதேற்றமீதேதேற்றத்தின்
நெறியுமீதேநினைவீதேநீதியீதேநினக்கென்றால்
வெறியரன்றோகுணங்களான்விரிஞ்சன்முதலாமேலானோர். (ககக)

மின்னேயெயிற்றுவல்லரக்கர்வீக்கநோக்கிவீரற்குப்
பின்னேபிறந்தானல்லதோர்துணையிலாதபிழைநோக்கி
உன்னுநின்றேயுடைகின்றேனெழிந்தேனையமுயிருயிர்த்தேன்
என்னேநிருதரென்னுவரிவனேயெங்கோன்றுணையென்றால். (கக௨)

மாண்டேனெனினும்பழுதன்றேயின்றேமாயச்சிறைநின்றும்
மீண்டேனென்னையொறுத்தாரைக்குலங்களோடும்வேரறுத்தேன்
பூண்டேனெங்கோன்பொலங்கழலும்புகழேயன்றிப்புன்பழியும்
தீண்டேனென்றுமனமகிழ்ந்தாடிருவின்முகத்துத்திருவன்னாள். ()

அண்ணற்பெரியோனடிவணங்கியறியவுரைப்பானருந்ததியே
வண்ணக்கடலினிடைக்கிடந்தமணலிற்பலரால்வானரத்தின்
எண்ணற்கரியபடைத்தலைவரிராமற்கடியார்யானவர்தம்
பண்ணைக்கொருவனெனப்போந்தேனேவக்கடவபணிசெய்வேன். ()

வெள்ளமேழுபத்துளதால்வீரன்சேனையிவ்வேலைப்
பள்ளமொருகைக்நீரள்ளிக்குடிக்கச்சாலும்பான்மையதோ
கள்ளவரக்கர்கடியிலங்கைகாணுதொழிந்ததாலன்றோ
உள்ளதுணையுமுளதாவதறிந்தபின்னுமுளதாமோ. (ககரு)

வாலியிளவலவன்மைந்தன்மயிந்தன்றுமிந்தன்வயக்குமுதன்
நீலனிடபன்குமுதாக்கன்பனசன்சரபனெடுஞ்சாம்பன்
காலனனையதுன்மருடன்காம்பன்கவயன்கவயாக்கன்
ஞாலமறியுநற்சங்கன்வினதன்றுயிந்தனளனென்பான். (ககசு)

---

110. பாழி - விசாலமான. 114. அண்ணற்பெரியோன் - உருவாலும் அறிவாலும்பெருமையுள்ள அனுமார்.

தம்பன்றாமத்தனிப்பெயரோன்றதியின்வதனஞ்சதவலியென்
றிம்பருலகோடெவ்வுலகுமெடுக்குமிடுக்கிராமன்கை
அம்பினுதவுபடைத்தலைவரவரைநோக்கினிவ்வரக்கர்
வெம்பின்முலையாயுறையிடவும்போதார்கணக்குவரம்புண்டோ. (௧௧௰)

ஆக திருவிருத்தம்-௬௦௬.

## ௬ - வது. சூடாமணிப்படலம்.

வேறு.

உண்டுதுணையென்னவெளிதோவுலகினம்மா
புண்டரிகைபோலுமிவளின்னல்புரிகின்றாள்
அண்டமுதனாயகனதாவியனையாளைக்
கொண்டகல்வதேகருமமென்றுணர்வுகொண்டான். (௧)

கேட்டியடியேனுரைமுனிந்தருளல்கேளார்
வீட்டியிடுமேலவனைவேறல்வினையன்றால்
ஈட்டியினியென்பலவிராமனெதிர்நின்னைக்
காட்டியடிதாழ்வெனிதுகாண்டியிதுகாலம். (௨)

பொன்றிணிபொலங்கொடியென்மென்மயிர்பொருந்தித்
துன்றியபுயத்தினிதிருக்கதுயர்விட்டாய்
இன்றுயில்விளக்கவொரிமைப்பினிறைவைகும்
குன்றிடையுனைக்கொடுகுதிப்பேனிடைகொள்ளேன். (௩)

அறிந்திடையரக்கர்தொடர்வார்களுளராமேல்
முறிந்துதிரநூறியெதிரென்சினமுடிப்பேன்
நெறிந்தகுழனின்னிலைமைகண்டுநெடியோன்பால்
வெறுங்கைபெயரேனொருவராலும்விளியாதேன். (௪)

இலங்கையொடுமேகுதிகொலெண்ணினுமிடந்தென்
வலங்கொளொருகைத்தலையில்வைத்தெதிர்தடுப்பான்
விளங்கினரைநூறிவரிவெஞ்சிலையினோர்தம்
பொலங்கொள்கழறாழ்குவெனிதன்னைபொருளன்றால். (௫)

அருந்ததியுரைத்தியழகற்கருகுசென்றுன்
மருந்தனையதேவிநெடுவஞ்சர்சிறைவைப்பில்
பெருந்துயரினோடுமொருவீடுபெறலில்லா
திருந்தனளெனப்பகரினென்னடிமையென்னும். (௬)

3. இடைகொள்ளேன் - நடுவே தங்கேன். 6. மருந்து - தேவாமிர்தம்.

புண்டொடர்வகற்றியபுயத்திளுெடுபுக்கேன்
விண்டவர்வலத்தையும்விரித்துரைசெய்கேளுே
கொண்டுவருகிற்றிலெனுயிர்க்குறுதிகொண்டேன்
கண்டுவருகிற்றிலெனெனக்கழறுகேளுே. (எ)

இருக்குமகில்சூழ்கடியிலங்கையையிமைப்பின்
உருக்கியெரியாவிரலரக்கரையுமொன்ரு
முருக்கிநிருதக்குலமுடித்துவினைமுற்றிப்
பொருக்கவகல்கென்னினுமதின்றுபுரிகின்றேன். (அ)

இந்துநுதனின்ளுெடிவணெய்தியிகல்வீரன்
சிந்தையுறுவெந்துயர்தவிர்ந்துதெளிவோடும்
அந்தமிலரக்கர்குலமற்றவியநூறி
நந்தலில்புவிக்கணிடர்பிற்களைதனன்ருல். (கூ)

வேறினிவிளம்பவுளதன்றுவிதியாலிப்
பேறுபெறவென்கணருடந்தருளுபின்போய்
ஆறுதுயரஞ்சொலிளவஞ்சியடியன்ருள்
ஏறுகடிதென்றுதொழுதின்னடிபணிந்தான். (கo)

வேறு.

ஏயநன்மொழியெய்தவிளம்பிய
தாயின்முன்னியகன்றனையான்றனை
ஆயதன்மையரியதன்ருமெனத்
தூயமென்சொலினையனசொல்லினுள். (கக)

அறியதன்றுநின்ளுற்றலுக்கேற்றதே
தெரியவெண்ணினைசெய்வதுஞ்செய்தியே
உரியதன்றெனவோர்கின்றதுண்டதென்
பெரியபேதைமைச்சின்மதிப்பெண்மையால். (கஉ)

வேலையின்னிடையேவந்துவெய்யவர்
கோலிவெஞ்சரநின்ளுெடுங்கோத்தபோ
தாலமன்னவர்க்கல்லையெற்கல்லையால்
சாலவுந்தடுமாறுந்தனிமையோய். (கந)

அன்றியும்பிறிதுள்ளதொன்ருரியன்
வென்றிவெஞ்சிலைமாசுணும்வேறினி
நன்றியென்பதம்வஞ்சித்தநாய்களின்
நின்றவஞ்சனைநீயுநினைத்தியோ. (கச)

9. இந்து - ஈண்டு அஷ்டமிசந்திரன்.

கொண்டபோரினுங்கொற்றவன்விற்றொழில்
அண்டரேவருநோக்கவென்னுக்கையைக்
கண்டபோரரக்கன்விழிகாகங்கள்
உண்டபோதன்றியானுளெனுவெனே. (கரு)

வெற்றிநாணுடைவில்லியர்விற்றொழில்
முற்றநாணிலரக்கியர்மூக்கொடும்
அற்றநாணினராயினபோதன்றிப்
பெற்றநாணமும்பெற்றியதாகுமோ. (கசு)

பொற்பிறங்கலிலங்கைபொருந்தலர்
ஏற்புமால்வரையாகிலதேயெனின்
இற்பிறப்புமொழுக்குமிழுக்கமில்
கற்பும்யான்பிறர்க்கெங்ஙனங்காட்டுகேன். (கஎ)

அல்லன்மாக்களிலங்கையதாகுமோ
எல்லைநீத்தவுலகங்கள்யாவுமென்
சொல்லினுற்சுடுவேனதுதூயவன்
வில்லினுற்றற்குமாசென்றுவீசினேன். (கஅ)

வேறுமுண்டுரைகேளதுமெய்ம்மையோய்
ஏறுசேவகன்மேனியல்லாலிடை
ஆறுமைம்பொறிநின்னையுமாணெனக்
கூறுமிவ்வுருத்தீண்டுதல்கூடுமோ. (ககூ)

தீண்டுவானெனினித்தனைச்சேண்பகல்
ஈண்டுமோவுயிர்மெய்யினிமைப்பின்முன்
மாண்டுதீர்வனென்றேநிலம்வன்மையால்
கீண்டுகொண்டெழுந்தேகினன்கீழ்மையான். (உ0)

மேவுசிந்தையின்மாதரைமெய்தொடின்
தேவுவன்றலைசிந்துகதீகெனப்
பூவின்வந்தபுராதனனேபுகல்
சாவமுண்டெலதாருயிர்தந்ததால். (உக)

அன்னசாவமுளதெனவாண்மையான்
மின்னுமௌலியன்வீடணன்மெய்ம்மையன்
கன்னிபென்வயின்வைத்தகருணையாள்
சொன்னதுண்டுதுனுக்கமகற்றுவாள். (உஉ)

---

17. கற்பும் - கலங்காநிலைமையும்.

18. நீற்ற - என்றும்பாடம். 22. என்வயின் - என்னிடத்தே.

ஆயதுண்மையினானுமதன்றெனின்
மாய்வென்மன்றவறம்வழுவாதென்றும்
நாயகன்வலியெண்ணியுநானுடைத்
தூய்மைகாட்டவுமித்துணைத்தூங்கினேன். (உ௩)

ஆண்டுநின்றுமரக்கனகழ்ந்துகொண்
டீண்டுவைத்ததிளவலியற்றிய
நீண்டசாலையொடுநிலைநின்றது
காண்டியையநின்மெய்புணர்கண்களால். (உ௪)

தீர்விலேனினிதொருபகலுஞ்சிலை
வீரன்மேனியைமானுமிவ்வீங்குநீர்
நாரநாண்மலர்ப்பொய்கையைநண்ணுவென்
சோருமாருயிர்காக்குந்துணிவினால். (உ௫)

ஆதலானதுகாரியமன்றைய
வேதநாயகன்பாலினிமீண்டனை
போதல்காரியமென்றனள்பூவையக்
கோதிலானுமினையனகூறினான். (உ௬)

நன்றுநன்றிவ்வுலகுடைநாயகன்
தன்றுணைப்பெருந்தேவிதவத்தொழில்
என்றுசிந்தைகளித்துவந்தேத்தினான்
நின்றசங்கையிடரொடுநீங்கினான். (உ௭)

இருளுஞாலமிராவணனாலிது
தெருளுநீயினிச்சில்பகறங்குறின்
மருளுமன்னவற்கியான்சொலும்வாசகம்
அருளுவாயென்றடியினிறைஞ்சினான். (உ௮)

இன்னுமீண்டொருதிங்களிருப்பல்யான்
நின்னைநோக்கிப்பகர்ந்ததுநீதியோய்
பின்னையாவிபிடிக்கின்றிலேனந்த
மன்னனாணையிதனைமனக்கொணீ. (உ௯)

ஆரந்தாழ்திருமார்பற்கமைந்ததோர்
தாரந்தானலளேனுந்தயாவெனும்

---

28. இராவணனாலே அஞ்ஞானாந்தகாரத்திலே முழுகிக்கிடக்கிற இந்த இலங்கை முதலான எல்லாவுலகங்களும் இனியுன்னாலே தெளிவுபெறும் என்பது கருத்து.

ஈரந்தானகத்தில்லளென்றலுந்தன்
வீரங்காத்தலைவேண்டென்றுவேண்டுவாய். (௯0)

எத்தும்வென்றியிளையவற்கிதொரு
வார்த்தைகூறுதிமன்னருளாலெனைக்
காத்திருந்தவற்கேகடனின்றிடை
கோத்தவெஞ்சிறைவீடென்றுகூறுவாய். (௯௧)

திங்களொன்றினென்செய்தவந்தீர்ந்தகால்
இங்குவந்திலனேயெனின்யாணர்நீர்க்
கங்கையாற்றங்கரையடியேற்குந்தன்
செங்கையாற்கடன்செய்கென்றுசெப்புவாய். (௯௨)

சிறக்குமாமியர்மூவர்க்குஞ்சீதையாண்
டிறக்கின்றடொழுதாளெனுமின்னசொல்
அறத்தினாயகன்பாலருளின்மையால்
மறக்குமாயினுநீமறவேலையா. (௯௩)

வந்தெனைக்கரம்பற்றியவைகல்வாய்
இந்தவிப்பிறவிக்கிருமாதரைச்
சிந்தையாலுந்தொடேனென்றசெவ்வரம்
தந்தவார்த்தைதிருச்செவிசாற்றுவாய். (௯௪)

ஈண்டுநானிருந்தின்னுயிர்மாயினும்
மீண்டுவந்துபிறந்துதன்மேனியைத்
தீண்டலாவதோர்தீவினைதீர்வரம்
வேண்டினாடொழுதென்றுவிளம்புவாய். (௯௫)

அரசுவீற்றிருந்தாளவுமாய்மணிப்
புரசையானையின்வீதியிற்போகவும்
விரசுகோலங்கள்காணவிதியிலேன்
உரைசெய்தென்னையென்னாழ்வினையுன்னுவேன். (௯௬)

தன்னைநோக்கியுலகந்தளர்தற்கும்
அன்னைநோய்க்கும்பரதனங்காற்றுறும்
இன்னனோய்க்குமங்கேகுவதன்றியே
என்னைநோக்கியிங்கெங்ஙனமெய்துமோ. (௯௭)

வேறு.

எந்தையாய்முதலியகிளைஞர்யார்க்குமென்
வந்தனைவிளம்புதிகவியின்மன்னனைச்

சுந்தரத்தோளனைத்தொடர்ந்துகாத்துப்போய்
அந்தமிலெனுநகர்க்கரசனுக்கென்பாய். (௩அ)

இத்திறமினையனவிளம்பவின்னுநீர்
தத்துறலொழிந்திலீர்தையலீரெனு
எத்திறத்தேதுவுமியைந்தவின்னுரை
ஒத்தனதெரிவுறவுணர்த்தினரோ. (௩௯)

வேறு.

வீவாய்நீயிவண்மெய்யஃதே
ஓய்வானின்னுயிருய்வானும்
போய்வானந்நகர்புக்கன்றோ
வேய்வான்மௌலியுமெய்யன்றோ. (௪௦)

கைத்தோடுஞ்சிறைகற்போயை
வைத்தோனின்னுயிர்வாழ்வானும்
பொய்த்தோர்வில்லிகள்போவாராம்
இத்தோடொப்பதியாதுண்டே. (௪௧)

நல்லோர்நின்னைநலிந்தோரைக்
கொல்லேமெம்முயிர்கொண்டங்கே
எல்லோருஞ்செலவெங்கோனும்
வில்லோடுஞ்செலவேண்டாவோ. (௪௨)

நீந்தாவின்னலினீந்தாமே
தேய்ந்தாறுதபெருஞ்செல்வம்
ஈய்ந்தானுக்குனையீயாதே
ஓய்ந்தாலெம்மினுயர்ந்தார்யார். (௪௩)

நன்றாய்நல்வினைநல்லோரைத்
தின்றார்தங்குடர்பேய்தின்னக்
கொன்றாலல்லதுகொள்ளேனு
டென்றானுக்கிவையேலாவோ. (௪௪)

மாட்டார்தார்சிறைவைத்தோயை
மீட்டாமென்கிலமீள்வாமேல்
நாட்டார்நல்லவர்நன்னூலும்
கேட்டாரிவ்வுரைகேட்பாரோ. (௪௫)

---

38. அந்தமில் - பகைவரால் முடிவு பெறுதலில்லாத.

ஒல்வதீதொல்லாதீதென்றெனக்குமொன்றுலகத்துண்டோ
வெல்வதுந்தோற்றருனும்விளையாட்டின்விளைந்தமேனாள். (௬௫)

ஒன்றுகேளுரைக்கநிற்கோருயிரெனவுரியோன்றன்னைக்
கொன்றுகோளிழைத்தானீநின்னுயிர்விடிற்கூற்றங்கூடும்
என்றனாருயிருநீங்குமென்பதையியையவெண்ணி
அன்றுநான்வஞ்சஞ்செய்ததாரெனக்கமரினேர்வார். (௬௬)

மானென்பதறிந்துபோனமானுடராவார்மீண்டு
யானென்பதறிந்தால்வாராரேழைமையெண்ணிநோக்கல்
தேனென்பதறிந்தசொல்லாய்தேவர்தாம்யாவரேயெங்
கோனென்பதறிந்தபின்னைத்திறம்புவார்குறையினல்லால். (௬௭)

வென்றோருமிருப்பயார்க்குமேலவர்விளிவிலாதோர்
என்றோருமிருப்பவன்றேயிந்திரனேவல்செய்ய
ஒன்றுதவுலகமூன்றுமுணர்கின்றவொருவன்யானே
மென்றோளாயிதற்குவேறோர்காரணம்விரிப்பதுண்டோ. (௬௮)

மூவருந்தேவர்தாமுமுரணுகமுற்றுங்கொற்றம்
பாவைநின்பொருட்டினாலோர்பழிபெறப்பயன்றீர்நோன்பின்
ஆவியின்மனிதர்தம்மையடுகிலேனவரையீண்டுக்
கூவிநின்றேவல்கொள்வென்காணுதிகுதலைச்சொல்லாய். (௬௯)

சிற்றியற்சிறுமையாற்றல்சிறுதொழின்மனிசரோடே
முற்றியதாவில்வீரமுனிவென்கண்விளையாதேனும்
இற்றையிற்பகலினெய்தியிருவரையொருகையாலே
பற்றினென்கொணருந்தன்மைகாணுதிபழிப்பிலாதாய். (௭௦)

பதவியமனிதரேனும்பைந்தொடிநின்னைத்தந்த
உதவியையுணரநோக்கினுயிர்கொலைக்குரியரல்லர்
சிதைவுறலவர்க்குவேண்டிற்செய்திறன்றேர்ந்ததெண்ணின்
இதனினக்கீதேயாகினியற்றுவல்காண்டியின்னே. (௭௧)

பள்ளநீரயோத்திநண்ணிப்பரதனைமுதலினோராண்
டுள்ளவர்தம்மையெல்லாமுயிர்குடித்தாழித்தீயின்
வெள்ளநீர்மிதிலையோரைவேரறுத்தெளிதினெய்திக்
கொள்வெனின்னுயிருமென்னையறிந்திலைகுறைந்தநாளோய். (௭௨)

ஈதுரைத்தழன்றுபொங்கியெதிர்கதிர்வாளைநோக்கித்
தீதுயிர்க்கிழைக்குநாளுந்திங்களோரிரண்டிற்றேய்ந்த

---

70. தாஇல் - வருத்தமில்லாத.

தாதலினின்றதென்னென்றறிந்தவாறறிவாயென்றுப்
போதரிக்கண்ணிஞளையகத்துவைத்துரப்பிப்போஞன். (எங)

அஞ்சுவித்தானுமொன்ருலறிவுறத்தேற்றியானும்
வஞ்சியிற்செவ்வியாளைவசித்தென்பால்வருவீரன்ருல்
நஞ்சுமக்காவெனென்ஞநகையிலாமுகத்துப்பேழ்வாய்
வெஞ்சினத்தரக்கிமார்க்குவேறுறவுணர்த்திப்போஞன். (எச)

போயினனரக்கன்பின்னைப்பொங்கராநுங்கிக்கான்ற
தூயவெண்மதியையொத்ததோகையைத்தொடர்ந்துசுற்றித்
தீயவல்லரக்கிமார்கடெழீஇத்தெழித்துரப்பிச்சிந்தை
மேயினவண்ணமெல்லாம்விளம்புவருடன்றுமிக்கார். (எரு)

வேறு.

முன்முன்னின்ருர்கண்கனல்சிந்தமுடுகுற்ருர்
மின்மின்னென்னுஞ்சூலமும்வேலுமிவையோச்சிக்
கொன்மின்கொன்மின்கொன்றுகுறைத்துக்குடாராத்
தின்மின்றின்மினென்றுதெழித்தார்சிலரெல்லாம். (எசு)

வையந்தந்தநான்முகன்மைந்தன்மகன்மைந்தன்
ஐயன்வேதமாயிரம்வல்லோனறிவாளன்
மெய்யன்புன்பால்வைத்துளதல்லால்வினைவென்ருேன்
செய்யும்புன்மையாதுகொலென்ருர்சிலரெல்லாம். (எஎ)

மண்ணிற்றீயமானுயர்தத்தம்வழியோடும்
பெண்ணிற்றீயோய்நின்முதன்மாயும்பிணிசெய்தாய்
புண்ணிற்கோலிட்டாலனசொல்லிப்பொதுநோக்காய்
எண்ணிக்காணுய்மெய்ம்மையுமென்ருர்சிலரெல்லாம். (எஅ)

புக்கவழிக்கும்போந்தவழிக்கும்புகழ்வெந்தீ
ஒக்கவிதைப்பானுற்றனையன்றேவுணர்வில்லாய்
இக்கணமிற்ருய்முந்தினமெல்லாமினிவாழாய்
சிக்கவுரைத்தேமென்றுதெழித்தார்சிலரெல்லாம். (எகூ)

கொல்வானுற்ருேர்பெற்றிமையாதுங்குறையாதார்
வெல்வானங்கோன்றின்னுமின்வம்மெனபவர்மெய்யும்

---

76. முன்முன் - ஒருத்திக்கு முன்னே ஒருத்தி முந்தி எனவுமாம்.

77. வையன் - மைந்தன் - உலகத்தைத்தந்தவன் பிரமன், அவன் மைந்தன்புலத்தியன், அவன் மைந்தன் விச்சிரவசு, அவன் தநயன் இராவணன்.

79. புகைவெந்தி என்றும்பாடம், இருகுளத்துப்புகழையும் அரக்கராகிய நெருப்பிலே வீழ்த்துகிருயென்க.

வல்வாய்வெய்யோனேவலுமெல்லாமனம்வைத்தாள்
நல்லாணல்லகண்கள்கலுழ்ந்தேநகுகின்றாள். (அ௦)

இன்னோரன்னவெய்தியகாலத்திடைநின்றாள்
முன்னேசொன்னேன்கண்டகனாவின்முடிவம்மா
பின்னேவாராபேதுறுவீரேற்பிழையென்றாள்
அன்னேநன்றென்றாரவரெல்லாமறிவுற்றார். (அக)

அறிந்தாரன்னமுச்சடையென்பாளவள்சொல்லப்
பிறிந்தார்சீற்றமன்னனையஞ்சிப்பிறிதில்லா
செறிந்தாராயதீவினையன்னார்தெறலெண்ணார்
நெறிந்தார்போதிப்பேதையுமாவிநிலைநின்றாள். (அஉ)

ஆ திருவிருத்தம் - ௬அக.

## ரு-வது உருக்காட்டுப்படலம்.

### சிறிய திருவடி தம் வடிவைப் பிராட்டிக்குக் காட்டுதல்.

காண்டற்கொத்தகாலமுமீதேதெறுகாவல்
தூண்டற்கொத்தசிந்தையினாருந்துயில்கில்லார்
வேண்டத்துஞ்சாரென்றொருவிஞ்சைவினைசெய்தான்
மாண்டற்குற்றாராமெனவெல்லாமயர்வுற்றார். (க)

துஞ்சாதாருந்துஞ்சுதல்கண்டாடுயராற்றாள்
நெஞ்சாலொன்றுமுய்வழிகாணாணைருகுகின்றாள்
அஞ்சாநின்றாள்பன்னெடுநாளுமழிவுற்றாள்
எஞ்சாவன்பாலின்னபகர்ந்தாங்கிடருற்றாள். (உ)

வேறு.

கருமேகநெடுங்கடல்காரனையான்
தருமேதனியேனெனதாருயிர்தான்
உருமேறுறழ்வெஞ்சிலைநாணொலிதான்
வருமேயுரையாய்வலியார்வலியே. (ங)

கல்லாமதியேகதிர்வாணிலவே
செல்லாவிரவேசிறுகாவிருளே

---

1. காணச்சமையம் கிடையாமையைக்குறித்து காலமும் என்றார்.

3. கருமேகத்திலு நெடுங்கடலினுமுள்ள கருநிறத்தை ஒத்தவனெனவுமாம்.

எல்லாமெனையேமுனிவீர்நினையா
வில்லாளனையாதும்விளித்திலிரோ. (ச)

தழல்வீசவுலாய்வருவாடைதழீஇ
அழல்வீரெனதாவியறிந்திலிரோ
நிழல்வீரையனருடனீர்நெடுநாள்
உழல்வீர்கொடியீருரையாடிலிரோ. (ரு)

வாராதொழியானெனும்வண்மையினால்
ஓராயிரகோடியிடர்க்குடையேன்
தீராவொருநாள்வலிசேவகனே
நாராயணனேதனிநாயகனே. (சா)

தருவொன்றியகானடைவாய்தவிர்நீ
வருவென்சிலநாளினின்மாநகர்வாய்
இருவென்றனையின்னருடாளிதுவேல்
ஒருவென்றனியாவியையுண்ணுதியோ. (எ)

பேணும்முணர்வேயுயிரேபெருநாள்
நாணின்றுழல்வீர்தனிநாயகனைக்
காணுந்துணையுங்கழிவீரலிர்நான்
பூணும்பழியோடுபொருந்துவதே. (அ)

முடியாமுடிமன்னன்முடிந்திடவும்
படியேழுநெடுந்துயர்பாவிடவும்
மடியாநெறிவந்துவனம்புகுதும்
கொடியார்வருமென்றுகுலாவுவதே. (கூ)

என்றென்றுயிர்விம்மியிருந்தழிவாள்
மின்றுன்னுமருங்குல்விளங்கிழையாள்
ஒன்றென்னுயிருண்டெனினுண்டிடர்யான்
பொன்றும்பொழுதேபுகழ்பூணுமென. (க0)

வேறு.

பொறையிருந்தாற்றியென்னுயிரும்போற்றினேன்
அறையிருங்கழலவற்காணுமாசையால்
நிறையிரும்பல்பகனிருதர்நீணகர்
சிறையிருந்தேனையப்புனிதன்றீண்டுமோ. (கக)

---

5. வீரை - கடல்.
6. ஓராயிரகோடி - அளவிறந்தகோடி. 8. உணர்வே - மனமே.
9. பாவிடவும் - பரவவும்

உன்னினர்பிறரெனவுணர்ந்துமுய்ந்தவர்
சொன்னனசொன்னனசெவியிற்றாங்கவும்
மன்னுயிர்காத்திருங்காலம்வைகினேன்
என்னின்வேறரக்கியர்யாண்டையார்கொலோ. (௧௨)

சொற்பிரியாப்பழிசுமந்தூங்குவேன்
நற்பிறப்புடைமையுநாணுநன்றரோ
கற்புடைமடந்தையர்கதையுளோர்கடாம்
இற்பிரிந்துய்ந்தவர்யாவர்யானலால். (௧௩)

பிறர்மனையெய்தியபெண்ணைப்பேணுதல்
திறனலதென்றுயிர்க்கிறைவன்றீர்ந்தனன்
புறனலரவனுறப்போதுபோக்கியான்
அறனலதியற்றிவேறென்கொண்டாற்றுகேன். (௧௪)

எப்பொழுதிப்பெரும்பழியினெய்தினேன்
அப்பொழுதேயுயிர்துறக்குமாணையேன்
ஒப்பரும்பெருமறுவுலகமோதயான்
துப்பழிந்துய்வதுதுறக்கந்துன்னவோ. (௧௫)

அன்பழிசிந்தையராயவாடவர்
வன்பழிசுமக்கினுஞ்சுமக்கவாணுயர்
துன்பழிபெரும்புகழ்க்குலத்துட்டோன்றினேன்
என்பழிதுடைப்பவரென்னின்யாவரே. (௧௬)

வஞ்சனைமானின்பின்மன்னைப்போக்கியென்
மஞ்சனைவைதுபின்வழிக்கொள்வாயென
நஞ்சனையானகம்புகுந்தநங்கையான்
உய்ஞ்சனெனிருத்தலுமுலகங்கொள்ளுமோ. (௧௭)

வல்லியன்மறவர்தம்வடுவிற்றீர்பவர்
வெல்லினும்வெல்கபோர்விளிந்துவீடுக
இல்லியலறத்தையானிறந்துவாழ்ந்தபின்
சொல்லியவென்பழியவரைச்சுற்றுமோ. (௧௮)

வருந்தலின்மானமாவனையமாட்சியர்
பெருந்தவமடந்தையர்முன்புபேதையேன்

---

12. சொன்னன - சொன்னன - சொன்னவைகளெல்லாம்.
14. பேணுதல் - விரும்பல். 15. பெருமறு - பெரியகுற்றம்.
17. மஞ்சனை - மைந்தனை; புத்திரபாவமான இளையபெருமானை.

கருந்தனிமுகிலினைப்பிரிந்துகள்வனூர்
இருந்தவளிவளெனவேசநிற்பெனே. (கசு)

அற்புதனரக்கர்தம்வருக்கமாசற
விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநாள்
இற்புகத்தக்கலையென்னின்யானுடைக்
கற்பினையெப்பரிசிழைத்துக்காட்டுகேன். (உ0)

ஆதலானிறத்தலேயறத்தினுறெனுச்
சாதல்காப்பவருமென்றவத்திற்சாம்பினுர்
ஈதலாதிடமுவேறில்லையென்றொரு
போதுலாமாதவிப்பொதும்பரெய்தினுள். (உக)

கண்டனனநுமனுங்கருத்துமெண்ணினன்
கொண்டனன்நுணுக்கமெய்நீண்டக்கூசுவான்
அண்டர்நாயகனருட்டுதன்யானெனுத்
தொண்டைவாய்மயிலினைத்தொழுதுதோன்றினன். (உஉ)

அடைந்தனெனடியனெனிராமனுணையால்
குடைந்துலகனைத்தையுநாடுங்கொட்பினுல்
மிடைந்தவருலப்பிலர்தவத்தைமேவலான்
மடந்தைநின்சேவடிவந்துநோக்கினேன். (உ௩)

ஈண்டுநீயிருந்ததையிடரின்வைகுறும்
ஆண்டகையறிந்திலனதற்குக்காரணம்
வேண்டுமேயரக்கர்தம்வருக்கம்வேரொடு
மாண்டிலவீதலான்மாறுவேறுண்டோ. (உச)

ஐயுறலுளதடையாளமாரியன்
மெய்யுறவுணர்த்தியவுரையும்வேறுள
கையுறுநெல்லியங்கனியிற்காண்டியால்
நெய்யுறுவிளக்கனுய்நினையல்வேறென்றான். (உரு)

வேறு.

என்றவனிறைஞ்சநோக்கியிரக்கமுமுனிவுமெய்தி
நின்றவனிருதனல்லனெறிநின்றுபொறிகளைந்தும்

20. வருக்கம் - கூட்டம். 24. ஆறு - ஒழுங்கு.

24. ஆண்டகை - வேறுண்டோ - புருஷோத்தமனான ஸ்ரீராமன் நீ இருக்குமிடம் தெரிந்தால் ராக்ஷஸர்கள் அழிந்துபோவார்கள். அவர் தெரியாதிருத்தலால் இவர்கள் சாவாதிருக்கிறார்கள். சாவாதிருக்கின்றதே அவர் தெரிந்திலரென்பதற்குக் காரணமென்க.

வென்றவனல்லனுகின்விண்ணவனுகவேண்டும்
நன்றுணர்வுரையன்றூயனவையிலன்போலுமென்ன. (உ௬)

அரக்கனேயாகவேறுேரமரனேயாகவன்றிக்
குரக்கினத்தலைவனேதானுகுககொடுமையாக
இரக்கமேயாகவந்திங்கெம்பிரானுமஞ்சொல்லி
உருக்கினனுணர்வைத்தந்தானுயிரிதினுதவியுண்டோ. (உஎ)

எனநினைத்தெய்தநோக்கியிரங்குமெனுள்ளங்கள்ளம்
மனனகத்துடையராயவஞ்சகர்மாற்றமல்லன்
நினைவுடைச்சொற்கள்கண்ணீர்நிலம்புகப்புலம்பாநின்முன்
வினவுதற்குரியனென்னவீரநீயாவனென்றுன். (உஅ)

ஆயசொற்றலைமேற்கொண்டவங்கையனன்னைநின்னைத்
தூயவன்பிரிந்தபின்புதேடியதுணைவன்றெல்லைக்
காய்கதிர்ச்செல்வன்மைந்தன்கவிக்குலமவற்றுக்கெல்லாம்
நாயகன்சுக்கிரீவனென்றுளனவையிற்றீர்ந்தான். (உக)

மற்றவன்முன்னேனந்நாளிராவணன்வலிதன்வாலின்
இற்றுகக்கட்டியெட்டுத்திசையினுமெழுந்துபாய்ந்த
வெற்றியன்றேவர்வேண்டவேலையைவிலங்கன்மத்தில்
சுற்றியநாகந்தேயவமுதெழக்கடைந்ததோளான். (௩0)

அன்னவன்றன்னைப்புங்கோனம்பொன்றுலாவிவாங்கிப்
பின்னவற்கரசுநல்கித்துணையெனப்பிடித்தானங்கள்
மன்னவன்றனக்குநாயேன்மந்திரத்துள்ளேன்வானின்
நன்னெடுங்காலின்மைந்தனுமமுமனுமனென்பேன். (௩க)

எழுபதுவெள்ளங்கொண்டவெண்ணனவுலகமெல்லாம்
தழுவிநின்றெடுப்பவேலைதனித்தனிக்கடக்குந்தாள
குழுவினவுங்கோன்செய்யக்குறித்ததுகுறிப்பினுன்னி
வழுவிலசெய்தற்கொத்தவானரம்வானினீண்ட. (௩உ)

துப்புறுபரவையேழுஞ்சூழ்ந்தபாரேழுமாழ்ந்த
ஒப்பறுநாகர்நாடுமும்பரினிம்பர்காறும்
இப்புறந்தேடிநின்னையெதிர்ந்திலவென்னினண்டத்
தப்புறம்போயுந்தேடவவதியினவைந்துபோன. (௩௩)

26. போலும்-அசை. 29. கதிர்ச்செல்வன் மைந்தன்-ஈண்டு சுக்கிரீவன்.
30. விலங்கல்-மலை. ஈண்டு மந்தரகிரியை.

புன்றொழிலரக்கன்கொண்டுபோந்தநாள்பொதிந்துதூசின்
குன்றினெம்மருங்கினிட்டவணிகலக்குறியினாலே
வென்றியானடியன்றன்னைவேறுகொண்டிருந்துகூறித்
தென்றிசைசேறியென்றானவனருள்சிதைவதாமோ. (௩௪)

கொற்றவற்காண்டுக்காட்டிக்கொடுத்தபோதடுத்ததன்மை
பெற்றியினுணர்தற்பாற்றோவுயிர்நிலைபிறிதுமுண்டோ
இற்றைநாளளவுமன்னாயன்றுநீயிழித்துநீத்த
மற்றைநல்லணிகள்காணுன்மங்கலங்காத்தமன்னோ. (௩௫)

ஆயவன்றன்மைநிற்கவங்கதன்வாலிமைந்தன்
ஏயவன்றென்பால்வெள்ளமிரண்டினோடெழுந்துசேனை
மேயினபடர்ந்ததீரவனையவன்விடுத்தானென்னைப்
பாய்புனலிலங்கைமூதூர்க்கென்றனன்பழியைவென்றான். (௩௬)

எய்தவனுரைத்தலோடுமெழுந்துபேருவகையேற
வெய்துறலொடுங்குமேனிவானுறவிம்மியோங்கி
உய்தல்வந்துற்றதோவென்றருவிநீரொழுகுகண்ணாள்
ஐயசொலையன்மேனியெப்படிக்கறிதியென்றாள். (௩௭)

படியெடுத்துரைத்துக்காட்டும்படித்தன்றுபடிவம்பண்பின்
முடிவுளவுவமமெல்லாமிலக்கணமொழியுமுன்னர்த்
துடியிடையடையாளத்தின்றொடரவைதொடர்தியென்னா
அடிமுதன்முடியின்காறுமறிவுறவநுமன்சொல்வான். (௩௮)

வேறு.

சேயிதழ்த்தாமரையென்றுசேணுளோர்
ஏயினரதன்றுணையெளியதில்லையால்
நாயகன்றிருவடிகுறித்துநாட்டுறின்
பாய்திரைப்பவளமுங்குவளைப்பண்பினும். (௩௯)

தளங்கெழுகற்பகமுகிழுந்தண்டுறை
இளங்கொடிப்பவளமுங்கிடக்கவென்னவை
துளங்கொளிவிரற்கெதிருதிக்குஞ்சூரியன்
இளங்கதிரொக்கினுமொக்குமேந்திழாய். (௪௦)

சிறியவும்பெரியவுமாகித்திங்களோ
மறுவிலவபத்துளவல்லமற்றினி

38. படி - ஒப்பு. படி - விதம், தன்மை.

எறிசுடர்வயிரமோதிரட்சியெய்தில
அறிகிலெனுகிர்க்கியானுவமமாவன. (சக)

பொருந்திலநிலனொடுபோந்துகாணிடை
வருந்தினவெனினதுநூலைமாறுகொண்
டிருந்ததுநின்றதுபுவனம்யாவையும்
ஒருங்குடன்புணர்வஃதுரைக்கற்பாலதோ. (சஉ)

தாங்கணைப்பணிலமும்வளையுந்தாங்கரா
வீங்கணைப்பள்ளியானெனினும்வேறினிப்
பூங்கணைக்காற்கொருபரிசுதான்பொரும்
ஆங்கணைக்காவமோவாவதன்னையே. (சங)

அறங்கிளர்பறவையினரசனொடெழிற்
பிறங்கெருத்தனையனபெயரும்பெற்றுடை
மறங்கிளர்மதகரிகரமுநாணின
குறங்கினுக்குவமையிவ்வுலகிற்கூடுமோ. (சச)

வலஞ்சுழித்தொழுகுநீர்வழங்குகங்கையின்
பொலஞ்சுழியென்றலும்புன்மைபூவொடு
நிலஞ்சுழித்தெழுமணியுந்திநேரினி
இலஞ்சியும்போலும்வேறுவமையாண்டரோ. (சரு)

பொருவருமரகதப்பொலங்கொண்மால்வரை
வெருவுறவிரிந்துயர்விலங்கலாகத்தைப்
பிரிவறநோற்றிலளென்னிற்பின்னையத்
திருவினிற்றிருவுளார்யாவர்தெய்வமே. (சசா)

நீடுறுகீட்டிசைநின்றயானையின்
கோடுறுகரமெனச்சிறிதுகூறலாம்
தோடுறுமலரெனச்சுரும்புசுற்றறாத்
தாடொடுதடக்கைவேறுவமைசாலுமே. (சஎ)

பச்சிலைத்தாமரைபகல்கண்டாலெனக்
கைச்செறிமுகிழுகிர்கனகனென்பவன்
வச்சிரயாக்கையைவகிர்ந்தவன்றொழில்
நிச்சயமன்றெனினையநீங்குமோ. (சஅ)

திரண்டிலவொளியிலதிருவின்சேர்வில
முரண்டருமேருவின்முரியமூரிநாண்

45. இலஞ்சி - மகிழம். 48. கனகன் - இரணியன்.

புரண்டிலபுகழிலபொருப்பென்றொன்றுபோன்
றிரண்டிலபுயங்களுக்குவமமேற்குமோ. (௪௯)

கடற்படுபணிலமுங்கன்னிப்பூகமும்
மிடற்றினுக்குவமையென்றுரைக்குமெல்லியோர்
உடற்படவொண்ணுமோவுரகப்பள்ளியான்
இடத்துறைசங்கமொன்றிருக்கவெங்களால். (௫௦)

அண்ணறன்றிருமுகங்கமலமாமெனின்
கண்ணினுக்குவமைவேறியாதுகாட்டுகேன்
தண்மதியாமெனவுரைக்கத்தக்கதோ
வெண்மதிபொலிந்ததுமெலிந்துதேயுமால். (௫௧)

வேறு.

ஆரமுமகிலுநீவியகன்றதோளமலன்செவ்வாய்
நாரமுண்டலமர்ந்தசெங்கேழ்நளினமென்றுரைக்கநாணும்
ஈரமுண்டமுதமூறுமின்னுறையியம்பாதேனும்
மூரல்வெண்முறுவல்பூவாப்பவளமோமொழியற்பாற்றே. (௫௨)

வேறு.

முத்தங்கொல்லோமுழுநிலவின்முறியின்றிறனோமுறையமுதச்[ன்
சொத்தின்றுள்ளிவெள்ளியினந்தொடுத்தகொல்லோதுறையறத்தி
வித்துமுளைத்தவங்குரங்கொல்வேறேசிலகொல்மெய்ம்முகிழ்த்த
தொத்தின்றொகைகொல்யாதென்றுபல்லுக்குவமைசொல்லுகேன்.

எள்ளாநிலத்திந்திரநீலத்தெழுந்தகொழுந்துமரகதத்தின்
விள்ளாமுழுமாநிழற்பிழம்புவேண்டவேண்டுமேனியதோ
தள்ளாவோதிகோபத்தைதக்கவ்வவந்துசார்ந்ததுவும்
கொள்ளாவள்ளறிருமூக்கிற்குவமைபின்னுங்குணிப்பாமோ. (௫௪)

பனிக்கச்சுரத்துக்கரன்முதலோர்கவந்தப்படையும்பல்பேயும்
தனிக்கைச்சிலையும்வானவருமுனிவர்குழுவுந்தனியறனும்
இனிக்கட்டழிந்ததரக்கர்குலமென்னுஞ்சுருதியீரிரண்டும்
குனிக்கக்குனித்தபுருவத்துக்குவமநீயேகோடியால். (௫௫)

வருநாட்டோன்றுந்தனிமறுவும்வளர்வுந்தேய்வும்வாளரவம்
ஒருநாட்கவ்வுமுறுகோளுமிறப்பும்பிறப்புமொழிவுற்றால்
இருநாற்பகலினிலங்குமதியலங்கலிருளினெழினிழற்கீழ்ப்
பெருநாணிற்பினவனெற்றிப்பெற்றித்தாகப்பெறுமன்னே. (௫௬)

---

53. அங்குரம் - முளை. 55. குனிக்க - கூத்தாட. 56. இறப்பும் பிறப்பும் ஈண்டு அஸ்தமிக்கிறதும் உதயமாகிறதும்,

நீண்டுகுழன்றுநெய்த்திருண்டுநெறிந்துசெறிந்துநெடுநீலம்
பூண்டுபுரிந்துசரிந்துகடைசுருண்டுபுகையுநறும்பூவும்
வேண்டுமெல்லவெனத்தெய்வவெறியேகமழுநறுங்குஞ்சி
ஈண்டுசடையாயினதென்றான்மழைபென்றுரைத்தலிழிபன்றே. ()

புல்லலேற்றதிருமகளும்பூவும்பொருந்தப்புவியேழும்
எல்லையேற்றநெடுஞ்செல்வமெதிர்ந்தஞான்றுமஃதின்றி
அல்லலேற்றகானகத்துமழியாநடையையிழிவான
மல்லலேற்றினுளதென்றான்மத்தயானைவருந்தாதோ. (ருஅ)

இன்னமொழியவம்மொழிகேட்டெரியினிட்டமெழுகென்னத்
தன்னையறியாதயர்வாளைத்தரையின்வணங்கிநாயகனார்
சொன்னகுறியுண்டடையாளச்சொல்லுமுளவாலவைவேதாகை
அன்னநடையாய்கேட்கென்னவறியவறைவானுயினான். (ருகூ)

வேறு.

நடத்தலரிதாகுநெறிநாள்கள்சிலதாயர்க்
கடுத்தபணிசெய்திவணிருத்தியெனவச்சொற்
குடுத்ததுகிலோடுமுயிருக்கவுடலோடும்
எடுத்தமுனிவோடுமயனின்றதுமிசைப்பாய். (கூ0)

நீண்டமுடிவேந்தனருளேந்திநிறைசெல்வம்
பூண்டதனைநீங்கிநெறிபோதலுறுநாளின்
ஆண்டநகராரையொடுவாயிலகலாமுன்
யாண்டையதுகானெனவிசைத்ததுமிசைப்பாய். (கூக)

எள்ளரியதேர்தருசுமந்திரனிசைப்பாய்
வள்ளன்மொழிவாசகமனத்துயர்மறந்தாள்
கிள்ளையொடுபூவைகள்கிளத்தல்கிளவென்னும்
பிள்ளையொடதன்றிறமுணர்த்துதிபெயர்த்தும். (கூஉ)

மீட்டுமுறைவேண்டுவனவில்லையெனமெய்ப்போர்
தீட்டியதுதீட்டரியசெய்கையதுசெவ்வே
நீட்டிதெனநேர்ந்தனனெனாநெடியகையால்
காட்டினனொராழியதுவானுதலிகண்டாள். (கூங)

இறந்தனர்பிறந்தபயனெய்தினர்கொலென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்கொலென்கோ

61. நிறைசெல்வம் - மகவைதசுவரியம்.
62. பிள்ளை-நாகணவாய்ப்புள்ளிதைக்குவம ஆகுபெயர். கிள-சொல்லுக.
64. கொல் - 4 - ம் அசைகள் என்னை கொல் - எப்படியோ எனவுமாம்.

துறந்தவுயிர்வந்திடைதொடர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதலிசெய்கை. (சுச)

இழந்தமணிபுற்றரவெதிர்ந்ததெனலானாள்
பழந்தனமிழந்தனபடைத்தவரையொத்தாள்
குழந்தையையுயிர்த்தமலடிக்குவமைகொண்டாள்
உழந்துவிழிபெற்றதொருயிர்ப்பொறையுமொத்தாள். (சுரு)

வாங்கினண்முலைக்குவையில்வைத்தனள்சிரத்தால்
தாங்கினண்மலர்க்கண்மிசையொத்தினடடந்தோள்
வீங்கினண்மெலிந்தனள்குளிர்ந்தனள்வெதுப்போ
டேங்கினளுயிர்த்தனளிதின்னதெனலாமே. (சுசு)

மோக்குமுலைவைத்துறமுயங்குமொளிர்நன்னீர்
நீக்கிநிறைகண்ணிணைததும்பநெடுநீள
நோக்குநுவலக்கருதுமொன்றுநுவல்கில்லாள்
மேக்குநிமிர்விம்மலள்விழுங்கலுறுகின்றாள். (சுஎ)

நீண்டவிழிநேரிழைதன்மின்னிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ. (சுஅ)

இருந்துபசியாலிடருழந்தவர்களெய்தும்
அருந்துமமுதாகியதறத்தவரையண்மும்
விருந்துமெனலாகியதுவீயுமுயிர்மீளும்
மருந்துமெனலாகியதுவாழிமணியாழி. (சுகூ)

இத்தகையளாகியுயிரேமுறவிளங்கும்
முத்தநகையாள்விழியினுவிமுலைமுன்றில்
தத்தியுகமென்குதலைத்தள்ளவுயிர்தந்தாய்
உத்தமவெனுவினையவாசகமுரைத்தாள். (எ0)

வேறு.

மும்மையாமுலகந்தந்தமுதல்வற்குமுதல்வன்றூதாய்ச்
செம்மையாலுயிர்தந்தாய்க்குச்செயலென்னெளியதுண்டே
அம்மையாயத்தனையவப்பனேயருளின்வாழ்வே
இம்மையேமறுமைதானுநல்கினையிசையோடென்றாள். (எக)

---

68. வேதிகைசெய் - வேறுபடுத்துகின்ற.

பாழியபணைத்தோள்வீர துணையிலேன் பரிவுதீர்த்த
வாழியவள்ளலேயான்மறுவிலாமனத்தேனென்னின்
ஊழியோர்பகலாயோதும்யாண்டெலாமுலகமேழும்
ஏழும்வீவுற்றஞான்றுமின்றெனவிருத்தியென்றாள். (௭௨)

மீண்டுரைவிளம்பலுற்றாள்விழுமியகுணத்தோய்வீரன்
யாண்டையானிளவலோடுமெவ்வழியெய்திற்றன்னை
ஆண்டகையடியேன்செய்கையார்சொலவறிந்ததென்றாள்
தூண்டிரடடந்தோளானுமுற்றதுசொல்லலுற்றான். (௭௩)

உழைக்குலத்தியமாயவுருவுகொண்டுறுதல்செய்தான்
மழைக்குநிறத்துமாயவரக்கன்மாரீசனென்பான்
இழைத்தடமார்பத்தண்ணலெய்யப்போய்வையஞ்சேர்வான்
அழைத்ததவ்வோசையுன்னைமயக்குதற்கரக்கன்சொல்ல. (௭௪)

இக்குரலிளவல்கேளாதொழிகெனவிறைவனிட்டான்
மெய்க்குரல்சாபம்பின்னைவிளைந்ததுவிதியின்மெய்ம்மை
பொய்க்குரலன்றுபோலாம்பொருள்பின்னர்ப்பயக்குமென்பான்
கைக்குரல்வரிவில்லானுமிளையவன்வரவுகண்டான். (௭௫)

கண்டபினிளையவீரன்முகத்தினாற்கருத்தையோர்ந்த
புண்டரீகக்கணானுமுற்றதுபுகலக்கேட்டான்
வண்டுறைசாலைவந்தானின்றிருவடிவுகாணான்
உண்டுயிரிருந்தானின்னலுழப்பதற்கேதுவொன்றே. (௭௬)

தேண்டிநேர்கண்டேன்வாழிதீதிலனெங்கோனாகம்
பூண்டமெய்புயிரேபோகப்பொய்புயிர்போலநின்ற
ஆண்டகைநெஞ்சினின்றுமகன்றிலையழிவுண்டாமோ
ஈண்டுநீயிருந்தாயாண்டங்கெவ்வுயிர்விடுமிராமன். (௭௭)

அந்நிலையாயவண்ணலாண்டுநின்றன்னைநின்னைத்
துன்னிருங்கானும்யாறுமலைகளுந்தொடர்ந்துநாடி
இன்னுயிரின்றியேகுமியந்திரப்படிவமொப்பான்
தன்னுயிர்புகழ்க்குவிற்றசடாயுவைவந்துசார்ந்தான். (௭௮)

வந்தவன்மேனிநோக்கிவானுயர்துயரின்வைகி
எந்தைநீயுற்றதன்மையியம்பெனவிலங்கைவேந்தன்
சுந்தரிநின்னைச்செய்தவஞ்சனைசொல்லச்சொல்ல
வெந்தனவுலகமென்னநிமிர்ந்ததுசீற்றவெந்தீ. (௭௯)

79. நிமிர்ந்தது - மேன்மே லாயிற்று.

சீறியிவ்வுலகமூன்றுந்தீந்துகச்சினவாயம்பால்
நூறுவெனொன்றுகைவிடுக்கியகாலைநோக்கி
ஊறொருசிறியோன்செய்யமுனிதியோவுலகையுள்ளம்
ஆறுதியென்றுதாதையாற்றலிற்சீற்றமாறி. (அ0)

எவ்வழியேகியுற்றான்யாண்டையானுறையுள்யாது
செவ்வியோய்கூறுகென்னச்செப்புவானுற்றசெவ்வி
வெவ்வியல்விதியின்கோட்பால்வீடினன்கழுகின்வேந்தன்
எவ்வியவரிவிற்செங்கையிருவருமிடரின்வீழ்ந்தார். (அக)

அயர்த்தவரிதிற்றேறியாண்டொழிற்றாதைக்காண்டுச்
செயத்தகுகடன்மையாவுந்தேவருமருளச்செய்தார்
கயத்தொழிலரக்கன்றன்னைநாடிநாங்காண்டுமென்னாப்
புயற்றொடுகுடுமிக்குன்றுங்கானமுங்கடிதுபோனார். (அஉ)

அவ்வழிநின்னைக்காணாதயர்த்தவரிதிற்றேறிச்
செவ்வழிநயனஞ்செல்லுநெடுவழிசேறுசெய்ய
வெவ்வழலுற்றமெல்லென்மெழுகெனவழியுமெய்யன்
இவ்வழியினையபன்னியறிவழிந்திரங்கலுற்றான். (அங)

வேறு.

கன்மத்தனாலத்தவராருளரேகடப்பார்
பொன்மொய்த்ததோளான்மயல்கொண்டுபுலன்கள்வேறாய்
நன்மத்தநாகத்தயல்சூடியநம்பனேபோல்
உன்மத்தனானன்றனையொன்றுமுணர்ந்திலாதான். (அச)

போதாயினபோதுனதண்புனலாடல்பொய்யோ
சீதாபவளக்கொடியன்னவட்டேடியென்கண்
நீதாதருகிற்றில்லையெனருப்பாதியென்னாக்
கோதாவிரியைச்சினங்கொண்டனன்கொண்டலொப்பான். (அரு)

குன்றேகடிதேதாடினைகோமளக்கொம்பரன்ன
என்றேவியைக்காட்டுதிகாட்டலையென்னினிவ்வம்
பொன்றேயமையும்முனுடைக்குலமுள்ளவெல்லாம்
இன்றேபிளவாவெரியாக்கரியாக்கவென்றான். (அசு)

பொன்மானுருவாற்சிலமாயைபுணர்க்கவன்றோ
என்மானகல்வுற்றனளிப்பொழுதென்கணென்னா

82. தாதைக்கு - தந்தையைப்போன்ற சடாயுவுக்கு. கடன்மை - உத்தரகிரியை. 87. பொன்மானுருவால் - பொன்மான்வடிவுகொண்டு.
87. என்மான் - எனதுமானான சீதை.

நன்மான்களைநோக்கி நந்நாமமுமாய்ப்பெனின்றே
வின்மாண்கொலைவாளியிதென்னறுவெருண்டுநின்ருன். (அஎ)

வேறுற்றமனத்தவனின்னடுதார்விம்மனேவ
ஆறுற்றநெஞ்சிற்றனதாருயிராயதம்பி
கூறுற்றசொல்லென்றுளகே! தறுநன்மருந்தால்
தேறுற்றுயிர்பெற்றியல்புஞ்சிலசொல்லலுற்ருன். (அஅ)

வந்தானிளையாளுெடுவானுயர்தேரின்வைகும்
நந்தாவிளக்கின்வருமெங்குலநாதன்வாழும்
சந்தார்தடங்குன்றினிற்றன்னுயிர்க்காதலோனும்
செந்தாமரைக்கண்ணனுநட்டனர்தேவருய்ய. (அகூ)

உண்டாயதுமுற்றதுமுற்றுமுணர்த்தியுள்ளம்
புண்டானெனநோயுறவிம்முறுகின்றபோழ்தின்
எண்டானிழந்திட்டனனேந்திழையாங்கள்காட்டக்
கண்டானுயர்வேதமும்போதமுங்காண்கிலாதான். (கூ0)

தணிகின்றநஞ்சொற்ருெடர்த்தன்மையத்தன்மைதன்னைத்
துணிகொண்டிலங்குஞ்சுடர்வேலவன்ருயநின்கண்
அணிகண்டெழியேயமிழ்தந்தெளித்தாலுமாருப்
பிணிகொண்டதுபண்டதுண்டாயினும்பேர்ப்பதன்ருல். (கூக)

அயர்வுற்றரிதிற்றெளிந்தம்மலைக்கப்புறத்தோர்
உயர்பொற்கிரியுற்றுளன்வாலியென்ருேங்கலொப்பான்
துயருற்றவிராவணன்வாலிடைப்பண்டுதூங்க
மயர்வுற்றபொருப்பொடுமால்கடருவிவந்தான். (கூஉ)

ஆயானையோரம்பினிலாருயிர்வாங்கியன்பிற்
ருயான்வயினவ்வரசீந்தவன்சுற்றுசேனை
மேயான்வருவானெனவிட்டனன்மேவுகாறும்
ஏயானிருந்தானிடைதிங்களிரண்டிரண்டும். (கூங)

பிற்கூடியசேனைபெருந்திசைபின்னவாக
விற்கூடுநுதற்றிருநின்னிடைமேவவேவித்

87. நன்மான் - நல்லமான்கள்.

89. நந்தாவிளக்கு - சூரியன்.

90. போதம் - ஞானம்.

92. மயர்வு - இங்கு கலந்திருத்தல்.

தெற்கூடுருவக்கடிதேவினன்சேர்ந்ததென்ன
முற்கூடியகூறினன்காலமோர்மூன்றும்வல்லான். (கூச)

வேறு.

அன்பினனிவ்வுரையுணர்த்தவாரியன்
வன்பொறைநெஞ்சினன்வருத்தமுன்னுவாள்
என்புறவுருகினளிரங்கியேங்கினள்
துன்பமுமுவகையுஞ்சுமந்தவுள்ளத்தாள். (கூரு)

நையுறுசிந்தையணயனவாரியின்
தொய்யல்வெஞ்சுழியிடைச்சுழிக்குமேனியள்
ஐயநீயளப்பருமளக்கர்நீந்தினை
எய்தியதெப்பரிசியம்புவாயென்றாள். (கூசு)

சுருங்கிடையுன்னொருதுணைவன்றாயதாள்
ஒருங்குடையுணர்வினோரோய்வின்மாயையின்
பெருங்கடல்கடந்தனர்பெயரும்பெற்றிபோல்
கருங்கடல்கடந்தனென்காலினாலென்றான். (கூஎ)

இத்துணைச்சிறியதோரெண்ணில்யாக்கையை
தத்தினைகடலதுதவத்தினையதோ
சித்தியினியன்றதோசெப்புவாயென்றாள்
முத்தினுநிலவினுமுறுவன்முற்றினாள். (கூஅ)

சுட்டினனின்றனன்றொழுதகையினன்
விட்டுயர்தோளினன்விசும்பின்மேக்குயர்
எட்டருநெடுமுகடெய்திநீளுமேல்
முட்டுமென்றுருவொடுவளர்ந்தமூர்த்தியான். (கூகூ)

செவ்வழிப்பெருமையென்றுரைக்குஞ்செம்மைதான்
வெவ்வழிப்பூதமோரைந்தின்மேலதோ
அவ்வழித்தன்றெனினநுமன்பாலதோ
எவ்வழித்தாகுமென்றெண்ணுமீட்டதே. (க00)

ஒத்துயர்கனகவான்கிரியினோங்கிய
மெத்துறுமரந்தொறுமின்மினிக்குலம்
மொய்த்துளவாமெனமுன்னும்பின்னரும்
தொத்தினதாரகைமயிரின்சுற்றெலாம். (க0க)

99. மேக்கு - மேலே.
101. தூறு - நெருங்கின.

பூண்டாள்கற்புடையாள்பொய்யாள்
தீண்டாவஞ்சகர்தீண்டாமுன்
மாண்டாளென்றுமனந்தேறி
மீண்டால்வீரம்விளங்காதோ. (சகூ)

கெட்டேநீயுயிர்கேதத்தால்
விட்டாயென்றிடின்வெல்லம்பால்
ஒட்டாரோடுலகோரேழும்
சுட்டானுந்தொலையாவன்றோ. (சஎ)

முன்னேகொல்பவன்மூவுலகும்
பொன்னேயோங்கியபோர்வில்லான்
என்னேநின்னிலையீதென்றால்
பின்னேசெம்மைபிடிப்பானோ. (சஅ)

கோளாளுருயிர்கோளோடும்
மூளாவெஞ்சினமுற்றாகா
மீளாவேலையல்வேறுண்டோ
மாளாதோபுவிவானோடும். (சகூ)

தாழித்தண்கடறம்மோடும்
ஏழுக்கேழுலகெல்லாமன்
றூழிக்கையவனம்பம்மா
ஊழித்தீயெனவுண்ணாதோ. (ருo)

படுத்தான்வானவர்பற்றரைத்
தடுத்தான்றீவினைதக்கோரை
எடுத்தானல்வினையெந்நாளும்
கொடுத்தானென்றிசைகொள்ளாயோ. (ருக)

சின்னாணீயிடர்தீராதாய்
இன்னாவைகலினெல்லோரும்
நன்னாள்காணுதனன்றன்றோ
உன்னானல்லறமுண்டானால். (ருஉ)

புளிக்குங்கண்டகர்புண்ணீருள்
குளிக்கும்பேய்குடையுந்தோறும்

47. ஒட்டார் - சத்துருக்கள். ஒட்டு சிநேகம்.
53. புளிக்கும் - எல்லாரும் வெறுக்கத்தக்க.

12

ஒளிக்குந்தேவருவந்துள்ளம்
களிக்குநல்வினைகாணுயோ. (௫௩)

வேறு.

ஊழியினிறுதியினுருமெறிந்தெனக்
கேழ்கிளர்சுடுகணைகிழித்தபுண்பொழி
தாழிருங்குருதியிற்றரங்கவேலைகள்
ஏழுமொன்றாகநின்றிரைப்பக்காண்டியால். (௫௪)

சூலியம்பெருவயிறலைத்துச்சோர்வுறும்
ஆலியங்கண்ணியராறுத்துநீத்தன
வாலியுங்கடப்பருவனப்பவாறுயர்
தாலியம்பெருமலைதயங்கக்காண்டியால். (௫௫)

விண்ணினீளியநெடுங்கழுதும்வெஞ்சிறை
எண்ணினீளியபெரும்பறவையீட்டமும்
புண்ணினீர்ப்புனரியிற்படிந்தபூவையர்
கண்ணினீராற்றினிற்குளிப்பக்காண்டியால். (௫௬)

கரம்பயின்முரசினங்கறங்கக்கைதொடர்
நரம்பினுமினிழிசைநவிலநாடகம்
அரம்பையராடியவரங்கினுண்டொழிற்
குரங்குகண்முறைமுறைகுனிப்பக்காண்டியால். (௫௭)

புரையுறுபுன்றொழிலரக்கர்புண்பொழி
திரையுறுகுருதியாறீர்ப்பச்செல்வன
வரையுறுபிணப்பெரும்பிறக்கமண்டின
கரையுறுநெடுங்கடறார்ப்பக்காண்டியால். (௫௮)

வினையுடையரக்கரமிருந்தைவெந்துகச்
சனகியென்றொருதழனடுவட்டங்கலான்
அனகன்கையம்பெனுமளவிலூதையால்
கனகநீடிலங்கைநின்றுருகக்காண்டியால். (௫௯)

தாக்கிகலிராவணன்றலையிற்றாவின
பாக்கியமனையநின்பழிப்பின்மேனியை
நோக்கியகண்களைநுதிகொண்மூக்கினால்
காக்கைகள்கவர்ந்துகொண்டுண்ணக்காண்டியால். (௬0)

56. கழுது - பசாசு.

மேலுறவிராவணற்கழிந்துவெள்கிய
நீலுறுதிசைக்கரிதிரிந்துநிற்பன
வாலுறவணையவன்றலைபைவவ்வலில்
காலுறுகணைகடிந்திடுவகாண்டியால். (௬௧)

நீர்த்தெழுகணைமழைவழங்கநீலவான்
வேர்த்தறெதன்றிடையிடைவீசுந்தூசுபோல்
போர்த்தெழுபொலங்கொடியிலங்கைப்பூழியோ
டார்த்தெழுகழுதிரைத்தாடக்காண்டியால். (௬௨)

நீனிறவரக்கர்தங்குருதிநீத்தநீர்
வேலைமிக்காற்றெடுமீளவேலைசூழ்
ஞாலமுற்றுங்கடையுகத்துநச்சருக்
காலனும்வெறுத்துயிர்காலக்காண்டியால். (௬௩)

அணங்கிளமகளிரொடரக்கராடுறு
மணங்கிளர்கற்பகச்சோலைவாவிவாய்ப்
பிணங்குறுவான்முறைபிடித்துமாலைப
கணங்கொடுகுரக்கினங்குளிப்பக்காண்டியால். (௬௪)

செப்புறலென்பலதெய்வவாளிகள்
இப்புறத்தரக்கரைமுருக்கியேகின
முப்புறத்துலகையுமுடிக்கமூட்டலான்
அப்புறத்தரக்கருமவியக்காண்டியால். (௬௫)

ஈண்டொருதிங்களிவ்விடரின்வைகுதல்
வேண்டுவதன்றுநான்விரைவின்வீரனைக்
காண்டலேகுறைவுபின்காலம்வேண்டுமோ
ஆண்டகையினியொருபொழுதுமாற்றுமோ (௬௬)

ஆவியுண்டென்னுமீதுண்டுன்னுருயிர்ச்
சேவகன்றிருவுருத்தீண்டத்தீதிலாப்
பூவிலைதளிரிலைபொறிந்துவெந்திலாக்
காவிலைகொடியிலைநெடியகானெலாம். (௬௭)

சோகம்வந்துறுவதுதெளிவுதோய்ந்தன்றே
மேகம்வந்திடித்துவந்துருமுவீழ்கினும்
ஆகமும்புயங்களுமழுந்தவைந்தலை
நாகம்வந்தடர்ப்பினுமுணர்வுநாறுமோ. (௬௮)

---

63. கடையுகத்து-உகாந்தகாலத்திலே. 66. ஆண்டகை. புருஷ சிரேஷ்டர்.

மத்துறு தயிரெனவந்துசென்றிடை
தத்துறு முயிரொடுபுலன்கடள்ளுறும்
பித்துநின்பிரிவினிற்பிறந்தவேதனை
எத்தனையுளவவையெண்ணுமீட்டவோ. (௬௯)

இந்நிலையுடையவன்றரிக்குமென்றியேல்
மெய்ந்நிலையுணர்ந்துழி இமிடைந்ததீதெனின்
பொய்ந்நிலைகாண்டியான்புகன்றயாவுமுன்
கைந்நிலைநெல்லியங்கனியிற்காட்டுகேன். (௭௦)

தீர்த்தனுங்கவிக்குலத்திறையுந்தேவிநின்
வார்த்தைகேட்டுவப்பதன்முன்னர்மாக்கடல்
தூர்த்தனவிலங்கையைச்சூழுமாக்குரங்
கார்த்ததுகேட்டுவந்திருத்தியன்னைநீ. (௭௧)

எண்ணரும்பெரும்படைநாளையிந்நகர்
நண்ணியபொழுததுநடுவணங்கைநீ
விண்ணுறக்கருளன்மேல்விளங்கும்விண்டுவின்
கண்ணனைமன்னெடுவெரிநிற்காண்டியால். (௭௨)

அங்கதன்றோண்மிசையிளவலம்மலை
பொங்குவெங்கதிரெனப்பொலியப்போர்ப்படை
இங்குவந்திறுக்குநீயிடருமையமும்
சங்கையுநீங்குதிதனிமைநீங்குவாய். (௭௩)

குராவருங்குழலியிக்குறித்தநாளினே
விராவருநெடுஞ்சிறைமீட்கிலானெனின்
பராவரும்பழியொடும்பாவம்பற்றுதற்
கிராவணனவனிவனிராமனென்றனன். (௭௪)

வேறு.

ஆகவிம்மொழியாசிலகேட்டழிவுற்றாள்
ஓகைகொண்டுகளிக்குமனத்தளுயர்ந்தாள்
போகைநன்றிவனென்பதுபுந்தியின்வைத்தாள்
தோகையுஞ்சிலவாசகமின்னனசொன்னாள். (௭௫)

சேறியையவிரைந்தனைதீயவையெல்லாம்
வேறியானினியொன்றும்விளம்பலென்மேலோய்

72. வெரிநில் - முதுகின்மேல்.
74. குரா - குரவமலர்கள்.

கூறுகின்றன முன்குறியுற்றனகோமாற்
கேறுமென்றவைசொல்லெனவின்னவிசைப்பாள். (எசு)

நாகமொன்றியநல்வரையின்றலைமேனாள்
ஆகம்வந்தெனையள்ளிகிர்வாளினளைந்த
காகமொன்றைமுனிந்தயல்கல்லெழுபுல்லால்
வேகவெம்படைவிட்டதுமெல்லவிரிப்பாய். (எஎ)

அங்கதஞ்சிநடுங்கியயன்பதியண்மி
இங்குநின்வரவென்னவெனக்கனல்வெய்த
மங்கைபங்கனெடுண்டிசையுஞ்செலமற்றோர்
தங்கடங்களிடங்கண்மறுத்தமைதைப்பாய். (எஅ)

இந்திரன்றருமைந்தனுறுந்துயர்யாவும்
அந்தரத்தினின்றவர்கண்டினியந்தோ
எந்ததன்சரணன்றியோர்தஞ்சமுமின்றால்
வந்தவன்சரண்வீழ்கெனவுற்றதும்வைப்பாய். (எகூ)

ஐயனின்சரணஞ்சரணென்றவனஞ்சி
வையம்வந்துவணங்கிடவள்ளன்மகிழ்ந்தே
வெய்யவன்கணிரண்டொடுபோகெனவிட்ட
தெய்வவெம்படையுற்றுளதன்மைதெரிப்பாய். (அ0)

எந்தைநின்சரணஞ்சரணென்றவிதன்னால்
முந்துநின்குறையும்பொறைதந்தனமுந்துன்
சந்தமொன்றுகொடித்திரள்கண்கடமக்கே
வந்தொர்நன்மணிநிற்கெனவைத்ததும்வைப்பாய். (அக)

வேகம்விண்டுசயந்தன்வணங்கிவிசும்பில்
போகவண்டர்கள்கண்டலர்கொண்டுபொழிந்தார்
நாகநம்பனிளங்கிளைநன்குணராத
பாகுதங்கியவென்றியினின்சொல்பணிப்பாய். (அஉ)

என்றெரின்னுயிர்மென்கிளிக்கியார்பெயரீகேன்
மன்னவென்றலுமாசறுகைகயன்மாதென்
அன்னைதன்பெயராகெனவன்பினொடன்றாட்
சொன்னமெய்ம்மொழிசொல்லுதிமெய்ம்மைதொடர்ந்தோய்.

---

78. தைப்பாய் - தெரியச்சொல்லு.

82. பருவதராசன் பிள்ளையென்றது மேருமலைபோல்வார் இளையபெருமானென்க.

என்றுரைத்தினி தித்தனைபேரடையாளம்
ஒன்றுணர்த்துவதில்லெனவெண்ணியுணர்ந்தாள்
தன்றிருத்துகிலிற்பொதிவுற்றது தானே
வென்றதச்சுடர்மேலொடுகீழுறமெய்யால். (அச)

வாங்கினுடன்மலர்க்கையினன்னதுமுன்னு
ஏங்கினனவ்வநுமனுமென்கொலிதென்னு
வீங்கினன்வியந்தானுலகேழும்விழுங்கித்
தூங்குகாரிருண்முற்றுமிரிந்ததுசுற்றும். (அரு)

மஞ்சலங்கொளியோனுமிம்மாநகர்வந்தான்
அஞ்சலன்னெனவெங்கணரக்கரயிர்த்தார்
சஞ்சலம்விரிசக்கரவாகமுடன்றூழ்
கஞ்சமும்மலர்வுற்றனகாந்தினகாந்தம். (ருசு)

கூந்தன்மென்மழைக்கொண்முவின்மேலெழுகோளின்
வேந்ததன்னதுமெல்லியறன்னெழின்மேனி
சேர்ந்ததந்தமில்சேவகன்சேவடியென்னக்
காந்துகின்றதுகாட்டினண்மாருதிகொண்டான். (அஎ)

சூடையின்மணிகண்மணியொப்பதுதொன்னுள்
ஆடையின்கணிருந்ததுபேரடையாளம்
நாடிவந்தெனதின்னுயிர்நல்கியநம்பா
கோடியென்றுகொடுத்தனண்மெய்ப்புகழ்கொண்டாள். (அஅ)

தொழுதுவாங்கினன்சுற்றியதூசினன்முற்றப்
பழுதுறுவகைபந்தனைசெய்தனன்வந்தித்
தழுதுமும்மைவலங்கொடிறைஞ்சினன்போ
டெழுதுபாவையுமேத்தினளேகினனிப்பால். (அகூ)

ஆ திருவிருத்தம் - கககூரு.

## ஏ - வது - பொழிலிறுத்தபடலம்.

நெறிக்கொடுவடக்குறநினைப்பினினிமிர்ந்தான்
பொறிக்குலமலர்ப்பொழிலிடைக்கடிதுபோவான்
சிறுத்தொழின்முடித்தகறறீதெனநெரிந்தான்
மறித்துமொர்செயற்குரியகாரியமதித்தான். (க)

88. நம்பா - ஆணில்சிரேஷ்டன்.

ஈனமுறுபற்றலரையெற்றியெயின்மூதூர்
மீனநிலயத்தினுகவீசிவிழிமானை
மானவன்மலர்க்கழலின்வைத்துமிலெனென்றால
ஆனபொழுதெப்பரிசினுனடியனுவேன். (உ)

வஞ்சனையரக்கனைநெருக்கிநெடுவாலால்
அஞ்சினுடனஞ்சுதலைதோளுறவசைத்தே
வெஞ்சிறையில்வைத்துமிலென்வென்றுமிலெனென்றால்
தஞ்சமொருவர்க்கொருவரென்றறருமன்றே. (ங)

கண்டநிருதக்கடல்கலக்கினென்வலத்தில்
திண்டிறலரக்கனுமிருக்கவொர்திறத்தின்
மண்டவுதரத்தவண்மலர்க்குழல்பிடித்துக்
கொண்டுசிறைவைத்திடுதலிற்குறைவதுண்டோ. (ச)

மீட்டுமினியெண்ணும்வினைவேறுமுளதன்றால்
ஓட்டியிவ்வரக்கரையுலைத்துரிமையெல்லாம்
காட்டுமிதுவேகருமமன்னவர்கடும்போர்
மூட்டும்வகையாவதுகொலென்றுமுயல்கின்றான். (ரு)

இப்பொழிலினைக்கடிதிறுக்குவெனிறுத்தால்
அப்பெரியபூசல்செவிசார்தலுமரக்கர்
வெப்புறுசினத்தரெதிர்மேல்வருவர்வந்தால்
துப்புறமுருக்கியுயிருண்பலிதுரூதால். (சு)

வந்தவர்கள்வந்தவர்கண்மீள்கிலர்மடிந்தால்
வெந்திறலரக்கனும்விலக்கருவலத்தால்
முந்துமெனினன்னவன்முடித்தலைமுசித்தென்
சிந்தையுறுகோபமுமவித்தினிதுசெல்வேன். (எ)

என்றுநினையாவிரவிசந்திரனியங்கும்
குன்றமிருதோளனையதன்னுருவுகொண்டான்
அன்றுலகெயிற்றிடைகொளேனமெனலானுன்
துன்றுகடிகாவினையடிக்கொடுதுகைத்தான். (அ)

முடிந்தனபிளந்தனமுரிந்தனநெரிந்த
மடிந்தனபொடிந்தனமறிந்தனமுறிந்த

---

4. மண்டோதரி - இராவணன் மனைவி.

7. முசித்து - திருகி - காநொடுசெறிந்த, தாரொடுபறிந்த, மூரொடுமது ந்த என்பன பாடாந்தரங்கள்.

இடிந்தன தகர்ந்தனவெரிந்தனகரிந்த
ஒடிந்தனவொசிந்தனவுதிர்ந்தனபிதிர்ந்த. (கூ)

வேரொடுமறிந்தசிலவெந்தசிலவிண்ணில்
காரொடுசெறிந்தசிலகாலினொடுவேலைத்
தூரொடுபறிந்தசிலதும்பியொடுவானோர்
ஊரொடுமறிந்தசிலவுக்கசிலநெக்க. (க0)

சோலைமுதன்மற்றவைசுழற்றியதிசைப்போர்
ஆலைநகரக்குளகுமானவடிபற்று
மேனிமிரவிட்டனவிசும்பின்வழிமீப்போய்
வானவர்கணந்தனவனத்தையுமடித்த. (கக)

அலைந்தனகடற்றிரையரக்கரகன்மாடம்
குலைந்துகவிடிந்தனகுலக்கிரிகளோடு
மலைந்துபொடியுற்றனமயங்கிநெடுவானத்
துலைந்துவிழுமீனினொடுவெண்மலருதிர்ந்த. (கஉ)

முடக்குநெடுவேரொடுமுகந்துலகமுற்றும்
கடக்கும்வகைவீசினகளித்ததிசையானை
மடப்பிடியினுக்குதவமையினிமிர்கைவைத்
திடுக்கியனவொத்தனவெயிற்றினிடைநால்வ. (கங)

விஞ்சையுலகத்தினுமியக்கர்மலைமேலும்
துஞ்சுதலில்வானவர்துறக்கநகரத்தும்
பஞ்சியடிவஞ்சியர்கண்மொய்த்தனர்பறித்தார்
நஞ்சமனையானுடையசோலையினறும்பூ. (கச)

பொன்றினிமணிப்பருமரன்றிசைகள்போவ
மின்றிரிவவொத்தனவெயிற்கதிருமொத்த
ஒன்றினொடுமொன்றிடைபுடைத்துதிரவூழின்
தன்றிரளொழுக்கிவிழுதாரகையுமொத்த. (கரு)

புள்ளினொடுவண்டுமிஞிறுங்களிகொள்பூவும்
கள்ளுமுகையுந்தளிர்களோடினியகாயும்
வெள்ளநெடுவேலையிடைமீனினம்விழுங்கித்
துள்ளினமரன்படநெரிந்தனதுடித்த. (கசு)

தூவியமலர்த்தொகைசுமந்துதிசைதோறும்
பூவின்மணநாறுவபுலால்கமழ்கிலாத

19. பனை - கிளை.

தேவியர்களோடுமுயர்தேவரினிதாடும்
ஆவியெனலாயதிரையார்கலிகளம்மா. (கஎ)

இடந்தமணிவேதியுமிறுத்தகடிகாவும்
தொடர்ந்தனதுரந்தனபடிந்துநெறிதூரக்
கடந்துசெலவென்பதுகடந்தவிருகாலால்
நடந்துசெலலாகுமெனலாகியதுநன்னீர். (கஅ)

வேனில்விளையாடிசுடரோனினொளிவிம்மும்
வானினிடைவீசியவரும்பணைமரத்தால்
தானவர்கண்மாளிகைதகர்ந்துபொடியாய
வானவிடியாலொடியுமால்வரைகண்மான. (ககூ)

எண்ணிறருகோடிகளெறிந்தனசெறிந்தே
தண்ணமழைபோலிடைதழைந்ததுசலத்தால்
அண்ணலநுமானடவிராவணதந்நாள்
விண்ணுமொருசோலையுளதாமெனவிதித்தான். (உ0)

தேனுறைதுளிப்பநிறைபுட்பலசில்ம்பப்
பூநிறைமணித்தருவிசும்பினிடையேபோய்
மேன்முறைநெருக்கவொளிவாளொடுவில்வீச
வானிடைநடாயநெடுமானமெனலான. (உக)

சாகநெடுமாப்பணைதழைத்தனதனிப்போர்
நாகமனையானெறியமேனிமிர்வநாளும்
மாகநெடுவானிடையிழிந்துபுனல்வாரும்
மேகமெனலாயநெடுமாகடலின்வீழ்வ. (உஉ)

வேறு.

ஊனமுற்றிடைமண்ணினுதித்தவர்
ஞானமுற்றுபுநண்ணினர்வீடெனத்
தானகற்பகத்தண்டலைவிண்டலம்
போனபுக்கனமுன்னுறைபொன்னகர். (உ௩)

மணிகொள்குட்டிமமட்டித்துமண்டபம்
துணிபடுத்தயல்வாவிகடூர்த்தொளிர்
திணிசுவர்த்தலஞ்சிந்திச்செயற்கரும்
பணிபடுத்துயர்குன்றம்படுத்தரோ. (உச)

20. தண்ணம் - குளிர்ந்தநீர்.
22. நாகம் அனையான் - மலையையும் யானையையுமொத்த திருவடி.

வேங்கைசெற்றுமராமரம்வேர்பறித்
தோங்குகற்பகம்பூவொடொடித்துராய்ப்
பாங்கர்சண்பகப்பத்திபறித்தயல்
மாங்கனிப்பணைமட்டித்துமாற்றியே. (உரு)

சந்தனங்கடகர்ந்தனதாள்பட
இந்தனங்களின்வெந்தெரிசிந்திட
முந்தனங்கவசந்தன்முகங்கெட
நந்தனங்கள்கலங்கிநடுங்கவே. (உசு)

காமரங்களிவண்டுகலங்கிட
மாமரங்கண்மடிந்தனமண்ணொடு
தாமரங்கவரங்குதகர்ந்துகப்
பூமரங்களொரிந்துபொரிந்தவே. (உஎ)

குழையுங்கொம்புங்கொடியுங்குயிற்குலம்
விழையுந்தண்டளிர்ச்சூழலுமென்மலர்ப்
புழையும்வாசப்பொதும்பும்பொலன்கொடேன்
மழையும்வண்டுமயிலுமடிந்தவே. (உஅ)

பவளமாக்கொடிவீசினபன்மழை
துவளுமின்னெனச்சூழ்வரைசுற்றிட
திவளும்பொற்பணைமாமரஞ்சேர்ந்தன
கவளயானையிநேனைடயிற்காந்தவே. (உகூ)

பறவையார்த்தெழுமோசையும்பன்மரம்
இறலெடுத்தவிடிக்குரலோசையும்
அறவனார்த்தெழுமோசையுமண்டத்தின்
புறநிலத்தையுங்கைம்மிகப்போயதே. (௩௦)

பாடலம்படர்கோங்கொடும்பன்னிசைப்
பாடலம்பணிவண்டொடுபஃறிரைப்
பாடலம்புயர்வேலையிற்பாய்ந்தன
பாடலம்பெறப்புள்ளினம்பாறவே. (௩க)

வண்டலம்புநலாற்றின்மராமரம்
வண்டலம்புனலாற்றின்மடிந்தன

25. மராமரம் - கடப்பமரங்கள்.

29. கவளம் - யானை யுணவு.

32. புனலாறு - நீராறு, உப்பங்கழி.

விண்டலம்புகநீங்கியமென்புலின்
விண்டவம்புகநீண்மரம்வீழ்ந்தவே. (௩௨)

தாமரைத்தடம்பொய்கைசெஞ்சந்தனம்
தாமரைத்தனவொத்ததுகைத்தலின்
காமரக்களிவண்டொடுங்கள்ளொடும்
காமரக்கடல்பூக்கடல்கண்டவே. (௩௩)

சிந்துவாரந்திசைதொறுஞ்சென்றன
சிந்துவாரம்புரைதிரைசேர்ந்தன
தந்துவாரம்புதவொடுதாளறத்
தந்துவாரந்துகள்படச்சாய்ந்தவே. (௩௪)

நந்தவாநத்துநாண்மலர்நாறின
நந்தவானத்துநாண்மலர்நாறின
சிந்தவாநந்திருந்துகச்செம்மணி
சிந்தவானந்திரிந்ததிரைக்கடல். (௩௫)

புல்லும்பொற்பணைப்பன்மணிப்பொன்மரம்
கொல்லுமிப்பொழுதேயெனுங்கொள்கையால்
எல்லியிட்டுவிளக்கியவிந்திரன்
வில்லுமொத்தனவிண்ணுறவீசின. (௩௬)

ஆனைத்தானமுமாடலரங்கமும்
பானத்தானமும்பாய்பரிப்பந்தியும்
ஏனைத்தாரணிதேரொடுமிற்றன
கானத்தார்தருவண்ணல்கடாவவே. (௩௭)

மயக்குபொற்குலவல்லிகள்வாரிநேர்
இயக்குறத்திசைதோறுமெறிந்தன
வெயிற்கதிர்க்கற்றையற்றுறவீழ்ந்தன
புயற்கடற்றலைபுக்கனபோல்வன. (௩௮)

பெரியமாமரமும்பெருங்குன்றமும்
இரியவீசலினிந்நெடும்பொன்மதில்

---

34. சிந்துவாரம் - நொசசிமரங்கள். சிந்து - கடலினது, வாரம் - கரையிலும். தந்து - எரிதல், வார்நீண்ட, அம் - அழகிய, தம் - அந்த (அரக்கருடைய) துவாரம் - வாயிலும். தம் - அக்கதவுகளை யுடையனவான எனவுமாம்.

35. நந்தவானம் - அசோகவனம். நந்தவான - அதிகமாக ஆகாயத்திலே போய். சிந்தவானம் - நீரைப்பெய்கிற அவ்வானம். சிந்தவானந்து - பெறும்படி வெண்சங்குகள், செம்மணிசிந்த - சங்குகள் கர்ப்பம் கலங்க.

நெரியமாடநெருப்பெழுநீரெழ
இரியல்போனவிலங்கையுமெங்கணும். (௩௯)

வேறு.

தொண்டையங்கனிவாய்ச்சீதைதுயக்கிறுலென்னைச்சுட்டாய்
விண்டவானவர்தம்முன்னேவிரிபொழிலிறுத்துவீசக்
கண்டனைநின்றுயென்றுகாணுமேலரக்கன்காய்தல்
உண்டெனவெருவினுன்போலொளித்தனனுடுவின்கோமான். (௪0)

காசறுமணியும்பொன்னுங்காந்தமுங்களுல்வதாய
மாசறுமரங்களாகக்குயிற்றியமதனச்சோலை
ஆசைகடோறுமையன்கைகளாலள்ளியள்ளி
வீசியவிளக்கலாலேவிளங்கினவுலகமெல்லாம். (௪௧)

கதறினவெருவியுள்ளங்கலங்கினவிலங்குகண்கள்
குதறினபறவைவேலைகுளித்தனகுளித்திலாத
பதறினபதைத்தவானிற்பறந்தனபறந்துபார்வீழ்ந்
துதறினசிறையைநீளவொடுக்கினவுலந்துபோன. (௪௨)

தோட்டொடுந்துதைந்ததெய்வமரந்தொறுந்தொத்தபட்டம்
கூட்டொடுந்துறக்கம்புக்ககுன்றெனக்குவவுத்திண்டோள்
சேட்டகன்பரிதிமார்பன்சீறியுந்தீண்டறன்னுல்
மீட்டவன்கருணைசெய்தாற்பெறும்பதம்விளம்பலாமே. (௪௩)

பொய்ம்முறையரக்கர்காக்கும்புள்ளுறைபுதுமென்சோலை
விம்முறுமுள்ளத்தன்னமிருக்குமவ்விருக்கமொன்றும்
மும்முறையுலகமெல்லாமுற்றுறமுடிவதான
அம்முறையையன்வைகுமாலெனநின்றதம்மா. (௪௪)

உறுசுடர்ச்சூடைக்காசவ்வுயிரினையுயிரொப்பானுக்
கறிகுறியாகவிட்டாளாதலான்வறியளந்தோ
செறிகுழற்சீதைக்கென்றோர்சிகாமணிதெரிந்துவாங்கி
எறிகடலீவதென்னவெழுந்தனனிரவியென்பான். (௪௫)

தாழிரும்பொழில்களெல்லாந்துடைத்தொருதமியனின்றுன்
ஏழிறேடேழுநாடுமளந்தவனெனலுமானுன்
ஆழியினடுவெணின்றவருவரைக்கரசுமொத்தான்
ஊழியினிறுதிக்காலத்துருத்திரமூர்த்தியொத்தான். (௪௬)

---

40. உருவின்கோமான் - நட்சத்திரங்களுக்கு நாயகனுனசந்திரன், உடுபதி. 43. விருத்தம் - விருக்ஷம், மரம். 45. செறிகுழல் - சிறையிருத்தலாலே சடையாகச்செறிந்த கூந்தலெனலாம்.

இன்னனநிகழும்வேலையாக்கியரெழுந்துபொங்கிப்
பொன்மலையென்னநின்றபுனிதனைப்புகன்றுநோக்கி
அன்னையீதென்னைமேனியார்கொலென்றச்சமுற்றார்
நன்னுதறன்னைநோக்கியறிதிபோநங்கையென்றார். (சஎ)

தீயவர்தீயசெய்தறீயவர்தெரியினல்லால்
தூயவர்துணிதலுண்டேநும்முடைச்சூழலெல்லாம்
ஆயமானெய்தவம்மானிளையவனரக்கர்செய்த
மாயமென்றுரைக்கவேயுமெய்யெனமையல்கொண்டேன். (சஅ)

என்றனளரக்கிமார்கள்வயிறலைத்திரியல்போகிக்
குன்றமுமுலகும்வானுங்கடல்களுங்குலையவோட
நின்றதோர்சமித்தங்கண்டானீக்குவலிதனையென்னாத்
தன்றடக்கைகணீட்டிப்பற்றினன்றுதையொப்பான். (சகூ)

கண்கொளவரிதுமீதுகால்கொளவரிதுதிண்கால்
எண்கொளவரிதிராவுமிருள்கொளவரிதுமாக
விண்கொளநிவந்தமேருவெள்குறவெதும்பியுள்ளம்
புண்கொளவுயர்ந்ததிப்பார்பொறைகொளவரிதுபோலாம். (ரு0)

பொங்கொளிநெடுநாளீட்டிப்புதியபால்பொழிவதாக்கும்
திங்களைநக்குகின்றவிருளெலாம்வாரித்தின்ற
அங்கைபத்திரட்டியான்றன்னுணையாலழகுமாணப்
பங்கயத்தொருவன்றானேபசும்பொனாற்படைத்ததம்மா. (ருக)

தூணெலாஞ்சுடருங்காசுசுற்றெலாமுத்தஞ்சொன்னம்
பேணலாமணியின்பத்திப்பிடரெலாமொளிகள்விம்மச்
சேணெலாம்விரியுங்கற்றைச்சேயொளிச்செல்வற்கேயும்
பூணலாமெம்மனோராற்புகழலாம்பொதுமைத்தன்றே. (ருஉ)

வெள்ளியங்கிரியைப்பண்டவ்வெந்தொழிலரக்கன்வேரோ
டள்ளினனென்னக்கேட்டானத்தொழிற்கழிவுதோன்றப்
புள்ளிமாமேருவென்னும்பொன்மலையெடுப்பான்போல
வள்ளுகிர்த்தடக்கைதன்னான்மண்ணினின்றும்வாங்கியண்ணல். (ருந)

விட்டனனிலங்கைதன்மேல்விண்ணுறவிரிந்தமாடம்
பட்டனபொடிகளானபகுத்தனபாங்குநின்ற
சுட்டனபொறிகள்பின்னைத்துளங்கினரரக்கர்தாமும்
கெட்டனர்வீரம்மாபிழைப்பரோகேடுசூழ்ந்தார். (ருச)

---

49. சமித்தம் - ஓமமண்டபம். 52. சேயொளிச்செல்வன் - சூரியன்.

நீரிடு துகிலரச்சர்நெருப்பிடு நெஞ்சர்நெக்குப்
பீரிடுமுருவர்தெற்றிப்பிணங்கிடு தாளர்பேழ்வாய்
ஊரிடுபூசலாரவுளைத்தனரோடியுற்றார்
பாரிடுபழுவச்சோலைபாலிக்கும்பருவத்தேவர். (௫௫)

அரிபடுசீற்றத்தான்றனருகுசென்றடியின்வீழ்ந்தார்
கரிபடுதிசையினீண்டகாவலாய்காவலாற்றேம்
கிரிபடுருவவுத்திண்டோட்குரங்கிடைகிழித்துவீச
எரிபடுதுகிலினொப்தினிற்றது கடிகாவென்றார். (௫௬)

சொல்லிடவெளியதன்றாற்சோலையைக்காலிற்கையின்
புல்லொடுதுகளுமின்றிப்பொடிபடநூறிப்பொன்னால்
வில்லிடுவோமந்தன்னைவேரொடுவாங்கிவீசச்
சில்லிடமொழியத்தெய்வவிலங்கையுஞ்சிதைந்ததென்றார். (௫௭)

ஆடகத்தருவின்சோலைபொடிபடுத்தரக்கர்காக்கும்
தேடருமோமம்வாங்கியிலங்கையுஞ்சிதைத்ததம்மா
கோடரமொன்றேநன்றிதிராக்கதர்கொற்றஞ்சொற்றல்
மூடருமொழியாரென்னமன்னனுமுறுவல்செய்தான். (௫௮)

தேவர்கள்பின்னுமன்னவதனுருச்சுமக்குந்திண்மைப்
பூவலயத்தைமன்றேபுகழ்வதுபுலவர்போற்றும்
மூவரினொருவனென்றுபுகல்கினுமுடிவிலாத
ஏவமக்குரங்கையையகாணுதியின்னேயென்றார். (௫௯)

மண்டலங்கிழிந்தவாயின்மறிகடன்மோழைமண்ட
எண்டிசைசுமந்தமாவுந்தேவருமிரியல்போகத்
தொண்டைவாயரக்கிமார்கள்சூல்வயிறுடைந்துசோர
அண்டமும்பிளந்துவிண்டதாமெனவநுமனார்த்தான். (௬0)

ஆக திருவிருத்தம் - எ௫௫.

---

55. உருவர் - உடம்புகளுடனே. பழுவச்சோலை - அடர்ந்தசோலை. பருவத்தேவர் - காலதேவதைகள்.

58. கோடரம் - குரங்கு.

## அ-வது. கிங்கரர்வதைப்படலம்.

அருவரைமுழையின்முட்டுமெசனியினிடிப்புமாழி
வெருவருமுழக்குமீசன்வில்லிறுமொலியுமென்னக்
குருமணிமகுடகோடிமுடித்தலைகுலுங்கும்வண்ணம்
இருபதுசெவியினூடுநுழைந்ததவ்வெழுந்தவோசை. (க)

புல்லியமுறுவறோன்றப்பொருமையுஞ்சிறிதுபொங்க
எல்லையிலாற்றன்மாக்கனெண்ணிறந்தாரையேவி
வல்லையினகலாவண்ணம்வானையும்வழியைமாற்றிக்
கொல்லலிர்குரங்கைநொய்திற்பற்றுதிர்கொணர்திரென்றான். (உ)

சூலம்வாண்முசலங்கூர்வேறோமரந்தண்டுபிண்டி
பாலமேமுதலாவுள்ளபடைக்கலம்பரித்தகையர்
ஆலமேயனையமெய்யரகலிடமழிவுசெய்யும்
காலமேலெழுந்தமூரிக்கடலெனக்கடிதுசெல்வார். (ங)

நானிலமதனினுண்டுபோரெனநவிலினச்சொல்
தேனினுங்களிப்புச்செய்யுஞ்சிந்தையர்த்தெரித்துமென்னின்
கானினும்பெரியரோசைகடலினும்பெரியர்கீர்த்தி
வானினும்பெரியர்மேனிமலையினும்பெரியர்மாதோ. (ச)

திருகுறுஞ்சினத்துத்தேவர்தானவரென்னுந்தெவ்வர்
இருகுறும்பெறிந்துநின்றவிசையினூர்வசையென்றெண்ணிப்
பொருகுறும்பென்றுவென்றுபுணர்வதுபூவுண்வாழ்க்கை
ஒருகுறுங்குரங்கென்றெண்ணிநெடிதுநாணுழக்குநெஞ்சர். (ரு)

கட்டியவாளரிட்டகவசத்தர்கழலர்திக்கைத்
தட்டியதோளர்மேகந்தடவியகையர்வானை
எட்டியமுடியர்தாளாலிடறியபொருப்பரீட்டிக்
கொட்டியபேரியென்னமழையெனக்குமுறுஞ்சொல்லார். (சு)

வானவரெறிந்ததெய்வவடுபடைவடுக்கண்மற்றைத்
தானவர்துரந்தவேதித்தழும்பொடுதயங்குந்தோளர்
யானையும்பிடியும்வாரியிடுங்கயவாயரீன்ற
கூனவெண்பிறையிற்றோன்றுமெயிற்றினர்கொதிக்குங்கண்ணர். (எ)

சக்கரமுலக்கைதண்டுதாரைவாள்பரிகஞ்சங்கு
முற்கரமுசுண்டிபிண்டிபாலம்வேல்சூலமுட்கோல்

---

3. தோமரம் - எறியாயுதம். 8. பரிகம் - வளைதடி.

பொற்கரங்குலிசம்பாசம்புகர்மழுவெழுபொற்குந்தம்
விற்கருங்கணைவிட்டேறுகழுக்கடையெழுக்கண்மின்ன. (அ)

பொன்னின்றுகளுதுந்தெய்வப்பூணினர்பொருப்புத்தோளர்
மின்னின்றபடையுங்கண்ணும்வெயில்விரிக்கின்றமெய்யர்
என்னென்றூர்க்கென்னென்னென்றுரெய்தியதறிந்திலாதார்
முன்னின்றூர்முதுகுதீயப்பின்னின்றூர்முடுகுகின்றூர். (௯)

வெய்துறுபடையின்மின்னர்வில்லினர்வீசுகாலர்
மையுறுவிசும்பிற்றேன்றுமேனியர்மடிக்கும்வாயர்
கைபரந்துலகுபொங்கிக்கடையுகமுடியுங்காலைப்
பெய்யவென்றெழுந்தமாரிக்குவமைசால்பெருமைபெற்றூர். (௧௦)

பணியுறுசெயலைசிந்தியோமமும்பறித்ததம்மா
தனியொருகுரங்குபோலாநன்றுநந்தருக்கென்கின்றூர்
இனியொருபழிமற்றுண்டோவிதனினென்றிரைத்துப்பொங்கி
முனிவுறுமனதிற்றுவிமுந்துறமுடுகுகின்றூர். (௧௧)

எற்றுறுமுரசும்வின்ஞணைறுவிட்டெடுத்தவார்ப்பும்
சுற்றுறுகழலுஞ்சங்குந்தெழிதெழித்துறப்புஞ்சொல்லும்
உற்றுடன்றென்றுயோங்கியொலித்தெழுந்தூழிப்பேர்வில்
நற்றிரைகடல்களோடுமழைகளைநாவடக்க. (௧௨)

தெருவிடமில்லென்றெண்ணிவானிடைச்செல்கின்றூரும்
புருவமுஞ்சிலையுங்கோட்டிப்புகையுயிர்த்துயிர்க்கின்றூரும்
ஒருவரினொருவர்முந்திமுறைமறுத்துருக்கின்றூரும்
விரிவிலதிலங்கையென்றுவழிபெறூர்விளிக்கின்றூரும். (௧௩)

வாளுறைவிதிர்க்கின்றூரும்வாயினைமடிக்கின்றூரும்
தோளுறத்தட்டிக்கல்லைத்துகள்படத்துகைக்கின்றூரும்
தாள்பெயர்த்திடப்பெறுதுதருக்கினர்நெருக்குவாரும்
கோள்வளையெயிறுதின்றுதீயெனக்கொதிக்கின்றூரும். (௧௪)

வேறு.

அனைவருமலையெனநின்றூளவறுபடைகள்பயின்றூர்
அனைவருமரினுயர்ந்தாரகலிடநெளியநடந்தார்
அனைவரும்வரனினமைந்தாரசனியினணிகளணிந்தார்
அனைவருமமரரைவென்றூரசுரரையுயிரையயின்றூர். (௧௫)

குறுகினகவசருமின்போற்குரைகழலுரகரும்வன்போர்
முறுகினபொழுதினுடைந்தார்முதுகிடைமுறுவல்பயின்றூர்

16. குறுகினகவசம் - அரைச்சட்டை.

இறுகினநிதிகிழவன்பேரிசைகெடவளகையெறிந்தார்
தெறுகுநரின்மையின்வன்றேடினவுறவுலகுதிரிந்தார். (கசு)

வரைகளையிடறுமினென்றான்மறிகடல்பருகுமினென்றால்
இரவியைவிழவிடுமென்றாலெழுமழைபிழியுமினென்றால்
அரவினதரசனையொன்றேதரையினொடுறையுமினென்றால்
தரையினையெடுமெடுமென்றாலொருவரதமைதல்சமைந்தார். (கஎ)

தூளியினிமிர்படலம்போயிமையவர்விழிதுறவெம்போர்
மீளியினினமெனவன்றாள்விரைபுலிநிரையெனவிண்டோய்
ஞூளியினணியெனவன்றேறலைகடல்விடமெனவஞ்சா
வாளியின்விசைகொடுதிண்கார்வரைவருவனவெனவந்தார். (கஅ)

பொறிதரவிழியுயிரொன்றேபுகையுகவயிலொளிமின்போல்
செறிதரவுருமதிர்கின்றார்திசைதொறும்விசைகொடுசென்றார்
எறிதருகடையுகவன்காலிடறிடவுருமினம்போய்
மறிதரமழையகல்விண்போல்வடிவழிபொழிலைவளைந்தார். (கசு)

வயிரொலிவளையொலிவண்கார்மழையொலிமுரசொலிமண்பால்
உயிருலைவுறநிமிரும்போருருமொலிசெவியினுணர்ந்தான்
வெயில்விரிகதிரவனும்போய்வெருவிடவெளியிடைவிண்டோய்
கயிலையின்மலையெனநின்றானனையவர்வருதொழில்கண்டான். (௨0)

இதவியலிதுவெனமுந்தேயியைவுறலினிதுதெரிந்தான்
பதவியலறிவுபயந்தலதினலபயனுளதுண்டோ
சிதவியல்கடிபொழிலொன்றேசிதறியசெயறருதிண்போர்
உதவியலினிதினுவந்தானெவரினுமதிகமுயர்ந்தான். (௨க)

இவனிவனிவனெனநின்றாரிதுவெனமுதலியெதிர்ந்தார்
பவனனின்முடுகிநடந்தார்பகலிரவுறமிடைகின்றார்
புவனியுமலையும்விசும்பும்பொருவருநகருமுடன்போர்த்
துவனியிலதிரவிடம்போற்சுடர்விடுபடைகடிரந்தார். (௨௨)

மழைகளுமறிகடலும்போய்மதமறமுரசமறைந்தார்
முழைகளினிதழ்கடிறந்தார்முதுபுகைகதுவமுனிந்தார்
பிழையிலபடவரவின்றேள்பிடருறவடியிடுகின்றார்
கழைதொடர்வனமெரியுண்டாலெனவெறிபடைஞர்கலந்தார். (௨௩)

---

16. நிதிகிழவன் - சங்கநிதி பதுமநிதிகளுக்கு ரியவனான குபேரன்.
22. விடம்போற்சுடர்விடுதல் - விஷாக்கினிபோல் சுவலித்தல்.

அறவனுமதனையறிந்தானருகினினமுகினமைந்தார்
இறவினினுதவுநெடுந்தாருயர்மரமொருகையியைந்தான்
உறவருதுணையெனவன்றேவுதவியவதனைபுவந்தான்
நிறைகடல்கடையுநெடுந்தாண்மலையெனநடுவணிமிர்ந்தான். (உச)

பருவரைபுரைவனவன்றோள்பனிமலையருவிநெடுங்கால்
சொரிவனபலவெனமண்டோய்துறையொருகுருதிசொரிந்தார்
ஒருவரையொருவர்தொடர்ந்தாருயர்தலைபுடையவுருண்டார்
அருவரைநெறியவிழும்பேரசனியுமசையவறைந்தான். (உரு)

பறைபுரைவிழிகள்பறிந்தார்படியிடைநெடிதுபடிந்தார்
பிறைபுரையெயிறுமிழந்தார்பிடரொடுதலைகள்பிளந்தார்
குறைவுயிர்சிதறநெரிந்தார்குடரொடுகுருதிகுழைந்தார்
முறைமுறைபடைகளெறிந்தார்முடையுடன்மறியமுறிந்தார். (உசு)

புடையொடுவிடுகனலின்காய்பொறியிடைமயிர்கள்புகைந்தார்
தொடையொடுமுதுகுதுணிந்தார்சுழிபடுகுருதிசொரிந்தார்
படையிடையொடியநெடுந்தோள்பறிதரவயிறுதிறந்தார்
இடையிடைமலையின்விழுந்தாரிகல்பொரமுடுகியெழுந்தார். (உஎ)

புடைபடவிருளின்மிடைந்தார்பொடியிடைநெடிதுபுரண்டார்
விதைபடுமுயிரர்விழுந்தார்விளிவொடுவிழியுமிழந்தார்
கதையொடுமுதிரமலைந்தார்கணைபொழிசிலையர்கலந்தார்
உதைபடவுரனுநெரிந்தாருதறுடுகுருதியுமிழ்ந்தார். (உஅ)

அயலயன்மலையொடறைந்தானடுபகையரைகையடைந்தார்
வியலிடமறையவிரிந்தார்மிசையுலகடையமிடைந்தார்
புயமுறுகடலின்விழுந்தார்புடைபுடைசிதைவொடுசென்றார்
உயர்வுறவிசையினெறிந்தானுடலொடுமுலகுதுறந்தார். (உகூ)

வேறு.

பற்றித்தாளொடுதோள்பறித்தெறிந்தனன்பாரின்
இற்றவெஞ்சிறைவெற்பினமாமெனக்கிடந்தார்
கொற்றவாலிடைக்கொடுந்தொழிலரக்கரையடங்கச்
சுற்றிவீசலிற்பம்பரமாமெனச்சுழன்றார். (௩௦)

வாள்களிற்றனவிற்றனவரிசிலைவயிரத்
தோள்களிற்றனவிற்றனசுடர்மழுச்சூலம்

---

26. பறை - அகன்றவாயுள்ள தோட்பறை அதாவது ஒருதோளிலே சேரமார்பிலும் இடக்கையிலுங்கொண்டு கொட்டுகிற ஓர்வகைவாச்சியம்.

நாள்களிற்றனவிற்றனநகையெயிற்றீட்டம்
தாள்களிற்றனவிற்றனபடையுடைத்தடக்கை. (௩௧)

தெறித்தவன்றலெதெறித்தனசெறிசுடர்க்கவசம்
தெறித்தபைங்கழல்தெறித்தனசிலம்பொடுபொலந்தார்
தெறித்தபன்மணிதெறித்தனபெரும்பொறித்திறங்கள்
தெறித்தகுண்டலந்தெறித்தனகண்மணிசிதறி. (௩௨)

உக்கபற்குவையுக்கனதுவக்கெலும்புதிர்வுற்
றுக்கமுற்கரமுக்கனமுசுண்டிகளுடைவுற்
றுக்கசக்கரமுக்கனவுடறிறந்துயிர்கள்
உக்ககற்பணமுக்கனவுயர்மணிமகுடம். (௩௩)

தாள்களாற்பலர்தடக்கைகளாற்பலர்தாக்கும்
தோள்களாற்பலர்சுடர்விழியாற்பலர்தொடரும்
கோள்களாற்பலர்குத்துகளாற்பலர்தத்தம்
வாள்களாற்பலர்மரங்களினாற்பலர்மடிந்தார். (௩௪)

ஈர்க்கப்பட்டனர்சிலர்சிலரிடியுண்டுபட்டார்
பேர்க்கப்பட்டனர்சிலர்சிலர்பிடியுண்டுபட்டார்
ஆர்க்கப்பட்டனர்சிலர்சிலரடியுண்டுபட்டார்
பார்க்கப்பட்டனர்சிலர்சிலர்பயமுண்டுபட்டார். (௩௫)

ஓடிக்கொன்றனன்சிலவரையுடலுடனோறும்
கூடிக்கொன்றனன்சிலவரைக்கொடிநெடுமரத்தால்
சாடிக்கொன்றனன்சிலவரைப்பிணந்தொறுந்தடவித்
தேடிக்கொன்றனன்சிலவரைக்கறங்கெனத்திரிவான். (௩௬)

முட்டினார்படமுட்டினான்முறைமுறைமுடுகிக்
கிட்டினார்படக்கிட்டினான்கிரியெனநெருங்கிக்
கட்டினார்படக்கட்டினான்கைகளின்மெய்யின்
தட்டினார்படத்தட்டினான்மலையெனத்தகுவான். (௩௭)

மறக்கினுங்கொல்லுமுணரினுங்கொல்லுமால்விசும்பில்
பறக்கினுங்கொல்லும்படரினுங்கொல்லுமின்படைக்கை
நிறக்கருங்கழலரக்கர்கணெறிதொறும்பொறிகள்
பிறக்கநின்றெறிபடைகளைத்தடக்கையாற்பியையும். (௩௮)

சேறும்வண்டலுமூளையுநிணமுமாய்த்திணிய
நீறுசேர்நெடுந்தெருவெலாநீத்தமாய்நிரம்ப

36. சிலவரை - சிலரை.

ஆறுபோல்வருங்குருதியவ்வநுமனைலலைப்புண்
டீறில்வாய்தொறுமுமிழ்வதேயொத்ததவ்விலங்கை. (ஙக)

கருதிவாலினுங்கையினுங்காலினுங்கட்டிச்
சுருதியேயன்னமாருதிமரத்திடைதுரப்பான்
நிருதரெந்திரத்திடுகரும்பாமெனநெரிவார்
குருதிசாறெனப்பாய்வதுகுரைகடற்கூனில். (சo)

எடுத்தரக்கரையெறிதலுமவருடலெற்றக்
கொடித்திண்மாளிகையிடிந்தனமண்டபங்குலைந்த
தடக்கையானைகண்மறிந்தனகோபுரந்தகர்ந்த
பிடிக்குலங்களும்புரவியுமவிந்தனபெரிய. (சக)

தத்தமாடங்கடம்முடலாற்சிலர்தகர்த்தார்
தத்தமாதரைத்தங்கழலாற்சிலர்சமைத்தார்
தத்தமாக்களைத்தம்படையாற்சிலர்தடிந்தார்
எற்றிமாருதிதடக்கைகளான்விசித்தெறிய. (சஉ)

ஆடன்மாக்களிற்றனையவனரக்கியக்கருளி
வீடுநோக்கியேசெல்கென்றுசிலவரைவிட்டான்
கூடினர்க்கவருயிரெனச்சிலவரைக்கொடுத்தான்
ஊடினர்க்கவர்மனைதொறுஞ்சிலவரையுய்த்தான். (சங)

தருவெலாமுடறெற்றியெலாமுடல்சதுக்கத்
துருவெலாமுடலுவரியெலாமுடலுள்ளோர்க்
கருவெலாமுடல்காயமெலாமுடலரக்கர்
தெருவெலாமுடறேயமெலாமுடல்சிதறி. (சச)

ஊனெலாமுயிர்கவருங்காலனேய்ந்துலந்தான்
தானெலாரையுமாருதிசாடுகைதவிரான்
மீனெலாமுயிர்மேகமெலாமுயிர்மேன்மேல்
வானெலாமுயிர்மற்றுமெலாமுயிர்சுற்றி. (சரு)

ஆகவிச்செறுவிளைவுறுமமைதியினரக்கர்
மோகமுற்றனராமெனமுறைமுறைமுனிந்தார்
மாகமுற்றவுமாதிரமுற்றவும்வளைந்தார்
மேகமொத்தனர்மாருதிவெய்யவனொத்தான். (சசு)

அடலரக்கருமார்த்தலினலைத்தலினயராப்
புடைபெருத்துயர்பெருமையிற்கருமையிற்பொலிவின்

40. கூன் - கருப்பஞ்சாற்றைக் காய்ச்சும்பெரியபானை. 44. காயம் - ஆகாயம்.

மிடலயிற்படைமீனெனவிளங்கலிற்கலங்கும்
கடனிகர்த்தனர்மாருதிமந்தரங்கடுத்தான். (சஎ)

கரதலத்தினுங்காலினும்வாலினுங்கதுவ
நிரைமணித்தலைநெரிந்துகச்சாய்ந்துயிர்நீப்பார்
சுரர்நடுக்குறவமுதுகொண்டெழுந்தநாடொடரும்
உரகரொத்தனரநுமனுங்கலுழனையொத்தான். (சஅ)

மானமுற்றதம்பகையினுன்முனிவுற்றுவளைந்த
மீனுடைக்கடலுலகினினுளவெலாமிடைந்த
ஊனறக்கொன்றுதுகைக்கவுமொழிவிலாநிருதர்
ஆனையொத்தனராளரியொத்தனனநுமன். (சகூ)

எய்தவெற்றினவெறிந்தனவீர்த்தனவிகலின்
பொய்தகுத்தினபொதுத்தனதொளைத்தனபோழ்ந்த
கொய்தசுற்றினபற்றினகுடைந்தனபொலிந்த
ஐயன்மற்பெரும்புயத்தனபுண்ணளப்பரிதாள். (ருO)

கார்க்கருந்தடங்கடல்களுமழைமுகிற்கணனும்
வேர்க்கவெஞ்செருவிளைத்தெழும்வெள்ளெயிற்றரக்கர்
போர்க்குழாம்படிபூசலினையனைப்புகழ்வுற்
றார்க்கும்விண்ணவரமலையேயுயர்ந்ததன்றமரில். (ருக)

மேவும்வெஞ்சினத்தரக்கர்கண்முறைமுறைவிசையால்
ஏவும்பல்படையெத்தனைகோடிகளெனினும்
தூவுந்தேவருமகளிருமுனிவருஞ்சொரிந்த
பூவும்புண்களுந்தெரிந்திலமாருதிபுயத்தில். (ருஉ)

பெயர்க்குஞ்சாரிகைகறங்கெனத்திசைதொறும்பெயர்வின்
உயர்க்கும்விண்மிசையோங்கலின்மண்ணின்வந்துறலின்
அயர்ந்துவீழ்ந்தனரழிந்தனரரக்கராயுள்ளார்
வெயர்த்திலன்மிசையுயிர்த்திலனல்லறவீரன். (ருங)

எஞ்சலக்கணத்தறிந்திலமிராவணனேவ
நஞ்சமுண்டவராமெனவநுமன்மேனடந்தார்
துஞ்சினாரல்லதியாவருமறத்தொடுந்தொலைவுற்
றஞ்சினாரில்லையரக்கரில்வீரர்மற்றியாரோ. (ருச)

---

49. ஆளரி - நரசிங்கம். அமலை - சத்தம். 54. அக்கணத்தினில் - அந்த அர க்கர்கூட்டத்தில்.

வந்தகிங்கரரேயெனுமாத்திரைமடிந்தார்
நந்தவானத்துநாயகரோடினர்நடுங்கிப்
பிந்துகாலினர்கையினர்பெரும்பயம்பிடரின்
உந்தவாயிரம்பிணக்குவைமேல்விழுந்துளேவார். (ருரு)

விரைவினுற்றனர்விம்மலுற்றியாதொன்றும்விளம்பார்
கரதலத்தினுற்பட்டதுங்கட்டுரைக்கின்றார்
தரையினிற்கிலர்திசைதொறுநோக்கினர்சலிப்பார்
அரசன்மற்றவரலக்கணேயுரைத்திடவறிந்தான். (ருசு)

இறந்துநீங்கினரோவின்றெனுணையயிகழ்ந்து
துறந்துநீங்கினரோவன்றிவெஞ்சமந்தொலைந்தார்
மறந்துநீங்கினரோவென்கொல்வந்ததென்றுரைத்தான்
நிறஞ்செருக்குறவாய்தொறுநெருப்புமிழ்கின்றான். (ருஎ)

வேறு.

சலந்தலைக்கொண்டனராயதன்மையார்
அலந்திலர்செருக்களத்தஞ்சினாரலர்
புலந்தெரிபொய்க்கரிபுகலும்புன்கணார்
குலங்களினவிந்தனர்குரங்கினாலென்றார். (ருஅ)

ஏவலினெய்தினரிருந்தவெண்டிசைத்
தேவரைநோக்கினனுணுஞ்சிந்தையான்
யாவதென்றறிந்திலீர்போலுமாலென்றான்
மூவகைபுலகையும்விழுங்கமூள்கின்றான். (ருகூ)

மீட்டவருரைத்திலர்பயத்தின்விம்முவார்
தோட்டலரினமலர்த்தொங்கன்மோலியன்
வீட்டியதரக்கரையென்னும்வெவ்வுரை
கேட்டதோகண்டதோகிளத்துவீரென்றான். (கூ0)

கண்டனமொருபுடைநின்றுகண்களால்
தெண்டிரைக்கடலெனவளைந்தசேனையை
மண்டலந்திரிந்தொருமரத்தினாலடி
உண்டதக்குரங்கினமொழிவதன்றென்றார். (கூக)

ஆ திருவிருத்தம் - அககூ.

## ௬௰-வது. சம்புமாலிவதைப்படலம்.

கூம்பினகையனின்றகுன்றெனக்குவவுத்திண்டோட்
பாம்பிவர்தறுகட்சம்புமாலியென்பவனைப்பாரா
வாம்பரித்தானையோடுவளைத்ததன்டீறனைமாற்றித்
தாம்பினிற்பற்றித்தந்தெனமனச்சினந்தணித்தியென்றான். (க)

ஆயவன்வணங்கிவீரமளக்கருமளக்கர்முன்னர்
நீயிதுமுடித்தியென்றுநேர்ந்தனைநினைவினெண்ணி
ஏயினையென்னப்பெற்றாலென்னின்யாருயர்ந்தாரென்றுப்
போயினனிலங்கைவேந்தன்போர்ச்சினம்போவதொப்பான். (உ)

தன்னுடைத்தானையோடுந்தயமுகன்றருகென்றேய
மன்னுடைச்சேனையோடுந்தாதைவந்தீந்தவாளின்
மின்னுடைப்பரவையோடும்வேறுளோர்சிறப்பின்விட்ட
பின்னுடையனிகத்தோடும்பெயர்ந்தனன்பெரும்போர்பெற்றான். ()

உருமொத்தமுழக்கிற்செங்கண்வெள்ளெயிற்றோடைநெற்றிப்
பருமித்தக்கிரியிற்றான்றும்வேழமும்பதுமத்தண்ணல்
நிருமித்தவெழிலிமுற்றிற்றென்னலாநிலையநேமிச்
சொரிமுத்தமாலைசூழ்ந்துகிற்கொடித்தடந்தேர்சுற்ற. (ச)

காற்றினைமருங்கிற்கட்டிக்கால்வகுத்துயிருங்கூட்டிக்
கூற்றினையேற்றியன்னகுலப்பரிகுழுவக்குன்றின்
தூற்றினிடுழுப்பியாண்டுத்தொகுத்தெனச்சுழல்பைங்கண்ண
வேற்றினப்புலியேறென்னவியந்தெழும்பதாதியீட்டம். (ரு)

தோமரமுலக்கைகூர்வாள்சுடர்மழுக்குலிசந்தோட்டி
தாமரந்தின்றகூர்வேறழலொளிவட்டஞ்சாபம்
காமர்தண்டெழுக்கள்காந்துங்கற்பணங்கால்பாசம்
மாமரம்வலயம்வெங்கோன்முதலியவயங்கமாதோ. (சு)

எத்தியவயில்வேல்குந்தமெழுக்கழுமுதலவேந்திக்
குத்தியதிளைப்பமீதிற்குழுவினமழைமாக்கொண்டல்
பொத்துகுபொருவினன்னீர்சொரிவனபோவபோலச்
சித்திரப்பதாகையீட்டந்திசைதொறுஞ்செறிவசெல்ல. (எ)

பல்லியந்துவைப்பநன்மாப்பணிலங்கண்முரலப்பொன்றேர்ச்
சில்லிகளிடிப்பவாசிசிரித்திடச்செறிபொற்றாரும்

1. பாம்பிவர் - பாம்பையொத்த. 7. குந்தம் - எறியீட்டி.
3. வேறுளோர் - இவனுக்குச்சரியான ராக்ஷத்ராஜர்கள்.

வில்லுநின்றிசைப்பயானைமுழக்கம்விட்டார்ப்பவிண்டோய்
ஒல்லொலிவானிற்றேவருரைதெரிவொழிக்கமன்றோ. (அ)

மின்னகுகிரிகள்யாவுமேருவின்விளங்கித்தோன்றத்
தொன்னகர்பிறவுமெல்லாம்பொலிந்தனதுறக்கமென்ன
அன்னவன்சேனைசெல்லவார்கவியிலங்கையாய
பொன்னகர்தகர்ந்துபொங்கியார்த்தெழுதூளிபோர்க்க. (கூ)

ஆயிரமைந்தொடைந்தாமாழியந்தடந்தேரத்தேர்க்
கேயினவிரட்டியானையானையினிரட்டிபாய்மா
போயினபதாதிசொன்னபுரவியினிரட்டிபோலாம்
தீயவன்றடந்தேர்சுற்றித்தெற்றெனச்சென்றசேனை. (க0)

வின்மறைக்கிழவர்நாலுவிஞ்சையர்வரத்தின்மிக்கார்
வன்மறக்கண்ணராற்றல்வரம்பிலாவயிரத்தோளார்
தொன்மறக்குலத்தர்தூணிதூக்கியபுறத்தர்மார்பின்
கன்மறைத்தொளிருஞ்செம்பொற்கவசத்தர்கடுந்தேராட்கள். (கக)

பொருதிசையானையூரும்புனிதனைப்பொருவும்பொற்பர்
கரிபடைத்தொழிலுமற்றையங்குசத்தொழிலுந்தொக்கார்
நிருதியிற்பிறந்தவீரர்நெருப்பிடைபரப்புங்கண்ணர்
பரிதியிற்பொலியுமெய்யர்படுமதக்களிற்றின்பாகர். (க௨)

ஏர்கெழுகதியுஞ்சாரிபதினெட்டுமியல்பினெண்ணிப்
போர்கெழுபடையுங்கற்றவித்தகப்புலவர்போரில்
தேர்கெழுமறவர்யானைச்சேவகர்சிரத்திற்செல்லும்
தார்கெழுபுரவியென்னுந்தம்மனந்தாவப்போனார். (கங)

அங்நெடுந்தானைசுற்றவமரரையச்சஞ்சுற்றப்
பொன்னெடுந்தேரிற்போனான்பொருப்பிடைநெருப்பிற்பொங்கித்
தன்னெடுங்கண்கள்காந்தத்தாழ்பெருங்கவசமார்பின்
மின்னிடவெயிலும்வீசவில்லிடுமெயிற்றுவீரன். (கச)

நந்தனவனத்துணின்றநாயகன்றானுந்தன்னூனும்
வந்திலரரக்கரென்னுமனத்தினன்வழியைநோக்கிச்
சந்திரன்முதலவானமீனெலாந்தழுவநின்ற
இந்திரதனுவிற்றோன்றுந்தோரணமிவர்ந்துநின்றான். (கரு)

கேழிருமணியும்பொன்னும்விசும்பிருள்கிழித்துவீங்க
ஊழிருங்கதிர்களோடுந்தோரணத்தும்பர்மேலான்

11. தூணி - அம்பறாத்தூணி.

சூழிருங்கதிர்களெல்லாந்தோற்றிடச்சுடருஞ்சோதி
ஆழியினடுவட்டோன்றுமருக்கனேயனையனானான். (கசு)

செல்லெரடுமேகஞ்சிந்தத்திரைக்கடல்சிலைப்புத்தீரக்
கல்லினைகிடந்தநாகமுயிரொடுவிடமுங்காலக்
கொல்லியலரக்கர்நெஞ்சிற்குடிபுகவச்சம்வீரன்
வில்லெனவிடிக்கவிண்ணோர்நடுக்குறவீரனார்த்தான். (கஎ)

நின்றனதிசைக்கண்வேழநெடுங்களிச்செருக்குநீங்கத்
தென்றிசைநமனுமுள்ளந்துணுக்கெனச்சிந்திவானில்
பொன்றலின்மீன்களெல்லாம்பூவெனவுதிரப்பூவும்
குன்றமும்பிளக்கவேலைதுளக்குறக்கொட்டினான்றோள். (கஅ)

அவ்வழியரக்கரெல்லாமலைநெடுங்கடலினார்த்தார்
செவ்வழிச்சேறலாற்றார்பிணப்பெருங்குன்றந்தெற்றி
வெவ்வழிகுருதிவெள்ளம்புடைமிடைந்துயர்ந்துவீங்க
எவ்வழிச்சேறுமென்றார்தமருடம்பிடறிவீழ்வார். (கசு)

ஆண்டுநின்றரக்கன்வெவ்வேறணிவகுத்தனிகந்தன்னை
மூண்டிருபுடையுமுன்னுமுறைமுறைமுசவேவித்
தூண்டினன்றானுந்திண்டேர்தோரணத்திருந்ததோன்றல்
வேண்டியதெதிர்ந்தாலென்னவீங்கினன்விசயத்திண்டோள். (உ௦)

ஐயனுமமைந்துநின்றானாழியானளவிலும்மம்
நெய்சுடர்விளக்கிற்றோன்றுநெற்றியேநெற்றியாக
மொய்ம்மயிர்ச்சேனைபொங்குமுரணயிலுகிர்வாண்மொய்த்த
கைகளேகைகளாகக்கடைக்கூழைதிருவாலாக. (உக)

வயிர்கள்வால்வளைகள்விம்மவரிசிலைசிலைப்பமாயப்
பயிர்களார்ப்பெடுப்பமூரிப்பல்லியங்குமுறப்பற்றிச்
செயிர்கொள்வாளரக்கர்சீற்றஞ்செருக்கினர்படைகள்சிந்தி
வெயில்கள்போலொளிகள்வீசவீரன்மேற்கடிதுவிட்டார். (உஉ)

வேறு.

கருங்கழலரக்கர்தம்படைக்கலங்கரத்தால்
பெருங்கடலுறப்புடைத்திறுத்துகப்பிசைந்தான்
விரிந்தனபொறிக்குலநெருப்பெனவெகுண்டாண்
டிருந்தவன்கிடந்ததொரெழுத்தெரிந்தெடுத்தான். (உரு)

---

17. செல் - மேகம். 18. பூவும் - பூமியும்.

21. நெற்றி - படையின் முன்னணி, கை-பக்கவணி, கூழை-பின்னணி.

இருந்தனனெழுந்தனனிழிந்தனனுயர்ந்தான்
திரிந்தனன்புரிந்தனனெனநனிதெரியார்
விரிந்தவர்குவிந்தவர்விலங்கினர்கலந்தார்
பொருந்தினர்நெருங்கினர்களப்படப்புடைத்தான். (உச)

எறிந்தனவெய்தனவிடியுருமெனமேல்
செறிந்தனபடைக்கலமிடக்கையிற்சிதைத்தான்
முறிந்தனதெறுங்கரிமுடிந்தனதடந்தேர்
மறிந்தனபரிநிரைவலக்கையின்மலைந்தான். (உரு)

இழந்தனநெடுங்கொடியிழந்தனவிருங்கோ
டிழந்தனநெடுங்கரமிழந்தனவியன்றாள்
இழந்தனமுழங்கொலியிழந்தனமதம்பா
டிழந்தனபெருங்கதமிருங்கவுளியானை. (உசு)

நெரிந்தனதடஞ்சுவர்நெரிந்தனபெரும்பார்
நெரிந்தனநுகம்புடைநெரிந்தனவதன்கால்
நெரிந்தனகொடிஞ்சில்கணெரிந்தனவியன்றார்
நெரிந்தனகடும்பரிநெரிந்தனநெடுந்தேர். (உஎ)

ஒடிந்தனவுருண்டனவுலந்தனபுலந்த
இடிந்தனவெரிந்தனநெரிந்தனவெழுந்த
மடிந்தனமறிந்தனமுறிந்தனமலைபோல்
படிந்தனமுடிந்தனகிடந்தனபரிமா. (உஅ)

வெருண்டனர்வியந்தனர்விழுந்தனரெழுந்தார்
மருண்டனர்வயங்கினர்மறிந்தனரிறந்தார்
உருண்டனருலைந்தனருழைத்தனர்பிழைத்தார்
சுருண்டனர்புரண்டனர்தொலைந்தனர்மலைந்தார். (உகு)

வேறு.

கரிகொடுகரிகளைக்களப்படப்புடைத்தான்
பரிகொடுபரிகளைத்தலத்திடைப்படுத்தான்
வரிசிலைவயவரைவயவரின்மடித்தான்
நிரைமணித்தேர்களைத்தேர்களினெரித்தான். (௩0)

மூளையுமுதிரமுமுழங்கிருங்குழம்பாய்
மீளருங்குழைபடக்கரிவிழுந்தழுந்தத்

25. எறிந்த - சாஸ்திரங்களும். எய்தன - எய்த அஸ்திரங்களும்.
26. மதம்பாடு - மதநீர் சொரிதல்.

தாளொடுந்தலையுகத்தடநெடுங்கிரிபோல்
தோளொடுநிருதரைவாளொடுந்துகைத்தான். (௩௧)

மல்லொடுமலைமலைத்தோளரைவளைவாய்ப்
பல்லொடுநெடுங்கரப்பகட்டொடும்பருந்தாள்
வில்லொடுமயிலொடும்வெயிலொடும்விளிக்கும்
சொல்லொடுமுயிரொடுநிலத்தொடுந்துகைத்தான். (௩௨)

புகைநெடும்பொறிபுகுந்திசைதொறும்பொலிந்தான்
சிகைநெடுஞ்சுடர்விடுந்தேர்தொறுஞ்சென்றான்
தகைநெடுங்கரிதொறும்பரிதொறுஞ்சரித்தான்
நகைநெடும்படைதொறுந்தலைதொறுநடந்தான். (௩௩)

வென்றிவெம்புரவியின்வெரிநினும்விரவார்
மன்றலந்தாரணிமார்பினுமணித்தேர்
ஒன்றினின்றொன்றினுமுயர்மதமழைதாழ்
குன்றினுங்கடையுகத்துருமெனக்குதித்தான். (௩௪)

பிரிவருமொருபெருங்கோலெனப்பெயரா
இருவினைதுடைத்தவரறிவெனவெவர்க்கும்
வருமுலைவிலைக்கெனமதித்தனர்வழங்கும்
தெரிவையர்மனமெனக்கறங்கெனத்திரிந்தான். (௩௫)

அண்ணலவ்வரியினுக்கடியவரவன்சீர்
நண்ணுவரெனும்பொருணவையறத்தெரிப்பான்
மண்ணினும்விசும்பினுமருங்கினும்வலித்தார்
கண்ணினுமனத்தினுந்தனித்தனிக்கலந்தான். (௩௬)

கொடித்தடந்தேரொடுங்குரகதக்குழுவை
அடித்தொருதடக்கையினிலத்தினிட்டரைத்தான்
இடித்துநின்றதிர்கதத்தெயிற்றுவன்பொருப்பைப்
பிடித்தொருதடக்கையினுயிருகப்பிழிந்தான். (௩௭)

கறுத்தெழுநிறத்தினரெயிற்றினர்கயிற்றார்
செறுத்தெரிவிழிப்பவர்சிகைக்கழுவலத்தார்
மறுத்தெழுமறலிகளிவரெனவதிர்ந்தார்
ஒறுத்துருத்திரனெனத்தனித்தனியுதைத்தான். (௩௮)

33. புகைநெடும்பொறிபுகுந்திசைதொறுமென்பது - தனக்குக் கோபமூண்ட இடமெல்லாஞ்சென்று விளங்கினனென்க.

36. மனத்தினும் மென்பதனால் மனோவேகத்திலும் அதிகமாய் அவ்விடங்களெல்லாம் கலந்தானெனவுமாம்.

சக்கரந்தோமரமுலக்கைதண்டயில்வாள்
மிக்கெனதேர்பரிகுடைகொடிவிரவி
உக்கனகுருதியம்பெருந்திரையுருட்டப்
புக்கனகடலிடைநெடுங்கரப்பூட்கை. (௩௯)

எட்டினவிசும்பினையெழுப்படவெழுந்த
முட்டினமலைகளைமுயங்கினதிசையை
ஒட்டினவொன்றையொன்றூடடித்துதைந்து
தட்டுமுட்டாடினதலையொடுதலைகள். (௪௦)

வேறு.

கானைகாவல்வேழக்கணங்கள்கதவாளரிகொன்றை
வானையெய்தத்தனியேநின்றமதமால்வரையொப்பான்
தேனைபுரைகண்கனலேசொரியச்சீற்றஞ்செருக்கினான்
தானையானுஞ்சம்புமாலிகாலன்றன்மையான். (௪௧)

காற்றிற்கடியகலினப்புரவிநிருதர்களத்துக்கார்
ஆற்றுக்குருதிநிணத்தோடடுத்தவள்ளற்பெருங்கொள்ளைச்
சேற்றிற்செல்லாத்தேரினூழியாழிநிலைதேரா
வீற்றுச்செல்லும்வெளியோவில்லையளியன்விரைகின்றான். (௪௨)

வதியொன்றாற்றேருமஃதாலெளியோருயிர்கோடல்
நீதியன்றாலுடன்வந்தாரைக்காக்குநிலையில்லாய்
சாதியன்றேற்பிறிதென்செய்தியவர்பின்றனிநின்றாய்
போதியென்றான்பூத்தமரம்போற்புண்ணாற்பொலிகின்றான். (௪௩)

நன்றுநன்றுன்கருணையென்னுநெருப்புநகநக்கான்
பொன்றுவாரினொருவனென்றாய்போலுமெனையென்னு
வன்றிண்சிலையின்வயிரக்காலால்வடித்திண்சுடர்வாளி
ஒன்றுபத்துநூறுநூறாயிரமுமுதைப்பித்தான். (௪௪)

செய்திசெய்திசிலைகைக்கொண்டால்வெறுங்கைதிரிவோரை
நொய்தின்வெல்வதரிதோவென்னுமுறுவலுகநக்கான்
ஐயனங்குமிங்குங்காலாலழியுமழையென்ன
எய்தவெய்தபகழியெல்லாமெழுவால்வழுவித்தான். (௪௫)

முற்றமுனிந்தானிருதன்முனியாமுன்னும்பின்னுஞ்சென்
றுற்றபகழியுறுதுமுறியாவுதிர்கின்றதைபுன்னாச்
சுற்றுநெடுந்தேரோட்டித்தொடர்ந்தான்றொடருந்துறைகாணான்
வெற்றியெழுவைமழுவாயம்பாலறுத்துவீழ்த்தினான். (௪௬)

43. வதி - ஆயுதம்.

சலித்தானையன்கையாலெய்யுஞ்சரத்தையுகச்சாடி
ஒலித்தாரமரர்கண்டாரார்ப்பத்தேரினுட்புக்குக்
கலித்தான்சிலையைக்கையால்வாங்கிக்கழுத்தினிடையிட்டு
வலித்தான்பகுவாய்மடித்தமலைபோற்றலைமண்ணிடைவீழ. (சஎ)

குதித்துத்தேருங்கோல்கொள்ளாளும்பரியுங்குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுந்தோரணத்தைவீரன்மேற்கொண்டான்
கதித்துப்பழித்துக்கழிந்தார்பெருமைகண்டுகளத்தஞ்சி
உதித்துப்புலர்ந்ததோல்போலுருவத்தமரரோடினார். (சஅ)

பிரிந்துபுலம்புமகளிர்காணக்கணவர்பிணம்பற்றி
விரிந்தகுருதிப்பேராறீர்த்துமனைகடொறும்வீச
இரிந்ததிலங்கையெழுந்தகழுகையின்றிங்கிவனாலே
சரிந்ததரக்கர்வலியென்றெண்ணியறமுந்தளிர்த்ததால். (சகூ)

புக்காரமரர்பொலந்தாரரக்கன்பொருவில்பெருங்கோயில்
விக்காநின்றார்விளம்பலாற்றார்வெருவிவிம்முவார்
நக்கானரக்கனடுங்கலென்றானையநமரெல்லாம்
உக்கார்சம்புமாலியுலந்தானென்றேகுரங்கென்றார். (ருo)

என்னுமளவினெரிந்துவீங்கியெழுந்தவெகுளியான்
உன்னவுன்னவுதிரக்குமிழிவிழியூடுமிழ்கின்றான்
சொன்னகுரங்கையானேபிடிப்பன்கடிதுதொடர்ந்தென்றான்
அன்னதுணர்ந்தசேனைத்தலைவரைவரறிவித்தார். (ருக)

ஆ திருவிருத்தம் - அகூஎ.

---

## கO-வது பஞ்சசேனுபதிகள் வதைப்படலம்.

சிலந்தியுண்பதோர்குரங்கின்மேற்சேறியேற்றிறலோய்
கலந்தபோரிடைக்கட்புலன்கடுங்கனல்கதுவ
உலந்தமால்வரையருவியாமெழுக்கற்றவொக்கப்
புலர்ந்தமாமதம்பூக்குமன்றேதிசைப்பூட்கை. (க)

இலங்குவெஞ்சினத்தஞ்சிறையெறும்வலிக்கனுழன்
உலங்கின்மேலுருத்தன்னநீகுரங்கின்மேலுருக்கின்
அலங்கன்மாலைநின்புயநினைந்தல்லுநன்பகலும்
குலுங்கும்வன்றுயர்நீங்குமால்வெள்ளியங்குன்றம். (உ)

---

47. கலித்தான் - ஆரவாரஞ்செய்த சம்புமாலி.

1. சிலம்பி - நூல்நூற்கிற ஒருவகைச்செந்து. 2. உலங்கு - கொசுகு.

உறுவதென்கொலோவானிழிவென்பதொன்றுடையார்
பெறுவதியாதொன்றுங்காண்கிலர்கேட்கிலர்பெயர்ந்தார்
சிறுமையீதொப்பதியாதுநீகுரங்கின்மேற்சேறின்
முறுவல்பூக்குமன்றேநின்றமூவர்க்குமுகங்கள். (௩)

அன்றியும்முனக்காளின்மைதோன்றுமாலரச
வென்றிவில்லவர்மெல்லியோர்தமைச்செலவிட்டாய்
நன்றியின்றொன்றுகாண்டியேலெமைச்செலநயத்தி
என்றுகைதொழுதிறைஞ்சினரரக்கனுமிசைந்தான். (௪)

உலகமூன்றிற்குமுதன்மைபெற்றொருவனையுயர்ந்தார்
திலகமண்ணுறவணங்கினர்கோயிலிற்றீர்ந்தார்
அலகிறேர்பரிகரியொடாண்மிடைந்தபோராளக்கர்
தொலைவிலாதனகதுமெனவருகெனச்சொன்னார். (௫)

ஆனைமேன்முரசறைந்தனர்வள்ளுவரழைத்தார்
பேனவேலையிற்புடைபரந்ததுபெருஞ்சேனை
சேனைமாமழைமுகிலெனப்போர்ப்பணைதுவைப்ப
மீனவானிடைமின்னெனப்படைக்கலமிடைந்த. (௬)

தானைமரக்கொடிமழைபொதுத்துயர்நெடுந்தாள
மானமாற்றருமாருதிமுனியநாளுலந்து
போனமாற்றலர்புகழெனக்கால்பொரப்புரண்ட
வானயாற்றுவெண்டிரையெனவரம்பிலபரந்த. (௭)

விரவுபோர்க்கழல்விசித்தினர்வெரிநுற்றுவிளங்கச்
சரமொடுக்கினபுட்டிலுஞ்சாத்தினர்சமையக்
கருவிபுக்கனரரக்கர்மாப்பல்லணங்கவினப்
புரவியிட்டதேர்பூட்டினபருமித்தபூட்கை. (௮)

ஆறுசெய்தனவானையின்மதங்களவ்வாற்றைச்
சேறுசெய்தனதேர்களின்சில்லியச்சேற்றை
நீறுசெய்தனபுரவியின்குரமற்றைநீற்றை
வீறுசெய்தனவப்பரிக்கலினவாய்விலாழி. (௯)

வழங்குதேர்களினிடிப்பொடுவாசியினார்ப்பும்
முழங்குவெங்களிற்றதிர்ச்சியுமொய்கழலொலியும்

6. பேனம் - நுரை.

8. கருவீ - கவசம். பல்லணம் - குதிரைச்சேணம்.

தழங்குபல்லியத்தமலியுங்கடையுகத்தாழி
முழங்குமோதையின்மும்மடங்கெழுந்தது முடுகி. (க0)

ஆழித்தேர்த்தொகையைம்பதினாயிரமஃதே
சூழிப்பூட்கைக்குத்தொகையவற்றிரட்டியின்றொகைய
ஊழிக்காற்றன்னபுரவிமற்றவற்றினுக்கிரட்டி
பாழித்தோணெடும்படைக்கலப்பதாதியின்பகுதி. (கக)

கூய்த்தருந்தொறுந்தருந்தொறுந்தானைவெங்குழுவின்
நீத்தம்வந்தியங்கிடுமிடனின்றிநெருங்கக்
காய்த்தமைந்தவெங்கதிர்ப்படையொன்றொன்றுகதுவித்
தேய்த்தெழிந்தனபொறிக்குலமழைக்குலந்தீய. (க௨)

பண்மணிக்குலம்யானையின்புடைதொறும்பரந்த
ஒண்மணிக்குலமழையிடையுருமெனவொலிப்பக்
கண்மணிக்குலங்கனலெனக்கான்றுவகதுப்பின்
தண்மணிக்குலமழையெழுகதிரெனத்தழைப்ப. (க௩)

தொக்கதாம்படைசூரிகுழன்மடந்தையர்தொடிக்கை
மக்கடாயர்மற்றியாவருந்தடுத்தனர்மறுகி
ஒக்கவேகுதுங்குரங்கினுக்குயிர்தரவொருவர்
புக்குமீண்டிலரென்றழுதிரங்கினர்புலம்பி. (க௪)

கைபரந்தெழுசேனையங்கடலிடைக்கலந்தார்
செய்கைதாவருந்தேரிடைக்கதிரெனச்செல்வார்
மெய்கலந்தமாதிகர்வருமுவமையைவென்றார்
ஐவரும்பெரும்பூதமோரைந்துமொத்தமைந்தார். (க௫)

முந்தியம்பலகறங்கிடமுறைமுறைபொறிகள்
சிந்தியம்புறுகொடுஞ்சிலையுறுமெனத்தெறிப்பார்
மைந்தியம்பறுமுனிவர்க்குமமரர்க்கும்வலியார்
இந்தியம்பகையாயவையைந்துமொத்தியைந்தார். (க௬)

வாசவன்வயக்குலிசமும்வருணன்றன்கயிறும்
ஏசிறென்றிசைக்கிழவன்றனெரிமுளைமெழுவும்
ஈசன்வன்றனிச்சூலமுமென்றிவையாவும்
ஊசிபோல்வதோர்வடிச்செயாநெடும்புயமுடையார். (க௭)

சூர்தடிந்தவன்மயிலிடைப்பறித்தவன்றோகை
பார்பயந்தவனன்னத்தினிறகிடைப்பறித்த

மூரிவெஞ்சிறகிடையிட்டுத்தொடுத்தனமுறுக்கி
வீரசூடிகைநெற்றியினயலிட்டுவிசித்தார். (கஅ)

பொன்றிணிந்ததோளிராவணன்மார்பொடும்பொருத
அன்றிழந்தகோடரிந்திடுமழகுறுகுழையர்
நின்றவன்றிசைநெடுங்களியானையினெற்றி
மின்றிணிந்தனவோடையின்வீரபட்டத்தர். (கசு)

வேறு.

நிதிநெடுங்கிழவனைநெருக்கிநீணகர்ப்
பதியொடும்பெருந்திருப்பறித்தபண்டைநாள்
விதியொடுமன்னவன்விழுந்துவெந்நிடப்
பொதியொடும்வாரியபொலன்கொள்பூணினர். (உ0)

இந்திரனிசையிழந்தேகுவானிகற்
றந்திமுன்கடாவினன்முடுகத்தாமதன்
மந்தரவாலதிபிடித்துவல்லையேல்
உந்துதியெனவலிந்தவூற்றத்தார். (உக)

பானிறுத்தந்தகன்பணியனுகிநின்
கோனினைத்திலனெனவுலகங்கூறலும்
நீனிறத்திராவணன்முனிவுநீக்குவான்
காலனைக்காலினிற்கையிற்கட்டினர். (உஉ)

மலைகளைநகுந்தடமார்பர்மால்கடல்
அலைகளைநகுநெடுந்தோளரந்தகன்
கொலைகளைநகுநெடுங்கொலையர்கொல்லனூ
துலைகளைநகுமனலுமிழுங்கண்ணினர். (உங)

தோல்கிளர்திசைதொறுமுலகைச்சுற்றிய
சால்கிளர்முழுங்கெரிதழுங்கியேறினும்
கால்கிளர்ந்தோங்கினுங்காலங்கையுற
மால்கடல்கிளரினுஞ்சரிக்கும்வண்மையார். (உச)

இவ்வகையனைவருமெழுந்ததானையர்
மொய்கிளர்தோரணமதனைமுற்றினர்

---

18. வீரசூடிகை - வீரக்குறியாக உச்சியிலே அணியும் பட்சி இறகுகளாலமைந்ததோராபரணம்.

19. நெடுங்களி - அதிகமதமயக்கங்கொண்ட திக்கஜங்களென்க.

20. பொதியொடு - மூட்டை மூட்டையாக.

21. மந்தரவாலதி - மந்தரபருவதத்தையொத்தவால்.

கையொடுகையுறவணியுங்கட்டினார்
ஐயனுமவர்நிலையமையநோக்கினான். (உரு)

அரக்கரதாற்றலுமளவில்சேனையின்
தருக்குமம்மாருதிதனிமைத்தன்மையும்
பொருக்கெனநோக்கியபுரந்தராதியர்
இரக்கமுமவலமுந்துளக்குமெய்தினார். (உசு)

இற்றனரரக்கரிப்பகலுளேயெனாக்
கற்றுணர்மாருதிகளிக்குஞ்சிந்தையான்
முற்றுறச்சுலாவியமுடிவிறானையைச்
சுற்றுறநோக்கித்தன்றோளைநோக்கினான். (உஎ)

புன்றலைக்குரங்கிதுபோலுமாலமர்
வென்றதுவிண்ணவர்புகழைவேரொடும்
தின்றவல்லரக்கரைத்திருகித்தின்றதால்
என்றனரயிர்த்தனர்நிருதரெண்ணிலார். (உஅ)

ஆயிடையநுமனுமமரர்கோனகர்
வாயினின்றவ்வழிகொணர்ந்துவைத்தமாச்
சேயொளித்தோரணத்தும்பர்ச்சேணொடு
மீயுயர்விசும்பையுங்கடக்கவீங்கினான். (உகூ)

வீங்கியவீரனைவியந்துநோக்கிய
ஓங்கியலரக்கருந்திருகினார்சினம்
வாங்கியநிலையினர்வழங்கினார்படை
ஏங்கியசங்கினமிடித்தபேரியே. (௩௦)

எறிந்தனவெய்தனவெண்ணிறந்தன
பொறிந்தெழுபடைக்கலமரக்கர்போக்கினார்
செறிந்தனமயிர்ப்புறந்தினவுதீர்வுறச்
சொறிந்தனவெனவிருந்தையன்றாங்கினான். (௩க)

உற்றுடன்றரக்கருமுருத்துடற்றினர்
செற்றுறநெருக்கினர்செருக்குஞ்சிந்தையர்
மற்றையர்வரும்பரிசிவரைவல்விரைந்
தெற்றுவெனெனவெழுவநுமனேந்தினான். (௩உ)

ஊக்கியபடைகளுமுருத்தவீரரும்
தாக்கியபரிகளுந்தடுத்ததேர்களும்

மேக்குயர்கொடியிடைமேகமாலைபோல்
நூக்கியகரிகளும்புரளநூக்கினன். (௩௩)

வார்மதக்கரிகளின்கோடுவாங்கிமாத்
தேர்படப்புடைக்குமத்தேரின்சில்லியால்
வீரரையுருட்டுமவ்வீரர்வாளினால்
தாருடைப்புரவியைத்துணியத்தாக்குமால். (௩௪)

இரண்டுதேரிரண்டுகைத்தலத்துமேந்திவே
றிரண்டுமால்யானைபட்டுருளவெற்றுமால்
இரண்டுமால்யானைகையிரண்டினேந்திவே
றிரண்டுபாலினும்வரும்பரியையெற்றுமால். (௩௫)

மாயிருநெடுவரைவாங்கிமண்ணினிட்
டாயிரந்தேர்படவரைக்குமாலழிற்
றாயிரங்களிற்றையோர்மரத்தினாலடித்
தேயெனுமாத்திரையெற்றிமுற்றுமால். (௩௬)

உதைக்கும்வெங்கரிகளையுழக்குந்தேர்களை
மிதிக்கும்வன்புரவியைத்தேய்க்கும்வீரரை
மதிக்கும்வல்லெழுவினாலரைக்குமண்ணிடைக்
குதிக்கும்வன்றலையிடைக்கடிக்குங்குத்துமால். (௩௭)

விசையின்மான்றேர்களுங்களிறும்விட்டகன்
றிசையுமாகாயமுஞ்செறியச்சிந்துமால்
குசைகொள்பாய்பரியொடுங்கொற்றவேலொடும்
பிசையுமாலரக்கரைப்பெருங்கரங்களால். (௩௮)

தீயுறுபொறியிடைச்செங்கண்வேங்கைமா
மீயுறத்தடக்கையால்வீசுதோ
ருய்பெருங்கொடியனகடலினாழ்வன
பாயுடைநெடுங்கலம்படுவபோன்றவே. (௩௯)

தாரொடுமுருளொடுந்தடக்கையாற்றனி
வீரன்விட்டெறிந்தனகடலின்வீழ்வன
வாரியினெழுஞ்சுடர்கடவுள்வானவன்
தேரினைநிகர்த்தனபுரவித்தேர்களே. (௪௦)

மீயுறவிண்ணிடைமுட்டிவீழ்வன
வாய்பெருந்திரைக்கடலழுவத்தாழ்வன

ஓய்வனபுரவிவாயுதிரங்கால்வன
வாயிடையெரியுடைவடவைபோன்றவே. (சக)

வரிந்துறவல்விதிற்சுற்றிவாலினுல்
விரிந்துறவீசலிற்கடலின்வீழ்குநர்
திரிந்தனர்செறிகயிற்றரவினுற்றிரி
அருந்திறன்மந்தரமனையராயினர். (சஉ)

வீரன்வன்றடக்கையாலெடுத்துவீசிய
வார்மதகரியினிற்றேரின்வாசியின்
மூரிவெங்கடல்புகக்கடிதின்முந்தின
ஊரின்வெங்குருதியாறீர்ப்பவோடின. (சங)

பிறைக்கடையெயிற்றினபிலத்தின்வாயின
கறைப்புனல்பொறிகளோடுமிழுங்கண்ணின
உறைத்தபுபடையினவுதிர்ந்தயாக்கைகள்
மறைத்தனமகரதோரணத்தைவானுற. (சச)

குன்றுளமரமுளகுலங்கள்பேரெழு
வொன்றலபலவுளவுயிருண்பானுளன்
அன்றினர்பலருளரையன்கையுள
பொன்றுவதல்லதுபுறத்துப்போவரோ. (சரு)

முழுமுதற்கண்ணுதன்முருகன்றுணைதகை
மழுவெனப்பொலிந்தொளிர்வயிரவான்றனி
எழுவினிற்பொலங்கழலரக்கரீண்டிய
குழுவினைக்களப்படக்கொன்றுநீக்கினன். (சசா)

வேறு.

உலந்ததுதானையுவந்தனரும்பர்
அலந்தலையுற்றதவ்வாழியிலங்கை
கலந்தகழுங்குரலின்கடலோதை
வலந்தருதோளவரைவரும்வந்தார். (சஎ)

ஈர்த்தெழுசெம்புனலெக்கரிழுக்கத்
தேர்த்துணையாழியழுந்தினர்சென்றார்
ஆர்த்தனராயிரமாயிரமம்பால்
தூர்த்தனரஞ்சனைதோன்றலுநின்றான். (சஅ)

45. அன்றினர் - பகைவர்.

எய்தகடுங்கணையாவையுமெய்தா
னொய்தகலும்படிகைகளினூறுப்
பொய்தகடோன்றுபொருந்திநெடுந்தேர்
செய்தகடும்பொறியொன்றுசிதைத்தான். (௪௯)

உற்றுறுதேர்சிதையாமுனுபர்ந்தான்
முற்றினவீரனவானின்முனிந்தான்
பொற்றிரணீளெழுவொன்றுபொறுத்தான்
எற்றினனஃதவன்வில்லினிணேற்றான். (௫௦)

முறிந்ததுமூரிவிலம்முறியேகொ
டெறிந்தவரக்கனோர்வெற்பையெடுத்தான்
அறிந்தமனத்தவனவ்வெழுவேகொ
டெறிந்தவரக்கனையின்னுயிருண்டான். (௫௧)

ஒழிந்தவர்நால்வருமூழியுருத்த
கொழுந்துறுதீயெனவெய்துறுகொட்ப
பொழிந்தனர்வாளிபுகைந்தனகண்கள்
விழுந்தனசோரியவ்வீரன்மணித்தோள். (௫௨)

ஆயிடைவீரனுமுள்ளமழன்றான்
மாயவரக்கர்வலத்தையுணர்ந்தான்
மீயெரியுய்ப்பதொர்கற்செலவிட்டான்
தீயவரச்சிலையைப்பொடிசெய்தார். (௫௩)

தொடுத்ததொடுத்தசரங்கடுரந்த
அடுத்தகனமார்பினமுழ்ந்தியகன்ற
மிடற்றெழிலான்விடுதேரொடுநொய்தின்
எடுத்தொருவன்றனைவிண்ணினெறிந்தான். (௫௪)

ஏய்ந்தெழுதேரிமிழ்விண்ணினையெல்லாம்
நீந்தியதோடிநிமிர்ந்ததுவேகம்
ஓய்ந்ததுவீழ்வதன்முன்னுயர்பாரில்
பாய்ந்தவன்மேலுடன்மாருதிபாய்ந்தான். (௫௫)

மதித்தகளிற்றினின்வாளரியேறு
கதித்ததுபாய்வதுபோற்கதிகொண்டு
குதித்தனன்மால்வரைமேனிகுழம்ப
மிதித்தனன்வெஞ்சினவீரருள்வீரன். (௫௬)

---

51. மூரிவில் - பெரியவில்.

52. "கொழுந்துறு தீயென வெஞ்சிலைகோலா" என்ற பாடமுண்டு.

மூண்டசினத்தவர்மூவர்முனிந்தார்
தூண்டியதேரர்சரங்கடுரந்தார்
வேண்டியவெஞ்சமம்வேறுவிளைப்பார்
யாண்டினியேகுதியென்றெதிர்சென்றார். (ருஎ)

திரண்டுயர்தோளிளையஞ்சனைசிங்கம்
அரண்டருவிண்ணுறைவார்களுமஞ்ச
முரண்டருதேரவையாண்டொருமூன்றின்
இரண்டிரண்டுகையிற்கொடெழுந்தான். (ருஅ)

தூங்கியபாய்பரிசூதருலைந்தார்
வீங்கியதோளவர்விண்ணின்விசைத்தார்
ஆங்கதுகண்டவர்போயகலாமுன்
ஓங்கியமாருதியொல்லையினுற்றான். (ருகூ)

காணிமிர்வெஞ்சிலைகையினிறுத்தான்
ஆனவர்தூணியும்வாளுமகைத்தான்
ஏனையவெம்படையில்லவரெஞ்சார்
வானிடைநின்றுயர்மல்லின்மலைந்தார். (சு0)

வெள்ளையெயிற்றர்கறுத்துயர்மெய்யர்
பிள்ளவிரித்தபிலப்பெருவாயர்
கொள்ளவுருத்தடர்கோளரவொத்தார்
ஒள்ளிகல்வீரனருக்கனையொத்தான். (சுக)

தாம்பெனவாலின்வரிந்துயர்தாளோ
டேம்பலிலாரிருதோள்களிறுத்தான்
பாம்பெனநீங்கினர்பட்டனர்வீழ்ந்தார்
ஆம்பனெடும்பகைபோல்பவனின்றான். (சுஉ)

நின்றனனேனையனின்றதுகண்டான்
சூன்றிடைவாவுறுகோளரிபோல
மின்றிரிவன்றலைமீதுகுதித்தான்
பொன்றியவன்புவிதேரொடுபுக்கான். (சுங)

வேறு.

வஞ்சமுங்களவும்வெஃகிவழியலாவழிமேலோடி
நஞ்சினுங்கொடியராகிநவைசெயற்குரியநீரார்

61. கோளரவு - இராகுகேதுக்களே.
62. ஆம்பல் நெடும்பகை - சூரியன்.

வெஞ்சினவரக்கரைவரொருவனேவெல்லப்பட்ட
அஞ்செனும்புலன்களொத்தாரவனுநல்லறிவையொத்தான். (கூச)

நெய்தலேயுற்றவேற்கைநிருதரச்செருவினேர்ந்தார்
உய்தலேயுற்றுமீண்டாரொருவருமில்லேயுள்ளார்
கைதலேப்பூசல்பொங்கக்கடுகினர்காலனுட்கும்
ஐவருமுலந்ததன்மையனேவருமமையக்கண்டார். (கூரு)

இறுக்குறுமின்னேநம்மைக்குரங்கெனாவிரங்கியேங்கி
மறுக்குறுகின்றநெஞ்சின்மாதரைவைதுநோக்கி
உறுக்குறுசொல்லரூழித்தீயெனவுலகமேழும்
சுறுக்கொளநோக்குவான்றன்செவித்தொளேதீயச்சொன்னர். (கூகூ)

தானேயுமுலந்ததைவர்தலேவருஞ்சமைந்தார்தாக்கப்
போனபின்மீள்வேம்யாமேயதுவும்போர்புரிகிலாமை
வானேயும்வென்றுளோரைவல்லேயின்மடியநூறி
ஏனேயரின்மைசோம்பியிருந்ததக்குரங்குமென்றார். (கூஎ)

ஆக திருவிருத்தம் - கூகூசு.

## கக - வது அட்சகுமாரன் வதைப்படலம்.

கேட்டலும்வெகுளிவெந்தீக்கிளர்ந்தெழுமுயிர்ப்பளுகித்
தோட்டலர்தெரியன்மாலேவண்டொடுஞ்சுறுக்கொண்டேற
ஊட்டரக்குண்டபோலுநயனத்தானுருப்பட்டானேத்
தாட்டுணேதொழுதுமைந்தன்றடுத்திடைதருதியென்றான். (க)

முக்கணூர்தியன்றேன்மூன்றுலகடியிற்றாயோன்
ஒக்கவூர்பறவையன்றேலவன்றுயிலுரகமன்றேல்
திக்கயமல்லதேற்புன்குரங்கின்மேற்சேறிபோலாம்
இக்கடனடியேற்கீதியிருத்தியீண்டினிதினெந்தாய். (உ)

அண்டர்கோன்றன்னேப்பற்றித்தருகெனுவடியேனிற்கக்
கொண்டனேயென்முன்றன்னேப்பணியெனநெஞ்சங்கோடல்
உண்டதுதீருமன்றேயுரனிலாக்குரங்கொன்றேனும்
எண்டிசைவென்றநீயேயேவுதியென்னேயென்றான். (ஙு)

கொய்தளிர்கோதும்வாழ்க்கைக்கோடரத்துருவுகொண்டு
கைதவமியற்றியீண்டோர்சிறுபழியிழைக்குங்கற்பான்
எய்தினனிமையாமுக்கணீசனேயென்றபோதும்
நொய்தினின்வென்றுபற்றித்தருகுவெனுடியினுன்பால். (ச)

துண்டத்தூண தனிற்றோன்றும்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தநிமிராண்கேழலாயினுமலேதலாற்று
தண்டத்தைக்கடந்துபொங்கியப்புறத்தகலினென்பால்
தண்டத்தையிடுதியன்றேநின்வயிற்றந்திலேனேல். (ரு)

எனவிவையியம்பியீதிவிடையெனவிறைஞ்சிநின்ற
வனைகழல்வயிரத்திண்டோண்மைந்தனைமகிழ்ந்துநோக்கித்
துணைபரித்தேர்மேலேறிச்சேறியென்றிணையசொன்னான்
புனைமலர்த்தாரினானும்போரணியணிந்துபோனான். (சு)

ஏறினனென்பமன்னோவிந்திரனிகலினிட்ட
ஆறொடுநூறுபூண்டநொறில்வயப்புரவிநோன்றேர்
கூறினரரக்கராசிகுமுறினமுரசக்கொண்மு
ஊறினவுரவுத்தானையூழிபேர்கடலேயொப்ப. (எ)

பொருகடன்மகரமெண்ணினெண்ணலாம்பூட்கைபொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டேர்
உருவுறுமணலேயெண்ணினெண்ணலாமுரவுத்தானை
வருதிரைமரபினெண்ணினெண்ணலாம்வாவும்வாசி. (அ)

ஆறிரண்டடுத்தவெண்ணிறாயிரங்குமரராவி
வேறிலாத்தோழர்வென்றியமக்கர்தம்வேந்தர்மைந்தர்
ஏறியதேரர்சூழ்ந்தாரிறுதியின்யாவுமுன்பான்
சீறியகாலத்தீயின்செறிசுடர்ச்சிகைகளன்னார். (கூ)

மந்திரக்கிழவர்மைந்தர்மதிநிறையமைச்சர்மக்கள்
தந்திரத்தலைவரீன்றதநயர்கள்பிறருந்தாதைக்
கந்தரத்தரம்பைமாரிற்றோன்றினராகியாயோர்
எந்திரத்தேரர்சூழ்ந்தாரீரிரண்டிலக்கம்வீரர். (கo)

தோமரமுலக்கைசூலஞ்சுடர்மழிக்குலிசந்தோட்டி
ஏமருவரிவில்வேல்கோலீட்டிவாளெழுவிட்டேறு
மாமரம்வீசுபாசமெழுமுளைவயிரத்தண்டு
காமருகணையங்குந்தங்கற்பணங்காலநேமி. (கக)

என்றிவைமுதலவாயமெறிதருபடைகளீண்டி
மின்றிரண்டனையவாகிவெயிலொடுநிலவுவீசத்

---

5. ஆண்கேழல் - ஆண்பன்றி. ஆதிவாரகமூர்த்தி.

6. போரணி - போர்க்கோலம் 10. தந்திரம் - சேனை.

துன்றிருந்தூளிபொங்கித்தூறுதலாலிறுதிசெல்லாப்
பொன்றிணியுலகமெல்லாம்பூதலமாயமாதோ. (கஉ)

காகமுங்கழுகும்பேயுங்காலனுங்கணக்கில்காலம்
சேகுறவினையிற்செய்ததீமையுந்தொடர்ந்துசெல்லப்
பாகியல்கிளவிச்செவ்வாய்ப்படைவிழிப்பணைத்தவேய்த்தோட்
டோகையர்மனமுந்தொக்கதும்பியுந்தொடர்ந்துசுற்ற. (கங)

உழைக்குலநோக்கினர்களுவந்தவர்க்குரியமாதர்
அழைத்தழுகுரலின்வேலையமலையினாவச்சேனை
தழைத்தெழுமொலியினுறைப்பல்லியந்துவைத்தலால்விண்
மழைக்குரலிடியிற்சொன்னமாற்றங்களொழிப்பமன்றே. (கச)

வெயிற்கரமணிகள்வீசும்விரிகதிர்விழுங்கவெய்ய
அயிற்கரமணிகள்காலுமவிரொளிபருகவஃகா
எயிற்றிளம்பிறைகளீன்றவிலங்கொளியொதுங்கயாணர்
உயிர்க்குறவிரவுமன்றுபகலன்றென்றுணர்வுதோன்ற. (கரு)

ஓங்கிருந்தடந்தேர்பூண்டவுளைவயப்புரவியொல்கித்
தூங்கினவீரர்தோளுங்கண்களுமிடத்ததுள்ள
வீங்கினமேகமெங்குங்குருதிநீர்த்துள்ளிவீழ்ப்ப
ஏங்கினகாகமார்ப்பவிருளில்விண்ணிடிப்பமாதோ. (கசு)

வெள்ளவெஞ்சேனைசூழவிண்ணுளோரார்வெருவிவிம்ம
உள்ளநொந்தனுங்கிவெய்யகூற்றமுமுறுவதுன்னத்
துள்ளியசுழல்கட்பேய்கடோள்புடைத்தார்ப்பத்தோன்றும்
கள்ளவிழலங்கலானைக்காற்றின்சேய்வரவுகண்டான். (கஎ)

இந்திரசித்தோமற்றவ்விராவணனேயோவென்னுச்
சிந்தையினுவகைகொண்டுமுனிவுற்றகுரக்குச்சீயம்
வந்தனன்முடிந்ததன்றேமனக்கருத்தென்னவாழ்த்திச்
சுந்தரத்தோளைநோக்கியிராமனைத்தொழுதுசொன்னான். (கஅ)

எண்ணியவிருவர்தம்முளொருவனல்யான்முன்னேற்ற
புண்ணியமுளதாலெங்கோன்றவத்தோடும்பொருந்தினானே
நண்ணினநாளுநின்றேன்காலனுநணுகிநின்றான்
கண்ணியகருமமின்றேமுடிக்குவென்கடிதினென்றான். (கசு)

பழியிலதுருவென்றாலும்பஃறலையரக்கனல்லன்
விழிகளாயிரமுங்கொண்டவேந்தைவென்றானுமல்லன்

15. வெயிற்கரம் - சூரியன்கிரணங்களை.

மொழியின்மற்றெவர்க்குமேலாமுரட்டொழின்முருகனல்லன்
அழிவிலொண்குமரன்யாரோவஞ்சனக்குன்றமன்னான்: • (௨௦)

என்றவனுவந்துவிண்டோயிந்திரசாபமென்ன
நின்றதோரணத்தினும்பரிருந்ததோர்நீதியானை
வன்றொழிலரக்கனோக்கிவாளெயிறிலங்கநக்கான்
கொன்றதிக்குரங்குபோலாமரக்கர்தங்குழாத்தையென்னா. (௨௧)

அன்னதாமச்சொற்கேட்டசாரதியையகேண்மோ
இன்னதாமென்னலாமோவுலகியலிகழலம்மா
மன்னனோடெதிர்ந்தவாலிகுரங்கென்றான்மற்றுமுண்டோ
சொன்னதுதுணிவிற்கொண்டுசேறியென்றுணரச்சொன்னான்(௨௨)

விடந்திரண்டனையமெய்யானவ்வுரைவிளம்பக்கேளா
இடம்புகுந்தினையசெய்தவிதனொடுசீற்றமெஞ்சத்
தொடர்ந்துசென்றுலகமூன்றுந்துருவினனொழிவுறாமற்
கடந்துபின்குரங்கென்றேதுங்கருவையுங்களைவெனென்றான்.(௨௩)

ஆர்த்தெழுந்தரக்கர்சேனையஞ்சனைக்குரியகுன்றைப்
போர்த்ததுபொழிந்ததம்மாபொருபடைப்பருவமாரி
வேர்த்தனர்திசைகாப்பாளர்சலித்ததுவிண்ணுமண்ணும்
தார்த்தனிவீரன்றானுந்தனிமையும்வரமேற்சார்ந்தான். (௨௪)

எறிந்தனர்நிருதர்வெய்தினெய்தனபடைகள்யாவும்
முறிந்தனவீரன்மேனிமுட்டினமொகரயானை
மறிந்தனமடிந்ததேரும்வாவுமாக்குழுவுமற்றும்
நெறிந்தனவரம்பில்யாக்கையிலங்கைதன்னிலையிற்பேர. (௨௫)

காயெரிமுளிபுற்கானிற்கலந்தெனக்காற்றின்செம்மல்
ஏயெனுமளவிற்கொல்லுநிருதர்க்கோரெல்லையில்லை
போயவருயிரும்போகித்தென்புலம்படர்தல்பொய்யா
தாயிரகோடிதூதருளர்கொலோநமனுக்கம்மா. (௨௬)

வரவுற்றார்வாராநின்றார்வந்தனர்வரம்பில்வெம்போர்
பொரவுற்றபொழுதுவீரன்மும்மடங்காற்றல்பொங்கி
எரியிற்போய்க்கதிரோனூழியிறுதியினென்னலானான்
உரவுத்தோளரக்கரெல்லாமென்பிலாவுயிர்களொத்தார். (௨௭)

---

23. துருவுதல் - தேடுதல்,

24. தனி - ஒப்பிலாத,

25. மொகரம் - மோகரம், உக்கிரம்,

வேறு.

பிள்ளப்பட்டன நுதலோடைக்கரிபிறழ்பொற்றேர்பரிபிழையாமல்
அள்ளப்பட்டழிகுருதிப்பொருபுனலாறுகப்படிசேறுக
வள்ளப்பட்டனமகரக்கடலெனமதில்சுற்றியபதிமறலிக்கோர்
கொள்ளைப்பட்டுளவுயிரென்னும்படிகொன்றானைம்புலன்வென்றானே

தேரேபட்டனவென்றார்சிலர்சிலர்தெறுகட்செம்முகவயிரத்தோள்
பேரேபட்டனவென்றார்சிலர்சிலர்பரியேபட்டனபெரிதென்றார்
காரேபட்டன நுதலோடைக்கடகரியேபட்டனகடிதென்றார்
நேரேபட்டனர்படமாடேதனிநில்லாவுயிரொடுநின்றாரே. (உகூ)

ஆழிப்பொருபடைநிருதப்பெருவலியடலோராரய்மகளடுபேழ்வாய்த்
தாழிப்படுதயிரொத்தார்மாருதிதனிமத்தெனபடுதார்தகையானன்
ஏழிப்புவனமுமிடைவாழுயிர்களுமெறிவேலிளையவரினமாக [னே
ஊழிப்பெயர்வதொர்புனலொத்தாரனலொத்தான்மாருதமொத்தா

கொன்றானுடன்வருகுழுவைச்சிலர்பலர்குறைகின்றாருடல்குலைகின்
பின்றாநின்றனருதிரப்பெருநதிபெருகாநின்றனவருகாரும் [றார்
நின்றார்நின்றிலர்தனிநின்றானொருநேமித்தேரொடுமவனேரே
சென்றான்வன்றிறலயில்வாயம்புகடெரிகின்றான்விழியெரிகின்றான்.

உற்றானிந்திரசித்துக்கிளையவனொருகாலேபலருயிருண்ணக் ,
கற்றானும்முகம்மெதிர்வைத்தானதுகண்டார்விண்ணவர்கசிவுற்றார்
எற்றுமாருதிநிலையென்பாரினியிமையாவிழியினையிமையொன்று
பெற்றாநல்லதுபெற்றாமென்றனர்பிரியாதெதிரெதிர்செறிகின்றார்.

எய்தான்வாளிகளெரிவாயுமிழ்வனவீரேழெதிரவைபார்சோரப்
பொய்தான்மணியெழுவொன்றாலன்றதுபொடியாயுதிர்வுறவடிவாளி
வெய்தாயினபலவிட்டான்வீரனும்வேறோர்படையிலன்மாறுவெங்
கைதானேபொருபடையாகத்தொடர்காலார்தேரதன்மேலானான்.()

தேரிற்சென்றெதிர்கோல்கொள்வானுயிர்தின்றானப்பொருசெறிதிண்டேர், பாரிற்சென்றதுபரிபட்டனவவன்வரிவிற்சிந்தியபகழிக்கோல், மார்பிற்சென்றன சிலபொற்றோளிடை மறைவுற்றனசிலமறவோனும், நேரிற்சென்றவன்வயிரக்குனிசிலைபற்றிக்கொண்டெதிருறநின்றான். (௩௪)

ஒருகையாலவன்வயிரத்திண்சிலையுற்றுப்பற்றலுமுரவோனும்
இருகையாலிவன்வலியாமுன்னமதிற்றோடியதிவர்பொற்றோளான்

32. கசிவுறுதல் - மனமிளகுதல். 29. மாடு - பக்கம்.

சுரிகையாலவனுருவிக்குத்தலுமதனைச்சொற்கொடுவருதூதன் [வே
பொருகையாலிடை பிதிர்வித்தான்முதிர் பொறியோடும்படிபறியா

வாளாலேபொரலுற்றானிற்றதுமண்சேராமுனம்வயிரத்திண்
தோளாலேபொரமுடுகிப்புக்கிடைதழுவிக்கோடலுமுடன்முற்றும்
நீளாரயிலெனமயிர்தைத்திடமணிநெடுவாலவனுடனிமிர்வுற்று [ன்.
மீளாவகைபுடை சுற்றிக்கொண்டது பற்றிக்கொண்டனன்மேலானு

பற்றிக்கொண்டவன் வடிவாளெனவொளிர் பல்லிற்றுகநிமிர்ப
டர்கையால், எற்றிக்கொண்டலினிடைநின்றுமிழ்சுடரினமின்னின
ம்விழுவனவென்ன, முற்றிக்குண்டலமுதலாமணியுகமுழைநாலாவி
வர்குடர்நாலக், கொற்றத்திண்சுவல்வயிரக்கைகொடுகுத்திப்புடை
யொருகுதிகொண்டான். (ங௭)

நீத்தாயோடினவுதிரப்பெருநதிநீராகச்சிலைபாராகப் [காமுன்
போய்த்தாழ்செறி தசையரிசிந்தின படிபொங்கப்பொருமுயிர்போ
மீத்தாநிமிர்சுடர்வயிரக்கைகொடுபிடியாவிண்ணொடுமண்காணத் [ன்
தேய்த்தானூழியினுலகேழ்தேயினு மொருதன்புகழிறைதேயா தா

புண்டாழ்குருதியின்வெள்ளத்துயிர்கொடுபுக்கார்சிலர்சிலர்பொ
திபேயின், பண்டாரத்திடையிட்டார்தம்முடல்பட்டார்சிலர்சிலர்ப
யமுந்தத், திண்டாடித்திசையறியாமறுகினர்செற்றார்சிலர்சிலர்செ
லவற்றார், கண்டார்கண்டதொர்திசையேவிசைகொடுகால்விட்டார்
படைகைவிட்டார். (ங௯)

மீனுய்வேலையையுற்றார்சிலர்சிலர்பசுவாய்வழிதொறுமேய்வுற்றார்
ஊனார்பறவையின்வடிவுற்றார்சிலர்சிலர்நான்மறையவருருவானார்
மானார்கண்ணிளமடவாராயினர்முன்னேநங்குழல்வகிர்வுற்றார்
ஆனார்சிலர்சிலரையாநின்சரணென்றார்நின்றவரரியென்றார். (௪௦)

தந்தாரமுமுறுகிளையுந் தமையெதிர்தழுவுந்தொறுநுமதமரெ
ல்லேம், வந்தேம்வானவரென்றேகினர்சிலர்சிலர்மானுயரெனவாய்
விட்டார், மந்தாரங்கிளர்பொழில்வாய்வண்டுகளானார்சிலர்சிலர்மரு
ள்கொண்டார், இந்தாரெயிறுகளிறுவித்தார்சிலரெரிபோற்குஞ்சி
யையிருள்வித்தார். (௪க)

வேறு.

குண்டலக்குழைமுகக்குங்குமக்கொங்கையார்
வண்டலைத்தெழுகுழற்கற்றைகால்வருடவாய்

38. சிலை - அம்மிக்கல். 38. இறை - கொஞ்சம். அரி - அரிசி.
42. குழற்கற்றை - கால்வருடலாவது தலைமயிரவிழ்த்து காலளவுந்தொங்கல்.

விண்டலத்தகவிரைக்குமுதவீவிரிதலால்
அண்டமுற்றுளதவூரமுதபேரமலையே. (சஉ)

கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவன்மா
டெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலார்
அதிநலங்கோதைசேரோதியோடன்றவூர்
உதிரமுந்தெரிகிலாதிடைபரந்தொழுகியே. (சங)

தாவில்வெஞ்செருநிலத்திடையுலர்ந்தவர்தமேல்
ஓவியம்புரைநலார்விழுதொறுஞ்சிலருயிர்த்
தேவுகண்களுமிமைத்திலர்களாமிதுவெலாம்
ஆவியொன்றுடலிரண்டாயதாலேகொலாம். (சச)

ஓடினருயிர்களுடல்கள்போலுதவியால்
வீடினர்வீடினர்மிடலுடற்குவைகள்வாய்
நாடினர்மடநலார்நவையிலாநண்பரைக்
கூடினருடினரும்பர்வாழ்கொம்பனர். (சரு)

தீட்டுவாளனையகட்டெரிவையோர்திருவனாள்
ஆட்டிநின்றயர்வதோரறுதலைக்குறையினைக்
கூட்டிநீயோருயிர்த்துணைவனெங்கோவினைக்
காட்டுவாயாதியென்றழுதுகூப்பினள். (சசூ)

ஏந்திழையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றுடுவானுயர்கவந்தத்தினை
வேந்தனீயலசினுய்விடுதியானடமெனப்
பூந்தளிர்க்கைகளான்மெய்யுறப்புல்லினள். (சஎ)

நாடினர்நாடியேநனைவருங்கொம்பனார்
வாடினர்கணவர்தம்மார்புறத்தழுவியே
வீடினரவ்வயின்வெருவிவிண்ணவர்கடாம்
ஓடினரரசன்மாட்டணுகிநின்றுரைசெய்தார். (சஅ)

வேறு.

கயன்மகிழ்கண்ணிணைகலுழிகான்றுகப்
புயன்மகிழ்புரிகுழல்பொடியளாவுற
அயன்மகன்மகன்மகனடியின்வீழ்ந்தனள்
மயன்மகள்வயிறலைத்தலறிமாழ்கினள். (சகூ)

49. மயன்மகள் - மண்டோதரி.

தாவருந்திருநகர்த்தையலார்முதல்
ஏவருமிடைவிழுந்திரங்கியேங்கினர்
காவலன்கான்மிசைவிழுந்துகாவன்மாத்
தேவருமழுதனர்களிக்குஞ்சிந்தையார். (௫௦)

ஆ - திருவிருத்தம் - ௯அ௪.

## கஉ-வது பாசப்படலம்.

அவ்வழியவ்வுரைகேட்டவாண்டகை
வெவ்விழியெரியுகவெகுளிவீங்கினன்
எவ்வழியுலகமுங்குலையவிந்திரத்
தெவ்வழிதரவுயர்விசயச்சீர்த்தியான். (க)

அரஞ்சுடர்வேற்றனதனுசனிற்றசொல்
உரஞ்சுடவெரியுயிர்த்தொருவனேங்கினன்
புரஞ்சுடவரிசிலைப்பொருப்புவாங்கிய
பரஞ்சுடரொருவனைப்பொருவும்பான்மையான். (உ)

ஏறினன்விசும்பினுக்கெல்லைகாட்டுவ
ஆறிருநூறுபேய்பூண்டவாழித்தேர்
கூறினகூறினசொற்கள்கோத்தலால்
பீறினநெடுந்திசைபிளந்ததண்டமே. (௩)

வேறு.

ஆர்த்தனகழலுந்தாரும்பேரியுமசனியஞ்ச
வேர்த்துயிர்குலையமேனிவெதும்பினனமரர்வேந்தன்
சீர்த்ததுபோருமென்னுத்தேவர்க்குந்தேவராய
மூர்த்திகடாமுந்தத்தம்யோகத்தின்முயற்சிவிட்டார். (௪)

தம்பியையுன்னுந்தோறுந்தாரைநீர்ததும்புங்கண்ணன்
வம்பியல்சிலையைநோக்கிவாய்மடித்துருத்துநக்கான்
கொம்பியன்மாயவாழ்க்கைக்குரங்கினற்குரங்காவாற்றல்
எம்பியோதேய்ந்தானெந்தைபுகழன்றோதேய்ந்ததென்றான். (௫)

வேறிரண்டனவும்வில்லுமிடைந்தவும்வெற்பென்றாலும்
கூறிரண்டாக்கும்வாட்கைக்குழுவையுங்குணிக்கலாற்றேம்
சேறிரண்டருகுசெய்யுஞ்செறிமதச்சிறுகண்யானை
ஆறிரண்டஞ்சுநூற்றினிரட்டிதேர்த்தொகையுமஃதே. (௬)

2. அநுஜன் - தம்பி, தார் - மலை. சேனையெனவுமாம்.

ஆயமாத்தானைதான்வந்தண்மியதண்மமேவனைத்
தீயவாணிருதர்வேந்தர்சேர்ந்தவர்சேரத்தேரின்
ஏயெனுமளவின்வந்தானிராவணனிருந்தயாணர்
வாயிறோய்கோயில்புக்கானருவிசோர்வயிரக்கண்ணான். (எ)

தாளிணைவிழுந்தான்றம்பிக்கிரங்கினான்றறுகணானும்
தோளிணைபற்றியேந்தித்தழுவினனழுதுசோர்ந்தான்
வாளினைநெடுங்கண்மாதர்வயிறலைத்தலறிமாழ்க
மீளிபோன்மொய்ம்பினானும்விலக்கினன்விளம்பலுற்றான். (அ)

ஒன்றுநீயுறுதியோராயுற்றிருந்துளையகிற்றி
வன்றிறற்குரங்கினாற்றன்மரபுளியுணர்ந்துமன்னா
சென்றுநீர்பொருதிரென்றுதிறத்திறஞ்செலுத்தித்தேயக்
கொன்றனைநீயேயன்றோவரக்கர்தங்குழுவையென்றான். (௯)

கிங்கரர்சம்புமாலிகேடிலாவைவரென்றிப்
பைங்கழலரக்கரோடுமுடன்சென்றபகுதிச்சேனை
இங்கொருவருமீண்டார்தாமில்லையேற்குரங்கதெந்தாய்
சங்கரனயன்மாலென்பார்தாமெனுந்தகையதாமே. (௧௦)

திக்கயவலியுமேனாடிரிபுரந்தீயச்செற்ற
முக்கணன்கைலையோடுமுலகொருமூன்றும்வென்றாய்
அக்கனைக்கொன்றுநின்றகுரங்கினையாற்றல்காட்டிப்
புக்கினிவென்றுமென்றாற்புலம்பன்றிப்புலமைத்தாமோ. (௧௧)

ஆயினுமையநொய்தினாண்டொழிற்குரங்கையானே
ஏயெனுமளவிற்பற்றித்தருகுவெனிடரென்றொன்றும்
நீயினியுழக்கற்பாலையல்லைநீடிருத்தியென்னாய்
போயினனமரர்கோவைப்புகழொடுகொண்டுபோந்தான். (௧௨)

உடைந்தவலிருனோற்றுப்பலுருக்கொடக்கதிர்க்குழாங்கள்
மிடைந்தனமிலைச்சியாங்குமெய்யணிபலவுமின்னக்
குடைந்துவெம்பகைவரூன்றோய்கொற்றப்போர்வாள்வில்வீச
அடைந்தகாரரக்கர்தானையகலிடமிடமின்றென்ன. (௧௩)

ஆழியந்தேருமாவுமரக்கருமுருக்குஞ்செங்கட்
சூழிவெங்கோபமாவுந்துவன்றியநிருதர்சேனை
ஊழிவெங்கடலிற்சுற்றவொருதனிநடுவணின்ற
பாழிமாமேருவொத்தான்வீரத்தின்பான்மைதீர்ப்பான். (௧௪)

---

7. யாணர் - அழகான.

சென்றனனென்பமன்னோ திசைகளோடுலகமெல்லாம்
வென்றவனிவனென்றாலும்வீரத்தேதநின்றவீரன்
அன்றதுகண்டவாழிய நுமனையமரிஞற்றல்
நன்றெனவுவகைகொண்டான்யாவருநடுக்கமுற்றார். (கரு)

இலைகுலாம்பூணிஞனுமிரும்பிணக்குருதியீரத்
தலகில்வெம்படைகடேற்றியளவிடற்கரியவாகி
மலைகளுங்கடலும்யாறுங்கானமும்பெற்றுமற்றோர்
உலகமேயொத்ததம்மாபோர்ப்பெருங்களமென்றுன்னு. (கசு)

வெப்படைகில்லாநெஞ்சிற்சிறியதோர்விம்மல்கொண்டான்
அப்படைவேலையன்னபெருமையாராற்றலோடும்
ஒப்படைகில்லாரெல்லாமுலந்தனர்குரங்குமொன்றே
எப்படைகொண்டுவெல்வதிராமன்வந்தெதிர்க்கினென்றான். (கஎ)

கண்ணனுருயிரேயொப்பார்கைப்படைக்கலத்திற்காப்பார்
எண்ணலாந்தகைமையில்லாரிறந்திடைக்கிடந்தார்தம்மை
மண்ணுளேநோக்கிநின்றுவாய்மடித்துருத்துமாயாப்
புண்ணுளேகோலிட்டன்னமானத்தாற்புழுங்குகின்றான். (கஅ)

கானிடையத்தைக்குற்றகுற்றமுங்கரனார்பாடும்
யானுடையெம்பிவீந்தவிடுக்கணும்பிறவுமெல்லாம்
மானுடரிருவராலும்வானரமொன்றினாலும்
ஆனிடத்துளவென்வீரமழகிற்றேயம்மவென்றான். (கசு)

நீப்புண்டவுயிரவாகிநெருப்புண்டநிறத்திற்றேன்றி
ஈர்ப்புண்டற்கரியவாயபிணக்குவடிடறச்செல்வான்
தேய்ப்புண்டதம்பியாக்கைசிவப்புண்டகண்கடீயில்
காய்ப்புண்டசெம்பிற்றேன்றக்கறுப்புண்டமனத்தன்கண்டான். ()

தாருகன்குருதியன்னகுருதியிற்றனிமாச்சீயம்
கூருகிர்கிளைத்தகொற்றக்கனகன்மெய்க்குழம்பிற்றேன்றத்
தேருகக்கையின்வீரச்சிலையுகவயிரச்செங்கண்
நீருகக்குருதிசிந்தநெருப்புகவயிர்த்துநின்றான். (உக)

வெவ்விலையயில்வேலுந்தைவெம்மையைக்கருதிநோக்கி
வவ்வுதல்கூற்றுமாற்றான்மாறுமாறுலகின்வாழ்வார்
அவ்வுலகத்துளாருமஞ்சுவரொளிக்கவையா
எவ்வுலகத்தையுற்றாயெம்மைநீத்தெளிதினெந்தாய். (உஉ)

ஆற்றலனையனுகியறிவழிந்தயரும்வேலை
சிற்றமென்றிருன்று தானேமேனிமிர்செலவிற்றுகித்
தோற்றியதுன்பநோயையுள்ளுறத்துரந்ததம்மா
ஏற்றஞ்சாலாணியாணியெதிர்செலக்கடாயதென்ன. (உங)

வேறு.

ஈண்டிவைநிகழ்வுழியிராவிதேரெனத்
தூண்டுறுதேரின்மேற்றோன்றுந்தோன்றலை
மூண்டுமுப்புரஞ்சுடமுடுகுமீசனின்
ஆண்டகைவனைகழலநுமனேக்கினன். (உச)

வேறு.

வென்றேனிதன்முன்சிலவீரரையென்னும்வெம்மை
அன்றேமுடுகிக்கடிதெய்தவழைத்ததம்மா
ஒன்றேயினிவெல்லுதறேற்பதடுத்ததுள்ளத்
தின்றேசமையுமிவனிந்திரசித்துவென்பான். (உரு)

கட்டேறுநறுங்கமழ்கண்ணியிக்காளையென்கைப்
பட்டாலதுவேயவிராவணன்பாடுமாகும்
கெட்டோமெனவெண்ணியக்கேடருங்கற்பினளை
விட்டேகுமதன்றியரக்கரும்வெம்மைதீர்வார். (உசா)

ஒன்றோவிதனுன்வருமூதியமொண்மையானைக்
கொன்றேனெனினிந்திரனுந்துயர்க்கோளுநீங்கும்
இன்றேகடிகெட்டதரக்கரிலங்கையானே
வென்றேனவிராவணன்றன்னையும்வேரொடென்றான். (உஎ)

அக்காலையருக்கருமானையுந்தேருமாவும்
முக்காலுலகம்மொருமூன்றையும்வென்றுமுற்றிப்
புக்கானின்புக்குயர்பூசல்பெருக்கும்வேலை
மிக்கானும்வெகுண்டோர்மராமரங்கொண்டுமிக்கான். (உஅ)

வேறு.

உதைப்புண்டனயானையுருண்டனயானையொன்றோ
மிதிப்புண்டனயானைவிழுந்தனயானைமேன்மேல்
புதைப்புண்டனயானைபுரண்டனயானைபோரால்
வதைப்புண்டனயானைமறிந்தனயானைமண்மேல். (உகூ)

---

26. கட்டேறுநறுங்கமழ் நறுங்கள் - தேறு - தெளிவு - கமழென்பது மாம். விட்டேகும் - விட்டுப்போவான்.

வேறு.

முடிந்தனதேர்க்குலமுறிந்தனதேர்க்குலமுரணிற்
றிடிந்ததேர்க்குலமிற்றனதேர்க்குலமச்சிற்
றொடிந்ததேர்க்குலமுக்கனதேர்க்குலநெக்குப்
படிந்ததேர்க்குலம்பறிந்தனதேர்க்குலம்படியில். (ஙo)

சிரனெரிந்தவுங்கண்மணிசிந்தவுஞ்செறிதாட்
டரனெரிந்தவுமுதுகிறச்சாய்ந்தவுந்தார்ப்பூண்
உரனெரிந்தவுமுதிரங்களுமிழ்ந்தவுமொண்பொற்
குரனெரிந்தவுங்கொழுங்கழுத்திழந்தவுங்குதிரை. (ஙக)

பிடியுண்டார்களும்பிளத்தலுண்டார்களும்பெருந்தோள்
ஒடியுண்டார்களுந்தலையுடைந்தார்களுமுருவக்
கடியுண்டார்களுங்கழுத்திரந்தார்களுங்கரத்தால்
அடியுண்டார்களுமச்சமுண்டார்களுமரக்கர். (ஙஉ)

வட்டவெஞ்சிலையோட்டியவாளியும்வயவர்
விட்டவிட்டவெம்படைகளும்வீரன்மேல்வீழ்ந்த
சுட்டவல்லிரும்படைகலைச்சுடுகலாதனபோல்
பட்டபட்டனதிசையொடும்பொறியொடும்பரந்த. (ஙங)

சிகையெழுஞ்சுடர்வாளிகளிந்திரசித்து
மிகையெழுஞ்சினத்தநுமன்மேல்விட்டனவெந்து
புகையெழுந்தனவெரிந்தனகரிந்தனபோக
நகையிழந்தனவழிந்தனவானுளோர்நாட்டம். (ஙச)

தேரும்யானையும்புரவியுமரக்கருஞ்சிந்திப்
பாரின்வீழ்தலுந்தானொருதனிநின்றபணைத்தோள்
வீரவீரனுமுறுவலும்வெகுளியும்வீங்க
வாரும்வாருமென்றழைக்கின்றவநுமன்மேல்வந்தான். (ஙரு)

புரந்தரன்றலைபொதிரெறிந்திடப்புயல்வாணில்
பரந்தபல்லுருமேற்றினம்வெறித்துயிர்பதைப்ப
நிரந்தரந்தலைநெடுநிலஞ்சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிடவரக்கன்வெஞ்சிலையைநாண்டெறித்தான். (ஙசு)

ஆண்டநாயகன்றாதனுமயனுடையண்டம்
கீண்டதாமெனக்கிரியுகநெடுநிலங்கிழிய
நீண்டமாதிரம்வெடிபடவவனெடுஞ்சிலையில்
பூண்டநாணிறத்தன்னெழிற்றோள்களைப்புடைத்தான். (ஙஎ)

நல்லைநல்லையிஞ்ஞாலத்துணின்னொக்கநல்லார்
இல்லையில்லையாலெறுழ்வலிக்கியாரொடுமிகல
வல்லைவல்லையின்றாகுரீபடைத்துளவாழ்நாட்
செல்லையெல்லையென்றிந்திரசித்துவுமிசைத்தான். (௩௮)

நாளுக்கெல்லையுநிருதராயுலகத்தைநலியும்
கோளுக்கெல்லையுங்கொடுந்தொழிற்கெல்லையுங்கொடியீர்
வாளுக்கெல்லையும்வந்தனவகைகொண்டுவந்தேன்
தோளுக்கெல்லையொன்றில்லையென்றநுமனுஞ்சொன்னான். (௩௯)

இச்சிரத்தைத்தொலைப்பெனென்றிந்திரன்பகைஞன்
பச்சிரத்தம்வந்தொழுகிடவானவர்பதைப்ப
வச்சிரத்தினும்வலியனவயிரவான்கணைகள்
அச்சிரத்தினுமார்பினுமழுத்தலுமநுமன். (௪0)

குறிதுவாவென்றுகுறைந்திலனெடுஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகடலுலகெலாம்வழங்கிச்
சிறியதாய்சொன்னதிருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்னாயகன்புகழெனநிமிர்ந்தான். (௪௧)

பாகமல்லதுகண்டிலனநுமனைப்பார்த்தான்
மாகவன்றிசைபத்தொடும்வரம்பிலாவுலகிற்
கேகநாதனையெறுழ்வலித்தோள்பிடித்தீர்த்த
மேகநாதனுமயங்கினனாமெனவியந்தான். (௪௨)

நீண்டவீரனுநெடுந்தடக்கைகளைநீட்டி
ஈண்டுவெஞ்சரமெய்தனவெய்திடாவண்ணம்
மீண்டுபோய்விழவீசியாங்கவன்மிடற்றடந்தேர்
பூண்டமாவொடுசாரதிதரைப்படப்புடைத்தான். (௪௩)

ஊழிக்காற்றன்னவொருபரித்தேரவனுதவப்
பாழித்தோளவனத்தடந்தேர்மிசைப்பாய்ந்தான்
ஆழிப்பல்படையனையனவளப்பருஞ்சரத்தால்
வாழிப்போர்மலிமாருதிமேனியைமறைத்தான். (௪௪)

உற்றவாளிகளூரத்தடங்கினவுகவுதருக்
கொற்றமாருதியனையவன்றேர்மிசைகுதித்துப்
பற்றிவன்கையாற்பறித்தெழுந்துலகெலாம்பலகால்
முற்றவென்றபோர்மூரிவெஞ்சிலையினைமுறித்தான். (௪௫)

---

39. கோளுக்கு - தீமைக்கு.   43. புதைத்தான் என்றும்பாடம்.

முறிந்தவில்லின்வல்லோசைபோய்முடிவதன்முன்னர்
மறிந்துபோரிடைவழிக்கொள்வான்வயிரவாட்படையால்
செறிந்தவான்பெருமலைகளைச்சிறகறச்செயிரா
எறிந்தவிந்திரனிட்டவார்சிலையினையெடுத்தான். (சகூ)

நூறுநூறுபோர்வாளியோர்தொடைகொடுநொய்தின்
மாறில்வெஞ்சினத்திராவணன்மகன்சிலைவளைத்தான்
ஊறுதன்னெடுமேனியிற்பலபடவொல்கி
ஏறுசேவகன்றாதனுஞ்சிறிதுபோதிருந்தான். (சஎ)

ஆர்த்தவானவராவலங்கொளீஇயறிவழிந்தார்
பார்த்தமாருதிதாருவொன்றங்கையிற்பற்றித்
தூர்த்தவாளிகண்முறைமுறைதுணிபடச்சுற்றிப்
போர்த்தபொன்னெடுமணிமுடித்தலையிடைப்புடைத்தான். (சஅ)

பாரமாமரமுடிபுடைத்தலையிடைப்படலும்
தாரையின்னெடுங்கற்றைகள்சொரிவனதயங்க
ஆரமால்வரையருவியினழிகொழுங்குருதி
சோரநின்றுடறுளங்கினனமரரைத்தொலைத்தான். (சகூ)

நின்றுபோதம்வந்துறுதலுநிறைபிறையெயிற்றைத்
தின்றுதேவருமுனிவருமவுணருந்திகைப்பக்
குன்றுபோனெடுமாருதியாகமுங்குலுங்க
ஒன்றுபோல்வனவாயிரம்பகழிகோத்துய்த்தான். (ருO)

உய்த்தவெஞ்சரமுரத்தினுங்கரத்தினுமொளிப்பக்
கைத்தசிந்தையன்மாருதிநனிதவகனன்றுன்
வித்தகன்சிலைவிடுகணைவிசையினுங்கடுகி
அத்தடம்பெருந்தேரொடுமெடுத்தெறிந்தார்த்தான். (ருக)

கண்ணின்மீச்சென்றவிமையிடைகலப்பதன்முன்னே
எண்ணின்மீச்சென்றவெறுழ்வலித்திறலுடையிகலோன்
புண்ணின்மீச்சென்றுபொழிபுனல்பசும்புலால்பொடிப்ப
விண்ணின்மீச்சென்றுதேரொடும்பார்மிசைவீழ்ந்தான். (ருஉ)

விழுந்துபாரடையாமுனமின்னெனுமெயிற்றுன்
எழுந்துமாவிசும்பெய்தினனிடையவன்படையில்

---

47. வளைத்தானென்பதை - வளைத்தெய்தானெனக் கூட்டுக.

49. தாரை - நட்சத்திரம்.

52. கலப்பதன்முன்னே - கூடுவதன்முன்னே என்றால் இமைக்குமுன்னே.

செழுந்தண்மாமணித்தேர்க்குலம்யாவையுஞ்சிதைய
உழுந்துபோர்வதன்முன்னெடுமாருதியுதைத்தான். (ருங)

ஏறுதேரிலனெதிர்நிற்குமுரணிலனெரியின்
சீறுவெஞ்சினந்திருகினன்சிந்தையிற்றேர்ந்து
வேறுசெய்வதோர்வினைபிறிதின்மையின்விரிஞ்சன்
மாறிலாப்பெரும்படைக்கலந்தொடுப்பதாமதித்தான். (ருச)

பூவும்பூநிறைவயினியுந்தீபமும்புகையும்
தாவில்பாவனையாற்கொடுத்தருச்சனைசமைத்தான்
தேவியாவையுமுலகமுந்திருத்தியதெய்வக்
கோவினான்முகன்படைக்கலந்தடக்கையிற்கொண்டான. (ருரு)

கொண்டகொற்றவெஞ்சிலைநெடுநாணொடுகூட்டிச்
சண்டவேகத்தமாருதிதோளொடுஞ்சார்த்தி
மண்டுளங்கிடமாதிரந்துளங்கிடமதிதோய்
விண்டுளங்கிடமேருவுந்துளங்கிடவிட்டான். (ருசு)

தணிப்பரும்பெரும்படைக்கலந்தழலுமிழ்தறுகட்
பணிக்குலங்களுக்கரசினதுருவினைப்பற்றித்
துணிக்கவுற்றுயர்கலுழனுந்துணுக்குறச்சுற்றிப்
பிணித்ததப்பெருமாருதிதோள்களைப்பிறங்க. (ருஎ)

திண்ணென்யாக்கையைத்திசைமுகன்படைசென்றுதிருக
அண்ணன்மாருதியன்றுதன்பின்சென்றவறத்தின்
கண்ணினீரொடுங்கனகதோரணத்தொடுங்கடைநாள்
தண்ணென்மாமதிகோளொடுஞ்சாய்ந்தெனச்சாய்ந்தான். (ருஅ)

சாய்ந்தமாருதிசதுமுகன்படையெனுந்தன்மை
ஆய்ந்துமற்றிதனுணையையவமதித்தகற்றல்
ஏய்ந்ததன்றெனவெண்ணினன்கண்முகிழ்த்திருந்தான்
ஓய்ந்ததாமிவன்வலியெனவரக்கன்வந்துற்றான். (ருகூ)

உற்றகாலையினுயிர்கொடுதிசைதொறுமோதுங்கி
அற்றநோக்கினர்நிற்கின்றவாளெயிற்றரக்கர்
சுற்றும்வந்துடல்சுற்றியதோளையெயிற்றரவைப்
பற்றியீர்த்தனரார்த்தனர்தெழித்தனர்பலரால். (சுo)

குரக்குநல்வலங்குறைந்ததென்றுவலங்கொட்டி
இரைக்குமாநகரெறிகடலொத்ததெம்மருங்கும்

55. அயினியும் - பிரசாதவெண்சோறும். 56. நெடுநாண் - நீண்டநாரி.

திரைக்குமாசுணம்வாசுகியொத்ததுதேவர்
அரக்கரொத்தனர்மந்தரமொத்தனனநுமன். (௬௧)

கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
அறத்துக்காங்கொருதனித்துணையாநின்றவநுமன்
மறத்துமாருதம்பொருதநாள்வாளராவரசு
புறத்துச்சுற்றியமேருமால்வரையையும்போன்றான். (௬௨)

வந்திரைத்தனர்மைந்தருமகளிருமழைபோல்
அந்தரத்தினும்விசும்பினுந்திசைதொறுமார்ப்பார்
முந்தியுற்றதோருவகைக்கோர்கரையிலைமொழியின்
இந்திரன்பிணிப்புண்டநாளொத்ததவ்விலங்கை. (௬௩)

ஆ திருவிருத்தம் - ௬௨௬௭.

## ௧௩-வது. பிணிவிடுப்படலம்.

வேறு.

எய்யுமீனீருமின்னெறிமின்போழுமின்
கொய்யுமின்குடரினைக்கூறுகூறுகள்
சொய்யுமினுலகிடைத்தேய்மின்றின்னுமின்
உய்யுமேலில்லைநம்முயிரென்றோடுவார். (௧)

மைத்தடங்கண்ணியர்மைந்தர்யாவரும்
பைத்தலையரவெனக்கனன்றுபைதலை
இத்தனைபொழுதுகொண்டிருப்பதோவென
மொய்த்தனர்கொலைசெயமுயல்கின்றார்சிலர். (௨)

நச்சடைபடைகளானவியுமீட்டதோ
வச்சிரமுடன்மறிகடலின்வாய்மடுத்
துச்சியினழுத்துமினுருத்ததன்றனின்
கிச்சிடையிடுமெனக்கிளக்கின்றார்சிலர். (௩)

எந்தையையெம்பியையெம்முன்னோர்களைத்
தந்தனைபோகெனத்தடுக்கின்றார்பலர்
அந்தரத்தமரர்தமாணையாலிவன்
வந்தனென்றுயிர்கொளமறுகின்றார்பலர். (௪)

ஓங்கலம்பெருவலியுயிரினன்பரை
நீங்கலமின்றொடுநீங்கினுமினி

ஏங்கலமிவன்சிரத்திருந்தலாற்றிரு
வாங்கலுமென்றழுமாதரார்பலர். (௫)

கொண்டனரெதிர்செலுங்கொற்றமாநகர்
அண்டமுற்றதுநெடிதார்க்குமார்ப்பது
கண்டமுற்றுளவருங்கணவர்க்கேங்கிய
குண்டலமுகத்தியர்க்குவகைகூரவே. (௬)

வடிவுடைக்கனற்படைவயவர்மால்கரி
கொடியுடைத்தேர்பரிகொண்டுவீசலின்
இடிபடச்சிதைந்தமால்வரையினில்லெலாம்
பொடிபடக்கிடந்தனகண்டுபோயினான். (௭)

முயிறலைத்தெழுமுதுமரத்தின்மொய்ம்புதோள்
கயிறலைப்புண்டதுகண்டுகாண்கிலா
தெயிறலைத்தெழுமிதழரக்கரேழையர்
வயிறலைத்திரியலின்மயங்கினார்பலர். (௮)

ஆர்ப்புறவஞ்சினரடங்கினார்பலர்
போர்ப்புறச்செயலினைப்புகல்கின்றார்பலர்
பார்ப்புறப்பார்ப்புறப்பயத்தினாற்பதைத்
தூர்ப்புறத்திரியலுற்றோடுவார்பலர். (௯)

காந்துறுகதழெயிற்றரவின்கட்டொரு
பூந்துணர்சேர்த்தெனப்பொலியும்வாண்முகம்
தேர்ந்துறுபொருள்பெறவெண்ணிச்செய்யுமின்
வேந்துறல்பழுதெனவிளம்புவார்சிலர். (௧௦)

ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுதன்
எளிவரவின்றுபின்னெண்ணம்வேறெனாக்
களிவருசிந்தையாற்காண்டிநங்களைச்
சுளிகிலையாமெனத்தொழுகின்றார்சிலர். (௧௧)

பைங்கழலநுமனைப்பிணித்தபாந்தளைக்
கிங்கரரொருபுடைகிளர்ந்துபற்றினார்
ஐம்பதினாயிரராளிலாற்றலர்
மொய்ம்பினினெறுழ்வலிக்கருளன்மும்மையார். (௧௨)

திண்டிறலரக்கர்தஞ்செருக்குச்சிந்துவான்
தண்டலிறன்னுருக்கரந்ததன்மையான்

---

8. முயிறு - ஒருவகைச்செவ்வெறும்பு.    12. கருளன் - கருடன்.

மண்டமர்தொடங்கினன்வானரத்துருக்
கொண்டனனந்தகன்கொல்லென்றார்பலர். (க௩)

அரமியத்தலந்தொறுமம்பொன்மாளிகைத்
தரமுறுநிலைதொறுஞ்சாளரந்தொறும்
முரசெறிகடைதொறுமிரைத்துமொய்த்தனர்
நிரைவளைமகளிருநிறைந்தமைந்தரும். (க௪)

கயிலையிலொருதனிக்கணிச்சிவானவன்
மயிலியற்சீதைதன்கற்பின்மாட்சியால்
எயிலுடைத்திருநகர்சிதைப்பவெய்தினன்
அயிலெயிற்றொருகுரங்காயென்பார்பலர். (க௫)

அரம்பையர்விஞ்சைநாட்டளகவல்லியர்
நரம்பினுமினியசொனுதநாடியர்
கரும்பியல்சித்தியரியக்கர்கன்னியர்
வரம்பறுசும்மையர்தலைமயங்கினார். (க௬)

நீரிடைக்கண்டுயினெடியநேமியும்
தாருடைத்தனிமலருலகின்றாதையும்
ஒருடல்கொண்டுதம்முருவமாற்றினர்
பாரிடைப்புகுந்தனர்பகைத்தென்பார்பலர். (க௭)

அரக்கருமரக்கியர்குழாமுமல்லவர்
கரக்கிலாநெடுமழைக்கண்ணினீரது
விரைக்குழற்சீதைதன்மெலிவுநோக்கியோ
இரக்கமோவறத்தினதண்மையேகொலோ. (க௮)

ஆண்டொழிலநுமனுமவரொடேகினான்
மீண்டிலன்வேறிலன்விரும்பலுற்றிலன்
ஈண்டிதுவேதொடர்ந்திலங்கைவேந்தனைக்
காண்டலேநலனெனக்கருத்திலெண்ணினான். (க௯)

எந்தையதருளினுமிராமன்சேவடி
சிந்தைசெய்நலத்தினுஞ்சீதைவானவர்
தந்துளவரத்தினுந்தறுகட்பாசமும்
சிந்துவெனயர்வுறுசிந்தைசீரிதால். (௨௦)

வளையெயிற்றரக்கனைபுற்றுமந்திரத்
தளவுறுமுதியருமறியவாணையால்

14. சாளரம் - சன்னல்.

விளைவினைவிளம்பினன்மிதிலைநாடியை
இளகினனென்வயினீதலையுமால். (உக)

அல்லதூஉமவனுடைத்துணைவராயினர்க்
கெல்லையுமுதெரிவுறுமெண்ணுந்தேறலாம்
வல்லவனிலைமையுமனமுந்தேறலாம்
சொல்லுகமுகமெனுந்தூதுசொல்லவே. (உஉ)

வாலிதன்னிறுதியுமரத்துக்குற்றதும்
கூலவெஞ்சேனையின்குணிப்பிலாமையும்
மேலவன்காதலன்வலியுமெய்ம்மையால்
நீளிறத்திராவணனெஞ்சினிற்குமால். (உ௩)

ஆதலானரக்கனையெய்தியாற்றலும்
நீதியுமனக்கொளநிறுவிநின்றவும்
பாதியின்மேற்செலநூறிப்பைப்பையப்
போதலேகருமமென்றநுமன்போயினன். (உச)

கடவுளர்க்கரசனைக்கடந்தேதான்றலும்
புடைவரும்பெரும்படைப்புணரிபோர்த்தெழ
விடைபிணிப்புண்டதுபோலும்வீரனைக்
குடைகெழுமன்னனிற்கொண்டுபோயினன். (உ௫)

தூதுவரோடினர்தொழுதுதொல்லைநாள்
மாதிரங்கடந்தவற்குறுகிமன்னநின்
காதலன்மரைமலர்க்கடவுள்வாளியால்
ஏதில்வானரம்பிணிப்புண்டதாமென்றார். (உ௬)

கேட்டலுங்கிளர்சுடர்கெட்டவாவென
வீட்டிருள்விழுங்கியமார்பன்யானையின்
கோட்டெதிர்பெருதபோராங்கொண்டெதிர்
நீட்டினனுவகையினிமிர்ந்தநெஞ்சினன். (உ௭)

எல்லையிலுவகையாலிவர்ந்ததோளினன்
புல்லுறமலர்ந்தகட்குமுதப்பூவினன்
ஒல்லையிலோடிநீருரைத்தென்னாணையால்
கொல்லலிர்தருகெனக்கூறுவீரென்றான். (உ௮)

அவ்வுரைதூதருமாணையால்வரும்
தெவ்வுரைநீக்கினனறியச்செப்பினர்

23. குணிப்பிலாமை - அளவிலாமை.

இவ்வுரைநிகழ்வுழியிருந்தசீதையாம்
வெவ்வுரைநீங்கிஞணிலைவிளம்புவாம். (உகூ)

இறுத்தனன்கடிபொழிலெண்ணிலோர்பட
ஒறுத்தனனென்றுகொண்டுவக்கின்றுளுயிர்
வெறுத்தனள்சோர்வுறவீரற்குற்றதைக்
கறுத்தலில்சிந்தையாள்கவன்றுகூறினாள். (௩0)

வேறு.

ஓவியம்புகையுண்டதுபோலொளிர்
பூவின்மெல்லியன்மேனிபொடியுறப்
பாவிவேடன்கைப்பார்ப்புறப்பேதுறும்
தூவியன்னமன்னாளிவைசொல்லினாள். (௩க)

உற்றுண்டாயவிசும்பையுருவினாய்
முற்றுண்டாய்கலையாவையுமுற்றுறக்
கற்றுண்டாபொருகள்ளவரக்கனால்
பற்றுண்டாயிதுவோவறப்பான்மையே. (௩உ)

கடர்கடந்துபுகுந்தனைகண்டகர்
உடர்கடந்துநின்றாழிகடந்திலை
அடர்கடந்ததிரள்புயத்தையநீ
இடர்கடந்தனைவந்திடர்மேலுமே. (௩௩)

ஆழிகாட்டியென்னாருயிர்காட்டினாய்க்
கூழிகாட்டுவேனென்றுரைத்தேனது
வாழிகாட்டுமென்றுண்டுன்வரைப்புயப்
பாழிகாட்டியரும்பழிகாட்டினாய். (௩௪)

கண்டுபோயினைநீநெறிகாட்டிட
மண்டுபோரினரக்கனைமாய்த்தெனைக்
கொண்டுமன்னவன்போமெனுங்கொள்கையைத்
தண்டினாயெனக்காருயிர்தந்தநீ. (௩ரு)

ஏயப்பன்னினளின்னனதன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமயர்ந்தனள்
தீயைச்சுட்டதோர்கற்பெருந்தீயினாள். (௩௬)

பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன்மற்றைறயுலகொருமூன்றையும்

33. கண்டகர் - ஹிம்சகர். 35. தண்டினாய் - தடைசெய்தாய்.

அருந்தவப்பயனாலரசாள்கின்றான்
இருந்தவப்பெருங்கோயில்சென்றெய்தினான். (௩௭)

வேறு.

தலங்கண்மூன்றிற்கும்பிறிதொருமதிதழைத்தென்ன
அலங்கல்வெண்குடைதண்ணிழலவிரொளிபரப்ப
வலங்கொடோளினான்மண்ணின்றுவானுறவெடுத்த
பொலங்கொண்மாமணிவெள்ளியங்குன்றெனப்பொலிய. (௩௮)

புள்ளுயர்த்தவன்றிகிரியும்புரந்தரனயிலும்
தள்ளின்முக்கணான்கணிச்சியுந்தாக்கியதழும்பும்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாள்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின்வயங்க. (௩௯)

துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்க்குழாநிமிர
ஒன்றுசீற்றத்தினுயிர்ப்பெனும்பெரும்புகையுயரத்
தென்றிசைக்குமோர்வடவனறிருத்தியதென்ன. (௪௦)

மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவாள்
நரகதேயத்துணடுக்குறுவிருளையுநக்கச்
சிரமனைத்தையுந்திசைதொறுந்திசைதொறுஞ்செலுத்தி
உரகர்கோனினிதரசுவீற்றிருந்தனனெனப்ப. (௪௧)

குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றோளொடுதயங்கப்
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாலிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப. (௪௨)

சிந்துராகத்தினசெறிதுகிற்கச்சொடுசெறியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
இந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுடுத்தல்லுவீற்றிருந்ததாமென்ன. (௪௩)

வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுகந்திசையின்
கண்வைக்குந்தொறுங்களிற்றொடுமோதிரங்காக்கும்
எண்மர்க்குமற்றையிருவர்க்கும்பெரும்பயமியற்ற. (௪௪)

---

38. தலங்கண்மூன்று - திரிலோகம், 39. கணிச்சி - மழுப்படை.
44. இருவர் - சேடவின்.

ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும்
மாகமால்விசும்பீறெனநடுவணவரைப்பில்
தோகைமாதர்கண்மைந்தரிற்றோன்றினர்சுற்ற. (சரு)

வானரங்களும்வானவரிருவருமனிதர்
ஆனபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரும்
ஏனைநின்றவரிருடியர்சிலரொழிந்தியாரும்
தூநவின்றவேலரக்கர்தங்குழுவொடுஞ்சுற்ற. (சசா)

நரம்புகண்ணகத்துள்ளுறைநறைறைபாண்டில்
நிரம்புசில்லரிப்பாணியுங்குறடுநின்றிசைப்ப
அரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க. (சஎ)

கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசீறடிவிழிமனங்கையொடுதொடரும்
ஆடனுக்குறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்குறுமேனகைமேனகைவிளங்க. (சஅ)

ஊடினார்முகத்துறுநறையொருமுகமுண்ணக்
கூடினார்துகக்களிநறையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுதொருமுகம்பருக
ஆடினார்முகத்தணியமுதொருமுகமருந்த. (சகூ)

தேவரோடிருந்தரசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமாமந்திரமொருமுகமுயலப்
பாவகாரிதன்பாவகமொருமுகம்பயிலப்
பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த. (ருo)

காந்தண்மெல்விரற்சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்தியேறுவதெங்ஙனனெனவொருமுகநினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தார்
ஏந்துமாடியினொருமுகமியல்புடனிலங்க. (ருக)

பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரும்
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழிவார்நகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாரைவேறொடொறுந்தாக்க. (ருஉ)

45. ஏகநாயகன் - ஒன்றாகியகடவுள்.
50. பூவை - நாகணவாய்ப்புள் சொல்லுக்குவமை.

மாறளாவியமகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகுண்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்றல்
ஊறளாவியகடுவெனவுடலிடைநுழைய. (ருங)

திங்கள்வாணுதன்மடந்தையர்சேயரிக்கிடந்த
அங்கயற்றடந்தாமரைக்கலரியோனாகி
வெங்கண்வானவர்தானவரென்றிவர்விரியாப்
பொங்குகைக்கடற்றுமரைக்கிந்துவேபோன்றும். (ருச)

இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திணுகத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
திருந்துதோளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
உருந்துநஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான். (ருரு)

உறங்குகின்றபோதுயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணியாசனத்திருக்கவும்பெற்றேன்
திறங்களென்பலசிந்திப்பதிவன்றலைசிதறி
அறங்கொள்கொம்பினைமீட்டெனகலவெனென்றமைந்தான். (ருசா)

தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்கண்டிவணிருந்தவர்கட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடித்தலைபறித்திலெனென்றால்
ஏவதியானினிமேற்செயுமாள்வினையென்றான். (ருஎ)

மாடிருந்தமற்றிவன்புணர்மங்கையர்மயங்கி
ஊடிரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
ஆடல்கொண்டுநின்றார்க்கின்றதுநெடிதம்மா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ. (ருஅ)

நீண்டவாளெயிற்றரக்கனைக்கண்களினேரே
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்சிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள்வென்றிலேனெனினும்
மாண்டபோதினும்புகழன்றிமற்றுமொன்றுண்டோ. (ருகூ)

என்றுதோளிடையிறுக்கியபாசமிற்றேகக்
குன்றின்மேலெழுகோளரியேறெனக்குதியின்
சென்றுகூடுவலென்பதுசிந்தனைசெய்யா
நின்றுகாரியமன்றெனநீதியினினைந்தான். (கூ0)

---

53. மகரந்தநறவு-வாசனையுள்ளகள். 57. ஏந்தும்ஆடி-முன்னேந்தியகண்ணடி.

## வேறு.

கொல்லலாம்வலத்தனுமல்லன்கொற்றமும்
வெல்லலாந்தரத்தனுமல்லன்மேலைநாள்
அல்லெலாந்திரண்டனநிறத்தனுற்றலை
வெல்லலாமிராமனுற்பிறரும்வெல்வரோ. (௬௧)

என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
தன்னையும்வெலற்கரிதெனக்குந்தாக்கினுல்
அன்னவேகாலங்கள்கழியுமாதலான்
துன்னருஞ்செருத்தொழிற்கடங்கறுயதோ. (௬௨)

ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பஃறலை
பூமியிற்புரட்டலென்பூணிப்பாமென
ஊழியான்விளம்பியவுரையுமொன்றுண்டால். (௬௩)

இங்கொருதிங்களேயிருப்பல்யானென
அங்கணுயகன்றனதாணைகூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையால்
பொங்குவெஞ்செருவிடைப்பொழுதுபோக்கினுல். (௬௪)

ஆதலானமர்த்தொழிறமுகிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றுன்னினுன்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசால்
ஏதிவாளரக்கனதிருக்கைஎய்தினுன். (௬௫)

நீட்டியவாளெனத்தெறுகட்டேவியர்
ஈட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனனுமனைக்கடலினுரமு
தூட்டியயும்பரையுலையவோட்டினுன். (௬௬)

புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றரியுருவானவாண்டகை
சிவனெனச்செங்கணுனென்னச்சேவகன்
இவனெனக்கூறிநின்றிருகைகூப்பினுன். (௬௭)

நோக்கியகட்பொறிநுவன்றவாய்களில்
தூக்கியபொறியொடுமயிர்சுறுக்கொளத்

64. அங்கண் - அப்போது அழகிய கண்.
65. ஏதில் - ஏதமில்லாத, குற்றமற்ற.
68. கட்பொறி - கண்ணுகிய அறிவு.

தாக்கியவுயிர்ப்பொடுந் தவழுவெம்புகை
நீக்கினனவ்வுடல்விசித்தபாம்பினை. (௬௮)

அன்னதோர்வெகுளியனமரராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
என்னிவண்வரவுநீயாரையென்றவன்
தன்மையைவினவினன்கூற்றின்றன்மையான். (௬௯)

நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனேதறுதட்பமற்றிலைப்
பூமிதாங்கொருவனேபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினாய். (௭௦)

நின்றசைத்துயிர்கவர்நீலக்காலனோ
குன்றசைத்தயிலுறவெறிந்தகொற்றனோ
தென்றிசைக்கிழவனோதிசைநின்றாட்சியர்
என்றிசைக்கின்றவரிவருள்யாவனீ. (௭௧)

அந்தணர்வேள்வியினுக்கியாணையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதிகிரித்தெய்வமோ. (௭௨)

ஆரைநீயென்னையிங்கெய்துகாரணம்
ஆருனைவிடுத்தவரறியவாணையால்
சோர்விலைசொல்லுதியென்னச்சொல்லினன்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினான். (௭௩)

சொல்லியவனைவருமல்லென்சொன்னவப்
புல்லியவலியினோரேவல்பூண்டிலென்
அல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதன்யானிலங்கைமேயினேன். (௭௪)

அனையவன்யாரெனவறிதியாதியேல்
முனைவருமமரருமூவர்தேவரும்
எனையவரெனையவர்யாவர்யாவையும்
நினைவருமிருவினைமுடிக்கநின்றுளோன். (௭௫)

## வேறு.

கட்டியவலியுமேனுளியற்றியதவமும்யாணர்க்
கூட்டியபடையுந்தேவர்கொடுத்தநல்வரமுங்கோட்பும்

தீட்டியவாளும்வேலுந் திருத்தியவாழ்வுமெல்லாம்
நீட்டியபகழியொன்றுன்முதலொடுநீக்கநின்றான். (எசு)

தேவரும்பிறருமல்லன் றிசைக்களிறார்தித் திக்கிற்
காவலரல்லனீசன் கைலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றை றமுனிவருமல்லனெல்லைப்
பூவலயத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம். (எஎ)

போதமும்பொருந்துகேள்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சார்ந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனிணைந்தானன்னபயத்தனவேதுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்திவில்லோன். (எஅ)

காரணங்கேட்டியாயிற்கடையிலாமறையின்கண்ணும்
ஆரணங்காட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
போரணங்கிடங்கர்கௌவப்பொதுநின்றுமுதலேயென்ற
வாரணங்காக்கவந்தானமரரைக்காக்கவந்தான். (எகூ)

மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணன்கைவில்லேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
ஆலமுமலருஞ்வெள்ளிப்பொருப்பும்விட்டயோத்திவந்தான். (அ௦)

அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
இறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவீண்டு
பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான். (அக)

அன்னவற்கடிமைசெய்வேனுமுமநுமனென்பேன்
நன்னுதறன்னைத்தேடிநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்ததானைக்குமன்னன்வாலி
தன்மகனவன்றன்றாதன்வந்தனென்றனியேனென்றான். (அஉ)

என்றலுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலிநாப்பண்
மின்றிரிந்தென்னநக்குவாலிசேய்விடுத்ததூத
வன்றிறலாயவாலிவலியன்கொலரசின்வாழ்க்கை
நன்றுகொலென்னலோடுநாயகன்றாதனக்கான். (அந)

அஞ்சலையரக்கபார்விட்டந்தரமடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளான்வாலும்போய்விளிந்ததன்றே

77. முனிவர் - ஈண்டு சனகாதியர். 80. ஆலம் - கடல். (ஆகுபெயர்.)

அஞ்சமேனியான் றனடுகணையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன்சூரியன்ரேன்றலென்றான். (அச)

என்னுடையீட்டிலைவ்வாலியையெறும்வாயம்பால்
இன்னுயிருண்டதிப்போதியாண்டையானிராமனென்பான்
அன்னவன்றேவிதன்னையங்கதனுடனுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான். ()

தேவியைநாடிவந்தசெங்கணற்கெங்கள்கோமான்
ஆவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
ஒவியர்க்கெழுதவொண்ணாவுருவத்தனுருமையோடும்
கோவியற்செல்வமுன்னைகொடுத்துவாலியையுங்கொன்றான். (அரு)

ஆயவன்றன்னொடாண்டோர்திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழவிற்றினிதிருந்தவீரன்
போயினிநாடுமென்னப்போந்தனம்புகுந்ததீதென்
றேயவன்றாதன்சொன்னானிராவணனிதனைச்சொன்னான். (அசு)

உங்குலத்தலைவன்றன்னைடொப்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றுற்காட்டொழின்மேற்கொண்டமேல்
எங்குலப்புறநுஞ்சேர்ந்திதும்மொடுமியைந்ததென்றால்
மங்குலிற்பொலிந்தஞாலமாதுமையுடைத்துமாதோ. (அஅ)

தம்முனைக்கொல்வித்தன்னற்கொன்றவற்கன்புசான்ற
உம்மினத்தலைவனைவபாடுதனக்குணர்த்தனுற்ற
தெம்முனைத்தூதுவந்தாயிகல்புரிதன்மையென்னை
நும்மினைக்கொல்லாநெஞ்சமஞ்சலைநுவறியென்றான். (அகூ)

வேறு.

துணர்த்ததாரவன்சொல்லியசொற்களைப்
புணர்த்துநோக்கப்பொதுநின்றநீதியை
உணர்த்திலைதுறுமெனவுன்னரும்
குணத்தினனுமினையனகூறினன். (கூ0)

தூதுவந்ததுசூரியன்கான்முளை
ஏதுவொன்றியநீதியிையந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனநின்வயிற்கூறுவான். (கூக)

---

88. மாதுமை - அறியாமைத்தன்மை.

வறிதுவீழ்த்தனைவாழ்க்கையைமன்னறம்
சிறிதுநோக்கலைதீமைதிருத்திஞய்
இறுதியுற்றுளதாயினுமின்னுமோர்
உறுதிகேட்டியுயிர்நெடிதோம்புவாய் (கூஉ)

போயிற்றீர்நும்புலன்வென்றுபோற்றிய
ஆயிற்றீர்வரிதாகியமாதவம்
காயிற்றீர்வருங்கேடருங்கற்பினால்
தீயிற்றாயவளைத்துயர்செய்ததால். (கூ௩)

இன்றுவீந்ததுநாளைச்சிறிதிறை
நின்றுவீந்ததலாணிலைநிற்குமோ
ஒன்றுவீந்ததுநல்லுணரும்பரை
வென்றுவீங்கியவீக்கமீகுத்ததால். (கூச)

தீமைநன்மையைத்தீர்த்தலொல்லாதெனும்
வாய்மைநீக்கினைமாதவத்தால்வந்த
தூய்மைதூயவடன்மையிற்றோன்றிய
நோய்மையாற்றுடைக்கின்றனைநோக்கலாய். (கூரு)

திறந்திறம்பியகாமச்செருக்கினால்
மறந்துதத்தமதியின்மயங்கினார்
இறந்திறந்திழிந்தேதறுவதேயலால்
அறந்திறம்பினராருளராயினார். (கூகா)

நாமத்தாழ்கடன்ஞாலத்தவிந்தவர்
ஈமத்தான்மறைந்தாரிளமாதர்பால்
காமத்தாலிறந்தார்களிவண்டுறை
தாமத்தாரினரெண்ணினுஞ்சால்வரோ. (கூஎ)

பொருளுங்காமமுமென்றிவைபோக்கிவே
றிருளுண்டாமெனவெண்ணலரீதலும்
அருளுங்காதலிற்றீதலுமல்லதோர்
தெருளுண்டாமெனவெண்ணலர்சீரியோர். (கூஅ)

இச்சைத்தன்மையினிற்பிறரில்லினை
நச்சினாருநகையுறநாணிலன்

96. காமச்செருக்கு - காமமயக்கம்.
97. ஈமம் - பிணங்களைச்சுடும் விறகுகளினடுக்கு.
99. இல்லினை - மனைவியை.

பச்சைமேனிபுலர்ந்துபழிபடூஉம்
கொச்சையாண்மையுஞ்சீர்மையிற்கூடுமோ. (௯௯)

ஓதநீருலகாண்டவருன்றனைப்
போதநீதியராருளர்போயினர்
வேதநீதிவிதிவழிச்செல்வரும்
காதனீயறத்தொல்லைகடத்தியோ. (௧௦௦)

வெறுப்புண்டாயவொருத்தியைவேண்டினன்
மறப்புண்டாயபின்வாழ்கின்றவாழ்வினின்
உறுப்புண்டாய்நடுவோங்கியநாசியை
அறுப்புண்டாலதழகெனலாகுமே. (௧௦௧)

பாரைஞ்ஞூறுவபற்பலபொற்புயம்
ஈரைஞ்ஞூறுதலையுளவென்னினும்
ஊரைஞ்ஞூறுங்கடுங்கனலுட்பொதி
சீரைஞ்ஞூறவைசேமஞ்செலுத்துமோ. (௧௦௨)

புரம்பிழைப்பருந்தீப்புகப்பொங்கியோன்
நரம்பிழைத்தனபாடலினல்கிய
வரம்பிழைக்குமறைபிழையாதவன்
சரம்பிழைக்குமென்றெண்ணுதல்சாலுமோ. (௧௦௩)

ஈறிலாறுகவெஞ்சலினற்றிரு
நூறிநோய்தினையாகிநுழைதியோ
வேறுமின்னுநகையாம்வினைத்தொழில்
தேறினர்பலர்காமிக்குஞ்செவ்வியோய். (௧௦௪)

பிறந்துளார்பிறவாதபெரும்பதம்
சிறந்துளார்மற்றுந்தேவர்க்குந்தேவராய்
இறந்துளார்பிறர்யாருமிராமனை
மறந்துளாருளராகிலர்வாய்மையால். (௧௦௫)

ஆதலாற்றனரும்பெறற்செல்வமும்
ஓதுபல்கிளையும்முயிரும்பெறச்
சீதையைத்தருகென்றெனச்செப்பினன்
சோதியான்மகனிற்கெனச்சொல்லினன். (௧௦௬)

என்றலும்மிவைசொல்லியதெற்கொரு
குன்றின்வாழுங்குரங்குகொலாமிது

நன்றுநன்றெனமாநகைசெய்தனன்
வென்றியென்றொன்றுதானன்றிவேறிலான். (க0எ)

குரக்குவார்த்தையுமானிடர்கொற்றமும்
இருக்கநிற்கநீயென்கொலடாவிரும்
புரத்தினுட்டருந்தூதுபுகுந்தபின்
அரக்கரைக்கொன்றதஃதுரையாயென்றான். (க0அ)

காட்டுவாரின்மையாற்கடிகாவினை
வாட்டினேனென்னைக்கொல்லவந்தார்களை
வீட்டினேன்பின்னுமென்மையினாலுன்றன்
மாட்டுவந்ததுகாணுமதியினால். (க0௯)

என்னுமாத்திரத்தீண்டெரிநீண்டுக
மின்னும்வாளெயிற்றினன்சினம்வீங்கினான்
கொன்மினென்றனன்கொல்லியசேர்தலும்
நின்மினென்றனன்வீடணனீதியான். (கக0)

ஆண்டெழுந்துநின்றண்ணலரக்கனை
நீண்டகையன்வணங்கினனீதியான்
மூண்டகோபமுறையதென்றுமெனை
வேண்டுமெய்யுரையின்னவிளம்பினான். (ககக)

வேறு.

அந்தணனுலகமூன்றுமாதியினறத்தினாற்றில்
தந்தவனன்புக்கான்றதவநெறியுணர்ந்ததக்கோய்
இந்திரன்கருமமாற்றுமிறைவனீயியம்புதூது
வந்தனெனென்றபின்புங்கோறியோமறைகள்வல்லோய். (ககஉ)

பூதலப்பரப்பினண்டப்பொருட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பின்வேறுவேறிடத்துவேந்தர்
மாதரைக்கொலைசெய்தார்களுளரெனவரினும்வந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரேதொல்லைநல்லோர். (ககங)

பகைப்புலனனுகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கும்
நகைப்புலன்பிறிதுண்டாமோநங்குலநவையின்றாமே. (ககச)

முத்தலையெஃகன்மற்றைமுராந்தகன்முனிவன்முன்னா
அத்தலைநம்மைநோனாவமரர்க்குநகையிற்றாமால்

110. விபீஷணன் (சத்தியத்திற்கஞ்சி) பலவிதமாகப் பயப்படுவன்.

எத்தலையுலகங்காக்குவேந்தனீமேற்றேரேவ
இத்தலையெய்திரூனைக்கொல்லுதலிழுக்கமின்னும். (கககரு)

இளையவடன்னைக்கொல்லா திருசெவிழுக்கொடீர்ந்து
விளைவுரையென்றுவிட்டார்வீரராய்மெய்மையோர்வார்
களைதியேலாவிநம்பாலிவன்வந்துகண்ணிற்கண்ட
அளவுரையாமற்செய்தியாதியென்றமையச்சொன்னான். (ககசு)

வேறு.

நல்லதுரைத்தாய்நம்பியிவனவைசெய்தானேயானாலும்
கொல்லல்பழுதேபோயிடைநீகூறிக்கொணர்திகடிதென்னாத்
தொல்லைவாலைமூலமறச்சுட்டுநகரைச்சூழ்போக்கி
எல்லைக்கடக்கவிடுமின்களென்றானின்றாரிரைத்தெழுந்தார். (ககஎ)

ஆயகாலத்தயன்படையோடிருப்பவாகாதனவிடுதல்
தூயபாசமெனைப்பலவுங்கொணர்ந்துபிணிமின்றோளென்னா
மேயதெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றான்
ஏயெனுமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்தீர்த்தார்.

நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினூசனெடும்பாசமற்றதேரும்விசிதுறந்த
மாட்டும்புரவியாயமெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்லிமூட்டோடும்புரசையிழந்தபோர்யானை. (கககூ)

மண்ணிற்கண்டவானவரைவலியிற்கவர்ந்தவரம்பெற்றி
எண்ணற்கரியவேனையரையிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கிசையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடைபிடைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார். (க௨௦)

கடவுட்படையைக்கடந்தறத்தினூணகடந்தேனூகாமே
விடுவித்தளித்தார்தெவ்வரேவென்றேனன்றேவிவர்வென்றி
சுடுவிக்கின்றதிவ்வூரைச்சுடுகென்றுரைத்ததுணிவென்று
நடுவுற்றமையவுறநோக்கிமுற்றுமுவந்தானவையற்றான். (க௨க)

நொய்யபாசம்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி
வெய்யவரக்கர்புறத்தலைப்பவீடுமுணர்ந்தேவிரைவில்லா
ஐயன்விஞ்சைதனையறிந்துமறியாதான்போலவிஞ்சையெனு
பொய்யைமெய்போனடிக்கின்றயோகிபோன்றான்போகின்றான். ()

வேந்தன்கோயில்வாயிற்றூறும்விரைவிற்கடந்துவெள்ளிடையின்
போந்துபுறநின்றிரைக்கின்றபொறைதீர்மறவர்புரஞ்சுற்ற

121. தெவ்வர் - பகைவர். 122. விஞ்சை - ஞானம்.

வந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளீத்திஞரார்த்தாரண்டங்கடிகலங்க. (கஉ௩)

ஒக்கவொக்கவுடன்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கம்பக்கமிருகூறுய்நூறுயிரவர்பற்றிஞர்
புக்கபடைஞர்புடைகாப்போர்புணரிக்கணக்கர்புறஞ்செல்வோர்
திக்கினளவாரயனின்றுகாண்போர்க்கெல்லைதெரிவரிதால். (கஉச)

அந்தநகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
சிந்தநூறிச்சீதையொடும்பேசிமணிதர்திறஞ்செப்ப
வந்தகுரங்கிற்குற்றதனைவம்மின்காணவம்மென்று
தந்தந்தெருவும்வாயிற்றும்யாருமறியச்சாற்றிஞர். (கஉரு)

ஆர்த்தாரண்டத்தப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
கீர்த்தார்முரசமெற்றிஞரிடித்தார்தெழித்தாரெம்மருங்கும்
பார்த்தாரோடிச்சானகிக்கும்பகர்ந்தாரவளுமுயிர்பதைத்தாள்
வேர்த்தாளுலந்தாள்விம்மிஞள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள்

தாயேயனையகருணையான்றுணையேயேதுந்தகைவில்லா.
நாயேயனையவல்லரக்கர்நலியக்கண்டானல்காயோ
நீயேயுலகுக்கொருசான்றுநிற்கேதெரியுங்கற்பதனில்
தூயேனென்னிற்றூழுகின்றேனெரியேயவனைச்சுடலென்றாள். ()

வேறு.

வெளுத்தமென்னகையவள்விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கலலவனுள்ளமுட்கினான்
தளிர்த்தனமயிர்ப்புறஞ்சிலிர்ப்பத்தண்மையால்
குளிர்த்தவக்குரிசில்வாலென்புகூரவே. (கஉஅ)

வேறு.

மற்றினிப்பலவென்வேலைவடவனல்புவியளாய
கற்றையங்கனலிமற்றைக்காயத்தீமுனிவர்காக்கும்
முற்றுறுமும்மைச்செந்தீமுப்புரமுருங்கச்சுட்ட
கொற்றவனெற்றிக்கண்ணின்வன்னியுங்குளிர்ந்தவன்றே. (கஉகூ)

---

124. புணரி - சமுத்திரம் - பத்துலக்ஷங்கோடி.

127. அக்கினிக்குச் சகாயன் வாயுவாகலாலே வாயுபுத்திரனுக்கு நீ துணையாகவேண்டுமென்று துணையே யென்றான்.

129. கற்றையங்கனலி - பௌமமென்னும் கவாலாக்கினி.

129. காயத்தீ - ஔதாரியமென்னு மக்கினி. 129. மும்மைச்செந்தீ காருகபத்தியம் ஆகவநீயம் தெக்ஷுணாக்கினி.

அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்தவங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருமெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழங்கிருள்விழுங்குந்தாவில்
மண்டலங்குளிர்ந்தமீளாநரகமுங்குளிர்ந்தமாதோ. (கஙo)

வெற்பினாலியன்றதன்னமேனியைவிழுங்கிவெந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினோக்கி
அற்பினாறாதசிந்தையநுமனுஞ்சனகன்பாவை
கற்பினாலியன்றதென்பான்பெரியதோர்களிப்பனானான். (கஙக)

அற்றைப்பவ்விரவிற்றான்றனறிவினான்முழுதுமுன்னப்
பெற்றிலெனினுமாண்டொன்றுள்ளதுபிழையுறாமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெல்லறிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டலிற்றெரியக்கண்டான். (கஙஉ)

முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமூர்முடியச்சென்றான்
வழுவுறுகாலநீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழுவினனிரண்டுநூறாயிரம்புயத்தடக்கைத்தாம்போ
டெழுவெனநாலவின்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம். (கஙங)

இற்றவாளரக்கர்நூறாயிரவருமிழந்ததோளார்
முற்றினாருலந்தாரையன்மொய்ம்பினோடுடலைமூழ்கச்
சுற்றியகயிற்றினோடுந்தோன்றுவானரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான். (கஙச)

துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பனென்னாப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான். (கஙரு)

தன்னிறைக்குறுகண்வெய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
அன்னவர்க்கிறுதியாகவணிநகரழிப்பலென்னாச்
செந்நிறச்சிகையவெம்போர்மழுப்பின்னர்ச்சேறலொக்கும்
அன்னிறத்தண்ணலுந்தனனல்கொழுங்கொற்றநீள்வால். (கஙசு)

அப்புறம்வேலைகாறுமலங்குபேரிலங்கைதன்னை
எப்புலத்தளவுந்தீபவொருகணத்தெரித்தகோட்பால்
துப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளால்
முப்புரத்தெய்தகோலையொத்ததம்மூரிப்போர்வால். (கஙஎ)

உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதன்னூட்டம்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வியப்போர்வால்
தகைத்தலினேன்மைசாலுந்தனிவீரன்சேணிலுய்த்தான். (கங அ)

வெள்ளியிற்பொன்னினுளைவிளங்குபொன்மணியின்விஞ்சை
தெள்ளியகடவுட்டச்சன்கையுமயன்றரிதிற்செய்த
தள்ளருமனைகடோறுமுறைமுறைதாவிச்சென்றான்
ஒள்ளரியோடுங்குன்றத்தூழிவீழுருமோடொப்பான். (கஙகூ)

நீல்நிறநிருதரீண்டநெய்பொழிவெள்ளிநீங்கப்
பால்வருபசியனென்பான்மாருதிவாலைப்பற்றி
ஆலமுண்டவனன்றூட்டவுலகெலாமழிவினுண்ணும்
காலமேயென்னமன்னோகனலியுங்கடிதினுண்டான். (கச0)

ஆ - திருவிருத்தம் - ககஅஎ.

## கச-வது. இலங்கையெரியூட்டுப்படலம்.

கொடியைப்பற்றிவிதானங்கொளுத்தியே
நெடியதூணைத்தழுவிநெடுஞ்சுவர்
முடியச்சுற்றிமுழுதுமுருக்கிற்றால்
கடியமாமனைதோறுங்கடுங்கனல். (க)

வாசலிட்டவெரிமணிமாளிகை
மூசமுட்டிமுழுதுமுருக்கலால்
ஊசலிட்டனவோடியுலைந்துளைப்
பூசலிட்டவிரியற்புரமெலாம். (உ)

மணியிழையவங்கொளிமாளிகை
பிணியிற்செஞ்சுடர்க்கற்றைபெருக்கலால்
திணிகொடியுற்றதூற்றிலதேங்கிலார்
அணிவிளக்கைநல்லாரலமந்துளார். (ந)

வானகத்தைநெடும்புகைமாய்த்தலால்
போனதிக்கறியாதுபுலம்பினார்
தேனகத்தமலர்பலசிந்திய
கானகத்துமயிலன்னகாட்சியார். (ச)

2. ஊசலிட்டன மெலாம் - நெருப்புக்குப்பயந்து வெளியே போகிறதும் பிள்ளை முதலியவைகளை நினைந்து திரும்ப வருகிறதுமாயின என்க.

கூய்க்கொழும்புனல்குஞ்சியிற்கூந்தலில்
மீச்செரிந்தனராமாதரும்வீரரும்
எய்த்ததன்மையினாலெரியின்மையும்
தீக்கொளுந்தினவுந்தெரிகின்றிலர். (௫)

இல்லிற்றங்குவயங்கெரியாவையும்
சொல்லிற்றீர்ந்தனபோல்வனதொல்லுருப்
புல்லிக்கொண்டனமாயைப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல். (௬)

ஆயதங்கொர்குறளுருவாயடித்
தாயளந்துலகங்கடரக்கொள்வான்
மீயெழுந்தகரியவன்மேனியில்
போயெழுந்துபரந்ததுவெம்புகை. (௭)

நீலநின்றநிறத்தனகீழ்நிலை
மாலின்வெஞ்சினயானையைமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலால்
தோலுரிந்துகழன்றனதோலெல்லாம். (௮)

மீதிமங்கலந்தாலன்னவெம்புகை
சோதிமங்கலந்தீயொடுசுற்றலால்
மேதிமங்குலின்வீழ்புனல்வீழ்மட
வோதிமங்களின்மாதரொதுங்கினர். (௯)

பொடித்தெழுந்துபெரும்பொறிபோவன
இடிக்குலங்களின்வீழ்தலுமெங்கணும்
வெடித்தவேலைவெதும்பிடமீன்குலம்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால். (௧0)

பருகுதீமடுத்துள்ளுறப்பற்றலால்
அருகுநீடியவாடகத்தாரைகள்
உருகிவேலையினூடுபுக்குற்றன
திருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால். (௧௧)

உரையின்முந்துலகுண்ணுமெரியதால்
வரைநிவந்தனபன்மணிமாளிகை
நிரையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தரையும்வெந்ததுபொன்னெனுந்தன்மையால். (௧௨)

7. குறளுரு - வாமனவடிவு.

கல்லினும்வலி தாம்புகைக்கற்றையால்
எல்லிபெற்றதிமையவர்நாடதும்
வல்லிகோலிநிவந்தனமாமணிச்
சில்லியோடுந்திரண்டனதேரெலாம். (கங)

பேயமன்றினினின்றுபிறங்கெரி
மாயருண்டநறவுமடுத்ததால்
தூயரென்றவர்வைகிடந்துன்னினால
தீயரன்றியுந்தீமையுஞ்செய்வரால். (கச)

தழுவிலங்கைதழுங்கெரிதாய்ச்செலீஇ
வழுவில்வேலையுலையின்மறுகின
எழுமெழுஞ்சுடர்க்கற்றைசென்றெய்தலால்
குழுவுதண்புனன்மேகங்கொதித்தவே. (கரு)

ஊனிலோடுமெரியொடுங்குவார்
கானிலோடுநெடும்புனல்காணெனா
வானிலோடுமகளிர்மயங்கினார்
வேனிலோடருந்தேரிடைவீழ்ந்தனர். (கசா)

தேனவாம்பொழிற்படச்சிந்திய
சோனைமாமலர்த்தும்பிதொடர்ந்தயல்
போனதீச்சுடர்புண்டரிகத்தடங்
கானமாமெனவீழ்ந்துகரிந்தவே. (கஎ)

நற்கடனிதுநம்முயிர்நாயகன்
மற்கடந்தெறமாண்டனன்வாள்விலம்
இற்கடந்தினியேகலம்பாமெனா
விற்கடந்தநுதற்சிலர்வீடினார். (கஅ)

பூக்கரிந்துமுறிபொறியாயடை
நாக்கரிந்துசினைநறுஞ்சாம்பராய்
மீக்கரிந்துநெடும்பனைவேவுறக்
காக்கரிந்துகருங்கரியானவே. (ககூ)

கார்முழுக்கவெழுங்கனற்கற்றைபோய்
ஊர்முழுக்கவெதுப்பவுருகின
சோரொழுக்கமறுமையிற்றுன்றுபொன்
வேர்விடுப்பதுபோன்றனவிண்ணெலாம் (உ0)

16. வேனில் ஓடருந்தேர் - பேயத்தேர்; கானல்நீர்

நெருக்கமீமிசையொக்கநெருப்பெழச்
செருக்கும்வெண்கதிர்த்திங்களைச்சென்றுற
உருக்குமெய்யினமுதமுகுத்தலால்
அரக்கருஞ்சிலராவிபெற்றாரரோ. (உக)

பருதிபற்றிநிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
அருகுசுற்றுமிருந்தையதாயதின்
உருகுபொற்றிரளொத்தனனொண்கதிர். (உஉ)

தளைகொளுத்தியதாவெரிதாமரை
முளைகொளுத்திமுகத்திடைமொய்த்தபேர்
உளைகொளுத்தவுலந்துலைவுற்றன
வளைகுளப்பின்மணிநிறவாசியே. (உ௩)

எழுந்துபொற்றலத்தேறலினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுமுற்
றழுந்துபட்டுளரொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார். (உ௪)

கோசிகத்துகிலுற்றகொழுங்கனல்
தூசினுத்தரியத்தொடுசுற்றுறு
வாசமைக்குழல்பற்றமயங்கினர்
பாசிழைப்பாவைப்படரல்குலார். (உ௫)

வேறு.

நிலவிளங்கியதுகிலினைநெருப்புணநிருதர்
இலவினுஞ்சிலமுத்துளவெனுநகையனையார்
புலவியின்கரைகண்டவரமுதுகப்புணரும்
கலவியின்கரைகண்டிலர்மண்டினர்கடன்மேல். (உ௬)

பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெந்துபதைப்ப
அஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றிலலைப்பக்
குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கோதிப்பால்
மஞ்சுறப்புகுமின்னெனப்புகையிடைமறைந்தார். (உ௭)

வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையினற்கலன்விசும்பிடைவில்லிடப்போவார்
கரையினுட்புகைப்படலையிற்கரிந்தனர்கலங்கித்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார். (உ௮)

---

25. கோசிகத்துயில் - பட்டுச்சீலை.

அகருமந்நறுஞ்சாந்தமுமுதலியவநேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
மகரவேலையின்வெந்தனநந்தனவனங்கள். (௨௯)

மினற்பரந்தெழுகொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
நினைப்பரும்பெருந்திசையுறவிரிகின்றநிலையால்
சினைப்பரந்தெரிசேர்ந்திலநின்றவுஞ்சிலவெம்
கனற்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம். (௩௦)

மூளும்வெம்புகைவிழுங்கலிற்முற்றுறமுழுநீர்
மாளும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமயங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனன்மீன்
மீளயாவையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய. (௩௧)

மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியும்
ஒக்கவெற்பினோடன்னமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்படியதுபாற்கடன்முடிவில்
திக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா. (௩௨)

கரிந்துசிந்திடக்கடுங்கனறொடர்ந்துடல்கதுவ
உரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
விரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைதலிற்றுமும்
எரிந்துவேகின்றவொத்தனவெறிதிரைப்பறவை. (௩௩)

மருங்கின்மேலொருமகவுகொண்டொருதனிமகவை
அருங்கையாற்பற்றிமற்றொருமகவுபின்னரற்ற
நெருங்கினாரொடுநெறிகுழல்சுறுக்கொளநீக்கிக்
கருங்கடற்றலைவீழ்ந்தனரரக்கியர்கதறி. (௩௪)

வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகாய்
எல்லுடைச்சுடரதுபுகவெஃகெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வன்னதொழிலால்
சல்லியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை. (௩௫)

செய்தொடர்க்கழல்வல்லியும்புரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்தடச்செவிநிறுத்திவான்முதுகினின்முறுக்கிக்
கையெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா. (௩௬)

29. அகரு - அகில்.

வெருளும்வெம்புகைப்படலையின்மேற்செலவெருவி
இருளும்வெங்கடல்விழுந்தனவெழுந்திலபறவை
மருளின்மீன்கணம்விழுங்கிடவுலந்தனமனத்தோர்
அருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய. (௩௭)

நீரைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுட்டுமேலைகளைத்தணற்செய்துதனிமா
மேருவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போல்
ஊரைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ. (௩௮)

வானமாதருமற்றுளமகளிருமறுகிப்
போனபோனதிக்கறிகிலரனைவரும்போனார்
ஏனைநின்றவரெங்கணுமிரிந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார். (௩௯)

நாவியுந்நறுங்கலவையுங்கற்பகநக்கப்
பூவுமாரமுமகிலுமென்றினையனபுகையத்
தேவுதேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையிற்
யானைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த. (௪௦)

சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடரா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன்மனையின்
ஊழிவெங்கனலுண்டிடவுலகமென்றுயர்ந்த
ஏழும்வெந்தெனவெரிந்தனநெடுநிலையேழும். (௪௧)

பொன்றிருத்தியதாயதாலிராவணன்புரைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயில்
நின்றதுற்றெரிபருகிடநெகிழ்வுறவுருகித்
தென்றிசைக்குமோர்மேருவுண்டாமெனத்தெரிந்த. (௪௨)

அனையகாலையினரக்கனுமரிவையர்குழுவும்
புனைமணிப்பொலிபுட்பகவிமானத்துப்போனார்
நினையுமாத்திரையாவருநீங்கினர்நினையும்
வினையிலாமையில்வெந்ததவ்விலங்கன்மேலிலங்கை. (௪௩)

ஆழித்தேரவனரக்கரையழலெழநோக்கி
ஏழுக்கேழெனவடுக்கியவுலகங்களெரியும்

---

39. போனதிக்கறிகிலர் - போனபோன ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு திசைகளிலேபோய்ப் புகைக்கம்மலாலே இன்னதிசை வந்தோ மென்றறிந்திலர். 40. நறுங்குழல் - இயற்கைமணமுள்ள கூந்தல்.

ஊழிக்காலம்வந்துற்றதோபிறிதுவேறுண்டோ
பாழித்தீச்சுடவந்ததென்னகரெனப்பகர்ந்தான். (௪௪)

கரங்கள்கூப்பினர் தங்கிளை திருவொடுங்காணார்
இரங்குகின்றவல்லரக்கரிதியம்பினரிறையோய்
தரங்கவேலையினெடியதன்வாலிட்டதழலால்
குரங்குசுட்டதீதென்றலுமிராவணன்கொதித்தான். (௪௫)

என்றுசொல்குரங்கன்ன திவ்வியுள திலங்கை
நின்றுவெந்துமாநீறெழுகின்றதுநெருப்புத்
தின்றுதேக்கிடுகின்றதுதேவர்கள்சிரிப்பார்
நன்றுநன்றுவலியெனவிராவணனக்கான். (௪௬)

வேறு.

உண்டநெருப்பைக்
கண்டனர்பற்றிக்
கொண்டணைகென்றான்
அண்டரைவென்றான். (௪௭)

உற்றகலாமுன்
கற்றகுரங்கைப்
பற்றுமினென்றான்
முற்றுமுனிந்தான். (௪௮)

சாரயணின்றார்
வீரர்விரைந்தார்
நேருதுமென்றார்
தேரினர்சென்றார். (௪௯)

மல்லையிகந்தார்
வில்லர்வெகுண்டார்
பல்லதிகாரத்
தொல்லர்தொடர்ந்தார். (௫௦)

வேறு.

நீர்கெழுவேலைநிமிர்ந்தார்
தார்கெழுதானைசமைந்தார்
போர்கெழுமாலைபுனைந்தார்
ஓரொழுவீரருயர்ந்தார். (௫௧)

விண்ணினைவேலைவிளிம்பார்
மண்ணினையோடிவளைந்தார்

அண்ணலைநாடியணைந்தார்
கண்ணினின்வேறயல்கண்டார். (௫௨)

பற்றுதிர்பற்றுதிரென்பார்
எற்றுதிரெற்றுதிரென்பார்
முற்றினர்முற்றுமுனிந்தார்
கற்றுணர்மாருதிகண்டான். (௫௩)

ஏல்கொடுவஞ்சரெதிர்ந்தார்
கால்கொடுகைகொடுகார்போல்
வேல்கொடுகோலினர்வெந்தி
வால்கொடுதானும்வளைத்தான். (௫௪)

பாதவமொன்றுபகுத்தான்
மாதிரம்வாலின்வளைத்தான்
மோதினன்மோதமுனிந்தார்
ஏதியுநாளுமிழந்தார். (௫௫)

நூறிடமாருதிநொந்தார்
ஊறிடவூனிடுபுண்ணீர்
சேறிடவூரடுசெந்தீ
ஆறிடவோடினதாறாய். (௫௬)

தோற்றினர்துஞ்சினரல்லார்
ஊற்றிகல்வீரரெதிர்ந்தார்
காற்றின்மகன்கலைகற்றான்
கூற்றினுமும்மடிகொன்றான். (௫௭)

மஞ்சுறழ்மேனியர்வன்றாள்
மொய்ம்பினர்வீரர்முடிந்தார்
ஐம்பதினாயிரரல்லார்
பைம்புனல்வேலைபடிந்தார். (௫௮)

தோய்ச்சனல்வாலதுதோயாக்
காய்ச்சினவேலைகலந்தார்
போய்ச்சிலர்பொன்றினர்போனார்
ஏச்செனமைந்தரெதிர்ந்தார். (௫௯)

சுற்றினர்தேரினர்தோலா
விற்றொழில்வீரர்விளைத்தார்

எற்றினன்மாருதியெற்ற
உற்றெழுவோருமுலந்தார். (கூ0)

விட்டுயர்விஞ்சையர்வெந்தீ
வட்டமுலைத்திருவைகும்
புட்டிரள்சோலைபுரத்தும்
சுட்டிலதென்பதுசொன்னார். (கூக)

வந்தவர்சொல்லமகிழ்ந்தான்
வெந்திறல்வீரன்வியந்தான்
உய்ந்தனனென்னவுயர்ந்தான்
பைந்தொடிதாள்கள்பணிந்தான். (கூஉ)

பார்த்தனள்சானகிபாரா
வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள்
வார்த்தையென்வந்தனையென்னப்
போர்த்தொழின்மாருதிபோனான். (கூங)

தெள்ளியமாருதிசென்றான்
கள்ளவரக்கர்கள்கண்டால்
எள்ளுவர்பற்றுவரென்று
ஒள்ளொளியோனுமொளித்தான். (கூச)

ஆக திருவிருத்தம் - கஉநுக.

## கரு-வது, திருவடிதொழுதபடலம்.

நீங்குவென்விரைவினென்னு நினைவினன்மருங்குநின்ற
தாங்கொருகுடுமிக்குன்றையருக்கனினனைந்தவையன்
வீங்கினனுலகையெல்லாம்விழுங்கினனென்னவீரன்
பூங்கழலிருமுதுவாழ்த்திவிசும்பிடைக்கடிதுபோனான். (க)

மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
பைந்நாகநிற்கும்வீரர்தன்னெடுவரவுபார்க்கும்
கொய்ந்நாகநறுந்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான். ()

---

61. விட்டு - விண்டு, விண்.

2. மைந்நாகம் - மைந்நாகமலை. கைந்நாகம் - யானை. பைந்நாகம் - படமுள்ளபாம்பு. கொய்ந்நாகம் - (மலர்) பறிக்கும் புன்னைமரம்.

போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்னோ
பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா. (௩)

அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவரள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றும்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர் தாங்கி. (௪)

தேனொடுகிழங்குகாயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமண்ணனுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார். (௫)

தாள்களின்மார்பிற்றோளிற்றலைகளிற்றடக்கைதம்மில்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வகுத்தபுண்கள்
நாள்கள்மேலுலகிற்சென்றவெண்ணனநம்பிகண்ண
ஊழ்கொளநோக்கிநோக்கியுயிருகவுலைந்துயிர்த்தார். (௬)

வாலிகாதலனைமுந்தவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லாம்
மேலுறவியற்றியாங்கணிருந்தவணிருந்தோர்க்கெல்லாம்
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினனன்மையென்றான். (௭)

என்றலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலானிமிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலுரவோவென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன். (௮)

ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்புகன்றுபோரில்
நீண்டவாளரக்கரோடுநிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றன்றன்வென்றியையுரைப்பவெள்கி. (௯)

பொருதமைபுண்ணேசொல்லவென்றமைபோந்ததன்மை
உரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையேயோதக்
கருதலர்பெருமைதேவிமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னரென்னினிச்செய்துமென்றார், (௧௦)

3. நீளம் - நீடம். பறவைக்கூடு. 8. மருத்தின்மைந்தன் - வாயுவின்மகன்.

யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுமில்லை
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவிரைவிற்செப்பி
ஆவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னாப்பொருக்கெனவெழுந்துபோனார். (௧௧)

போயினர்களிப்பினோடும்புங்கவன்சிலையினின்றும்
ஏயினபகழியென்னவெழுந்துவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சென்றிறுக்குங்காலத்
தாயனவீரரும்போய்மதுவனமதிலிறுத்தார். (௧௨)

எதுநாளிருந்தசாலவென்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலானுணர்வுதீர்ந்துவருந்தினமளியமெம்மைச்
சாதமீர்த்தளித்தவீரதந்தருளுணவுமென்னப்
போதுநாவாலிசேய்பாலென்றலுமெழுந்துபோனார். (௧௩)

அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேடையோடி
இங்கிதற்களித்தல்வேண்டுமிறாலுமிழ்பிரசமென்றார். (௧௪)

நன்றெனவவனுநேர்ந்தானரலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
ஒன்றின்முன்னொன்றுபாயுமொடிக்குமென்பிரசமெல்லாம்
தின்றுதின்றுவகைகூருந்தேனுகரளியின்மொய்த்தே. (௧௫)

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனைஒருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
ஒருவர்மேலொருவரேறியோதமொன்றுவகைகூர்வார். (௧௬)

இன்னணநிகழுங்காலையெரிவிழித்தெரிந்துசீறி
அன்னெடுஞ்சோலைகாக்கும்வானரரவரைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனாணையைமறுத்துநீவிர்
என்னினைந்தென்செய்தீர்மன்னுமுயிர்க்கிறுதியென்ன. (௧௭)

முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதின்று
நனியமாகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
இனியெமாற்செயலின்றென்னாத்ததிமுகற்கியம்பினாரே. (௧௮)

---

13. உணர்வுதீர்ந்தென்றால் - பொசிப்பில்லாமலென்க. 15. நரலை - கடல்.

கேட்டவன்யாவரேயம்மதுவனங்கெடுசூழ்ந்தார்
காட்டிரென்றெழுந்தானன்னார்வாலிசேய்முதலகற்றோர்
ஈட்டம்வந்திறுத்ததாகவங்கதனைவறன்னால்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம். (கசு)

உரங்கிளர்மதுகையான்றனணையாலுறுதிகொண்டே
குரங்கினந்தம்மையெல்லாம்விலக்கினங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோவென்னலோடும்
தரங்கிளர்தாதைபட்டதறிந்திலன்றநயன்போலும். (உ0)

எனவுரைத்தனலிற்பொங்கியெழுந்திரைத்திரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைக்கல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுநகர்புனிதச்சேனை
அனைகளைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த. (உக)

இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கானம்
அந்தரத்தவர்க்குநோக்கற்கரியவென்றனைதன்னைச்
சிந்தினைகதிரோன்மைந்தன்றிறலினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே. (உஉ)

மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னாக்
கதுமெனவாலிசேய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
அதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால். (உங)

வாய்வழிகுருதிசோரவலக்கையான்மலங்கமோதிப்
போய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்பொழியுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான். (உச)

பிடித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னும்
இடித்தனரசனியஞ்சவெறுழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னாப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார். (உரு)

அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தம்
தலைவர்கட்கினியதேனுங்கனிகளும்பிறவுந்தந்தே
உலைவுறுவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
சிலைவளைத்துலவுந்தேரோன்றெறும்வெயிறணிவுபார்த்தே. (உசு)

19. உலவை - மரம். 26. சிலைவளைத்துலவுந்தேரோன் - சூரியன்.

முத்தலையெலிகினற்குமுடிப்பருங்கருமமுற்றி
வித்தகன்றூதுநீண்டநிறுதியாய்விளைந்ததன்மை
அத்தலையறிந்தவெல்லாமறைந்தனமாழியான்மாட்
டித்தலைநிகழ்ந்தவெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டோம். (உ௭)

வேறு.

சேற்றிலாமரைமலர்த்திருவைத்தேர்கெனக்
காற்றின்மாமகன்முதற்கவியின்சேனையை
நாற்றிசைமருங்கினுமேவிநாயகற்
றேற்றினனிருந்தனன்கவியின்செம்மலே. (உ௮)

கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சிரியதொற்களிற்றெருட்டச்செங்கணான்
ஆருயிராயிரமுடையனமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினன். (உ௯)

தண்டலிலெனடுந்திரைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடந்தையையென்னுங்கட்டுரை
உண்டுயிரகத்தெனவொறுக்கவும்முளன்
திண்டிறலநுமனைநினையுஞ்சிந்தையான். (௩0)

ஆரியனருந்துயர்க்கடலினாழ்பவன்
சீறியதன்றுநஞ்செய்கைநீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனச்
சூரியன்சிறுவனைநோக்கிச்சொல்லினான். (௩௧)

குறித்தநாளிகந்தனகுன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினார்
மறித்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறித்தவர்க்குற்றுளதென்னைபெற்றியே. (௩௨)

மாண்டனராவளவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தவின்விளிதனன்றெனப்
பூண்டதோர்துயர்கொடுபோன்றினார்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றார்கொலோ. (௩௩)

கண்டனரரக்கரைக்கறுவுகைமிக
மண்டமர்தொடங்கினார்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டலினெடுஞ்சிறைதளைப்பட்டார்கொலோ. (௩௪)

31. பூரிய - நிறைந்த. 33. தேண்டில - தேடினர்.

கூறினநாளவதிருக்கைகூடலம்
றலஞ்சுதுமெனவின்பதுன்பங்கள்
ஆறினராருந்தவமயர்கின்றூர்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றுன். (கடு)

என்றுரைத்திடருமூந்திருக்கும்மேல்வையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
தன்றலைப்பொழிதருகுருதிதன்னெடும்
குன்றெனப்பணிந்தனனிருகைகூப்பியே. (கசு)

எழுந்துநின்றையகேளின்றுநாளேயோ
டழிந்ததுன்மதுவனமடையவென்றலும்
வழிந்திடுங்குருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாரதுமுடித்துளாரென. (கஎ)

நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புணரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துறச்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே. (கஅ)

தகைந்தவென்சேனையைத்தள்ளிநின்னையும்
இகழ்ந்துரைத்தியைந்தனன்வாலிசேய்மனக்
குகந்தனபுகன்றவவ்வுரைபொறாமையே
புகைந்தொருபாறையின்புணர்ப்புநீக்கியே. (கக)

இமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்திடவென்றெறிதரப்புறங்கையாற்றகைத்
தமைத்தருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்றுன். (சo)

வம்பலொடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்னுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமென்றேதினன். (சக)

பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
கண்டனரன்னதோர்களிப்பினுலவர்
வண்டுறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகனினியவலந்தீர்கெனு. (சஉ)

வந்தனர்தென்றிசைவாயினரெனப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலரென்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முளை
நொந்தவத்ததிமுகன்றன்னைநோக்கியே. (௪௩)

யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாம்பவன்
சோர்வறுபதினெழுவோர்கடுன்னினார்
ஆர்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார். (௪௪)

என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்றிறற்றதிமுகன்வதனநோக்கியே
ஒன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணர்ப்பனல்லனால். (௪௫)

கொற்றவன்பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றியதிசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே. (௪௬)

அன்றியும்வாலிசேயரசதாதலின்
பின்றுதலரிதரோபிணங்குஞ்சிந்தையாய்
ஒன்றுநீபுணரலையுறுதிவேண்டுமேல்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டென. (௪௭)

வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
உணங்கியசிந்தையனொடுங்குமேனியன்
கணங்களோடேகியக்கானநண்ணினான்
மணங்கிளர்தாரினான்மறித்தும்வந்தரோ. (௪௮)

கண்டனன்வாலிசேய்கறுவுகைமிக
விண்டவனம்மெதிர்மீண்டுளானெனின்
உண்டிடுகுதுமுயிரென்னவுன்னினான்
தொண்டெனத்ததிமுகன்றொழுதுதோன்றினான். (௪௯)

போழ்ந்தனையான்செய்தகுறைபொறுக்கெனா
வீழ்ந்தனனடிமிசைவீழவாலிசேய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனாமுதன்மைசொல்லினான். (௫௦)

---

44. ஆர்கலி - சமுத்திரம்.

யாமுதற்குறித்தநாளிறத்தலெண்ணியே
ஏமுறத்துயர்துடைத்தளித்தவேற்றம்போல்
தாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனத்தொழுதுமுன்னநுமன்போயினான். (௫௧)

வன்றிறற்குரிசிலும் முனிவுமாறினான்
வென்றிகொள்கதிருந்தன்வெம்மையாறினான்
என்றுகொண்டியாவருமெழுந்துபோதலே
நன்றெனவேகினார்நவைக்கணீங்கினார். (௫௨)

இப்புறத்திராமனுமிரவிசேயினை
ஒப்புறநோக்கிவந்துற்றதானையர்
தப்புறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவறைதியாலென்றான். (௫௩)

என்புழியநுமனுமிரவியென்பவன்
தென்புறத்துளனெனத்தெரிவதாயினான்
பொன்பொழிதடக்கையப்பொருவில்வீரனும்
அன்புறுசிந்தையினமையநோக்கினான். (௫௪)

எய்தினனநுமனுமெய்தியைந்தறன்
மொய்கழறொழுதிலன்முளரிநீங்கிய
தையலைநோக்கியதலையன்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினான். (௫௫)

திண்டிறலவன்செயறெரியநோக்கினான்
வண்டிறலாதியும்வலியண்மற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினுணருங்கொள்கையான். (௫௬)

ஆங்கவன்செய்கையேயபவையாமென
ஓங்கியவுணர்வினால்விளைந்ததுன்னினான்
வீங்கினன்றோள்புனல்கண்கள்விம்மினன்
நீங்கியதருந்துயர்காதனீண்டதே. (௫௭)

கண்டனென்கற்பினுக்கணியைக்கண்களால்
தெண்டிரையலைகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்தியையமும்
பண்டுளதுயருமென்றநுமன்பன்னுவான். (௫௮)

---

54. அமைய என்பது குறிப்புத்தோன்றவெனக்கொள்க.
57. தோள்வீங்கினன் - புஜங்கள் பூரித்தார்.

வேறு.

உன்பெருந்தேவியென்னுமுரிமைக்குமுன்னைப்பெற்ற
மன்பெருமருகியென்னும்வாய்மைக்குமிதிலைமன்னன்
தன்பெருந்தனையையென்னுந்தகைமைக்குந்தலைமைசான்றாள்
என்பெருந்தெய்வமையாவின்னமுங்கேட்டியென்பான். (ருகூ)

பொன்னலதில்லைப்பொன்னையொப்பெனப்பொறையினின்றாள்
தன்னலதில்லைத்தன்னையொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லைநின்னையொப்பெனநினக்குநேர்ந்தாள்
என்னலதில்லையென்னையொப்பெனவெனக்குமீந்தாள். (சுo)

உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னையித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளொன்னினிச்செய்வதெம்மோய். (சுக)

விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பில்
நற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லேன்
இற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறையென்பதொன்றும்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன். (சுஉ)

கண்ணினுமுனைநீதையல்கருத்தினுமுனைநீவாயின்
எண்ணினுமுனைநீகொங்கையிணைக்குவைதன்னிலேனுவா
தண்ணல்வெங்காமனெய்தவலரம்புதாளைத்தவாறுப்
புண்ணினுமுனைநீநுன்னைப்பிரிந்தமைபொருந்திற்றேமா. (சுங)

வேலையுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
காலையுமாலைதானுமில்லதோர்கனகக்கற்பச்
சோலையங்கதனினும்பிபுல்லினுற்றெருடுத்ததூய
சாலையினிருந்தாளையதவஞ்செய்ததவமாந்தையல். (சுச)

மண்ணொடுங்கொண்டுபோனான்வானுயர்கற்பினுடன்
புண்ணியமேனிதீண்டவஞ்சுவானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணின்
எண்ணருங்கூற்றமாய்தியென்றதோர்மொழியையெண்ணி. (சுரு)

61. பிராட்டியினுடையகலங்கா நிலையினாலே ராட்சதர்களுக்கழிவும் மற்றெல்லாருக்கு நன்மையே உண்டாயிற்றென்று கருத்து.

63. இதன் கருத்து பிராட்டி உம்மைப் பிரியவில்லை யென்பதாம்.

64. கற்பகசோலை - கற்பகச்சோலை.

தீண்டிலனென்னும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதநந்தனுச்சிகிழிந்திலதெழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலவேதஞ்செய்கை
மாண்டிலதென்னுந்தன்மைவாய்மையாலுணர்திமன்னே. (சுசு)

சோகத்தாளாயநங்கைகற்பினாற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளும்
ஆகத்தாளல்லண்மாயனுயிரமேனவிமேலாள். (சுஎ)

இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தேன்
அலங்குதண்சோலைபுக்கெனவ்வழியணங்கனாளைக்
கலங்குதெண்டிரையிற்றாயகண்ணீனீர்க்கடலிற்கண்டேன். (சுஅ)

அரக்கியரளவற்றாருமலகையின்குழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனநீக்கச்சீர்த்த
இரக்கமென்றொன்றுதானேயேந்திழைவடிவமெய்த்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளத்தமியளம்மா. (சுசு)

மாண்பிறந்தமைந்தகற்பின்வானுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னுள்
ஆண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே. (எ0)

அயிர்ப்பிலர்காண்பார்முன்னுமறிந்திலரெனினுமைய
எயிற்புனையிலங்கைமூதூரிந்திரனிருக்கைக்கேற்ற
மயிற்புனையியலினாருமைந்தருநாளுமாங்கே
உயிர்ப்பொடுமுயிரினோடுமூசனின்றாடுவாரும். (எக)

தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயயானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்தன்
எய்தினனிரந்துகூறியிறைஞ்சினனிருந்தநங்கை
வெய்துரைசொல்லச்சீறிக்கோறன்மேற்கொண்டுவிட்டான். (எஉ)

ஆயிடையணங்கின்கற்புமையநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கிவையனதொடர்ந்துகாப்பப்
பேயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றாங்
கேயினனவரெலாமென்மந்திரத்துறங்கியிற்றார். (எங)

அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
உன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொடுமுறைப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றடுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோழ்தில். (எச)

வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயும்
அஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தளியையென்பால்
துஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கலென்றுவந்துசொன்னாள்
மஞ்செனவனமென்கொங்கைவழிகின்றமழைக்கணீராள். (எரு)

அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவும்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவறவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டாள்
இறுதியினுயிர்தந்தீயுமருந்தெனத்தழுவிதந்தாய். (எசு)

ஒருகணத்திரண்டுகண்டேனொளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ்செல்வநின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினால்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புள்ளூற. (எஎ)

வாங்கியவாழிதன்னைவஞ்சனூர்வந்ததாமென
றூங்குயர்மழைக்கணீராலாயிரங்கலசமாட்டி
ஏங்கினளிருந்ததல்லாலியம்பலளெய்த்தமேனி
வீங்கினள்வியந்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள். (எஅ)

அன்னவட்கடியனேனிற்பிரிந்தபினடுத்தவெல்லாம்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழல்
இன்னதென்றறிகிலாமையித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினெனுயிர்ப்புவந்தாள். (எகூ)

இங்குளதன்மையெல்லாமிமையபுளியியையக்கேட்டாள்
அங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னாள்
திங்களொன்றிருப்பெனின்னேதிருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரோடென்றுன்குறைகழற்றலைக்கண்வைத்தாள். ()

வைத்தபின்றுகிலின்வைத்தமாமணிக்கரசைவாங்கிக்
கைத்தலத்தினிதினீந்தாடாமரைக்கண்களார

75. துறங்கல் - நீ உயிர்துறவாமல் என்னும் சிரஞ்சீவியாக இருக்கக்கட வாய். 80. இயைபுளி - கிரமப்படியே. 81. மணிக்கரசை - சூடாமணியை.

வித்தககாண்டியென்றுகொடுத்தனன்வேதநன்னூல்
உய்த்துளகாலமெல்லாம்புகழொடுமோக்கநிற்பான். (அகூ)

பைப்பையப்பயந்தகாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்யுறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டான்
ஐயனுக்கங்கிமுன்னரங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின்காட்சி. (அஉ)

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னையாருளார்தன்மைதேர்வார். (அங)

ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியின்வேந்தைப்
போயினகருமமுற்றிப்புகுந்ததோர்பொம்மறன்றால்
சேயிநடத்தியமென்னத்திகழ்தருமுகத்தரானார். (அச)

ஆண்டையினருக்கன்மைந்தனையகேளிவைநம்மால்
காண்டலுக்கெளியவாறுமென்றலுங்காலந்தாழ
ஈண்டினுமிருத்திபோலாமென்றனனென்றலோடும்
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொன்னான். ()

எழுகவெம்படைகளென்றானெயனுமளவினெங்கும்
முழுமுரசெற்றிக்கொற்றவள்ளுவர்முடுக்கமுந்திப்
பொழிதிரைமன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே. (அரு)

நீலனைநெடிதுநோக்கிநேமியான்பணிப்பானந்தம்
பால்வருஞ்சேனைதன்னைப்பகைஞர்வந்தடராவண்ணம்
சால்புறமுன்னர்ச்சென்றுசரிநெறிதுருவிப்போதி
மால்தருகளிறுபோலும்படைஞர்பின்மருங்குசூழ. (அஎ)

என்றுரைத்தெழுந்தவேலைமாருதியிருகைகூப்பிப்
புன்றொழிற்குரங்கெனேதன்றோளிடைப்புகுதியென்னத்
தன்றலைப்படியிற்றாழ்ந்தானண்ணலுஞ்சரணம்வைத்தான்
வன்றிறல்வாலிசேயுமிளவலைவணங்கிச்சொல்வான். (அஅ)

85. பரிணமித்து - இயல்புதிரிந்து, வேறாகி.

நீயினிதென்றன்றோண்மேலேறுதிநிமலவென்ன
வாய்புதைத்திறைஞ்சிநின்றவாலிகாதலனைநோக்கி
நாயகற்கிளையகோவுநன்றெனவவன்றன்றோண்மேல்
பாய்தலுந்தகைப்பிருனைபடர்நெறிபடர்ந்ததன்றே. (அகூ)

கருடனில்விடையிற்றோன்றுமிருவருங்கடுப்பக்காலின்
அருடருகுமரன்றோண்மேலங்கதனலங்கற்றோண்மேல்
பொருடரும்வீரர்போகப்பொங்கொளிவிசும்பிற்றங்கும்
தெருடரும்புலவர்வாழ்த்திச்சிந்தினர்தெய்வப்பொற்பூ. (கூ0)

வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றினையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறாச்சென்றனதகைப்பில்சேனை. (கூக)

வீரரும்விரைவிற்போனார்விலங்கன்மேலிலங்கைவெய்யோன்
பேவிலாக்காவற்பாடும்பெருமையுமாணுங்கொற்றக்
கார்நிறத்தரக்கரென்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலனுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனார். (கூஉ)

அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
இன்னெடும்பழுவக்குன்றிப்பகலெலாமிறுத்தபின்னர்ப்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பரவைகண்டார். (கூந)

ஆ திருவிருத்தங்கள் - கஙஙச.

சுந்தரகாண்டம்

முற்றிற்று.

---

90. புலவர் - தேவர்.